# யுத்த காண்டம்

(மூன்றாம் பகுதி)






அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

உ

கவிச்சக்கரவர்த்தி

# கம்பர்

இயற்றிய

# இராமாயணம்

## யுத்த காண்டம்

(மூன்றும் பாகம்)




அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

1970

Rs 12-00

# உ ள் ளு றை


| | | | |
|---|---|---|---|
| பதிப்புரை | ... | ... | v—vi |

நூல் :

| | | | |
|---|---|---|---|
| 16. மாயாசனகப் படலம் | ... | ... | 1—119 |
| 17. அதிகாயன் வதைப் படலம் | ... | ... | 120—349 |
| 18. நாகபாசப் படலம் | ... | ... | 350—694 |

பிற்சேர்க்கை :

| | | | |
|---|---|---|---|
| ஒப்பு நோக்கப்பெற்ற சுவடிகளும் அச்சுப் பிரதிகளும், அவற்றின் குறியீடுகளும் | ... | ... | i—iii |
| பாட வேறுபாடுகள் | ... | ... | 1—375 |
| பாட்டு முதற் குறிப்பகராதி | ... | ... | 376—385 |
| பிழையும் திருத்தமும் | ... | ... | 386—393 |

## கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு

---------:o:---------

தலைவர் :

பேராசிரியர், வித்துவான், திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், M.A.,B.L.

உறுப்பினர்கள் :

பேராசிரியர், திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள்

திருவாளர், பி. ஸ்ரீ. ஆச்சாரியார் அவர்கள்

„ நீ. கந்தசாமிப் பிள்ளை அவர்கள்

„ மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள்

„ பு. ரா. புருஷோத்தம நாயுடு அவர்கள்

# பதிப்புரை

செந்தமிழ்ப் பெரும் புலவராகிய கம்பர் பாடிய இராமாயணம் என்னும் பெருங்காப்பியத்தினைப் பழைய ஏட்டுச்சுவடிகளோடும் அச்சுப் புத்தகங்களோடும் ஒப்புநோக்கித் திருந்திய பதிப்பாக அண்ணாமலைப் பல்கலைக் கழகம் வெளியிட்டு வருவதனைத் தமிழுலகம் நன்குணரும்.

இப்பொழுது யுத்த காண்டத்தின் மூன்றாம் பகுதியாக இந்நூல் வெளி வருகின்றது. இதன்கண் மாயாசனகப் படலம், அதிகாயன் வதைப் படலம், நாகபாசப் படலம் என்னும் மூன்று படலங்கள் உள்ளன. இவற்றுள் முதலிரண்டு படலங்களுக்கு வித்துவான் திரு. க. வெள்ளைவாரணன் அவர்களும் நாகபாசப் படலத்திற்கு வித்துவான் திரு. செ. வேங்கடராமச் செட்டியார் அவர்களும் உரையெழுதியுள்ளார்கள்.

தமிழாராய்ச்சித் துறைத் தலைவர் வித்துவான் திரு. கோ. சுப்பிர மணிய பிள்ளையவர்கள் மேற்பார்வையில் சிரோமணி வித்துவான் திரு. P. S. இராமாநுஜாச்சாரியார் புலவர் திரு. K. இராமச்சந்திரன் முதலிய தமிழாராய்ச்சித் துறை ஆசிரியர்கள் பழைய ஏட்டுச்சுவடி களையும் அச்சுப் புத்தகங்களையும் ஒப்புநோக்கித் தொகுத்த பாட வேறுபாடுகள் இந்நூலின் பிற்சேர்க்கையாகத் தரப்பெற்றுள்ளன.

இப்பணி இனிது நிறைவேறுவதற்கு அன்போடு உதவிபுரிந்த கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழுவினராகிய பேராசிரியர் திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார், திரு. பி. ஸ்ரீ. ஆச்சாரி யார், திரு. நீ. கந்தசாமிப் பிள்ளை, திரு. மே. வி. வேணுகோபாலப் பிள்ளை திரு. பு. ரா. புருஷோத்தம நாயுடு, செயலாளர் திரு. தி. கி. இராமாநுஜையங்கார் ஆகிய பெருமக்களுக்கும் இக்குழுவின் தலைவர் திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை M.A., B.L., அவர்களுக்கும் இப் பதிப்புக்கு வேண்டிய ஏட்டுச்சுவடிகளைக் கொடுத்துதவிய நூல் நிலையங்களுக்கும் அன்பர்களுக்கும் பல்கலைக் கழகத்தின் சார்பில் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

சான்றோர் கவிக்கு இலக்கியமாகித் திகழும் கம்ப ராமாய ணத்தினைப் பாடவேறுபாடுகளுடன் திருந்திய பதிப்பாக வெளியிடும் இத்தமிழ்ப் பணிக்கு வேண்டும் பொருளுதவியினைப் புரிந்துவரும் இந்தியப் பல்கலைக் கழக மானியக் குழுவினர்க்குத் தமிழ் மக்களது நன்றியும் பாராட்டும் என்றும் உரியனவாகும்.

அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தின் சார்பில் இத்தகைய தமிழ்ப் பணிகள் மேன்மேலும் சிறப்புற நிகழ்தற்கு இந்தியப் பேரரசும் தமிழ் நாட்டரசும் வேண்டும் பொருளுதவி புரிந்து ஆதரித்துவரும் என நம்புகின்ருேம்.

இந்நூலினை வனப்புற அச்சிட்டுதவிய சென்னைக் கமர்ஷியல் அச்சகத்தாரது பணி பாராட்டத் தகுவதாகும்.

அண்ணுமலைநகர்
25—6—70

க. வெள்ளைவாரணன்
துணைப் பேராசிரியர், தமிழாராய்ச்சித் துறை,
அண்ணுமலைப் பல்கலைக் கழகம்.

# 16. மாயாசனகப் படலம்

இராவணன் சீதையைத் தன் விருப்பத்திற்கு இசையச் செய்யும் நோக்கத்துடன், மகோதரனது மாயை வன்மையினுல் மருத்தன் என்னும் அரக்கனைச் சனகனுக உருமாற்றிச் சிறைப்பிடித்து வரச் செய்து சீதைக்குக் காட்டி அச்சுறுத்திய செய்தியைத் தெரிவிக்கும் படலமாதலின், இது மாயாசனகப் படலம் என்னும் பெயர்த்தாயிற்று. இது 67-என்னும் எண்ணுள்ள சுவடியில் மாயாசனகன் வதைப் படலம் எனக் குறிக்கப்பட்டுளது. 18, 19, 21, 25, 29, 60–63, 65, 66, 71-என்னும் எண்ணுள்ள சுவடிகளில் இதனையடுத்துள்ள அதிகாயன் வதைப் படலம் 6-ஆம் செய்யுள் முடிய மாயாசனகப் படலம் எனக் குறிக்கப்பட்டுளது. 26, 43, 44, 70–என்னும் எண்ணுள்ள சுவடிகளில் இப்படலத்தின் முதற்கணுள்ள எழுபத்தேழு பாடல்கள், மாயாசனகப் படலம் என ஒரு படலமாகவும், 78-ஆம் பாடல் முதல் அதிகாயன் வதைப் படலத்தின் 18-ஆம் பாடல் முடியவுள்ளவை, இராவணன் ஆகுலப் படலம் என மற்ருெரு படலமாகவும் பகுக்கப் பெற்றுள்ளன.

இராம இலக்குவர் முதலியோரைப் போரிற் பொருது அழித்து வருமாறு தன் தம்பியாகிய கும்பகருணனைப் போருக்கு அனுப்பிய இராவணன், தன் அமைச்சர்களுட் சிறந்தானுகிய மகோதரனை அழைத்துச் 'சீதையை அடைதற்குரிய உபாயம் யாது?' என வினவச் சூழ்ச்சித்திறத்தில் வல்ல மகோதரன், 'மருத்தன் என்னும் அரக்கனைச் சனகனுக உருமாற்றிச் சிறைப்படுத்திச் சீதையின் முன் கொண்டு நிறுத்தினுல் அவள் நின் கருத்திற்கு இசைவாள்' என்ருன். அதுகேட்ட இராவணன், மகோதரனைப் பாராட்டி, 'மாயா சனகனைச் சோலைக்குக் கொணர்க' எனப் பணித்துச்சீதை யிருக்கும் இடத்தையடைந்து சீதையை நோக்கித் தான் காமத்தால் தளர்வுறும் நிலையை எடுத்துரைத்துத் தன்னை ஆதரித்தருளும்படி நிலமிசை நெடிது வீழ்ந்து வணங்கினுன். அது கண்டு கலக்கமுற்ற சீதை, தூர்த்தனுகிய அவனை ஏறிட்டுப் பாராது கீழே கிடந்ததொரு துரும்பைப் பார்த்த வண்ணம் தன் ஆருயிர் நாயகனுகிய இராமனை யன்றி மற்ருெருவரையும் எண்ணுத தன் உள்ளத்துறுதியினை அறிவுறுத்தித் தீயோனுகிய இராவணனை வெறுத்துரைத்தாள். சீதையின் சொற்கேட்டு வெகுண்ட இராவணன், அவளை நோக்கி, 'நின் கணவனுகிய இராமனைக் கொல்வதோடன்றி அவனுடைய சுற்றத்தார்களாக அயோத்தியிலுள்ளார்களையும் மிதிலையிலுள்ளாரையும் பற்றிக் கொணருமாறு ஆற்றல்மிக்க அரக்க வீரர்களை ஏவி

யுள்ளேன்' எனக் கூறிச் சீதையை அச்சுறுத்தினன். வஞ்சனைச் சூழ்ச்சியில் வல்ல அவனது சொற்கேட்டுச் சீதை பெருந்துயருற்ருள். அந்நிலையில் மகோதரன், மாயாசனகனை அவள் முன் கொண்டு வந்து நிறுத்தினன். அதுகண்ட சீதை ஆற்ரு நிலையினளாய்ப் பல வாறு அரற்றிப் புலம்பினுள். தான் விரும்பிய மெல்லியலாகிய சீதையின் துயர் நிலையைக் கண்ட இராவணன், அவளுற்ற துயரத் தைப் போக்கி அவள் தன் விருப்பத்திற்கு இசையுமாறு அவளைப் பரிந்து வேண்டினன். தூர்த்தனுகிய அவனுடைய சொற்களைக் கேட்கப்பொருத சீதை, அவனை வெகுண்டு 'என் நாயகனுகிய இராமனது அம்பினுல் நீ நின் சுற்றத்தோடும் அழிந்தொழிதல் திண்ணம்' என இகழ்ந்துரைத்தாள். அச்சொற் பொருது வெகுண் டெழுந்த இராவணன், 'சீதையைக் கொன்ருெழிப்பேன்' என்று அவள்மேற் சென்ருன். அந்நிலையில் மகோதரன் அவனைத் தடுத்து, 'தந்தையாகிய இந்தச் சனகன் வேண்ட இவள் இசைவாள்' என்று சொல்லி அவனது வெகுளியைத் தணித்தான். அப்பொழுது அங் கிருந்து மாயாசனகன் சீதையை நோக்கி 'யான் பெற்ற மகளே! நீ இலங்கை வேந்தனுகிய இவனது விருப்பத்திற்கு உடன்படுதலே நாம் உயிர் பிழைத்தற்கும் நல்வாழ்வு பெறுதற்கும் ஏற்ற செயல்' எனக் கூறிப் பரிந்து வேண்டினன். குடிப்பிறந்தார் வாயிற் பயிலத் தகாத அம்மொழிகளைக் கேட்கப்பொருத சீதை, 'சனகன் கொல் நீயும்' என அவனை ஐயுற்றுக் கடித்துரைத்தாள்; உயிர் கெடவரினும் நெகிழவிடாத தன் கற்பின் திண்மையையும், மானங்கெட வாழ்தல் குடிப்பிறந்தார் செயலன்றென்பதனையும் அவனுக்கு எடுத்து ரைத்துத் தெருட்டினுள். அவள் மாயாசனகனை நோக்கி ஐயுற்றுத் தெளிதற்கு முன்னரே அவளை மேலும் அச்சுறுத்தித் தன் விருப் பத்தினை நிறைவேற்றிக் கொள்ள எண்ணிய இராவணன், 'இவன் உன் தந்தையல்லனுயின் இவனை இப்பொழுதே கொன்று தீர்ப் பேன்' எனத் தன் உடைவாளை உருவினன். அதுகண்ட சீதை 'நீ என்னையுங் கொல்லமாட்டாய். இவனையுங் கொல்லமாட்டாய். என் நாயகனது அம்பினுல் நின் சுற்றத்தோடும் இறந்தொழிவாய்' என இகழ்ந்து கூறினள். அந்நிலையில் மகோதரன் இராவணனைத் தடுத்து, 'ஒரு குற்றமும் செய்யாத இவளுடைய தந்தையாகிய இவனைக் கொல்லுதல் முறையன்று, இலங்கையைச் சூழ்ந்துள்ள பகையினையழித்து வெற்றி பெற்றனையாயின் இவள் நின் விருப் பத்தின் வண்ணம் நடப்பாள்' எனக் கூறினன். அப்பொழுது, இராமன் முதலிய பகைவரொடு போர்புரியச் சென்ற கும்பகருணன் இராமனது அம்பினுல் இறந்துபட்டது கண்டு வானவரும் வானரரும் ஆராவாரித்த பேரொலியானது இராவணன் செவியிற்பட்டது. இராவணன் தம்பியின் நிலையை யெண்ணித் துணுக்குற்ருன். அந்

நிலையில் தூதர் சிலர் விரைந்துவந்து இராவணனை அணுகி, 'அரசே நின் தம்பியாகிய கும்பகருணன் வானர சேனையாகிய பெரிய கடலை உழக்கிக் கலக்கி இறந்து போயினன்' என அவன் செவியருகே மெல்லச் சொன்னார்கள். அச்சொற் கேட்ட இராவணன் எல்லையற்ற துயரினனாய் நிலமிசை வீழ்ந்து தன் ஆருயிர்த் தம்பியை நினைந்து பலவாறு புலம்பி அழுதரற்றினன். கொடியோனாகிய அவனது ஆற்றொணாத் துயரத்தினைக் கண்ட சீதை, தன்னுள்ளத்துள்ளே மகிழ்ந்தாள். பெருஞ் சீற்றமுற்ற இராவணன், அமைச்சர் ஆறுதல் கூறச் சிறிது சினந் தணிந்து அசோகவனத்தை விட்டு அகன்றான். அந்நிலையில் மகோதரன், அங்கு நின்ற சிறைக் காவலரை நோக்கி 'இந்தச் சனகனை வேறோர் சிறையில் அடைத்து வைம்மின்' எனக் கூறி, (இராவணன் சென்ற திசைக்கு) அவ்விடத்தைவிட்டு நீங்கிப் போயினன். நற்குணமுடையளாகிய திரிசடை என்பவள், சீதையை நோக்கி, 'இப்பொழுது உன் தந்தையென்று இங்கு வந்தவன் உண்மையான சனகன் அல்லன்; மருத்தன் என்ற பெயரினனாகிய கொடிய அரக்கனேயாவன்' என்று சொல்லி அவளைத் தேற்றினள் என்பது இப் படலத்தின் பொருட் சுருக்கமாகும்.

மாயா சனகனைப் பற்றிய இச் செய்தி முதல் நூலாகிய வான்மீகத்தில் இடம் பெறவில்லை. இராமன் வானர சேனைகளுடன் கடலைக் கடந்து இலங்கையின் புறத்தே தங்கிய நிலையில், இராவணன் சீதையின் மனத்தை வேறுபடுத்தி அவளையடைதல் வேண்டும் என்னும் பெருவேட்கையால் மாயையில் வல்ல வித்யுஜ்ஜிஹ்வன் என்ற அரக்கனது சூழ்ச்சியால் இராமனது மாயா சிரசையும் கோதண்டத்தையும் சீதையின் முன்னே கொணரச் செய்து அவளை அச்சுறுத்தியதாகவும், இராவணன் பகைவரை வென்றழித்தற் பொருட்டுத் தன் தம்பி கும்பகருணனை அழைத்தபொழுது அவன் பிறன்மனை நயந்த இராவணனது தீச் செயலைக் கண்டித்துக் கூறக் கேட்ட மகோதரன் 'மாயையால் இராமனைக் கொன்றொழித்தோம் என்ற செய்தியினை எங்கும் பரவச் செய்து சீதையை நம் கருத்துக்கு இசையுமாறு செய்தலே நம்மாற் செய்யத்தக்கது என்று கூறிய தாகவும் வான்மீகம் கூறும். சீதையின் மனத்தை வேறுபடுத்தும் நோக்குடன் இராமனது மாயா சிரசையும் கோதண்டத்தையும் இராமனது மனத்தை வேறுபடுத்தும் நோக்குடன் மாயா சீதையையும் முறையே இராவணனும் இந்திரசித்தும் வஞ்சனையாற் கொணர்ந்து காட்டியதாக வான்மீக முனிவர் முதனூலிற் குறித்துள்ளார். கற்பினுக் கணிகலமாகிய சீதையின் மனத்தை மாற்றித் தன் வசப்படுத்தல் வேண்டி அவளது ஆருயிர் நாயகனாகிய இராமனது தலையை மாயையாற் கொணர்ந்து காட்டுதல் என்பது, சீதையின்

மனத்தை மாற்றி இராவணனது வசஞ்செய்தற்கு மாருக, அவள் விரைந்து தனது இன்னுயிரைத் துறத்தற்கே ஏதுவாய் முடியும் என எண்ணிய கம்பர், தம் நூலில் இராவணனது பெரு வேட்கையை நிறைவேற்றும் மாயா சனகனைப் படைத்துக் கூறினர் எனக் கொள்ளுதல் நாடகக் காப்பியமாகிய இந் நூலின் அமைப்புக்கு மிகவும் ஏற்புடையதாகும்.

# மாயாசனகப் படலம்

## படலத் தோற்றுவாய்

7762. அவ்வழி கருணன் செய்த
பேரெழி லாண்மை யெல்லாஞ்
செவ்வழி யுணர்வு தோன்றச்
செப்பினஞ் சிறுமை தீரா
வெவ்வழி மாயை யொன்று
வேறிருந் தெண்ணி வேட்கை
யிவ்வழி யிலங்கை வேந்த
னியற்றிய தியம்ப லுற்றும்.

அவ்வழி, கருணன் செய்த பேர் எழில் ஆண்மை எல்லாம்
செவ்வழி உணர்வு தோன்றச் செப்பினம்; சிறுமை தீரா
வெவ்வழி மாயை ஒன்று, வேறு இருந்து எண்ணி, வேட்கை,
இவ்வழி இலங்கை வேந்தன் இயற்றியது இயம்பல் உற்றும்.

பொ :—(போர்க்களமாகிய) அவ்விடத்திலே கும்பகருணன் செய்த பெருமையும் எழுச்சியும் வாய்ந்த வீரச் செயல்களையெல்லாம் (அறநெறியாகிய) நேர்மை வழியிலே யொழுகும் அவனது வீர வுணர்வு விளங்குமாறு (மேற்படலத்திலே) விரித்துக் கூறினேம். இலங்கை மன்னனாகிய இராவணன் (தான் சீதையின்பால் வைத்த பொருந்தாக் காமமாகிய) ஆசையால், (இலங்கை நகரமாகிய) இவ் விடத்திலே சிறுமையினின்றும் நீங்காத கொடுமையான வழியிலே வஞ்சகச் சூழ்ச்சியைத் தனியேயிருந்து ஆலோசித்துச் செய்ததனை (இப் படலத்திற்) கூறத் தொடங்கினேம்.

கு :—இது கவிக்கூற்று. முன் படலத்தில் விரித்துக்கூறிய செய்தி இதுவென்பதனை முடிந்தது முடித்தலாகத் தொகுத்துக் கூறிய ஆசிரியர், இனி இப்படலத்திற் கூற எடுத்துக்கொண்ட நிகழ்ச்சி இன்னது என்பதனை நுதலிப் புகுகின்றார். அவ்வழி-அவ் விடம்; என்றது, கும்பகருணன், இராம இலக்குவர் முதலியோருடன் நேர் நின்று போர் செய்து முடிவில் இராமனது அம்புபட்டு இறந்து வீழ்ந்த போர்க்களத்தை. கருணன் என்றது, கும்பகருணன் என்ற பெயரின் முதற்குறை. பேர் எழில் ஆண்மை-பெருமையும் எழுச் சியும் வாய்ந்த வீரச்செயல். செவ்வழி-செம்மையான வழி; என்றது,

அறத்தொடு மாறுபடாத போர் முறையினை. உணர்வு-வீரவுணர்ச்சி. அறநெறியாகிய நல்வழியில் நின்று பகைவரை எதிரேற்றுப் பொருது வெல்லும் நல்ல வீரவுணர்ச்சியினைச் செவ்வழியுணர்வு எனக் குறித்தார். சிறுமை-அளவிறந்த காமம். "சிறியோர் செயலாதலின் அளவிறந்த காமம் சிறுமை யெனப்பட்டது" (431-ஆம் திருக்குறள் உரை) எனப் பரிமேலழகர் கூறும் விளக்கம் இங்கு நினைக்கத் தக்கதாகும். சிறுமை தீராவழி, வெவ்வழி என இயையும். மாயை-வஞ்சனைச் செயல். வெம்மை-பிறர்க்கு இன்னா செய்தலாகிய கொடுமை. வேறு இருந்து எண்ணுதல்-புறத்தார்க்குப் புலனாகாதவாறு தனக்கு உற்றார் சிலருடன் தனித்திருந்து ஆலோசித்தல். வேட்கை-வேட்கையால்; ஏதுப்பொருட்டாகிய மூன்றாமுருபு தொக்கு நின்றது, செய்யுள் விகாரம். கும்பகருணனது அறத்தாறு நுவலும் நல்லுணர்வுடன் பொருந்திய போர்ச் செயலை விரித்துக் கூறியயாம், இராவணனது பொருந்தாக் காமமாகிய சிறுமையினின்றும் நீங்காத தீய நெறியால் இயற்றப்பட்ட வஞ்சனைச் செயலையும் இனிக் கூற வேண்டிய நிலையினேம் ஆயினேம் என ஆசிரியர், அறத்தாறு நுவலும் பெரு வீரனாய்ப் போர்க்களத்து உயிர் கொடுத்துப் புகழ் கொண்ட கும்பகருணனது உயர்ச்சியையும் பொருந்தாக் காமத்தாற் சிறுமையுற்று வஞ்சனைச் செயலில் ஈடுபட்டுப் பழியெய்திய இராவணனது இழிநிலையையும் ஒருங்கு புலப்படுத்திய திறம் உணரத்தக்கதாகும். நட்டாரும் பகைவரும் குழுமிய போர்க்களமாகிய வெளியிடத்திலே யாவரும் காணக் கும்பகருணன் செய்த செயல் பேரெழிலாண்மை எனவும், அச் செயற்குக் காரணமாயமைந்தது அவனது செவ்வழி யுணர்வு எனவும், இராவணன், தனக்குற்றார் சிலருடன் தன் நகரத்துள் மறைவிடத்திலே தனித்திருந்து எண்ணி மேற்கொண்டது, மாயையாகிய வஞ்சனைச் செயல் எனவும் அச் செயற்குக் காரணமா யமைந்தது, இராவணனது சிறுமை தீரா வெவ்வழியுணர்வு எனவும் உடன் பிறந்தாராகிய அவ்விருவரும் உணர்வு செயல்களால் தம்முள் ஒவ்வாவியல்பினராதலை விளக்கியவாறு. (1)

## மகோதரனிடம் இராவணன் சீதையை அடையும் உபாயம் கேட்டல்

7763. மாதிரங் கடந்த தோளான்
மந்திர விருக்கை வந்த
மோதர னென்னு நாமத்
தொருவனை முறையி னோக்கிச்

சீதையை யெய்தி யுள்ளஞ்
சிறுமையிற் றீருஞ் செய்கை
யாதெனக் குணர்த்தி யின்றென்
னின்னுயி ரீதி யென்றான்.

மாதிரம் கடந்த தோளான்,
மந்திர இருக்கை வந்த
மோதரன் என்னும் நாமத்து
ஒருவனை முறையின் நோக்கி,
'சீதையை எய்தி, உள்ளம்
சிறுமையின் தீரும் செய்கை
யாது? எனக்கு உணர்த்தி, இன்று, என்
இன்உயிர் ஈதி' என்றான்.

பொ :—திசைகளையெல்லாம் வென்ற தோள்வலி யுடையனாகிய இராவணன், ஆலோசனைச் சபைக்கு வந்த மகோதரன் என்னும் பெயரையுடையவனாகிய (சூழ்ச்சித் திறத்தில் வல்ல) ஒருவனை (அமைச்சர்க் கமைந்த வரிசை) முறையாற் பார்த்து, 'சீதையை (யான்) அடையப்பெற்று (என் மனக் கவலையாகிய) துன்பத்தி னின்றும் நீங்குதற்கு ஏற்ற செயல்முறை யாது? (அதனை) எனக்கு விளங்க அறிவித்து (இறக்கும் நிலையிலுள்ள) எனது உயிரை எனக்கு அளிப்பாயாக' என வேண்டினான்.

கு :—மாதிரம்-திசை; இச் சொல் ஆகுபெயராய்த் திசை காப் பாளராகிய இந்திரன் முதலியோரை உணர்த்தி நின்றது. கடத்தல்-போரில் வென்று மேம்படுதல். கடந்த என்னும் பெயரெச்சம் கடத் தற்குக் கருவியாகிய தோள் என்னும் ஏதுப் பெயர் கொண்டு முடிந்தது. மந்திர இருக்கை-மந்திராலோசனை நிகழும் இடம். மகோதரன் என்னும் வடமொழிப் பெயர் தமிழில் மோதரன் எனத் திரித்து வழங்கப்பட்டது. முறை-அரசன் அவரவர் தகுதிபற்றி நோக்கும் வரிசைமுறை. "பொது நோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின், அது நோக்கி வாழ்வார் பலர்" (திருக்குறள்-528) என்பது அரசியல் முறையாதலால், இராவணன் தன் அமைச்சருட் சிறந்தோ னாகிய மகோதரனை முறையின் நோக்கித் தனது உள்ளக்கிடக்கையை அவன்பால் தெரிவித்தான் என்க. உலகங்காக்கும் திசை காவலர் களையெல்லாம் வென்று மேம்பட்ட பேராண்மையாளனான இரா வணன், பிறன் மனைவிபாற் கொண்ட பொருந்தாக் காமத்தாற் சிறுமையுற்று வெதும்பித் தன்னுயிர் நிலைத்தற்குரிய உபாயம்

ஒன்றை நாடி யுரைக்குமாறு தன் பணியாளனாகிய அமைச்ச னொருவனை இரந்து வேண்டும் இழிநிலையுற்றான் என அவன் எய்திய சிறுமையினைப் புலப்படுத்தியவாறு. (2)

'மருத்தனைச் சனகனாக உருமாற்றிச் சிறைப்படுத்திக் கொணர்ந்து காட்டினால் சீதை நின் விருப்பத்திற்கிணங்குவாள்' என மகோதரன் கூறுதல்

7764. உணர்த்துவெ னின்று நன்றோ
ருபாயத்தி னுறுதி மாயை
புணர்த்துவென் சீதை தானே
புணர்வதோர் வினையம் போற்றிக்
கணத்துவன் சனகன் றன்னைக்
கட்டினென் கொணர்ந்து காட்ட
மணத்தொழில் புரியு மன்றே
மருத்தனை யுருவ மாற்றி.

'உணர்த்துவென், இன்று நன்று
ஓர் உபாயத்தின் உறுதி மாயை
புணர்த்துவென், சீதை தானே
புணர்வது ஓர் வினையம் போற்றி,
கணத்துவன் சனகன் தன்னைக்
கட்டினன் கொணர்ந்து காட்ட
மணத்தொழில் புரியும் அன்றே ?—
மருத்தனை உருவம் மாற்றி'

பொ:—(அது கேட்ட மகோதரன் இராவணனை நோக்கி, 'அரசே!) இப்பொழுதே நல்லதாகியதோர் உபாயத்தினாலே உறுதி யாவதொரு பொருளை (விளங்க) அறிவிப்பேன். சீதை தானே வந்து உன்னைச் சேர்வதற்குரிய சூழ்ச்சியை (எனது மதிவலியாற்) பொருந்தச் செய்வேன். ஒப்பற்ற வஞ்சனைச் செயலொன்றை மேற் கொண்டு மருத்தன் என்பவனை நொடிப் பொழுதிற்குள் (சனக மன்னனாக) வேற்றுருவடையச் செய்து அந்த வலிய சனகனைக் கட்டிக்கொண்டு வந்து (சீதைக்குக்) காட்ட (அது கண்டு அஞ்சிய அவள் தன் தந்தையின் துன்பத்தினைப் போக்க எண்ணி நின்னை) மணந்து வாழும் வாழ்க்கையினை விரும்புவாள் அல்லளோ?

கு :—இன்றே நன்று ஓர் உபாயத்தின் உறுதி உணர்த்துவென்; சீதை தானே புணர்வதோர் மாயை புணர்த்துவென் ; வினையம் போற்றி மருத்தனைக் கணத்து உருவம் மாற்றி, வன்சனகன் தன்னைக் கட்டினென் கொணர்ந்து காட்ட, (அவள்) மணத்தொழில் புரியும் அன்றே என இயைத்துப் பொருள் கொள்க. உபாயம்-கொடுத்தல், இன்சொற் சொல்லல், வேறுபடுத்தல், ஒறுத்தல் ஆகிய செயல் முறைகள். உறுதி-உறுதியளிக்கும் பொருள். மாயை-வியக்கத்தக்க சூழ்ச்சித் திறம். வினையம் என்றதும் அது. மருத்தன்-இராவணன் சுற்றத்தாராகிய அரக்கருள் ஒருவன். பகைவர்களால் வென்று பிணித்தற்கியலாத பெருவன்மை படைத்த சனக மன்னன் என்பான் வன் சனகன் எனக் குறித்தான். 'மருத்தன் என்னும் அரக்கனைச் சனக மன்னனது உருவங் கொள்ளும்படி செய்து அவனைக் கட்டிக் கொண்டு வந்து சீதையின் முன்னே நிறுத்தினால், சீதை தன் தந்தையின் துயர் காணப்பொருதவளாய்த் தந்தையின் துயர் தீர்தல் வேண்டித் தன் கற்பின் திண்மையாகிய மனவுறுதியினின்றும் நெகிழ்ந்து இலங்கை மன்னனாகிய நின்னுடன் கூடி வாழத் தானே உடன்படுவாள்' என மகோதரன் தான் மேற்கொள்ளக் கருதிய உபாயத்தையும், அதனால் இராவணனுக்குளதாம் பயனாகிய உறுதி யையும் விளங்க விரித்துரைத்தான் என்பதாம். (3)

### இராவணன், மகோதரனைப் பாராட்டி மாயாசனகனைச் சோலைக்குக் கொணர்க எனப் பணித்துச் சீதையிருக்கும் இடத்தை அடைதல்

7765. எனவவ னுரைத்த லோடு
மெழுந்துமார் பிறுகப் புல்லி
அனையவன் றன்னைக் கொண்டாங்
கணுகுதி யன்ப வென்னப்
புனைமலர்ச் சரளச் சோலை
நோக்கின னெழுந்து போனான்
வினைகளைக் கற்பின் வென்ற
விளக்கினை வெருவல் காண்பான்.

என அவன் உரைத்தலோடும்,
எழுந்து மார்பு இறுகப் புல்லி,
'அனையவன் தன்னைக் கொண்டு
ஆங்கு அணுகுதி, அன்ப!' என்ன,

புனைமலர்ச் சரளச் சோலை
நோக்கினன், எழுந்து போனான்;
வினைகளைக் கற்பின் வென்ற
விளக்கினை வெருவல் காண்பான்.

பொ:—என்று அந்த மகோதரன் கூறிய அளவில் (இராவணன் தனது இருக்கையினின்றும்) எழுந்து சென்று (மகோதரனை) மார்பு பொருந்த இறுகத் தழுவிக்கொண்டு, 'அன்பனே! அந்த மருத்தன் என்பவனை(ச்சனகன் வடிவினனாக உருமாற்றி) அழைத்துக் கொண்டு (அசோக வனமாகிய) அவ்விடத்தை அடைவாயாக' என்று கூறி, (பகைவர் செய்யும்) கொடு வினைகளாகிய இருளையெல் லாம் (தன் மனத்திண்மையாகிய) கற்பின் சுடரால் (பொன்றக் கெடுத்து) வென்று விளங்கும் நற்குல விளக்காகிய சீதையை அச் சுறுத்தற்பொருட்டு அலங்கரிக்கப் பட்டாற்போலும் மலர்களையுடைய அசோக வனத்தை அடையக் கருதியவனாய் (மந்திராலோசனைச் சபையை விட்டு) எழுந்து சென்றான்.

கு:—தன் விருப்பத்தை விரைந்து நிறைவேற்றும் முறையில் மகோதரன் கூறிய உபாயத்தைக் கேட்ட இராவணன், தனக்கு நலஞ் செய்யக் கருதிய அவனது சூழ்ச்சித் திறனைப் பாராட்டி மகிழ்ந்து அவனைத் தன் மார்போடணைத்து இறுகத் தழுவிக்கொண்டு 'அன்பனே! நீ கருதியபடி மருத்தன் என்பானைச் சனகனாக உரு மாற்றி அழைத்துக்கொண்டு அசோகவனத்தையடைவாயாக' எனப் பணித்து, அச்சுறுத்தலாகிய உபாயத்தால் சீதையைத் தன் வசப் படுத்த எண்ணியவனாய், அசோக வனத்தை யடைந்தான் என்ப தாம். புனைமலர்ச் சரளம்-அலங்கரித்தாற் போலும் மலர்களையுடைய அசோகு. 'பூமலி யசோகின் புனைநிழல்' என்ற நன்னூல் தொடர் இங்கு ஒப்புநோக்கத் தகுவதாகும். வினைகளைக் கற்பின் வென்ற விளக்கு என்றது, கொடியோராகிய அரக்கர்கள் செய்யும் இடர்களை யெல்லாம் கற்பின் சுடராற் பொன்றக் கெடுத்துப் புகழ் ஒளியால் மேம்பட்டு விளங்கும் நற்குல விளக்குப் போல்வாளாகிய சீதையை. இஃது ஏகதேச உருவகம். விளக்கினை வெருவல் காண்பான் சோலை நோக்கினன் எழுந்து போனான் என முடியும். வெருவல் காண்டல்-அச்சத்தைச் செய்தல். காண்பான்-காண; பானீற்று வினையெச்சம். காண்டல்-செய்தல். நோக்கினன், முற்றெச்சம். (4)

7766. மின்னெளிர் மகுட கோடி
வெயிலொளி விரித்து வீசத்
துன்னிரு ளிரிந்து தோற்பச்
சுடர்மணித் தோளிற் ருேன்றும்
பொன்னரி மாலை நீல
மலையின்வீ ழருவி பொற்ப
நன்னெடுங் களிமால் யானை
நாணுற நடந்து வந்தான்.

மின் ஒளிர் மகுட கோடி
வெயில் ஒளி விரித்து வீச,
துன் இருள் இரிந்து தோற்ப,
சுடர்மணித் தோளில் தோன்றும்
பொன்னரி மாலை நீல
மலையின்வீழ் அருவி பொற்ப,
நல்நெடுங் களிமால் யானை
நாணுற, நடந்து வந்தான்.

பொ :—ஒளிவிட்டு விளங்கும் (மணி) முடிகளின் வரிசை (கதிரவனது) சுடரொளிப் பிழம்பாகிய) வெயிலை ஒத்து ஒளியைப் பரப்புதலால் (புறத்தே) நெருங்கியுள்ள இருளானது நிலைகெட்டு ஓடவும், ஒளி வீசும் மணிகள் பதிக்கப்பெற்ற வாகுவலயத்தை யணிந்த தோளின்மீது விளங்கும் பொன்னரி மாலையானது நீல மலையினின்றும் வீழ்கின்ற அருவிநீரை யொத்துப் பொலிவுபெற்று விளங்கவும், நல்ல உயர்ந்த மதச் செருக்கையுடைய யானை (தன் நடைக்குத் தோற்று) நாணமடையவும் (இராவணன், அசோக வனத்தை நோக்கி) நடந்து வந்தான்.

கு :—வீச-வீசுதலால்; செயவென் னெச்சம் காரணப் பொருளில் வந்தது. தோற்ப, பொற்ப, நாணுற என்னும் செயவென்னெச்சங்கள் அடுக்கி, நடந்து வந்தான் என்னும் வினையைக்கொண்டு முடிந்தன. இரிந்து தோற்ப என்பதனைத் தோற்று இரிய என விகுதி பிரித்துக் கூட்டுக. காம மயக்கத்தினுற் செருக்குற்று அறிவு மயங்கி வரும் இராவணனது நடைக்கு மதச் செருக்கினுல் மத மயக்க முடையதாய் விரைந்து வரும் யானையும் நாணித் தன்னடையில் தோல்வியுறும் என்பார், ‘நன்னெடுங் களிமால் யானை நாணுற நடந்து வந்தான்’ என்ருர். மால்-மயக்கம். (5)

7767. விளக்கொரு விளக்கந் தாங்கி
மின்னணிந் தரவு சுற்றி
இளைப்புறு மருங்கு நோவ
முலைசுமந் தியங்கு மென்ன
முளைப்பிறை நெற்றி வான
மடந்தையர் முன்னும் பின்னும்
வளைத்தனர் வந்து சூழ
வந்திகர் வாழ்த்த வந்தான்.

'விளக்கு ஒரு விளக்கம் தாங்கி,
மின் அணிந்து, அரவு சுற்றி,
இளைப்புறு மருங்கு நோவ,
முலைசுமந்து இயங்கும்' என்ன,
முளைப் பிறை நெற்றி வான
மடந்தையர், முன்னும் பின்னும்,
வளைத்தனர் வந்து சூழ,
வந்திகர் வாழ்த்த, வந்தான்.

பொ :—(வானத்திலே) முளைத்த பிறைச் சந்திரனை யொத்த நெற்றியினையுடைய வானவர் மகளிர், விளக்கானது மற்றொரு விளக்கினை ஏந்திக்கொண்டு மின்னலாகிய துகிலைப் பாம்பொடு சுற்றிக்கொண்டு தளருமியல்பினதாகிய இடை வருந்துமாறு (இரண்டு) முலையினைச் சுமந்துகொண்டு நடக்கின்றது என்று (கண்டோர்) கூறுமாறு (தனக்கு) முன்னும் பின்னும் (இருமருங்கும் நெருங்கிச்) சுற்றியவர்களாய்ச் சூழ்ந்துவர (ப் புகழ்த்தேத்துவோராகிய) வந்தியர் என்போர் வாழ்த்துக் கூற (இராவணன்) வந்தான்.

கு :—வானவர் மகளிர் கைவிளக்கினை ஏந்திக்கொண்டு தனக்கு முன்னும் பின்னும் சூழ்ந்துவர, வந்திகர் வாழ்த்த (இராவணன்) வந்தான் என்க. கைவிளக்கு ஏந்திவரும் தேவமாதரின் தோற்றம், ஒளிதரும் விளக்கு மற்றொரு விளக்கினை ஏந்திக்கொண்டு மின்னலைப் பாம்புடன் சுற்றி இடைவருந்த முலையினைச் சுமந்து நடத்தலை யொத்து விளங்கியது என்பதாம். மகளிரது இடைக்கு அரவினை உவமையாகக் கூறும் மரபுபற்றி 'மின் அணிந்து அரவு சுற்றி' என்றார். அரவு சுற்றி மின்னணிந்து என இயையும். மின்னலை ஆடையாகக் கூறும் மரபுண்மை 'மின்னுக்கோடி யுடுத்து' (சிலப்–காடுகாண்–45) எனவரும் இளங்கோவடிகள் வாய்மொழியால்

அறியப்படும். வந்திகர் - பரவி வாழ்த்துவோர். 'பரசு வந்தியர் முன்சூதர் மாகதர் ஒருபால்' (பெரிய-திருநகரச் சிறப்பு-21) எனவரும் தொடர் இங்கு ஒப்பு நோக்கத்தகும். (6)

## இராவணன் சீதையைக் காணுதல்

7768. பண்களாற் கிளவி செய்து
பவளத்தா லதர மாக்கிப்
பெண்களா ணர்க்கு ணல்ல
வுறுப்பெலாம் பெருக்கி யீட்டி
எண்களா லளவா மானக்
குணந்தொகுத் தியற்றி ணளைக்
கண்களா லரக்கன் கண்டா
னவளையோர் கலக்கங் காண்பான்.

பண்களால் கிளவி செய்து,
பவளத்தால் அதரம் ஆக்கி,
பெண்கள் ஆனர்க்குள் நல்ல
உறுப்பு எலாம் பெருக்கி ஈட்டி
எண்களால் அளவா மானக்
குணம் தொகுத்து இயற்றினளை,
கண்களால் அரக்கன் கண்டான்,
அவளை ஓர் கலக்கம் காண்பான்.

பொ :—(இன்னிசையாகிய) பண்களைக்கொண்டு சொற்களை அமைத்து (அச்சொற்கள் வெளிப்படுதற்குரியவாயின்) உதடுகளைப் பவளத்தாற்செய்து மகளிராயினர்பாலுள்ள உறுப்புக்களின் அழகையெல்லாம் ஒருசேரத் திரட்டி எண்களால் அளவிட்டுரைத்தற்கு அரிய பெருமைக் குணங்களையெல்லாம் ஒன்றாகக் கூட்டி ஒரு பெண்ணுருவில் அமைக்கப்பட்டாளாகிய சீதையை அரக்கனாகிய இராவணன் அவளை ஓர் இடர்நிலையினளாக்கிக் கலக்கமுறுத்தும் கருத்துடன் (தன்னுடைய இருபது) கண்களால் (உற்று) நோக்கினான்.

கு :—இச்செய்யுளின் முதன் மூன்றடிகளும் அசோகவனத்திற் சிறையிருக்கும் செல்வியான சீதையின் உடல் வனப்பையும் உள்ளத்தின் வனப்பையும் இனிது விளக்கும் சொல்லோவியமாக அமைத்திருத்தல் அறியத்தக்கதாகும். அரக்கன் அவளை ஓர்

கலக்கம் காண்பான் கண்களாற் கண்டான் என இயையும். கலக்கம் காண்டல் - மனங்கலக்கமுற்று வருந்துமாறு துன்புறுத்தல். 'பெண் களாஞர்க்குள் நல்லவுறுப்பெலாம் பெருக்கி யீட்டி' எனவரும் இத்தொடர், 'நல்லார் உறுப்பெலாங் கொண்டியற்றியாள் கொல்' (குறிஞ்சிக்-20) எனவரும் கலித்தொகைத் தொடரை அடியொற்றி யமைந்திருத்தல் இங்கு ஒப்பு நோக்கத் தகுவதாகும். (7)

### இராவணன் ஏவலரால் அங்குக் கொணர்ந்து இடப்பட்ட பொன்ஞசனத்தில் அமர்ந்து சீதையை நோக்கித் தன்னிலையினை எடுத்துரைத்தல்

7769. இட்டதோ ரிரண பீடத்
 தமரரை யிருக்கை நின்றும்
கட்டதோட் கானஞ் சுற்றக்
 கழலொன்று கவானிற் ருேன்ற
வட்டவெண் கவிகை யோங்கச்
 சாமரை மருங்கு வீசத்
தொட்டதோர் சுரிகை யாள
 னிருந்தன னினைய சொன்ஞன்.

இட்டது ஓர் இரண பீடத்து,
 அமரரை இருக்கை நின்றும்
கட்ட தோள்—கானம் சுற்ற,
 கழல் ஒன்று கவானின் தோன்ற,
வட்ட வெண் கவிகை ஓங்க,
 சாமரை மருங்கு வீச,
தொட்டது ஓர் சுரிகையாளன்
 இருந்தனன், இனைய சொன்ஞன்.

பொ :—தேவர்களை (அவர்கள் தங்கி வாழும்) இருப்பிடத்தி னின்றும் பெயர்த்து நீக்கிய (வலிமிக்க இருபது) தோள்களின் தொகுதி சூழ்ந்து விளங்கவும் வீரக் கழலணிந்த ஒருகால் (மற்ருெரு காலின்) தொடைமேற் பொருந்தித் தோன்றவும் வட்டவுருவின தாகிய வெண்கொற்றக் குடையானது (பிடிக்கப்பட்டுத் தன்முடியின் மேல்) உயர்ந்து விளங்கவும், வெண்சாமரைகள் (தன்) இருமருங் கிலும் வீசப்பெற்று அசையவும் (தன் இடையிற்) பொருத்தப்பட்ட குற்றுடை வாளினை உடையவஞய் (அங்கு) இடப்பட்டிருந்ததோர்

பொன்மயமான ஆசனத்திலே அமர்ந்திருந்து (சீதையை நோக்கி) இத்தகைய வார்த்தைகளைக் கூறுவானாயினான்.

கு :—மேற் செய்யுளில் உள்ள அரக்கன் என்னும் எழுவாயை இங்கும் வருவித்து, அரக்கன், சுரிகையாளன், இரண பீடத்து இருந்தனன், இனைய சொன்னான் என முடிக்க. இட்டது - இடப்பட்டது; செயப்படு பொருளைச் செய்ததுபோலக் கூறும் வழுவமைதி. இரண பீடம் - பொன் ஆசனம். இருக்கை - வாழும் இடம். கட்டல் - களைதல்; இருந்த இடத்தினின்றும் பெயர்த்து நீக்குதல். கானம் - தொகுதி. சுற்ற, தோன்ற, ஓங்க, வீச என அடுக்கிவந்த செயவென் னெச்சங்கள், இருந்தனன் என்னும் வினைகொண்டு முடிந்தன. சுரிகையாளன், இருந்தனன் என்னும் முற்றுக்கள் இங்கு எச்சப் பொருளில் வந்தன. சுரிகை - குற்றுடைவாள். இனைய - இத்தன்மையவான வார்த்தைகள். அவை பின்வருஞ் செய்யுட்களிற் கூறப்படுவன. (8)

**7770.** என்றுதா னடிய னேனுக்
கிரங்குவ திந்து வென்பான்
என்றுதா னிரவி யோடும்
வேற்றுமை தெரிவ தென்பால்
என்றுதா னநங்க வாளிக்
கிலக்கலா திருக்க லாவ
தென்றுதா னுற்ற தெல்லா
மியம்புவா னெடுத்துக் கொண்டான்.

‘என்றுதான், அடியனேனுக்கு
இரங்குவது? இந்து என்பான்
என்றுதான், இரவியோடும்
வேற்றுமை தெரிவது என்பால்?
என்றுதான், அநங்க வாளிக்கு
இலக்கு அலாது இருக்கலாவது?
என்று, தான் உற்றது எல்லாம்
இயம்புவான் எடுத்துக் கொண்டான்.

பொ :—‘(அமுதுடன் பிறந்தீராகிய நீவீர் உமக்கு) அடியேனாகிய என்பொருட்டு இரங்கி அருள் செய்வது எந்நாளோ? என்னிடத்துச் சந்திரன் என்பவன் சூரியனோடு (தனக்குள்ள) வேறுபாடு தெரியக் காணப்படுவது எந்த நாளோ? (யான்) உருவிலியாகிய மன்மத

னுடைய (மலர்) அம்புக்கு இலக்காகாமல் (வருத்தமின்றி) இருக்க இயல்வது எந்த நாளோ ?' என்று இவ்வாறு (இராவணன்) தான் (சீதையின்பாற்கொண்ட காமவேட்கையால்) அடைந்த துன்பத்தை யெல்லாம் (அவள்பால்) எடுத்துரைக்கத் தொடங்கினன்.

கு:—'அமுதின் வந்தீர்' என அடுத்த செய்யுளில் வரும் விளி இங்கும் வருவித்துரைக்கப்பட்டது. முதல் மூன்றடிகளிலும் வந்த 'என்றுதான்' என்னும் வினவில் தான் என்பது அசையாய் நின்றது. நான்காம் அடியில் வந்த தான் என்பது படர்க்கைப் பெயர். இந்து - சந்திரன். இரவி - சூரியன். இந்து என்பான் இரவியோடும் வேற்றுமை தெரிதலாவது, சந்திரன், தான் காமவேட்கையினல் தனித்திருப்போரை வெம்மையுடையனய் வருத்தும் நிலேயில் வெங் கதிராகிய சூரியனேடொத்து வேற்றுமையற்றவனய்த் தோன்றும் அவ்வெம்மையை யொழிந்து, வெங்கதிராகிய சூரியனின் தான் வேறு என்பது புலப்பட உடலுக்கு இதந்தரும் குளிர்ந்த ஒளியுடையனய்த் தோன்றுதல். அநங்கன் - உருவில்லாதவன்; மன்மதன். வாளி - அம்பு. மன்மதன் அம்புக்கு இலக்காதலின்றி யிருத்தலாவது, தன்னற் காமுறப்பட்டாரை அடைந்து காமத்தின் வெம்மை தணியப் பெறுதல். எடுத்துக் கொள்ளுதல் - தொடங்குதல். (9)

**7771.** வஞ்சனே னெனக்கு நானே
மாதரார் வடிவு கொண்ட
நஞ்சுதோ யமுத முண்பா
னச்சினே ளுைந் தேய்ந்த
நெஞ்சுநொந் தும்மை நாயே
னினைப்புவிட் டாவி நீக்க
வஞ்சினே னடிய னேனு
மடைக்கல மமுதின் வந்தீர்.

'வஞ்சனேன் எனக்கு நானே,
மாதரார் வடிவு கொண்ட
நஞ்சுதோய் அமுதம் உண்பான்
நச்சினேன்; நாளும் தேய்ந்த;
நெஞ்சு நொந்து உம்மை நாயேன்
நினைப்புவிட்டு, ஆவி நீக்க
அஞ்சினேன்; அடியனேன் நும்
அடைக்கலம், அமுதின் வந்தீர்!

பொ :—(பாற்கடலில்) அமுதுடன் பிறந்த திருமகளை ஒப்பீர்! (யான்) பெண்ணுருவங்கொண்ட நஞ்சில் தோய்க்கப்பெற்ற அமுதத்தை நுகர்தற்கு விரும்பினேன், (ஆதலால்) எனக்கு நானே வஞ்சனையாற் கேடு சூழ்பவனுயினேன், (என் விருப்பம் நிறைவேருதவாறு என்னுடைய) வாழ்நாட்களும் தேய்ந்தொழிந்தன. நாயினையொத்து இழிந்ததன்மையினையுடைய யான் (உம்மை அடையப்பெருது) மனம் நொந்து உம்மை நினைந்து (உயிர்தாங்கி) இருத்தலைவிட்டு (எனது) உயிரைப் போக்குதற்கும் அஞ்சியவனுனேன். (இத்துன்ப நிலையில்) உம்முடைய அடியவனுகிய யான் நுமது அடைக்கலப் பொருள் (ஆவேன்).

கு :—தனது காட்சிக்கு இனிமைதரும் மாதர் வடிவும் தனது கருத்துக்கு இடர்விளைக்கும் கற்பின் திண்மையும் ஒருங்குடைமை பற்றி 'மாதரார் வடிவுகொண்ட நஞ்சுதோயமுதம்' எனச் சீதையைப் புனைந்துரைத்தான் இராவணன். பிறன்மனையாளாய்த் தன்னை வெறுக்கும் உள்ளத்தளாகிய ஒருத்தியை நச்சி அவளை வலிதிற்கூட முயலுதலாகிய இச்செயல், தன்னை யுண்டார் உயிரைப் போக்கவல்ல நஞ்சினையொத்து என்னுயிர்க்கு இடர் விளைப்பதாகும் என்பதனைத் தெரிந்திருந்தும், அதனை அறியாதேன் போன்று என்னை நானே வஞ்சித்து எனக்கு இடர்விளைத்துக் கொள்ளும் நிலையில் நின்பால் வைத்த பொருந்தாத வேட்கையை விட்டொழிக்கும் ஆற்றலற்றவனுயுள்ளேன் என்பான், 'நஞ்சுதோய் அமுதம் உண்பான் நச்சினேன், எனக்கு நானே வஞ்சனேன்' என்ருன். எனது விருப்பம் நிறைவேருத நிலையில் என் வாழ்நாட்களும் வீணே கழிந்தொழிந்தன என்பான், 'நாளும் தேய்ந்த' என்ருன். இவ்வாறு காதலித்த பொருளையடையப் பெருது மனம் நொந்து உயிர் தாங்கியிருப்பதை விட அந்நினைப்பினை விட்டொழித்து உயிரைத் துறத்தலே இனிமை தருவதாயினும், என்னுயிர்மேல் வைத்த ஆசையால் அவ்வுயிரைத் துறத்தற்கும் அஞ்சுகின்றேன் என்பான், 'நாயேன் நெஞ்சு நொந்து உம்மை நினைப்பு விட்டு ஆவிநீக்க அஞ்சினேன்' என்ருன். இங்ஙனம் நும்மை அடையப்பெருத நிலையில் உயிர் தாங்கியிருத்தற்கும் உயிரைத் துறத்தற்கும் இயலாது அஞ்சி அல்லலுற்று வருந்தும் அடியேனை அஞ்சலென்றருள் செய்து பாதுகாப்பது, இறவாமையைத் தரும் அமுதுடன் பிறந்த நுமது கடமையாகும் என்பான், 'அடியனேன் நும் அடைக்கலம் அமுதின் வந்தீர்' எனச் சீதையை நோக்கி இரந்து வேண்டினுன் இராவணன். (10)

7772. தோற்பித்தீர் மதிக்கு மேனி
சுடுவித்தீர் தென்ற றூற்ற
வேர்ப்பித்தீர் வயிரத் தோளை
மெலிவித்தீர் வேனில் வேளை
ஆர்ப்பித்தீ ரென்னை யின்ன
லறிவித்தீ ரமர ரச்சந்
தீர்ப்பித்தீ ரின்னு மென்னென்
செய்வித்துத் தீர்தி ரம்மா.

'தோற்பித்தீர்; மதிக்கு மேனி
சுடுவித்தீர்; தென்றல் தூற்ற
வேர்ப்பித்தீர்; வயிரத்தோளை
மெலிவித்தீர்; வேனில் வேளை
ஆர்ப்பித்தீர்; என்னை இன்னல்
அறிவித்தீர்; அமரர் அச்சம்
தீர்ப்பித்தீர்; இன்னும் என் என்
செய்வித்துத் தீர்திர் அம்மா!

பொ:—(தோல்வி இன்னதென்றறியாத என்னை நுமக்குத்) தோல்வியுறும்படி செய்தீர்; சந்திரனல் (எனது) உடம்பினைச் சுடுமாறு செய்தீர்; (மென்காற்ருகிய) தென்றல் (நீர்த்திவலையொடு) வீச (அதனல் வெம்மையுற்று என்னுடம்பினை) வேர்க்கும்படி செய்தீர்; வயிரம் போலும் திண்ணிய தோள்களை மெலியும்படி செய்தீர்; இளவேனிற் பருவத்திற்குரிய மன்மதனை (என்முன் அஞ்சாது நின்று) ஆரவாரிக்கும்படி செய்துவிட்டீர்; (துன்பம் இன்ன தென்றறியாத) என்னைத் துன்பம் (இன்னதன்மையது) என்பதனை உணரும்படி செய்துவிட்டீர்; (என்பால்) தேவர்கள் கொண்டுள்ள அச்சத்தை அறவே போக்கிவிட்டீர்; இன்னும் (எனக்கு) என்ன என்ன (மாறுபாடுகளைச்) செய்வித்து முடிப்பீரோ?

கு:—யாவர்க்குந் தோல்வியுருத இராவணன் சீதையின்பாற் கொண்ட வேட்கையினை விட்டொழிக்க இயலாதவனுய், 'நான் உனக்கு அடைக்கலம்' என இரந்து வேண்டும் நிலையில் நீ எனது உயர்ச்சியினை அறவே ஒழித்துவிட்டாய் என்பான், 'தோற்பித்தீர்' என்ருன். தோல்வியின்னதென்றறியாத இராவணன் முதல் நாட் போரில் தான் இராமனுக்குத் தோல்வியுற்று வீரமுங்களத்தே போட்டு வெறுங்கையனுய் மீண்ட இழிநிலையை மனத்திலெண்ணித் தன் தோல்விக்குக் காரணம் தான் விரும்பியவாறு சீதையை அடையப் பெருமையாலுளதாகிய தளர்ச்சியே என்பது குறிப்பிற்

புலப்பட இங்ஙனம் கூறினன் என்றலும் பொருந்தும். மதிக்கு - மதியால்; உருபுமயக்கம். மதி - சந்திரன். தம்மாற் காதலிக்கப்பட்டாரை அடையவியலாது தனித்து வருந்துவோர்க்குக் குளிர்ந்த மதியின் நிலவும் மெல்லிய தென்றற்காற்றும் தீப்போன்று வெம்மையுடையனவாய் மேனியைச் சுட்டு வெதுப்புந் தன்மையவாதலின், 'மதிக்குமேனி சுடுவித்தீர், தென்றல் தூற்ற வேர்ப்பித்தீர்' என்றான். நும்மை அடையப் பெருமையால் வயிரம்போலும் என்னுடைய திண்ணிய தோள்கள் வாட்டமுற்று மெலிவனவாயின என்பான், 'வயிரத்தோளை மெலிவித்தீர்' என்றான். என்முன் உருவுடன் நிற்கும் ஆற்றலற்ற வேனில் வேளாகிய சிறுவன் யான் நும்பாற்கொண்ட ஆசையால் சிறிதும் அச்சமின்றி என்முன் வந்து நின்று மலரம்புகளைச் சொரிந்து ஆரவாரிக்கின்றான் என்பான், 'வேனில் வேளை ஆர்ப்பித்தீர்' என்றான். செய்வித்துத் தீர்திர் என்புழித் தீர்தல் என்பது துணைவினையாய் நின்றது. இனி, தீர்தல் என்பதனைத் தனி வினையாகக்கொண்டு, (இன்னும் என்னென்ன துன்பங்களை எனக்கு விளைவித்து உமது மனத்திற்கொண்ட பகைமை) தீர்விரோ' எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். அம்மா என்பது வியப்பிடைச் சொல். (11)

7773. பெண்ணெலா நீரே யாக்கிப்
பேரெலா முமதே யாக்கிக்
கண்ணெலா நுங்க ளாக்கிக்
காமவே ளென்னு நாமத்
தண்ணலெய் வானு மாக்கி
யைங்கணை யரியத் தக்க
புண்ணெலா மெனக்கே யாக்கி
விபரீதம் புணர்த்து விட்டீர்.

'பெண் எலாம் நீரே ஆக்கி,
பேர் எலாம் உமதே ஆக்கி,
கண் எலாம் நும்கண் ஆக்கி,
காமவேள் என்னும் நாமத்து
அண்ணல் எய்வானும் ஆக்கி,
ஐங்கணை அரியத் தக்க
புண் எலாம் எனக்கே ஆக்கி,
விபரீதம் புணர்த்து விட்டீர்.

பொ :—(என்னால் காமுற்று விரும்புதற்குரிய) பெண்களெல்லாம் நீரொருவரே ஆகச் செய்து, (என்னால் விருப்புற்று அழைக்கப்படும்) பெயர்கள் யாவும் உம்முடைய பெயரேயாகுமாறு செய்து, (இருப தென்னும் தொகையினவாகிய என்னுடைய) கண்கள் யாவும் நும்மிடத்திலே தங்கும்படி செய்து, காமவேள் என்னும் பெயருடைய தலைவனை (என்முன் நின்று) அம்பு செலுத்துபவனாகச் செய்து (அவனால் எய்யப்படும்) ஐவகையம்புகள் தைத்துப் பிளத்தலால் உண்டாகும் புண்கள் யாவும் என்னொருவனுக்கே யுண்டாகுமாறு செய்து (இவ்வாறு எனக்கு) ஒவ்வாத துயர்நிலையை உண்டாக்கி விட்டீர்.

கு:—'என்னாற்காதலிக்கப்பெறும் வனப்புடைய மகளிர் பால் யான் கொண்டுள்ள வேட்கையனைத்தையும் அறவே விட்டொழித்து, நும் ஒருவரையே பெண்ணென மதித்துப் பெரிதும் விரும்பியுள் ளேன். எனது வேட்கை மிகுதியால் இடைவிடாது அழைக்கப்படுவது நும் ஒருவரது பெயரே. என்னுடைய இருபது கண்களும் நும் அழகிய மேனியின் கண்ணே பதிந்துவிட்டன. இங்ஙனம் என் னுடைய மனமொழிமெய்கள் ஆகிய முக்கரணங்களும் நும் ஒரு வரையே பற்றி நிற்க நும்மை அடையப் பெறாது தனிமையுற்று வருந்தும் என்னொருவனையே மன்மதன் தனக்குரிய இலக்காகக் கொண்டு என்மேல் ஐவகை மலரம்புகளையும் ஒருசேரச் சொரி கின்றான். அவன் எய்த அம்புகள் பட்டு அரிதலாலுளவாம் கண்கள் யாவும் இவ்வுலகில் என்னொருவனுக்கே யுண்டாகுமாறு எனது தலைமை நிலைக்கு ஒவ்வாத பெருந்துன்பங்களை நீர் எனக்கு உண்டாக்கிவிட்டீர்' என இராவணன் சீதையின்பால் வைத்த காமவேட்கையால் தானுற்ற வருத்தங்களையெல்லாம் சீதையின் முன்னிலையிற் கூறி வருந்தினான் என்பதாம். விபரீதம் - மாறுபட்ட தன்மை. (12)

7774. ஈசனே முதலா மற்றை
மானுட ரிறுதி யாருங்
கூசமூன் றுலகுங் காக்குங்
கொற்றத்தேன் வீரக் கோட்டி
பேசுவா ரொருவற் காவி
தோற்றிலென் பெண்பால் வைத்த
ஆசைநோய் கொன்ற தென்றா
லாண்மை தான்மா சுணாதோ.

'ஈசனே முதலா மற்றை
மானுடர் இறுதி யாரும்
கூச, மூன்று உலகும் காக்கும்
கொற்றத்தேன்; வீரக்கோட்டி
பேசுவார் ஒருவர்க்கு ஆவி
தோற்றிலென்; பெண்பால் வைத்த
ஆசை நோய் கொன்றது என்ருல்,
ஆண்மைதான் மாசுணுதோ ?

பொ :—(யாவர்க்கும் இறைவனுகிய) சிவபெருமான் முதலாக ஏனைய மக்கள் ஈருக யாவரும் உள்ளம் அஞ்சி நடுங்குமாறு மூன்றுல கங்களையும் ஆட்சி புரியும் வெற்றியினையுடையேன். வீரர் வரிசையுள் வைத்து உயர்த்துப் புகழப்படுவோராகிய ஆடவர் ஒருவர்க்கும் உயிர் (மெலிந்து) தோல்வியுற்றேனல்லேன். (அத்தகைய பெரு வீரனுகிய என்னை) ஒரு பெண்ணிடத்திலே கொண்ட ஆசையாகிய நோய் வருத்திக் கொன்றுவிட்டதென்ருல் (எனது) வீரத்தன்மை குற்றப்பட்டொழியுமல்லவா ?

கு :—ஈசன் – சிவபெருமான். ஏகாரம் சிறப்புணர்த்தி நின்றது. கூசுதல் - அச்சத்தால் உள்ளங்குலைந்து நடுங்குதல். காத்தல் - காவல்புரிதல்; ஈண்டு - அடக்கி ஆளுதல் என்ற பொருளில் வந்தது. வீரக்கோட்டி - வீரர் வரிசை. பேசுவார் - உயர்த்துப் புகழப்படுவார்; செயப்படுபொருளைச் செய்தது போலக் கூறும் வழக்கினைத் தழுவி யமைந்தது. பேசுதல் - உயர்த்துப் புகழ்தல். வீரருட் சிறந்தோர் களாக மதித்து எண்ணப்பெறும் வீரர் வரிசையில் எல்லோர்க்கும் மேலாக விளங்கும் யான் அவ்வரிசையில் எண்ணப்படும் ஆடவருள் ஒருவனுக்கும் இதுகாறும் தோல்வியுற்றிலேன் என்பான், 'வீரக் கோட்டி பேசுவார் ஒருவர்க்கு ஆவி தோற்றிலென்' என்ருன். தோல்வி யின்னதென்றறியாத பேராண்மையுடைய யான், பெண்ணுகிய நும்பாற் கொண்ட காமநோயினுல் துன்புற்று மெலிந்து இறக்கும் நிலையினேனுதலை எடுத்துக் கூறி வருந்தின் எனது பேராண்மையாகிய வீரம் மாசுபட்டழியும் என்பான், 'பெண்பால் வைத்த ஆசைநோய் கொன்றதென்ருல் ஆண்மை தான் மாசுணுதோ' என இரங்கிக் கூறினுன். தன்னுடைய உயர்வற வுயர்ந்த வெற்றித்திறமும் சீதையின்பால் தான் கொண்ட காமத்தால் தனக்குளதாகிய மெலிவும் புலப்பட இராவணன் இங்ஙனம் கூறினுன். பெண்பால் வைத்த ஆசை நோயானது பெருவீரனது ஆண்மை யனைத்தையும் கீழ்ப்படுத்தி மேற்படவல்லதென்பது, 'ஒண்ணு தற்கோஒ வுடைந்ததே ஞாட்பினுள், நண்ணுரும் உட்குமென் பீடு' (திருக்குறள் - 1088) என்பதனுற் புலனும். (13)

7775. நோயினை நுகர வேயு
நுணங்கிநின் றுணங்கு மாவி
நாயுயி ராகு மன்றே
நாள்பல கழித்த காலை
பாயிர முணர்ந்த நூலோர்
காமத்துப் பகுத்த பத்தி
ஆயிர மல்ல போன
வையிரண் டென்பர் பொய்யே.

'நோயினை நுகரவேயும், நுணங்கி
நின்று உணங்கும் ஆவி,
நாய் உயிர் ஆகும் அன்றே,
நாள் பல கழித்த காலை?
பாயிரம் உணர்ந்த நூலோர்
காமத்துப் பகுத்த பத்தி—
ஆயிரம் அல்ல போன—
'ஐயிரண்டு' என்பர் பொய்யே.

பொ :—(உள்ளம்) மெலிந்து நின்று (உடம்பு) வாடுகின்ற எனது உயரானது, துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும் நிலையிலும் (தனது துன்பம் நீங்க உலக வாழ்வினைத் துறக்க முயலாது) நாட்கள் பலவற்றை (ப்பயனின்றி)க் கழித்த பொழுது நாயின் உயிர் என (இழித்துரைக்க)ப் படுமல்லவா? வரலாற்று முறைமையினை யுணர்ந்த நூலாசிரியர்கள் காமத்திணையாகிய ஒழுக லாற்றின் செயல்களாகப் பகுத்துரைக்கப்பட்ட அவத்தை நிலைகள் பத்தாகும் என வரையறுத்துரைப்பர். (இக் கூற்று) உண்மையான தன்று; (அவை) ஆயிரம் (என்ற எண்ணில் அடங்குவன) அல்ல; (அதனையும்) கடந்துள்ளன.

கு :—நோய் - துன்பம். நுணங்குதல் - சுருங்கி மெலிதல். உணங்குதல் - வாடுதல். ஆவி - உயிர். பாயிரம் உணர்ந்த நூலோர் காமத்துப் பகுத்த பத்தி, ஐயிரண்டு என்பர்; ஆயிரம் அல்ல; போன என இயையும். துன்பம் நுகருந்தோறும் மனம் மெலிந்து உடல் வாட்டமுற்று வருந்தும் உயிரானது தன் துயர் நீங்க இறந்தொழி தலையெண்ணாது வாழ்நாட்கள் பயனின்றிக் கழியத் துன்பத்திலேயே உழன்று கொண்டிருத்தல் அல்லற்பட்டலையும் நாயின் இழிந்த வாழ்க்கையை ஒத்து உணர்வுடைய அவ்வுயிர்க்கு இழிவு தரும் செய லாய் முடியும் என்பான், 'நுணங்கி நின்றுணங்கும் ஆவி, நோயினை நுகரவேயும் நாள் பல கழித்த காலை நாயுயிர் ஆகுமன்றே' என்றான்.

பாயிரம் - வரலாறு. நூலோர் - நூற்பொருளை விரித்துக் கூறும் ஆசிரியர்கள். காமத்துப் பகுத்த பத்தி - காமத்திணையாகிய ஒழுக லாற்றிலே யொழுகும் ஆடவர்க்கும் மகளிர்க்கும் உரியனவாக வகுத்துக் கூறிய அவத்தை நிலைகளாகிய படிமுறை. ஐயிரண்டு - பத்து. பத்து அவத்தைகளாவன காட்சி, வேட்கை, உள்ளுதல், மெலிதல், ஆக்கம் செப்பல், நாணுவரையிறத்தல், நோக்குவவெல் லாம் அவையே போறல், மறத்தல், மயக்கம், சாக்காடு என்பன. இங்ஙனம் அவத்தைகள் பத்து என வரையறுக்கப்பட்ட இப்பகுப்பு முறை சீதையாகிய நும்மைக்காமுற்று அடையப் பெறுது வருந்தும் என்னளவிற் பொய்யாகி அவ் அவத்தைகள் ஆயிரம் என்னும் அளவின என்று சொல்லும் எல்லையில் அடங்காதனவாய் ஆயிரத் தையும் கடந்து போயின என்பான், 'பாயிரம் உணர்ந்த நூலோர் காமத்துப் பகுத்த பத்தி ஐயிரண்டு என்பர்; பொய்யே; ஆயிரம் அல்ல, போன' என்ருன். (14)

7776. அறந்தருஞ் செல்வ மன்னீ
ரமிழ்தினு மினியீ ரென்னைப்
பிறந்தில ளுக்க வந்தீர்
பேரெழின் மானங் கொல்ல
மறந்தன பெரிய போன
வரமெனு மருந்து தன்ளுல்
இறந்திறந் துய்கின் றேன்யான்
யாரிது தெரியு மீட்டார்.

'அறம் தரும் செல்வம் அன்னீர்!
அமிழ்தினும் இனியீர்! என்னைப்
பிறத்திலன் ஆக்க வந்தீர்;
பேர் எழில் மானம் கொல்ல,
மறந்தன பெரிய, போன, வரம்
எனும் மருந்து தன்ளுல்,
இறந்து இறந்து உய்கின்றேன் யான்;
யார், இது தெரியும் ஈட்டார்?

பொ:—(யான் முன்னைப் பிறப்பிற் செய்த) அறத்தினுல் தரப் பட்ட செல்வத்தை ஒத்தவரே! (கண்ட அளவிலேயே இன்பஞ் செய்தலால்) அமிழ்தத்தைக் காட்டிலும் இனியவரே! (நீவிர் என் திறத்து மனமிரங்காமையால்) என்னைப் பிறவாதவனுகச் செய்ய வந்தவரே! (நுமது) பேரழகானது (எனது) பெருமையைக் கொன்

ளொழித்தமையால் (என்னுடைய) பேராற்றல்கள் யாவும் (என்னால்) மறக்கப்பட்டனவாய் (என்னை விட்டு) நீங்கின. யான் (நும்பால் வைத்த காம நோயால்) செத்துச் செத்து (முன் பெற்றுள்ள) வரமாகிய மருந்தினால் (மீளவும் மீளவும்) பிழைத்து (உயிர்தாங்கி) இருக்கின்றேன். (இவ்வாறு யான் கணந்தோறும் செத்துச் செத்துப் பிழைத்திருக்கின்ற) இத்தன்மையைத் தெரிந்துணரவல்லார் யார்?

கு :—அறந்தரு செல்வம் - (முன்னைப் பிறப்பிற் செய்த) நல்வினையால் தரப்பட்ட செல்வம். சீதையாகிய நீவிர் எனது காவலுக்குள் கிடைக்கப்பெற்றுள்ள இந்நிலை, யான் முன்னைப் பிறப்பிற் செய்த நல்வினைப் பயனே என்பான், 'அறந்தரு செல்வம் அன்னீர்' என்றான். அறம் - நல்வினை. 'அறம் பாவமென்னும் அருங்கயிற்றாற் கட்டி' (சிவபுராணம் -) என்பது திருவாசகம். கண்ட அளவிலேயே எனது கட்புலனுக்கு இனிமை தருதலால், நுகர்ந்தாலினிமை தரும் அமிழ்தத்தைக் காட்டிலும் மிகவும் இனிமையுடையீர் என்பான், 'அமிழ்தினும் இனியீர்' என்றான். மூவுலகும் ஆட்சி புரியும் பெரு வேந்தனாக யான் பிறந்திருந்தும் நீர் எனக்கு மனமிரங்கியருளாமையால் என்னை இறந்தவனாகச் செய்தற்கே இங்கு வந்து சேர்ந்தீர் என்பான், 'என்னைப் பிறந்திலனாக்க வந்தீர்' என்றான். இத்தொடரில் 'என்னை மீளவும் பிறவாதவனாகச் செய்தற் பொருட்டு இங்ஙனம் சிறையிருந்தீர்' என்றதொரு பொருளும் குறிப்பாற் புலப்படுதல் அறியத்தக்கதாகும். பேரெழில் - பேரழகு. மானம் - தன்னிலையில் தாழாமையும் ஊழ்வயத்தால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையும் ஆகிய பெருமை. இராவணன் பிராட்டியின் பேரழகில் ஈடுபட்டு அதனையே எண்ணியெண்ணித் தன்னை மறந்து தன் பெருமையனைத்தையும் இழந்து தான் வறியனாகிய தன்மையை, 'பேரெழில் மானம் கொல்ல மறந்தன பெரிய போன' எனக்குறித்தான். பெரிய - பெருமையுடைய ஆற்றல்கள் பேர் எழில் மானம் கொல்ல (அதனால்) பெரிய மறந்தன போன என இயையும். மானம் முதலியன என்னை விட்டு நீங்குதலால் இறக்கும் நிலையினேனாகியான், முன்பெற்றுள்ள முக்கோடி வாழ்நாளாகிய வரத்தினால் மீளவும் உயிர் பிழைத்து அல்லற்படும் எளிமை நிலையினேனாயினேன் என்பான், 'வரம் எனும் மருந்து தன்னால் இறந்திறந்து உய்கின்றேன் யான்' என்றான். யானுற்ற இத்துன்பத்தினையுணர்ந்து எனக்குத் துணையாக நின்று உதவவல்லார் ஒருவருமில்லை என்பான், யார் 'இது தெரியும் ஈட்டார்' என்றான், ஈடு - வலிமை. 'யார் இது தெரியும் ஈட்டார்' என்ற தொடர், 'துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய, நெஞ்சந் துணையல் வழி' (1299) எனவரும் திருக்குறட் பொருளை நினைவுபடுத்தும் முறையில் அமைந்திருத்தல் அறியத்தக்கதாகும். (15)

7777. அந்தர முணரின் மேனு
ளகலிகை யென்பாள் காதல்
இந்திர னுணர்த்த நல்கி
யெய்தினு ளிழுக்குற் ருளோ
மந்திர மில்லை வேருேர்
மருந்தில்லை மைய னேய்க்குச்
சுந்தரக் குமுதச் செவ்வா
யமுதலா லமுதச் சொல்லீர்.

'அந்தரம் உணரின், மேல்நாள்,
அகலிகை என்பாள், காதல்
இந்திரன் உணர்த்த, நல்கி
எய்தினுள், இழுக்குற்ருளோ?
மந்திரம் இல்லை, வேறு ஓர்
மருந்து இல்லை, மையல் நோய்க்குச்
சுந்தரக் குமுதச் செவ்வாய்
அமுது அலால்;—அமுதச் சொல்லீர்!'

பொ:—அமிழ்தம்போலும் இனிய மொழியையுடையவரே! முற்காலத்தில் அகலிகை என்பவள் (அயலானுகிய) இந்திரன் (தன்பாற்கொண்ட) காதலை அறிவித்தானுக (அதனை ஏற்றுக் கொண்டு அவனுக்குத் தனது அன்பினை) அளித்து (அவனுல் தானும் இன்பத்தை) அடைந்தாள். நடுவுநிலையுடன் ஆராயுமிடத்து (அவள்) தவறு செய்தவள் ஆவாளோ? (யான் உற்ற காம) மயக்க மாகிய இந்நோயைப் போக்குதற்கு (நுமது) அழகிய சிவந்த அல்லி மலர்போலும் வாயின் அமுதமல்லால் (வேறு) மருந்தில்லை; (நுமது அன்புரையாகிய சொல்லையல்லால் வேறு) மந்திரமுமில்லை.

கு:—'முற்காலத்திற் கௌதம முனிவரின் பத்தினியாகிய அகலிகை என்பவள், தன்னைக் காமுற்ற அயலானுகிய இந்திரனது காதல் மிகுதியை அவன் உணர்த்த உணர்ந்து அவனது விருப்பத் திற்கிசைந்து அவனுக்கு இன்பம் தந்து தானும் இன்பத்தை எய்தினுள். நடுவு நிலையில் நின்று ஆராய்வார்க்கு அவள் செய்த செயல் குற்றமாகாதது போலவே நீரும் எனது காதலை யுணர்ந்து மனமிரங்கி இசைந்தருள்வீராயின் யானும் நீரும் ஒருசேர இன்புற்ற வராவோம். எனக்கு நீவிர் மனமிரங்கி யருளினமையால் நீர் குற்றஞ் செய்தவராக உலகத்தாரால் கருதப்பட மாட்டீர்' என இராவணன் தனது பொருந்தாவொழுக்கத்தினை நிறைவேற்றிக் கொள்ளுதற் பொருட்டு அகலிகையின் செயலை உதாரணமாக

எடுத்துக்கூறிச் சீதையை நோக்கி இரந்து வேண்டினுன் என்பதாம். அந்தரம் - நடுவு நிலைமை. மேல்நாள் - முற்காலம். இந்திரன் காதல் உணர்த்த நஙகி எய்தினுன் என மாற்றுக. இழுக்குறுதல் - குற்றப்படுதல். இழுக்குற்ருளோ என்புழி ஓகாரம் எதிர்மறை; குற்றப்பட்டாள் அல்லள் என்பதாம். மையல் நோய்க்கு, குமுதச் செவ்வாய் அமுதலால் மருந்தில்லை, அமுதச் சொல் அலால் மந்திரமில்லை என இயைத்துரைக்க. எனது மையல் நோயினைத் தீர்த்தற்குரிய மருந்து, மந்திரம், மணி என்பவற்றுள் முற்பட்ட இரண்டும் நும்மிடத்தேயே அமைந்துள்ளன என இராவணன் சீதையை இரந்து நின்ருன் என்றவாறு. (16)

இராவணன், சீதையின்முன் நிலத்தில் வீழ்ந்து வணங்குதல்

7778. என்றுரைத் தெழுந்து சென்றங்
கிருபதென் றுரைக்கு நீலக்
குன்றுரைத் தாலு நேராக்
குவவுத்தோ ணிலத்தைக் கூட
மின்றிரைத் தருக்கன் றன்னை
விரித்துமீன் றொகுத்த தொன்று
நின்றிமைக் கின்ற தன்ன
முடிபடி நெடிதின் வைத்தான்.

என்று உரைத்து, எழுந்து சென்று,
அங்கு, இருபது என்று உரைக்கும் நீலக்
குன்று உரைத்தாலும் நேராக்
குவவுத் தோள் நிலத்தைக் கூட,
மின்திரைத்து அருக்கன் தன்னை
விரித்து மீன் தொகுத்தது ஒன்று
நின்று இமைக்கின்றது அன்ன
முடி படி நெடிதின் வைத்தான்.

பொ :—என்று (இவ்வாறு) கூறி, அங்கு (ச் சீதையின் அருகில்) எழுந்து சென்று, இருபது என்னும் தொகையினவாய் உள்ள நீலமலைகளை உவமையாகச் சொன்னுலும் (தமக்கு) ஒவ்வாதன வாய்த்திரண்ட தோள்கள் பூமியைச் சேர்ந்து அமைய, மின்னலை (ப் பல சுருள்களாக)ச் சுருட்டிச் சூரியனை (உள்துளையடையும்படி) விரியச் செய்து (அதன்மேல்) விண்மீன்களை ஒருசேரத் தொகுத்து அமைக்கப்பட்டதொரு ஒளியுடைப் பொருள் (நிலத்தின்கண்) நிலை

பெற்று ஒளிவீசினாற்போலும் (தனது) கிரீடத்தினை நிலத்தின்மேல் நெடுநேரம் பொருந்துமாறு வைத்தான் (இராவணன்).

கு:—காம பரவசனாகிய இராவணன் தனது ஆற்றுமையைப் பலவாறு எடுத்துரைத்து தன்னுடைய இருபதுதோள்களும் பத்துத் தலைகளையும் ஒருசேரக் கவித்துள்ள மணிமுடியும் பூமியிற்படிய நெடிது வீழ்ந்து பிராட்டியை வணங்கினான் என்பதாம். இராவணனுடைய பத்துத் தலைகளிலும் ஒருசேரக் கவித்த பொன்மயமான முடிக்குக் கதிரவனும், அம்முடியிற் பதிக்கப் பெற்றுள்ள பலநிற மணிகளுக்கு விண்மீன்களும், மணிகளிழைக்கப்பெற்ற நிலையில் வளைந்தமைந்த பொற்கொடிகளுக்கு மின்னல்களும் உவமை. படி - பூமி. (17)

கலக்கமுற்ற சீதை, தூர்த்தனாகிய இராவணனை நோக்காது
அங்குக் கீழே கிடந்த துரும்பைப் பார்த்த வண்ணம்
தன்னுள்ளத் திண்மையினை இராவணனுக்கு அறிவுறுத்தல்

7779. வல்லிய மருங்கு கண்ட
மானென மறுக்க முற்று
மெல்லிய லாக்கை முற்று
நடுங்கினள் விம்மு கின்றாள்
கொல்லிய வரினு முள்ளங்
கூறுவென் றெரிய வென்னாப்
புல்லிய கிடந்த தொன்றை
நோக்கினள் புகல்வ தானாள்.

வல்லியம் மருங்கு கண்ட மான் என மறுக்கம் உற்று,
மெல்லியல் ஆக்கை முற்றும் நடுங்கினள், விம்மு கின்றாள்,
'கொல்லிய வரினும் உள்ளம் கூறுவென், தெரிய' என்னா,
புல்லிய கிடந்தது ஒன்றை நோக்கினள், புகல்வ தானாள்.

பொ:—மென்மைத் தன்மையினையுடையளாகிய சீதை, (தன்முன் இராவணன் நெடிது வீழ்ந்து வணங்கிய நிலையில்) புலியை(த் தன்) பக்கத்திலே பார்த்த மானைப் போன்று உளங்கலங்கி உடல் முழுவதும் நடுங்குபவளாகிப் புலம்புகின்றவள், (பின் சிறிது மனந்தெளிந்து, 'இக்கொடியோன் என்னைக்) கொல்லுதற்கு வந்தாலும் என் மனக்கருத்தினை நன்கு அறியும்படி சொல்வேன்' என்று (தன் மனத்துள் துணிவுகொண்டு) அற்பமுடையதாய் (த் தரையிலே)

கிடந்ததொரு துரும்பைப் பார்த்தவளாய்ச் சொல்லத் தொடங்கினள்.

கு :—இழிந்த காமுகனாகிய இராவணனோடு நேர்நின்று பேசுதல் தனக்குத் தகுதியன்றென எண்ணிய சீதாபிராட்டி, அங்குத் தரையிற் கிடந்ததொரு துரும்பை நோக்கிய வண்ணம் இராவணனுக்கு மறுமொழி பகர்வாளாயினள் என்பதாம். மெல்லியல், வல்லியம் மருங்கு கண்ட மான் என மறுக்கம் உற்று, ஆக்கை முற்றும் நடுங்கினள் விம்முகின்றாள், 'கொல்லியவரினும் உள்ளம் தெரியக் கூறுவன்' என்னா, புல்லியகிடந்தது ஒன்றை நோக்கினள், புகல்வதானாள் என முடிக்க. வல்லியம் - புலி. மறுக்கம் - மனக்கலக்கம், மெல்லியல் என்றது மென்மைத் தன்மையுடையாளாகிய சீதையை. கொல்லிய - கொல்ல; செய்யிய என்னும் வினையெச்சம். உள்ளம் என்றது ஈண்டு மனக்கருத்தை யுணர்த்தியது. புல்லிய கிடந்தது ஒன்று - அற்பமாய்க் கிடந்ததொரு துரும்பு. சீதை கூறும் மொழிகள் பின்வரும் ஆறு செய்யுட்களில் விரித்துரைக்கப்படுவன. (18)

7780. பழியிது பாவ மென்று
பார்க்கிலை பகரத் தக்க
மொழியிவை யல்ல வென்ப
துணர்கிலை முறைமை நோக்காய்
கிழிகிலை நெஞ்சம் வஞ்சக்
கிளையொடு மின்று காறும்
அழிகிலை யென்ற போதென்
கற்பென்னா மறந்தா னென்னாம்.

"பழி இது; பாவம்" என்று
பார்க்கிலை; "பகரத்தக்க
மொழி இவை அல்ல" என்பது
உணர்கிலை; முறைமை நோக்காய்;
கிழிகிலை நெஞ்சம்; வஞ்சக்
கிளையொடும் இன்று காறும்
அழிகிலை என்றபோது, என்கற்பு
என் ஆம்? அறம்தான் என் ஆம்?

பொ :—(பிறன்மனை நயத்தலாகிய) இச்செயல், (இப்பிறப்பிற்) பழியையும் (மறுமையிற்) பாவத்தையும் தருவதாகும் என்று எண்ணிப் பார்த்தாயல்லை; (நீ கூறிய) இச்சொற்கள் (நல்லறிவுடை

யோர்வாயினுற்) கூறத்தக்க நன்மொழிகள் அல்ல என்பதனையும் அறிகின்றிலே; (நற்குடிப் பிறந்த மகளிரிடத்து எவ்வாறு நன்மதிப் புடன் நடந்துகொள்ளுதல் வேண்டும் என்னும்) நெறிமுறையினையும் நன்கு கவனித்தாயல்லே; (இவ்வாறு தகுதியில்லாத எண்ணம் சொல் செயல்களையுடைமையாற் கொடியோனுகிய நீ) நெஞ்சம் பிளந்து துன்புற்ருயல்லே; வஞ்சனையுடைய நின் சுற்றத்தொடும் இன்றுவரை இறந்துபடாது உயிர் வாழ்கின்ருய் என்று எண்ணும் பொழுது என்னுடைய கற்பின் வன்மையாலுளதாம் பயன்தான் என்ன? (அல்லவை செய்தாரை அழிக்கும் இயல்பினதாகிய) அறக் கடவுள் நிலைபெற்றிருத்தலாலாகும் பயன்தான் என்ன?

கு:—'இது, பழிபாவம்' எனவும், 'இவை பகரத்தக்க மொழி யல்ல' எனவும் இயையும். 'பழிபாவங்களை எண்ணிப் பாராது தவறுடைய சொற்களையும் செயல்களையும் மேற்கொண்ட கொடி யோனுகிய நீ நின் தீவினை காரணமாக நெஞ்சம் பிளந்து அல்லற் பட்டழிந்திருத்தல் வேண்டும். அவ்வாறு அழிந்துபடாமையேயன்றி நின் சுற்றத்துடன் கூடி இனிது வாழ்கின்ருய் என்று எண்ணும் பொழுது உன்னை ஒறுத்தழிக்கும் வன்மையில்லாத எனது கற்பினுல் தான் யாது பயன்? உன்னைக் கொல்லாதுள்ள அறக்கடவுளால் தான் யாது பயன்' எனப் பிராட்டி இராவணனது கொடுமையினையும் அவனை யழித்தொழிக்கும் திறத்தில் செயல் மேற்கொள்ளாத இரக்கத்தின் வழிப்பட்ட தனது துயரநிலையையும் எடுத்துரைத்துத் தெருட்டினுள் என்பதாம். (19)

7781. வானுள மறத்திற் ருேற்றுன்
சொல்வழி வழுவா மண்ணின்
ஊனுள வுடம்புக் கெல்லா
முயிருள வுணர்வு முண்டால்
தானுள பத்துப் பேழ்வாய்
தகாதன வுரைக்கத் தக்க
யானுளன் கேட்க வென்ருு
லென்சொலா யாது செய்யாய்.

வான்உள, மறத்தின் தோற்று
உன் சொல்வழி வழுவா; மண்ணின்
ஊன்உள, உடம்புக்கு எல்லாம்
உயிர்உள; உணர்வும் உண்டால்;

தான்உள, பத்துப் பேழ்வாய்
தகாதன உரைக்க, தக்க
யான்உளன் கேட்க என்ருல்,
என்சொல்லாய் ? யாது செய்யாய் ?

பொ :—வானுலகத்தில் உள்ளனவாகிய உயிர்கள் (உனக்கு) வீரத்தில் தோல்வியுற்று (அதனுல்) உன் சொல்லின்படி தவருது ஏவல் செய்வன. நிலவுலகில் உள்ள ஊனையுடைய உடம்புகட்கெல்லாம் (தனித்தனியே) உயிர் உள்ளன; அவற்றுக்கு உணர்வும் உண்டு (என்ற அளவில் ஆற்றலற்றனவாய் உள்ளன). (இலங்கை மன்னனுகிய) தனக்குத் தகுதியல்லாத (தீ) மொழிகளைப் பேசுதற்குப் பெரிய வாய்கள் பத்து உள்ளன. (அவை கூறும் தகாத சொற்களைச் செவிகொடுத்துக்) கேட்பதற்கென்றே யானும் (உயிர்தாங்கி) உள்ளேன் என்ருல், (இந்நிலையில் நீ) எதைத்தான் சொல்ல மாட்டாய்? எதைத்தான் செய்யமாட்டாய்?

கு :—'வானுலகத்தில் வாழும் தேவர்கள் எல்லோரும் உனக்கு வீரத்தில் தோல்வியுற்றுத் தாம் வலியிழந்த நிலையில் நின் சொற்படி பணிபுரியும் ஏவலாளர்களாகிவிட்டார்கள். மண்ணில் வாழும் ஊனுடம்புடைய மாந்தர்கள் தத்தமக்குரிய நுகர்பொருள்களைத் தேடிப்பெற்று உயிர்வாழும் நிலையில் 'உளரென்னும் மாத்திரையர்' (திருக்குறள்) என்பார், 'உயிருள உணர்வும் உண்டால்' என்ருர். 'உயிரற்றவரல்லர், இவர்க்கு உயிரும் உணர்வும் உண்டு' எனக் கண்டோர் கருதும் அளவில் அமைந்து, நின் கொடுமையை எதிர்த்தற்குரிய ஆற்றலின்றி அடங்கியுள்ளார்கள். தகாத சொற்களைப் பேசுதற்கென்றே உனக்குப் பத்து வாய்கள் உள்ளன. நீ கூறும் தகாத சொற்களைச் செவி கொடுத்துக் கேட்பதற்குரிய தீவினையாட்டியாகவே வலியற்ற நிலையில் யானும் உயிர் தாங்கியுள்ளேன். இவ்வாறு வானுலகும் மண்ணுலகும் நினக்கு அஞ்சியடங்கியுள்ள இந்நிலையில் வலியற்றவளாகிய என்னிடத்து வாயில் வந்தவாறு தீய சொற்களைப் பேசுதற்கும் மனம் போனவாறு தீவினைகளை மேற்கொள்ளுதற்கும் நீ அஞ்சுவாயோ?' எனச் சீதை, அறநெறி தவறிய இராவணனது கொடுமையையும் அதனுல் உளவாம் துயர்நிலையையும் அவனுக்கு எடுத்துரைத்து அவனை நல்வழியில் ஒழுகுமாறு தெருட்டினுள் என்பதாம். வான்உள - வானுலகத்தில் உள்ளனவாகிய உயிர்கள்; என்றது வானேராகிய தேவர்களை. மறம் - வீரம். பேழ்வாய் - பிளந்தவாய்; பெரியவாய். (20)

7782. வாசவன் மலரின் மேலான்
மழுவலான் மைந்தன் மற்றக்
கேசவ னென்ன நின்ற
தன்மையோர் தன்மை கண்டாய்
பூசலி னெதிர்ந்தே னென்ருய்
போர்க்களம் புக்க போதென்
ஆசையின் கனியைக் கண்ணிற்
கண்டிலே போலு மஞ்சி.

'வாசவன், மலரின் மேலான்,
மழுவலான் மைந்தன், மற்றுஅக்
கேசவன் என்ன நின்ற
தன்மையோர் தன்மை கண்டாய்,
'பூசலின் எதிர்ந்தேன்' என்ருன்;
போர்க்களம் புக்கபோது என்
ஆசையின் கனியைக் கண்ணின்
கண்டிலே போலும், அஞ்சி.

பொ :—இந்திரனும் தாமரை மலரில் வீற்றிக்கும் பிரமதேவனும் மழுப்படையையுடைய சிவனுடைய புதல்வனுகிய குமரக் கடவுளும் மற்றும் திருமாலும் எனப் போற்றப்பெற்று நிலேபெற்ற பெருமை யுடைய கடவுளரது வீரத்தன்மையினேக் கண்டறிந்தாய்; (அவர்களேப்) போரில் எதிர்த்து நின்று வெற்றி கொண்டேன் என்ருய். (அத்தகைய நீ) போர்க்களத்திற் புகுந்தபொழுது, என்னுடைய பேரார்வத்தின் முதிர்ந்த கனிபோன்றுள்ள எனது ஆருயிர் நாயகனே (க் காணுதற்கும்) அஞ்சிக் கண்ணினுற் காணுதொழிந்தாய் போலும்.

கு :—ஆசையின்கனி - ஆர்வலர் தமது பேரார்வத்தால் ஆராது துய்க்கும் நிலேயில் தெவிட்டாச் சுவையுடையதாய் முதிர்ச்சியுற்றுக் கனிந்த பழம்; என்றது தன் ஆருயிர் நாயகனுகிய இராமனே. அஞ்சிக் கண்ணிற் கண்டிலேபோலும் என இயையும். போர்க்களம் புக்கபோது, என் ஆசையின் கனியாகிய ஆருயிர் நாயகனே நேர் நின்று காணும் ஆர்வமும் ஆற்றலும் உடையையா யிருந்திருப்பாயாயின், எனது நாயகனது பேராற்றலே நன்குணர்ந்து உள்ளந் திருந்தி நல்வழிப்பட்டிருப்பாய்; அல்லது எனது நாயகனது அம்பினுற் புலாலுடம்பைத் துறந்து புகழுடம்பு பெற்றிருப்பாய்; இவ்விரு நிலேயும் பெருது தீராப்பழியுடையையாய் என்முன் வந்து நிற்கின்ருயாதலின், நீ போர்க்களம் புக்கபோது என் ஆருயிர்

நாயகனை அஞ்சாது நேர் நின்று கண்டு பொருது நிற்கும் ஆற்றலின்றி அஞ்சி வறிதே மீண்டனை என்பது நன்கு புலனாயிற்று என்பாள், 'போர்க்களம் புக்கபோது என் ஆசையின் கனியை அஞ்சிக் கண்ணிற் கண்டிலை போலும்' என்றாள். (21)

7783. ஊணிலா யாக்கை பேணி
யுயர்புகழ் சூடா துன்முன்
நாணிலா திருந்தே னல்லே
னவையறு குணங்க ளென்னும்
பூணெலாம் பொறுத்த மேனிப்
புண்ணிய மூர்த்தி தன்னைக்
காணலா மின்னு மென்னுங்
காதலா லிருந்தேன் கண்டாய்.

'ஊன் இலா யாக்கை பேணி,
உயர்புகழ் சூடாது, உன்முன்
நாண் இலாது இருந்தேன் அல்லேன்;
நவைஅறு குணங்கள் என்னும்
பூண்எலாம் பொறுத்த மேனிப்
புண்ணிய மூர்த்தி தன்னைக்
காணலாம் இன்னும் என்னும்
காதலால் இருந்தேன் கண்டாய்.

பொ :—உணவின்றி வாடிய இவ்வுடம்பினைப் பாதுகாத்து, (அதனால்) தனக்கு இணையில்லையாக உயர்ந்த புகழாகிய அணிகலனைச் சூடிக்கொள்ளாமலும் (காணத்தகாத தீயோனாகிய) உன் முன்னிலையிலே நாணம் இல்லாமலும் உயிர்தாங்கி யிருந்தேன் அல்லேன்; குற்றமற்ற நற்பண்புகளாகிய அணிகலன்களையெல்லாம் ஒருசேரத் தாங்கிய திருமேனியையுடைய நல்லற மூர்த்தியாகிய இராமபிரானை (இவ்வுடம்புடன் இருந்து) மீண்டும் கண்டு மகிழ்தல் கூடும் என்னும் பெருவிருப்பத்தினாலேயே யான் உயிர்தாங்கி யிருக்கின்றேன் என்பதனை (நீ நன்கு) அறிவாயாக.

கு :—ஊண் இலா யாக்கை - உணவு இன்றி இளைத்த உடம்பு. "கன்மருங் கெழுந்தென் றுமோர் துளிவரக்காணா; நன் மருந்துபோல் நலனற வுணங்கிய நங்கை, மென்மருங்குல்போல் வேறுள அங்கமும் மெலிந்தாள்" (கம்பர்–சுந்தர–332) எனப் பிராட்டியின் உடம்பு வாட்டமுற்ற தன்மை முன்னர்க் கூறப்பட்டமை காண்க. பேணுதல்

என்றது, ஈண்டு உடம்பைவிட்டு உயிர் நீங்காவாறு உயிர் உடம்பைப் பற்றியிருத்தலை. உயர்புகழ் - தனக்கு இணையின்றாக உயர்ந்த புகழ். 'ஒன்ரு வுலகத் துயர்ந்த புகழ்' (233) என்றார் தெய்வப் புலவரும். 'சீதை தன் காதலனைப் பிரிந்தும் உயிர்தாங்கி யிருந்தாள்' என்னும் பழிக்கு இடந்தராது என்னுயிரைத் துறந்து புகழ்பெற விரும்பாமலும். தீயோனாகிய உன் முன்னிலையில் இருத்தலால் நாணஞ் சிதைவுறவும் வாடிய இவ்வுடம்பினை யான் துறவாது உயிர்தாங்கி யிருத்தலின் நோக்கம், இவ்வுடம்பினைச் சார்பாகப் பற்றியிருந்து நல்லறமூர்த்தி யாகிய எனது நாயகனை மீண்டும் ஒருமுறை காணுதல் கூடும் என்னும் ஆர்வமேயன்றிப் பிறிதில்லை' எனப் பிராட்டி தனது ஆருயிர்க்கேள்வனாகிய இராமபிரான்பால் தனக்குள்ள காதற் பெருங்கேண்மையினை இராவணன் உணர்ந்து தனது தவறான கருத்தினைவிட்டு உய்தி பெறும்படி அறிவுறுத்தி யருளினாள் என்பதாம். (22)

**7784.** சென்றுசென் றழியு மாவி
திரிக்குமாற் செருவிற் செம்பொற்
குன்றுநின் றனைய தம்பி
புறக்கொடை காத்து நிற்பக்
கொன்றுநின் றலைகள் சிந்தி
யரக்கர்தங் குலத்தை முற்றும்
வென்றுநின் றருளுங் கோலங்
காணிய கிடந்த வேட்கை.

'சென்று சென்று அழியும் ஆவி
திரிக்குமால் - செருவில் செம்பொன்
குன்று நின்றனைய தம்பி
புறக்கொடை காத்து நிற்ப,
கொன்று, நின் தலைகள் சிந்தி,
அரக்கர்தம் குலத்தை முற்றும்
வென்று நின்றருளும் கோலம்
காணிய கிடந்த, வேட்கை.

பொ :--போர்க்களத்திலே செம்பொன் மயமான மலையானது நின்றாற் போலும் தன் தம்பி (இலக்குவன்) நீ புறங்கொடுத் தோடுதலைத் தடுத்து நிற்க (உன்னை)க் கொன்று நின்னுடைய (பத்துத்) தலைகளை (வெட்டி) வீழ்த்தி அரக்கர்குலம் முழுவதனையும் வென்று நின்றருளும் (என் நாயகனது) போர்க்கோலத்தைக் காண

(என் மனத்திலே) கிடந்த ஆசையானது, (துன்பமிகுதியாற் புறத்தே) சென்று சென்று சிதையும் (எனது) உயிரைச் செல்லாமல் திரும்பவு செய்(து தடுத்து நிற்)கிறது.

கு :—'கோலம் காணிய கிடந்த வேட்கை' என்னும் இறுதி யடியில் உள்ள எழுவாய், 'சென்று சென்றழியும் ஆவிதிரிக்கும்' என முதலடியில் உள்ள வினையைக் கொண்டு முடிந்தமையின், இச்செய்யுள் பூட்டுவிற் பொருள்கோள். திரித்தல் - திரும்பச் செய்தல்; புறத்தே சொல்லவொட்டாமல் தடுத்து நிறுத்துதல். 'என் நாயகனோடு நீ செய்யும் போரில் நீ எதிர் நிற்கலாற்றாது புறங்கொடுத்தோடுதல் உறுதி. நீ தப்பி ஓடாதபடி பொன்மலை போலும் மேனியையுடைய இலக்குவனாகிய தன் தம்பி, கொடியோனாகிய உன்னைத் தடுத்து நிறுத்த, என் நாயகன் உன் தலைகள் பத்தினையும் தரையில் சிதறச் செய்து அரக்கர் குலத்தை வேரறக் களைந்து வெற்றிமாலை சூடுதல் உறுதி. அந்நிலையில் என் நாயகனது வெற்றிக் கோலத்தைக் காண வேண்டும் என்னும் ஆசையினாலேயே இதுகாறும் யான் உயிர்தரித்துள்ளேன்' எனப் பிராட்டி இராவணன் அழிந்துபடுதலும் இராமன் வெற்றி பெறுதலும் உறுதி என்பதனை இராவணனுக்கு அறிவுறுத்தினாள் என்றவாறு. காணிய - காண; செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். (23)

7785. எனக்குயிர் பிறிதொன் றுண்டென்
றெண்ணலை யிரக்க மல்லால்
தனக்குயிர் வேறின் றாகித்
தாமரைக் கண்ண தாகிக்
கனக்கரு மேக மொன்று
கார்முகந் தாங்கி யார்க்கும்
மனக்கினி தாகி நிற்கு
மஃதன்றி வரம்பி லாதாய்.

'எனக்கு உயிர்பிறிது ஒன்றுஉண்டு
என்று எண்ணலை; இரக்கம் அல்லால்
தனக்கு உயிர்வேறு இன்றாகி,
தாமரைக் கண்ணது ஆகி,
கனக் கருமேகம் ஒன்று
கார்முகம் தாங்கி, யார்க்கும்
மனக்கு இனிது ஆகி, நிற்கும்
அஃது அன்றி – வரம்பு இலாதாய்!

பொ :—(நல்லொழுக்க நெறியாகிய) கட்டுப்பாடு இல்லாதவனே! கருணை என்னும் பண்பினையன்றித் தனக்கு உயிர் வேறொன்று இல்லாததாய் (ச் செந்) தாமரை மலர்போலும் கண்களையுடையதாகிச் செறிந்த கருமை நிறம் வாய்ந்த மேகம் ஒன்று, விற்படையை (க் கையில்) ஏந்திக்கொண்டு எத்திறத்தார்க்கும் மனத்திற்கு இனிமை விளைப்பதாய் நிலைபெற்றிருக்கும்; (எனது நாயகனாகிய) அப்பொருளையன்றி எனக்கு மற்றும் வேறோர் உயிர் உளது என எண்ணாதொழிக.

கு :—வரம்பு - நல்லொழுக்க நெறியாகிய எல்லை. தன்னுடைய கணவனாகிய இராமனையன்றித் தனக்கு வேறு உயிரில்லை என இராவணனுக்கு அறிவுறுத்த எண்ணிய சீதை அம் முதல்வனது கருணைத் திறத்தையும், கண்டார் மனங்கவரும் கார்முகில் வண்ணனாகிய அவனது திருமேனியழகையும் கொடியோனாகிய இராவணனும் உளங்கொண்டு உள்ளந்திருந்தும் வண்ணம் விரித்துரைக்கும் முறையில் இச்செய்யுள் அமைந்துளது. ‘கனக் கருமேகம் ஒன்று, கருணையல்லால் தனக்கு உயிர் வேறு இன்றாகி, தாமரைக் கண்ணது ஆகி, கார்முகம் தாங்கி, யார்க்கும் மனக்கினிதாகி நிற்கும்; அஃதன்றி எனக்கு உயிர் பிறிதும் ஒன்று உண்டு என்று எண்ணலை’ என இயையும். கார்முகம் - வில். யார்க்கும் - பகைவர் நண்பர் அயலார் ஆகிய எத்திறத்தார்க்கும். (24)

சீதையின் சொற்கேட்டு வெகுண்ட இராவணன்
இராமனைக் கொல்வதோடன்றி அயோத்தியிலுள்ளாரையும்
மிதிலையிலுள்ளாரையும் பற்றிக் கொணருமாறு தான் அரக்க
வீரர்களை ஏவியிருப்பதாகக் கூறி அச்சுறுத்தல்

**7786.** என்றன ளென்ற லோடு
மெரியுகு கண்ணன் றன்னைக்
கொன்றன மானந் தோன்றக்
கூற்றெனச் சீற்றங் கொண்டான்
வென்றெனை யிராம னுன்னை
மீட்டபி னவனோ டாவி
ஒன்றென வாழ்தி போலென்
றிடியுரு மொக்க நக்கான்.

என்றனள்; என்ற லோடும்,
எரிஉகு கண்ணன், தன்னைக்
கொன்றுஅன மானம் தோன்ற,
கூற்று எனச் சீற்றம் கொண்டான்,
'வென்றுஎனை, இராமன் உன்னை
மீட்டபின், அவனோடு ஆவி
ஒன்று என வாழ்திபோல்' என்று,
இடிஉரும் ஒக்க நக்கான்.

பொ :—என்று கூறினள் (சீதை); இவ்வாறு கூறிய அளவில் (இராவணன்) தீயுமிழும் கண்களையுடையனாய்த் தன்னைக் கொன்றால் (உளதாவது) ஒத்த பெருமைக் குறைவு உண்டாகக் கூற்றுவனைப் போன்று கடுங்கோபத்தினை மேற்கொண்டவனாகி (ச் சீதையை உருத்து நோக்கி) 'இராமன் என்னை வெற்றிகொண்டு உன்னை மீட்ட பின்னர் அவனோடு உயிர் என்னுமாறு (நீ இன்புற்று) வாழ்வாய் போலும்' என்று சொல்லி இடிக்கும் இடியேற்றினை யொத்து (ப் பேரொலியுண்டாக இகழ்ந்து) சிரித்தான்.

கு :—'நிகழக் கூடாததொரு நிகழ்ச்சியை நிகழும் என்று நம்பி எதிர்பார்த்திருக்கின்றாயே உன் பேதைமை யிருந்தவாறென்னே' என்னும் குறிப்புப்பட இராவணன் சீதையை நோக்கி இகழ்ந்து சிரித்தனன் என்பதாம். வாழ்திபோல் - வாழ்வாய் போலும்; என்றது, நீ அவ்வாறு வாழ்தல் இயலாது, அங்ஙனம் வாழவும் விடமாட்டேன் என அச்சுறுத்தும் கருத்துப்பட நின்றது. உரும் - இடி. நகுதல் - சிரித்தல், பிறர்கண் தோன்றிய பேதைமைபற்றி நகை தோன்றியது. (25)

7787. இனத்துளா ருலகத் துள்ளா
ரிமையவர் முதலி னோரென்
சினத்துளார் யாவர் தீர்ந்தார்
தயரதன் சிறுவன் றன்னைப்
புனத்துழாய் மாலை யானென்
றுவக்கின்ற வொருவன் புக்குன்
மனத்துளா னெனினுங் கொல்வென்
வாழுதி பின்னை மன்னோ.

'இனத்துளார் உலகத்து உள்ளார்,
இமையவர் முதலினேர், என்
சினத்துளார் யாவர் தீர்ந்தார்?
தயரதன் சிறுவன், தன்னைப்
புனத்துழாய் மாலையான் என்று
உவக்கின்ற ஒருவன், புக்குஉன்
மனத்துளான் எனினும் கொல்வென்;
வாழுதி, பின்னை மன்னே!

பொ:—தத்தம் இனத்துடன் கூடி(ப் பெருங் கூட்டத்தினராக) இவ்வுலகில் வாழ்வோராகிய மக்களும் தேவர் முதலியோரும் (ஆகிய இவர்களுள்) என்வெகுளிக்கு இலக்கானவர்களில் (இறவாது) தப்பிப் பிழைத்துள்ளவர்கள் யாவர்? தயரதனுக்கு மகனும் தன்னை முல்லை நிலத்திற்ருேன்றிய துளசி மாலையை அணிந்த திருமால் என்று கருதி(ச்சிலர்) மனமகிழ்தற்குக் காரணமாகிய ஒருவனும் (ஆகிய இராமன் (என் கண்முன் நிற்கலாற்ருது புறங்கொடுத்தோடி நுண்ணியனுய்) உன் உள்ளத்தே புக்கு ஒளிந்திருந்தானுயினும் (அவனைத் தேடிக்கண்டு) கொன்றே தீர்வேன். பின்னர் (நீ அவனுடன் இன்புற்று) வாழ்வாய்.

கு:—தயரதன் புதல்வனும், தன்னைத் திருமாலின் அவதாரம் என்று பிறர் சொல்லி மகிழ்தற்குக் காரணமாகியவனும் ஆகிய இராமன் என் கண்முன் நில்லாது அஞ்சியோடித் தன்பால் அன்புடையவளாகிய உன் மனத்திற் புகுந்து ஒளிந்து கொண்டானு யினும் நின்னேடு அவனை (ஒருசேர)க் கொன்ருெழிப்பேன் என்பான், 'தயரதன் சிறுவன், தன்னைப் புனத்துழாய் மாலையான் என்று உவக்கின்ற ஒருவன், புக்கு உன் மனத்து உளான் எனினும் கொல்வென்' என்ருன். என்ருற் கொன்ருெழிக்கப்படுவானுகிய இராமனெடு கூடி வாழ எண்ணும் பேதைமையுடைய நீ ஒரு நாளும் அவ்வாறு வாழப் போவதில்லை என்பான், 'வாழுதிபின்னை' என்ருன். மன், ஓ என்பன அசை. (26)

7788. வளைத்தன மிதிலை வேலை
வகுத்தன வரம்பு வாயால்
உளைத்தன குரங்கு பல்கா
லென்றக முவந்த துண்டேல்

இளைத்தநுண் மருங்கு னங்கா
யென்னெதி ரெய்திற் றெல்லாம்
விளக்கெதிர் வீழ்ந்த விட்டிற்
பான்மைய வியக்க வேண்டா.

“ வளைத்தன மதிலை, வேலை
வகுத்தன வரம்பு, வாயால்
உளைத்தன குரங்கு பல்கால் ”
என்று அகம் உவந்தது உண்டேல்,
இளைத்த நுண்மருங்குல் நங்காய்!
என் எதிர் எய்திற்று எல்லாம்
விளக்கு எதிர்வீழ்ந்த விட்டில்
பான்மைய; வியக்க வேண்டா.

பொ :—தளர்ந்த நுண்ணிய இடையினையுடைய பெண்ணே! ‘குரங்குகள் கடலில் அணை கட்டின; (இலங்கையின் அரணாகிய) மதிலைச் சூழ்ந்து வளைத்துக் கொண்டன; வாயாற் பலமுறை பேரொலி செய்தன’ என்று (இவற்றை யெண்ணி நின்) மனம் மகிழ்ச்சியடைந்திருக்குமாயின், என் எதிர்ப்பட்ட (வானர சேனையாகிய அவை) எல்லாமும் (சுடர்விட்டெரியும்) விளக்கின் முன்னே வீழ்ந்த விட்டிற் பூச்சியின் தன்மையன (வாய் அழிந்தொழிவன) ஆகும். (ஆதலின் அக்குரங்குகளின் செயலைக் குறித்து நீ) வியப்படைதல் வேண்டா.

கு :—குரங்கு, வேலை வரம்பு வகுத்தன; மதிலை வளைத்தன; வாயாற் பல்கால் உளைத்தன என இயைத்துப் பொருள் கொள்க. குரங்கு என்பது பால்பகா அஃறிணைப் பெயராதலின் பன்மை வினை கொண்டு முடிந்தது. வேலை - கடல். வரம்பு - அணை. வகுத்தல் - இயற்றுதல். மதிலை வளைத்தல் - மதிலிடத்தைச் சூழ்ந்து பற்றிக் கொண்டு அங்கு நிலைகொண்டிருத்தல். உளைத்தல் - உரப்பிப் பேரொலி செய்தல். இளைத்தல் - தளர்தல். இளைத்த இடை நுண் இடை என இயையும். “என் கணவனுக்குத் துணையாய் வந்த வானர சேனைகள் கடலை அணைகட்டிக் கடந்தன; இலங்கையின் அரணாகிய மதிலை வளைத்துக் கொண்டன; அரக்கர்களைப் போருக்கு அறைகூவியழைக்கும் முறையிற் பலகால் உரக்கக் கூச்சலிட்டன” என்று இவ்வாறு அக்குரங்குகளின் ஆற்றலை எண்ணி நின்னுள்ளத்தே பெருமகிழ்ச்சி கொண்டாயானால், அம்மகிழ்ச்சி நெடுநேரம் நிலைத்திருத்தல் இயலாது; குரங்குகளாகிய அவை என்னை எதிர்ப்பட்ட நிலையில் எனது வெகுளியின் வெம்மைக்கு ஆற்றாதனவாய் விளக்கின் எதிர்ப்பட்ட விட்டிற் பூச்சியினை யொத்துத் தாமே

அழிந்தொழிவன. ஆகவே அக்குரங்குகளின் ஆற்றலை நம்பி அவற்றின் துணையால் இராமன் வெற்றிபெற்றுய்வான் என எண்ணி வியந்திருத்தல் மிகவும் பேதைமையாம்" என்று இராவணன் சீதையை மருட்டினான் என்பதாம். (27)

**7789.** கொற்றவா ளரக்கர் தம்மை
யயோத்தியர் குலத்தை முற்றும்
பற்றிநீர் தருதி ரன்றேற்
பசுந்தலை கொணர்திர் பாரித்
துற்றதொன் றியற்று வீரென்
றுந்தினே னுந்தை மேலும்
வெற்றியர் தம்மைச் செல்லச்
சொல்லினென் விரைவி னென்றான்.

'கொற்றவாள் அரக்கர் தம்மை,
"அயோத்தியர் குலத்தை முற்றும்
பற்றிநீர் தருதிர்; அன்றேல்,
பசுந்தலை கொணர்திர்; பாரித்து
உற்றது ஒன்று இயற்றுவீர்"
என்று உந்தினேன்; உந்தைமேலும்,
வெற்றியர் தம்மைச் செல்லச்
சொல்லினென், விரைவின்' என்றான்.

பொ:—'நீவிர் அயோத்தி மன்னரின் குலத்திலுள்ளவர்களை (ஒருவரும் எஞ்சியிராதபடி) முழுவதும் பிடித்துக்கொண்டு வாருங்கள் அன்றேல் (அவர்களுடைய) பசியதலைகளைக் கொண்டு வாருங்கள்; முயன்று (இவற்றுள் நுமக்கு) ஏற்ற தொன்றைச் .செய்வீராக' என்று சொல்லி வெற்றித்திறம் வாய்ந்த வாட் படையை யேந்திய அரக்கர்களை (அயோத்திக்கு விரைந்து செல்லுமாறு) செலுத்தியுள்ளேன்; வெற்றியுடைய வீரர்களை உன் தந்தையாகிய சனகமன்னன் மேலும் விரைந்து சென்று பற்றும்படி பணித்துள்ளேன் என்று கூறினான் (இராவணன்).

கு:—'நீர், அயோத்தியர் குலத்தை முற்றும் பற்றித் தருதிர்; அன்றேல், பசுந்தலை கொணர்திர்; பாரித்து உற்றது ஒன்று இயற்றுவீர்' என்று, கொற்றவாள் அரக்கர் தம்மை உந்தினேன்; வெற்றியர் தம்மை உந்தை மேலும் விரைவிற் செல்லச் சொல்லினன் என இயைக்க. குலம் என்றது, குலத்திற் பிறந்தார்களை. முற்றும் -

முழுவதும் பசுந்தலை கொணர்திர் என்றது, குருதியின் ஈரம் புலராத வாறு வெட்டிய உடனே அத்தலைகளை விரைந்து கொணர்மின் என்னும் கருத்தினது. பாரித்தல் - முயலுதல். உற்றது - (தமக்கு) இயல்வது. உந்துதல் - செலுத்துதல். உந்தை – உன் தந்தை; என்றது சீதையின் தந்தையாகிய சனகமன்னனை. தன் விருப்பத் துக்கு இணங்காத சீதையை அச்சுறுத்தி இணங்கச் செய்தல் வேண்டியும் மகோதரனது மாயையால் உருவாக்கப்பட்டு இனி வரவிருக்கும் மாயா சனகனைச் சீதை தன் தந்தையென்றே உண்மை யாக நம்பும்படியும் இராவணன் இவ்வாறு பொய்யான நிகழ்ச்சியினை வஞ்சனையாற் புனைந்து கூறினன் என்க. (28)

### வஞ்சனையால் தன்னைக் கவர்ந்த கொடியோனாகிய இராவணனது சொற் கேட்டுச் சீதை வருந்துதல்

**7790.** என்றவ னுரைத்த காலை
யென்னையிம் மாயஞ் செய்தாற்
கொன்றுமிங் கரிய தில்லை
யென்பதோர் துணுக்க முந்த
நின்றுநின் றுயிர்த்து நெஞ்சம்
வெதும்பினு னெருப்பை மீளத்
தின்றுதின் றுமிழ்கின் ருரிற்
றுயருக்கே சேக்கை யானுள்.

என்று அவன் உரைத்த காலை,
'என்னை இம்மாயம் செய்தாற்கு
ஒன்றும் இங்கு அரியதுஇல்லை'
என்பது ஓர் துணுக்கம் உந்த,
நின்றுநின்று உயிர்த்து நெஞ்சம்
வெதும்பினுள், நெருப்பை மீளத்
தின்று தின்று உமிழ்கின்ருரின்,
துயருக்கே சேக்கை ஆனுள்.

பொ:—என்று அவ் இராவணன் சொன்னபோது ('எத்தகைய அச்சமுமின்றி இராம இலக்குவரது பாதுகாப்பிலிருந்த) என்னை இவ்வாறு வஞ்சனை செய்து சிறைப்படுத்தியவனுன இராவணனுக்கு இவ்வுலகில் (செய்ய முடியாத) அரிய செயல் ஒன்றும் இல்லை' என்பதோர் அச்சம் (சீதையின் உள்ளத்தில் புகுந்து துயரத்திற்) செலுத்துதலால் (இன்னது செய்வதென்றறியாது) திகைப்புற்று

நின்று பெருமூச்சுவிட்டு மனம் வெதும்பியவளாய், (சுட்டெரிக்குந் தன்மையாகிய) நெருப்பினைப் பிறரது வற்புறுத்தலை மீறவொண்ணாத நிலையில் வாயில் உட்கொண்டு தின்று தின்று (பின் பொறுக்க முடியாத நிலையில்) மீளவும் உமிழ்கின்றவர்களையொத்து (எல்லையற்ற) துன்பத்துக்கேதான் நிலைக்களமாயினாள்.

கு :—'அயோத்தியர் குலத்தைப்பற்றி அவர்களுடைய தலைகளை யரிந்து கொணரும்படியும் சனகனைப் பற்றிக்கொணரும்படியும் வெற்றி வீரராகிய அரக்கர்களை அனுப்பியுள்ளேன்' என இராவணன் கூறிய பொய்யுரையினைக் கேட்ட சீதை, அயோத்தி மன்னர் குலத்தவரும் சனக மன்னரும் இவ்வாறு அரக்கர்களால் போரிற் பற்றிக் கொணர்தற்கு அத்துணை எளியரல்லர் என்பதனை நன்குணர்ந்தவளாயினும், பெரு வீரர்களாகிய இராம இலக்குவரது பாதுகாவலிலிருந்த தன்னை வஞ்சனையாற் கவர்ந்து கொண்டுவந்து சிறைப்படுத்திய கொடியோனாகிய இராவணனுக்கு இச்செயல்கள் வஞ்சனையாற் செய்வதற்கு அரியன அல்ல என்பதனை நினைந்து அளவிலாத் துயருற்றாள் என்பார், 'என்னை இம்மாயஞ் செய்தாற்கு இங்கு ஒன்றும் அரியது இல்லை என்பது ஓர் துணுக்கம் உந்த... துயருக்கே சேக்கையானாள்' என்றார். சேக்கை - தங்குமிடம்; நிலைக்களம். (29)

**7791.** இத்தலை யின்ன செய்த
விதியினா ரென்னை யின்னும்
அத்தலை யன்ன செய்யச்
சிறியரோ வளிய ரம்மா
பொய்த்தலை யுடைய தெல்லாந்
தருமமே போலு மென்னாக்
கைத்தன ளுள்ளம் வெள்ளக்
கண்ணினீர்க் கரையி லாதாள்.

'இத்தலை இன்ன செய்த
விதியினார், என்னை, இன்னும்
அத்தலை அன்ன செய்யச்
சிறியரோ? அளியர் அம்மா!
பொய்த்தலை உடையது எல்லாம்
தருமமே போலும்' என்னாக்
கைத்தனள் உள்ளம், வெள்ளக்
கண்ணின் நீர்க்கரை இலாதாள்.

பொ :—(எல்லையற்ற துயரத்தால்) கண்களினின்று வெள்ள மாகப் பெருகிவரும் நீருக்குக் கரையினைப் பெருதாளாகிய சீதை (உலகெலாங் காக்கும் தனி முதல்வனது மனைவியாய் அவனது பாது காப்புக்குரியதாகிய பன்னசாலையாகிய) இவ்விடத்திலேயுள்ள என்னை (அறமற்ற கொடியோர்கள் நிரம்பிய இலங்கையிற் சிறை யிலேயிருந்து வருந்த) இத்தகைய துயரங்களை நுகரும்படி செய்த தீயூழாகிய விதியினர், (என் கணவரைப் பிரிந்த துயரால் மெலிவுற் ரோர் வாழும் அயோத்தி நகரமாகிய) அவ்விடத்திலே (இக்கொடி யோன் சொல்லியவண்ணம்) அத்தகைய துன்பங்களை நுகரும்படி செய்தற்கு(த் தன் ஆற்றலிற் சிறுமையுடையாரோ? (மிகவும் வலியவரேகாண்). அங்குள்ளார் அளிக்கத்தக்கார். எல்லாவற்ருலும் (தனக்குரிய பயனைத் தருதலிற்) பொய்க்குந்தன்மையினையுடையது அறம் ஒன்றுமே போலும் என்று எண்ணித் தன் மனத்தில் வெறுப் புற்று வருந்தினள்.

கு :—இத்தலை - (இராம இலக்குவரது பாதுகாவலுக்குரியதாய் இலக்குவனல் அமைக்கப்பட்ட பன்னசாலையாகிய) இவ்விடம், 'உம்பி புல்லினற் ரெடுத்த தூய சாலையின் இருந்தாள்' எனவும், 'மண்ணெடுங் கொண்டு போனன் வானுயர் கற்பினள் தன், புண்ணிய மேனி தீண்ட அஞ்சுவான்' எனவும் அனுமன் இராமனை நோக்கிக் கூறும் முறையில் அமைந்த தொடர்கள், சிறையிருந்த செல்வியாகிய சீதையால் 'இத்தலை' எனச் சுட்டப்பட்ட இடம் அவளிருந்த தவச் சாலையே என்பதனை நன்கு புலப்படுத்துவன. இன்ன - இரக்கமற்ற கொடியோர்கள் வாழும் இலங்கையிற் சிறைவைக்கப்பட்டுத் தூர்த்த னகிய இராவணன் கூறும் தீ மொழிகளைச் செவி கொடுத்துக் கேட்கு மளவில் உயிர் தாங்கியிருத்தலாகிய இத்துன்பங்கள். அத்தலை – (இராம இலக்குவரைப் பிரிந்து தவம் புரிந்து மெலிந்த பரதன் முதலியோர் வாழும் அயோத்தி முதலிய) அவ்விடம். அன்ன - இராவ ணன் கூறியபடி அரக்கர்களால் பற்றப்பட்டுத் தலை துமிக்கப்படுத லாகிய அத்துன்பங்கள், விதியினர் என்புழி ஆர் விகுதி இழித்தற் குறிப்பினது. விதி - ஊழ். "ஊழிற் பெருவலி யாவுள மற்ரென்று, சூழினுந் தான்முந் துறும்" (திருக்குறள் - 380) என்பவாகலின், விதியினர் சிறியரோ என்ருள். அம்மா-வியப்பிடைச் சொல். 'எல்லாம் பொய்த்தலையுடையது தருமம் ஒன்றுமே போலும்' என இயைத் துரைக்க. பொய்த்தல் - தன் பயனை விளைத்தலில் தவறுதல். கைத்தல் - வெறுத்தல். நீர்க்குக் கரையிலாதாள் என நான்கா முருபு விரித்துரைக்க. (30)

## மகோதரன், மாயாசனகனை அங்குப் பற்றிக் கொணர அது கண்டு சீதை ஆற்ரு நிலையளாய் அரற்றி வருந்துதல்

7792. ஆயதோர் காலத் தாங்கண்
மருத்தனைச் சனக ஞக்கி
வாய்திறந் தரற்றப் பற்றி
மகோதரன் கடிதின் வந்து
காயெரி யனையான் முன்னர்க்
காட்டினன் வணங்கக் கண்டாள்
தாயெரி வீழக் கண்ட
பார்ப்பெனத் தரிக்கி லாதாள்.

ஆயது ஓர்காலத்து ஆங்கண்
மருத்தனைச் சனகன் ஆக்கி,
வாய் திறந்து அரற்றப் பற்றி,
மகோதரன் கடிதின் வந்து
காய் எரி அனையான் முன்னர்க்
காட்டினன்; வணங்கக் கண்டாள்,
தாய் எரி வீழக் கண்ட
பார்ப்பு எனத் தரிக்கி லாதாள்.

பொ :—அப்பொழுது அங்கே மகோதரன் என்பான், மருத்தன் என்னும் அரக்கனைச் சனக மன்னனாக (உருவம் மாற)ச் செய்து (மாயையாற் சனகனாக உருமாறிய அவனை) வாய்திறந்து கதறி முறையிடும்படி (சிறை) பிடித்துக் கொண்டு விரைந்து வந்து, கனன்றெரியும் தீயினையொத்த வெய்யோனாகிய இராவணன் முன்னே காட்டினான். (சனகனாகிய அவன் இராவணனை) வணங்கி நிற்றலைக் கண்ட சீதை, (தன்னையீன்ற) தாய்ப்பறவை தீயில் வீழ்வதனைக் கண்ட பறவைக்குஞ்சு போன்று (நெஞ்சம்) பொருதவளாயினாள்.

கு :—மகோதரன் மருத்தனைச் சனகன் ஆக்கிப் பற்றி ஆங்கண் கடிதின் வந்து காயெரியனையான் முன்னர்க் காட்டினன் என இயையும். வாய்திறந்து அரற்றுதலும் வணங்குதலும் சனகனுருக் கொண்ட மருத்தன் செயல்கள். அரற்ற, வணங்க என்னும் செய வென்னெச்சங்கள், பற்றி எனவும் கண்டாள் எனவும் வரும் பிற கருத்தாவின் வினையைக் கொண்டு முடிந்தன. காய் எரி அனை யான் என்றது சீதையின் சொற்கேட்டுக் கோபத்தால் உள்ளங் கனலும் கொடியோனாகிய இராவணனை. மாயா சனகனாகிய அவன் சிறைபிடிக்கப்பட்டு இராவணனை வணங்குதலைக் கண்டு மனம்

பொருத சீதைக்குத் தாய்ப்பறவை தீயில் வீழ்தலைக் கண்டு மனங் கலங்கிய பார்ப்பு உவமை. பார்ப்பு என்பது பறவையுள் இளமை குறித்த மரபுப்பெயர். பார்ப்பு - குஞ்சு. (31)

7793. கைகளை நெரித்தாள் கண்ணில்
மோதினாள் கமலக் கால்கள்
நெய்யெரி மிதித்தா லென்ன
நிலத்திடைப் பதைத்தா ணெஞ்சம்
மெய்யென வெரிந்தா ளேங்கி
விம்மினா ணடுங்கி வீழ்ந்தாள்
பொய்யென வுணரா ளன்பாற்
புரண்டனள் பூச லிட்டாள்.

கைகளை நெரித்தாள்; கண்ணில்
மோதினாள்; கமலக் கால்கள்
நெய்எரி மிதித்தால் என்ன
நிலத்திடைப் பதைத்தாள்; நெஞ்சம்
மெய்என எரிந்தாள்; ஏங்கி
விம்மினாள்; நடுங்கி வீழ்ந்தாள்;
பொய் என உணராள் அன்பால்,
புரண்டனள், பூச லிட்டாள்.

பொ :—(மகோதரனாற் சனகன் சிறை பிடிக்கப்பட்டு வந்ததாக அங்கு நிகழ்ந்த அச்செயல்) பொய்ம்மையுடையது என்பதனை அறியாதவளாகிய சீதை, (தந்தைபாலுள்ள) அன்பு காரணமாக (அவனது துன்பத்தைப் போக்குதற்கு இன்னது செய்வதென்றறியாதவளாய்த் தன்) கைகளை நெரித்துக் கொண்டாள்; (அத்துன்ப நிலையினைக் காண நேர்ந்தமை பற்றித்) தன் கண்களில் அறைந்து கொண்டாள்; தாமரை மலர் போலும் பாதங்கள் நெய் சொரியப்பட்டு மூண்டெரியும் தீயிலே மிதித்தாற் போன்று பூமியின்மீது (நிற்கலாற்றாது) துடிப் புற்றாள்; தன் உடம்பினை யொத்து உள்ளமும் வெதும்பினாள்; ஏக்கங் கொண்டு நெட்டுயிர்த்து விம்மினாள்; நடுங்கி(க் கீழே) விழுந்தாள்; (துன்ப மிகுதியால் ஓரிடத்திற்கிடைகொள்ளாமல்) புரண்டாள்; பேரொலியுண்டாகக் கதறினாள்.

கு :—பொய்யெனவுணராள், நெரித்தாள், மோதினாள், பதைத் தாள், விம்மினாள், வீழ்ந்தாள், புரண்டனள், பூசலிட்டாள் என முடியும். 'பொய்' என்றது, மகோதரனாற் சனக மன்னன் சிறை

பிடிக்கப்பட்டு இராவணன் முன்னே வந்து வணங்கியதாக அங்கு நிகழ்ந்த அச்செயலை அச்செயல் பொய்ம்மையுடையது என்பதனை அறியாத சீதை, தன் தந்தையின்பால் வைத்த அன்பு காரணமாக அவனது அல்லல் காணப் பொருது இங்ஙனம் ஆற்ருது துயருழந்தாள் என்பதாம். கைநெரித்தல், கண்ணில் மோதுதல், தரையில் வீழ்ந்து புரளுதல் முதலியன ஆற்ருெணுத் துயரமுற்ருேர்பால் நிகழ்வன. மெய்யென நெஞ்சம் எரிந்தாள் - தன் உடம்பினைப் போன்று உள்ளமும் வெதும்பினுள். என என்பது உவம வுருபு. (32)

7794. தெய்வமோ வென்னு மெய்ம்மை
சிதைந்ததோ வென்னுந் தீய
வைவலோ வுலகை யென்னும்
வஞ்சமோ வலிய தென்னும்
உய்வலோ வின்னு மென்னு
மொன்றல துயர முற்ருள்
தையலோ தரும மேயோ
வார தன் றன்மை தேர்வார்.

'தெய்வமோ!' என்னும்; 'மெய்ம்மை
சிதைந்ததோ ?' என்னும்; 'தீய
வைவலோ உலகை ?' என்னும்;
'வஞ்சமோ வலியது ?' என்னும்;
'உய்வலோ இன்னும் ?' என்னும்;
ஒன்று அல துயரம் உற்ருள்;
தையலோ ? தருமமேயோ ?
ஆர்அதன் தன்மை தேர்வார் ?

பொ :—(பூசலிட்டு அரற்றுபவளாகிய சீதை) 'ஓ தெய்வமே' என (அழைத்து) முறையிடுவாள் ; (இவ்வுலகில்) சத்தியம் அழிந்து போயிற்ருே என்பாள் ; (உண்மைக்கு இடந்தராத) இவ்வுலகத்தைத் தீய்ந்து பொடியாய் அழியும்படி சபித்தலைச் செய்வேனே என வெகுண்டுரைப்பாள் ; (அறத்தினும்) வஞ்சனைதான் வலியுடையதோ? என்பாள்; (கொடியோரால் வஞ்சிக்கப்பட்ட யான் அவ்வஞ்சனையினின்று) இனியும் தப்பிப் பிழைப்பேனே ? எனக்கவல்வாள் ; இவ்வாறு ஒருவகையாலன்றிப் பல படியாலும் துன்புற்று வருந்தினுள் ; (இங்ஙனம் வருந்தியது சீதையாகிய) பெண்தானே அல்லது அறக்கடவுள்தானே? அதன் உண்மைத் தன்மையை ஆராய்ந்தறிய வல்லார் யாவர்?

கு :—சீதை அடைந்த துன்பங்களை விரித்துரைத்த ஆசிரியர், இங்ஙனம் துன்பமுற்றது சீதையென்னும் பெண்ணோ? அல்லது அவள் வடிவில் வந்த அறக் கடவுளோ? என ஐயுற்று வினவுமுகமாக அறத்தின் வடிவாக அமைந்தவள் சிறையிருந்த செல்வியாகிய சீதை என்னும் உண்மையினை அறிவுறுத்தியுள்ளமை அறியத்தக்கதாகும். (33)

7795. எந்தையே யெந்தை யேயின்
றென்பொருட் டுனக்கு மிக்கோள்
வந்ததே யென்னைப் பெற்று
வாழ்ந்தவா றிதுவோ மண்ணோர்
தந்தையே தாயே செய்த
தருமமே தவமே யென்னும்
வெந்துயர் வீங்கித் தீவீழ்
விறகென வெந்து வீழ்ந்தாள்.

'எந்தையே! எந்தையே! இன்று
என்பொருட்டு உனக்கும் இக்கோள்
வந்ததே! என்னைப் பெற்று
வாழ்ந்தவாறு இதுவோ? மண்ணோர்
தந்தையே! தாயே! செய்த
தருமமே! தவமே!' என்னும்;
வெந்துயர் வீங்கி, தீவீழ்,
விறகு என வெந்து வீழ்ந்தாள்.

பொ :—(எல்லையற்ற துயரத்தினளாகிய சீதை தன் தந்தை சனகனை எண்ணி) 'என் தந்தையே! என் தந்தையே! (அறிவு திரு ஆற்றல்களால் மேம்பட்டு விளங்கும் வெற்றி வேந்தனாகிய) உனக்கும் (பகைவர்களாற்) பிணித்துக் கொள்ளப்படும் இவ்விழி நிலை வந்து விட்டதே? (சீதையாகிய) என்னை (மகளாக)ப் பெற்று (நீ) வாழ்விற் சிறப்புற்ற தன்மை இதுதானோ? மண்ணுலகில் வாழ்வார்க்கெல்லாம் தந்தையே! தாயே! செய்த நல்லறமே! தவமே என (அழைத்து)ப் புலம்புவாள்; கொடிய துயரம் மிகுந்து தீயில் (இடப்பட்டு) வீழும் விறகினைப் போன்று (மனம்) வெதும்பி(க் கீழே) விழுவாள்.

கு :—'வலியற்ற பெண்ணாகிய எனக்கேயன்றி ஆற்றல் மிக்க வேந்தர் பெருமானாகிய உனக்கும் இவ்வாறு பகைவராற் பிணித்துக்

கொள்ளப்படும் இழிநிலை ஏற்பட்டு விட்டதே' எனவும் இந்நிலை யான் உனக்கு மகளாகப் பிறந்தது பற்றியே ஏற்பட்ட தெனவும் ஏங்குபவள் 'என் பொருட்டு உனக்கும் இக்கோள் வந்ததே' என்றாள். கோள் - (பகைவராற் பற்றிக்) கொள்ளப்படுதல். உலகில் நன்மக்களைப் பெறுவோர் அம்மக்கள் செய்த நல்வினைகளால் தாம் உயர்நிலை பெற்று வாழ்க்கையில் இன்புறுதல் முறையாகவும் நீ என்னை மகளாகப் பெற்றதனால் இங்ஙனம் பகைவர் கைப்பட்டு வருந்தும் இழிநிலையினை எய்தினாய் என்பாள் 'என்னைப் பெற்று வாழ்ந்தவாறு இதுவோ?' என்றாள். மண்ணுலகில் வாழ்வார்க் கெல்லாம் நல்லறிவும் ஒழுக்கமும் அறிவுறுத்தி நல்வழிப்படுத்தும் முறையில் தந்தை போன்று உதவினை என்பாள், 'தந்தையே' என்றும், அன்பினால் அனைவரையும் பேணி வளர்த்தலில் தாய் போன்று உதவினை என்பாள், 'தாயே' என்றும், நற்பயன்களைத் தவறாது நுகர்வித்தலால் அவரவர் செய்த அறத்தினை ஒத்து விளங்கினை என்பாள், 'செய்த தருமமே' என்றும் மன்னுயிர்கள் வேண்டிய நற்பயன்களை விளைத்தலால் செய்த தவம் போன்று திகழ்ந்தனை என்பாள் 'தவமே' என்றும், சீதை தன் அன்புடைத் தந்தையாகிய சனக மன்னனை அழைத்துப் புலம்பினாள் என்க. (34)

7796. இட்டுண்டா யறங்கள் செய்தா
யெதிர்ந்துளோ ரிருக்கை யெல்லாஞ்
சுட்டுண்டாட் டயர்ந்தாய் வேள்வித்
துறையெலாங் கரையுங் கண்டாய்
மட்டுண்டார் மனிசர்த் தின்ற
வஞ்சரால் வயிரத் திண்டோள்
கட்டுண்டா யென்னே யானுங்
காண்கின்றேன் போலுங் கண்ணால்.

'இட்டு, உண்டாய்; அறங்கள் செய்தாய்;
எதிர்ந்துளோர் இருக்கை எல்லாம்
சுட்டு, உண்டாட்டு அயர்ந்தாய்;
வேள்வித்துறை எலாம் கரையும் கண்டாய்;
மட்டு உண்டார், மனிசர்த்தின்ற
வஞ்சரால் வயிரத் திண்தோள்
கட்டுண்டாய்; என்னே, யானும்
காண்கின்றேன் போலும் கண்ணால்.'

பொ :—(இரவலர் முதலியோர்க்கு முதற்கண் உணவு) அளித்து(ப் பின் உண்டாய்; அறங்கள் பலவற்றைச் செய்தாய்; (நின்னை) எதிரேற்று வந்தோராகிய புகைவர்களின் ஊர்களை யெல்லாம் தீயூட்டி அழித்து (நின் படை வீரர்கள் தாம் கொண்ட வெற்றியால் தேறலை) உண்டு மகிழ்ந்து விளையாடச் செய்தாய்; (வேத நெறியில் நின்று) யாகத் துறைகள் எல்லாவற்றையும் வரம்புகண்டு செய்து நிறைவேற்றினாய்; (இங்ஙனம் அறிவு திரு ஆற்றல்களாற் சிறந்த பெரு வேந்தனாகிய நீ) கட்குடியராகி மனிதர்களைத் தின்னும் வஞ்சகராகிய அரக்கர்களால் வயிரம் போலும் உறுதி வாய்ந்த (நின்) தோள்கள் கட்டப்பட்டாய். இதற்குரிய காரணந்தான் யாதோ? (நீ அடைந்த இவ்விடர் நிலையினை நின் மகளாகிய) யானும் (என்) கண்களாற் கண்டு கொண்டிருக்கின்றேன் போலும்.

கு :—' இரவலர்க்களிக்கும் வரையாவண்மையும் எல்லோர்க்கும் இனியன புரியும் நல்லறச் செயல்களும் போற்றாரை யடர்த்து அழிக்கும் வெற்றித் திறமும், மறைமுறைப்படி வேள்விகள் பலவற்றைச் செய்து முடித்த உயர்பேரொழுக்கமும் ஒருங்குடையாய், இப் பிறப்பில் யானறிய நல்வினைகளையே செய்து போந்த பெருவேந்தனாகிய நீ, இவ்வாறு தீவினையாளராகிய அரக்கர்களால் நின் தோள்கள் கட்டப்பட்டுச் சிறைப்படும் எளிமை நிலையை அடைதற்குச் சிறிதும் தொடர்புடையாயில்லை; அங்ஙனமாகவும் இவ்விடர் நிலை நினக்கு எய்தற்குக் காரணமாயமைந்தது பண்டைப் பிறப்பிற் செய்த ஊழ்வினைதானோ' எனத் தன் தந்தையின் இன்னல் நிலையை நினைத்து வருந்தும் சீதை 'வயிரத்திண்தோள் கட்டுண்டாய் என்னே' என இரங்கினாள். கட்டுண்ணல் - கட்டப்படுதல். 'இம்மைச் செய்தன யானறி நல்வினை, உம்மைப் பயன்கொல்?' எனவரும் சிலப்பதிகாரத் தொடர் இங்கு நினைக்கத் தக்கது. 'பெற்று வளர்த்த தந்தையாகிய உனக்கு நேர்ந்த பேரிடரைக் கேட்ட மாத்திரத்திலே உயிர்துறக்க வேண்டிய யான், நீ உற்ற இடரைக் கண்களாற் கண்டும் என்னுயிரைத் துறவாத தீவினையாட்டியாக உயிர்தாங்கியுள்ளேன்' என்பாள், 'யானும் கண்ணால் காண்கின்றேன் போலும்' என அவலமுற்று அரற்றினாள். எதிர்ந்துளோர் இருக்கை யெல்லாம் சுடுதல் 'உழபுலவஞ்சி' என்னும் புறத்துறையாகும். 'உண்டாட்டு' என்பது, போரில் வெற்றி பெற்ற வீரர்கள் கள்ளின் தெளிவையுண்டு மகிழ்ந்து விளையாடுதலாகிய புறத்துறை. அயர்தல் - செய்தல். (35)

7797. என்றின பலவும் பன்னி
யெழுந்துவீழ்ந் திடரிற் றேய்ந்தாள்
பொன்றினள் போலு மென்னப்
பொறையழிந் துயிர்ப்புப் போவாள்
மின்றனி நிலத்து வீழ்ந்து
புரள்கின்ற தனைய மெய்யாள்
அன்றிலம் பேடை போல
வாய்திறந் தரற்ற லுற்றாள்.

என்று, இன பலவும் பன்னி,
எழுந்து வீழ்ந்து இடரில் தோய்ந்தாள்;
'பொன்றினள்போலும்' என்ன பொறை
அழிந்து, உயிர்ப்புப் போவாள்,
மின் தனிநிலத்து வீழ்ந்து
புரள்கின்றது அனைய மெய்யாள்;
அன்றில் அம் பேடை போல,
வாய் திறந்து அரற்ற லுற்றாள்.

பொ :—என்று இத்தன்மையவாகிய பல வார்த்தைகளையும் அடுத்தடுத்துச் சொல்லி (நிலத்தினின்றும்) எழுந்து (துயரத்தைத் தாங்கமாட்டாதவளாய் மீண்டும் பூமியில்) விழுந்து துன்ப (வெள்ள)த்துள் அழுந்தியவளாய், '(இவள்) உயிர் நீங்கினாள் போலும்' எனக் (கண்டோர்) கருதுமாறு (துன்பங்களைப்) பொறுக்கும் வன்மை கெட்டு உயிர்ப்பு அடங்கியவளாகிய சீதை, (வானிலுள்ள) மின்னற் கொடியொன்று தனித்துப் பூமியில் வீழ்ந்து புரள்கின்றதனை யொத்த உடம்பினையுடையவளாய், அன்றிலாகிய பறவையினத்துள் (தன் துணையினைப் பிரிந்த) அழகிய பெண் பறவையினைப்போல வாய் விட்டுக் கதறுபவளாயினாள்.

கு :—பன்னுதல் - பலமுறையும் கூறுதல். பொறை - துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளுதலாகிய மனத்திட்பம். அழிதல் - சிதைந்து கெடுதல். உயிர்ப்புப் போதல் - மூச்சு அடங்குதல். அன்றில் அம்பேடை - அன்றில் இனத்துள் அழகிய பெண் பறவை. (36)

7798. பிறையுடை நுதலார்க் கேற்ற
பிறந்தவிற் கடன்கள் செய்ய
இறையுடை யிருக்கை மூதூ
ரென்றும்வந் திருக்க லாதீர்
சிறையிடைக் காண நீருஞ்
சிறையொடுஞ் சேர்ந்த வாறே
மறையுடை வரம்பு நீங்கா
வழிவந்த மன்னர் நீரே.

'பிறையுடை நுதலார்க்கு ஏற்ற
பிறந்த இற்கடன்கள் செய்ய,
இறையுடை இருக்கை மூதூர்
என்றும் வந்து இறுக்கலாதீர்,
சிறையிடைக் காண நீரும்
சிறையொடும் சேர்ந்தவாறே—
மறையுடை வரம்பு நீங்கா
வழிவந்த மன்னர் நீரே ?

பொ :—வேதங்களிலே கூறப்பட்டுள்ள (நல்லொழுக்கமாகிய) நெறியினின்றும் வழுவாதொழுகும் நற்குடியிற் பிறந்த அரசராகிய நீவிர், பிறைச்சந்திரனை யொத்த வனப்பினையுடைய நெற்றியினை ராகிய நங்கையர்க்கு ஏற்ற வகையில் (அவர் தம்) பிறந்த வீட்டா ராகிய பெற்றோர்கள் செய்தற்குரிய (சீர்வரிசையாகிய) கடமைகளைச் செய்தல் வேண்டி என் நாயகனுடைய இருப்பிடமாகிய பழைமை யுடைய (அயோத்தி) நகரத்தில் வந்து என்றேனும் (ஒருநாள்) தங்கி யிருந்தீரல்லீர். (அவ்வாறு வந்து தங்குதற்கு நேரம் வாய்க்காத தாங்கள், இவ்வாறு இங்கு வந்ததாகிய இச்செயல்) நும்மகளாகிய என்னை(ப் பகைவரது) சிறையிடத்தே காணவேண்டி நீவிரும் (பகை வராற் பற்றப்பட்டுச்) சிறைப்பட்ட தன்மையுடனே வந்து சேர்ந்த வண்ணமோ ?

கு :—'வேத நெறிப்படி நாள்தோறும் செய்யவேண்டிய தீயோம் புதல் முதலிய நியமங்களை மேற்கொண்ட தாங்கள், நும்முடைய நித்த நியமங்களுக்கு இடையீடு நேருமே என்றெண்ணி, நும்மக ளாகிய எனக்குப் பெற்றோர் என்ற முறையில் இன்றியமையாது செய் தற்குரிய சீர்வரிசைகளைச் செய்யுங் காலத்தும் என் கணவரது பேரு ராகிய அயோத்தி நகரத்திற்கு வந்து ஓரிரு நாட்களாவது தங்கியிருந் தீரல்லீர். நித்த நியமத் தொழிலில் இடையறவுபடாது நுமது இருப் பிடத்தை விட்டு என்றும் அகலாத தாங்கள், நும்மகளாகிய யான்

அயலானாற் பற்றப்பட்டுச் சிறையிலிருந்து அல்லலுறும் இத்துன்பக் காலத்தில் என்னைக் காண விரும்பி இங்கு வந்தபொழுது இவ்வாறு பகைவராற் பற்றப்பட்டு, சிறைப்பட்டு வந்தீர்களோ' எனச் சீதை தந்தையை நோக்கி அரற்றினாள் என்றவாறு. இறை - நாயகன்; கணவன். இறுத்தல் - தங்குதல். 'மறையுடை வரம்பு நீங்கா வழி வந்த மன்னர் நீரே' என்னும் அடைமொழி மன்னராகிய அவர் இறையுடை யிருக்கை மூதூர் என்றும் வந்து இறுக்கலாகாமைக்குரிய காரணத்தைக் குறிப்பாற் புலப்படுத்தி நிற்றலால் இது கருத்துடை யடை கொளி என்னும் அணிநலம் அமைந்ததாகும். (37)

7799. வன்சிறைப் பறவை யூரும்
வானவன் வரம்பின் மாயப்
புன்சிறைப் பிறவி தீர்ப்பா
னுளனெனப் புலவர் நின்றார்
என்சிறை நீக்கு வாரைக்
காண்கிலே னென்னின் வந்த
உன்சிறை நீக்கற் பாலார்
யாருள ருலகத் துள்ளார்.

"வன்சிறைப் பறவை ஊரும்
வானவன், வரம்புஇல் மாயப்
புன்சிறைப் பிறவி தீர்ப்பான்
உளன்" எனப் புலவர் நின்றார்;
என்சிறை நீக்கு வாரைக்
காண்கிலேன்; என்னின் வந்த
உன்சிறை நீக்காற் பாலார்
யார்உளர், உலகத்து உள்ளார்?

பொ :—வலிய சிறகினையுடைய (கருடனாகிய) பறவையை ஏறிச் செலுத்தும் திருமாலாகிய கடவுள் எல்லையற்ற மாயையின் காரியமாகிய துன்பத்தை விளைக்கும் சிறையாகிய பிறவிப் பிணிப்பினைக் களைதற் பொருட்டு உள்ளான் என்னும் நம்பிக்கையுடன் நல்லறிவுடைய பெரியோர்கள் (தம் துன்பத்தைப் பொறுத்துக்கொண்டு அமைதியுடன்) உள்ளார்கள். (அவ்வாறே) எனது சிறைத் துன்பத்தை நீக்கி எனக்கு நலஞ் செய்வாராகிய என் தலைவரை (இன்னும்) காணப் பெற்றிலேன். (எனது நிலை இவ்வாறாக) என்னால் (உமக்கு) நேர்ந்த நும்முடைய சிறையினை விடுவிக்க

வல்லார் (யான் எதிர்நோக்கியுள்ள எனது நாயகனையன்றி) இவ்வுலகத்து வேறு யாவருள்ளார்கள் ?

கு :—மாயையின் காரியமாகிய பிறவிப் பிணிப்பை நீக்கி இன்பம் நல்க வல்லவன் காத்தற் கடவுளாகிய திருமாலே எனத் தெளிந்து நல்லறிஞர் பலரும் அவ்விறைவனொருவனையே நம்பித் தாம் பெற்றுள்ள பிறவிச் சிறையில் நேரும் துன்பங்களை யெல்லாம் பொறுத்துக் கொண்டுள்ளார்கள். பகைவரது சிறையிலகப்பட்டு அல்லலுறும் யானும் அத்தகைய நம்பிக்கையுடனேயே என்னுடைய நாயகனை எதிர்பார்த்தும் அவனைக் காணப்பெறாது கலங்குகின்றேன். இந்நிலையில் என்னால் உமக்கு நேர்ந்த சிறைத் துன்பத்தை நீக்க வல்லார் இவ்வுலகில் வேறு ஒருவரும் இலரே' எனச் சீதை தன் தந்தையின் துயர் நினைந்து ஆற்றாது புலம்பினாள் என்பதாம். (38)

**7800.** பண்பெற்றா ரோடு கூடாப்
பகைபெற்றாய் பகழி பாய
விண்பெற்றா யெனினு நன்றால்
வேந்தரா யுயர்ந்த மேலோர்
எண்பெற்றாய் பழியும் பெற்றா
யிதுநின்னாற் பெற்ற தன்றால்
பெண்பெற்றா யதனாற் பெற்றா
யாரின்ன பேறு பெற்றார்.

“பண் பெற்றாரோடு கூடாப்
பகை பெற்றாய்; பகழிபாய
விண்பெற்றாய் எனினும் நன்றால்;
வேந்தராய் உயர்ந்த மேலோர்
எண்பெற்றாய் பழியும் பெற்றாய்;
இது நின்னால் பெற்றது அன்றால்;
பெண்பெற்றாய்; அதனால், பெற்றாய்;
யார் இன்ன பேறு பெற்றார் ?

பொ —நற்குணமுடையவர்களுடன் சேராத பகைவரைப் பெற்றனை; (பகைவரால் பிணிக்கப்பட்டுச் சிறைப்பட்டிருத்தலைக் காட்டிலும் போர்க்களத்திலே) அம்பு (நின்மேற்) பாய்தலால் (இறந்து) விண்ணுலகடைந்திருப்பாயாயின் (அச்செயல்) நலந்தருவ தாகும். (நாடாளும்) வேந்தர்களாகி (ப் புகழால்) மேம்பட்ட பெரியோர்களது வரிசையில் வைத்து எண்ணப்பெறும் நன்மதிப்

பினைப் பெற்றுள்ளாய். (அத்தகைய நீ, நின்பெருமைக்கு ஒவ்வாத) பழியினையும் பெற்றனை. இந்நிலை நின்னால் (தேடிக்கொள்ளப்) பெற்றதன்று. பெண்ணாக (என்னை)ப் பெற்றனை; அது காரண மாகவே (இவ்விழி நிலையைப்) பெற்றனை. (பெண்ணை மகவாகப் பெற்றவர்களில் நின்னைப்போன்று) இத்தகைய பேறு பெற்றார் பிறர் 'யார்?

கு:—'பகைவர் பண்புடையாராயின், பக்கத்தாரியல்பறிந்து ஒழுகும் பண்பினராகிய அப்பகைவர், தமக்குப் பகையாயினாரிடத்தும் பண்புடன் பழகுவார்கள்; அத்தகைய நற்குணமில்லாத இரக்கமற்ற அரக்கராகிய பகையினைப் பெற்று அவராற் சிறைப்படுத்தப்பட்ட இந்நிலை, புகழ்மிக்க வேந்தர் பெருமானாகிய நினக்கு நிரயத் துன்பத் தையே தருவதாகும். இங்ஙனம் பண்பிலராகிய அரக்கரது சிறையிற் பட்டு அல்லலுறுவதனைவிட்டு அப்பகைவரொடு பொருது இறந்தனை யாயின் அது மன்னனாகிய உனக்கும் உன் மகளாகிய எனக்கும் புகழாகிய பெருநலத்தினை விளைத்திருக்கும். வெற்றி வேந்தர் வரிசையில் வைத்து உயர்த்துப் புகழப்படும் நீ நின்பெருமைக்குத் தகாத பழியினை இப்பொழுது பெற்றுள்ளாய். இந்நிலை நினக்கு உன் காரணமாக ஏற்பட்டதன்று. நீ என்னை மகளாகப் பெற்றாய், தீவினையாட்டியாகிய என்னைப் பெண்ணாகப் பெற்றதனாலேயே உனக்கு இத்தகைய இழிநிலையுளதாயிற்று. பெண்ணை மகவாகப் பெற்றவர்களுள் உன்னைப்போன்று இவ்வாறு இடருற்றவர்கள் பிறர் யாருமிலர்' எனச் சீதை தன் தந்தைக்கு நேர்ந்த இடர் நிலையை எண்ணி வருந்திப் புலம்பினாள் என்பதாம். 'யார் இன்ன பேறு பெற்றார்' என்புழிப் பேறு என்னும் சொல், குறிப்பினால் நற்பேறின்மையை உணர்த்தியது. 'பெண் பெற்றாய் அதனாற் பெற்றாய்' என்னுந் தொடர், 'பெண் பெற்றான் அஞ்சான் இழவு' (பழமொழி-382) என்னுந் தொடரை அடியொற்றியமைந்ததாகும். (39)

**7801.** சுற்றுண்ட பாச நாஞ்சிற்
சுமையொடுஞ் சூடுண் டாற்ற
எற்றுண்டு மளற்று நீங்கா
விழுசிறு குண்டை யென்னப்
பற்றுண்ட நாளே மாளாப்
பாவியே னும்மை யெல்லாம்
விற்றுண்டே னெனக்கு மீளும்
விதியுண்டோ நரகின் வீழ்ந்தால்.

'சுற்றுண்ட பாச நாஞ்சில்
சுமையொடும் சூடுண்டு, ஆற்ற
எற்றுண்டும், அளற்று நீங்கா,
விழுசிறு குண்டை என்ன,
பற்றுண்ட நாளே மாளாப்
பாவியேன், உம்மை எல்லாம்
விற்று உண்டேன்; எனக்குமீளும்
விதிஉண்டோ, நரகின் வீழ்ந்தால்?

பொ:—கயிற்ருற் பிணிக்கப்பட்டுள்ள கலப்பையாகிய பாரத்தோடும் (சூட்டுக்கோலால்) சுடப்பட்டும் மிகவும் அடித்துச் செலுத்தப் பட்டும் (வயலிற்) சேற்றினைவிட்டு நீங்காமல் (அச் சேற்றிலேயே) தளர்ந்து விழும் சிறிய (உழவு) எருதினைப் போன்று (பகைவனுற்) பிணிப்புற்ற அந்நாளிலேயே இறந்தொழியாமல் (உயிர்தாங்கி) உள்ள தீவினையேனுகிய யான், (அன்புடைச் சுற்றத்தாராகிய) உங்கள் எல்லோரையும் விலைப்படுத்தி வாழ்ந்தேன். (யான் எனது தீவினைப் பயனை நுகர்தற்பொருட்டு) நரகத்தை யடைந்தால் (பாவியாகிய) எனக்கு (அந்நரகத்தினின்றும்) மீளுதற்குரிய வழி வகையுளதோ?

கு:—உழுதற்ருெழிலுக்கு ஏற்றதல்லாத சிறிய எருது, இரக்க மற்ற ஒருவனுற் பிணிக்கப்பட்டு ஏரிற் பூட்டப்பட்டுச் சூட்டுக் கோலாற் சுடப்பட்டு மிகவும் புடைக்கப்பட்டபொழுது அஃது அப் பிணிப்பினை யறுத்துக்கொண்டு தப்பியோட முடியாமலும் தன்னு யிரைத் துறவாமலும் அச்சேற்றிலேயே தளர்ந்து விழுமாறுபோல, நாயகனைப் பிரிந்து வாழ இயலாத யான் பகைவனது கையிற் சிக்குண்டு அப்பொழுதே அவனது பிணிப்பினைவிட்டுத் தப்பியுய்தற் குரிய வழியில்லாமலும் அந்நிலையில் எனது உயிரைத் துறவாமலும் பகைவனது இடத்திலேயே வீழ்ந்து அல்லலுழப்பவளாயினேன் என்பாள், 'சுற்றுண்ட பாச நாஞ்சிற் சுமையொடும் சூடுண்டு ஆற்ற, எற்றுண்டும் அளற்று நீங்கா விழு சிறு குண்டை என்னப், பற்றுண்ட நாளே மாளாப் பாவியேன்' என்ருள். பகைவனது பிணிப்பில் அகப்பட்ட அந்நிலையிலேயே எனது உயிரைத் துறந்தேனுயின் என் காரணமாகப் 'பகைவரது பிணிப்பிற்படும் இத்துன்பநிலை என்னைப் பெற்ருேராகிய நுமக்கு நேர்ந்திராது. உயிரைத் துறவாத எனது செயல் அன்புடைச் சுற்றத்தாராகிய நும்மையெல்லாம் பகைவர்க்கு விலைப்படுத்திய செயலாய் முடிந்தது என்பாள், 'பற்றுண்ட நாளே மாளாப் பாவியேன் நும்மையெல்லாம் விற்றுண்டேன்' என்ருள். இங்ஙனம் என்பால் அன்புடையோர்க்குக்

கேடு சூழ்ந்த பாவியேன் இப்பிறப்பில் எல்லேயில்லா இன்னலேயடைவதுடன் இறந்தபின்னரும் மீளா நரகத்தில் வீழ்ந்து அல்லற்படும் அவல நிலேக்குள்ளாயினேன் என்பாள், 'நரகில் வீழ்ந்தால் மீளும் விதியுண்டோ' என்ருள். பாசம் - கயிறு. நாஞ்சில் - கலப்பை. சூடுண்டும் என உம்மை விரித்துரைக்க. சூடுண்ணல் - சூட்டுக் கோலாற் சுடப்படுதல். எற்றுண்ணல்-தாற்றுக்கோலால் அடித்துச் செலுத்தப்படுதல், அளறு - சேறு. குண்டை - எருது. விற்று உண்ணல் - விற்று அவ்விலேப் பொருளால் உயிர் வாழ்தல். விதி - முறை; உபாயம். உண்டோ என்புழி ஓகாரம் எதிர்மறை. (40)

**7802.** இருந்துநான் பகையை யெல்லா
மீறுகண் டளவி லின்பம்
பொருந்தினே னல்லே னெங்கோன்
திருவடி புனைந்தே னல்லேன்
வருந்தினே னெடுநா ளும்மை
வழியொடு முடித்தேன் வாயால்
அருந்தினே னயோத்தி வந்த
அரசர்தம் புகழை யம்மா.

'இருந்துநான் பகையை எல்லாம்
ஈறுகண்டு, அளவு இல்இன்பம்
பொருந்தினேன் அல்லேன்; எம்கோன்
திருவடி புனைந்தேன் அல்லேன்;
வருந்தினேன், நெடுநாள்; உம்மை
வழியொடு முடித்தேன்; வாயால்
அருந்தினேன், அயோத்தி வந்த
அரசர்தம் புகழை அம்மா?

பொ :—நான் (சிறையில் இறவாது உயிர்தாங்கி) இருந்து பகைவராகிய அரக்கர்களையெல்லாம் அழிந்தொழிதலேக் கண்டு அளவில்லாத இன்பத்தை எய்தினேனல்லேன்; எனது நாயகனுகிய இராமனுடைய திருவடிகளேச் சூடிக்கொண்டேனல்லேன்; (வீணே உயிர்தாங்கியிருந்து) நெடுங்காலம் துன்புற்றேன்; (என் தந்தையாகிய) உம்மைக் குலத்தொடும் அழியச் செய்தேன்; (அதுமட்டுமா) அயோத்தியில் தோன்றிய மன்னர்களுடைய புகழனைத்தையும் (என்) வாயினுல் உண்டு (தீர்த்து) விட்டேன்.

கு:—‘நான் பகைவர் கையிற்பட்டவுடனே எனது உயிரைத் துறவாமல் இத்தனை நாட்கள் சிறையில் அல்லற்பட்டிருந்ததன் நோக்கம், எனக்கு இடர்விளைத்த கொடியோர்களாகிய அரக்கர்கள் குலத்தொடும் அழிதலைக் கண்டு என் துன்பத்தினைப் போக்கி இன்புறுதலும் என் ஆருயிர் நாயகனாகிய இராமனைக் கண்டு இறைஞ்சி அவனுடைய திருவடிகளைத் தலைமிசைப் புனைந்து மகிழ்தலும் ஆகிய பயன் கருதியேயாம். இப்பயன்கள் நிறைவேறி யிருந்தால் யான் உயிர் துறவாது சிறையிருந்த நோக்கமும் இனிது நிறைவேறியதாகக் கொள்ளலாம். இவற்றுள் ஒன்றும் நிகழாமை யால் யான் சிறையில் நெடுங்காலம் உயிர்தாங்கி யிருந்ததும் வீண் செயலாயிற்று. இவ்வாறு யான் உயிரோடிருத்தல் யான் பிறந்த குடிக்கும் புகுந்த குடிக்கும் பேரழிவினையும் பழியினையும் ஒருங்கே விளைக்கும் இழி செயலாகவும் முடிந்துவிட்டது’ எனச் சீதை தான் உயிர் துறவாதிருந்தமையால் தன் தந்தை முதலியோர்க்கு நேர்ந்த பழியினை யெண்ணி ஆற்ருதரற்றினள் என்பதாம். புகழை வாயால் அருந்தினேன் என இயையும். வாயால் அருந்துதல் - வாயிற் போட்டுக் கொள்ளுதல்; தின்று அழித்தல். இனி, ‘வாயால் அருந்தினேன் என்பதற்கு, ‘பொன்மானைப் பற்றித் தருக’ எனக் கணவனை வேண்டி வற்புறுத்தியும், அவன் சொல்லிய வண்ணம் பன்னசாலையினைக் காவல் புரியும் கடமையிலிருந்த இலக்குவனைக் கடிந்து கூறியும் இவ்வாறு என் வாய்ச் சொற்களாலேயே எனது புக்ககமாகிய அயோத்தியரசர்குலத்தின் புகழுக்குக் கேடு சூழ்ந்தவளா யினேன்’ எனப் பொருள் கொள்ளுதலும் பொருந்தும். (41)

7803. கொல்லெனக் கணவற் காங்கோர்
கொடும்பகை கொடுத்தே னெந்தை
கல்லெனத் திரண்ட தோளைப்
பாசத்தாற் கட்டக் கண்டேன்
இல்லெனச் சிறந்து நின்ற
விரண்டுக்கு மின்னல் சூழ்ந்தேன்
அல்லெனோ வெளியெ னோயா
னளியத்தே னிறக்க லாதேன்.

“கொல்” எனக்கணவற்கு ஆங்கு ஓர்
கொடும்பகை கொடுத்தேன்; எந்தை
கல் எனத்திரண்ட தோளைப்
பாசத்தால் கட்டக் கண்டேன்;

இல் எனச் சிறந்துநின்ற
இரண்டுக்கும் இன்னல் சூழ்ந்தேன்—
அல்லெனே? எளியெனே,
யான்? அளியத்தேன் இறக்கலாதேன்.

பொ:—'கொல்க' என்று (தூண்டும் முறையில்) என்னுடைய கணவருக்கு (ப் பஞ்சவடி என்னும்) அவ்விடத்திலே (தீராத) ஒப்பற்ற கொடிய பகையினைத் (தேடித்) தந்தேன்; என் தந்தையாகிய நும்முடைய மலைபோலும் வலிய திரண்ட தோள்களை (ப் பகைவர்) கயிற்றாற் பிணித்துக் கொணரும் நிலையிற் (கண்களாற்) பார்த்திருந்தேன்; (இவ்வாறு யான் உயிர்தரித்திருத்தலால்) நல்லகுடி எனச் சிறப்பிக்கப்பட்ட (எனது பிறந்தகம், புக்ககம் ஆகிய) இரண்டுக்கும் துன்பத்தை ஆராய்ந்து செய்தவளாயினேன் அல்லேனே? (தீமை புரியுந் திறத்தில்) வலியற்ற எளியவளோ யான்? இந்நிலையிலும் உயிரைத் துறவாது வைத்துக் கொண்டுள்ள யான் மிகவும் இரங்கத் தக்கவளாவேன்.

கு:—சிற்றன்னையின் ஏவலால் அரசு துறந்து தவமேற்கொண்டு காடுபோந்த கணவனாகிய இராமனைப் பொன்மானைப் பற்றித் தருமாறு வற்புறுத்தியதும், தனக்குப் பாதுகாவலாயிருந்த இலக்குவனைக் கடுமொழிகூறி அவ்விடத்தை விட்டகற்றியதும் ஆகிய தன் செயல்கள் பகைவனது சூழ்ச்சிக்கு வாய்ப்பாயமைந்து தன் கணவனுக்குத் தீராத கொடும் பகையை விளைத்தன என்பாள், 'கொல்லெனக் கணவற் காங்கோர் கொடும்பகை விளைத்தேன்' என்றாள். யான் இறவாது உயிர்தாங்கிய செயல் என்னைப் பெற்ற தந்தையாகிய உன்னை இவ்வாறு அரக்கர்கள் பிணித்துக் கொணர்தற்குக் காரணமாயமைந்ததே' என்பாள், 'எந்தை கல்லெனத் திரண்ட தோளைப் பாசத்தாற் கட்டக் கண்டேன்' என்றாள். கல் - மலை. பாசம் - கயிறு. 'இல்' எனச் சிறந்து நின்ற இரண்டு என்றது' தான் பிறந்த குலமும் மணஞ் செய்துகொண்டு புகுந்த குலமும் ஆகிய குடும்பங்களை. அளியத்தேன் - இரங்கத்தக்க நிலையானேன். 'எளியனே யான்' என்றது, 'இவ்வாறு தீமை புரிவதில் யான் சாமானியமானவள் அல்லள்' எனத் தன்னால் இரண்டு குடும்பங்களுக்கும் நேர்ந்த இன்னல்களை யெண்ணிச் சீதை இரங்கியவாறு. (42)

**7804.** இணையறு வேள்வி மேனா
ளியற்றியீன் றெடுத்த வெந்தை
புனையுறு திரடோ ளார்த்துப்
பூழியிற் புரளக் கண்டேன்

மணவினை முடித்தென் கையை
மந்திர மரபிற் றொட்ட
கணவனை யினைய கண்டா
லல்லது கழிகின் றேனே.

'இணை அறுவேள்வி மேல்நாள்
இயற்றி, ஈன்றுஎடுத்த எந்தை
புணைஉறு திரள்தோள் ஆர்த்து,
பூமியில் புரளக் கண்டேன்;
மணவினை முடித்து, என் கையை
மந்திர மரபின் தொட்ட
கணவனை இனைய கண்டால்
அல்லது, கழிக்கின் றேனே ?

பொ :—முற்காலத்தில் ஒப்பற்ற யாகத்தைச் செய்து என்னைப் பெற்று வளர்த்த என் தந்தையாகிய சனக மன்னர் (பகைவராகிய கடலைக் கடத்தற்குரிய) தெப்பத்தை யொத்துப் பொருந்திய (தம்) தோள்கள் (பாசத்தாற்) கட்டப்பட்டுப் புழுதியில் புரளும்படி கண்ட யான், வேதமந்திர முறைப்படி திருமணச் சடங்கினைச் செய்து என் கையினைப்பற்றிய (என்) கணவனையும் இத்தகைய (அவல) நிலைகளிற் கண்டாலன்றி இறந்தொழிவேனோ ?

கு :—'செயற்கரிய பெருவேள்வியைச் செய்து என்னைப் பெற்று வளர்ந்த தந்தை என் பொருட்டாகப் பகைவராற் பிணிக்கப்பட்டுப் புழுதியிற் புரளும் பேரிடரைக் கண்டும் உயிர் துறவாத வன்னெஞ்சத்தினளாகிய யான், வேதவிதிப்படி என்னை மணந்து கொண்ட என் கணவனையும் இவ்விடர் நிலையிற் காணும் நிலையிலேயே இன்னும் உயிரோடுள்ளேன் போலும்' எனத் தான் பிறந்த குடிக்கும் புகுந்த குடிக்கும் இடருண்டாகும் நிலையில் உயிர்தாங்கியிருத்தலை யெண்ணிச் சீதை தன்னை வெறுத்துக் கூறியவாறு. இணையது வேள்வி - தன்னோடு ஒப்பது பிறிதொன்றில்லை யென்னும்படி உயர்ந்த யாகம். எந்தை என்றது சனகனை. பகைவராகிய கடலைக் கடத்தற்குப் புணைபோல் நின்று உதவும் இயல்பமைந்த வலிய திரண்ட தோள்கள் என்பாள், 'புணையுறு திரள் தோள்' என்றாள். புணை - தெப்பம்.

(43)

7805. அன்னையீ ரையன் மீரென்
ஞருயிர்த் தங்கை மீரே
என்னையீன் றெடுத்த வெந்தைக்
கெய்திய தியாது மொன்றும்
முன்னநீ ருணர்ந்தி லீரோ
வுமக்கும்வே றுற்ற துண்டோ
துன்னரு நெறியின் வந்து
தொடர்ந்திலீர் துஞ்சி னீரோ.

'அன்னைமீர்! ஐயன்மீர்! என்
ஆருயிர்த் தங்கைமீரே!
என்னை ஈன்றுஎடுத்த எந்தைக்கு
எய்தியது யாதும் ஒன்றும்
முன்னம் நீர் உணர்ந்திலீரோ?
உமக்கும் வேறு உற்றது உண்டோ?
துன்(ன) அரு நெறியின்
வந்து தொடர்ந்திலீர்; துஞ்சினீரோ?

பொ :—' தாய்மார்களே! பெரியோர்களே! (எனது) அரிய உயிர் போலும் தங்கைமார்களே! என்னைப் பெற்றெடுத்து வளர்த்த என் தந்தைக்கு நேர்ந்த (இடர்) நிலையை நீங்கள் முன்னரே ஒரு சிறிதும் உணரப் பெற்றீர் அல்லீரோ? (அல்லது) உங்களுக்கும் (இத்தகைய இடையூறு) வேறு வந்து பொருந்தியது உண்டோ? (அல்லது) அணுகுதற்கு அரிய நெறியிலே (தேடி) வந்து (அவரைத்) தொடரப் பெருதீராய் இறந்தீரோ?

கு :—சனக மன்னனுடைய தேவியர்களை நினைந்து 'அன்னைமீர்' எனவும் சனகனுக்குத் தம்பியாகிய குசத்துவசனையும் புரோகிதராகிய சதாநந்தர் முதலியோரையும் நினைந்து 'ஐயன்மீர்' எனவும் தன்பால் அன்புடைய மாண்டவி முதலிய சகோதரிகளை நினைந்து 'ஆருயிர்த் தங்கைமீரே' எனவும் சீதை அழைத்து அரற்றினாள். முன்னம் - தந்தையாகிய சனகன் பகைவராற் பிணிக்கப்பட்டு இலங்கைக்கு வருதற்கு முன்பே, முன்னமே தெரிந்திருந்தால் என் தந்தைக்கு நேர்ந்த இவ்வின்னலை நுமது அறிவாற்றலின் துணை கொண்டு போக்கியிருப்பீர்; அவ்வாறு நீர் உணர்ந்து போக்க ஒண்ணுதவாறு தந்தைக்கு நேர்ந்தது போலும் இன்னல் உங்களுக்கும் நேர்ந்து விட்டதுபோலும் என்பாள், 'உமக்கும் வேறு உற்ற துண்டோ' என்றாள். தந்தை பகைவராற் பற்றப்பட்டு இங்குக் கொணரப்பட்ட செய்தியை யறிந்த நீங்கள், அவரை மீட்டுச் செல்லு

தற் பொருட்டு அணுகுதற்கரிய வழியிலே விரைந்து தேடிவந்து அவரைத் தொடர்ந்து கண்டு மீட்கவொண்ணாத நிலையில் நும்முயிரைத் துறந்து விட்டீர் போலும் என்பாள், 'துன்னருநெறியின் வந்து தொடர்ந்திலீர் துஞ்சினீரோ' எனக் கூறி இரங்கினாள். துஞ்சுதல்–இறத்தல். (44)

7806. மேருவி னும்பர்ச் சேர்ந்து
விண்ணினை மீக்கொண் டாலும்
நீருடைக் காவன் மூதூ
ரெய்தலா நெறியிற் றன்றால்
போரிடைக் கொண்டா ரேனும்
வஞ்சனை புணர்த்தா ரேனும்
ஆருமக் கறையற் பாலா
ரனுமனு முளனோ நும்பால்.

'மேருவின் உம்பர்ச் சேர்ந்து
விண்ணினை மீக்கொண்டாலும்,
நீருடைக் காவல் மூதூர்
எய்தலாம் நெறியிற்று அன்றால்;
போரிடைக் கொண்டாரேனும்,
வஞ்சனை புணர்த்தாரேனும்,
ஆர் உமக்கு அறையற்பாலார்?
அனுமனும் உளனோ, நும்பால்?

பொ :—மேருமலையின் உச்சியை யடைந்து (தேவர்கள் வாழும்) வானுலகத்தைக் கைப்பற்றி மேற்சென்றாலும், (கடல்) நீரை (அரணாக) உடைய காவலமைந்த பழைய நகரமாகிய இலங்கை (பிறரால்) அடைதற்குரிய வழியினையுடையதன்று. (இங்குள்ள அரக்கராகிய பகைவர் என் தந்தையாகிய சனகரைப்) போரிற் பொருது வென்று பிணித்துக்கொண்டாராயினும் அல்லது வஞ்சகச் சூழ்ச்சியால் பற்றிக் கொண்டு வந்தாராயினும் (இங்குள்ள அவரது நிலைமையை அறிந்து) உங்களுக்குச் சொல்லக்கூடியவர் யார் இருக்கிறார்கள்? (என் தந்தையின் நிலையை நேரில் வந்து அறிந்து கூறுதற்கு, சிறைப்பட்ட எனது இடர் நிலையை நேரிலறிந்து என் கணவர்க்கு அறிவித்த ஆற்றல் மிக்க) அனுமனை யொத்த பெருவீரன் நும்மிடத்தும் உள்ளானோ?

கு :—கடத்தற்கரிய கடலை அரணுகவுடைய இலங்கையாகிய மூதூர், மேருமலையின் உச்சியினையடைந்து தேவருலகைக் கைப்பற்றி அங்கிருந்தவண்ணம் வான்வழியே அடைய எண்ணினுலும் அவ்வாறு அடைதற்குரிய வழியற்ற நிலையிற் பாதுகாப்புடையதாய் விளங்குவது என்பது இச்செய்யுளின் முன்னிரண்டடிகளில் விரித்துரைக்கப் பட்டது. இங்ஙனம் தரைவழியாகவும் வான்வழியாகவும் அடையவொண்ணுத நிலையில் அரண்வலியுடைய இந்நகரத்தினுள்ளே என் தந்தை சிறைப்பட்டிருக்கும் இச்செய்தியை நீங்கள் அறிந்துகொள்ள வேண்டுமாயின் அனுமனையொத்த பெருவீரனை நீவிர் இங்கு அனுப்பினுல் தெரிந்துகொள்ளலாம். என் துயர் நிலையை நேரில் அறிந்து என் கணவர்க்கு உணர்த்த அனுமனெருவன் கிடைத்ததுபோல் என் தந்தையின் நிலையையறிந்து நுமக்குத் தெரிவிக்க அவனைப் போன்ற பெருவீரன் நுமக்குக் கிடைத்திலனே என எண்ணி யிரங்குவாள் 'ஆருமக்கு அறையற்பாலார்? அனுமனும் உளனே நும்பால்' என்ருள். ஓகாரம் எதிர்மறை. (45)

7807. சரதமற் றிவனைத் தந்தார்
தவம்புரிந் தாற்றல் தாழ்ந்த
பரதனைக் கொணர்தற் கேது
மையுற வில்லைப் பன்ருள்
வரதனும் வாழ்வா னல்லன்
றம்பியு மனையன் வாழான்
விரதமுற் றறத்தி னின்ருர்க்
கிவைகொலாம் விளைவ மேன்மேல்.

'சரதம்; மற்று இவனைத்தந்தார்,
தவம்புரிந்து ஆற்றல் தாழ்ந்த
பரதனைக் கொணர்தற்கு ஏதும்
ஐயுறவு இல்லை; பல்நாள்
வரதனும் வாழ்வான் அல்லன்;
தம்பியும் அனையன் வாழான்;
விரதம்உற்று, அறத்தில் நின்ருர்க்கு
இவைகொலாம் விளைவ மேன்மேல்?

பொ :—(என் தந்தையாகிய) இந்தச் சனகமன்னனை(ப் பற்றி)க் கொணர்ந்த பகைவர், தவஞ்செய்தலை விரும்பி மேற்கொண்டு (உடல்) வலிமை குன்றிய பரதனுகிய அரசகுமாரனைப் பிணித்துக்

கொணர்தற்குச் சிறிதும் சந்தேகமில்லை. இது நிச்சயம். (அவ்வாறு பரதன் பகைவராற் பற்றப்பட்டானுயின் தம்பியாகிய அவனுக்கு அரசு வழங்கி வனம் புக்க) வள்ளலாகிய என் நாயகனும் உயிர் தாங்கியிரான்; (அவனுடைய) தம்பியாகிய இலக்குவனும் (உயிர் துறக்கும்) அத்தன்மையனே; (கணப்பொழுதும் உயிர்தாங்கி) வாழ் வான் அல்லன். (சிறந்த ஒழுக்கமாகிய) விரதத்தினை மேற்கொண்டு அறநெறியில் வழுவாது நிலைபெற்றுள்ளோர்க்கு மேலும் மேலும் உளவாய் நிகழ்வன இத்தகைய துன்பங்கள்தாமோ?

கு :—'என் தந்தையாகிய சனகமன்னனைப் பற்றிக் கொணர்ந்த பகைவர்க்குத் தவத்தில் ஈடுபட்டு உடல் இளைத்துள்ள பரதனைப் பற்றி வருதல் அரிய செயலன்று. பகைவராற் பரதன் பிணிக்கப்பட் டான் என்பதனை யுணரின் என் நாயகனுகிய இராமனும் உயிர் வாழான். தம்பியாகிய இலக்குவனும் உயிர்துறக்கும் அத்தன்மை யனே. இவ்வாறு பிறவுயிர்கட்குத் தீங்கு செய்யாதாராய்த் தவ விர தத்தினை மேற்கொண்டு அறநெறியில் வழுவாதொழுகுவாராகிய எம்மவர்க்கு இத்தகைய இன்னல்கள் மேலும் மேலும் அடுக்கி வருதல் முறையோ' எனச் சீதை அறத்தெய்வத்தை நினைந்து இரங்கியவாறு. சரதம் உண்மை; நிச்சயம். ஐயுறவு-சந்தேகம். தம்பி என்றது சத்துருக்கனையும் உணர்த்தும் என்பர் வை. மு. கோ. (46)

7808. அடைத்தது கடலை மேல்வந்
தடைந்தது மதிலை யாவி
துடைத்தது பகையைச் சேனை
யெனச்சிலர் சொல்லச் சொல்லப்
படைத்ததோ ருவகை தன்னை
வேறெருரு வினையம் பண்ணி
யுடைத்தது விதியே யென்றென்
றுளைந்தன ளுணர்வு தீர்வாள்.

"அடைத்தது கடலை, மேல்வந்து
அடைந்தது மதிலை; ஆவி
துடைத்தது பகையை, சேனை"
எனச் சிலர் சொல்லச்சொல்ல,

படைத்தது ஓர் உவகைதன்னை
வேறு ஒரு வினையம் பண்ணி
உடைத்தது விதியே என்று
என்று, உளைந்தனள், உணர்வுதீர்வாள்.

பொ :—("வானர) சேனையானது, சமுத்திரத்தை அணைகட்டித் தடுத்தது; போர் மேற்கொண்டு வந்து (இலங்கையின்) மதிலைச் சேர்ந்தது; (அதனைக் காத்து நிற்கும்) பகைவரை உயிரைப் போக்கியது" என்று (என்பால் அன்புடைய) சிலர் கூறுந்தோறும் (அது கேட்டு யான்) பெற்றிருந்த ஒப்பற்ற பெருமகிழ்ச்சியை (எனது) தீயூழானது வேறொரு சூழ்ச்சியினைச் செய்து தகர்த்து விட்டது என்று இவ்வாறு பலமுறை கூறி(ச் சீதை) உணர்வழிந்து (மனம்) நொந்து வருந்துவாளாயினள்.

கு :—சேனை, கடலை அடைந்தது; மேல்வந்து மதிலை அடைந்தது; பகையை ஆவி துடைத்தது என மாற்றுக. மேல் வருதல்-போர்த் தொழிலை மேற்கொண்டு எதிர்த்து வருதல். ஆவி துடைத்தல் – உயிரைப் போக்குதல். ஆவி துடைத்தல் என்பது ஒரு சொல்லாய்ப் பகையை என்னும் இரண்டாம் வேற்றுமைக்கு முடிபாயிற்று. விதி என்றது ஈண்டுத் தீயூழினை. வினையம், வினயம் – சூழ்ச்சி. உடைத்தல்-தகர்த்து ஒலித்தல். மற்றொன்று சூழினும் தான் முந்துரும் பெருவலி படைத்தமைபற்றி, 'விதி வேறொரு வினையம் பண்ணி உவகையை உடைத்தது' என்றாள். உணர்வு தீர்வாள் உளைந்தனள் என இயையும். தீர்தல்-விட்டு நீங்குதல். உளைதல்– மனம் நொந்து வருந்துதல். (47)

சீதையின் துயர்நிலையைக் கண்ட இராவணன் அவளது
துயர்நீக்கி அவள் தன் விருப்பிற்கு இசையுமாறு
அவளைப் பரிந்து வேண்டுதல்

**7809.** ஏங்குவா ளினைய பன்ன
விமையவ ரேற்ற மெல்லாம்
வாங்குவா ளரக்க னுற்ற
மனமகிழ்ந் தினிதி னேக்கித்
தாங்குவா ளல்ல டுன்ப
மிவளையுந் தாங்கித் தானும்
ஓங்குவா னென்ன வுன்னி
யினையன வுரைக்க லுற்றான்.

ஏங்குவாள் இனைய பன்ன,
இமையவர் ஏற்றம் எல்லாம்
வாங்குவாள் அரக்கன், ஆற்ற
மனம் மகிழ்ந்து, இனிதின்நோக்கி,
'தாங்குவாள் அல்லள் துன்பம்'
இவளையும் தாங்கித் தானும்
ஓங்குவான் - என்ன உன்னி
இனையன உரைக்க லுற்றான்.

பொ :—(சீதை இடருற்று) இரங்குபவளாய் இத்தகைய மொழிகளைக்கூற, தேவர்களது பெருமையையெல்லாம் பறித்துக்கொண்ட வாட்படையையுடைய அரக்கனாகிய இராவணன், (அவளை) இனிமையுறப் பார்த்து, ('மென்மைத் தன்மையினளாகிய இவள்) இத்துன்பத்தைப் பொறுத்து (உயிர்தாங்கி) இருக்கும் வன்மையுடையாள் அல்லள்' என நினைந்து, (சீதையாகிய) இவளையும் (இறவாது) பாதுகாத்து (இவளால்) தானும் வாழ்க்கையில் உயரக் கருதியவனாய்(ப் பின்வருமாறு) இத்தகைய மொழிகளைக் கூறத் தொடங்கினான்.

கு :—ஏற்றம்-பெருமை. ஆற்ற-மிகவும். வாள்-சிவபெருமான் அளித்த காசம் என்னும் வாட்படை. அரக்கன், மகிழ்ந்து, நோக்கி, 'துன்பம் தாங்குவாள் அல்லள்' என்ன உன்னி, இவளையும் தாங்கித் தானும் ஓங்குவான், இனையன உரைக்கலுற்றான் என இயையும். தாங்குதல் இரண்டனுள், முன்னையது, துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளுதல் என்ற பொருளிலும், பின்னையது துன்பந் துடைத்துப் பாதுகாத்தல் என்ற பொருளிலும் இங்கு ஆளப்பெற்றமை காணலாம். தான் என்றது இராவணனை. (48)

**7810.** காரிகை நின்னை யெய்துங்
காதலாற் கருத லாகாப்
பேரிட ரியற்ற லுற்றேன்
பிழையிது பொறுத்தி யின்னும்
வேரற மிதிலை யோரை
விளிகிலேன் விளிந்த போதும்
ஆருயி ரிவனை யுண்ணே
னஞ்சலை யன்ன மன்னாய்.

'காரிகை! நின்னை எய்தும் காதலால், கருதலாகாப்
பேர் இடர் இயற்றலுற்றேன்; பிழைஇது பொறுத்தி; இன்னும்
வேர்அற மிதிலையோரை விளிகிலேன்; விளிந்தபோதும்
ஆர்உயிர் இவனை உண்ணேன்; அஞ்சலை, அன்னம் அன்னாய்!

பொ :—பேரழகினையுடைய நங்கையே! (நடையினால்) அன்னத்தை ஒப்பாய்! நின்னை அடையப் பெறுதல் வேண்டும் என்னும் பெருவிருப்பத்தால் (மனத்தால்) நினைத்தற்கும் ஒண்ணாத பெருந் தீங்கினை (நின்கண்) செய்யத் தொடங்கினேன்; (சிந்தனையின்றிச் செய்யத் துணிந்த) குற்றமாகிய இதனைப் பொறுத்தருள்வாயாக. மிதிலை நகரத்தில் உள்ள உன் சுற்றத்தார்களை வேருடன் அழியுமாறு இன்னும் வெகுண்டேனல்லேன். (நின் தந்தையாகிய) இவனை(ப் பிடித்து வருமாறு) இப்பொழுது வெகுண்டேனாயினும் (இனி, இவனது) அரிய உயிரைப் போக்குவேனல்லேன். (ஆகவே நின் சுற்றத்தார்க்கும் தந்தைக்கும் எத்தகைய இன்னல் நேருமோ என்று) அஞ்சாதே.

கு :—காரிகை என்பது, பேரழகுடைய பெண்ணைக் குறித்து வழங்கும் பெயர்; அஃது ஈண்டுச் சீதையைக் குறித்து அண்மை விளியாய் நின்றது. கருதல் ஆகாப்பேர் இடர்–மனத்தால் நினைத்தற்கும் ஒண்ணாத பெருந்தீங்கு. மிதிலையோரை வேர் அற இன்னும் விளிகிலேன்; இவனை விளிந்தபோதும் ஆர்உயிர் உண்ணேன் என மாற்றுக. விளிதல்–கோபித்தல்; 'விளிந்தாரேபோலப் பிறராக' (பழமொழி–182) என்புழி இச்சொல் இப்பொருளிற் பயின்றுள்ளமை காணலாம். 'உந்தை மேலும் வெற்றியர் தம்மைச் செல்லச் சொல்லினன்' என இராவணன் கூறக் கேட்டுத் துணுக்குற்ற சீதை, தன் அன்னையர் தங்கையர் முதலியோர்களை யெண்ணி அரற்றினாளாக, அவளது மென்மைத்தன்மை கண்டு இரங்கிய இராவணன் அவளையும் தேற்றித் தானும் அவளது விருப்பத்தைப் பெற்று உயர்ச்சி பெறக் கருதியவனாய், தான் முன் கூறியவாறு அவளுடைய சுற்றத்தார்க்கு எத்தகைய இன்னலையும் இன்னும் செய்யத் தொடங்கவில்லை யென்றும் இப்பொழுது பற்றிக் கொணரப்பட்ட சனகனையும் இனிக் கொல்வதில்லை யென்றும்கூறி, அவளது அச்சத்தை அகற்றி அவளைத் தன்பால் அன்புடையவளாகச் செய்ய முயன்று இத்தகைய ஆர்வ மொழிகளைக் கூறினன் என்பதாம். இது முதல் ஆறு செய்யுட்கள் சீதையை வஞ்சனையால் தன் வசப்படுத்தக் கருதிய இராவணன் அவளை நோக்கிக் கூறும் ஆர்வமொழிகளாக அமைந்தனவாகும். (49)

7811. இமையவ ருலக மேதா
ணிவ்வுல கேழு மேதான்
அமைவரு புவன மூன்றி
லென்னுடை யாட்சி யேதான்
சமைவுறத் தருவென் மற்றித்
தாரணி மன்னற் கின்னற்
சுமையுடைக் காம வெந்நோய்
துடைத்தியே றொழுது வாழ்வேன்.

'இமையவர் உலகமேதான்,
இவ்வுலகு ஏழுமேதான்,
அமைவரு புவனம் மூன்றில்
என்னுடை ஆட்சியேதான்,
சமைவுறத் தருவென், மற்று
இத்தாரணி மன்னற்கு; இன்னல்
சுமையுடைக் காம வெந்நோய்
துடைத்தியேல் தொழுது வாழ்வேன்.

பொ :—துன்பத்தை விளைப்பதும் (உயிர்க்குத் தாங்க வொண்ணாத) பெரும் பாரமாகிய தன்மையையுடையதும் ஆகிய (எனது) காமமாகிய சுரநோயினை அறவே போக்கிவிடுவாயாயின், இவ்வுலகில் (விதேக நாட்டு) மன்னனாகிய இந்தச் சனகனுக்கு, தேவர் வாழும் வானுலகமேயானாலும் அன்றி இப்பூமியில் உள்ள ஏழுலகங்களேயானாலும் (படிப்படியாகப்) பொருந்தியுள்ள (மேல், நடு, கீழ் என்னும்) மூவகையுலகங்களிலும் யான் பெற்றுள்ள ஆட்சி யுரிமையேயானாலும் (இவை முழுவதுமாகப்) பொருந்தும்படி உரிமை செய்து தருவேன். (நின்னைத் தெய்வமாக) வணங்கி (நீ இட்ட பணிகளைச் செய்து) வாழ்வேன்.

கு :—இன்னற் சுமையுடைக் காம வெந்நோய் துடைத்தியேல், இத்தாரணி மன்னற்கு, இமையவர் உலகமேதான், இவ்வுலகு ஏழுமேதான், அமைவரு புவனம் மூன்றில் என்னுடை ஆட்சியே தான் சமைவுறத்தருவென்; தொழுது வாழ்வேன் என இயையும். காமத்துயர் தணியத் தனக்கு அருள் செய்யவேண்டும் எனச் சீதையை இரந்து வேண்டும் இராவணன், அவள் தன்பால் மன மிரங்குவளாயின் அவளது தந்தையாகிய சனகனுக்குத் தன்பா லுள்ள எல்லாப் பொருள்களையும் உவந்து கொடுப்பதாகக் கூறு பவன் தான் சீதையின்பால் வைத்த ஆசையின் அளவு அடங்காத நிலையில் மேன்மேலும் உயர்வுடைய பொருள்களையே தெரிந்து

கூறுவதாக ஆசிரியர் இச் செய்யுளில் அடுக்கிக் கூறிய திறம் நினைக்கத்தக்கதாகும். (50)

7812 இலங்கையூ ரிவனுக் கீந்து
வேறிடத் திருந்து வாழ்வேன்
நலங்கிளர் நிதியி ரண்டு
நல்குவெ ளுமத் தெய்வப்
பொலங்கிளர் விமானந் தானே
பொதுவறக் கொடுப்பென் புத்தேள்
வலங்கிளர் வாளும் வேண்டின்
வழங்குவென் யாது மாற்றேன்.

'இலங்கைஊர் இவனுக்கு ஈந்து,
வேறுஇடத்து இருந்து வாழ்வேன்;
நலம் கிளர்நிதி இரண்டும்
நல்குவென்; நாமத் தெய்வப்
பொலம்கிளர் விமானம் தானே பொது
அறக் கொடுப்பென்; புத்தேள்
வலம்கிளர் வாளும் வேண்டின்,
வழங்குவென்; யாதும் மாற்றேன்.

பொ :—(நீ எனது காமமாகிய சுரநோயைத் தீர்ப்பாயாயின், நின் தந்தையாகிய) இச் சனகனுக்கு இலங்கையாகிய பேரூரினைக் கொடுத்துவிட்டு (யான்) வேறோர் இடத்திலிருந்து வாழ்வேன்; நன்மை மிகுதற்குக் காரணமாகிய (சங்கநிதி, பதுமநிதி என்னும்) இருவகைச் செல்வங்களையும் (இவனுக்குத்) தருவேன்; புகழ்பெற்ற தெய்வத்தன்மை வாய்ந்த பொன்னின் ஒளிமிக்கு விளங்கும் (புட்பகம் என்னும்) விமானத்தினை (எனக்கும் என்னைச் சார்ந்தார்க்கும் உரியது என்னும்) பொதுமை நீங்க (இவனுக்கே உரிமை செய்து) கொடுப்பேன். (நீ) விரும்பினல் இறைவனது வெற்றித்திறன் விளங்கும் (சந்திரகாசம் என்னும்) வாட்படையினையும் (உளமுவந்து) தருவேன்; (என்பாலுள்ள) எதனையும் (இல்லையென்று) மறுத்துரைக்க மாட்டேன்.

கு :—'காம வெந்நோய் துடைத்தியேல்' என மேற்செய்யுளிலுள்ள தொடரை இங்கும் வருவித்து, 'துடைத்தியேல், ஈந்து வாழ்வேன்; நல்குவென்; கொடுப்பென்; வழங்குவென்; யாதும் மாற்றேன்' என இயைத்துரைக்க. மாற்றுதல் – மறுத்துரைத்தல்.

பொலங்கிளர் விமானம் என்றது, இராவணன் தனது ஆற்றலாற் குபேரனிடமிருந்து பெற்ற புட்பகம் என்னும் பெயருடைய விமானத்தை. புத்தேள்-தெய்வம்; இங்கு இச் சொல் சிவபெருமானைக் குறித்தது. வலம்-வெற்றி. (51)

7813. இந்திரன் கவித்த மௌலி
யிமையவ ரிறைஞ்சி யேத்த
மந்திர மரபிற் சூட்டி
வானவர் மகளிர் யாரும்
பந்தரி னுரிமை செய்ய
யானிவன் பணியி னிற்பேன்
சுந்தரப் பவள வாயோ
ரருண்மொழி சிறிது சொல்லின்.

'இந்திரன் கவித்த மௌலி,
இமையவர் இறைஞ்சி ஏத்த,
மந்திர மரபின் சூட்டி,
வானவர் மகளிர் யாரும்
பந்தரின் உரிமை செய்ய,
யான் இவன்பணியில் நிற்பேன்
சுந்தரப் பவளவாய் ஓர்
அருள்மொழி சிறிது சொல்லின்.

பொ :—(பெண்ணே! நின்) அழகிய பவளம் போலும் சிவந்த வாய் (என்பால் நினது) அருளுடைமையினைப் புலப்படுத்தும் ஒரு வார்த்தையினைச் சிறிதே வெளியிட்டுரைத்தால், யான் (வானோர் தலைவனாகிய) இந்திரன் தலைமீது சூடியுள்ள மணிமுடியை தேவர்கள் வணங்கிப் போற்ற வேத மந்திர விதிப்படி (நின் தந்தையாகிய இச் சனகனுக்கு) அணிவித்து (முடிசூட்டு விழா நிகழும் அப்) பந்தலிலே தேவமகளிர் எல்லோரும் தத்தமக்குரிய பணிகளைச் செய்து நிற்க இவன் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நிற்பேன்.

கு :—சுந்தரப் பவள வாயால் ஓர் அருள்மொழி சிறிது சொல்லின், யான், இந்திரன் கவித்த மௌலி (இவனுக்கு) மந்திர மரபிற் சூட்டி இவன் பணியின் நிற்பேன் என இயையும். மௌலி-முடி. சுந்தரம் - அழகு. அருள்மொழி - அருளுடைமையைப் புலப்படுத்துஞ் சொல். சிறிது சொல்லுதல் - மெல்லச் சொல்லுதல். 'என்பால் நினது அருளுடைமையைப் புலப்படுத்தும் ஒரு வார்த்தையையேனும்

சிறிது வாய்திறந்து வெளியிட்டுரைப்பாயாஞல், யான் உன் தந்தை யாகிய இச் சனகனுக்கு இந்திரனது மணிமுடியைச் சூட்டி இவனை வானோர்க்கு அரசனாக்கியாஹும் இவன் ஆணை வழி அடங்கி நிற்பேன்' என இராவணன் சீதையின்பால் தான் வைத்துள்ள பெரு வேட்கையினைப் புலப்படுத்தினுன் என்பதாம். (52)

7814. எந்தைதன் றந்தை தாதை
யிவ்வுல கீன்ற முன்னோன்
வந்திவன் ருனே வேட்ட
வரமெலாம் வழங்கு மற்றை
அந்தக னடியார் செய்கை
யாற்றுமா லமிழ்தின் வந்த
செந்திரு நீரல் லீரே
லவளும்வந் தேவல் செய்யும்.

'எந்தை தன்தந்தை தாதை,
இவ்உலகு ஈன்ற முன்னோன்,
வந்து இவன்தானே வேட்ட
வரம்எலாம் வழங்கும்; மற்றை
அந்தகன் அடியார் செய்கை
ஆற்றுமால்; அமிழ்தின் வந்த
செந்திரு நீர் அல்லீரேல்,
அவளும்வந்து ஏவல் செய்யும்.

பொ :—(நீவிர் எனது காமத் துயரைத் துடைத்தருள்வீராயின்) என் தந்தையின் தந்தைக்குத் தந்தையும் இவ்வுலகத்தைப் படைத்த பழையோனும் ஆகிய பிரமதேவன் (எனது விருப்பத்தையுணர்ந்து) தானே வந்து (சனகனுகிய) இவன் விரும்பிய வரங்கள் எல்லாவற்றையும் வழங்குவான். ஏனைய (அழித்தற்ருெழிலையுடைய) இயமனும் (எனக்கு அஞ்சி வந்து இவனைப் பணிந்து) ஏவலாளராகிய அடியோர் செய்தற்குரிய அடித்தொண்டுகளைச் செய்வான். (பாற்கடலில்) அமிழ்துடன் தோன்றிய திருமகள் நீவிர் அல்லீராயின் (நும்மின் வேருக வுள்ள) அத்திருமகளும் (என் ஆணையின்படி நும்பால்) வந்து (நீவிர் இட்ட) ஏவற் பணிகளைச் செய்வாள்.

கு :—'எனது விருப்பத்திற்கு இசையின் இன்னின்ன பயன்களைப் பெறலாம்' என இராவணன் சீதையை நோக்கிக் கூறினுன் என்பதாம். தன்னைப் பெற்ற தந்தையாகிய விச்சிரவசுவை

'எந்தை' எனவும், அவனுக்குத் தந்தையும் தனக்குப் பாட்டனு மாகிய புத்திய முனிவனை 'எந்தைதன் தந்தை' எனவும், தன் பாட்டனுகிய அவனுக்குத் தந்தையாகிய பிரமதேவனை 'எந்தை தன் தந்தை தாதை' எனவும் இராவணன் உறவுமுறை பற்றிய பெயராற் சுட்டினன். எந்தை தன் தந்தை தாதையாகிய முன்னேன், இவ் வுலகு ஈன்ற முன்னேன் என இயையும். தானே வந்து இவன் வேட்ட வரமெலாம் வழங்கும் என மாற்றுக. படைத்தற்ருெழிலின் வேறுபட்ட துடைத் தற்ருெழிலையுடையனுய் யாவராலும் மாற்றரும் ஆற்றல் பெற்ற கூற்றுவன் என்பது புலப்பட 'மற்றை அந்தகன்' எனச் சுட்டினன். அடியார் செய்கையாவது, பிறர்க்கு அடிமை பூண்டோர் செய்தற்குரிய ஏவற்ருெண்டுகள். சீதையென்னும் பெயர் பூண்ட நீவிர் பாற்கடலில் அமிழ்தொடு பிறந்த திருமகள் என்பது என்னுள்ளத்துறுதியாயினும் ஒருகால் நீர் அத்திருமகளின் வேருயின், நும்மின் வேருகிய அத்திருமகளையும் நீர் இட்ட பணிகளைச் செய்யும் படி நுமக்குப் பணிமகளாக அமையுமாறு செய்வேன் என்பான், 'அமிழ்தின் வந்த செந்திரு நீரல்லீரேல் அவளும் வந்து ஏவல் செய் யும்' என்ருன். வழங்கும், ஆற்றும், செய்யும் என்பன செய்யுமென் வாய்பாட்டு வினைமுற்றுக்கள். ஆல் - அசை. (53)

7815. தேவரே முதலா மற்றைத்
திண்டிற ஞகர் மண்ணேர்
யாவரும் வந்து நுந்தை
யடிதொழு தேவல் செய்வார்
பாவைநீ யிவனில் வந்த
பயன்பழு தாவ தன்ருல்
மூவுல காளுஞ் செல்வங்
கொடுத்தது முடித்தி யென்ருன்.

'தேவரே முதலா, மற்றைத்
திண்திறல் நாகர் மண்ணேர்,
யாவரும் வந்து, நுந்தை
அடிதொழுது, ஏவல் செய்வார்;
பாவை! நீ இவன் இல்
வந்தபயன், பழுது ஆவது அன்ருல்,
மூஉலகு ஆளும் செல்வம்
கொடுத்தது; முடித்தி என்ருன்.

பொ :—(சிறப்புடைய) தேவர்கள் முதலாக ஏனைய திண்மையும் வன்மையுமுடைய (பாதாளவுலகினராகிய) நாகர்கள், நிலவுலகில் வாழ்வோர் ஆகிய மக்கள் வரையுள்ளோர் யாவரும் நின் தந்தையாகிய இச் சனகனுடைய பாதங்களை வணங்கி (இவன்) ஏவிய பணிகளைச் செய்வார்கள். சித்திரப் பாவை போல்பவளே! நீ இவனது குடும்பத்தில் தோன்றினமையால் (இவன்) பெறுதற்குரிய நன்மை பயனின்றிக் கழிவதன்று; (அது) மூவுலகங்களையும் ஆட்சி புரிதலாகிய பெருஞ் செல்வத்தை (இவனுக்கு இப்பொழுது) கொடுத்தது. அப்பயனை எனது விருப்பத்திற்கு இணங்கும் வாயிலாக, நிறைவேற்றித் தருவாயாக' எனக் கூறினான் (இராவணன்)

கு :—சனக மன்னன் தன்னை மகளாகப் பெற்றமையால் இத்தகைய பெருந் துன்பத்துக்கு உள்ளாயினன் என வருந்தும் சீதையை நோக்கி 'சனகனுக்கு நீ மகளாக அவன் குடும்பத்திற் பிறந்தது, பயனற்ற செயலாக முடிந்துவிடவில்லை; அது மூவுலகங்களையும் ஒருங்கே ஆட்சி புரிதலாகிய பெருஞ் செல்வத்தை நின் தந்தையாகிய அவனுக்கு இப்பொழுது கொடுப்பதாயிற்று. என்னுடைய விருப்பத்திற்கு நீ இணங்கும் வாயிலாக அப்பயனை இனிது நிறைவேற்றுதல் உனது பொறுப்பாகும்' என்பான், 'பாவை நீ இவன் இல் வந்த பயன் பழுது ஆவதன்றால், மூவுலகு ஆளும் செல்வம் கொடுத்தது முடித்தி' என வேண்டினான் இராவணன். இல் - குடி. பழுது ஆதல் - பயனின்றிக் கழிதல். இறுதியடியிலுள்ள 'கொடுத்தது' என்பதனை முற்றாக்காமல் கொடுத்து அது எனப் பிரித்து, 'மூவுலகத்தையும் ஆளுகின்ற செல்வத்தை (இந்தச் சனகனுக்கு)க் கொடுத்து (நீ இவனுக்கு மகளாகத் தோன்றிய) அந்தப் பயனை முடிப்பாய்' எனப் பொருளுரைத்தலும் உண்டு. இங்ஙனம் பொருள் கொள்ளுமிடத்து 'அது முடித்தி' என்பதற்கு, 'காம வெந்நோய் துடைத்தலாகிய அதனை நிறைவேற்றித் தருக' எனப் பொருள் கொள்ளுதல் மிகவும் ஏற்புடையதாகும்.

இச் செய்யுளின் பின் 52–ஆம் எண்ணுள்ள புத்தகத்தில்
இம்மொழி அரக்கன் கூற ஏந்திழை இருகாதூடும்
வெம்மைசேர் அழலின் வந்த வே............
............ல் வஞ்சி நெஞ்சம் தீய்ந்தவள் ஆனாள் மீட்டும்
விம்முறுமுனத்தினோடும் வெகுண்டிவை விளம்பலுற்றாள்.

என்றதொரு மிகைப்பாடல் குறிக்கப்பட்டுளது (54)

## இராவணனது உரைகேட்டுச் சீதை வெகுண்டுரைத்தல்

7816. இத்திருப் பெறுகிற் பானு
மிந்திர னிலங்கை நுங்கள்
பொய்த்திருப் பெறுகிற் பானும்
வீடணன் புலவர் கோமான்
கைத்திருச் சரங்க ளுன்றன்
மார்பிடைக் கலக்கற் பால
மைத்திரு நிறத்தான் றாளென்
றலைமிசை வைக்கற் பால.

'இத்திருப் பெறுகிற்பானும்,
இந்திரன்; இலங்கை நுங்கள்
பொய்த் திருப் பெறுகிற்பானும்,
வீடணன்; புலவர் கோமான்
கைத்திருச் சரங்கள் உன்றன்
மார்பிடைக் கலக்கற்பால;
மைத்திரு நிறத்தான் தாள் என்
தலைமிசை வைக்கற்பால.'

பொ :—(என் தந்தைக்குத் தருவதாக நீ சொல்லிய வானுலக ஆட்சியாகிய) இந்தச் செல்வத்தைப் பெறுதற்குரியவன் இந்திரனே. நும்மவர்க்குரிய இலங்கையினது நிலையற்ற செல்வத்தைப் பெறுதற்குரியவன் (நின் தம்பியாகிய) வீடணனே. உன்னுடைய மார்பிலே சேர்தற்குரியவை தேவர்க்கெல்லாம் தலைவனாகிய இராமபிரானது கையிலுள்ள அழகிய அம்புகளே. என்னுடைய தலைமேல் (நீங்காது) புனைதற்குரியவை அஞ்சனம்போலும் அழகிய நிறத்தினையுடையானாகிய அம் முதல்வனுடைய திருவடிகளேயாகும்.

கு :—இந்திரனுக்குரியதாய் என் தந்தைக்கு நீ தருவதாகச் சொன்ன வானுலக ஆட்சி, இராமபாணத்தால் நீ இறந்தொழிய நின்னை விட்டு நீங்கி மீண்டும் இந்திரனுக்கே யுரியதாதல் திண்ணம் என்பாள். 'இத்திருப்பெறுகிற்பானும் இந்திரன்' என்றாள். அரக்கர்களாகிய நும்மவர்க்குரியதாக அமைந்த இலங்கையின் ஆட்சியுரிமையாகிய இச் செல்வம் நிலையின்றியழிந் தொழியுமியல்பினது என்பாள், 'இலங்கை நுங்கள் பொய்த்திரு' என்றாள். இறந்தொழியும் நிலையினனாகிய நீ நிலையற்றதாய இவ்விலங்கையின் ஆட்சியைத் தானும் என் தந்தைக்குக் கொடுக்கும் ஆற்றலுடையாயல்லை; அதுவும் என் ஆருயிர் நாயகனால் நின் தம்பி வீடணனுக்கு உரியதாக முன்னமே

உரிமை செய்தளிக்கப்பட்டமையால் அதனை யடைதற்குரியவன் அவ் வீடணனே என அறிவுறுத்துவாள், 'இலங்கை நுங்கள் பொய்த் திருப் பெறுகிற்பானும் வீடணன்' என்ருள். கற்பினுல் தூயேனுகிய என்னை அடைய விரும்பிய பாவியாகிய நின்னுடைய மார்பு என் நாயகன் கையிலுள்ள அம்புகட்கு இலக்காதலுறுதி என்பாள், 'புலவர் கோமான் கைத்திருச்சரங்கள் உன்றன் மார்பிடைக் கலக்கற் பால' என்ருள். புலவர் கோமான்-தேவ தேவன்; என்றது திருமாலின் அமிசமாகிய இராமனை. புலவர்-தேவர். என் ஆருயிர் நாயகனுகிய இராமனுடைய திருவடிகளை முடியிற்சூடிக் கொள்ளும் வாழ்வையன்றி அவனுடைய திருவடி சம்பந்தமில்லாத எத்தகைய அரச வாழ்வையும் ஒரு பொருளாக மதித்திலேன் என்பாள், 'மைத்திரு நிறத்தான்தாள் என் தலைமிசை வைக்கற்பால' என்ருள். "தில்லைநகர்த் திருச்சித்திர கூடந்தன்னுள் அரசமர்ந்தான் அடி சூடும் அரசையல்லால் அரசாக எண்ணேன் மற்றரசுதானே" (திவ்ய-பெருமாள் திருமொழி-10. 7.) என வரும் அருளிச் செயல் ஈண்டு ஒப்பு நோக்கற்பாலதாகும். மைத்திரு நிறத்தான்-அஞ்சன வண்ணன்; இராமன். (55)

**7817.** நகுவன நின்னோ டைய
  ஞயக ஞம வாளி
புகுவன போழ்ந்துன் மார்பிற்
  றிறந்தன புண்க ளெல்லாம்
தகுவன வினிய சொல்லத்
  தக்கன சாப நாணின்
உகுவன மலைக ளெஞ்சப்
  பிறப்பன வொலிக ளம்மா.

'நகுவன நின்னோடு, ஐயன்
  நாயகன் நாம வாளி;
புகுவன போழ்ந்து, உன் மார்பில்
  திறந்தன புண்கள் எல்லாம்
தகுவன இனிய சொல்லத்
  தக்கன; சாப நாணின்
உகுவன மலைகள் எஞ்ச,
  பிறப்பன ஒலிகள் அம்மா!

பொ :—(தூர்த்தனாகிய) நின்னுடன் அளவளாவி மகிழத்தக்கன (வியக்கத்தக்க) தலைவனாகிய (என்) கணவனுடைய பெயர் பொறிக்கப் பட்ட அம்புகள்; (அவை) உன் மார்பிடத்தே புகுந்து பிளத்தலால் திறக்கப்பட்ட புண்கள் யாவும் (நினக்குத்) தகுதியுடையனவாகிய இனிய நல்லுரைகளைச் சொல்லத்தக்கன. மலைகள் பொடியாய்ச் சிதர்ந்து அழியுமாறு (என் கணவன் கையிலுள்ள) வில் நாணி லிருந்து தோன்றுவனவாகிய பேரொலிகளும் நினக்கு இனிய அறி வுரைகளைச் சொல்லத்தக்கனவாகும்.

கு :—நகுதல் - அளவளாவி மகிழ்தல். ஐயன் – வியக்கத்தக்க குணஞ்செயல்களையுடையவன்; என்றது இராமனை. ஐ - வியப்பு. நாமம் - பெயர். இராமனுடைய அம்புகளில் அவனது பெயர் பொறிக்கப்பட்டமையால் 'நாமவாளி' எனக் குறித்தார். 'பொறித்த நாமத்தை அறிகுவான் நோக்கினன்...பறித்த வாளியைப் பருவலித் தடக்கையாற் பற்றி'...இராமனென்னுஞ் செம்மைசேர் நாமந் தன்னைக் கண்களில் தெரியக் கண்டான்" (வாலி வதைப்-80) என முன்னர்க் கூறினமை காண்க. இனி, 'நாமவாளி' என்பதற்கு 'அச்சத்தை விளைக்கும் அம்பு' எனப் பொருள் கொள்ளுதலும் உண்டு. இங்ஙனங் கூறுங்கால் அச்சம் என்ற பொருளையுடைய நாம் என்னும் உரிச்சொல் நாம என ஈறு திரிந்ததாகக் கொள்ளுதல் வேண்டும். 'அறநெறியில் நில்லாத தூர்த்தனாகிய நின்னுடன் மகிழ்ந்து உறவாடத் தக்கன என் கணவனுடைய பெயர் பொறிக்கப் பட்ட கூரிய அம்புகளே; நினக்கு உறுதிபயக்கும் நல்லுணர்வினையும் இனிய நல்லுரைகளையும் வழங்கத்தக்கவை நின் மார்பிடத்தே இராம பாணங்களால் துளைக்கப்பட்டு உண்டாகிய புண்களும் பெரு மலைகளும் சிதர்ந்து பொடியாய் அழியும்படி இராமனது வில் நாணி லிருந்து தோன்றும் பேரொலிகளுமேயாகும்' எனப் பிராட்டி இராவ ணனுக்கு அறிவுறுத்தியவாறு. 'இனிய சொல்லத்தக்கன' என்ற தொடர், இடைநிலை விளக்காய் நின்று முன்னுள்ள 'புண்கள் எல்லாம்' என்பதனோடும் பின் வந்த 'ஒலிகள்' என்பதனோடும் இயைந்தது. உகுதல் - பொடியாய் உதிர்தல். எஞ்சுதல் - அழிதல்.
(56)

7818. சொல்லுவ மதுர பாற்றந்
துண்டத்தா லுண்டுன் கண்ணைக்
கல்லுவ காகம் வந்து
கலப்பன கமலக் கண்ணன்

வில்லுமிழ் பகழி பின்னர்
விலங்கெழி லலங்கன் மார்பம்
புல்லுவ களிப்புக் கூர்ந்து
புலவுநா றலகை யெல்லாம்.

'சொல்லுவ மதுர மாற்றம்,
துண்டத்தால் உண்டு, உன்கண்ணைக்
கல்லுவ, காகம்; வந்து
கலப்பன, கமலக்கண்ணன்
வில் உமிழ்பகழி; பின்னர்,
விலங்கு எழில் அலங்கல் மார்பம்
புல்லுவ, களிப்புக் கூர்ந்து,
புலவுநாறு அலகை எல்லாம்.

பொ :—செந்தாமரைக் கண்ணனாகிய இராமனது வில்லினின்று வெளிப்படுத்தப்படும் அம்புகள் உன்னுடைய அழகு விளங்கும் மாலையினையுடைய மார்பின் கண்ணே வந்து பொருந்திச் சேர்தற்கு உள்ளன. (நீ அம்புபட்டுப் போர்க்களத்தே இறந்து வீழ்ந்த நிலையில்) காக்கைகள் உன் கண்களைத் தம்முடைய அலகினால் கொத்தித் தோண்டுவனவாய் (அவற்றை)த் தின்று (உனக்கு) இனிமை பயக்கும் மொழிகளைச் சொல்லுதற்கு உள்ளன. புலால் நாற்றம் வீசும் வாயினையுடைய பேய்கள் யாவும் (நீ இறந்த) பின்னர் நின்னுடைய அழகு விளங்கும் மாலையினையணிந்த மார்பினை மகிழ்ச்சிமிக்குத் தழுவப் போகின்றன.

கு :—'கமலக் கண்ணன் வில்லுமிழ் பகழி விலங்கு எழில் அலங்கல் மார்பம் வந்து கலப்பன; காகம், உன் கண்ணைத் துண்டத்தாற் கல்லுவ உண்டு மதுர மாற்றம் சொல்லுவ; புலவுநாறு அலகையெல்லாம் விலங்கு எழில் அலங்கல் மார்பம் களிப்புக் கூர்ந்து புல்லுவ' என இயையும். மதுரமாற்றம் - இனியமொழி. துண்டம் – மூக்கு; அலகு. கல்லுதல் – தோண்டுதல். உமிழ்தல் - வெளிப்படுத்துதல். பகழி - அம்பு. விலங்குதல் – விளங்குதல். அலங்கல் - மாலை. புல்லுதல் - தழுவிக் கொள்ளுதல். அலகை - பேய். 'அற நெறி கடந்து பிறர்க்குரிய மகளிரை விரும்பிய தூர்த்தனாகிய நீ, நின்னை அன்பினாற் கலத்தற்கும் நின்னொடு அளவளாவி இன்னுரை பகர்தற்கும் மகிழ்ச்சிமிக்குப் புல்லுதற்கும் உரிய உரிமை மகளிரை உற்று இன்புறுது விரைவில் இறந்தொழியப் போகின்றாய்' எனப் பிராட்டி இராவணனுக்கு அறிவுறுத்தியவாறு. 'விலங்கெழில் அலங்கல்மார்பம்' என்ற தொடர் இடைநிலை விளக்காய் நின்று கலப்பன, புல்லுவ என முன்னும் பின்னும் சென்றியைந்தது. (57)

7819. விரும்பிநான் கேட்ப துண்டா
னின்னுழை வார்த்தை வீரன்
இரும்பியல் வயிர வாளி
யிடறிட வெயிற்றுப் பேழ்வாய்ப்
பெரும்பியற் றலைகள் சிந்திப்
பிழைப்பிலை முடிந்தா யென்ன
அரும்பிய றுளவப் பைந்தா
ரனுமன்வந் தளிக்கு மந்நாள்.

'விரும்பி நான் கேட்பது உண்டால்
நின்னுழை வார்த்தை "வீரன்
இரும்பு இயல் வயிரவாளி
இடறிட, எயிற்றுப் பேழ்வாய்ப்
பெரும்பியல் தலைகள் சிந்திப்
பிழைப்பிலை முடிந்தாய்" என்ன,
அரும்பு இயல் துளவப் பைந்தார்
அனுமன்வந்து அளிக்கும் அந்நாள்.

பொ :—பெரு வீரனாகிய என் கணவனுடைய இரும்பின் தன்மையைக் கொண்ட வயிரம் போலும் திண்ணிய அம்பு எற்றித் தாக்குதலால் (நின்னுடைய) கோரப் பற்களைக்கொண்டு திறந்த வாயுடன் கூடிய பெரிய பிடரியிற் பொருந்திய தலைகள் (பத்தும்) சிதைந்து வீழ்ந்து (மீளவும் நீ) உயிர் பிழைத்தல் இல்லாதவனாய் இறந்தொழிந்தாய் என்று நின்னைப் பற்றிய (இச்) செய்தியை, (தளிராய்) அரும்பும் நிலையிலேயே (மணத்துடன்) இயன்ற பசிய துளவமாலையை யணிந்த அனுமன் (என்பால்) வந்து கூறி (ஆறுதல்) அளிக்கும் அந்த நாளிலே யான் விரும்பிக் கேட்பதாகிய அந்நிலை (மிகவும் அண்மையில் வருதற்கு) உள்ளது.

கு :—நீ, பிறன் மனையாளாகிய என்னை முறையின்றி விரும்பிக் கூறும் இத் தீச்சொற்கள் என்னாற் கேட்கத்தக்கன அல்ல என்றும் அறவரம்பிகந்த கொடியோனாகிய நீ, பெருவீரனும் அறத்தின் மூர்த்தியும் ஆகிய என் நாயகனுடைய அம்புகளால் தலைகள் அறுப்புண்டு வீழ்ந்து இறந்து பட்டாய் என நின்னைக் குறித்து அனுமன் என்பால் வந்து கூறுதற்குரிய அம்மொழியொன்றே என்னால் விரும்பிக் கேட்டற்குரியதென்றும் அங்ஙனம் நான் கேட்கும்படி நீ விரைவில் இறந்தொழிதல் திண்ணம் என்றும் இராவணனுக்கு அறிவுறுத்துவாள், 'முடிந்தாய் என்ன அனுமன் வந்து அளிக்கும் அந்நாள் நின்னுழை வார்த்தை நான் விரும்பிக் கேட்பது உண்டு' என்றாள்.

வீரன் என்றது, இராமனை. இடறுதல்-எற்றித்தாக்குதல். பியல்-பிடர்; தலையைத் தாங்கும் நிலையில் கழுத்தின்கண் அமைந்த உறுப்பு. அரும்பு இயல் துளவம்-அரும்பித் தோன்றும் நிலையிலேயே மணத்துடன் இயன்ற தன்மையினையுடைய துளசி. பைந்தார்-பசிய இலைகளால் தொடுக்கப்பட்ட மாலை. ஆண்டானுக்குரிய அடையாளமாலை அவனுக்கு அடித் தொண்டுபட்ட அனுமனுக்கும் உரியதாதலின் 'அரும்பியல் துளவப் பைந்தார் அனுமன்' எனச் சுட்டினர் ஆசிரியர். (58)

7820. புன்மகன் கேட்டி கேட்டற்
குரியது புகுந்த போரின்
உன்மக னுயிரை யெம்மோய்
சுமித்திரை யுய்ய வீன்ற
நன்மகன் வாளி நக்க
நாயவ னுடலை நக்க
என்மக னிறந்தா னென்ன
நீயெடுத் தரற்ற லென்ருள்.

'புன்மகன்! கேட்டி, கேட்டற்கு
உரியது; புகுந்த போரின்
உன்மகன் உயிரை எம்மோய்
சுமித்திரை உய்ய ஈன்ற
நன்மகன் வாளி நக்க,
நாய் அவன் உடலைநக்க,
"என்மகன் இறந்தான்" என்ன,
நீ எடுத்து அரற்றல்' என்ருள்.

பொ :—சிறுமையுடையோனே! (இப்பொழுது) ஏற்பட்ட போரிலே உன்னுடைய மகன் (இந்திரசித்தின்) உயிரை எம்முடைய தாயனைய சுமித்திரை (உலகம்) உய்யப்பெற்ற நற் புதல்வனுகிய இலக்குவனுடைய அம்புகள் தீண்டி வருத்த(ப் பிணந்தின்னும்) நாய்கள் அவனுடம்பின் ஊனினை நக்கிச் சுவைக்க (அதுகண்டு) 'என்னுடைய மகன் இறந்து விட்டானே' என்று எடுத்துச் சொல்லி நீ வாய்விட்டரற்றும் ஒலியினை (நீயே) கேட்கப்போகின்ருய்; (அதுவே நின்னால்) கேட்டற்குரியதாகும்.

கு :—புன்மகன் – அற்பனே; அண்மை விளி. 'உன்' என்றது இராவணனை. மகன் – இந்திரசித்து. மோய் – தாய்; சுமித்திரை.

தாய் என்னும் முறைப்பெயர், ஈண்டு தாய்போலும் பேரன்பினள் என்னும் பொருளைத் தந்தது. 'என் மகன் இறந்தான்' என்ன நீ எடுத்து அரற்றல் புன்மகன் கேட்டி; (அதுவே) கேட்டற்குரியது' என இயையும். 'நக்க' என்னும் செயவென் னெச்சங்கள் இரண்டும் 'இறந்தான்' என்னும் பிற கருத்தாவின் வினையைக்கொண்டு முடிந்தன. நக்குதல் – தீண்டி வருத்துதல்; நாவினுல் நக்கிச் சுவைத்தல். 'நீ எடுத்து அரற்றுதல் (நீ) கேட்டி' என்றது அவ் வல்லற்காலத்து உனக்குத் துணையாவார் ஒருவருமின்றி நினது அரற்றுதலை நீயே கேட்கும் நிலையில், நினக்குத் துணையான சுற் றங்கள் அத்தனையும் இறந்தொழியத் தனித்து நின்று அழுது அல்லற்படுவாய்' என அறிவுறுத்தியவாறு. இத்தகைய கடுந் துன்பம் இரக்கமற்ற கொடியோனுகிய நினக்கு ஏற்புடையதே என் பாள், 'கேட்டி கேட்டற்குரியது' என்ருள். அறந்திறம்பித் தீமையே புரிந்தொழுகும் இரக்கமற்ற கொடியோனுகிய இராவணனை நோக்கிக் கற்பென்னுந் திண்மையுடைய சீதாபிராட்டி வெகுண் டுரைப்பனவாக அமைந்த இக் கூற்றுக்கள் அக் கொடியோனது வாழ்வில் மெய்ம்மையாகப் பயன்தரும் ஆற்றலுடையனவா யமைந் திருத்தல் காணலாம். (59)

சினமுற்ற இராவணன், சீதையின்மேற் செல்ல, மகோதரன் அவனைத் தடுத்து 'தந்தை வேண்ட இவள் இசைவாள்' என்று கூறி அவனது வெகுளியைத் தணித்தல்

7821. வெய்யவ னனைய கேளா
வெயிலுக விழித்து வீரக்
கைபல பிசைந்து பேழ்வா
யெயிறுபுக் கழுந்தக் கவ்வித்
தையன்மே லோட லோடு
மகோதரன் றடுத்தா னின்ற
மொய்கழற் ருதை வேண்ட
விசையுநீ முனிய லென்ருன்.

வெய்யவன் அனைய கேளா,
வெயில் உகவிழித்து, வீரக்
கைபல பிசைந்து, பேழ்வாய்
எயிறுபுக்கு அழுந்தக் கவ்வி,

தையல் மேல் ஓடலோடும்,
மகோதரன் தடுத்தான்; 'ஈன்ற
மொய்கழல் தாதை வேண்ட
இசையும்; நீமுனியல்' என்ருன்.

பொ:—கொடியோனுகிய இராவணன் (பிராட்டி வெகுண்டு கூறிய) அம்மொழிகளைக் கேட்டு (அனலின்) வெம்மை தோன்ற(க் கண்களை) விழித்து வெகுண்டு பார்த்து, வீரத் தொழிலில் வல்ல (தன்னுடைய) பலவாகிய (இருபது) கைகளையும் பிசைந்துகொண்டு பிளவுபடத் திறந்த வாயிலுள்ள பற்கள் அழுந்திப் பதியும்படி (உதட்டைக்) கடித்து(க் கொல்லுந் தொழிலை எண்ணி)ச் சீதையை நோக்கி விரைந்து சென்ற அளவில், மகோதரன் என்பான் அவனைத் தடுத்து நிறுத்தியவனாய், 'இவள் தன்னைப் பெற்ற நெருங்கிய வீரக் கழலையணிந்த தந்தையாகிய (இச்) சனகன் வேண்டிக் கொள்ள அதற்கு இணங்குவாள். (ஆகவே) நீ (இவளை) வெகுளா தொழிக' என்று கூறினான்.

கு:—வெய்யவன் – வெம்மையை விளைப்பவன்; என்றது கொடுந் தொழிலாளனுகிய இராவணனை. அனைய – அத்தன்மைய; இனி விளையவிருக்கும் இன்னல்களை விரித்துரைப்பனவாகச் சீதை கூறிய சாபமொழிகள். கேளா – கேட்டு. வீரக்கை – வீரத் தொழிலில் வல்ல கை, இருபது கைகளையும் பிசைந்தான் என்பார் 'கைபல பிசைந்து' என்ருர். கைகளைப் பிசைதலும் உதட்டைக் கடித்தலும் வெகுளியின் விளைவாகிய செயல்கள். தையல் என்றது, சீதையை. ஓடுதல் – விரைதல். தடுத்தான் – தடுத்து; முற்றெச்சம்; 'என்ருன்' என்னும் வினையைக் கொண்டு முடிந்தது. (60)

இராவணன் ஆசனத்திலமர்ந்திருக்க, மாயாசனகன் சீதையை நோக்கி இராவணனது விருப்பிற்கு இசையும்படி பரிந்து வேண்டுதல்

7822. அன்றவன் றகைப்ப மீண்டா
ஞசனத் திருக்க வாவி
பொன்றின ஞகு மென்னத்
தரையிடைக் கிடந்த பொய்யன்
இன்றிது நேரா யென்னி
னென்னையென் குலத்தி ஞேடும்
கொன்றனை யாதி யென்ரு
வினையன கூற லுற்ருன்.

அன்று அவன் தகைப்ப
மீண்டான் ஆசனத்து இருக்க, 'ஆவி
பொன்றினன் ஆகும்' என்னத்
தரையிடைக் கிடந்த பொய்யன்,
'இன்று இது நேராய் என்னின்,
என்னை என் குலத்தினோடும்
கொன்றனை ஆதி' என்னா
இனையன கூறலுற்றான்.

பொ :—அப்பொழுது அம்மகோதரன் தடுக்க (வெகுளி தணிந்து) மீண்டவனாகிய இராவணன் (அங்குள்ள) இருக்கையிலே அமர்ந்திருந்தானாக, (அந்நிலையில்) இறந்தொழிந்தான் என்று (கண்டோர்) கருதும்படி தரையிலே வீழ்ந்து கிடந்த பொய்யுருவினனாகிய மாயா சனகன், '(இலங்கை வேந்தனது) இவ்வேண்டுகோளுக்கு நீ இப்பொழுது இணங்காதொழிவாயாயின், என்னை என் குலத்தாரொடும் கொன்றொழித்தனையாவாய்' என்று சொல்லி(ப் பின்வருமாறு) இம்மொழிகளைக் கூறத் தொடங்கினான்.

கு :—அவன் - மகோதரன். தகைத்தல் - தடுத்தல். மீண்டான் என்றது, சீதையைக் கொல்லச் சென்று கொல்லாது மீண்ட இராவணனை. பொன்றுதல் - இறத்தல். பொய்யன் - சனகனாகப் பொய்ம்மையுருக்கொண்டோன் ஆகிய மருத்தன் என்னும் அரக்கன். இராவணன் கூறிய இவ்வேண்டுகோளுக்கு நீ இப்பொழுது இணங்காதொழிவாயாயின் அவன் என்னை என் குலத்தினரோடும் கொன்றொழித்தல் திண்ணம் என்பான், 'இன்றிது நேராயென்னின் என்னையென்குலத்தினோடும் கொன்றனையாதி' எனச் சீதையை நோக்கிக் கூறினான். இன்று - இப்பொழுது. இது - இராவணனது வேண்டுகோள். நேர்தல் - உடன்படுதல். கொன்றனை ஆதி - கொன்றாய் ஆவாய். பொய்யனாகிய மாயாசனகன் கூறியவை அடுத்துவரும் இரண்டு செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். (61)

7823. பூவின்மே லிருந்த தெய்வத்
தையலும் பொதுமை யுற்றாள்
பாவியான் பயந்த நங்கை
நின்பொருட் டாகப் பட்டேன்

ஆவிபோ யழித னன்றே
வமரர்க்கு மரச னுவான்
தேவியா யிருத்த றீதோ
சிறையிடைத் தேம்பு கின்றாய்.

'பூவின்மேல் இருந்த தெய்வத்
தையலும் பொதுமை உற்றாள்;
பாவி யான் பயந்த நங்கை!
நின் பொருட்டாகப் பட்டேன்;
ஆவிபோய் அழிதல் நன்றோ?
அமரர்க்கும் அரசன் ஆவான்
தேவியாய் இருத்தல் தீதோ?
சிறையிடைத் தேம்பு கின்றாய்.

பொ:—தாமரைப் பூவில் வீற்றிருக்கும் தெய்வப் பெண்ணாகிய திருமகளும் (உலகத்தார் பலர்க்கும்) பொதுவாதலைப் பொருந்தியுள்ளாள். தீவினையாளனாகிய நான் பெற்ற மகளே! மாற்றார் சிறையிடையகப்பட்டு வருந்துகின்றவளே! (யான்) நின்னை மகளாகப் பெற்றமையால் இவ்வாறு சிறைப்பட்டேன். (நின் தந்தையாகிய நான்) உயிர் இழந்து இறந்தொழிவது (உனக்கு) அறமாகுமோ? தேவர்கட்குந் தலைவனாகிய இலங்கை வேந்தனுக்கு (நீ) மனைவியாயிருத்தல் (நினக்குத்) தீமை தருவதாகுமோ?

கு:—தையலும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. திருமகள் என்றது செல்வத்தை. பொதுமையுறுதல் என்றது; உலகில் உயர்ந்தோர் தாழ்ந்தார் என்னும் வேறுபாடின்றி நல்லூழ் உள்வழி எத்திறத்தார் கண்ணும் பொருந்தியிருத்தல். 'பொருட்செல்வம் பூரியார் கண்ணும் உள' (திருக்குறள் – 241) என்றார் தெய்வப் புலவரும். தெய்வ மகளாகிய திருமகளின் இயல்பு இத்தன்மையதாகவும் மானிட மகளாகிய நீ, பண்டை நல்வினைப் பயனால் அமரர்க்கும் அரசனான் ஆகிய இலங்கை வேந்தனது வேண்டுகோளை வெறுத்தல் முறையன்று என்பது குறிப்பு. பாவி – தீவினையாளன்; இவ்வாறு மாயாசனகன் தன்னைக் குறித்தான். இனி தீவினையாட்டி எனக் கொண்டு சீதையைக் குறித்ததாகப் பொருளுரைத்தலும் உண்டு. "இறந்த மூப்பினராகிய இருமுதுகுரவரும் கற்புடை மனைவியும் பசியான் வருந்துமெல்லைக்கண் தீயன பலவுஞ் செய்தாயினும் புறந்தருக என்பது அறநூற் பொதுவிதியாதலின், நின் தந்தையாகிய யான் நின் பொருட்டு இராவணனாற் சிறைப்படுத்தப்பட்டு அல்லற்பட்டு இறக்கும் நிலையில் என்னை இறவாது பாதுகாத்தல் நின்

கடமையாகவும் அதனை நிறைவேற்றுங் கருத்தின்றி இராவணனது வேண்டுகோளுக்கு இணங்காமற் பிடிவாதஞ் செய்வது அறமாகாது'' என்பான், 'பாவியான் பெற்ற நங்கை நின் பொருட்டாகப் பட்டேன், ஆவிபோய் அழிதல் நன்றோ?' என வினவினன். தேவர்கட்கெல்லாந் தலைவனுன இராவணனையடைதலால் நீ சிறைத் துன்பத்தை நீங்கி நலம்பெறலாம்' என்பான், 'அமரர்க்கும் அரசனானான் தேவியாயிருத்தல் தீதோ' என்ருன். ஓகாரம் இரண்டும் எதிர்மறைப் பொருளன. (62)

7824. என்னையென் குலத்தி னேடு
மின்னுயிர் தாங்கி யீண்டு
நன்னெடுஞ் செல்வந் துய்ப்பே
னக்கினை நல்கி நாளும்
உன்னைவெஞ் சிறையி னீக்கி
யின்பத்து ளுய்ப்பா யென்னப்
பொன்னடி மருங்கு வீழ்ந்தா
னுயிருகப் பொருமு கின்ருன்.

'என்னை என் குலத்தினேடும்
இன்உயிர் தாங்கி, ஈண்டு
நல் நெடுஞ்செல்வம் துய்ப்பேன்
ஆக்கினை நல்கி, நாளும்
உன்னை வெஞ்சிறையின் நீக்கி,
இன்பத்துள் உய்ப்பாய்' என்ன,
பொன் அடிமருங்கு வீழ்ந்தான்,
உயிர் உகப் பொருமு கின்ருன்.

பொ :—(உடம்பைவிட்டு) உயிர் நீங்குமாறு பொருமி அழுபவனான மாயாசனகன் இவ்வுலகில் என் குலத்தினரோடும் இனிய உயிரைத் தாங்கியிருந்து நல்ல பெரிய (அரசியற்) செல்வத்தை நுகருந் தன்மையுடையேனாக என்னைச் செய்து எனக்கு அருள் வழங்கி, உன்னையும் வெம்மையுடைய சிறையினின்றும் நீக்கி நாள் தோறும் இன்ப வாழ்க்கையிற் செலுத்துவாயாக' என்று வேண்டி(ச் சீதையின்) அழகிய பாதங்களின் அருகே வீழ்ந்து வணங்கினன்.

கு :—என்னைச் செல்வந் துய்ப்பேன் ஆக்கினை நல்கி, உன்னைச் சிறையின் நீக்கி நாளும் இன்பத்துள் உய்ப்பாய்' எனவும் ஈண்டு என் குலத்தினேடும் இன் உயிர் தாங்கி நன்னெடுஞ் செல்வந்துய்ப்

பேன் எனவும் இயைத்துப் பொருள் கொள்க. உயிருகப் பொருமுகின்ருன், பொன்னடி மருங்கு வீழ்ந்தான் என இயையும். 'எனக்கும் உனக்கும் நேர்ந்துள்ள இத் துன்பங்கள் தீர்ந்து நன்மையே யுண்டாகும் வண்ணம் நீ இராவணனது விருப்பத்திற்கு இசைந்தருள்வாயாக' என இரந்து வேண்டி அழுது பொருமியவனுய்ச் சீதையின் அடிகளில் வீழ்ந்து வணங்கினுன் மாயா சனகன் என்பதாம். துய்த்தல்-அனுபவித்தல். உய்த்தல்-செலுத்துதல். (63)

மாயாசனகன் கூறிய மொழிகளைக் கேட்கப் பொருளாகிய சீதை, அவனை ஐயுற்றுக் கடிந்துரைத்தல்

7825. அவ்வுரை கேட்ட நங்கை
செவிகளை யமையப் பொத்தி
வெவ்வுயிர்த் தாவி தள்ளி
வீங்கினள் வெகுளி பொங்க
இவ்வுரை யெந்தை கூரு
னின்னுயிர் வாழ்க்கை பேணிச்
செவ்வுரை யன்றி தென்னுச்
சீறின ளுளையச் செப்பும்.

அவ்உரை கேட்ட நங்கை, செவிகளை அமையப் பொத்தி,
வெவ்வுயிர்த்து, ஆவிதள்ளி, வீங்கினள் வெகுளிபொங்க,
'இவ்வுரை எந்தை கூருன், இன்உயிர் வாழ்க்கை பேணி;
செவ்வுரை அன்று இது' என்னுச்சீறினள், உளையச் செப்பும்.

பொ :—(மாயாசனகன் கூறிய) அந்த வார்த்தையினைக் கேட்ட கற்புடைய நங்கையாகிய சீதை (அத் தீமொழி) உள்ளே புகாதவாறு தன்) காதுகளை இறுக மூடிக்கொண்டு, வெம்மையுடையதாகப் பெருமூச்சுவிட்டு உயிர் உடம்பின் நில்லாது புறத்தே) தள்ளப்பெற்ற நிலையில் விம்முதலுற்று உணர்விழந்தவளாய்(ப் பின்னர்ச் சிறிது தெளிவு பெற்றுத் தன் உள்ளத்தே) கோபம் கிளர்ந்து தோன்ற 'என்னுடைய தந்தையாகிய சனகன் தனது இனிய உயிர் உடம்பின் கண்ணே நிலைத்து வாழ்தலை விரும்பி இத்தகைய (பழிவிளைக்கும் தீய) வார்த்தையினைக் கூறமாட்டான். (இவன் கூறிய) இவ்வார்த்தை (அறத்தொடு பொருந்திய) நேர்மையுடையதன்று' என்று கருதி (அவனைச்) வெயிர்த்துரைப்பவளாய் (அவன்) மனம் நைந்து வருந்தும்படி (பின்வருமாறு) கூறுவாளாயினுள்.

கு :—அமையப் பொத்துதல் – இறுக மூடிக்கொள்ளுதல். தன்னியல்புக்கு ஒவ்வாத தீய மொழிகளைக் கேட்டலும் குற்றமாதலின், சீதை தன் செவிகளைப் பொத்திக் கொண்டாள். 'எந்தை இன்னுயிர் வாழ்க்கை பேணி இவ்வுரை கூறுன்; இது செவ்வுரை அன்று' என்னுச் சீறினள் செப்பும் என இயையும். உளைதல்-மனம் நைந்து வருந்தல்; பொய்யுருக் கொண்ட மருத்தனுகிய அரக்கனும் அவனைக் கொண்டு தன் விருப்பத்தினை நிறைவேற்றிக் கொள்ள எண்ணி அங்கு வந்தமர்ந்த இராவணனும் தான் கூறும் மொழிகளைக் கேட்டு மனம் வருந்தி நாணும்படி கற்புடை நங்கையாகிய சீதை தன்னுள்ளத் துறுதியினைப் பின்வருமாறு கூறத் தொடங்கினுள் என்பதாம். அவள் கூறுவன பின்வரும் ஐந்து செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். (64)

7826. அறங்கெட வழக்கு நீங்க
வரசர்த மரபுக் கான்ற
மறங்கெட மெய்ம்மை தேய
வசைவர மறைக ளோதுந்
திறங்கெட வொழுக்கங் குன்றத்
தேவரும் பேணத் தக்க
நிறங்கெட வினைய சொன்னுய்
சனகன்கொ ளினையி னையா.

அறம்கெட, வழக்கு நீங்க,
அரசர்தம் மரபுக்கு ஆன்ற
மறம்கெட, மெய்ம்மை தேய,
வசைவர மறைகள் ஓதும்
திறம்கெட, ஒழுக்கம் குன்ற,
தேவரும் பேணத் தக்க
நிறம்கெட, இனைய சொன்னுய்;
சனகன்கொல், நினையின், ஐயா!

பொ :—தருமம் அழியவும் உலகியல் வழக்காகிய முறைமை ஒழியவும் மன்னரது நற்குடிக் கமைந்த வீரமாகிய தறுகண்மை சிதையவும் (என்றும் நிலைத்துள்ள) உண்மை தேய்ந்து குன்றவும் (நற்குடிக்கு ஏலாத) பழி வந்து சேரவும் வேதங்கள் கூறும் செயல் திறங்கள் கெட்டொழியவும், (உயிரினும் சிறந்ததாகிய) ஒழுக்கம் சிதையவும் தேவர்களாலும் விரும்பிப் போற்றத்தக்க புகழ்த்திற

மாகிய ஒளி கெட்டழியவும் இத்தகைய (இழிவுதரும்) வார்த்தைகளைக் கூறினாய். (இம் மொழிகளைக் கூர்ந்து) எண்ணுங்கால் (இவற்றைக் கூறிய நீ, உண்மையாகச்) சனக மன்னன் ஆவாயோ?

கு:—'நீ கூறிய இவ் வார்த்தைகள், அறத்தையும் உயர்ந்தார் வழக்காகிய நீதி முறையையும் மன்னர் குடிக்குரிய வீரத்தையும் நற்குடிப் பிறந்தோர்களால் போற்றத்தக்க உண்மையையும் வேத நூல்களால் விரித்துரைக்கப்படும் செயல் திறங்களையும் மக்கட்கு உயிரினும் சிறந்ததாகிய நல்லொழுக்கத்தினையும் தானுள்ள காலத்து யாண்டும் பரவி விளங்கத்தக்க புகழாகிய நல்லொளியினையும் சிதைத்து ஒழித்துப் பெரும் பழியை விளைத்து குலத்திற் பிறந்தார் வாயிற் பயிலத்தகாத இம் மொழிகள், நற்குடியிற் பிறந்த சனக மன்னன் நீ அல்லை என்பதனையும் புலப்படுத்தலால், இவற்றைக் கூறிய நின் பிறப்பில் ஐயமுடையேன்' என்பாள், 'அறங்கெட...... இனைய சொன்னாய் சனகன் கொல்' என்றாள். நிறம்-ஒளி; 'தானுள ளாய காலத்து மிக்குத் தோன்றுதலுடைமை' 'ஒளிநிறான் ஓங்குபுகழ் செய்யான்' (நாலடியார்-9) என்றார் பிறரும்' (திருக்குறள்–971|உரை) எனப் பரிமேலழகர் கூறும் விளக்கம் இங்கு நினைக்கத்தக்கதாகும். கொல் என்பது ஐயப்பொருள் தருவதோர் இடைச்சொல். 'நிலத்திற் பிறந்தமை கால் காட்டும் காட்டும் குலத்திற் பிறந்தார் வாய்ச்சொல்' (959), 'நலத்தின்கண் நாரின்மை தோன்றினவனைக் குலத்தின்கண் ஐயப்படும்' (958) என வரும் தெய்வப் புலவர் வாய்மொழிகள் இங்கு ஒப்பு நோக்கற்பாலன. (65)

**7827.** வழிகெட வரினுந் தத்தம்
வாழ்க்கைதேய்ந் திறினு மார்பம்
கிழிபட வயில்வேல் வந்து
கிடைப்பினுஞ் சான்றோர் கேட்கும்
மொழிகொடு வாழ்வ தல்லான்
முறைகெடப் புறநின் றார்க்கும்
பழிகொடு வாழ்தல் செய்யும்
பார்த்திப ருளரோ பாவம்.

'வழிகெடவரினும் தம்தம் வாழ்க்கை
தேய்ந்து இறினும், மார்பம்
கிழிபட அயில்வேல் வந்து
கிடைப்பினும், சான்றோர் கேட்கும்

மொழிகொடு வாழ்வது அல்லால்,
முறைகெடப் புறம்நின்று ஆர்க்கும்
பழிகொடு வாழ்தல் செய்யும்
பார்த்திபர் உளரோ? பாவம்!

பொ :—(தமது) சந்ததியே அழிய நேர்ந்தாலும் தத்தமது உயிர் (உடம்புடன்) நிலைபெற்று வாழ்தலாகிய வாழ்வு சிதைந்து அழிவ தாயினும், மார்பு பிளக்கும்படி கூரிய வேற்படை (தம்மேல்) விரைந்து வந்து தாக்கித் தைத்தாலும், (நற்குணங்களால் நிறைந்த) பெரி யோர்கள் (விரும்பிக்) கேட்டற்குரிய புகழ்ச் சொல்லைப் பெற்று வாழ்வ தன்றி, (நின்னைப்போன்று) நீதிமுறை சிதையப் புறத்தே சூழ்ந்து ஆரவாரித்துத் தூற்றப்படும் பழிச் சொல்லுண்டாக (அதனைக் கேட்டு உயிர் தாங்கி) வாழ்தலைச் செய்யும் மன்னரும் உளராவாரோ? (நினது தீவினை யிருந்தவாறு ஐயோ) பாவம்!

கு :—மாயாசனகன் கூறிய தீ மொழிகளைக் கேட்டு, 'இவன் உண்மையான சனகன்தானோ?' என ஐயுற்ற சீதை உருவத்தாற் சிறிதும் வேற்றுமை காணாமையால் அவனைச் சனகன் எனவே எண்ணி, மானம் கெட நேர்ந்தும் தன் உயிரைத் துறவாத அவனது தீவினையை நினைந்து இரங்கினாள் என்பதாம். வழி-சந்ததி. அயில்-கூர்மை. கிடைத்தல்-எதிர்ப்படல். பார்த்திபர்-மன்னர். தீவினைப் பயனால் தந்தைக்கு நேர்ந்த இழிவினை யெண்ணி, 'ஒரு பாவம் இருந்தபடி இது' என்று இரங்கிக் கூறியவாறு. (66)

**7828.** நீயுநின் கிளையு மற்றிந்
நெடுநில வரைப்பு நேரே
மாயினு முறைமை குன்ற
வாழ்வெனோ வயிரத் திண்டோள்
ஆயிர நாமத் தாழி
யையனுக் கடிமை செய்வேன்
நாயினை நோக்கு வேனோ
நாண்டுறந் தாவி நச்சி.

'நீயும், நின்கிளையும், மற்று
இந்நெடுநில வரைப்பும், நேரே
மாயினும், முறைமை குன்ற
வாழ்வெனோ? — வயிரத் திண்தோள்

ஆயிர நாமத்து ஆழி
ஐயனுக்கு அடிமை செய்வேன் –
நாயினே நோக்கு வேனே,
நாண்துறந்து, ஆவி நச்சி ?

பொ :—நீயும் நின் சுற்றத்தாரும் இந்த நீண்ட நிலப்பரப்பாகிய இவ்வுலகில் வாழ்வாரும் (என் கண்காண) எதிரே மாய்ந்தொழியும் நிலை நேர்ந்தாலும் (அவர்களை வாழ்வித்தல் வேண்டி, எனக்குரிய) கற்பியல் முறையாகிய ஒழுக்கஞ் சிதைய உயிர் தாங்கி வாழ்வேனே ? வயிரம் போலும் திண்மை வாய்ந்த தோள்களையும் ஆயிரம் திருப் பெயர்களையும் சக்கரப் படையினையும் உடைய திருமாலின் அமிச மாகிய இராமபிரானுக்கு (அடித்தொண்டு செய்யும்) அடியவளாகிய யான், (என்னுயிரினும் சிறந்ததாகிய) நாணைத் துறந்து உயிரையே (இனிதென) விரும்பி (இழிந்த தன்மையினையுடைய) நாய் போன்ற வனாகிய இராவணனைக் கண்ணெடுத்தும் பார்ப்பேனே? (பார்க்க மாட்டேன்).

கு :—உயிரும் நாணமும் ஒருங்கு நிற்றலாற்ருத இடர்நிலை யேற்படின், உடம்பினை விட்டுப் பின்னரும் நீங்கும் இயல்பினதாகிய உயிரை நீத்து, உடம்பு உள்ள அளவும் நீங்காது பேணத்தக்கதாகிய நாணத்தைப் பேணிக் காத்தலே நற்குடியிற் பிறந்த மகளிர்க்குரிய இயல்பாதலின், அவ்வியல்பு சிதைய இனி உயிர் வாழேன் என்பாள், 'நாண் துறந்து ஆவி நச்சி நாயினை நோக்குவேனே' என்ருள். கழி காமுகனாகிய இராவணனது இழிவு தோன்ற அவனை நாய் எனக் குறித்தாள். நோக்குவேனே என்புழி ஓகாரம் எதிர்மறை. நச்சுதல்- விரும்புதல். (67)

**7829.** வரிசிலை யொருவ னல்லான்
மைந்தரென் மருங்கு வந்தார்
எரியிடை வீழ்ந்த விட்டி
லல்லரோ வரசுக் கேற்ற
அரியொடும் வாழ்ந்த பேடை
யங்கணத் தழுக்குத் தின்னும்
நரியொடும் வாழ்வ துண்டோ
நாயினுங் கடைப்பட் டோனே.

'வரிசிலை ஒருவன் அல்லால்,
மைந்தர் என்மருங்கு வந்தார்
எரியிடை வீழ்ந்த விட்டில்
அல்லரோ? அரசுக்கு ஏற்ற
அரியொடும் வாழ்ந்த பேடை,
அங்கணத்து அழுக்குத் தின்னும்
நரியொடும் வாழ்வது உண்டோ?—
நாயினும் கடைப்பட் டோனே!

பொ:—நாயைக் காட்டினும் இழிந்த நிலையில் வைத்து எண்ணத்தக்க கீழோனே! (நாண்) கட்டப்பட்ட விற்படையையுடைய ஒப்பற்றவனாகிய இராமபிரானையன்றி ஆடவர்கள் என்னருகில் வந்தோர் யாவராயினும் (சுடர்விட்டெரியும்) தீயில் வீழ்ந்த விட்டிற் பூச்சியினையொத்து இறந்தொழிவார்கள் அல்லரோ? (வன்மைமிக்க விலங்குகட்கெல்லாம்) அரசாதற்குரிய சிங்க ஏற்றுடனே கூடி வாழ்ந்த பெண் சிங்கமானது புழைக்கடையிலுள்ள அழுக்குடைய வற்றைத் தின்று உயிர் வாழும் நரியாகிய இழிந்த விலங்குடன் இசைந்து வாழ்வதென்பது எங்கேனும் நிகழ்வதுண்டோ?

கு:—'என் ஆருயிர் நாயகனாகிய இராமபிரானையன்றி வேறு ஆடவர் யாவராயினும் என்னை அணையும் கருத்துடன் என்னருகில் நெருங்க முயல்வராயின் அன்னோர் தீச்சுடரை யணுகிய விட்டிற் பூச்சியினைப் போன்று அப்பொழுதே இறந்தொழிவர்' எனச் சீதை தனது கற்பின் வன்மையினை விரித்துரைத்தது. 'என்னெதிர் எய்திற் றெல்லாம் விளக்கெதிர் வீழ்ந்த விட்டிற் பான்மைய வியக்கவேண்டா' (மாயாசன-27) எனத் தனது ஆற்றலை வியந்துரைத்த இராவணன் கேட்டு உள்ளந் திருந்தி உய்தி பெறுதல் வேண்டும் என்னும் அருள் நோக்கினால் என்க. 'அரியொடும் வாழ்ந்த பேடை அங்கணத்து அழுக்குத் தின்னும் நரியொடும் வாழ்வது உண்டோ' என்ற தொடர், நுவலா நுவற்சி யென்னும் ஒட்டணியமைய வந்ததாகும். 'உயர்வற வுயர்ந்த பெரியோனாகிய இராமபிரானுடன் கூடி வாழ்ந்த நற்பேறு டையவளாகிய யான், மிக மிக இழிந்த கீழோனாகிய இராவணனுடன் கூடி இருக்க இசைதல் ஒருபோதும் இல்லை' என்பது இத் தொடரால் அறிவுறுத்தப்பட்ட பொருளாகும். அரி-சிங்கம். பேடை-பெண். அங்கணம்-தூய்தல்லாத முற்றம்; புழைக்கடை. நரி-இழிந்தவிலங்கு. உண்டோ என்புழி ஓகாரம் எதிர்மறை. (68)

7830. அல்லையே யெந்தை யானு
யாகதா னலங்கல் வீரன்
வில்லையே வாழ்த்தி மீட்கின்
மீளுதி மீட்சி யென்ப
தில்லையே லிறந்து தீர்தி
யிதுவலா லியம்ப லாகாச்
சொல்லையே யுரைத்தா யென்னும்
பழிகொண்டா யென்னச் சொன்னாள்.

'அல்லையே எந்தை; ஆனுய்
ஆகதான்; அலங்கல் வீரன்
வில்லையே வாழ்த்தி, மீட்கின்
மீளுதி; மீட்சி என்பது
இல்லையேல் இறந்து தீர்தி;
இதுஅலால், இயம்பல் ஆகாச்
சொல்லையே உரைத்தாய்; என்றும்
பழிகொண்டாய்' என்னச் சொன்னாள்.

பொ :—(குணங்களால் இழிந்தோனாகிய நீ) என்னுடைய தந்தை யாகிய சனகன் அல்லை என்பது தெளிவு; (அன்றி) என் தந்தையே ஆயினும் ஆகுக, மாலையை யணிந்த வீரனாகிய இராமபிரானது விற் படையினையே வாழ்த்தி யிருந்து (அவன்) வந்து (சிறையினின்றும்) மீட்டால் மீளுக. அவ்வாறு மீட்டல் என்பது நிகழா தொழியுமாயின் இறந்தொழிவாயாக. செய்யத்தக்க இதனைச் செய்வதை விடுத்து (தந்தையாயினார் தம் புதல்வியர்க்குச்) சொல்லுதற்கு ஒண்ணாத (முறையற்ற) சொல்லையே கூறினாய்; (அதனால்) என்றும் நீங்காத பழியையே பெற்று விட்டாய்' எனச் சினந்து கூறினாள் (சீதை).

கு :—நிலத்தின் இயல்பினை அதன் கண் முளைத்த முளைகாட்டு வது போல ஒருவரது குலத்தின் இயல்பினை அவர் கூறும் வாய்ச் சொற்கள் நன்கு புலப்படுத்திவிடும் ஆதலின், மாயாசனகன் கூறிய வார்த்தைகளைக் கேட்ட சீதை, அப்பழியுரைகளைப் பகர்ந்தவன் தன் னுடைய தந்தையாகிய சனகன் அல்லன் என்பதனை உணர்ந்து 'அல்லையே எந்தை' என்றாள். அவ்வாறு உண்மையுணர்ந்தன ளாயினும் அவன் உருவத்தால் எத்தகைய வேற்றுமையுமின்றித் தந்தையாகிய சனகனாகவே காணப்படுதலால் அவனைத் தந்தை யல்லன் என்று உறுதியாக மறுத்தற்கியலாதவளாய் ஒருகால் அவன் தன் தந்தையாகிய சனகனாயிருப்பின் அவன் தன் பிழையுணர்ந்து திருந்தும் வண்ணம் இனிச் செய்ய வேண்டியது இதுவென அறி

வுறுத்துவாள் ‘எந்தையேயாஞயாகதான்; அலங்கல்வீரன் வில்லேயே வாழ்த்தி (அவன்) மீட்கின் மீளுதி; மீட்சி என்பது இல்லேயேல் இறந்துதீர்தி’ என்ருள். ‘எந்தை அல்லேயே, எந்தையாஞயாக தான்’ என எந்தை என்பது இடைநிலே விளக்காய் ஈரிடத்தும் சென்றியைந்தது. அல்லேயே என்புழி ஏகாரம் தேற்றப் பொருளில் வந்தது. தான், அசை. எனக்குத் தந்தையென இங்கு வந்து நிற்கும் நீ அரக்கரது பிணிப்பினின்றும் மீள எண்ணிஞயாயின் அதற்குச் சாதனமாக நின்ஞற் செய்யத்தக்கது. நினக்கு ஒட்டா ராகிய அரக்கர் பின் சென்று அவரைத் தொழுது வாழ்வதன்று; அரக்கரை வேருடன் களேயவல்ல பெருவீரஞகிய இராமனது வெற்றி மிக்க விற்படையை வாழ்த்துதலே என்பாள், ‘அலங்கல் வீரன் வில்லேயே வாழ்த்தி மீளுதி’ என்ருள். பெருவீரஞகிய இராமன் இங்கு வந்து மீட்டல் என்பது ஒருகால் நிகழாதொழியின் அதன்பின் நின்ஞற் செய்யத்தக்கது நின்னுயிரைத் துறத்தல் ஒன்றே என்பாள், ‘மீட்சியென்பது இல்லேயேல் இறந்து தீர்தி’ என்ருள். ‘வில்லேயே வாழ்த்தி’ என்புழி ஏகாரம் பிரிநிலேக் கண் வந்தது; ஒட்டாராகிய அரக்கரை வாழ்த்தி உயிரோம்புதல் மானமுடையார் செயலன்று எனக்குறித்தவாறு. “ஒட்டார்பின் சென்ருெருவன் வாழ்தலின் அந்நிலேயே, கெட்டா னெனப்படுதல் நன்று’ (திருக்குறள்-967) என்பது இங்கு ஒப்புநோக்குதற்குரியதாகும். இது அலால் - இது வன்றி; இவ்வாறு செய்வதை விடுத்து, இயம்பலாகாச் சொல்-குடிப் பிறந்தார் பிறர் கூற்ருகவேனும் தம் வாயிஞல் வெளியிடுதற்குத் தகாத தீமொழி. நீ கூறிய இத்தீச் சொற்களால் நினக்கும் நின் குலத்திற்கும் என்றும் நீங்காத பெரும் பழியைத் தேடிக்கொண்டாய் என்பாள், ‘என்றும் பழிகொண்டாய்’ என்ருள். (69)

### அந்நிலேயில் இராவணன் சீதையை அச்சுறுத்தும் பொருட்டு மாயாசனகனேக் கொல்லுதற்கு வாளே உருவுதல்

**7831.** வன்றிற லரக்க னன்ன
வாசக வனத்துக் கொள்ளா
நின்றது நிற்க மேன்மே
னிகழ்ந்தவா நிகழ்க நின்முன்
நின்றவ னல்லன் போலாஞ்
சனகனிக் கணத்தி னின்முன்
கொன்றுயிர் குடிப்பெ னென்ஞச்
சுரிகைவா ளுருவிக் கொண்டான்.

வன்திறல் அரக்கன் அன்ன
வாசகம் மனத்துக் கொள்ளா,
'நின்றது நிற்க; மேன்மேல்
நிகந்தவா நிகழ்க; நின்முன்
நின்றவன் அல்லன் போலாம்
சனகன்? இக்கணத்தின் நின்முன்
கொன்று உயிர்குடிப்பென்' என்ரு,
சுரிகைவாள் உருவிக் கொண்டான்.

பொ :—கொடுவலி படைத்த அரக்கனுகிய இராவணன், (சீதை சொல்லிய) அத்தன்மைத்தாகிய மொழியினை மனத்துக் கொண்டு, (நின்மனத்தில்) நின்றதாகிய கோட்பாடு (நீ கருதியவாறே) நிலை பெறினும் நிலைபெறுக. இனி (நின் மனத்துக் கருதிய வண்ணமே) மேலும் மேலும் (நும்மவர்க்கு வெற்றி விளைக்கும்) செயல்கள் நடக்கிறபடி நடக்கட்டும். நினக்கு முன்னே நின்றவனுகிய இவன் (நின் தந்தையாகிய) சனகன் அல்லன்போலும்? (இவனை) இதே நேரத்தில் நின்கண் முன்னே (வெட்டிக்) கொன்று (இவனது) உயிரைப் பருகுவேன்' என்று சொல்லி உடைவாளை உறையினின்றும் உருவிக் (கையிற்) கொண்டான்.

கு :—அரக்கன், உயிர்குடிப்பென் என்ரு, சுரிகைவாள் உருவிக் கொண்டான் என முடியும். அரக்கன் என்றது அரக்கர்குல வேந்தனுகிய இராவணனை, அன்ன வாசகம் என்றது, மாயாசனகனை ஐயுற்று, 'நீ என் தந்தை அல்லை' எனச் சீதை வெகுண்டு கூறிய மொழி. நின்றது - (சீதையின் உள்ளத்தில் உறுதியாக) நிலைபெற்ற கோட்பாடு. சீதை இவ்வாறு மாயாசனகனை ஐயுற்று ஆராய்ந்து துணிதற்கு இடந்தராத நிலையில் அவளை வஞ்சனையால் அச்சுறுத்தித் தன் விருப்பத்தினை விரைந்து நிறைவேற்றிக் கொள்ளும் உபாயத்தினை எண்ணிய இராவணன் மாயாசனகனுகிய அவனை அவள் உண்மைச் சனகன் என்று நம்பும்படி அவள் கண்முன்னே கொன்று உயிர் குடிப்பதாகக் கூறி உடைவாளை உருவிக் கையிற் கொண்டான் என்பதாம். சுரிகை – உடைவாள். சுரிகைவாள், இருபெயரொட்டு. உருவுதல் - உறையினின்றும் எடுத்தல். (70)

## 'உன்னால் ஒன்றும் இயலாது, முடிவில் இராமனது அம்பினால் இறந்தொழிவாய்' எனச் சீதை இராவணனை நோக்கி அஞ்சாது கூறுதல்

**7832.** என்னையுங் கொல்லா யின்னே
யிவனையுங் கொல்லா யின்னும்
உன்னையுங் கொல்லாய் மற்றிவ்
வுலகையுங் கொல்லா யானோ
இன்னுயிர் நீங்கி யென்றுங்
கெடாப்புக ழெய்து கின்றேன்
பின்னையு மெங்கோ னம்பிற்
கிளையொடும் பிழையா யென்றாள்.

'என்னையும் கொல்லாய்; இன்னே
இவனையும் கொல்லாய்; இன்னும்
உன்னையும் கொல்லாய்; மற்று
இவ்உலகையும் கொல்லாய்; யானோ
இன்உயிர் நீங்கி, என்றும்
கெடாப் புகழ் எய்துகின்றேன்;
பின்னையும் எம்கோன் அம்பின்
கிளையொடும் பிழையாய்' என்றாள்.

பொ :—நீ என்னையும் கொல்லப் போவதில்லை; இப்பொழுதே இவனையும் கொல்லப் போவதில்லை; நீயே உன்னைக் கொன்று இறந்தொழியப் போவதுமில்லை; இந்த உலகையும் அழிக்கப் போவதில்லை. யானோ (நின்னால் கொல்லப்பட்டாலும்) எனது இனிய உயிரைத் துறந்து என்றும் அழியாத புகழைப் பெறப்போகின்றேன். (யான் இறந்த) பின்னும் என் தலைவனுடைய அம்பினால் நின் சுற்றத்தொடும் (இறந்தொழிதலில்) தப்பமாட்டாய் என (இராவணனை நோக்கி)க் கூறினாள் (சீதை).

கு :—நெறிகடந்தொழுகும் தூர்த்தனாகிய நீ இவனைக் கொல்வதாக உடைவாளையுருவிக் கொண்டு அச்சுறுத்தி நிற்றல் வஞ்சனைச் சூழ்ச்சியேயன்றி உண்மையன்று எனவும் ஒருகால் யான் நின்னாற் கொல்லப்பட்டிறந்தாலும் நீ நின் சுற்றத்துடன் என் நாயகனது அம்புக்கு இலக்காதல் உறுதி எனவும் சீதை இராவணனுக்கு அறிவுறுத்தியவாறு. (71)

## மாயாசனகனைக் கொல்லச் சென்ற இராவணனை மகோதரன் தடுத்தல்

7833. இரந்தனன் வேண்டிற் றல்லா
லிவன்பிழை யிழைத்த துண்டோ
புரந்தரன் செல்வத் தையா
கொல்கையோர் பொருளிற் றேதான்
பரந்தவெம் பகையை வென்று
னின்வழிப் படரு நங்கை
அரந்தைய ளாகு மன்றே
தந்தையை நலிவ தாயின்.

'இரந்தனன் வேண்டிற்று அல்லால்,
இவன்பிழை இழைத்தது உண்டோ?
புரந்தரன் செல்வத்து ஐயா,
கொல்கை ஓர் பொருளிற்றேதான்?
பரந்த வெம்பகையை வென்றால்,
நின்வழிப் படரும் நங்கை;
அரந்தையள் ஆகும் அன்றே,
தந்தையை நலிவதாயின்?

பொ:—இந்திரப் பெருஞ் செல்வத்தையுடைய தலைவனே, சனகனாகிய இவன் (உன் கருத்துக்கு இணங்கும்படி தன் மகளை) இரந்து வேண்டிக் கொண்டதன்றி (நினக்குச்) செய்த குற்றம் ஏதேனும் உளதோ? (குற்றமற்ற இவனைக்) கொல்லுதல் ஒரு பயனுடைய செயலாகுமோ? (இலங்கையை வளைத்துப்) பரவியுள்ள கொடுமையுடைய பகையினை நீ வெல்வாயாயின் (சீதையாகிய) நங்கை நின் விருப்பத்தின்படி நடப்பவளாவாள். (இவளைப் பெற்ற) தந்தையாகிய இவனை வருத்திக் கொலை புரிவாயாயின் (இவள் நீங்காத) துன்பத்துட்பட்டு வருந்துவாள் அல்லளோ?

கு:—'இலங்கையை முற்றுகை யிட்டுள்ள பகைவரொடு பொருது நீ வெற்றி பெறுவாயாயின் சீதையாகிய இப் பெண் நின் கருத்தின் வழி நடப்பாள். குற்றமற்ற இந்தச் சனகனை வெகுண்டு கொன்று விடுவாயானால் நின்னால் காதலிக்கப்பட்ட இவள் தன் தந்தையை யிழந்ததனை நினைந்து தன் வாழ்நாள் முழுவதும் மாறாத் துயரத்திற்பட்டு வருந்துவாள். ஆகவே இந்தச் சனகனைக் கொல்லுதல் தவிர்க' என்று கூறி மகோதரன் இராவணனைத் தடுத்தான் என்பதாம். இரந்தனன் – இரந்து; முற்றெச்சம். இவன்

என்றது, மாயாசனகனை. புரந்தரன் செல்வம்-இந்திரச் செல்வம்; என்றது, இந்திரனுக்குரிய வானுலக ஆட்சியை. ஓர் பொருளிற்றே- ஒரு பயனுடையதோ? பயனற்றது என்பதாம். ஓகாரம், எதிர்மறை. பரந்த வெம்பகை என்றது, இலங்கையில் எழுபது வெள்ளம் வானர சேனைகளோடு வந்து தங்கிய பகைவனாகிய இராமனை. நங்கை என்றது சீதையை. 'பரந்த வெம்பகையை வென்றால் நங்கை நின் வழிப் படரும்; தந்தையை நலிவதாயின் அரந்தையள் ஆகுமன்றே' என இயைக்க. படர்தல்-செல்லுதல்; விரும்பிய வண்ணம் ஒழுகுதல். நலிதல்-வருத்துதல். அரந்தை-துன்பம்.

இச் செய்யுளின்பின் 71-ஆம் எண்ணுள்ள சுவடியில்

7833 (a) மங்கையைக் குலத்து ளானைத்
தவத்தியை முனிந்து வாளாற்
சங்கையொன் றின்றிக் கொன்றான்
குலத்துக்கே தக்கா னென்று
கங்கையஞ் சென்னி யானும்
கண்ணனுங் கமலத் தோனும்
செங்கைகள் கொட்டி யுன்னைச்
சிரிப்பராற் சிறுமை யென்னா:

என்றதொரு மிகைப் பாடல் காணப்படுகிறது. (72)

அந்நிலையில், கும்பகருணன் இறந்தது கண்டு வானரரும் வானவரும் ஆர்த்த பேரொலி, இராவணன் செவியிற்பட, அவன் சிந்தித்து வருந்துதல்

**7834.** என்றவன் விலக்க மீண்டாண்
டிருந்ததோ ரிறுதி யின்கட்
குன்றென நீண்ட கும்ப
கருணனை யிராமன் கொல்ல
வன்றிறற் குரங்கின் றானை
வானுற வார்த்த வோசை
சென்றன செவியி னூடு
தேவர்க ளார்ப்புஞ் செல்ல.

என்று அவன்விலக்க, மீண்டு,
ஆண்டு இருந்தது ஓர் இறுதியின்கண்,
குன்று என நீண்ட
கும்பகருணனை இராமன் கொல்ல,

வன்திறல் குரங்கின் தானை
வான்உற ஆர்த்த ஓசை,
சென்றன செவியினூடு,
தேவர்கள் ஆர்ப்பும் செல்ல.

பொ :—என்று சொல்லி அம் மகோதரன் தடுத்து நிறுத்த (மாயா சனகனைக் கொல்லாது இராவணன்) மீண்டு அங்கு ஆசனத்தில் அமர்ந்திருந்த நேரத்தில், மலைபோன்று உயர்ந்த நெடிய உருவத்தனாகிய கும்பகருணனை (ப் போர்க்களத்தில்) இராமன் கொன்றதனால் மிக்க வலிமையுடைய வானர சேனை ஆகாயத்தை யெட்டும்படி ஆரவாரித்த பேரொலிகள் தேவர்களுடைய ஆரவாரமும் உடன் செல்ல (இராவணனுடைய) செவிகளினுள்ளே சென்று புக்கன.

கு :—குரங்கின் தானை வானுற ஆர்த்த ஓசை தேவர்கள் ஆர்ப்பும் செல்லச் செவியினூடு சென்றன என இயையும். கொடியோனாகிய இராவணன் மகோதரன் துணைபெற்று வஞ்சனையாற் சீதையை அச்சுறுத்தி இடர் விளைத்துத் தன் விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்ள முந்தும் இந் நிலையில் அவனுடைய அருமைத் தம்பியாகிய கும்பகருணன் இராமனாற் கொல்லப்பட்டுப் போர்க்களத்தில் வீழ்ந்தானாக அது கண்ட வானர சேனைகள் வானின் உச்சிவரை முட்டும்படி ஆர்ப்பரித்தெழுப்பிய ஆரவார ஒலிகள் தேவர்களது ஆரவாரத்துடன் இராவணனுடைய செவிகளிற் சென்று புக்கன என்றவாறு. கற்பினுக்கு அணிகலமாகிய சீதையை அழக் கண்ட இராவணனது வஞ்சனைச் சூழ்ச்சி முடிவதற்கு முன்னே அச் சூழ்ச்சியை மேற்கொண்ட அவனே அழுது புலம்பும்படி அவனது தீவினையாகிய ஊழ் தானே முற்படச் சூழ்ந்து செயல் விளைத்த திறத்தினைக் கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர் இங்கு நாடக அமைப்பில் வைத்து விளக்கும் முறையில் சுவைகளை வேறு படுத்திக் காட்டிய திறம் உணர்ந்து பாராட்டத் தக்கதாகும். ‘ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான் முந்துறும்’ (திருக்குறள்–380), ‘மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின், அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு’ (திருக்குறள்-204) என வரும் தெய்வப் புலவர் வாய்மொழிகள் இங்கு நினைக்கத்தக்கன வாகும். (73)

**7835** உகுந்திற லமரர் நாடும்
வானர யூகத் தோரும்
மிகுந்திறம் வேறொன் றில்லா
விருவர் நாணொலியும் விஞ்சத்

தகுந்திற னினைந்தே னெம்பிக்
கமரிடைத் தனிமைப் பாடு
புகுந்துள துண்டென் றுள்ளம்
பொருமல்வந் துற்ற போழ்தின்.

'உகும் திறல் அமரர்
நாடும், வானர யூகத்தோரும்,
மிகும்திறம் வேறொன்று இல்லா
இருவர் நாண்ஒலியும் விஞ்ச,
தகும் திறன் நினைந்தேன்;
எம்பிக்கு அமரிடைத் தனிமைப்பாடு
புகுந்துளது உண்டு' என்று
உள்ளம் பொருமல்வந்து உற்றபோழ்தின்.

பொ:—'வலியழியுந் தன்மையினையுடைய தேவர்களாகிய வானுலகத்தவரும் வானர சேனையிலுள்ள வீரர்களும் (ஒலியால்) மேம்படுந் தன்மை பிறிதொன்றற்கில்லாத (மனிதர்) இருவருடைய வில் நாணின் ஒலியும் (இப்பொழுது ஆரவாரத்தால்) மேம்பட்டுத் தோன்றுதற்குரிய காரணத்தைக் கூர்ந்து எண்ணினேன். என்னுடைய தம்பியாகிய கும்பகருணனுக்குப் போர்க்களத்திலே (தன் சேனைகளையெல்லாம் இழந்து) தான் மட்டும் தனித்து நிற்கும் இடர் நிலை ஏற்பட்டுள்ளது என்பது தெளிவு' என்று (இராவணனது) உள்ளத்தில் துன்பம் வந்து பொருந்திய பொழுதில்.

கு:—இச் செய்யுள் குளகம். 'பொருமல் வந்துற்ற போழ்தில், தூதர் எய்தி, 'உம்பி இறந்தனன்; இராமன் கொன்றனன்' என்றார்', என அடுத்த செய்யுளொடு முடியும். பொருமல்-துன்புறல். உகுந் திறல் அமரர் என்பதனைத் திறல் உகும் அமரர் என மாற்றுக. இருவர் என்றது இராம இலக்குவர்களை. விஞ்சுதல்-மேம்படுதல். எம்பி-என் தம்பி; என்றது, இராவணன் தன் தம்பியாகிய கும்ப கருணனை. தனிமைப்பாடு-தான் ஒன்றியாய்த் தனித்து நிற்கும் நிலை 'புகுந்துளது' என்ற அளவிலமையாது 'உண்டு' என மேலும் கூறியது தெளிவு பற்றியதாகும். (74)

கும்பகருணன் இறந்தான் எனத் தூதுவர் இராவணனையணுகி மெல்லத் தெரிவிக்கக் கேட்ட இராவணன் பெருந் துயரால் நிலத்தில் வீழ்ந்து அழுது அரற்றுதல்

**7836.** புறந்தரு சேனை முந்நீ
ரிருஞ்சிறை போக்கிப் போதப்
பறந்தன ரனைய தூதர்
செவிமருங் கெய்திப் பையத்
திறந்திற மாக நின்ற
கவிப்பெருங் கடலைச் சிந்தி
இறந்தன னும்பி யம்பிற்
கொன்றன னிராம னென்றார்.

புறந்தரு சேனை முந்நீர்
அருஞ் சிறைபோக்கி, போதப்
பறந்தனர் அனைய தூதர்
செவிமருங்கி எய்தி, பைய,
'திறம்திறம் ஆக நின்ற
கவிப் பெருங்கடலைச் சிந்தி,
இறந்தனன் உம்பி; அம்பின்
கொன்றனன் இராமன்' என்றார்.

பொ :—'(புறத்தே) பாதுகாத்து நிற்கும் சேனைக் கடலாகிய கடத்தற்கரிய காவலைக் கடந்து விரைவாகப் பறந்து வந்தவர்களைப் போன்று (விரைந்து ஓடி) வந்த தூதர்கள், (இராவணனை அடைந்து) செவியினருகே சென்று, 'உன் தம்பியாகிய கும்பகருணன் தொகுதி தொகுதியாக (அணிவகுத்து) நின்ற வானரசேனையாகிய பெரிய கடலைச் சிதைத்து இறந்து போயினன்; (அவனை) இராமன் அம்பினாற்கொன்று போக்கினன்' என்று (அங்குள்ளார் யாவருக்கும் புலப் படாத நிலையில்) மெல்லச் சொன்னார்கள்.

கு :—புறந்தருதல் - பாதுகாத்தல். சேனை முந்நீர் — சேனையாகிய கடல். உருவகம். முந்நீர் என்பது கடலுக்குப் பெயர்; மழை நீர் ஆற்று நீர் ஊற்றுநீர் என்னும் முந்நீரும் உடைமைபற்றி முந்நீர் எனப்பட்ட தென்றும், ஆக்கல் காத்தல் அழித்தல் என்னும் முத் தொழில்களாகிய நீர்மை – தன்மை யுடைமைபற்றி முந்நீர் எனப் பட்டதென்றும் இப்பெயர்க்கு இருவேறு காரணம் கூறுவர். சிறை – காவல். போக்குதல் – கடத்தல். போத – விரைவாக; 'உய்ய வேண்டில்லெழு போத நெஞ்சே' என வருந்தேவாரத்து இச்சொல் இப்பொருளிற் பயின்றுள்ளமை காணலாம். திறந்திற

மாக - தொகுதி தொகுதியாக ; கூட்டங் கூட்டமாக. நிற்றல் - அணி வகுத்து நிற்றல். கவி - குரங்கு. சிந்துதல் - அழித்தல். உம்பி - உன் தம்பி ; என்றது, இராவணன் தம்பியாகிய கும்பகருணனை. (75)

7837. ஊரொடும் பொருந்தித் தோன்று
மொளியவ னென்ன வொண்பொற்
றாரொடும் புனைந்த மௌலி
தரையொடும் பொருந்தத் தள்ளிப்
பாரொடும் பொருந்தி நின்ற
மராமரம் பணைக ளோடும்
வேரொடும் பறிந்து மண்மேல்
வீழ்வதே போல வீழ்ந்தான்.

ஊரொடும் பொருந்தித் தோன்றும்
ஒளியவன் என்ன, ஒண்பொன்
தாரொடும் புனைந்த மௌலி
தரையொடும் பொருந்த, தள்ளி,
பாரொடும் பொருந்தி நின்ற
மராமரம், பணைகளோடும்
வேரொடும் பறிந்து, மண்மேல்
வீழ்வதே போல, வீழ்ந்தான்.

பொ :—ஊர்கோளுடனே பொருந்தி விளங்கும் ஒளிமிக்க சூரியனைப்போல ஒளியுடைய பொன்மாலைகளுடன் அணியப் பெற்ற மணிமுடியானது பூமியிலே பொருந்துமாறு தள்ளப்பட்டு (வீழ), நிலத்தில் நிலைபெற்று (வளர்ந்து) நின்ற மராமரமானது வேரொடும் பறிக்கப் பட்டுக் கிளைகளோடும் மண்ணில் வீழ்வதைப் போன்று (இராவணன்) கீழே விழுந்தான்.

கு :—ஊர் - ஊர்கோள் ; ஞாயிறு திங்களைச் சூழ்ந்து தோன்றும் ஒளிவட்டம். இது பரிவேடம் எனவும் வழங்கும். ஒளியவன் என்றது, மாயிரு ஞாலத்தின் இருள் நீக்கவல்ல ஒளியுருவினனாகிய சூரியனை. பொன் மாலைகளாற் சூழப்பெற்ற இராவணனது மணி முடிக்குப் பரிவேடத்தாற் சூழப்பட்ட ஞாயிறு உவமையாயிற்று. பத்துத் தலைகளும் இருபது கைகளும் தரையிற் படியத் தன்னுணர் வழிந்து நிலத்தில் வீழ்ந்த இராவணனுக்கு, வேர்பறிந்து கிளைகள் பலவற்றுடன் மண்மிசை வீழ்ந்து கிடக்கும் மராமரத்தை உவமை கூறினர் ஆசிரியர். (76)

7838. பிறிவெனும் பீழை தாங்கள்
பிறந்தநாட் டொடங்கி யென்றும்
உறுவதொன் றின்றி யாவி
யொன்றென நினைந்து நின்றான்
எறிவருஞ் செருவிற் றம்பி
தன்பொருட் டிறந்தா னென்ன
அறிவழிந் தவச னாகி
யரற்றினா னண்ட முற்ற.

பிறிவுஎனும் பீழை தாங்கள்
பிறந்தநாள் தொடங்கி என்றும்
உறுவது ஒன்றுஇன்றி, ஆவி
ஒன்றுஎன நினைந்து நின்றான்,
எறிவரும் செருவில் தம்பி
தன்பொருட்டு இறந்தான் என்ன
அறிவு அழிந்து, அவசன்ஆகி,
அரற்றினான், அண்டம் முற்ற.

பொ :—தாங்கள் பிறந்த நாள் தொட்டு (உடன் பிறந்தாராகிய தம்மைப்) பிரிவு என்னும் துன்பம் எக்காலத்தும் உற்று வருத்தாத வாறு (இருவர்க்கும்) உயிர் ஒன்றே யென்றெண்ணி (அன்பினால் ஒன்றி) நின்றவனாகிய இராவணன், (படைக்கலங்களை) வீசித் தாக்குதல் பொருந்திய போரிலே (தமையனாகிய) தன் பொருட்டுத் தம்பி கும்பகருணன் தன் உயிரைத் துறந்தான் என்று (தூதர்) சொல்ல(க் கேட்டுத்) தன் உணர்விழந்து தன்வசமற்றவனாய்(த் தன் அரற்றொலி) அண்டமுகடளவும் சென்று பொருந்தும்படி (வாய்விட்டுக்) கதறிப் புலம்புவானாயினான்.

கு :—பிறிவு - பிரிவு. எதுகை நோக்கித் திரிந்தது. பீழை - துன்பம். தம்பியாகிய கும்பகருணனைப் பிறந்தநாள் தொட்டுப் பிரிந்தறியாத பெருங்கேண்மையினனாய்த் தம் இருவர்க்கும் உயிர் ஒன்றே யென எண்ணி வாழ்ந்த இராவணன், தம்பி தன் பொருட்டுப் போரில் உயிர் கொடுத்தான் எனத் தூதர் சொல்லக் கேட்டு உணர் வழிந்து செய்வதறியாது தன் அரற்றொலி அண்டத்தின் உச்சிவரை செல்ல வாய்விட்டுக் கதறினான் என்பதாம். மேல்வரும் ஒன்பது செய்யுட்கள் இராவணன் அரற்றுரைகளாக அமைந்தன. (77)

7839. தம்பியோ வானவராந்
★ தாமரையின் காடுழக்குந்
தும்பியோ நான்முகத்தோன்
சேய்மதலை தோன்றலோ
நம்பியோ விந்திரனை
நாமப் பொறிதுடைத்த
எம்பியோ யானுன்னை
யிவ்வுரையுங் கேட்டேனே.

'தம்பியோ! வானவர் ஆம்
தாமரையின் காடு உழக்கும்
தும்பியோ! நான்முகத்தோன்
சேய்மதலை தோன்றலோ!
நம்பியோ! இந்திரனை
நாமப் பொறி துடைத்த
எம்பியோ! யான் உன்னை
இவ் உரையும் கேட்டேனே!

பொ :—தம்பியே! தேவர்களாகிய தாமரைக் காட்டை மிதித்து வருத்தும் மதயானையே! நான்கு முகங்களையுடையவனாகிய பிரமனுடைய புதல்வனுக்கு மகனுக்கு மகனாக(ப் பேரனாக)த் தோன்றியவனே! ஆடவரிற் சிறந்தோனே! (வானுலக வேந்தனாகிய) இந்திரனைப் புகழுக்குக் காரணமாகிய நல்வினைப் பயனைச் சுவடறக் களைந்து வென்ற என் அருமைத் தம்பியே! (நின் தமையனாகிய) யான் உன்னைக் குறித்து இத்தகைய சொல்லையும் கேட்கும் (இழி) நிலையேன் ஆயினேனே!

கு :—தமையனாகிய என்றால் தம்பி என அன்புடன் அழைக்கத் தக்க நற்பண்புகள் யாவும் ஒருங்கு வாய்க்கப் பெற்றவன் கும்பகருணனாகிய நீ ஒருவனே என்பான் 'தம்பியோ' என அழைத்தான். மென்மையும் பொலிவும் வாய்ந்த வானவர்களைத் தாமரைக் காடாகவும் அவர்களைப் போரில் மிதித்து வருத்தும் பேராற்றலும் ஆண்மையும் உடைய கும்பகருணனை யானையாகவும் உருவகஞ் செய்தவாறு. தும்பி-யானை. உழக்குதல்-மிதித்துச் சிதைத்தல். தம்பியோ, தும்பியோ, தோன்றலோ, நம்பியோ, எம்பியோ என்புழி ஓகாரம் புலம்பலில் வந்த விளியுருபு. நாமம்-புகழ். பொறி-நல்வினைப்பயன். 'பொறியின்மையார்க்கும் பழியன்று' (திருக்குறள்–618) என்புழி இச் சொல் இப் பொருளதாதலறிக. துடைத்தல்-இருந்த இடந் தெரியாதவாறு அறவே நீக்குதல். இந்திரனை என்னும் இரண்டாம்

வேற்றுமை 'நாமப் பொறி துடைத்த' என்ற தொடரிலுள்ள 'துடைத்த' என்னும் வினையைக்கொண்டு முடிந்தது. இவ்வுரை என்றது, தேவர்களையெல்லாம் வென்றடக்கிய பெரு வீரனாகிய கும்ப கருணன் இராமன் என்னும் ஒரு மனிதனாற் கொல்லப்பட்டான் என்னும் இவ் வசை மொழியை. ஆருயிர்த் தம்பியாகிய நீ என் பொருட்டுப் போரில் இறந்தாய் என்னும் இத் துன்ப மொழியினையும் செவி கொடுத்துக் கேட்கும் நிலையில் இதுகாறும் உயிர் தாங்கி யிருக்கும் தீவினையாளனாயினேன் என்பான், 'எம்பியே யானுன்னை இவ்வுரையும் கேட்டேனோ' எனப் புலம்பினான் இராவணன். (78)

7840. மின்னிலைய வேலோனே
யானுன் விழிகாணேன்
நின்னிலையா தென்னே
னுயிர்பேணி நிற்கின்றேன்
உன்னிலைமை யீதாயி
னோடைக் களிறுந்திப்
பொன்னுலக மீளப்
புகாரோ புரந்தரனார்.

'மின் இலைய வேலோனே!
யான் உன் விழிகாணேன்,
நின்நிலை யாது என்னேன்,
உயிர்பேணி நிற்கின்றேன்;
உன் நிலைமை ஈது
ஆயின் ஓடைக்களிறு உந்திப்
பொன்னுலகம் மீளப்
புகாரோ, புரந்தரனார்?

பொ:—ஒளி தங்கிய இலைத்தொழி லமைந்த வேற்படையை யுடையோனே! யான் (நீ மாற்றாரொடு போர் புரியும் நிலையில்) நின் கண்களில் தோன்றும் வீரக் குறிப்பினை (உடனிருந்து காணும் பேறு பெற்றிலேன். (என்னையின்றித் தனித்துச் சென்ற) நின்னுடைய (படைகளின்) நிலைமை எத்தன்மையதென வினவி யறிந்தே னல்லேன். (நீ என் பொருட்டுப் பொருது இறந்தாய் எனக் கேட்ட பொழுதே உயிர் துறவாது இன்னும்) எனது உயிரை இனிதெனப் பேணி நிற்கின்றேன். (எனக்குத் துணையாகிய) உன்னுடைய நிலைமை இதுவாகுமானால் (முன்னர் நினக்குத் தோல்வியுற்று ஓடிய)

இந்திரனார் நெற்றிப் பட்டம் அணிந்த ஐராவதம் என்னும் யானையை ஏறி நடத்திக்கொண்டு பொன்மயமான சுவர்க்க வுலகத்தில் (அச்ச மின்றி) மீளவும் சென்று புகுவாரல்லரோ.

கு :—'என் ஆருயிர்த் தம்பியாகிய நீ என் பகைவரைச் சினந்து கடும் போர் புரியும் நிலையில் உன்னுடனிருந்து உன் கண்களின் வழியே வெளிப்பட்ட வீரக் குறிப்பினைக் கண்டு மகிழ்ந்தும் மாற்றாரை யழித்தற்கு வேண்டும் படை முதலிய சாதனங்களை உடனுக்குடன் தாழாது கொடுத்தும் என் கடமையினைக் கருத்துடன் நிறைவேற்றாத யான், நீ என் பொருட்டு இறந்தொழிந்தாய் என அறிந்த பின்னரும் இறவாது உயிர் தாங்கி யிருக்கின்றேன். யான் ஆருயிர்த் துணைவனாகிய உன்னை யிழந்து தனியனாய் வலியழிந்துள்ள இந் நிலையில் நம் பகைவனாகிய இந்திரன், ஐராவதம் என்னும் தன் பட்டத்து யானையை ஏறிச் செலுத்திக்கொண்டு பொன்னுலகில் அச்சமின்றிப் புகுந்து விடுவானல்லவா ?' என இராவணன், தன் தம்பி கும்பகருணனை யிழந்தமையால் தனக்குளவாகிய தாழ்வுகளையும் தன் பகைவனாகிய இந்திரனுக் குளதாகிய அச்சமற்ற தன்மையினையும் கூறி அரற்றினான் என்பதாம். ஓடை - முகபடாம். புரந்தரன் - இந்திரன். ஆர் விகுதி இழித்தற் பொருளில் வந்தது. (79)

**7841.** வன்னெஞ்சி னென்னை நீ
நீத்துப்போய் வானடைந்தால்
இன்னஞ் சிலரோ
டொருவயிற்றின் யார்பிறப்பார்
மின்னஞ்சும் வேலோய்
விழியஞ்சி வாழ்கின்றார்
தந்நெஞ்சந் தாமே
தடவாரோ தானவர்கள்.

'வல்நெஞ்சின் என்னை நீ
நீத்துப்போய், வான் அடைந்தால்,
இன்னம் சிலரோடு ஒரு
வயிற்றின் யார் பிறப்பார் ?
மின் அஞ்சும் வேலோய் !
விழி அஞ்சி வாழ்கின்றார்,
தம் நெஞ்சம் தாமே
தடவாரோ, தானவர்கள் ?

பொ :—மின்னலும் (ஒளி மழுங்கி) அஞ்சுமாறு ஒளி விட்டு விளங்கும் வேற்படையை யுடையவனே! (உடன் பிறப்பாளஞகிய) நீயே (கற்போன்ற) வலிய நெஞ்சினையுடையவஞகிய என்னைக் கை விட்டுச் சென்று வானுலகத்தை அடைந்தனையாயின் இனியும் சிலருடனே ஒருவயிற்றிற் பிறத்தலை யார்தான் விரும்புவார்கள்? நின் கண்ணெதிர் நிற்கலாற்ருது அஞ்சி மறைந்து வாழும் அசுரர்கள் (நீ இறந்த செய்தியை அறிந்தனராயின் என்றும் நடுங்குதலையுடைய) தம்முடைய நெஞ்சத்தைத் (தாமே) தடவிக் கொடுத்து (அச்சம் நீங்கி)த் துணிவு பெறுவார்கள் அல்லரோ?

கு :—உடன்பிறந்த அருமைத் தம்பியாகிய உன்னை யிழந்தும் உயிர்தாங்கி யிருத்தற்குக் காரணமாகிய வலிய நெஞ்சினையுடையேன் யான் என்பான் ‘வன்னெஞ்சின் என்னை’ என்ருன். இனி, ‘என்னை வன்னெஞ்சின் நீ நீத்து’ என இயைத்து, ‘நின் தமையஞகிய என்னைக் கடிய நெஞ்ச முடைமையால் நீ கைவிட்டுச் சென்று’ எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். அல்லற் காலத்தும் என்னுடன் பிரிவின்றி வாழ்ந்த பேரன்புடைய தம்பியாகிய நீயே நின் தமைய ஞகிய என்னை இவ்வாறு தனித்து வருந்தும்படி கைவிட்டுச் செல்வா யாயின், இனி அடுத்த பிறப்பில் என்னல் உடன் பிறப் புரிமையாள ராகக் கொள்ளத் தக்கார் வேறு யாருளர் என்பான், ‘வன்னெஞ்சின் என்னை நீ நீத்துப்போய் வானடைந்தால் இன்னஞ் சிலரோடு ஒரு வயிற்றின் யார் பிறப்பார்?’ என்ருன். பெரு வீரஞகிய நின் கண்முன் நிற்றலாற்ருது அஞ்சி நெஞ்சம் நடுக்குறும் அசுரர்கள், நீ இறந்த இச் செய்தியை யறிந்தனராயின் அஞ்சிய தமது நெஞ்சத்தைத் தாமே தடவிக் கொடுத்து அஞ்சந் தணிந்து ஆறுதல் பெறுவார்கள் என்பான் ‘தம் நெஞ்சந்தாமே தடவாரோ தானவர்கள்’ என்ருன். தானவர்கள்-அசுரர்கள். (80)

7842. கல்லன்ருே நீராடுங்
காலத்துன் காறேய்க்கும்
மல்லொன்று தோளாய்
வடமேரு மானுடவன்
வில்லொன்று நின்னை
விளிவித் துளதென்னும்
சொல்லன்ருே வென்னைச்
சுடுகின் றதுதோன்ருல்.

'கல் அன்றே, நீராடும்
காலத்து, உன் கால்தேய்க்கும்,—
மல் ஒன்று தோளாய் !—
வடமேரு ? மானுடவன்
வில் ஒன்று நின்னை
விளிவித்துளது என்னும்
சொல் அன்றே என்னைச்
சுடுகின்றது, தோன்றல் !

பொ :—மற்றெழில் வன்மை வாய்ந்த தோள்களை யுடையவனே! நீ நீராடுங்காலத்து உன் கால்களைத் தேய்த்து அழுக்கினைப் போக்கு தற்குரிய கல்லாகப் பயன்படுவது வட திசையிலுள்ள மேருமலை யல்லவா? ஆடவரிற் சிறந்தோனே! மனிதனது வில்லிற்றெடுத்த அம்பு ஒன்று உன்னை இறக்கும்படி செய்து விட்டது என்னும் சொல் லல்லவா என் மனத்தைச் சுட்டு வருத்துகின்றது.

கு :—நீர் நிலைகளில் நீராடுவோர் தம்முடைய கால்களின் அழுக்குப் போகக் கல்லிற்றேய்த்தல் இயல்பு. வானுற வுயர்ந்த பேருருவினனாகிய கும்பகருணன் பெரும் புறக் கடலில் நீராடுங்கால் அவன் கால்களைத் தேய்த்தற்குரிய கல்லாகப் பயன்படுவது வட திசையிலுள்ள மேருமலையே என்பது புலப்படுத்துவான், 'நீராடுங் காலத்து உன் கால் !தேய்க்கும் கல் வடமேரு அன்றே' என்றான். மல் மற்றெழில்; வலிமை எனினும் ஆம். மானுடவன் என்றது, ஈண்டு இராமனை. வில் என்றது, அதன்கண் தொடுத்து எய்யப் பட்ட அம்பினை. 'அரக்கர்குலப் பெருவீரனாகிய நீ மனிதனொருவனது வில்லிற்றெடுக்கப்பட்ட அம்பு ஒன்றினாற் கொல்லப்பட்டாய் என்பது கேட்டு என்னுள்ளம் வெதும்புகின்றேன்' என்பான், "மானுடவன் வில் ஒன்று நின்னை விளிவித்துளது என்னும் சொல்லன்றே என்னைச் சுடுகின்றது" என்றான். (81)

7843. மாண்டனவாஞ் சூலமுஞ்
சக்கரமும் வச்சிரமும்
தீண்டினவா வொன்றுஞ்
செயலாற்றா வாந்தெறித்து
மீண்டனவா மானுடவன்
மெல்லம்பு மெய்யுருவ
நீண்டனவாந் தாமின்னு
நின்றாரத் தோளோக்கி.

'மாண்டனவாம் சூலமும்,
சக்கரமும், வச்சிரமும்;
தீண்டினவா ஒன்றும்
செயல் ஆற்றுவாம்; தெறித்து
மீண்டனவாம்; மானுடவன்
மெல் அம்பு மெய் உருவ,
நீண்டனவாம்; தாம் இன்னும்
நின்றாம், தோள்நோக்கி!

பொ :—மாண்புடைய படைக்கலங்களாகிய சூலமும், சக்கரமும், வச்சிரமும் (நின் உடம்பினைத்) தீண்டினவாக (அவ்வளவில்) ஒன்றும் செய்ய மாட்டாதனவாகத் தெறித்து மீண்டன. (அவ்வாறாகவும்) மனிதனொருவன் எய்த (வலியற்ற) மெல்லிய அம்புகள் (நின்) உடம்பினை யூடுருவித் துளைத்து விரைந்து சென்றனவாம். (பகைவராய் வந்த) தாங்களும் தம் வெற்றித் தோள்களின் வளர்ச்சியைப் பார்த்த வண்ணம் இன்னும் (அப் போர்க்களத்தை விட்டுப்) பெயராது நிற்கின்றார்களாம். (இஃது என்னே வியப்பு!)

கு :—மாண்டன-மாண்புற்றன. சூலம், சிவபெருமானுக்குரிய படைக்கலம். சக்கரம், திருமாலுக்குரியது. வச்சிரம் இந்திரனுக்குரியது. இப் படைக்கலங்கள் கும்பகருணனது உடம்பினைத் தீண்டி ஒன்றும் செய்ய முடியாதனவாய்த் தெறித்து மீண்டன என்றது, அப் படைகளையுடைய சிவன் திருமால் இந்திரன் என்னும் தெய்வங்களால் வெல்லப்படாத பேராற்றல் படைத்தவன் கும்பகருணன் என்பதனைப் புலப்படுத்தியவாறு. தாம் என்றது, தன் பகைவராகிய இராம இலக்குவர்களை. தோள் நோக்குதல்-வலிமை மிக்க தம்முடைய தோள்களை நோக்கி அவற்றின் வன்மையை எண்ணிச் செருக்குற்று மகிழ்தல்.

'உரநெரிந்துவிழ வென்னை யுதைத்துருட்டி மூக்கரிந்த
நரனிருந்து தோள்பார்க்க நான்கிடந்து புலம்புவதோ"
(சூர்ப்பணகைப் படலம். 109)

எனச் சூர்ப்பணகை புலம்பு மிடத்தும், 'தோள் பார்த்தல்' என்ற சொல் இப்பொருளில் ஆளப்படுதல் காணலாம். (82)

7844. நோக்கறவு மெம்பியர்கண்
மாளவுமிந் நொய்திலங்கை
போக்கறவு மாதுலனார்
பொன்றவுமென் பின்பிறந்தாள்

மூக்கறவும் வாழ்ந்தே
ஞெருத்தி முலேக்கிடந்த
ஏக்கறவா லின்ன
மிரேனே வுனேயிழந்தும்.

'நோக்கு அறவும் எம்பியர்கள்
மாளவும், இந் நொய்து இலங்கை
போக்கு அறவும், மாதுலனர்
பொன்றவும், என்பின் பிறந்தாள்
மூக்கு அறவும் வாழ்ந்தேன்—
ஒருத்தி முலேக் கிடந்த
ஏக்கறவால்; இன்னம்
இரேனே, உனே இழந்தும்?

பொ :—என்னுடைய தம்பிமார்கள் (என் கண்களாற்) பார்த்தற் கில்லாதவாறு இறந்தொழியவும், இந்த இலங்கை (பகைவர்க்கு) எளிதாய்ப் பாதுகாப்பற்றுச் சிதையவும், என் மாமனராகிய மாரீசனர் இறந்தொழியவும் எனக்குப் பின்னே பிறந்தவளாகிய தங்கை (சூர்ப் பணகை) மூக்கு அறுபடவும், ஒரு பெண்ணின் கொங்கையினிடத்தே வைத்துள்ள ஆசையினல் (மானமின்றி) வாழ்ந்தேன். (மானமற்ற யான் அன்புடைத் தம்பியாகிய) உன்னேயிழந்தும் இன்னமும் உயிர் தாங்கியிருக்கமாட்டேனே?

கு :—ஒருத்தி முலேக்கிடந்த ஏக்கறவால் என்னும் ஏது, மாளவும் போக்கறவும் பொன்றவும் மூக்கறவும் வாழ்ந்தேன் எனவும் உனே இழந்தும் இன்னம் இரேனே எனவும் ஈரிடத்தும் சென்றியைந்தது. நோக்கறுதல் – காணுதற்கியலா தொழிதல். எம்பியர்கள் என்றது கரன் முதலியோரை. நொய்து - எளிது. போக்கு - புகல்; பாது காப்பு. அறுதல் – சிதைதல். மாதுலன் – மாமன்; என்றது மாரீ சனே. ஆர் உயர்த்தற்கண்வந்த விகுதி. பொன்றுதல் – இறத்தல். பின் பிறந்தாள்-தங்கை; சூர்ப்பணகை. ஒருத்தி என்றது சீதையை. ஏக்கறவு - ஆசையால் தாழ்தல். 'தம்பியர்களும் என் அன்புடைய மாமனும் என் பொருட்டு இறந்தொழியவும் எனக்குரிய இலங்கை அழியவும் என் தங்கை மூக்கறுபட்டு அவமானமுறவும் சீதையாகிய ஒரு பெண்ணிடத்தே வைத்த ஆசையால் மானமின்றி வாழ்ந்த யான், தம்பியாகிய உன்னேயிழந்த பின்னும் உயிர்தாங்கியிருப்பேனல்லவா' எனத் தன் தம்பி கும்பகருணனே எண்ணிப் புலம்பும் இராவணன், காமத்தாலுளதாகிய தன் எளிமை நிலேக்கு இரங்கினன் என்பதாம். (83)

7845. தன்னைத்தான் றம்பியைத்தான்
ருனைத் தலைவனைத்தான்
மன்னைத்தான் மைந்தனைத்தான்
மாருதத்தின் காதலைத்தான்
பின்னைக் கரடிக்
கிறையைத்தான் பேர்மாய்த்தாய்
என்னத்தான் கேட்டிலே
னென்னுன வாறிதுவே.

'தன்னைத்தான், தம்பியைத்தான்,
தானைத் தலைவனைத் தான்,
மன்னைத்தான், மைந்தனைத்தான்,
மாருதத்தின் காதலைத்தான்,
பின்னைக் கரடிக்கு இறையைத்தான்,
பேர் மாய்த்தாய்
என்னத்தான் கேட்டிலேன்;
என் ஆனவாறு இதுவே!

பொ:—(என் பொருட்டுப் போர்க்களத்தில் உயிர் கொடுத்த தம்பியாகிய நீ) இராமனாகிய தன்னையோ அன்றி அவன் தம்பியாகிய இலக்குவனையோ அன்றி (அவர்தம்) படைத் தலைவனாகிய நீலனையோ அன்றி வானர மன்னவனாகிய சுக்கிரீவனையோ அன்றி அவன் மைந்தன் அங்கதனையோ அன்றி வாயுவின் புதல்வன் அனுமனையோ அன்றிக் கரடிக்கரசனாகிய சாம்பவானையோ (அவர்தம்) புகழ்சிதையக் கொன்றொழித்தாய் என உலகத்தார் சொல்லக் கேட்டு மகிழும் பேற்றினை அடைந்திலேன். (நினக்கு நேர்ந்த மரணமாகிய) இது முடிந்தவாறு எவ்வாறு?

கு:—'என் பொருட்டு உயிர் துறந்த தம்பியாகிய நீ, என் பகைவனாகிய இராமனைக் கொன்று உயிர் துறந்திருப்பாயாயின் அச்செயல் உனது வீரத்தை வெளிப்படுத்துவதாய் எனக்கு வெற்றியையும் தந்திருக்கும். இராமனையன்றி அவன் தம்பி இலக்குவன், படைத் தலைவன் நீலன், வானரர் மன்னன் சுக்கிரீவன், அங்கதன், அனுமன், சாம்பவான் ஆகிய இவர்களுள் ஒருவரையேனும் கொன்று உயிர் துறந்தனையாயின் நின்னை யிழந்து வருந்தும் எனது உள்ளம் ஒருவாறு ஆறுதல் பெற வழியுண்டு. பகைவர் திறத்து எத்தகைய உயிரிழப்பையும் உண்டுபண்ணாத நிலையில் பகைவரால் நினக்குள தாகிய இச் சாக்காடு எனக்குப் பெருந்துன்பத்தை விளைப்பதாக முடிந்தது' என இராவணன் கும்பகருணனது இறப்பினை யெண்ணி

ஆற்ருது புலம்பினன் என்பதாம். இச் செய்யுளில் 'தன்னைத் தான்.........கரடிக்கிறைவயைத்தான்' என்ற தொடரில் அடுக்கிவந்த தான் என்பது, 'அதுவன்றி இதுவும்' என்னும் பொருள்பட நின்ற தோர் இடைச் சொல்லாகும். இதுபற்றித் திருக்கோவையார் 382-ஆம் பாடலுரையிற் பேராசிரியர் தந்த விளக்கம் இங்கு நோக்கத் தக்கதாகும். தன் என்றது இராமனை. தானைத்தலைவன்–நீலன். மன் – (சுக்கிரீவ) மன்னன். மைந்தன் – அங்கதன். மாருதத்தின் காதல் – வாயுவின் மகனுகிய அனுமன். காதல் என்றது ஆகுபெய ராய்க் காதலனுகிய மகனையுணர்த்தியது. கரடிக்கு இறை – சாம்ப வான். பேர் - புகழ். இது ஆனவாறு என் என மாற்றுக. இது – இம்மரணம். (84)

7846. ஏழை மகளி
ரடிவருட வீர்ந்தென்றல்
வாழு மணியரங்கிற்
பூம்பள்ளி வைகுவாய்
சூழு மலகை
துணங்கைப் பறைதுவைப்பப்
பூழி யணைமேற்
றுயின்றனையோ போர்க்களத்தே.

'ஏழை மகளிர் அடி வருட, ஈர்ந் தென்றல்
வாழும் மணி அரங்கில் பூம் பள்ளி வைகுவாய்!
சூழும் அலகை துணங்கைப் பறை துவைப்ப,
பூழி அணைமேல் துயின்றனையோ, போர்க்களத்தே?

பொ :—மடப்பமுடையராய காதல் மகளிர் கால்களைத் தடவிப் பிடிக்கக் குளிர்ந்த தென்றல் இடைவிடாது வீசும் மணிகள் பதிக்கப் பெற்ற ஆடரங்காகிய மாளிகையிற் பொலிவுமிக்க மலர்ப்படுக்கை யிலே கண் வளரும் இயல்பினையுடையநீ, (பகைவரொடு பொருது வீழ்ந்த இந்நிலையில்) போர்க்களத்திலே (நின்னைச்) சுற்றியுள்ள பேய்கள் துணங்கைக் கூத்தாடிப் பறையின் முழக்கத்தை யொத்து ஆரவாரிப்பப் புழுதி படிந்த தரையினையே படுக்கையாகக் கொண்டு துயில் கொள்கின்ருயோ?

கு :—ஏழை – அறியாமை; ஈண்டு இச்சொல் பெண்களுக்குரிய மடன் என்னும் குணத்தினையுணர்த்தியது. அடி வருடுதல் – இனிய தூக்கம் உண்டாகுமாறு பாதங்களை மென்மையாகத் தடவுதல்.

"தென்றலார் அடிவருடச் செழுங்கரும்பு கண் வளரும் திருவையாறே" என்புழி இச்செயல் சிலேடை வகையாற் குறிக்கப் பெற்றுள்ளமையறியலாம். ஈர்ந்தென்றல் – குளிர்ந்த தென்றற்காற்று. அலகை – பேய். துணங்கை என்பது இரண்டு கைகளையும் மடக்கிக் கொண்டு விலாவின்புடையே அடித்துக்கொண்டு ஆடுதலாகிய ஒரு வகைக் கூத்து. துவைத்தல் – ஒலித்தல். காதல் இளமகளிர் கால்களை அன்புடன் மெல்லத் தடவத் தென்றல் வீசும் ஆடரங்காகிய அழகிய மாளிகையிலே மெல்லிய மணமலர்ப்படுக்கையிலே இனிதாகத் துயில் கொள்ளும் இயல்பினனாகிய கும்பகருணன் போர்க்களத்திலே பேய்கள் சூழ்ந்து நின்று துணங்கைக் கூத்தாடி ஆரவாரிப்பப் புழுதிபடிந்த தரையினையே படுக்கையாகக் கொண்டு பெருந்துயில் கொண்டு கிடக்கும் அவலக்கோலத்தை நினைந்து இராவணன் அழுதரற்றினான் என்பதாம். துயின்றனையோ என்புழி ஓகாரம் இரக்கத்தின்கண் வந்தது. (85)

7847. செந்தேன் பருகித் திசைதிசையு நீவாழ
உய்ந்தே னினியின்று நானு முனக்காவி
தந்தேன் பிரியேன் றனிபோகத் தாழ்க்கிலேன்
வந்தேன் றொடர மதகளிறே வந்தேனே.

'செந்தேன் பருகித் திசை திசையும் நீவாழ,
உய்ந்தேன்; இனி, இன்று நானும் உனக்கு ஆவி
தந்தேன், பிரியேன், தனிபோகத் தாழ்க்கிலேன்,
வந்தேன் தொடர; மதகளிறே! வந்தேனே.

பொ :—மதக்களிப்புடைய யானையை ஒத்த இளையோனே! நீ செந்நிறம் வாய்ந்த தேனையுண்டு (சென்ற சென்ற) திசைகள் தோறும் (வெற்றித் திறமும் இன்பமும் உடையாயாக மகிழ்ந்து) நல் வாழ்வு பெற்றிருக்க, (நினது காவல் வன்மையால் யான் துன்பமின்னதென்றறியாது இன்பமாக) உயிர் வாழ்ந்திருந்தேன். (உயிர்த் துணைவனாகிய நீ) இன்று (என்னைப் பிரிந்து) தனித்துச் சென்றமையால் (நின்னையின்றியமையாத)நானும் (நின்னைப்) பிரிந்துறைதலாற்றேனாய் உன்பொருட்டு என்னுயிரைத் தந்தேனாய்க் காலந்தாழ்க்கவில்லேனாய் நின்னைத் தொடர (இதோ) வந்து விட்டேன் வந்து விட்டேன்.

கு :—மதகளிறு என்பது ஈண்டு உவம ஆகுபெயராய்க் கும்பகருணனைக் குறித்து நின்றது. மதகளிறே! நீ செந்தேன் பருகித் திசை திசையே வாழ (அதனால்) உய்ந்தேன்; இன்று (நீ) தனி போக,

நானும் பிரியேன் உனக்கு ஆவிதந்தேன், இனி, தாழ்க்கிலேன் தொடர வந்தேன் வந்தேன் என இயையும். நானும் என்புழி உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. தந்தேன் பிரியேன் தாழ்க்கிலேன் என்னும் முற்றுக்கள் எச்சப் பொருளவாய் நின்றன. தாழ்க்ககில்லேன் எனற்பாலது தாழ்க்கிலேன் எனக் குறைந்து நின்றது செய்யுள் விகாரம். தந்தேன் வந்தேன் என்புழி எதிர்காலம் விரைவுபற்றி இறந்த காலமாயிற்று. வந்தேன் வந்தேன் என்னும் அடுக்கு விரைவு பற்றியது. கையற்ற நெஞ்சினனாகிய இராவணனது அவலத்தின் முடிந்த எல்லையினை அறிவுறுத்தும் நிலையில் அமைந்த இச்செய்யுள் அவலச்சுவைக்குரிய சிறந்த இலக்கியமாகத் திகழ்தல் காணலாம். (86)

## சீதை தன் உள்ளத்துள்ளே மகிழ்தல்

**7848.** அண்டத் தளவு
மினைய பகர்ந்தழைத்துப்
பண்டைத்தன் னாமத்தின்
காரணத்தைப் பாரித்தான்
தொண்டைக் கனிவாய்
துடிப்ப மயிர்பொடிப்பக்
கெண்டைத் தடங்கண்ணா
ளுள்ளே களிகளித்தாள்.

**அண்டத்து அளவும் இனைய பகர்ந்து அழைத்து,**
**பண்டைத் தன் நாமத்தின் காரணத்தைப் பாரித்தான்;**
**தொண்டைக் கனிவாய் துடிப்ப, மயிர் பொடிப்ப,**
**கெண்டைத் தடங்கண்ணாள் உள்ளே களிகளித்தாள்.**

பொ :—(இராவணன்) அண்டத்தின் உச்சியளவும் (செய்து ஒலிக்கும்படி) இத்தகைய மொழிகளைச் சொல்லியரற்றி, முற்காலத்தில் (சிவபெருமானால் அளிக்கப்) பெற்ற இராவணன் என்ற பெயரின் காரணத்தைப் (பலரும் அறியும்படி) பரப்பினான். (அவனது அரற்றுதலைக் கேட்டுக்) கெண்டை மீன்போற் பிறழும் கண்களை யுடையளாகிய சீதையும் ஆதொண்டைக் கனிபோலும் சிவந்த வாய் துடிப்புற உடம்பில் மயிர்க்கூச் செறியத் தன் மனத்துள்ளே மகிழ்ச்சி யுற்றாள்.

கு :—இனைய மேற்கூறிய தன்மையினவாய புலம்புதலுரைகள். பண்டைத் தன் நாமம் ஆவது, முன்னாளில் சிவபெருமானால்

அளிக்கப்பெற்ற இராவணன் என்ற பெயர். அதன் காரணமாவது அப் பெயரைப் பெறுதற்குக் காரணமா யமைந்த அழுகை. இராவணம்-அழுகை. பாரித்தல்-வளர்த்தல்; எம்மருங்கும் பரப்புதல். இராவணன் திக்கு விசயஞ் செய்து குபேரனை வென்று புட்பகத் தேரூர்ந்து வான்வழியாக விரைந்து வரும்பொழுது அத் தேர் வான் வழியே செல்லுதற்கு இயலாதவாறு வானளவோங்கிய கயிலாயமலை குறுக்கிட்டு நிற்றலை யறிந்து அடங்காத வெகுளியுடையனாய் அம் மலையை அடியோடு பெயர்த்து எடுத்தான். அந்நிலையில் கயிலாயத் திருமலையில் உமையம்மையாருடன் வீற்றிருந்தருளும் சிவபெருமான் தன் திருவடிப் பெருவிரல் ஒன்றால் அம் மலைமேற் சிறிது ஊன்றினாராக அதனைப் பொறுத்தலாற்றாது அம் மலையின் அடியுள் அகப்பட்டு நசுங்கும் இடர் நிலையினனாகிய அவன், இறைவனைத் துதித்துத் தான் அறியாது செய்த குற்றத்தைப் பொறுத்தருளுமாறு வேண்டி அழுதரற்றினான்; அவனது அழுகையொலி கேட்டு இரங்கிய சிவ பெருமான் அவ்வாறு அழுதரற்றினமை காரணமாக அவனுக்கு இராவணன் என்ற காரணப் பெயரையும் முக்கோடி வாழ்நாளையும் மாற்றாரைக் கொல்லும் வாட்படையையும் கொடுத்து அருள் புரிந்தார் என்பது வரலாறு. இச் செய்தி,

"கைத்தலங்களிரு பதுடையரக்கர் கோமான்
  கயிலைமலை யதுதன்னைக் கருதாதோடி
முத்திலங்கு முடிதுளங்க வளைகளெற்றி
  முடுகுதலுந் திருவிரலொன் றவன்மேல்வைப்பப்
பத்திலங்கு வாயாலும் பாடல்கேட்டுப்
  பரிந்தவனுக் கிராவணனென் றீந்தநாம
தத்துவனைத் தலையாலங் காடன்றன்னைச்
  சாராதே சாலநாள் போக்கினேனே"

(6–79–10)

எனவும், "பயங்கள் பண்ணி, இராவணனென்றவனைப் பேர் இயம்பக் கொண்டார்" (6–96–117) எனவும் வரும் அப்பரடிகள் வாய்மொழியால் இனிது விளங்கும். வாய் துடித்தல், மயிர் பொடித்தல் என்பன உள்ளத்து வகை பற்றிய மெய்ப்பாடுகள். கிளுகிளுத்தல்-மகிழ்தல். தூர்த்தனாகிய இராவணனால் தனக்கு நேரவிருக்கும் துன்பத்திற்குத் தெய்வச் செயலால் ஏற்பட்ட தடையினை யெண்ணிச் சீதை தனக்குள்ளே மகிழ்ந்தாள் என்பதாம். இராவணனது துன்பங் கண்ட நிலையில் தன் உள்ளத் துவகையை வெளிப்படுத்துதல் அருளுடைமைக்கு ஒவ்வாமையால் தன் மகிழ்ச்சியை மறைத்துக் கொண்டமை இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். (87)

7849. வீங்கினாள் கொங்கை மெலிந்த மெலிவகல
ஓங்கினா ளுள்ள முவந்தா ளுயிர்புகுந்தாள்
தீங்கிலாக் கற்பிற் றிருமடந்தை சேடியாம்
பாங்கினா ளுற்றதனை யாரே பகர்கிற்பார்.

வீங்கினாள் கொங்கை; மெலிந்த மெலிவு அகல
ஓங்கினாள்; உள்ளம் உவந்தாள்; உயிர் புகுந்தாள்;
தீங்கு இலாக் கற்பின் திரு மடந்தை; சேடியாம்
பாங்கினாள் உற்றதனை யாரே பகர்கிற்பார்?

பொ:—(சீதை மகிழ்ச்சிப் பெருக்கால்) நகில்கள் பூரிக்கப் பெற்றாள். (உடம்பு) மெலிவுற்ற வாட்டமெல்லாம் தீரும்படி நிமிர்ந்து உயர்ந்தாள்; (துன்பம் நீங்கி) உள்ளம் மகிழ்ந்தாள்; (புறத்தே செல்லும் நிலையினதாகிய) உயிர் மீண்டும் உடலினுள்ளே புகுந்து தங்கப் பெற்றாள், (எத்திறத்தார்க்கும்) தீங்கு புரிதல் இல்லாத அறக்கற்பினையுடைய - (அழகிற் சிறந்த) திருமகளும் தனக்குப் பணிப்பெண்ணாகி அடித்தொழில்புரியும் - இயல்பினளாகிய சீதை (அப்பொழுது) அடைந்த மகிழ்ச்சியினை அறிந்து அளவிட்டுரைக்கவல்லார் யாவர்?

கு:—வீங்குதல் - பருத்தல்; பூரித்தல். கொங்கை வீங்கினாள், உள்ளம் ஓங்கினாள், உயிர்புகுந்தாள் எனச் சினையின் தொழில்கள் முதல்மேல் ஏற்றிக் கூறப்பட்டன. தீங்கிலாக் கற்பு - தன்பால் தீமைபுரிந்த கொடியோர்களுக்கும் தீங்குபுரியாமைக்குக் காரணமாகிய அறக்கற்பு. 'மறுவில்கற்பு' என்பர். நக்கீரர், தீங்கிலாக் கற்பிற் பாங்கினாள் எனவும் திருமடந்தை(யும்) சேடி ஆம் பாங்கினாள் எனவும் தனித்தனி இயையும். திருமடந்தையும் என்புழிச் சிறப்பும்மை விகாரத்தால் தொக்கு நின்றது. சேடி - பணிப்பெண். பாங்கு - இயல்பு. தூர்த்தனாகிய இராவணனது கொடுமை சிறிது தடைப்பட்ட நிலையிற் சீதை தனக்குள் அடைந்த மகிழ்ச்சி சொல்லால் வெளியிட்டுரைக்கும் எளிமையுடையதன்று என்பதாம். (88)

7850. கண்டாள் கருணைத்தன்
கண்கடந்த தோளானைக்
கொண்டா ளொருதுணுக்க
மன்னவனைக் கொற்றவனா்
தண்டாத வாளி
தடிந்த தனிவார்த்தை
உண்டா ளுடறடித்தாள்
வேறொருத்தி யொக்கின்றாள்.

கண்டாள், கருணனை, தன் கண் கடந்த தோளானை;
கொண்டாள், ஒரு துணுக்கம்; அன்னவனைக் கொற்றவனுர்
தண்டாத வாளி தடிந்த தனி வார்த்தை
உண்டாள், உடல் தடித்தாள்; வேறு ஒருத்தி ஒக்கின்ருள்.

பொ:—தன் கண்ணுக்கு அடங்காத (பேரழகுவாய்ந்த) தோள்களையுடைய இராமனையும் (அவனெடு பொருதற்குச் சென்ற) கும்பகருணனையும் (தன்னுள்ளத்திற்) கருதிப் பார்த்தவளாகிய சீதை (கும்பகருணனுடன் நிகழ்த்தும் போரில் தன் நாயகனுகிய இராமனுக்கு என்ன தீங்கு நேருமோ என்று தன்னுள்ளத்தில்) ஓர் நடுக்கம் கொண்டாள்; வெற்றி வேந்தனுகிய இராமபிரானது தடுத்தற்கு ஒண்ணுத அம்பு அந்தக் குப்பகருணனைத் தடிந்துகொன்ற ஒப்பற்ற செய்தியை(ச் செவி வாயிலாகக் கேட்டு) நுகர்ந்தாள்; தன்னுடம்பு பூரிக்கப் பெற்றவளாய் வேருெருத்தி போன்று காணப்பட்டாள்.

கு:—காணுதல் - உள்ளத்தாற் கருதி நோக்குதல்; இதனை நே'க்கல் நோக்கம் என்பர். கருணன் - கும்பகருணன்; முதற்குறை. காண்பார் கண்களின் காட்சியெல்லையினுள்ளே அடங்காமல் விரிந்து பரவும் பேரழகு வாய்ந்தன இராமனுடைய தோள்கள் என்பார் 'கண்கடந்த தோளான்' எனக் குறித்தார். 'தோள்கண்டார் தோளே கண்டார்' என ஆசிரியர் முன்னர்க் கூறியுள்ளமை காண்க. 'கொற்றவனுர் வாளி அன்னவனைத் தடிந்த தனி வார்த்தை உண்டாள்' என இயையும். கொற்றவனுர் என்றது இராமபிரானை. அன்னவன் என்றது கும்பகருணனை. தண்டாத என்பது வாளிக்கு அடைமொழி. வாளி – அம்பு. தண்டுதல் – தடுத்து நிறுத்தல். தடிதல் – வெட்டுதல். தனி வார்த்தை - ஒப்பற்ற வெற்றிச் செய்தி உண்ணுதல் என்றது ஈண்டுச் செவிப் புலனுல் கேட்டலாகிய நுகர்ச்சியை. கும்பகருணன் இறந்த செய்தியைக் கேட்பதற்கு முன்னே இராமனுக்கு என்ன தீங்குநேருமோ என்று ஏங்கி வருந்தி வாட்டமுற்ற உடம்பினளாயிருந்த சீதை, தன் கணவன் கும்பகருணனைக் கொன்ருன் என்ற செய்தியைக் கேட்டபின் மகிழ்ச்சியினுல் உடல் பூரிக்கப் பெற்று இப்பொழுதுள்ள சீதை முன்னையவளின் வேறுபட்ட மற்றெருத்தியென்று கண்டோர் கருதும்படி முழுதும் வேறுபட்ட பொலிவினையுடையவளாய் விளங்கினுள் என்பது புலப்படுத்துவார், 'வேறொருத்தி ஒக்கின்ருள்' என்ருர் ஆசிரியர். சீதையின் அவல நிலையை விரித்துக் கூறிவந்த ஆசிரியர், உடனே அதனை மாற்றி அவளுள்ளத்தின்கண் உவகையினைத் தோற்றுவித்துக் கதை நிகழ்ச்சியை நாடக நெறியில் நடத்திச் செல்லும் புலமைத்திறம் உணர்ந்து போற்றத்தக்கதாகும்.

இச்செய்யுளின்பின் 52–ஆம் எண்ணுள்ள புத்தகத்தில்

அந்தா மறையின் அணங்கதுவே யாகியுற
நொந்தாங் கரக்கன்மிக நோனு உளத்தினனுய்
சிந்தா குலமும் சிலநாணும் தன்கருத்தின்
உந்தா வுளங்கொதித்தாங் கொருவா சகமுரைத்தான்.

என்றதொரு பாடல் மிகைப்பாடலாகக் குறிக்கப்பட்டுளது. (89)

## இராவணன் சீற்றம்

7851. தாவரிய பேருலகத்
தெம்பி சவத்தோடும்
யாவரையுங் கொன்றடுக்கி
யென்றும் மிறவாத
மூவரையு மேலைநாண்
மூவா மருந்துண்ட
தேவரையும் வைப்பேன்
சிறையென்னச் சீறினன்.

'தாவு அரிய பேர் உலகத்து எம்பி சவத்தோடும்,
யாவரையும் கொன்று அடுக்கி, என்றும் இறவாத
மூவரையும், மேலைநாள் மூவா மருந்து உண்ட
தேவரையும் வைப்பேன் சிறை' என்னச் சீறினன்.

பொ :—'கடத்தற்கரிய பெரிய வுலகமாகிய இந்நிலவுலகிலே வாழும் எல்லோரையும் கொன்று (பிணமான அவர் தம் உடம்புகளை) என் தம்பி கும்பகருணனது பிணத்துடன் சேர அடுக்கி (அடக்கஞ் செய்து), எக்காலத்தும் இறவாத் தன்மையரான (அயன் அரி அரன் என்னும் கடவுளர்) மூவர்களையும் முன்னொளில் மூத்து இறவாமைக் குக் காரணமாகிய அமிழ்தத்தையுண்டு வாழும் ஏனைய தேவர்களை யும் சிறையிலிட்டு வருத்துவேன்' என வெகுண்டெழுந்தான் (இராவணன்).

கு :—தாவுதல் - கடத்தல். நிலத்தைத் தோண்டி யுட்புகவோ கடலைக் காலாற் கடந்து செல்லவோ வானத்திற் பறந்து செல் லவோ முடியாதவாறு மண்ணுலகில் வாழும் மனிதர்களை யெல்லாம் கொன்றொழிப்பேன் என்பான், 'தாவரிய பேருலகத்து யாவரையும் கொன்று' என்றான். கொன்று எம்பி சவத்தோடும் அடுக்கி என இயைக்க. எம்பி என்றது கும்பகருணனை. சவம் - உயிர் நீங்கிய

உடம்பு; பிணம். மூவர் – படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழில்களைச் செய்யும் கடவுளர் மூவர் மூவா மருந்து – மூத்து மடிதலாகிய மரணத்தைப் போக்கும் மருந்தாகிய அமிழ்தம் மூவா: மூத்த என்னும் பெயரெச்சத்து எதிர்மறை. தம்பியை இழந்தமையால் செயலற்று வருந்தும் இராவணன் தன் தம்பியைக் கொன்ற மனிதர்களாகிய இராம இலக்குவர்பாற் கொண்ட பகைமையால் இவ்வுலகிலுள்ள மனிதரினத்தாரெல்லாரையும் கொன்று தீர்த்து அவர் தம் செயலுக்கு உடந்தையாய் இறவா நிலையினராயுள்ள கடவுளர் மூவரையும் ஏனைத் தேவர்களையும் சிறையிலடைத்துத் துன்புறுத்துவேன் என்று வெகுண்டெழுந்தான் என்பதாம். (90)

### மந்திரியர் தேற்றத்தேறிய இராவணன் அவ்விடத்தைவிட்டுச் செல்லுதல்

7852. அக்கணத்து மந்திரிய
ராற்றச் சிறிதாறி
இக்கணத்து மானுடவ
ரீரக் குருதியான்
முக்கைப் புனலுகுப்பெ
னெம்பிக் கெனமுனியாத்
திக்கனைத்தும் போர்கடந்தான்
போயினான் றீவிழியான்.

அக்கணத்து, மந்திரியர் ஆற்ற, சிறிது ஆறி,
'இக்கணத்து மானுடவர் ஈரக் குருதியால்
முக்கைப் புனல் உகுப்பென் எம்பிக்கு' என முனியா,
திக்கு அனைத்தும் போர்கடந்தான், போயினான், தீவிழியான்.

பொ:—எல்லாத் திசைகளில் உள்ளாரையும் போரில் வென்றவனாகிய இராவணன், அப்பொழுது அமைச்சர் தணிவிக்கச் சினம் சிறிது தணிந்து, 'மானிடராகிய இராம இலக்குவரது (உடம்பின்) ஈரம் புலராத இரத்த நீரால் என்னுடைய தம்பியாகிய கும்பகருணனுக்கு இப்பொழுதே மூன்று முறை கையால் நீர் இறைத்தலாகிய கடனைச் செய்வேன்' என வெகுண்டு தீயுமிழும் கண்களையுடையனாய்ச் (சீதையிருந்த அவ் வனத்தைவிட்டு அப்பாற்) சென்றான்.

கு:—போர் கடந்தான், வினையாலணையும் பெயர். போர் கடந்தான், மந்திரியர் ஆற்ற ஆறி, முனியா, தீவிழியான், போயினான் என முடிக்க. மந்திரியர் என்றது, இராவணனது வஞ்சனைக்கு உடந்

தையாய் அங்கு வந்திருந்த மகோதரனை; பன்மை இழித்தற்கண் வந்தது. ஆற்ற-(கோபத்தைத்) தணிவிக்க. ஆறி-(சினந்)தணிந்து, இறந்தோர்க்கு இறுதிக் கடன் செய்வோர் தண்ணீரை மூன்றுமுறை கையால் முகந்து இறைக்கும் மரபினையொட்டி 'மானிடவர் ஈரக் குருதியால் எம்பிக்கு இக்கணத்து முக்கைப் புனல் உகுப்பென்' என்றான் இராவணன். மானிடர் இருவரையுங் கொன்று என் தம்பியின் மனக் கருத்தை நிறைவேற்றுவேன் என இராவணன் எல்லையற்ற வெகுளியை யுடையனாய் அவ்விடத்தை விட்டு விரைந்து சென்றான் என்பதாம். முனியா – வெகுண்டு. திக்கு - திசை; ஆகு பெயராய்த் திசையில் உள்ளாரை யுணர்த்தியது. (91)

மகோதரன் மற்றொரு பக்கமாக அவ்விடத்தைவிட்டுப் போதல்

7853. கூறோ மினிநாமக் கும்ப கருணனார்
பாரூடு வெங்களத்துப் பட்டா ரெனப்பதையா
வேறோர் சிறையிவனை வைம்மின் விரைந்தென்ன
மாறோர் திசைநோக்கிப் போனார் மகோதரனார்.

'கூறோம், இனி நாம், அக் கும்பகருணனார்
பாறு ஆடு வெங்களத்துப் பட்டார்' எனப் பதையா,
'வேறு ஓர் சிறை இவனை வைம்மின் விரைந்து' என்ன
மாறு ஓர் திசை நோக்கிப் போனார் மகோதரனார்.

பொ :—'இப்பொழுது நாம் (எதனையும்) சொல்ல மாட்டோம்; (ஏனெனில்) அத்தகைய (பெருவன்மை படைத்த) கும்பகருணன் ஆகிய தம்பியார் பருந்துகள் உலவும் வெம்மை மிக்க போர்க்களத் திலே (பகைவராற் கொல்லப்பட்டு) இறந்தார்' என மனம் பதைப் புற்று, (சிறைக் காவலரை நோக்கி) 'இந்தச் சனகனை மற்றொரு (கடுஞ்) சிறையில் விரைவில் அடைத்து வைம்மின்' என்று கூறி (இராவணன் சென்ற திசைக்கு) எதிரான மற்றொரு திசையை நோக்கிச் சென்றான் மகோதரன்.

கு :—மகோதரனார், 'இனி நாம் கூறோம்; அக் கும்பகருணனார் பட்டார்' எனப் பதையா, மாறு ஓர் திசை நோக்கிப் போனார் என இயையும். ஆர் விகுதி இழித்தற்கண் வந்தது. மருத்தன் என்னும் அரக்கனை மாயத்தாற் சனகனாக உரு மாற்றிச் சிறைப்படுத்தி அழைத்து வந்து சீதையின் முன்னிலையிலே 'இவன் உன் தந்தை யாகிய சனகன்' எனக் காட்டி இராவணனது விருப்பத்திற்கு இணங்குமாறு செய்தல் வேண்டிச் சூழ்ச்சி புரிந்த மகோதரன்,

தனது வஞ்சனை நிறைவேறுதற்கு முன்னே, கும்பகருணன் போர்க்களத்தில் இறந்தொழிந்த அவலச் செய்தியைக் கேட்டுச் சீதையின் முன்னிலையிலேயே இராவணன் கதறிப் புலம்பும் இன்னல் நிலையேற்பட்டது கண்டு மனம் பதைத்து அவ்விடத்து ஒன்றும்கூற இயலாதவனாய்த் தான் செய்த சூழ்ச்சியினைச் சீதை உணர்ந்து கொள்ளாதவாறு 'இந்தச் சனகனை மற்றொரு கடுஞ் சிறையில் அடைத்து வைம்மின்' எனச் சிறைக் காவலர்க்குக் கட்டளையிட்டு விட்டுத் தம்பியையிழந்து வருந்தும் இராவணனுக்குத் தான் ஆறுதல் சொல்லுதற்கும் இயலாதவனாகி அவனைத் தொடர மனமின்றி அவன் சென்ற திசைக்கு எதிர்த் திசையினை நோக்கிச் சென்றான் என ஆசிரியர் இந் நிகழ்ச்சியை ஓர் நாடகக் காட்சியாக அமைத்துக் காட்டிய திறம் கூர்ந்து நோக்கற் பாலதாகும். பாறு-பருந்து. படுதல்-இறத்தல். (92)

## திரிசடை சீதையைத் தேற்றுதல்

7854. வரிசடை நறுமலர் வண்டு பாடிலாத்
★ துரிசடை புரிகுழல் சும்மை சுற்றிய
வொருசடை யுடையவட் குடைய வன்பினள்
திரிசடை தெருட்டுவா ளினைய செப்புவாள்.

வரிசடை நறுமலர் வண்டு பாடு இலாத்
துரிசுஅடை புரிகுழல் சும்மை சுற்றிய
ஒருசடை உடையவட்கு, உடைய அன்பினள்,
திரிசடை தெருட்டுவாள், இனைய செப்புவாள்.

பொ :—சடையில் அணியப்பெறும் நறுமலர்களிடத்தே வரியமைந்த வண்டுகள் (மொய்த்து) முரலாத. அழுக்கடைந்த கூந்தற் கற்றையினை(த் தலைக்கு)ப் பாரமாகும்படி (வறிதே) சுற்றினமையால் ஒரு சடையினையுடையவளாகிய சீதைக்கு அன்புடையாளாகிய திரிசடை என்பவள் (துன்புற்றுக்கலங்கிய சீதையை ஆறுதல் கூறித்) தேற்றுபவளாய்(ப் பின் வருமாறு) இத்தகைய தேறுதல் மொழிகளைக் கூறுவாளாயினள்.

கு :—சடை நறுமலர் வரிவண்டு பாடிலாப் புரிகுழல் எனவும் துரிசு அடை புரிகுழல் எனவும் தனித்தனி இயைக்க. பாடு இலா - பாடுதல் இல்லாத. துரிசு - அழுக்கு. குழற் சும்மை - கூந்தற் பாரம் கணவனைப் பிரிந்த கடுந்துயரால் தன் கூந்தலில் எண்ணெய் நீவி மலரணிந்து ஒப்பனை செய்தலின்றிப் புழுதிபடிந்த கற்றை

யாகச் சுற்றி முடித்தமையால் புழுதிபடிந்து ஒரு சடையாய் முறுக் குண்டது என்பார், 'வண்டு பாடிலத்துரிசடை புரிகுழற்கற்றை சுற்றிய ஒரு சடையுடையவள்' எனச் சீதையைக் குறித்தார் திரிசடை - வீடணன் மகள். உடைய அன்பினள் அன்புடையாள் என விகுதி பிரித்துக் கூட்டுக. இச்செய்யுள் நான்கடிகளிலும் முதற் சீரில் முதலெழுத்து வேறுபட்டிருக்க இரண்டாமெழுத்து முதலியன ஒன்றிவந்து பொருள் வேறுபட்டமையின் இது திரிபு என்னும் சொல்லணியாகும். (93)

7855 உந்தையென் றுனக்கெதி ருருவ மாற்றியே
வந்தவன் மருத்தனென் றுளனோர் மாயையான்
அந்தமில் கொடுந்தொழி லரக்க னுமெனுச்
சிந்தையி னுணர்த்தின ளமுதின் செம்மையாள்.

'உந்தை என்று, உனக்கு எதிர் உருவம் மாற்றியே,
வந்தவன், மருத்தன் என்று உளன் ஓர் மாயையான்;
அந்தம் இல் கொடுந் தொழில் அரக்கனும்' எனு,
சிந்தையின் உணர்த்தினள், அமுதின் செம்மையாள்.

பொ :—உன் தந்தையென்று சொல்லிக் கொண்டு (தன் இயல்பான) உருவத்தை மாற்றி உனக்கு முன்னே (இப்பொழுது) வந்தவன் மருத்தன் என்று சொல்லப்படும் பெயரோடுள்ளானுய் ஒப்பற்ற மாயையில் வல்லவனுகிய எல்லையில்லாத கொடுந் தொழிலையுடைய அரக்கனுவன் என்று அமிழ்தத்தின் செவ்வியதன்மையினையுடையவளாகிய திரிசடை (சீதையின்) மனத்திற்பதியும்படி அறிவித்தாள்.

கு :—அமுதின் செம்மை யென்றது, இறக்கும் நிலையிலுள்ளோரை இறவாது பாதுகாத்தல் ஆகிய தன்மையினை. இராவணனது வஞ்சனைக்கு ஆற்றுது இறக்கும் நிலையினளாகிய சீதையைத் தன் ஆறுதல் மொழிகளால் இறவாது பாதுகாத்தமைபற்றித் திரிசடையை 'அமுதின் செம்மையாள்' எனக் குறித்தார் ஆசிரியர். (94)

## கவிக்கூற்று

7856. நங்கையு மவளுரை நாளுந் தேறுவாள்
சங்கையு மின்னலுந் துயருந் தள்ளினள்
இங்குநின் றேகிய விலங்கை காவலன்
அங்குநின் றியற்றிய தறைகு வாமரோ.

நங்கையும் அவள் உரை நாளும் தேறுவாள்,
சங்கையும் இன்னலும் துயரும் தள்ளினுள்;
இங்குநின்று, ஏகிய இலங்கை காவலன்
அங்குநின்று இயற்றியது அறைகுவாம் அரோ.

பொ :—சீதையும் (திரிசடையாகிய) அவள் கூறும் மொழியின் உண்மையினை நாள்தோறும் தெளிந்து உணர்பவள் (ஆதலால் அவள் கூறும் அம்மொழிகளைக் கேட்டு) ஐயத்தையும் துன்பத்தையும் துயரத்தையும் விட்டொழித்தாள். (சீதையிருந்த) இவ்விடத்திலிருந்து சென்ற இலங்கை மன்னனுகிய இராவணன் (தன் ஆலோசனைச் சபையாகிய) அவ்விடத்திலிருந்து செய்ததனை இனிக் கூறுவோம்.

கு :—நங்கை என்றது சீதையை. அவள் என்றது திரிசடையை. நாளும் - நாள்தோறும். நாளும் அவளுரை தேறுவாள் (ஆதலால்) சங்கையும் இன்னலும் துயரும் தள்ளினுள் என்க. சங்கை - ஐயம்; மாயாசனகனைக் கண்டு அவன் கூறும் பொருந்தாவுரை கேட்டுக் கலங்கிய உள்ளத்தளாய், ‘இவன் என் தந்தையாகிய சனகன் ஆவானே? அன்றி வேருருவனே’ எனக் கொண்ட ஐயம். இன்னல் - துன்பம். துயர் - மனத்துள் தோன்றிய துன்பத்தின் விளைவாக அழுது அரற்றிப் புலம்பி வீழ்தல் முதலியன. இச்செய்யுளின் பின்னிரண்டடிகளும் அடுத்த படலத்திற்குத் தோற்றுவாயாக அமைந்தன. (95)

மாயாசனகப் படலம் முற்றிற்று

# 17. அதிகாயன் வதைப் படலம்

இராவணன் மைந்தர்களுள் ஒருவனுகிய அதிகாயனது வதையைக் கூறும் பகுதியாதலின், அதிகாயன் வதைப் படலம் என்னும் பெயர்த்தாயிற்று. அதிகாயன் என்பவன் இராவணன் மனைவியருள் தானியமாலினி ஈன்ற மைந்தனுவன். இவன் மிகப் பெரிய உடம்பினையுடையனுதல்பற்றி அதிகாயன் என்னும் பெயரைப் பெற்ருன். காயம் - உடம்பு. அதிகாயம் - மிகப் பெரிய உடம்பு. 2, 9, 18, 19, 21, 23, 25, 26, 29, 40, 60-63, 65, 66, 70, 71, 74 என்னும் எண்ணுள்ள சுவடிகளில் இப்படலத்தின் முன்னுள்ள ஆறு பாடல்களும் முன்னைப் படலத்தைச் சேர்ந்தனவாக அமைய, 'நதிகாய்' என்ற செய்யுளை முதலாகக் கொண்டு இப்படலம் தொடங்குகிறது.

ஆருயிர்த் தம்பி கும்பகருணன் இறந்தமை கேட்டு ஆற்ரு நிலையினனுகிய இராவணன், தன் இருமருங்கினும் வணங்கி நின்ற அமைச்சர் முதலிய அரக்க வீரர்களைச் சினந்து நோக்கி, 'பகைவர்களை அழித்து வெற்றியுடன் திரும்புவோம் என்று வீரமொழி பகர்ந்து சென்ற நீங்கள் என் தம்பிக்கு உறுதுணையாக நின்று பகைவரை வென்றீரல்லீர்; என் தம்பியை இறவாது பாதுகாத்தீரல்லீர்; நும் உயிரைக் கொடுத்தாயினும் வெற்றிபெற முனைந்தீரல்லீர். என் தம்பியைப் போர்க்களத்திற் பாதுகாவாது விட்டு வந்த நீங்கள் என் கண் முன் நில்லாது அப்பாற் செல்லுமின். அமரில் வெல்வோம் என்னும் உறுதியுடையீராயின் போர்மேற் செல்மின். பகைவர் கைப்பட்டிறத்தலே எங்களால் முடிவது என்பீராயின் போர்மேற் செல்லா தொழிவீராக. இவ்விரண்டனுள் நும் கருத்து யாது? சொல்மின்' என்ருன். அதுகேட்ட அதிகாயன், தன் உள்ளத்து மானமும் சீற்றமும் மேலிடத் தன் ஆண்மையும் வெற்றியும் விளங்கத் தன் தந்தையாகிய இராவணனை இடித்துரைத்து, 'உன் தம்பியைக் கொன்றவனது தம்பியைக் கொன்று, தம்பியை இழந்தமையால் நீயுற்ற பெருந் துயரத்தினை அவன் அடையும்படி செய்திலேனுயின் நான் உன் மகன் என்று சொல்லத்தக்கவன் அல்லேன்' என வஞ்சினங் கூறிப் போர்க்குச் செல்ல விடை தருக என வேண்டினுன்.

அதிகாயனது வஞ்சினத்தைக் கேட்டு மகிழ்ந்த இராவணன், தன் மைந்தனுகிய அவனை நோக்கி, 'நீ நன்றே சொல்லினை. நீ இராமன் தம்பியாகிய இலக்குவனது உயிரைக் கொண்டு தந்தனையாயின், யான் பின் அவன் தமையனுகிய இராமனது அரிய உயிரையும் கவர்ந்து முடிப்பேன். வீரக்கழலணிந்தோனே இப்பொழுதே

அம்மனிதரைக் கொல்லுதற்குப் புறப்பட்டுச் செல்வாயாக' எனக் கூறி, மூவாயிரகோடி தொகையினராகிய அரக்கர்களேயும் வலிமிக்க யானே குதிரை தேர் ஆகிய எண்ணற்ற சேனேகளேயும் அவனுக்குத் துணேயாகச் செல்லுமாறு விடைகொடுத்து அனுப்பினுன். அதிகாயன், கும்பன், நிகும்பன், அகம்பன் முதலிய அரக்கர் தலேவர்கள் தன்னுடன் வர, வன்மை மிக்க பல்வேறு படைக் கலங்களேயுடையனுய், ஆயிரம் குதிரைகள் பூட்டப் பெற்ற தேர்மீதமர்ந்து போர்க்களத்தினே யடைந்தான்; இராமனுல் அரக்கர் பெருஞ் சேனேக்குளதாகிய அழிவினே நேரிற் கண்டான்; தன் சிறிய தந்தையாகிய கும்பகருணன் தலேயறுபட்ட நிலேயிற் கிடத்தலேயும் அங்கு அவனது தலே இல்லாமையையும் எண்ணி, 'இந்த அவல நிலேயைக் காணுதற்கோ யான் இங்கு வந்தேன்' என மனங்கலங்கி வருந்தியவனுய்ப் பகைவர் மேற் செற்றங் கொண்டான்; 'இதனேச் செய்த இராமனது தம்பியாகிய இலக்குவனேக் கொன்று அவனது பிரிவால் இராமன் படுந் துயரைக் கண்டு என் மனத் துயரினேப் போக்கிக் கொள்வேன்' என எண்ணியவனுகித் தன்னுடன் தனியே போர் செய்தற்கு வருமாறு இலக்குவனே அழைக்கும் முறையில் மயிடன் என்னும் அரக்கனேப் பகைவர்பால் தூதாக அனுப்பினுன்.

அதிகாயனுல் தூதாக அனுப்பப்பட்ட மயிடன், இராமனே அடைந்த பொழுது, வானர வீரர் அவனேப் பற்றி வருத்த முயன்றனர். அதுகண்ட இராமபிரான், 'தூதனேப் பற்றல் கூடாது' என விலக்கி மயிடனேப் பார்த்து 'நீ இங்கு வந்த கருத்து யாது' என்று வினவினுன். மயிடன் இராமனே நோக்கி, 'வில்வீர, யான் சொல்லவந்த கருத்து நின் தம்பியொருவனே அறியத்தக்கது' என மறுமொழி பகர்ந்தான். அயலே நின்ற இலக்குவன் மயிடனே நோக்கி, 'அதனேச் சொல்லுக சொல்லுக' என விரைந்து வினவினுன். மயிடன் இலக்குவனே நோக்கி, 'பொன் மேனியனே! அதிகாயன் நின்னே வெகுண்டவனுகி உன்னுடன் பொருதற்கு வந்துள்ளான். அவனே எதிர்த்து நிற்கும் ஆற்றலுடையாயாயின் என்னுடன் இப்பொழுதே புறப்படுக' என்று கூறினுன். தூதுவனுகிய அவன் கூறிய கருத்தினேயுணர்ந்த இராமன், 'இலக்குவன் ஒருவனே அதிகாயனேத் தனி நின்று பொருதழிப்பான்' எனத் தேவர் முதலிய யாவரும் அறியக் கூறி, இலக்குவனே அதிகாயனுடன் பொரும்படி ஏவினுன். உடன் இருந்த வீடணன், இராமனேப் பணிந்து, முற்காலத்தில் திருமாலுடன் பொருது இறந்த மது, கைடபன் என்னும் அவுணர் இருவருமே இப்பிறப்பில் முறையே கும்பகருணனுகவும் அதிகாயனுகவும் பிறந்தனர். அவருள் மதுவாகிய கும்பகருணன் இப்பொழுது நின்னுற் கொல்லப்பட்டான். கைடபனுகிய அதிகாயன் பிரமதேவரை நோக்கிப் பெருந்தவஞ் செய்து தேவர் அசுரர் முதலிய

யாவராலும் அழியாத பெருவரத்தைப் பெற்றுள்ளான்,' என அவனது பெருவன்மையினையும் அறத்தொடுபட்ட போர்த்திறனையும் எடுத்துரைத்து 'நாம் எல்லோரும் உடன் சென்ற நிலையில் இலக்குவன் அதிகாயனுடன் போர் செய்தல் வேண்டும்' என்றான்.

இராமன், இலக்குவனது பேராற்றலை வீடணனுக்கு எடுத்துக் கூறி, 'இலக்குவன் தன் அம்பினால் அதிகாயனது தலையைக் கொய்தழித்தலை நீயும் உடன் சென்று காண்பாயாக' என விடைகொடுத்தனுப்பினான். இராமனைத் தொழுது விடைபெற்ற இலக்குவன், வீடணன் தன்னைத் தொடர்ந்துவர, அதிகாயனை அணுகினான் அரக்கர் சேனையும் வானர சேனையும் தம்முள் எதிர்த்துப் பொருதன; அரக்கரது தாக்குதலை எதிர்த்து நிற்றலாற்றாத வானரசேனை தளர்ச்சியுற்றுச் சாய்ந்தது. அப்பொழுது இலக்குவன் 'அஞ்சாதீர்கள்' எனக் கூறி வில்லில் நாணேற்றி அம்புகளைச் சொரிந்து அரக்கர் சேனைகளை அழித்தொழித்தான்; அதனைக் கண்ணுற்ற தாருகன் என்னும் அரக்கன் தேர்மீதமர்ந்து இலக்குவன்மேல் அளவற்ற அம்புகளைச் சொரிந்தான். இலக்குவன் தன் அம்பினால் தாருகனது தலையைத் துண்டித்து வீழ்த்தினான்; தாருகன் இறந்தமையறிந்த காலன். குலிசன், காலசங்கன், மாலி, மருத்தன் என்னும் அரக்கர் ஐவரும் சூலம், கணிச்சி, பிண்டிபாலம் பாசம், அயில் ஆகிய படைக்கலங்களைக் கொண்டு இலக்குவனைத் தாக்கினார்கள். அவர்கள் செலுத்திய படைகளை யெல்லாம் இலக்குவன் தன் கணைகளால் அறுத்து அவர் தம் தலைகளைக் கொய்து போக்கி நால்வகைச் சேனைகளையும் சிதற அடித்தான். அப்பொழுது அதிகாயனுடன் வந்த சேனை வீரர்கள் யானைகளைச் செலுத்திக் கொண்டு பலவகைப் படைக்கலங்களால் திசை களைத் தூர்த்து வானர சேனைகளை நையப் புடைத்தனர்; அதுகண்ட இலக்குவன், அரக்கர் ஏவிய படைக்கலங்களை யெல்லாம் அவர்களுடைய கைகளுடன் துணித்துப் போக்கி யானைப் படைகளை யெல்லாம் அழித்தொழித்தான், தறுகணாளராகிய அரக்கர்கள் மீண்டும் யானைப் படைகளைக் கொண்டு இலக்குவனை எதிர்த்தனர். இலக்குவன் அவர்கள் செலுத்திய நூறுயிரம் யானைகளையும் அம்புகளாற் கொன்றொழித்தான். அந்நிலையில் இராவணனால் அனுப்பப்பட்ட ஒரு கோடி யானைகள் இலக்குவனைத் தாக்க முனைந்தன. இளஞ்சிங்கம் போல்வானாகிய இலக்குவன் எய்த அம்புகளால் தாக்கப்பட்டு அவை யாவும் இறந்து வீழ்ந்தன. அவற்றின் பெரிய உடல்கள் போர்க்களம் எங்கும் மலைகள்போல் குவிந்து கிடந்தன. அவற்றினின்று சொரியும் குருதி நீர்ப்பெருக்கு மலைகளினின்றிழியும் ஆறுகள்போல் ஆயின.

கடல்போன்ற அரக்கர் திரள் இலக்குவன்மேற் செலுத்திய யானைப் படைகளின் மிகுதியைக் கண்ணுற்று அநுமன் அங்கு

விரைந்து வந்தான்; கையில் தண்டு கொண்டு புடைத்தும் காலால் மிதித்தும் தன் வாலால் வளைத்து இறுக்கியும் கரத்தாற் பறித்தும் கடலில் எறிந்தும் நிலத்தில் உருட்டியும் தரையில் தேய்த்தும் இவ் வாருக நூருயிரம் மதயானைகளைக் கொன்ருெழித்துப் போர்க்களத் தைச் சேருக்கி உழக்கினுன். அநுமனுற் கொல்லப்பட்டனபோக எஞ்சியுள்ள எல்லா யானைகளையும் இலக்குவன் ஒரு நொடிக்குள் கொன்று தீர்த்தான். அரக்கர் அஞ்சி ஓடினர். அதுகண்டு சின முற்ற தேவாந்தகன் என்னும் அரக்கன் அநுமனைத் தாக்கிப் பொருது அவன் கையால் அறையப்பட்டு இறந்தான். அதனைக் கண்ணுற்ற அதிகாயன் கனலெனக் கனன்று அநுமனை நெருங்கி நின்று, அவன் அரக்கர் திறத்துச் செய்த கொடுமைகளை எடுத்துக் கூறி, 'நின்னைக் கொன்றல்லது செல்லேன்' என வஞ்சினங் கூறி னுன். அது கேட்ட அநுமன், 'திரிசிரனையும் என்னுடன் பொரு தற்கு அழைப்பாயாக' என்றனன். அயலே நின்ற திரிசிரன் 'ஆம் ஆம்' எனக் கூறி ஆரவாரித்து வத்து அநுமனை எதிர்த்தான். அநுமன் திரிசிரனது தேர்மேற் குதித்து அவனைக் கையாற் பற்றி யெடுத்துத் தரையில் தள்ளி அரைத்துக் கொன்றுவிட்டு மேலைத் திசை வாயிலில் போருளது' எனக் கேட்டு அங்கு விரைந்து சென்ருன்.

அதிகாயன் அநுமனது போர் வன்மையைக் கண்டு வியந்தான்; இலக்குவனைக் கொன்ருெழிப்பதாகக் கூறிப் போர்க்கு வந்த தனது வஞ்சினத்தை யெண்ணித் தன் தேரை இலக்குவன் முன்னே செலுத்தும்படி பாகனை ஏவினுன். இலக்குவன் அவனெடு பொரு தற்கு எதிர் வந்தான். அந்நிலையில் அங்கதன் இலக்குவனை அணுகி நின்று தேருடன் வந்த அதிகாயனெடு போர் செய்தற்குத் தன் தோள்மேல் அமரும்படி வேண்டினுன். இலக்குவன் அங்கதன் வேண்டிய வண்ணம் அவன் தோள்மேல் ஏறியமர்ந்து அரக்கர் சேனைகளை அழிப்பானுயினன். அதிகாயன் இலக்குவனை நோக்கி, 'உடன் வந்த சேனைகள் யாவும் பொருதழிந்தபின் என்னுடன் போர் செய்கின்ருயா? அல்லது தனி நின்று என்னுடன் பொரு கின்ருயா ?' என வினவினுன். 'எதிர்ந்துள்ள யானும் நீயுமே யாவரும் காணப் போர் செய்தல் வேண்டும்' என மறுமொழி பகர்ந்தான் இலக்குவன். பின்னர் இருவரும் அரிய படைக் கலங்களைக் கொண்டு பெரும் போர் புரிந்தனர். அந்நிலையில் வாயுதேவன் இலக்குவன் அருகே தோன்றி 'இவ் அதிகாயன் பிரமாத்திரத்தாலன்றி இறக்கமாட்டான்' என்று கூறினன். அதனைக் கேட்ட இலக்குவன் அதிகாயன்மேல் பிரமாத்திரத்தை ஏவினன். அஃது அதிகாயனது தலையைத் துணித்து எடுத்துக்கொண்டு வானத்தின் வழியாகச் சென்றது. தேவர்கள் அச்சம் நீங்கியவர்

களாய் மலர் மழை பொழிந்தனர். வெற்றி வீரனாகிய இலக்குவன் அங்கதன் தோளினின்றும் நிலத்திற் குதித்தனன். இலக்குவனது ஆற்றலை நேரிற் கண்டு வியந்த வீடணன் 'இவனால் இந்திரசித்து இறத்தல் உறுதி' என்றான். தன் தமையனாகிய அதிகாயன் கொல்லப்பட்டமை அறிந்த நராந்தகன் வெகுண்டு இலக்குவனைத் தொடர்ந்து பொருதற்கு முற்பட்டான். அது கண்ட அங்கதன் நராந்தகன் ஓங்கிய வாளினைப் பற்றி வாங்கி அதனாலேயே அவனைக் கொன்றான். பின் போர்மத்தன் என்னும் அரக்கன் நீலனொடு பொருது இறந்தான். வயமத்தன் என்னும் அரக்கனை இடபன் என்னும் வானர வீரன் கொன்றான். சுக்கிரீவன் எதிர்த்து வந்த கும்பனொடு பொருது அவனது நாவினைப் பறித்து அவனைக் கொன்றொழித்தான். நிகும்பன் அங்கதன்மேல் சூலப்படை ஏவுதற்கு முனைந்தபொழுது அநுமன் அங்கு விரைந்து வந்து நிகும்பனைத் தன் கையினால் அறைந்து கொன்றுவிட்டு மேற்றிசை வாயிலாகிய தன் இருப்பிடத்தை நோக்கிச் சென்றான். மற்றைய அரக்கர்கள் எதிர்த்து நிற்கலாற்றாது சிதறுண்டு ஓடி யொழிந்தனர். அதிகாயன் முதலிய அரச குமரர்கள் இறந்த செய்தியைத் தூதர்கள் சொல்லக் கேட்ட இலங்கை வேந்தனாகிய இராவணன், எல்லையற்ற துயரமும் வெகுளியும் உடையனாய் மானத்தாற் புழுங்கி வருந்தினான். தன் மகன் அதிகாயன் இறந்தான் எனக் கேட்ட தானியமாலினி நிலைகெட்டு அலறி ஓடி வந்து தன் கணவனாகிய இராவணன் பாதங்களில் வீழ்ந்து பலவாறு புலம்பி அழுது அரற்றினாள். உருப்பசியும் மேனகையும் அவளைத் தேற்றி அரண்மனைக்கு அழைத்துச் சென்றனர். இலங்கையிலுள்ள அரக்கர் மகளிரேயன்றி வானவர் மகளிரும் வாய் திறந்து அரற்றி யழுது வருந்தினார்கள். இராமனைப் பிரிந்த அயோத்திபோல இலங்கை நகர முழுதும் அழுகுரலோசையே மிக்குத் தோன்றியது என்பது இப்படலத்தின் பொருட் சுருக்கமாகும்.

அதிகாயனைப் பற்றிய இப் போர் நிகழ்ச்சி முதனூலாகிய வான்மீகத்தில் யுத்த காண்டம் 68 முதல் 73 வரையுள்ள சருக்கங்களில் விரித்துக் கூறப்பெற்றுளது. கும்பகருணன் இறந்தமை கேட்டுத் துயருற்ற இராவணன் தன் மைந்தர்களில் ஒருவனான திரிசிரன் தேற்ற ஒருவாறு தெளிந்தனன். போருக்கு முற்பட்ட தன் புதல்வர்களாகிய தேவாந்தகன், நராந்தகன், அதிகாயன் என்பவர்களையும் தன் தம்பிமார்களான யுத்தோந்மத்தன், மத்தன் எனப்படும் மகோதர மகா பார்சுவர்களையும் இராம இலக்குவர்மேல் போருக்கு அனுப்பினான். இருதிறப் படைகளும் கை கலந்த போரில் அரக்கர் சேனை தளர்ந்து பின்னிடுதல் கண்டு பொருத நராந்தகன் குதிரை மேற்கொண்டு வானர சேனையைத் தாக்கினான். அங்கதன் அவனைப் பொருது கொன்றான். அதுகண்ட தேவாந்தகன், திரிசிரன், மகோ

தரன் என்னும் மூவரும் அங்கதனைச் சூழ்ந்து தாக்கினர். அப்பொழுது அநுமனும் நீலனும் அங்கு விரைந்து வந்தனர். அநுமன் தேவாந்தகனை முட்டியால் தாக்கிக் கொன்ருன். நீலன் மகோதரனைத் தலையிற் புடைத்துக் கொன்ருன். சிற்றப்பன் இறந்தமை யறிந்த திரிசிரன் அநுமன்மீது வேற்படையை விட்டான். அநுமன் அதனை முறித்தான். திரிசிரன் வாட்படையால் அநுமனைத் தாக்கினுன். அநுமன் அவ்வாளைப் பறித்து திரிசிரன் தலைகளை அறுத்துத் தள்ளினுன். அதனைக் கண்ட மத்தன் கதாயுதத்தைக் கொண்டு எதிர்த்து வந்தான். வானரனுகிய இடபன் மத்தானீகனை (மகா பார்சுவனை)க் கிட்டினுன். மத்தன் கதாயுதத்தால் இடபனைத் தாக்கினுன். இடபன் வெகுண்டு அவனை முட்டியாற் குத்தி அவனது கதாயுதத்தைக் கொண்டே அவனைக் கொன்றெழித்தான். அவ்வளவில் அரக்கர் சேனைகள் சிதறி ஓடின.

பிரமனிடமிருந்து வரம் பெற்ற வீரனுகிய அதிகாயன், தன் உடன்பிறந்தோர்களும், சிற்றப்பன்மார்களும் போரிற் கொல்லப் பட்டமையினையும் அரக்கர் சேனைகள் வன்மை யிழந்து வருந்துவதனையும் அறிந்து பெரிதும் வெகுண்டு தேரிலேறி வில் நாணெறிந்து பொருதற்கு முற்பட்டான். அவனது பேருருவத்தைக் கண்ட வானரர்கள் ‘இறந்த கும்பகருணன்தான் இப்பொழுது மீண்டும் உயிர் பெற்று வந்து விட்டானே’ என அஞ்சி நடுங்கி இராமனைச் சரணடைந்தார்கள். அதிகாயனைத் தூரத்தே கண்ட இராமன், வீடணனை நோக்கி, ‘இவன் யார்?’ என வினவினுன். ‘இவன், இராவணனுடைய மைந்தர்களுள் ஒருவன்; இராவணனை யொத்த போர்வலி மிக்கவன்; பெரியோர்களிடம் பழகியவன்; வேதங்களை ஓதி யுணர்ந்தவன்; போர்த்துறைகளிலும் அரச நீதியிலும் வல்லவன்; இராவணனுக்குத் தானியமாலினியின்பால் பிறந்தவன்; பரம்பொருளைத் தியானிக்கும் இயல்பினனுகிய இவன் பிரமதேவரை நோக்கித் தவஞ் செய்து தேவர் அசுரர் முதலியோரால் இறவாத பெருவரமும் சிறந்த கவசமும் ஒளி வீசும் தேரும் பெற்றவன்; தேவர் அசுரர் இயக்கர் ஆகியோரை வெற்றி கொண்டவன்; போரில் வருணனது பாசத்தைத் தகைத்தவன்; அரக்கர்களில் நல்லறிவுடையவன்; உத்தமன். ஆகவே இவனை எதிர்ப்பதில் முயற்சி விரைந்து மேற்கொள்ளத் தக்கது’ என வீடணன் அதிகாயன் இயல்புகளை இராமனுக்கு எடுத்துரைத்தான்.

அப்பொழுது அதிகாயன் பகைவர் சேனையுட் புகுந்து வில் நாணின் ஒலி செய்தான். வானர வீரர்கள் மலைகளையும் மரங்களையும் வீசி அவனை எதிர்த்தனர். அவர்கள் எறிந்த மலைகளையும் மரங்களையும் அதிகாயன் தன் அம்புகளால் துண்டித்து விலக்கி அவர்களை

நெருக்கித் தாக்கினன். வானர வீரர்கள் வலி குன்றித் தளர்ந்தனர். அதிகாயன் தன்னை எதிர்த்தவர்களுடன் போரிட்டதன்றி ஏனை யோரைத் தாக்கவில்லை. அவன் இராமனை அணுகி, 'அம்புகளையும் விற்படையையும் கையிற்கொண்டு தேர்மீது வந்த யான் போர்வலி குன்றிய எவனுடனும் போர் செய்ய மாட்டேன். என்னைத் தனி நின்று எதிர்த்துப் பொரும் ஊக்கமுடையவன் மட்டுமே என்னுடன் விரைந்து போர் செய்ய வருக' என அறைகூவி யழைத்தான். அதனைக் கேட்டு அயலே நின்ற இலக்குவன் வெகுண்டு முன் சென்று வில்லை வளைத்து நாணைத் தெறித்தான். நாணொலி கேட்டு அரக்கர் நடுக்கமுற்றனர். அதிகாயன் வியப்புற்றான்; இலக்குவனை நோக்கி, 'இளையனாகிய நீ என்னுடன் பொருதற்கு ஏற்ற வன்மை யில்லாதவன்; இவ்விடத்தை விட்டுத் திரும்பிச் செல்லுதலே நின்னாற் செய்யத்தகுவது' எனக் கூறினன். அது கேட்ட இலக் குவன், 'தற்புகழ்ச்சி வீரமாகாது இளையோர் முதியோர் என்னும் வேறுபாடின்றிப் போரில் தன் திறமையைப் புலப்படுத்திக் காட்டு வதே உண்மையான ஆண்மையாகும்' எனக் கூறி அதிகாயனைப் போரில் எதிர்த்து நின்றான். இருவர்க்குமிடையே கடும் போர் நிகழ்ந்தது. வாயுதேவன் இலக்குவன் அருகே சென்று 'இவ் அதி காயன் பிரமதேவரிடம் வரம் பெற்றவன்; யாவராலும் சிதைக்க முடியாத கவசம் பூண்டவன். இவன் பிரமாத்திரத்தால்தான் கொல் லப்படுவான்' எனக் கூறினன். அதனைச் செவிமடுத்த இலக்குவன் பிரமாத்திரத்தை அபிமந்திரித்து விரைந்து செலுத்தினன். அதனைக் கூரிய அம்புகளாலும் படைக்கலங்களாலும் தடுக்க முயன்றான் அதிகாயன். இலக்குவனால் எய்யப்பட்ட பிரமாத்திரம் அவற்றை யெல்லாம் வீணாக்கி அதிகாயனது தலையை யறுத்தது. அத் தலை யானது இமயமலையின் சிகரத்தைப் போன்று பூமியில் விழுந்தது. அதிகாயன் மாண்டான். அரக்கர் சேனை அழிவுற்றது. உயிர் பிழைத்த அரக்கர்கள் விரைந்தோடினர். வானர சேனை ஆரவா ரித்தது. மைந்தனை இழந்த இராவணன் எல்லையற்ற பெருந் துயருழந்தான்' என முதனூல் கூறும்.

இவ்வாறு இராவணனுடைய புதல்வர்களாகிய நராந்தகன், திரிசிரன் முதலியவர்களின் போர் நிகழ்ச்சிகளோடு அதிகாயனது போர்ச் செயலை முதனூல் ஒப்ப வைத்துக் கூறினும், இராவணன் புதல்வர்களுள் மறனிழுக்கா மானமுடையவனும் அறநெறியில் வழு வாத தூய உள்ளத்தினனும் ஆகிய அதிகாயனது போர்த்திறன் தனித்தெடுத்துப் பாராட்டத்தக்க சிறப்புடையதெனக் கருதிய புலவர் பெருமானாகிய கம்பர், அதிகாயனது போர்ச் செயலை முதன்மை யுடையதாகவும் நராந்தகன் திரிசிரன் முதலிய ஏனையோருடைய போர்ச் செயல்களை அதற்கு அங்கமாகவும் கொண்டு அதிகாயன்

வதைப் படலம் என்ற பெயருடன் இப்படலத்தை அழகுற அமைத்துள்ளார்.

மறனிழுக்கா மானமுடைய பெரு வீரனுகிய அதிகாயனது மாண்பும், இளேயோனுகிய இலக்குவனது வில் வன்மையும், இலக்குவனுலும் அநுமனுலும் தாக்குண்டு யானைப் படைகள் அழிந்து கிடக்கும் போர்க்களத்தின் தோற்றமும், அதிகாயன் முதலியோர் இறந்த பின்னர் வானரர்களால் தாக்கப்பட்டுக் குற்றுயிருடையராய் நீர் வேட்கையினுலும் அயர்ச்சியினுலும் போர்க்களத்தை விட்டோடி உயிருலர்ந்த அரக்கர்களின் அவல நிலேயும், தன் அருமை மகனை யிழந்து ஆற்ருது அழுதரற்றிய தானியமாலினியின் பெருந் துயர் நிலேயும் இக் காப்பியத்தைக் கற்போர் உள்ளத்தில் நாடகக் காட்சி போன்று நன்கு பதிய இந் நூலாசிரியர் சொல்லோவியஞ் செய்து காட்டியுள்ளமை பலமுறை படித்துணரத் தக்கதாகும்.

# 17. அதிகாயன் வதைப் படலம்

## இராவணன் அமைச்சர் முதலாயினோரை வெகுண்டுரைத்தல்

7857. கொழுந்துவிட் டழன்றெரி மடங்கல் கூட்டற
எழுந்தெரி வெகுளியா னிரும ருங்கினுந்
தொழுந்தகை யமைச்சரைச் சுளித்து நோக்குரு
மொழிந்தன னிடியொடு முகிலுஞ் சிந்தவே.

கொழுந்துவிட்டு, அழன்று எரிமடங்கல் கூட்டுஅற,
எழுந்துஎரி வெகுளியான், இரு மருங்கினும்
தொழும்தகை அமைச்சரைச் சுளித்து நோக்குரு,
மொழிந்தனன், இடியொடு முகிலும் சிந்தவே.

பொ :—சுவாலைவிட்டுக் கனன்று எரியுந் தன்மையதாகிய ஊழித் தீயும் ஒப்பு அறும்படி கிளர்ந்து எரியும் சினத்தையுடையவனாகிய இராவணன் (தன்) இரு பக்கங்களிலும் (நின்று) வணங்குந் தன்மையராகிய மந்திரிகளை வெகுண்டு நோக்கி (வானினின்றும்) இடியுடன் மேகமும் சிதறும்படி (தெழித்து) உரைப்பானாயினான்.

கு :—கொழுந்து - தீச்சுவாலை. மடங்கல் - ஊழித்தீ. கூட்டு - இவ்வியல்பால் இஃது இதனை ஒக்கும் என்று உவமத்தையும் பொருளையும் கூட்டியுரைக்கப்படுதலாகிய ஒப்புமை. அறுதல் - நீங்குதல். எழுந்தெரிவெகுளியான் என்றது, தன் தம்பியாகிய கும்பகருணனை இராமன் கொன்றான் என்ற செய்தி கேட்டுப் பொங்கி யெழுந்த சினமுடையனாகிய இராவணனை. வெகுளியான், அமைச்சரைச் சுளித்து நோக்குரு, இடியொடு முகிலும் சிந்த, மொழிந்தனன் என முடிக்க. சுளித்தல் - வெகுளுதல். தனது சொற்கேட்ட அளவில் வானகத்து மேகமும் இடியுடன் சிதறி நிலத்தில் வீழுமாறு பேரொலி படத் தெழித்துரைத்தனன் என்பார், 'இடியொடு முகிலுஞ் சிந்த மொழிந்தனன்' என்றார். சிந்துதல் - பொடிபடச் சிதறுதல். (1)

7858. ஏகுதி ரெம்முகத் தெவரு மென்னுடை
யோகவெஞ் சேனையு முதவ வும்முடைச்
சாகரத் தானையுந் தழுவச் சார்ந்தவர்
வேகவெஞ் சிலைத்தொழில் விலக்கி மீள்கிலீர்.

'ஏகுதிர், எம்முகத்து எவரும்—என்னுடை
யோக வெஞ்சேனையும் உதவ, உம்முடைச்
சாகரத் தானையும் தழுவச் சார்ந்து, அவர்
வேக வெஞ்சிலைத் தொழில் விலக்கி மீள்கிலீர்.

பொ :—(பகைவரை யழிக்கும்) சூழ்ச்சியில் வல்ல என்னுடைய வெம்மைமிக்க படைகளும் (நுமக்கு) உதவியாய் வர நும்முடைய கடல்போற் பரந்த சேனைகளும் உடன் சூழச் சென்று அப்பகைவரது விரைவு மிக்க கொடிய விற்றொழிலாகிய போரை விலக்கி (வெற்றி யுடன்) மீளும் ஆற்றலற்றவராயினீர். (ஆகவே அன்பும் ஆற்றலும் இல்லாத) நீவிர் யாவரும் எம் முகத்தெதிர் நில்லாது அப்பாற் சென்றொழிவீராக.

கு :—யோகம் - உபாயம்; சூழ்ச்சி. நுமக்கு வெற்றியுண்டாகு மாறு கடல்போலும் பெருஞ்சேனைகளை நுமக்குரியனவாகக் கொடுத்த துடன் என் பக்கத்திலுள்ள சூழ்ச்சியில் வல்ல சேனைகளையும் நுமக்கு உதவியாக உடன் அனுப்பியிருந்தும் அவற்றின் துணைகொண்டு பகைவரைப் புறங்காட்டி யோடச் செய்து நும் மன்னவனாகிய எனக்கு வெற்றியைத் தேடித்தரும் ஆற்றலும் அன்பும் இல்லாத படைத் தலைவர்களாகிய நீவிர் அனைவரும் என் கண்முன் நிற்றற்குச் சிறிதும் தகுதியுடையீரல்லீர் ஆதலின் நீவிர் யாவரும் என் முகத்தெதிர் நில்லாது அப்பாற் செல்லுமின் என்பான். 'ஏகுதிர் என்முகத்து, எவரும்' எனக் கடிந்துரைத்தான் இராவணன். எம்முகத்தினின்றும் (அப்பால்) ஏகுதிர் என நீக்கப் பொருட்டாகிய ஐந்தாமுருபு விரித்துரைக்க. (2)

**7859.** எடுத்தவ ரிருந்துழி யெய்தி யாரையும்
படுத்திவண் மீடுமென் றுரைத்த பண்பினீர்
தடுத்திலீ ரெம்பியைத் தாங்க கிற்றிலீர்
கொடுத்திலீ ரும்முயிர் வீரக் கோட்டியீர்.

"எடுத்தவர் இருந்துழி எய்தி, யாரையும்
படுத்து, இவண் மீள்தும்" என்று உரைத்த பண்பினீர்!
தடுத்திலீர் எம்பியை; தாங்க கிற்றிலீர்;
கொடுத்திலீர், உம் உயிர்; வீரக் கோட்டியீர்.

பொ :—'போர் மேற்கொண்டு வந்தவராகிய பகைவர் தங்கிய இடத்திற் சென்று யாவரையும் கொன்று இங்கே மீளுவோம்' என்று வஞ்சினம் கூறிய பண்புடையவர்களே! வீரர் வரிசையில் உள்ளவர்

களே! (அத்தகைய நீவிர்) (பகைவருடைய சேனைகளை முன்னின்று) தடுத்தீரல்லீர். (பகைவர் மேற்சென்ற) என் தம்பி கும்பகருணனை (ப் பகைவரது அம்புக்கு இலக்காகாதபடி) காப்பாற்றினீரல்லீர். (அவன் இறந்தமையறிந்தும் பகைவரை எதிர்த்துத் தாக்கி) நுமது உயிரைத் துறந்தீரல்லீர்.

கு :—எடுத்தல் - படையுடன் மேற்செல்லுதல். எடுத்தவர் என்றது, இலங்கையின்மேற் படையெடுத்து வந்த இராம இலக்குவரை. இருந்துழி - (அன்னோர் படையுடன் தங்கி) இருந்த இடம்; இருந்த என்னும் பெயரெச்சத்து அகரம் விகாரத்தால் தொக்கது. உழி - இடம். படுத்தல் — அழித்தல். தடுத்தல் - எதிர்த்துவரும் பகைவர் சேனையை முன்னின்று தடுத்து நிறுத்துதல். தாங்குதல் - பகைவர் விடும் படைக்கலங்கள் தலைவன் மேற்படாதவாறு அவனுக்கு முன் சென்று அவற்றை விரைந்து ஏற்றுக்கொண்டு தலைவனைப் பாதுகாத்தல். எம்பி - என்தம்பி; என்றது கும்பகருணனை. வீரக்கோட்டி - வீரர் வரிசை. (3)

**7860.** உம்மையி னின்றுநா னுலக மூன்றுமென்
வெம்மையி னாண்டது நீரென் வென்றியால்
இம்மையி னெடுந்திரு வெய்தி னீரினிச்
செம்மையி னின்றுயிர் தீர்ந்து தீர்திரால்.

உம்மையினின்று நான் உலகம் மூன்றும் என்
வெம்மையின் ஆண்டது; நீர் என் வென்றியால்
இம்மையின் நெடுந்திரு எய்தினீர்; இனிச்
செம்மையின் நின்று உயிர்தீர்ந்து தீர்திரால்.

பொ :—நெடுங் காலத்திற்கு முன்னிருந்து நான் மூவுலகங்களையும் ஆண்டது எனது கொடிய பெருவன்மையினால் ஆகும். நீங்கள் என்னுடைய வெற்றித் திறத்தாலேயே இப்பிறப்பிற் பெருஞ் செல்வத்தை அடைந்துள்ளீர்கள். இனியாவது (வீரர்க்குரிய) செவ்விய நெறியாகிய (செஞ்சோற்றுக்) கடமையில் நிலைத்து நின்று (போர்க்களத்தில்) உயிரைக் கொடுத்து (நும் கடமையைச் செய்து) முடிப்பீராக.

கு :—உம்மையினின்று நான் உலகம் மூன்றும் ஆண்டது என் வெம்மையின் ஆம் என ஆக்கச் சொல் வருவித்து முடிக்க. உம்மையினின்று — நெடுங் காலத்திற்கு முன்னிருந்து. வெம்மை என்றது கொடிய பெருவன்மையைச் சுட்டி நின்றது. நெடுந்திரு — பெருஞ் செல்வம். செம்மை - நன்றியுடைமையாகிய அறம். (4)

7861. ஆற்றல மென்றிரே லென்மின் யானவர்
தோற்றலம் வந்துகத் துரந்து தொன்னெடுங்
கூற்றல மரவுயிர் குடிக்குங் கூர்த்தவென்
வேற்றலே மானிடர் வெரிநிற் காண்பெனல்.

"'ஆற்றலம்'' என்றிரேல் என்மின்; யான், அவர்
தோற்று அலம்வந்து உகத்துரந்து, தொல் நெடுங்
கூற்று அலமர உயிர்குடிக்கும் கூர்ந்த என்
வேல் தலை மானிடர் வெரிநில் காண்பெனல்.

பொ:—(பகைவரை எதிர்த்துப் பொரும்) வன்மையுடையே மல்லேம் என்பீராயின் (அதனை வெளிப்படக்) கூறுங்கள். யான் அப்பகைவர்கள் தோல்வியுற்று வருந்தி வன்மை கெடப் பழைய நெடிய கூற்றுவனும் கண்டு மனம் சுழல (மாற்ருரது) உயிரைப் பருகும் எனது கூரிய வேற்படை(யினை விரைவாகச் செலுத்தி அதன்) நுனியை (இராம இலக்குவராகிய) மானுடரது முதுகிடத்தே காண்பேன்.

கு:—அலம் வருதல் – வருந்துதல். உகுதல் - சிதைந்து கெடுதல். உயிரை உடம்பினின்றும் கூறுபடுத்தி விரைந்து கவர்ந்து செல்லுந் திறத்தில் நெடுங்காலமாகப் பழகிய கூற்றுவனும் மாற்ருருயிரை விரைந்து பருகும் என் கூரிய வேற்படையின் வன்மை கண்டு துணுக்குற்று மனஞ் சுழல்வான் என்பான், 'தொல் நெடுங் கூற்று அலமர உயிர்குடிக்கும் கூர்த்த என் வேல்' என்றும், அவ் வேற்படை பகைவர் மார்பிற் பாய்ந்தவுடன் அதனை ஊடுருவித் துளைத்து அவர் தம் முதுகின்புறத்தே வெளிப்பட்டுச் செல்லவல்ல கூரிய முனையை உடையது என்பான் 'கூர்த்த என் வேல்தலை மானிடர் வெரிநிற் காண்பென்' என்றும் கூறினுன். அலமருதல்- மனஞ் சுழலுதல். தலை - நுனி. வெரிந் – முதுகு. (5)

7862. அல்லது முண்டுமக் குரைப்ப தாரமர்
வெல்லுது மென்றிரேன் மேற்செல் வீரினி
வல்லது மடிதலே யென்னின் மாறுதிர்
சொல்லுநுங் கருத்தென முனிந்து சொல்லினுன்.

'அல்லதும் உண்டு, உமக்கு உரைப்பது; ''ஆர்அமர்
வெல்லும்'' என்றிரேல், மேல் செல்வீர்; இனி,
வல்லது மடிதலே என்னின், மாறுதிர்;
சொல்லும் நும் கருத்து' என முனிந்து சொல்லினுன்.

பொ :—அன்றியும் நுமக்குச் சொல்ல வேண்டுவது (மற்றென்றும்) உளது. எதிர்த்தற்கு அரிய போரிலே (பகைவரை) வெல்வோம் என்பீராயின் (பகைவர்) மேற் செல்வீராக. இனி நும்மாற் செய்ய வல்லது (போரில்) இறந்தொழிதலே என்றால் (போர்மேற் செல்வதினின்றும்) மீள்வீராக. (இவ்விரண்டில்) நும் கருத்து யாது? (அதனை எனக்கு விளங்கச்) சொல்வீராக என வெகுண்டு கூறினான் (இராவணன்).

கு :—அல்லதும் உமக்கு உரைப்பது உண்டு என இயையும். ஆர் அமர் – (எதிர்த்துப் பொருது வெற்றி கொள்ளுதற்கு) அரிய கடும் போர். வல்லது – இயல்வது. மாறுதல் – பின்வாங்குதல்; மீளுதல். (6)

அதிகாயன் தன் வீரத்தை எடுத்துரைத்தல்

7863. நதிகாய்நெடு மானமு நாணுமுரு

மதிகாய்குடை மன்னனை வைதுரையா
விதிகாயினும் வீரம் வெலற்கரியான்
அதிகாய னெனும்பெய ரானறைவான்.

நதிகாய் நெடு மானமும் நாணும் உரு,
மதிகாய் குடை மன்னனை வைது உரையா,
விதிகாயினும் வீரம் வெலற்கு அரியான்
அதிகாயன் எனும் பெயரான் அறைவான்.

பொ :—(அவரவர் செய்த வினைப்பயனைத் தப்பாது நுகரச் செய்யும் பெருவலி படைத்த) ஊழ்வினை தானே வெகுண்டு தடுத்தாலும் வெல்லுதற்கு அரிய வீரத்தை யுடையவனாகிய அதிகாயன் என்னும் பெயரையுடையவன், ஆற்று வெள்ளத்தையும் கொதிப்புற்று வற்றச் செய்யும் கடுங்கோபமும் நாணமும் அடைந்து, முழு மதியை(த் தண்ணொளியால்) வெல்லும் (வெண்கொற்றக்) குடையினை யுடைய (இலங்கை) வேந்தனாகிய இராவணனை வைதுரைத்து(ப் பின்வருமாறு) கூறுவானாயினன்.

கு :—அதிகாயன் எனும் பெயரான், மானமும் நாணும் உரு, மன்னனை வைதுரையா, அறைவான் என இயையும். அவரவர் செய்த வினைப்பயன்களை அவரவரே தப்பாது நுகருமாறு செய்யும் தன் செயலுக்கு மறுதலையாவதோர் உபாயத்தைப் பிறர் சூழினும் அவர்தம் சூழ்ச்சிக்கு முற்பட்டுத் தடை செய்து நிற்கும் பெருவலி படைத்த வினைத் தெய்வமாகிய ஊழ் தானே வெகுண்டு தடுத்தாலும்

விலக்க ஒண்ணுத பெரு வீரம் வாய்ந்தவன் அதிகாயன் என்பார், 'விதிகாயினும் வீரம் வெலற்கரியான் அதிகாயன்' எனச் சிறப்பித்தார். 'முதல் வானவர்க்கும் வலீதாம் விதிக்கும் விதியாம் என் விற்ருெழில் காண்டி' (கம்பர்-அயோத்தியா-132) என இலக்குவன் கூறும் மொழியில் விதிகாயினும் வெலற்கரிய வீரம் புலப்படுத்தப் பட்டிருத்தல் இங்கு ஒப்பு நோக்கத் தகுவதாகும். விதி-ஊழ். வீரம் வெலற்கரியான் என்பதனை, வெலற்கரிய வீரத்தான் என விகுதி பிரித்துக் கூட்டுக. நெடுமானம்-பெரிய அவமானம்; என்றது, ஈண்டு அதனுல் தோன்றிய கடுஞ் சினத்தை உணர்த்தி நின்றது. உரு' உரையா என்பன செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். தனது பேராற்றலையும் வீரத்தையும் எண்ணுது தன்னை ஏனையோருடன் வைத்து இகழ்ந்துரைத்தமை பற்றி அதிகாயன் கடுஞ் சினமும் நாணமும் அடைந்து தன் தந்தையாகிய இராவணனை வைதுரைத்துப் பின்வருமாறு கூறுவானுயினுன் என்க. அதிகாயன் கூறியன பின்வரும் ஆறு செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். (7)

**7864.** வானஞ்சுக வையக மஞ்சுகமா
லானஞ்சு முகத்தவ னஞ்சுகமே
ஞனஞ்சினெ னென்றுனை நாணுகபோர்
யானஞ்சினெ னென்று மியம்புவதோ.

'வான் அஞ்சுக; வையகம் அஞ்சுக; மா–
லான், அஞ்சுமுகத்தவன் அஞ்சுக; "மேல்
நான் அஞ்சினென்" என்று, உனை நாணுக; போர்
யான் அஞ்சினென் என்றும் இயம்புவதோ?

பொ:—(நம்மேற் போர் குறித்து வந்த இராம இலக்குவரது போர் வன்மையைக் குறித்து) வானகத்து வாழ்வோராகிய தேவர்கள் அச்சமுறுக; வையகத்தே வாழும் மக்கள் அச்சமுறுக; திருமாலாகிய தேவனும் ஐந்து முகங்களையுடையவனுகிய சிவனும் அச்சமுறுக; அனைவர்க்கும் மேலாக '(இலங்கை வேந்தனுகிய) நானே அஞ்சுகின்றேன்' என்று கூறி நீ நின்னைக் குறித்து (நாணினும்) நாணுக; (அதிகாயனுகிய) நான் (அவரொடு போர் செய்தற்கு) அஞ்சினேன் என்று என்னைக் குறித்தும் நீ இகழ்ந்துரைத்தல் தகுதியோ?

கு:—வான், வையகம் என்பன ஆகுபெயராய் அங்கு வாழும் தேவரையும் மக்களையும் முறையே உணர்த்தின. மாலான்-திருமால். அஞ்சுமுகத்தவன்–சிவன். 'இராம இலக்குவராகிய பெரு வீரரொடு எதிர்த்துப் பொருதற்கு அஞ்சுவோர் தேவர், மக்கள், திருமால்,

சிவன் முதலிய ஏனையோராகலாம்; அன்றி அனைவர்க்கும் மேலாக வுள்ள இலங்கை வேந்தனாகிய நீ ஆகலாம்; யாவர்க்கும் அஞ்சாத பெரு வீரம் வாய்ந்த அதிகாயனாகிய நான் அப் பகைவரைக் குறித்து அஞ்சினேன் என்பதாக நீ என்னைக் குறித்துப் பேசுதல் சிறிதும் தகாது' என அதிகாயன் தன் தந்தையாகிய இராவணனைக் கடிந் துரைத்தான் என்பதாம். (8)

7865. வெம்மைப்பொரு தானவர் மேல்வலியோர்
தம்மைத்தளை யிற்கொடு தந்திலெனோ
வும்மைக்குலை யப்பொரு மும்பரையுங்
கொம்மைக்குய வட்டணை கொண்டிலெனோ.

'வெம்மைப் பொரு தானவர் மேல் வலியோர்—
தம்மைத் தளையில் கொடு தந்திலெனோ?'
உம்மைக் குலையப் பொரும் உம்பரையும்
கொம்மைக் குய வட்டணை கொண்டிலெனோ?

பொ :—வெகுண்டு கொடும் போர் புரியும் அசுரர்களில் மேம்பட்ட வலிமையுடையராகிய வீரர்களைப் போரிற் பிணித்துக் கொண்டு வந்து (நும்பாற்) கொடுத்திலேனோ? (ஆற்றலால் வலிய) உங்களையும் நடுக்கமுறப் போர் புரிந்த தேவர்களையும் வன்மையுடைய வாட்படையால் (வலம் இடமாகச்) சாரி திரிந்து வெற்றி கொண்டேனல்லேனோ?

கு :—வெம்மை-மிக்க வெகுளி; கொடுமை. தானவர்-தநுவின் வழிவந்தோர்; அரக்கரினத்தின் வேறாகிய அசுரர்கள். குலைய-நடுக்கமுற. உம்பர்-தேவர். கொம்மை-வலிமை. குயம்-வாள். வட்டணை கொள்ளுதல்-இடம் வலமாகச் சாரி திரிந்து பகைவரைப் பொருது வெற்றி கொள்ளுதல். 'கொம்மைக்குய வட்டணை கொண்டிலெனோ' என்ற தொடர்க்கு 'மண் திரட்சியுள்ள குயவனுடைய சக்கரத்தைப் போலச் சுழல அடித்திலேனோ? எனவும், 'பருமையுள்ள அவர்கள் மார்பில் தாளம் போட்டிலேனோ?' எனவும் வேறு வேறு பொருள் கூறுவதும் உண்டு. கொம்மை - திரட்சி, பருமை. குயம் - மார்பு, குயச்சாதி. வட்டணை கொள்ளுதல் - சுழல அடித்தல், தாளம் போடுதல். (9)

7866. காய்ப்புண்ட நெடும்படை கையுளதாத்
தேய்ப்புண்ட வனுஞ்சில சில்கணையா

லாய்ப்புண்ட வனும்மவர் சொல்வலதா
வேய்ப்புண்ட வனும்மென வெண்ணினையோ.

'காய்ப்புண்ட நெடும் படை கை உளதாத்
தேய்ப் புண்டவனும், சில சில்கணையால்
ஆய்ப் புண்டவனும், அவர்சொல் வலதால்
ஏய்ப் புண்டவனும், என எண்ணினையோ ?

பொ :—(உலைக்களத்திற்) பழுக்கக் காய்ச்சிக் கூர்மை செய்யப் பட்ட நீண்ட படைக்கலம் தன் கையகத்தே யுளதாயிருக்கவும் (பகைவர்க்குத் தூதாக வந்த குரங்கினல் தரையில்) தேய்க்கப்பட்டவனும், (பகைவர் எய்த) சிலவாகிய சிறிய அம்புகளால் (தைக்கப்பட்டு) உயிர் ஒடுங்கியவனும், அப் பகைவர்க்குளதாகச் சொல்லப்பட்ட வெற்றிப் புகழினுல் வஞ்சிக்கப்பட்டவனும் என (வன்மையற்ற இவர்கள் வரிசையில் வைத்து என்னையும்) எண்ணினுயோ?

கு :—காய்ப்புண்ணுதல் - உலைக்களத்திலிட்டுக் காய்ச்சி வடித் தெடுக்கப்படுதல். நெடும்படை கையுளதாத் தேய்ப்புண்டவன் என்றது, தன் கையில் வலிய படைக்கலத்தினை ஏந்தியிருந்தும் அநுமனுல் தரையில் தேய்க்கப்பட்டு இறந்த அட்சகுமாரனை. சில சில்கணையால் ஆய்ப்புண்டவன் என்றது, இராமன் ஏவிய சில அம்புகள் உடம்பின் கண்ணே தைத்தலால் உயிரிழந்த கும்ப கருணனை. ஆய்ப்புண்ணுதல்-ஒடுங்குதல். அவர் என்றது இராம இலக்குவராகிய அப் பகைவர்களை. அவர் சொல்வலது-அவர்க்குள தாகச் சொல்லப்பட்ட வெற்றிப் புகழ். ஏய்ப்புண்டவன் என்றது, இராம இலக்குவர்க்கு உளதாகச் சொல்லப்பட்ட புகழுரையினைக் கேட்டு இராமனை அடைக்கலமாக அடைந்த வீடணனை. ஏய்ப் புண்ணுதல் - வஞ்சிக்கப்படுதல். தம் குலத்துக்குப் பழியுண்டாக நடந்து கொண்ட அட்சன் கும்பகருணன் வீடணன் ஆகியவர்களைப் போலன்றி 'யான் பகைவரை வென்றே தீர்வேன்' என அதிகாயன் தன்னுடைய பேராற்றலைத் தந்தைக்கு எடுத்துணர்த்தினுன் என்பதாம். (10)

### அதிகாயன் வஞ்சினங்கூறி, தான் போருக்குச் செல்ல விடை தருமாறு இராவணனை வேண்டுதல்

7867. உம்பிக்குயி ரீறுசெய் தானொருவன்
தம்பிக்குயி ரீறு சமைத்தவனைக்

கம்பிப்பதொர் வன்றுயர் கண்டிலெனேல்
நம்பிக்கொரு நன்மக னேவினிநான்.

'உம்பிக்கு உயிர் ஈறுசெய்தான் ஒருவன்
தம்பிக்கு உயிர் ஈறுசமைத்து, அவனைக்
கம்பிப்பது ஓர் வன்துயர் கண்டிலெனேல்,
நம்பிக்கு ஒரு நன்மகனே, இனி நான்?

பொ:—உன் தம்பி (கும்பகருணனு)க்கு உயிர்க் கேட்டினை யுண்டாக்கிய ஒருவனாகிய இராமனுடைய தம்பி இலக்குவனுக்கு உயிர்க்கிறுதியை யுண்டாக்கி அவ் இராமனை நடுக்கமுறச் செய்வதொரு கொடுந் துன்பத்தைச் செய்யாதொழிவேனாயின், இனி ஆடவரிற் சிறந்தானாகிய நினக்கு ஒப்பற்ற நல்ல புதல்வன் (எனக் கூறத் தக்கவன்) யான் ஆவேனோ?

கு:—உம்பி-உன் தம்பி; என்றது இராவணனுக்குத் தம்பியாகிய கும்பகருணனை. ஈறு - இறுதி, முடிவு. சமைத்தல் - உண்டாக்கல். ஒருவன் என்றதும் அவன் என்றதும் இராமனை. ஒருவன் தம்பி என்றது, இலக்குவனை. கம்பித்தல்-நடுங்குதல். வன்துயர்-செய்யப் பட்டாரால் பொறுத்தற்கரிய வன்மையுடைய துன்பம். நம்பி என்றது, ஆடவரிற் சிறந்த வீரனாகிய இராவணனை; படர்க்கைப் பெயர் முன்னிலைக் கண் வந்தது. 'நான் உன்னுடைய நல்ல மகன் எனத் தகும் சிறப்புடையேனாயின் இராமன் தம்பியாகிய இலக்குவனைக் கொன்று, இராமனால் உனக்கு நேர்ந்தது போன்ற கொடுந் துன்பத்தை அவ் விராமனுக்கும் உண்டக்கித் தீர்வேன். அங்ஙனம் செய்திலேனாயின் யான் நின் மகன் ஆகமாட்டேன்' என அதிகாயன் தன் தந்தை இராவணனை நோக்கி வஞ்சினங் கூறினான் என்பதாம். நன் மகனோ என்புழி ஓகாரம் எதிர்மறை. அதிகாயன் கூறிய இம் மொழி வஞ்சினக் காஞ்சி என்னும் புறத்துறையின் பாற்படும். "இன்னது பிழைப்பின் இது வாகியர் எனத் துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத்தானும்" (தொல்-புறத்-24) என இத்துறையினை விளக்குவர் தொல்காப்பியர். (11)

7868. கிட்டிப்பொரு தக்கிளர் சேனையெலாம்
மட்டித்துயர் வானரர் வன்றலையை
வெட்டித்தரை யிட்டிரு வில்லினரைக்
கட்டித்தரு வென்னிது காணுதியால்.

'கிட்டிப் பொருது, அக் கிளர் சேனை எலாம்
மட்டித்து, உயர் வானரர் வன் தலையை
வெட்டித் தரை இட்டு, இருவில் லினரைக்
கட்டித் தருவென்; இது காணுதியால்.

பொ :—(பகைவர் சேனையினை) நெருங்கிப் போர் செய்து' உள்ளக் கிளர்ச்சியுடன் எழுந்த அந்தச் சேனையை யெல்லாம் (பிசைந்து) அழித்து, வானர வீரர்களின் வலிய தலையினை வெட்டித் தரையில் வீழ்த்தி, வில் வீரராகிய (இராம இலக்குவர்) இருவரையும் பிணித்து (நின்பாற்) கொணர்வேன். (எனது வீரச் செயலாகிய) இதனை (நேரிற்) காண்பாய்.

கு :—கிட்டுதல்-நெருங்குதல். கிளர்தல்-உள்ளக்கிளர்ச்சியாகிய ஊக்கத்துடன் எழுதல். கிளர் அச் சேனையெலாம் என இயைத் துரைக்க. மட்டித்தல் - பிசைதல்; அழித்தல். இரு வில்லினரை என்புழி வில்லினர் இருவரை என உருபு பிரித்துக் கூட்டுக. வில்லினர் இருவர் என்றது, வில் வீரராகிய இராம இலக்குவர்களை. கட்டித் தருதல்-பாசத்தாற் பிணித்துச் சிறைப்படுத்திக் கொணர்தல். (12)

7869. சேனைக்கட லோடிடை செல்கெனினும்
யானிப்பொழு தேதனி யேகெனினும்
தானொத்தது சொல்லுதி தாவிடையென்
றுனித்திற முன்னி யரக்கர்பிரான்.

"'சேனைக் கடலோடு இடை செல்க" எனினும்
யான் 'இப்பொழுதே தனிஏக' எனினும்
தான் ஒத்தது சொல்லுதி; தா விடை' என்—
றுன்; இத்திறம் உன்னி அரக்கர்பிரான்.

பொ :—'சேனையாகிய கடலுடனே போர்க்களத்தின்கண் செல்வாயாக' எனக் கட்டளையிட்டாலும், (அன்றி) யான் இப்பொழுதே தனித்துச் செல்லவேண்டும் எனப் பணித்தாலும் நின் கருத்துக்கு இசைந்ததொன்றைச் சொல்வாயாக. (போருக்குச் செல்ல இப்பொழுதே) விடை தருவாயாக' எனக் கூறி முடித்தான் (அதிகாயன்). (கேட்ட) அரக்கர் கோமானுகிய இராவணன் (தன் மைந்தனது)வீரத் திறமையைச் சிந்தித்து,

கு :—இச்செய்யுள் குளகம். 'உன்னி' என்னும் செய்தென் வாய்பாட்டு வினையெச்சம், பின் 15-ஆம் செய்யுளில் 'ஏவினனுல்' என

வரும் தன் கருத்தாவின் வினைகொண்டு முடியும். கடல்போலும் பரப்பினையுடைய பெருஞ்சேனை என்பது புலப்படச் ‘சேனைக்கடல்’ என உருவக வாய்பாட்டாற் கூறினான். ‘விடைதா’ என்றது ‘தா, விடை’ என்றது, பகைவரைப் பொருதழித்தலில் தனக்குள்ள விரைவும் வேட்கையும் புலப்படுத்தியவாறு. தான் என்னும் படர்க்கைப் பெயர் ஈண்டு முன்னிலைக்கண் வந்தது. (13)

## அதிகாயன் கூறியது கேட்டு மகிழ்ந்த இராவணன் பெருஞ்சேனையுடன் போர்க்குச் செல்லுமாறு அவனுக்கு விடை கொடுத்தல்

7870. சொன்னாயிது நன்று துணிந்தனை நீ
அன்னானுயிர் தந்தனை யாமெனின்யான்
பின்னாள விராம னெனும்பெயரான்
தன்னாருயிர் கொண்டு சமைக்குவெனால்.

‘சொன்னாய், இது நன்று துணிந்தனை; நீ
அன்னான் உயிர் தந்தனையாம் எனின், யான்
பின்நாள், அ(வ்) இராமன் எனும் பெயரான்-
தன் ஆர்உயிர் கொண்டு சமைக்குவெனால்.

பொ :—(என் மைந்தனாகிய) நீ நலந்தரும் செயலை (எண்ணித்) துணிந்து இவ்வார்த்தையைக் கூறினாய். (நின்னாற் கூறப்பட்ட) அத்தன்மையோனாகிய இலக்குவனது உயிரைக் கவர்ந்து கொணர்ந்தனையாயின் அதன் பிற்கணத்திலேயே யான் இராமன் எனும் பெயரையுடையவனது அரிய உயிரைக் கவர்ந்து (கூற்றுவனுக்கு உணவாகச்) சமைத்திடுவேன்.

கு :—‘நீ நன்று துணிந்தனை இது சொன்னாய்’ என இயைத்துரைக்க. துணிந்தனை - துணிந்து; முற்றெச்சம். அன்னான் - அத்தன்மையோன்; என்றது, எனக்குத் துணை நின்றுதவிய என் தம்பி கும்பகருணனை யொத்துத் தன் தமையன் இராமனுக்குத் துணை நின்றுதவும் தன்மையினையுடைய தம்பியாகிய இலக்குவன் என்னும் குறிப்பினது. பின்நாள் – இலக்குவனுயிரைக் கவர்ந்த பிற்கணம். சமைத்தல் - உணவாகப் பக்குவப்படுத்தல். (14)

7871. போவாயிது போது பொலங்கழலோய்
மூவாயிர கோடிய ரோடுமுரட்

காவார்கரி தேர்பரி காவலினின்
றேவாதன யாவையு மேவினனால்.

'போவாய் இதுபோது—பொலங் கழலோய்!
மூவாயிர கோடியரோடு, முரண்
கா ஆர் கரி தேர் பரி காவலின் நின்று
ஏவாதன யாவையும் ஏவினனால்.

பொ:—'பொன்னால் இயன்ற வீரக் கழலை யணிந்தவனே! மூவாயிரகோடி என்னுந் தொகையினராகிய வீரர்களோடு (பகைவரொடு) மாறுபடும் வலிமையினை (நெகிழவிடாது) காத்தலைப் பொருந்திய யானை தேர் குதிரையாகிய சேனைக் காவலுடன் இப்பொழுதே (போருக்குப் புறப்பட்டுச்) செல்வாயாக' என்று கூறி(த் தன் இடத்தில்) நின்று (இதுகாறும் பிறர்க்குத் துணையாக) எவப்படாத(ஆற்றல் மிக்க) சேனைகளை (அதிகாயனுடன்) செல்லுமாறு பணித்தான் (இராவணன்).

கு:—'பொலங்கழலோய், மூவாயிரகோடியரோடு முரண்கா ஆர் கரி தேர் பரி காவலின் இதுபோது போவாய்' என்று, நின்று ஏவாதன யாவையும் ஏவினன் என இயைத்துப் பொருள் கொள்க. ஆல்—அசை. பொன் என்னும் சொல் பொலம் எனத் திரிந்தது. (தொல்—புள்ளிமயங்-61) முரண் - பகைவரொடு கொண்ட மாறுபாடு. கா ஆர்-காத்தல் பொருந்திய. கா, முதனிலைத் தொழிற் பெயர். (15)

7872. கும்பக்கொடி யோனு நிகும்பனும்வே
றம்பொற்கழல் வீர னகம்பனுமுன்
செம்பொற்பொலி தேரயல் செல்குவரா
லும்பர்க்கும்வெ லற்கரி யாருரவோர்.

'கும்பக் கொடியோனும், நிகும்பனும், வேறு
அம் பொன் கழல் வீரன் அகம்பனும், உன்
செம்பொன் பொலி தேர் அயல் செல்குவரால்
உம்பர்க்கும் வெலற்கு அரியார் உரவோர்.'

பொ:—(இராவணன் மீண்டும் அதிகாயனை நோக்கி) வானுலகத்தவராகிய தேவர்களாலும் வெல்லுதற்கரியராய்த் திண்மையிற் சிறந்த வீரர்களாகிய கும்பன் என்ற பெயருடைய கொடுந்தன்மையாளனும், நிகும்பன் என்பானும், (இவர்களின்) வேருய்ச் சிறப்பித்துரைக்கத்தக்க பொன்னாலியன்ற அழகிய வீரக் கழலையணிந்த வீரன்

அகம்பன் என்பானும் உனது செம்பொன்ஒலியன்று பொலிவுடன் விளங்கும் தேரின் பக்கத்தே (முன்னும் இருமருங்கினும் உனக்குத் துணையாகச்) செல்வார்கள்.

கு :—கும்பன், நிகும்பன் என்னும் இருவரும் கும்பகருண னுடைய புதல்வர்கள். அகம்பன் என்பான் சுமாலி என்னும் அரக்க னுடைய புதல்வன். (16)

இதன்பின் 63-என்னும் எண்ணுள்ள சுவடியிற் பின்வருமாறு ஒருமிகைப் பாடல் காணப்படுகிறது.

7872. (a) வாரந்தகன் யானவ ரந்தகன்வாழ்
நாரந்தக னுகர சானுநன்னுட்
டூரந்தகன் முத்தலை யோனெருகைப்
போர்முந்தினை யேலெழு போகுதியால்.

**7873.** ஓரேறு சிவற்குள தொப்புளவாம்
வாரேறு வயப்பரி யாயிரம்வன்
போரேறிட வேறுவ பூணுறுதிண்
டேரேறுதி தந்தனென் வெந்திறலோய்.

'ஓர் ஏறு சிவற்கு உளது ஒப்பு உளவாம்
வார் ஏறு வயப்பரி ஆயிரம், வன்
போர் ஏறிட ஏறுவ, பூணுறு திண்
தேர் ஏறுதி, தந்தனென்—வெந் திறலோய்!

பொ :—(பகைவரை அழித்தற்கேற்ற) வெம்மையும் வலிமையும் உடையவனே! சிவபெருமானுக்கு உரியதாகவுள்ள ஒப்பற்ற ஊர்தி யாகிய இடபத்தையே ஒப்புக் கூறத் தக்கனவும் வன்மை மிக்க போர்க்களத்திலே (மாற்றார் சேனைகளை) எதிர்த்து முன்னேறிச் செல்வனவும் ஆகிய வாரினைப் பூண்ட வலிய குதிரைகள் ஆயிரம் (பூட்டப் பெற்றுச்) சுமக்கும் திண்ணிய தேரினை (உனக்கு)த் தந்தேன்; (அதன்கண் விரைந்து) ஏறுவாயாக.

கு :—சிவற்கு உளது ஓர் ஏறு ஒப்பு உளவாம்பரி எனவும், வன் போர் ஏறிட ஏறுவவார் ஏறு வயப்பரி எனவும் பரி ஆயிரம் பூணுறு திண் தேர் எனவும் இயைத்துரைக்க. வய - வலி; உரிச்சொல். பூணுறுதல் - பூட்டப் பெற்றுச் சுமத்தல். திண்போர் விடையான்.
(17)

7874. ஆமத்தனை மாவுடை யத்தனைதேர்
சேமத்தன பின்புடை செல்லவடும்
கோமத்த நெடுங்கரி கோடியொடும்
போமத்தனை வெம்புர விக்கடலே.

'ஆம் அத்தனை மாவுடை அத்தனை தேர்
சேமத்தன பின்புடை செல்ல அடும்
கோ மத்த நெடுங் கரி கோடியொடும்,
போம், அத்தனை வெம் புரவிக் கடலே.'

பொ :—(ஆயிரம் எனப்) பொருந்திய அவ்வளவு குதிரைகளை யுடைய அத்தனை சேமத்தேர்கள் (உனக்குப்) பின்னும் (இரு) பக்கங்களிலும் (தொடர்ந்து) செல்ல, கொல்லுந் தன்மையினையுடைய தலைமையும் மதச் செருக்கும் உயர்ச்சியும் வாய்ந்த கோடி யானைகளோடும் அவ்வளவினவாகிய வெவ்விய குதிரைச் சேனையாகிய கடலும் (உன்னுடன்) செல்வனவாம்.

கு :—ஆம் அத்தனை - பொருந்திய அவ் அளவு; என்றது, மேற் செய்யுளிற் குறித்த ஆயிரம் என்னும் தொகையினை. மா - குதிரை. அத்தனை தேர் - ஆயிரம் என்னும் அவ்வளவினவாகிய தேர்கள். சேமத்தனதேர் - சேமத் தேர்கள்; என்றது, போர் செய்யுங் காலத்துத் தான் ஏறிய தேர் பகைவரால் அழிக்கப்படின் தனக்குப் பாதுகாவலாகப் பயன்படும்படி எய்ப்பில் வைப்பாக அனுப்பப்படுந் தேர்களை. பின்புடை – பின்னரும் பக்கங்களிலும், கோடி நெடுங்கரியொடும் அத்தனை வெம்புரவிக் கடல் போம் என இயையும். அத்தனை - மேற்குறித்த கோடி என்னும் அவ் அளவு கடலலை யோன்று மேன்மேற் பாய்ந்து மீதூர்தல் பற்றிக் குதிரைச் சேனை கடலாக உருவகிக்கப்பட்டது. (18)

அதிகாயன் போர்க்கோலம் பூண்டு பகைவர்மேற் சேறல்

7875. என்றேவிடை நல்க விறைஞ்சியெழா
வன்றாள்வயி ரச்சிலை கைக்கொடுவாள்
பொன்றாழ்கவ சம்புகு தாமுகிலின்
நின்றானிமை யோர்க ணௌிந்தனரால்.

என்றே விடைநல்க, இறைஞ்சி எழா,
வன்தாள் வயிரச் சிலை கைக்கொடு, வாள்

பொன்தாழ் கவசம் புகுதா, முகிலின்
நின்றான் ; இமையோர்கள் நெளிந்தன ரால்.

பொ :—என்று இவ்வாறு கூறி விடை கொடுக்க, (அதிகாயன், தன் தந்தையாகிய இராவணனை) வணங்கி எழுந்து வலிய முனையை யுடைய திண்மையான வில்லினைக் கையிற் கொண்டு வாட்படையினை யுடைய கரும் பொன்னாற் செய்யப்பட்ட கவசத்தினுள்ளே புகுந்து கரிய மேகம் போன்று (வானுற வுயர்ந்து) நின்றான்; (அது கண்டு) இமையா நாட்டத்தவராகிய தேவர்கள் நடுக்குற்று வருந்தினார்கள்.

கு :—வில்லைக் கையிற் கொண்டு உடைவாள் பொருத்தப்பட்ட இரும்புக் கவசத்தினை மேற்கொண்டு வானுற உயர்ந்து நிற்கும் கருமேனியனாகிய அதிகாயனுக்கு வான வில்லும் மின்னலும் உடையதாய் இயங்கும் கருமுகில் உவமையாயிற்று. தன்னுடம்பு முழுவதும் மறையும்படி இரும்புக் கவசத்தைத் தன்மேல் அணிந்துகொண்டு நின்றான் என்பார், ‘பொன்தாழ் கவசம் புகுதா நின்றான்’ என்றார். பொன் – கரும்பொன் ; இரும்பு. தாழ்தல் - தங்குதல். கவசம் என்பது, பகைவர் எய்யும் படைக்கலங்கள் தம்மார்பில் படாதவாறு போர் வீரர்கள், அணிந்து கொள்ளும் மெய்யுறை. புகுதா – புக்கு. நெளிதல் – நடுங்கி உடல் தளர்தல். (19)

**7876.** பல்வேறு படைக்கலம் வெம்பகலோன்
எல்வேறு தெரிப்பகொ டேகினனால்
சொல்வேறு தெழிக்குநர் சுற்றுறமா
வில்வேறு தெரிப்புறு மேனியினான்.

பல்வேறு படைக்கலம், வெம் பகலோன்
எல் வேறு தெரிப்ப, கொடு ஏகினனால்,
சொல் வேறு தெழிக்குநர் சுற்றுறு, அ(ம்)மா
வில் வேறு தெரிப்புறும் மேனியினான்.

பொ :—பலவேறு சொற்களால் உரப்பி அடக்குவோராகிய பாகர் பலர் சூழ்ந்து தொடரும் அத்தகைய மதயானையினும் (இது) வேறு எனப் புலப்படுத்தும் (பெரிய) உடம்பினையுடையவனாகிய அதிகாயன் என்பான், வெம்மையுடைய பகற் பொழுதைச் செய்யும் கதிரவனது ஒளியினும் மிக்கு வேறுபட்ட ஒளியினை வீசுவனவாகிய பலவேறு ஆயுதங்களைக் கைக்கொண்டு சென்றான்.

கு :—நிலத்தின்மீது இயங்கும் உயிரினங்களில் மிகப் பெரிய உடம்பினையுடையது யானை. அத்தகைய பேருடம்பினையுடைய

யானையினும் மிகப் பெரிய உடம்பினைப் பெற்றவன் அதிகாயன் என அவனது பெயர்க் காரணத்தை விளக்குவார், 'சொல் வேறு தெழிக்குநர் சுற்றுறு அ(ம்) மாவில் வேறு தெரிப்புறு மேனியினான்' என்றார். அதிகாயன் - பெரிய உடம்பினையுடையவன். சொல் என்றது, யானையைப் பயிற்றும் முறையிற் பாகர் கூறும் மொழியினை. தெழித்தல் - உரப்பிக் கூறுதல். தெழிக்குநர் என்றது மதயானை உரப்பி அடக்குந் தொழிலினராகிய யானைப் பாகர்களை. தெழிக்குநர் சுற்றுறு அ(ம்) மா என்றது, பாகர் பலரால் தொடரப்படும் அத் தன்மையையுடைய மதயானையினை. 'மாவில் வேறு தெரிப்புறு மேனி' என்ற அந்த யானையினும் (இது) வேறு எனப் புலப்படுத்தும் நிலையில் அமைந்த பெரிய உடம்பினை. ஐந்தாமுருபாகிய இல் என்பது, ஈண்டு உறழ்ச்சிப் பொருளில் வந்தது. வெம்பகலோன் - வெம்மையுடைய பகற்பொழுதைச் செய்யும் கதிரவன். எல் - ஒளி. தெரிப்ப - தெரிப்பன. தெரித்தல் - புலப்படுத்துதல்; வீசுதல். கொடு - கொண்டு. மேனியினான் - குறிப்பு வினையாலணையும் பெயர். மேனியினான், பகலோன் எல் வேறு தெரிப்ப - பல்வேறு படைக்கலம் கொடு ஏகினன் என முடியும். ஆல் - அசை. (20)

இதன்பின் 52-என்னும் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின் வருமாறு இரண்டு மிகைப்பாடல்கள் உள்ளன :—

7876 (a) முதிர் போர் உறு மொய்ம்பன், முனைத் தலையில்
சதிர் ஏறிய தானை தழைத்திட, அங்கு
எதிர் தேரிடை ஏறினன்; மற்று ஒருவெங்
கதிரோன் இகல் கண்டிட ஏகினனால்.

7876 (b) தேர் வெள்ளம் அளப்பு இல; திண் புரவித்
தார் வெள்ளம் அளப்பு இல; தந்தி இனக்
கார் வெள்ளம் அளப்பு இல கண்டகராம்.
பேர் வெள்ளம் அளப்பு இல பெற்றதுவால்.

## அதிகாயனுடன் சென்ற சேனைகள்

7877. இழையஞ்சன மால்களி றெண்ணிலரி
முழையஞ்ச முழங்கின மும்முறைநீர்
உழையஞ்ச முழங்கின நாணொலிகொள்
மழையஞ்ச முழங்கின மாமுரசே.

இழை அஞ்சன மால்களிறு, எண் இல் அரி
முழை அஞ்ச முழங்கின; மும்முறை நீர்

உழை அஞ்ச முழங்கின ; நாண்ஒலி ; கோள்
மழை அஞ்ச முழங்கின, மா முரசே.

பொ :—நுண்ணிதாகக் குழைத்து அமைக்கப்பட்ட மைபோலும் நிறத்தினையுடைய பெரிய யானைகள், எண்ணற்ற வன்மையுடைய சிங்கங்கள் மலைக் குகையினுள்ளே அஞ்சி யொடுங்கும்படி பேரொலி படப் பிளிறின. (அரக்க வீரர்கள் தெறித்த) வில் நாணின் ஒலிகள் முந்நீராகிய கடலிடத்தே வாழும் பல்லுயிர்களும் அஞ்சும்படி ஒலித்தன. (படையெழுச்சி குறித்து அறையப்பட்ட) போர் முரசங்கள் நீரைக் கொண்ட மழை மேகங்களும் அஞ்சிச் சிதறும்படி (இடிபட) முழங்கின.

கு :—இழைத்தல் – நுண்ணிதாகக் குழைத்தல். அஞ்சனம்–மை. அதிகாயனுடன் சென்ற சேனையிலுள்ள யானைகளின் பிளிற்றொலி யைக் கேட்ட அளவில் ஆற்றல் மிக்க சிங்கங்கள் பலவும் அஞ்சி மலை முழைகளின் உள்ளே ஒடுங்கின எனவும் அரக்கர்களின் வில் நாணொலிகளைக் கேட்டுக் கடலிடத்தேயுலவும் திமிங்கிலம் முதலியன அஞ்சி யொடுங்கின எனவும் சேனையின் போர் முரசொலி கேட்டு வானிடத்தேயுலவும் மழை மேகங்கள் இடிபடச் சிதறுண்டன எனவும் அதிகாயனுடன் சென்ற சேனையின் ஆரவாரத்தினையும் பேராற் றலையும் புலப்படுத்தியவாறு. உலகிற் பல்லுயிர்களைப் படைத்தற்கும் காத்தற்கும் அழித்தற்கும் உரிய மூன்று தன்மையும் ஒருங்கு வாய்க்கப் பெற்றது கடலாதலின் அதற்கு 'முந்நீர்' என்பது காரணப் பெயரா யிற்று. அதன் பெயர்க் காரணத்தை இனிது விளக்குவார், அதனை 'மும்முறை நீர்' என விரித்துரைத்தார் ஆசிரியர். இது சொற் பொருள் விரித்தல் என்னும் உத்தியின்பாற்படும். முறை – தன்மை. இச்சொல் 'முத்தீப்பேணு முறையெமக்கில்லென' (மணிமே–22,48) என இப்பொருளில் வருதலறிக. உழை - இடம்; அஃது ஆகுபெய ராய் அவ்விடத்து வாழும் உயிர்களைக் குறித்தது. (21)

**7878.** ஆர்த்தார்நெடு வான நடுங்கவடி
பேர்த்தார்நில மாமகள் பேர்வளெனத்
தூர்த்தார்நெடு வேலைக ளூளியினால்
வேர்த்தாரது கண்டு விசும்புறைவோர்.

ஆர்த்தார், நெடு வானம் நடுங்க; அடி
பேர்த்தார், நில மா மகள் பேர்வள் என ;
தூர்த்தார் நெடு வேலைகள் தூளியினால்
வேர்த்தார், அதுகண்டு, விசும்பு உறைவோர்.

பொ :—(அதிகாயனுடன் சென்ற வீரர்கள்,) நெடிய வானமும் நடுக்குற்று அசையுமாறு போர் முழக்கஞ் செய்தனர். (எல்லாவற்றையும் பொறுக்கும்) பெருமையுடைய பூமிதேவி இனி இடம்விட்டுப் பெயர்வாள் எனக் கருதுமாறு (நிலத்தில்) அடிபெயர்த்து நடந்தார்கள். (அவர்கள் விரைந்து நடத்தலால் எழுந்த) தூசிப் படலத்தால் நீண்ட கடல்களைத் தூர்ந்து மேடாகுமாறு செய்தனர். அது கண்டு வானத்தில் வாழ்வோராகிய தேவர்கள் (அஞ்சி) உடல் வியர்த்தார்கள்.

கு :—வேர்த்தல், அச்சத்தினுலுளதாகிய மெய்ப்பாடு. (32)

7879. அடியோடு மதக்களி யானைகளின்
பிடியோடு நிகர்த்தன பின்புறமுன்
தடியோடு துடக்கிய தாரையவெண்
கொடியோடு துடக்கிய கொண்மூவெலாம்.

அடி ஓடும் மதக் களி யானைகளின்
பிடியோடு நிகர்த்தன, பின்புறம்; முன்
தடியோடு துடக்கிய தாரைய, வெண்
கொடியோடு துடக்கிய கொண்மு எலாம்.

பொ :—முற்பட விளங்கும் மின்னலுடன் பொருந்திய ஒழுங்கினையுடையவாய் (யானைகளின்மேல் உயர்ந்து ஓங்கிய) வெண்ணிறக் கொடிகளாற் பிணிப்புற்று (அவற்றைத் தொடர்ந்து) செல்லும் மேகங்கள் எல்லாம், மதச் செருக்குடைய ஆண் யானைகளின் பின்புறத்தனவாய் (அவற்றின்) அடிச் சுவட்டினைத் தொடர்ந்து ஓடும் பெண் யானைகளை ஒத்தன.

கு :—முன் தடியோடு துடக்கிய தாரைய வெண் கொடியோடு துடக்கிய கொண்மு எலாம், மதக்களி யானைகளின் பின்புறம் அடி ஓடும் பிடியோடு நிகர்த்தன என இயைத்துரைக்க. அடி ஓடுதல் - அடிச் சுவட்டின் வழியே தொடர்ந்து விரைதல். அடி - அடிச்சுவடு; ‘வயமான் அடித் தேர்வான்போல’ (குறிஞ்சிக்கலி-2) என்புழி இச் சொல் இப் பொருளிற் பயின்றுள்ளமை காணலாம். மதக்களி யானை - மதச் செருக்குடைய ஆண் யானை. தடி - தடித்து, மின்னல். ‘தடியுடை முகிற்குலம்’ (கம்பர்–பால–தாடகை–37) என முன் வந்தமையறிக. துடக்குதல் – பிணிப்புறுதல்; விட்டு நீங்க வொண்ணுதவாறு பற்றி இழுக்கப்படுதல். கொண்மூ என்பது கொண்மு எனக் குறுகி நின்றது. கொண்மூ - மேகம். யானை வீரர்கள் உயர்த்துப் பிடித்த வெண்ணிறக் கொடிகளாற் பிணிப்புற்று

மதயானைகளின் பின்னே தொடர்ந்து செல்லும் மேகங்கள், அவ் ஆண் யானைகளைத் தொடர்ந்து பின் செல்லும் பெண் யானைகளை ஒத்துத் தோன்றின என்பதாம். (23)

7880 தாருடின மால்கரி யின்புடைதாழ்
மாருடின மாமத மண்டுதலா
லாருடின பாய்பரி யானைகளுஞ்
சேருடின சேணெறி சென்றவெலாம்

தாறு ஆடின மால் கரியின் புடை தாழ்
மாருடின மா மதம் மண்டுதலால்
ஆறு ஆடின, பாய் பரி; யானைகளும்
சேறு ஆடின, சேண்நெறி சென்ற எலாம்.

பொ :—அங்குசத்தினுற் குத்துதல் பயின்ற மத மயக்கமுள்ள யானைகளின் (கன்னங்களின்) இரு மருங்கினும் ஒன்றினென்று மாறுபட்டுப் பெருக்கெடுத்து இழியும் கரிய மதநீர் நிரம்பி மேற் செல்லுதலால் உண்டாகிய ஆற்றின்கண்ணே பாயுந்தன்மை வாய்ந்த குதிரைகள் குளித்தன; யானைகளும் (அவை) சென்ற நெடிய வழிகள் எல்லாமும் சேறுபட்டனவாயின.

கு :—தாறு - யானைகளை அடக்கும் குத்துக் கோலாகிய அங்குசம். தாறு ஆடுதலாவது, அங்குசத்தாற் பலமுறை குத்தப்படுதல். மால்- மதமயக்கம். புடை - பக்கம். தாழ்தல் - மேனின்று இழிதல். மதம் மாருடுதலாவது ஒன்றினென்று மிக்குப் பெருகுதல். மண்டுதல் - மேற் செல்லுதல். யானைகளும் அவை சென்ற சேணெறி எல்லாமும் சேருடின என்க. எல்லாம் என்புழி உம்மை தொக்கு நின்றது. அதிகாயனுடன்சென்ற யானைகளின்மிகுதியைப் புலப்படுத்தக் கருதிய ஆசிரியர், உயர்வு நவிற்சி என்னும் அணிநலம் பொருந்த இவ்வாறு புனைந்துரைத்தாரென்க. யானைகளின் மதநீராறு குதிரைகள் நீராடவும் யானை படியுங்கால் சேருகவும் அமைந்தது என்றமையால் இப்புனைந்துரை இறப்பப் புனைந்துரைத்ததாகாமை தெளிக. ‘சோறுவாக்கிய கொழுங் கஞ்சி, யாறுபோலப் பரந்தொழுகி’ என வரும் பட்டினப் பாலைத் தொடரில் யாறு என்ற அளவில் அதனைப் பேரியாறெனக் கொண்டு உலகியலைக் கடந்த புனைந்துரையாகக் கொள்ளாதவாறு ‘ஏறு பொரச் சேருகித் தேரோடத் துகள்கெழுமி’ என ஆசிரியர் உருத்திரங்கண்ணனர் அதனைக் கேட்டார் மனங் கொள்ளும் வண்ணம் சிறப்புடைமையில் தீராக் குறிப்புடன் கூறி யுள்ளமை இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாகும். (24)

7881. தேர்சென்றன செங்கதி ரோனொடுசே
ரூர்சென்றன போலொளி யோடைகளின்
கார்சென்றன கார்நிறை சென்றனபோற்
பார்சென்றில சென்றன பாய்பரியே.

தேர் சென்றன, செங்கதிரோ னொடு சேர்
ஊர் சென்றனபோல்; ஒளி ஓடைகளின்
கார் சென்றன, கார்நிறை சென்றனபோல்;
பார் சென்றில, சென்றன பாய் பரியே.

பொ :—செந்நிறம் வாய்ந்த சூரியனுடன் ஊர்கோளாகிய ஒளி வட்டங்கள் சூழ்ந்து சென்றன போன்று (அதிகாயன் ஏறிய பொன் மயமான தேரைச் (சுற்றித்) தேர்கள் பல சென்றன. (மின்னலுடன்) மேக வொழுங்குகள் சென்றன போன்று ஒளி திகழும் நெற்றிப் பட்டத்தினையுடைய யானைகள் சென்றன; (சேனைகளுடன்) சென்றனவாகிய (வானத்திற்) பாயும் இயல்புடைய குதிரைகள் பூமியில் (அடிவைத்துச்) சென்றில.

கு :—ஊர் – ஊர்கோள்; சூரிய சந்திரர்களைச் சூழ்ந்து காணப் படும் ஒளி வட்டம். இதனைப் பரிவேடம் எனவும் வழங்குவர். அதிகாயன் அமர்ந்து சென்ற தேர் ஞாயிற்று மண்டலத்தை யொத்து விளங்க, அதனைச் சூழ்ந்து சென்ற ஏனைய தேர்கள் கதிரவனைச் சூழ அமைந்த ஊர்கோளாகிய ஒளிவட்டத்தை யொத்துத் தோன்றின என்பார், 'செங்கதிரோனொடு சேர் ஊர் சென்றனபோல் தேர் சென்றன' என்றார். ஓடைகளின் கார் என்றது, நெற்றிப் பட்டம் அணிந்த கருமை நிறம் வாய்ந்த யானையினை. கார்நிரை – மேகங் களின் வரிசை. கார் நிரை சென்றனபோல் ஓடைகளின் கார் சென் றன என இயையும். ஓடை – யானையின் நெற்றியில் அணியும் பட்டம். யானை தேர் ஆகிய சேனைகளுடன் சென்ற குதிரைகள் பறவைகள் போன்று வானிடத்தே தாவி மேற் செல்லும் இயல்பின வாதலால் அக்குதிரைகள் தம் கால்கள் தரையிற் படியும்படி சென்றில என்பார், 'சென்றன பாய் பரி பார் சென்றில' என்றார். (25)

இதன் பின் 52– ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வரு மாறு ஒரு மிகைப் பாடல் உள்ளது :—

7881 (a) மல் ஏறிய திண்புய மள்ளர் கரத்து
எல் ஏறிய வாள், எழு, வல் முசலம்
வில்லோடு அயில், வெங்கதை, வேல், முதலாம்
பல் ஆயுத பத்தி பரித்து உடையார்.

போர்க்களத்திற் புக்க அதிகாயன் மனம் புழுங்கியவனாய், கும்பகருணனது தலையற்ற உடலைக் கண்டு வருந்துதல்

7882. மேருத்தனை வெற்பின மொய்த்துநெடும்
பாரிற்செலு மாறுப டப்படரும்
தேர்சுற்றிட வேகொடு சென்றுமுரட்
போர்முற்று களத்திடை புக்கனனால்.

மேருத்தனை வெற்புஇனம் மொய்த்து, நெடும்
பாரில் செலுமாறு படப் படரும்
தேர் சுற்றிடவே, கொடு சென்று முரண்
போர் முற்று களத்திடை புக்கனனால்.

பொ :—(மிகப் பெரிய) மேருமலையினை (ஏனைய) குலமலைகள் நெருங்கிச் சூழ்ந்து (அம் மேரு மலையுடன்) நீண்ட பூமியின் மேற் சென்றாற்போலும் தோற்ற முண்டாக (நிலத்திற்) செல்லும் தேர்கள் (தனது தேரினைச்) சூழ்ந்து செல்ல (நால்வகைச் சேனைகளையும்) உடன்கொண்டு, (பகைவர்) வலிய போரால் வளைத்தலைச் செய்த போர்க்களத்தின் கண்ணே சென்று புக்கான் (அதிகாயன்).

கு :—மேருத்தனை - மேருவை; தன் என்பது சாரியை. வெற்பினம் - மலைகளின் தொகுதி. மொய்த்தல் - நெருங்கிச் சூழ்தல். செலும் ஆறு – செல்லுந் தன்மை. பட-உண்டாக. படுதல் - உண்டாதல். படர்தல் - செல்லுதல். முரண் - வன்மை. போர் முற்று களம்-(பகைவர்) போர்த்தொழிலால் வளைத்தலைச் செய்த போர்க்களம். முற்றுதல்–வளைத்தல். “நீர் முற்றி மதில் பொரூஉம் பகையல்லால் நேராதார் போர் முற்றொன்றறியாத பொய்கைசூழ் புனலூரன்” (கலித்தொகை–67) என்புழிப் ‘போர் முற்று’ என்பது இப் பொருளிற் பயின்றுள்ளமை காண்க. நிலையாயுள்ள மேருமலையை ஏனைய மலைத்தொகுதிகள் நெருங்கிச் சூழ்ந்து அம்மலையுடன் பூமியிற் சென்றாற்போலும் தோற்றமுண்டாகத் தன் படைத் தலைவர் தேர்கள் தன்னுடைய தேரைச் சூழ்ந்துவர அதிகாயன் போர்க்களத்தை அடைந்தான் என்பதாம். இச் செய்யுள் இல்பொருளுவமை என்னும் அணிநலந் தழுவியதாகும். (26)

7883. கண்டான வீராம னெனுங்களிமா
வுண்டாடிய வெங்கள னூடுருவப்
புண்டானுறு நெஞ்சு புழுக்கமுறத்
திண்டாடினன் வந்த சினத்திறலோன்.

கண்டான், அ(வ்) இராமன் எனும் களிமா
உண்டாடிய வெங்களன்; ஊடுருவ
புண்தான் உறு நெஞ்சு புழுக்கம் உறத்
திண்டாடினன், வந்த சினத் திறலோன்.

பொ :—(போர்க்களத்தின்கண்) வந்த வெகுளியும் வீரமும் உடையனுகிய அதிகாயன், அந்த இராமன் என்னும் மதயானே (அரக்கர் சேனேகளேக் கவளமென) விழுங்கி விளேயாடிய போர்க் களத்தினேக் கண்டான்; (அதன் கொடுந் தோற்றம்) தன் உள் ளத்தில் ஊடுருவி வருத்த (அதனுற்) புண்பட்ட தன் மனம் வெதும்பிப் புழுக்கமடைய (வெகுளியாற் செய்வதறியாது) மனங் கலங்கித் தடுமாறினுன்.

கு :—வந்த சினத்திறலோன், இராமனெனுங் களிமா உண் டாடிய வெங்களன் கண்டான்; ஊடுருவப் புண்தான் உறுநெஞ்சு புழுக்கம் உறத் திண்டாடினன் என முடிக்க. உயர்ந்த தோற்றப் பொலிவும் பகையினேச் சிதற அடிக்கும் பேராற்றலும் நோக்கி இராமனே மத யானேயாக உருவகித்தார் ஆசிரியர். திண்டாடுதல்— மனங்கலங்கித் தடுமாறுதல். (27)

7884. மலேகண்டன போல்வரு தோளொடுதாள்
கலேகண்ட கருங்கடல் கண்டுளவாம்
நிலேகண்டன கண்டொரு தாதைநெடுந்
தலேகண்டில னின்று சலித்தனனுல்.

மலே கண்டனபோல் வரு தோளொடு தாள்
கலே கண்ட கருங் கடல் கண்டு, உளவாம்
நிலே கண்டன கண்டு, ஒரு தாதை நெடுந்
தலே கண்டிலன், நின்று சலித்தனனுல்.

பொ :—மலேயைக் கண்டாற் போலும் தோற்றத்துடன் பொருந்திய தோள்களுடன் கால்களும் கலேதலேப் பொருந்திய கரிய கடலேப் போலும் தோற்றமுடைய (கும்பகருணனது) உடம்பினேக் கண்டு (அவ்விடத்து) உளவாகிய நிலேமையினேக் கண்ணுற்று, ஒப் பற்ற தந்தையாகிய அக் கும்பகருணனது நெடுமை பொருந்திய தலே யினேக் காணுதவனுகி (அப் போர்க்களத்தில்) நின்று (தம் திறத்து நேர்ந்த அவலநிலேயினே யெண்ணி) வெறுப்புற்ருன் (அதிகாயன்).

கு :—கலே-கலேதல்; நீங்குதல். எல்லேயற்ற பேரளவினதாய்க் கரிய நிறமுடைய கும்பகருணனது உடம்பினைக் 'கருங்கடல்' எனக் குறித்தார். ஒரு தாதை என்றது ஒப்பற்ற சிறிய தந்தையாகிய கும்ப கருணனை. சலித்தல்-வெறுப்புற்று வருந்துதல். (28)

7885. மிடலொன்று சரத்தொடு மீதுயர்வான்
றிடலன்று திசைக்களி றன்றொருதிண்
கடலன்றிதெ னெந்தை கடக்கரியா
னுடலென்றுயி ரோடு முருத்தனனல்.

'மிடல் ஒன்று சரத்தொடு மீது உயர் வான்
திடல் அன்று; திசைக் களிறு அன்று, ஒரு திண்
கடல் அன்று; இது என்? எந்தை கடக்க அரியான்
உடல்' என்று, உயிரோடும் உருத்தனனல்.

பொ:—(எதிரே காணப்படும்) இவ்வுருவம், வன்மைபொருந்திய) அம்புடனே வானுற வோங்கிய மேட்டு நிலம் அன்று; திசை யானை யன்று; ஒப்பற்ற திண்மை வாய்ந்த கடலன்று; (வேறு) யாதாயிருக்க முடியும்? (யாவராலும்) வெல்லுதற்கு அரியவனும் என் (சிறிய) தந்தையும் ஆகிய கும்பகருணனது உடம்பேயாகும் என்று நெட்டுயிர்ப் போடும் வெகுள்வானுயினன்.

கு :—மிடல்-வலிமை. சரம்-அம்பு. இது, சரத்தொடு வான்மீது உயர் திடல் அன்று; திசைக் களிறு அன்று; (வேறு) என்? கடக்க அரியான் எந்தை உடல் என இயையும். கடக்க அரியான் என்புழி வினையெச்சத்து அகரம் செய்யுள் விகாரத்தால் தொக்கது. கடக்கரி யான் என்பதற்கு மத மொழுகப் பெற்ற யானே போன்றவன் எனவும், யானைச் சேனையை யுடையவன் எனவும் பொருளுரைத்தலும் உண்டு. கடம்-மதநீர். உயிர்-நெட்டுயிர்ப்பு; பெருமூச்சு. உருத்தல்-வெகுளுதல். (29)

சினமுற்ற அதிகாயன் வஞ்சினங் கூறி, மயிடன் என்பானை நோக்கி, 'இலக்குவன்பால்தூதுசென்று அவனைத் தனிநின்று போர்செய்ய அழைத்துவருக' எனச் சொல்லி அனுப்புதல்

7886. எல்லேயிவை காணிய வெய்தினனே
வல்லேயுள ராயின மானுடரைக்

கொல்லேனொரு நானுயிர் கோணெறியிற்
செல்லேனெனி னிவ்விடர் தீர்குவெனே.

'எல்லே! இவை காணிய எய்தினெனே?
வல்லே உளராயின மானுடரைக்
கொல்லேன், ஒரு நான், உயிர்கோள் நெறியில்
செல்லேன், எனின், இவ் இடர் தீர்குவெனே?'

பொ:—ஒப்பற்ற வீரனாகிய யான், அந்தோ! இவ்வாறான அவலக் காட்சிகளைக் காணுதற்கோ இங்கு வந்தேன். (என் தந்தையைக் கொன்ற பின்னும்) உயிரோடுள்ளாராகிய (இராம இலக்குவராகிய) மனிதர்களை விரைந்து கொன்றொழியேனாயின், (அவரது) உயிரைக் கவர்ந்து கொள்ளும் போர்த் துறையிற் செல்லேனாயின் இத்துன்பம் நீங்கப் பெற்றவன் ஆவேனோ?

கு:—எல்லே என்பது, இரக்கக் குறிப்புணர்த்தும் இடைச் சொல். 'கண்டார்க்குப் பொல்லாது கண்டீர் எல்லே' (6-45-3) எனத் தேவாரத்தும் 'எல்லே யிளங்கிளியே இன்னும் உறங்குதியோ' எனத் திவ்யப் பிரபந்தத்தும் இச்சொல் இப்பொருளில் வழங்குதல் இங்கு ஒப்புநோக்கத் தக்கதாகும். இவை என்றது, தன் சிறிய தந்தையின் உடல் பகைவரது அம்புக்கு இலக்காகித் தோளும் தாளும் அற்றுத் தலையின்றித் தரையிற் கிடத்தலும், அரக்கர் சேனைகள் அழிவுற்றுக் கிடத்தலும் ஆகிய அவலக் காட்சிகளை. காணிய – காண. என் தந்தையைக் கொன்ற மானுடர் இருவரும் அச்சமிலராய் இன்னும் உயிர் தாங்கியிருத்தலும் அவரது இன்னுயிரைக் கவரும் போர்த் துறையில் விரைந்து செல்லாது யான் காலந் தாழ்த்தலும் எனது வீரத்திற்கு இழுக்காதலேயன்றி என் மனத் துயரையும் மிகுதிப்படுத்துவன என்பான், உளராயின மானுடரைக் கொல்லேன் (எனின்), உயிர்கோள் நெறியிற் செல்லேன் எனின், இவ்விடர் தீர்குவெனே' என்றான். எனின் என்பது முன்னுங் கூட்டப்பட்டது. (30)

7887. என்னாமுனி யாவி திழைத்துளவன்
பின்னானையு மிப்படி செய்துபெயர்ந்
தன்னானிடர் கண்டிட ராறுவெனென்
றுன்னாவொரு வற்கி துணர்த்தினனால்.

என்னா முனியா, 'இது இழைத்துளவன்
பின்னானையும் இப்படி செய்து பெயர்ந்து,

அன்னான் இடர்கண்டு, இடர் ஆறுவென்' என்று
உன்னா, ஒருவற்கு இது உணர்த்தினனால்.

பொ :—என்று கூறி வெகுண்டு, 'இக்கொடுமையைச் செய்து (உயிருடன்) உள்ளவனுடைய தம்பியையும் இவ்வாறு (சித்திரவதை) செய்து மேற்சென்று முன்னோனாகிய அவனது (ஆற்றொணாத்) துன்பத்தை (நேரிற்) கண்டு (என் மனத்) துயர் தணிவேன்' என எண்ணி(த் தன் அருகில் நின்ற மயிடன் என்னும்) தூதன் ஒருவனுக்கு(ப் பின் வருமாறு) இதனை அறிவுறுத்தினான் (அதிகாயன்).

கு :—இது என்றது, தன் தந்தை முறையினனாகிய கும்பகருணனது உடம்பினைக் கைவேறு கால்வேறாகத் துணித்துத் தலையினைக் கடலிற்றள்ளி முண்டமாகத் தரையிற் கிடக்கும்படி செய்த இக்கொடுமைச் செயலை இழைத்து(ள்)ளவன் என்றது, இதனைச் செய்து உயிரோடுள்ளவனாகிய இராமனை. பின்னான் என்றது, அவன் தம்பியாகிய இலக்குவனை. இப்படி செய்தல் – இராமன் கும்பகருணனைச் செய்ததுபோலத் தலையும் காலும் முதலிய அங்கங்கள் வேறு வேறாகச் சிதறிக் கிடக்கச் சித்திரவதை செய்தல். பெயர்தல் என்றது, அவ்விடத்தைக் கடந்து மேற் செல்லுதலை. அன்னான் என்றது இராமனை. ஆறுதல் - தணிதல். ஒருவன் என்றது தூதனாகிய மயிடனை. இது - இச்செய்தி; பின்வருஞ் செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். (31)

7888. வாநீமயி டன்னொரு வல்விசையிற்
போநீய விலக்குவ னிற்புகல்வாய்
நானீது துணிந்தனெ னண்ணினெனால்
மேனீயி துணர்ந்து விளம்பிடுவாய்.

'வா நீ, மயிடன்! ஒரு வல் விசையில்
போ, நீ அ(வ்) இலக்குவனில்; புகல்வாய்;
நான் ஈது துணிந்தனென், நண்ணினெனால்;
மேல் நீ இது உணர்ந்து விளம்பிடுவாய்.

பொ :—மயிடனே! நீ இங்கே வா; ஒப்பற்ற வன்மையுடனும் விரைவுடனும் நீ அவ் இலக்குவனிடத்திற்குப் போய்க் கூறுவாயாக; ('அதிகாயனாகிய) நான் (இங்கு எந்தைக்குச் செய்யப்பட்ட) இச்செயலை (இலக்குவனுக்குச் செய்ய) எண்ணித் துணிந்தவனாகி இங்கு வந்துள்ளேன். இதனை நீ உணர்ந்து மேற்கூறுவனவற்றையும் அவனுக்குக் கூறுவாயாக.'

கு :—மயிடன் ! நீ வா ; ஒரு வல் விசையின் நீ இலக்குவன் இல் போ புகல்வாய் ; நான் ஈது துணிந்தனென் ; இது நீ உணர்ந்து மேல் விளம்பிடுவாய் என இயையும். மயிடன், அண்மை விளி. இலக்குவனில் – இலக்குவன்பால் ; இல், ஏழா முருபு. தன் சிறிய தந்தையாகிய கும்பகருணன் போர்க்களத்திற் கைவேறு கால்வேருக வெட்டுண்டு தலையின்றித் தரையில் வீழ்ந்து கிடக்கும் அவல நிலையினை 'ஈது' எனச் சுட்டிக்காட்டி இதனையொத்த அவல நிலையை இலக்குவன் திறத்துச் செய்யத் துணிந்தேன் என்பது புலப்பட 'நான் ஈது துணிந்தனென் ' என்ருன் அதிகாயன். (32)

7889. அந்தாரிள வற்கயர் வெய்தியமுந்
தந்தாதை மனத்திடர் தள்ளிடுவான்
உந்தார்துய ரோடு முருத்தெதிர்வான்
வந்தானென முன்சொல் வழங்குதியால்.

"'அம் தார் இளவற்கு அயர்வு எய்தி அழும்
தம் தாதை மனத்து இடர் தள்ளிடுவான்,
உந்து ஆர் துயரோடும் உருத்து, எதிர்வான்
வந்தான் " என முன்சொல் வழங்குதியால் ;

பொ :—'அழகிய மாலையினையணிந்த (தன்) தம்பி (இறந்தமை)க்கு வருத்தமுற்று ஆற்ருது அழும் தந்தையின் மனத் துயரத்தைப் போக்குதற் பொருட்டு(த் தன்னுள்ளத்தினின்று மேன்மேற்) கிளர்ந்து நிறையும் துயரத்துடன் சினந்து (நின்னுடன்) எதிர்த்துப் பொருதற்கு வந்தான் (அதிகாயன்') என முன்னரே சொல்லத்தக்க (அறிவுறுத்தல்) மொழியினை (அவ் இலக்குவனுக்கு)ச் சொல்வாயாக.

கு :—இளவல் - தம்பி; என்றது இராவணனுக்குத் தம்பியாய கும்பகருணனை. இளவற்கு–இளவல் இறந்தமைக்கு. அயர்வெய்தி-வருந்தி. 'அழும் தந்தாதை' என்றது, தம்பி கும்பகருணனை இழந்தமையால் ஆற்ருது அழுது புலம்பும் நிலையினனுகிய இராவணனை. 'அழும்–தாதை' என்ற தொடர் இராவணன் எனும் பெயர்க் காரணத்தினைக் குறிப்பாற் புலப்படுத்தி நின்றது. 'அண்டத்தளவு மினைய பகர்ந்தழைத்துப், பண்டைத் தன் ஞமத்தின் காரணத்தைப் பாரித்தான்' (மாயாசனகப்-87) என வரும் தொடர் ஈண்டு ஒப்பு நோக்கற்பாலதாகும். தள்ளிடுதல்-துடைத்துப் போக்குதல். வான், வினையெச்சவிகுதி. உந்துதல் - மேன்மேற் கிளர்தல். ஆர்தல் – நிறைதல். உருத்தல்-வெகுளுதல், தள்ளிடுவான், எதிர்வான், வந்தான் எனவும், உந்து ஆர் துயரோடும் உருத்து வந்தான் எனவும்,

தனித்தனி இயைத்துரைக்க. முன்சொல்-அறநெறியில் நின்று போர் புரியும் வீரர்கள் தம் பகைவர் திறத்துப் பாதுகாவலாக முன்னரே அறிவிக்கத்தக்க சொல்; முற்சொல் எனற்பாலது சந்த வின்பம் நோக்கி முன்சொல் என வந்தது. (33)

7890. கோளுற்றவ னெஞ்சு சுடக்குழைவா
னாளுற்றவி ருக்கையில் யானொருதன்
றாளற்றுருளக் கணைதள் ளிடுவான்
சூளுற்றது முண்டது சொல்லுதியால்.

'கோளுற்றவன், நெஞ்சு சுடக் குழைவான்,
நாள் உற்ற இருக்கையில், யான் ஒரு தன்
தாள் அற்று உருளக் கணை தள்ளிடுவான்
சூளுற்றதும் உண்டு; அது சொல்லுதியால்.

பொ :—(சனி புதன் ஞாயிறு முதலிய கோள்களைப் பற்றிச் சிறையிட்ட) வன்மை பொருந்தியவனும் (தன் தம்பி கும்பகருணனது பிரிவுத்தீ) தன்னுள்ளத்தைச் சுட்டு வருத்த வருந்துபவனும் ஆகிய (என் தந்தை) இராவணனது அரசிருக்கையாகிய நாளோலக்கத்திலே (மைந்தனாகிய) யான், ஒப்பற்ற (இலக்குவனாகிய) தன்னுடைய கால்கள் அறுபட்டு (உடல் போர்க்களத்தில்) உருளும்படி அம்பினைச் செலுத்துவதாகச் சபதஞ் செய்ததும் உண்டு. அந் நிகழ்ச்சியை அவனுக்குக் கூறுவாயாக.

கு :—கோள் - (பகைவரைப் பற்றி ஒறுக்கவல்ல) வலிமை. இராவணன் ஞாயிறு திங்கள் முதலிய கோள்களைப் பற்றிக் கொணர்ந்து சிறைப்படுத்திய பெருவன்மை படைத்தவனென்பது, 'சனி புதன் ஞாயிறு வெள்ளி திங்கட் பல தீயன முனிவது செய்துகந்தானை' (3-10-7) என வரும் ஆளுடைய பிள்ளையார் வாய்மொழியால் இனிது புலனும். நாளுற்ற இருக்கை - அரசன் அமைச்சர் முதலாயினோர் புடைசூழ வீற்றிருக்கும் நாளோலக்கமாகிய சபை. இராவணனது நாளோலக்கத்தில் அவன் மகன் அதிகாயன் 'இலக்குவனைக் கொன்றொழிப்பேன்' எனச் சூளுற்ற செய்தி முன்னர் இப்படலத்துப் பதினொராஞ் செய்யுளிற் கூறப்பெற்றுள்ளமை இங்கு நினைக்கத்தக்கதாகும். (34)

7891. தீதென்றது சிந்தனை செய்திலெனா
வீதென்றிற மன்னெறி யாமெனநீ

தூதென்றிகழா துனசொல் வலியாற்
போதென்றுட னேகொடு போதுதியால்.

'தீது என்றது சிந்தனை செய்திலெனல்;
ஈது என்று திறம், மன் நெறியாம்' என; நீ
தூது என்று இகழாது, உன சொல்வலியால்
"போது" என்று, உடனே கொடு, போதுதியால்.

பொ :—('ஆற்றல் மிக்க போர் மறவர்கள்) தீது என ஒதுக்கிய வஞ்சனைச் செயலைச் சிந்தையால் எண்ணுதலைச் செய்யேன்; இது என்னுடைய போர்த் தொழிலின் தன்மை; அரச தருமமும் இதுவாகும்' என நீ என் மொழியினைக் கொண்டு கூறி 'தூதன் இவன்' என்று (உன்னை அவ் இலக்குவன் கருதி) உன் மொழியினை இகழ்ந்து புறக்கணிக்காதபடி உன்னுடைய சொல் வன்மையினால் 'வருக' எனக் கூறி அவனை உன்னுடனே விரைந்து அழைத்துக் கொண்டு வருவாயாக.

கு :—தீது என்றது, ஆற்றல்மிக்க போர் வீரர்களால் தம் ஆண்மைக்கு மாசுண்டாக்குவது என விலக்கப்பட்ட வஞ்சனைச் செயலை. அதிகாயன் வஞ்சனைத் தொழிலை இயல்பாகக் கொண்ட அரக்கர் குலத்தவனாயினும் கண்ணுதல்பால் மறைநூல் கற்று மறனிமுக்கா மானமுடைய சிறந்த வீரனாதலின், தன் பகைவர் திறத்தும் அறநெறிக்கு மாறான வஞ்சனைச் செயலை மேற்கொள்ள எண்ணாத செம்மையுடைய சிந்தையன் என்பது, 'அறனல்லது நல்லது மற்றறியான், மறனல்லது பல்பணி மாறணியான்' (அதிகாயன் வதைப்-65) என இவனைக் குறித்து வீடணன் கூறும் வாய்மொழிகளால் நன்கு விளங்கும். (35)

7892. செருவாசையி னார்புகழ் தேடுறுவா
ரிருவோரையு நீவலி வுற்றெதிரே
பொருவோர்நம னார்பதி புக்குறைவோர்
வருவோரையெ லாம்வரு கென்னுதியால்.

'செரு ஆசையினார், புகழ் தேடுறுவார்,
இருவோரையும், நீ வலிவுற்று, "எதிரே
பொருவோர் நமனார் பதி புக்கு உறைவோர்;
வருவோரை எலாம் வருக" என்னுதியால்.

பொ :—போர்த் தொழிலிற் பெருவிருப்புடையவரும் (வெற்றிப்) புகழைத் தேடுதலில் ஈடுபட்டவரும் ஆகிய (இராம இலக்குவர்) இருவரையும் நீ நெருங்கி வற்புறுத்தி '(என் தலைவனோடு) பொருதற்கு முற்பட்டு எதிர்வோர் யாவரும் இயமன் பதியிற் சென்று தங்குவோராவர். பொருதற்கு வருவோரெல்லாம் வருக' என்று சொல்லி (அறைகூவி) யழைப்பாயாக.

கு :—செரு ஆசை - பகைவரை எதிர்த்துப் பொரும் போர்த் தொழிலில் வைத்த பெருவிருப்பம். போர் செய்தலில் ஆசையுடைய வீரர்களைப் 'போரெனிற் புகலும் புனைகழல் மறவர்' (புறம்-31) எனப் போற்றுவர் சான்றோர். புகழ் தேடுறுதல் - (பகைவரைப் பொருது வெற்றி கோடலாலுளதாம்) புகழை ஈட்டுதலிலேயே நாட்டமுடையராய் முயலுதல். 'நல்லிசை வேட்டம் வேண்டி வெல் போர்ப், பாசறை யல்லது நீ யொல்லாயே' (புறம்–31) எனவரும் தொடர் இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாகும். இருவர் என்றது, இணை பிரியாத் துணைவராகிய இராம இலக்குவர்களை. வலிவுற்று - வலிதாக நெருங்கி வற்புறுத்தி. வலிவுறுத்தல் - வற்புறுத்தல்; கட்டாயப்படுத்தல். வருவோரை யெலாம் என்புழி ஐ சாரியை, வருகென்னுதி என்புழி வருக என்பதன் அகரம் விகாரத்தால் தொக்கது. (36)

'இலக்குவனை என்முன் அழைத்துவரின், உனக்குப் பரிசுகள் பல தருவேன்' என, அதிகாயன் மயிடனுக்குக் கூறுதல்

7893. சிந்தாகுல மெந்தை திருத்திடுவான்
வந்தானென வென்னெதி ரேமதியோய்
தந்தாயெனின் யானல தியார்தருவார்
உந்தாரிய வுள்ள வுயர்ந்தவெலாம்.

'சிந்தாகுலம் எந்தை திருத்திடுவான்,
"வந்தான்" என என் எதிரே, மதியோய்!
தந்தாய் எனின், யான் அலது, யார் தருவார்,
உந்த அரிய உள்ள உயர்ந்த எலாம்?

பொ :—இயல்பாகிய நுண்ணறிவு வாய்க்கப் பெற்றவனே! என் தந்தையின் மனத் துயரத்தைத் துடைத்துப் போக்குதற் பொருட்டு, '(இலக்குவன்) இதோ வந்துள்ளான்' என்று கூறி அவனை என் முன்னிலையிலே அழைத்து வந்து தந்தாயானால், கொடுத்தற்கு அரியனவாகவுள்ள உயர்ந்த பொருள்களை யெல்லாம் (உனக்கு

உவந்து) தருவார் என்னையன்றிப் பிறர் யாருளர்? (யானே தருவேன் என்றவாறு)

கு :—மதியோய்! எந்தை சிந்தாகுலம் திருத்திடுவான், '(இலக்குவன்) வந்தான்' என என் எதிரே தந்தாயெனின் உந்த அரிய உள்ள உயர்ந்த எலாம் தருவார் யான் அலது யார்? என் இயைத்துரைக்க. சிந்தாகுலம் - மனத்துயரம். 'எந்தை' என்றது, தன் தந்தையாகிய இராவணனை. திருத்துதல் - மாசுபோகத் துடைத்துச் சீர் செய்தல். 'வந்தான்' என்புழி வருதற்கு வினை முதலாகிய இலக்குவன் என்னும் எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. உந்த+அரிய எனற்பாலது 'உந்தாரிய' எனத் திரிந்து நின்றது. உந்துதல் - செலுத்துதல்; மேன்மேல் வழங்குதல். (37)

7894. வேறேய விலக்குவ னென்னவிளம்
பேறேவரு மேலிமை யோரெதிரே
கூறேபல செய்துயிர் கொண்டுனையும்
மாறேயொரு மன்னென வைக்குவெனல்.

'வேறே அ(வ்) இலக்குவன் என்ன விளம்பு
ஏறே வருமேல், இமையோர் எதிரே,
கூறே பல செய்து, உயிர்கொண்டு, உனையும்,
மாறே ஒரு மன் என வைக்குவெனால்.

பொ :—அந்த இலக்குவன் என்று (இராமனோடொப்ப) வேறாகச் சிறப்பித்துரைக்கப்படும் சிங்க ஏறுபோல்வான் (என்னுடன் பொருதற்கு) வருமாயின் தேவர்கள் காண (அவனை)ப் பல கூறுபட வெட்டி வீழ்த்தி, (அவனது) உயிரைக் கவர்ந்துகொண்டு, (அவனை அழைத்து வந்தமைக்குக்) கைம்மாறாக (த் தூதனாகிய) உன்னையும் மற்றொரு மன்னன் என உலகத்தார் மதிக்கும் வண்ணம் உயர் நிலையில் வைப்பேன்.

கு :—அவ் இலக்குவன் என்ன வேறே விளம்பு ஏறே வருமேல் (அவனை) இமையோர் எதிரே பல கூறே செய்து உயிர்கொண்டு, மாறே உனையும் ஒரு மன் என வைக்குவென் என இயைந்துரைக்க. ஆல் - அசை. ஏறு - (சிங்க) ஏறுபோல்வான்; ஆகுபெயர். மாறு - கைம்மாறு; பிரதியுபகாரம். (38)

7895. விண்ணுடியர் விஞ்சைய ரஞ்சொலினுர்
பெண்ணாரமு தன்னவர் பெய்தெவரும்
உண்ணுதன கூர்நற வுண்டதசும்
பெண்ணுயிர மாயினு மீகுவெனுல்.

'விண் நாடியர், விஞ்சையர், அம் சொலினுர்
பெண் ஆர் அமுது அன்னவர், பெய்து, எவரும்
உண்ணுதன கூர் நறவு உண்ட தசும்பு
எண்ணுயிரம் ஆயினும், ஈகுவெனுல்.

பொ :—அழகிய சொல்லினையுடையவரும் பெண்டிருள் அரிய அமிழ்தினை ஒத்தவர்களும் ஆகிய வானுலக மகளிரும் வித்தியாதர மகளிரும் (அருகே நின்று) வார்த்துக் கொடுக்க, (இதுவரை) யாவராலும் உண்ணப்படாத அருமையுடைய (சுவை) மிக்க தேறலைக் கொண்ட மதுக்குடம் எண்ணுயிரம் என்ருலும் (நீ பருகி மகிழத்) தருவேன்.

கு :—அஞ்சொலினுர், பெண் ஆர் அமுது அன்னவர், விண் நாடியர் விஞ்சையர் என இயைத்துரைக்க. பெய்து - பெய்ய ; எச்சத்திரிபு. பெய்தல் – பருகுதற்குரிய கலங்களில் நிரம்ப வார்த்துக் கொடுத்தல். 'பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார், வாக்கவுக்க தேக்கட்டேறல்' (புறம் 115) என்புழி இச்சொல் இப்பொருளில் வழங்கப் பெற்றிருத்தல் காணலாம். எவரும் – எத்துணைச் சிறந்தாராலும்; உம்மை, உயர்வு சிறப்பு. உண்ணுதன – உண்ணப்படாத அருமையுடையன. கூர்நறவு - (சுவை) மிக்க தேறல். தசும்பு – குடம். (39)

7896. உறைதந்தன செங்கதி ரோனுருவிற்
பொறைதந்தன காசொளிர் பூணிமையோர்
திறைதந்தன தெய்வ நிதிக்கிழவன்
முறைதந்தன தந்து முடிக்குவெனுல்.

'உறை தந்தன செங்கதிரோன் உருவின்
பொறை தந்தன, காசு ஒளிர்பூண், இமையோர்
திறை தந்தன, தெய்வநிதிக் கிழவன்
முறை தந்தன, தந்து முடிக்குவெனுல்.

பொ :—தேவர்கள் திறைப் பொருளாகத் தந்தனவும் தெய்வத் தன்மை வாய்ந்த இருநிதிக் கிழவனுகிய குபேரன் உறவின் முறை

யால் தந்தனவும் செம்மை வாய்ந்த கிரணங்களையுடைய சூரியனது உருவத்தை யொத்த ஒளி பொருந்தி தங்கியனவும் (பொன்னின் நிறையாற்) கனமாயினவும் ஆகிய மணிகள் பதிக்கப் பெற்று ஒளிரும் அணிகலன்களை (உனக்குத்) தந்து (எனது கருத்தினை) நிறை வேற்றுவேன்.

கு:—இமையோர் திறை தந்தன, தெய்வநிதிக் கிழவன் முறை தந்தன பூண் எனவும், செங்கதிரோன் உருவின் உறை தந்தன, பொறை தந்தன காசு ஒளிர்பூண் எனவும் தனித்தனி இயையும். பூண் தந்து முடிக்குவென் என முடிக்க. உறை தருதல் - பொருந்தித் தங்குதல். திறை தருதல் - போரில் தோல்வியுற்றுக் கப்பப் பொருளாகக் கொடுத்தல். முறை தருதல் - உறவின் முறைகூறிச் சமாதானப் பொருளாகத் தருதல். தந்து முடிக்குவென் என்புழி முடித்தல் துணை வினையாய் நின்றது. (40)

7897. மாருமத வாரிய வண்டினொடும்
பாருடு முகத்தன பல்பகலும்
தேருதன செங்கண வெங்களிமா
நூருயிர மாயினு நுந்துவெனல்.

'மாரு மத வாரிய, வண்டினொடும்
பாறு ஆடு முகத்தன, பல் பகலும்
தேருதன, செங் கண வெங் களிமா
நூருயிரம் ஆயினும் நுந்துவெனல்.

பொ:—(ஒரு காலத்தும்) நீங்காத மத நீர்ப்பெருக்கையுடையனவும் (அதன்கண் மொய்க்கும்) வண்டுகளோடு (பகைவரைக் குத்திய தந்தத்தினிடத்தேயுள்ள நிணத் தசையை விரும்பிப்) பருந்துகள் பறந்து சூழும் முகத்தை யுடையனவும்; பல நாட்களும் (மத மயக்கத்தினின்று) தெளிவு பெருதனவும் (வெகுளியாற்) சிவந்த கண்களை யுடையனவும் ஆகிய கொடுமையும் களிப்பும் வாய்ந்த யானைகள் நூருயிரம் வேண்டுமாயினும் (உனக்குத்) தருவேன்.

கு:—மாறுதல் - நீங்குதல். வாரிய, முகத்தன, தேருதன, செங்கண என்னும் அஃறிணைப் பலவின்பால் வினைமுற்றுக்கள் அடுக்கி வந்து வெங்களிமா என்னும் பெயர் கொண்டு முடிந்தன. நூருயிரம் - ஓரிலக்கம். நுந்துதல் - செலுத்துதல்; வழங்குதல். (41)

7898. செம்பொன்னி னமைந்து சமைந்தனதே
ரும்பர்நெடு வானினு மொப்புறழா
பம்பும்மணி தாரணி பாய்பரிமா
விம்பர்நட வாதன வீகுவெனுல்.

'செம் பொன்னின் அமைந்து சமைந்தன தேர்,
உம்பர் நெடு வானினும் ஒப்பு உறழா;
பம்பும் மணி தார் அணி பாய் பரிமா,
இம்பர் நடவாதன ஈகுவெனுல்.

பொ :—உயர்ந்த தேவர்கள் வாழும் நீண்ட வானுலகத்தினும் ஒப்பித்து உறழ்ந்து கூறவொண்ணுதனவாய்ச் செம்மை வாய்ந்த பொன்னினுல் இயன்று (போருக்குப்) பொருந்திய தேர்களையும், இந்நிலவுலகில் (அடிவைத்து) நடவாதனவாய் நிறைந்த மணிகள் இழைக்கப் பெற்ற கிண்கிணி மாலையினை அணிந்த, (விசும்பிற்) பாய்ந்து செல்லும் குதிரைகளையும் (உனக்குத்) தருவேன்.

கு :—உம்பர் நெடுவானினும் ஒப்பு உறழா, செம்பொன்னின் அமைந்தன தேர் எனவும், இம்பர் நடவாதன—பம்பும் மணிதார் அணி—பாய் பரிமா எனவும் இயையும். தேர், பாய் பரிமா ஈகுவென் என முடிக்க. பம்புதல் – நிறைதல். தார் - மாலை. பரிமா – பரியாகிய மா ; குதிரை. (42)

7899. நிதியின்னிரை குப்பை நிறைத்தனவும்
பொதியின்மிளிர் காசு பொறுத்தனவும்
மதியின்ளெிர் தூசு வகுத்தனவும்
அதிகஞ்சக டாயிர மீகுவெனுல்.

'நிதியின் நிரை குப்பை நிறைத்தனவும்,
பொதியின் மிளிர் காசு பொறுத்தனவும்,
மதியின் ஒளிர் தூசு வகுத்தனவும்,
அதிகம் சகடு ஆயிரம் ஈகுவெனுல்.'

பொ :—பொருள் நிரைகளைக் குவியலாக ஏற்றியனவும், ஒளிரும் மணிபொன் முதலியவற்றைப் பொதிகளாக அமைத்துச் சுமந்தனவும், வெண்திங்களை யொத்துத் தூய்மையாக விளங்கும் ஆடைகள் வகை வகையாக (அடுக்கி) வைக்கப் பெற்றனவும் ஆகிய (சரக்கேற்றிய) வண்டிகளை ஆயிரத்திற்கும் மிகுதியாக (உனக்குத்) தருவேன்.

கு :—குப்பை நிறைத்தல் - குவியலாகக் கொட்டி நிறைத்தல் மிளிர்காசு பொதியின் பொறுத்தன என இயைக்க. பொதியின். பொறுத்தல் - பொதி மூடைகளாகக் கட்டி ஏற்றப்படுதல். வகுத்தல்—வகைவகையாக வைத்தல். நிறைத்தன பொறுத்தன, வகுத்தன சகடு ஆயிரம் ஈகுவென் என முடிக்க. சகடு - வண்டி. அதிகம் - மிகுதி. (43)

7900. மற்றும்மொரு தீதின் மணிப்பணிதந்
துற்றுன்னினை வியாவையு முந்துவெனல்
பொற்றிண்கழ லாய்நனி போவெனலோ
டெற்றுந்திர டோளவ னேகினனல்.

‘மற்றும் ஒரு தீது இல் மணிப் பணி தந்து
உற்ற உன் நினைவு யாவையும் உந்துவெனல்,
பொன்திண் கழலாய்! நனி போ’ என்லோடு,
எற்றும் திரள் தோளவன் ஏகினனல்.

பொ :—(இவ்வாறு கூறிய அதிகாயன்) பின்னரும் குற்றமற்ற மணிகள் இழைக்கப் பெற்றதோர் (சிறந்த) அணிகலனை (மயிடனாகிய அவனுக்கு)த் தந்து, ‘நின் எண்ணத்திற் பொருந்திய எல்லாவற்றையும் (நினக்கு) விரைந்து தருவேன்; பொன் மயமாகிய திண்ணிய வீரக் கழலையணிந்தவனே! (இலக்குவன்பால்) விரைந்து செல்வாயாக’ எனப் பணித்தவுடனே (பகைவரைப் பொருது) தாக்கும் திரண்ட தோள்களையுடையவனாகிய மயிடன் (இலக்குவன் இருக்குமிடம் நோக்கி விரைந்து) செல்வானாயினன்.

கு :—‘மற்றும் ஒரு தீதில் மணிப் பணிதந்து’ என்ற தொடர் கதை நிகழ்ச்சியினைக் கூறும் நிலையில் ஆசிரியர் கூற்றாக அமைந்ததாகும். ‘உற்றுன் நினைவு யாவையும் உந்துவெனல், பொற்றிண் கழலாய் நனிபோ’ என்றது அதிகாயன் கூற்று. ‘உற்ற’ என்னும் பெயரெச்சத்து அகரம் விகாரத்தால் தொக்கது. நனி - மிகுதி; ஈண்டுப் போதலின் மிகுதியாகிய விரைவினை யுணர்த்தியது. எற்றுதல் - தாக்குதல். உந்துதல் - செலுத்தல்; தருதல். (44)

மயிடன் இராமனையடைந்தபொழுது, வானர வீரர் அவன்மேற் சினந்து பற்ற முயலுதலும் அவன் தான் கொண்டு வந்த செய்தியைக் குறிப்பிடுதலும்

7901. ஏகித்தனி சென்றெதி ரெய்தலுறும்
காகுத்தனை யெய்திய காலையின்வாய்
வேகத்தொடு வீரர் விசைத்தெழலும்
ஓகைப்பொரு ளுண்டென வோதினனால்.

ஏகி, தனி சென்று, எதிர் எய்தலுறும்
காகுத்தனை எய்திய காலையின் வாய்,
வேகத்தொடு வீரர் விசைத்து எழலும்
'ஓகைப் பொருள் உண்டு' என ஓதினனால்.

பொ :—(மயிடன், அங்கு நின்றும்) புறப்பட்டுத் தனியே போய்த் தன்னெதிரே வரும் இராமபிரானை அணுகியபோது (அம்முதல்வனைச் சூழ்ந்து நின்ற) வானர வீரர்கள் சினத்துடன் (அவனைக் கொல்லுதற்கு) விரைந்து மேற்சென்ற அளவில், (தூதனாய் வந்த அம்மயிடன்) 'யான் நும்மனோர்க்கு அறிவித்தற்குரிய மகிழ்ச்சிச் செய்தி ஒன்றுளது' எனக் கூறினான்.

கு :—காகுத்தன் என்பது, 'ககு' என்னும் பெயரினனாகிய வேந்தனது மரபிற்றோன்றினமையால் இராமனைக் குறித்து வழங்கும் காரணப் பெயர். வேகம் - வெகுளி; 'ஓவாவேகமோடுருத்து' (கலித் - 103) என்ற தொடரில் இச்சொல் இப்பொருளில் வழங்குதலறிக. விசைத் தெழுதல் - விரைந்து எழுதல். 'கால்விசைத்தோடி' என்பது திருவாசகம் (கீர்த்தி - 135). ஓகைப் பொருள் - மகிழ்ச்சிக்குரிய செய்தி. வீரராயினார்க்குத் தம்மொடு பொருதற்கு முந்தும் வீரனைப் போரில் எதிர்ப்படுதல் மகிழ்ச்சிக்குரிய செய்தியாதலின் அதிகாயனது வரவு இராம இலக்குவர்க்கு மகிழ்ச்சி விளைக்கும் என்னும் நினைவினால் அதனை 'ஓகைப்பொருள்' எனக் குறித்தான். ஓதினவன், தூதனாக வந்த மயிடன் என்க. (45)

'தூதனை விடுமின்' என்று இராமன் வானர வீரரை விலக்கல்

7902. போதம்முதல் வாய்மொழி யேபுகல்வோன்
ஏதும்மறி யான்வறி தேகினனால்
தூதன்னிவ னைச்சுளி யன்மினென
வேதம்முத னாதன் விலக்கினனால்.

போதம் முதல், 'வாய்மொழியே புகல்வோன்
ஏதும் அறியான்; வறிது ஏகினனால்;
தூதன்; இவனைச் சுளியன்மின்' என,
வேதம் முதல் நாதன் விலக்கினனால்.

பொ :—மெய்யுணர்வுப் பொருளாகிய முதல்வனும் வேதங்களாற் போற்றப்பெறும் முன்னோனாகிய தலைவனும் ஆகிய இராமபிரான், (மயிடனை நெருங்கிப் பற்றிய வானர வீரர்களை நோக்கி) 'இவன் (தன் தலைவனுடைய) வாய்ச் சொற்களையே கொண்டு கூறுபவன்; (தானாக) எதனையும் (சிந்தித்து) அறியாதவன்; (படைக்கலமின்றி) வறிதே வந்துள்ளான்; தூதன்; இவனை வெகுண்டு துன்புறுத் தாதீர்' என்று கூறித் தடுத்து விலக்கினான்.

கு :—போதம் முதல் - மெய்யுணர்வுருவினனாகிய முதல்வன். போதம் - மெய்யுணர்வு. போதம் முதலாகிய வேதம் முதல் நாதன் விலக்கினன் என முடிக்க. அறத்தின் மூர்த்தியாகிய முழுமுதற் கடவுளே இங்ஙனம் இராமபிரானாக அவதரித்தானாதலின், தன்னைச் சார்ந்தோர் அறநெறியில் நின்றே போர் செய்தல் வேண்டும் என்று அறிவுறுத்தும் நோக்குடன் வானர வீரர்களை நோக்கித் 'தூதனாக வந்த மயிடனைத் துன்புறுத்தாதீர்கள்' எனத் தடுத்து நிறுத்தினான் என்க. 'வாய் மொழியே புகல்வான், ஏதும் அறியான், வறிது ஏகினன். தூதன், இவனைச் சுளியன்மின்' என்பன மயிடனைக் குறித்து இராமபிரான் கூறியவை. சுளிதல் - வெகுளுதல்; துன்புறுத்தல். (46)

'நீ வந்தது எது கருதி' என இராமன் மயிடனை வினவ, அவன் 'இலக்குவனிடமே அது சொல்லத்தக்கது' எனல்

7903. என்வந்த குறிப்ப தியம்பெனலும்
மின்வந்த வெயிற்றவன் வில்வலவுன்
பின்வந்தவ னேயறி பெற்றியதால்
மன்வந்த கருத்தென மன்னர்பிரான்.

'என், வந்த குறிப்பு? அது இயம்பு' எனலும்,
மின் வந்த எயிற்றவன், 'வில்வல! உன்
பின்வந்தவனே அறி பெற்றியதால்,
மன் வந்த கருத்து' என, 'மன்னர்பிரான்!'

பொ :—(மயிடனை நோக்கிய இராமன், 'பகைப் புலத்தவனாகிய நீ இங்குக் கருதி) வந்த குறிப்பு யாது? அதனைச் சொல்வாயாக' எனப் பணித்த அளவில், மின்னலைப் போன்றொளிரும் (கோரப்) பற்களையுடையனாகிய மயிடன் (இராமபிரானை நோக்கி) 'விற்போரில் வல்லவனே! அரசர் பெருமானே! (என்) தலைவனுள்ளத்திலிருந்து வெளிப்பட்ட அக்குறிப்பு உனக்குப் பின் தோன்றிய (இலக்குவன் எனும்) தம்பியே அறியத்தகுவதாகும்' என்றுகூற,

கு :—இச்செய்யுள் குளகம். 'கருத்து என' என்புழி வந்த எனவென்னும் செயவென் எச்சம் அடுத்த செய்யுளில் 'சொல்லிடு எனா......வினவ' எனவரும் பிற கருத்தாவின் தொழில் கொண்டு முடிந்தது. இச்செய்யுளின் இறுதியடியிலுள்ள 'மன்னர்பிரான்' என்பதனை இதன் இரண்டாமடியிலுள்ள 'வில்வல' என்பதனுடன் இணைத்து விளியாக்குக. இனி, இதனை இவ்வாறு விளிவேற்றுமையாகக் கொள்ளாது அடுத்த செய்யுளில் வரும் 'வில்லாளன்' என்ற பெயர்க்கு அடையாக்கி, 'மன்னர் பிரான் வில்லாளன்' என இயைத்துரைப்பினும் அமையும். (47)

'அது சொல்லிடு' என இலக்குவன் வினவத்
தூதன் தான் வந்த செய்தியை அறிவித்தல்

7904. சொல்லாயது சொல்லிடு சொல்லிடெனா
வில்லாள னிளங்கிளை யோன்வினவப்
பல்லாயிர கோடி படைக்கடன்முன்
நில்லாயென நின்று நிகழ்த்தினனால்.

'சொல்லாய்; அது சொல்லிடு, சொல்லிடு' எனா,
வில்லாளன் இளங்கிளையோன் வினவ,
'பல் ஆயிரகோடி படைக் கடல்முன்
நில்லாய்' என, நின்று நிகழ்த்தினனால்.

பொ :—வில்லாண்மையுடைய இராமனுக்குத் தம்பியாகிய இலக்குவன், (மயிடனாகிய தூதனை நோக்கி, 'நீ வந்த) அக்குறிப்பினை (வெளியிட்டுச்) சொல்வாயாக. சொல்லிடு, சொல்லிடு' என (விரைந்து) கேட்க, (அது கேட்ட மயிடன்,) 'பல்லாயிரக்கோடி என்னும் தொகையினவாகிய சேனைக் கடலின் முன்னே (அதிகாயனொடு) பொருதற்கு வந்து முன்னிற்பாயாக' என்று கூறி (அஞ்சாது) நின்று (மேலும்) கூறினான்.

கு :—'அது சொல்லாய்' எனப் பணித்த பின்னரும் 'சொல்லிடு சொல்லிடு' என்றது விரைவு பற்றி வந்த அடுக்கு, வில்லாளன் என்றது, கோதண்டம் என்னும் சிறப்புடைய வில்லினை யேந்திய வீரனாகிய இராமனை. இளங்கிளை என்பது, இளைய உறவின் முறையினராய தம்பி, தங்கை என்போரைக் குறித்து வழங்குவது; இங்குத் தம்பி என்ற பொருளில் ஆளப் பெற்றது. 'சூலி நீலி மாலவற்கு இளங்கிளை' (சிலப்–வேட்டுவவரி – 68) என்புழி இச்சொல் தங்கை என்ற பொருளில் ஆளப் பெற்றுள்ளமை காண்க. தன்னுயிர்க்கு இறுதி நேர்வதாயினும், பகைவர் திறத்தே சென்று அஞ்சாது நின்று தன் தலைவன் கூறியவற்றை எஞ்சாது எடுத்துரைக்கவல்ல நெஞ்சத் துறுதி வாய்ந்த தூதன் மயிடனாகிய இவன் என்பது புலப்படுத்துவார் 'நின்று நிகழ்த்தினான்' என்றார். நிகழ்த்துதல் - எடுத்துரைத்தல். மயிடன் கூறியவை அடுத்துவரும் மூன்று செய்யுட்களில் விரித் துரைக்கப்படும். (48)

7905. உன்மேலதி காய னுருத்துளனாய்
நன்மேருவி னின்றன னாடியவன்
றன்மேலெதி ரும்வலி தக்குளையேற்
பொன்மேனிய வென்னொடு போதுதியால்.

'உன்மேல் அதிகாயன் உருத்துளனாய்,
நல் மேருவின் நின்றனன் நாடி; அவன்–
தன்மேல் எதிரும் வலி தக்குளையேல்,
பொன் மேனிய! என்னொடு போதுதியால்.

பொ :—'பொன்போன்ற அழகிய மேனியை யுடையவனே! (என் தலைவனாகிய) அதிகாயன் என்பான், உன்மேல் செற்றங் கொண்டவனாய் (உன்னை) எதிர்நோக்கி நல்ல மேரு மலையினை யொத்து (ப் போர்க்களத்திலே வந்து) நிற்கின்றான். (நீ) அவ் அதிகாயன் மேல் எதிர்த்துத் தாக்கும் வன்மையாகிய தகுதியைப் பெற்றுள்ளாயானால், என்னுடனே (விரைந்து) வருவாயாக.

கு :—இலக்குவன் பொன்னிற மேனியனாதலின் அவனைப் 'பொன் மேனிய' என விளித்தான் அதிகாயன். 'பொன்போலும் அழகிய மேனியினைப் பெற்றுள்ள நீ, என் தலைவனால் உருச் சிதைக் கப்பட்டுப் போரில் அழிந்தொழியப் போகின்றாயே' என இரங்கும் நிலையில் 'பொன்மேனிய' என விளித்தான் என்றலும் ஒன்று. 'பொன்மேனிய! அதிகாயன், உன்மேல் உருத்துளனாய், நாடி, நன்மேருவின் நின்றனன்; அவன் தன்மேல் எதிரும் வலிதக்குளை

யேல் என்ஞெடு போதுதி' என இயைத்துரைக்க. உன்மேல், தன்மேல் என்புழி, மேல் என்பது ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு. தக்கு - தகப்பெற்று. (49)

7906. சையப்படி வத்தொரு தந்தையைமுன்
மெய்யெப்படி செய்தன னும்முன்விரைந்
தையப்பட லப்படி யிப்படியிற்
செய்யப்படு கிற்றி தெரித்தனனல்.

'சையப் படிவத்து ஒரு தந்தையை முன்
மெய் எப்படி செய்தனன் நும்முன், விரைந்து
ஐயப்படல், அப்படி இப் படியில்
செய்யப் படுகிற்றி; தெரித்தனனல்.

பொ:—மலைபோலும் (பெரிய) வடிவத்தினையுடைய தந்தை கும்பகருணனை முன்னர் உன் தமையனாகிய இராமன் (அவனது) உடம்பினை எவ்வாறு சிதைத்தழித்தானே அவ்வாறெல்லாம் இப் பூமியில் (இராமனுடைய தம்பியாகிய நீயும் சித்திரவதை) செய்யப் படப் போகின்ருய். (இதுபற்றிச் சிறிதும்) சந்தேகப் படாதே. (இதனை உனக்குத்) தெரியச் சொன்னேன்.

கு:—சையம் - மலை. படிவம் - உருவம். ஒரு தந்தை என்றது, அதிகாயனுக்குத் தந்தை முறையினனாகிய கும்பகருணனை. மெய் - உடம்பு. மயிடன் இலக்குவனை நோக்கிக் கூறும் நிலையில் அவனுடைய தமையனாகிய இராமனை 'உம்முன்' எனக் குறித்தான். உம்முன் - உனக்கு முன்னேன்; உன் தமையன். எப்படி-எவ்வாறு. அப்படி - அவ்வாறு. இப்படி - இப்பூமி. (50)

இதன்பின் 52 என்னும் எண்பெற்ற அச்சுப் புத்தகத்திற் பின் வருமாறு ஒரு மிகைப்பாடல் உளது:—

7906. (a) என, வந்த நிசாசரன், இவ் உரையைத்
தனு வல்லவனேடு எதிர் சாற்றுதலும்,
சனகன் மகள்தன் ஒரு நாயகன் ஆம்
அனகன் அது கேட்டு, இது அறைந்திடுவான்.

7907. கொன்ருனெழி யக்கொலை கோளறியா
நின்ருனெடு நின்றதெ னேடியெனின்

றன்றாதை படுந்துயர் தந்தையைமுன்
வென்ருனை யியற்றும் வேட்கையினுல்.

" 'கொன்ருன் ஒழிய, கொலை கோள் அறியா
நின்ருனொடு நின்றது என், நேடி?' எனின்,
தன் தாதை படும் துயர், தந்தையை முன்
வென்ருனை இயற்றும் அ(வ்) வேட்கையினுல்.

பொ:—'தன் தந்தையைக் கொன்றவன் (போரில் தாக்கப் படாது) நீங்க, கொன்று உயிர் கொள்ளுதலைச் செய்யாத மற்ருெரு வனொடு (உன் தலைவன் போர் குறித்துத்) தேடி எதிர் நின்றது எது கருதி?' என வினவுவாயாயின், தன் தந்தையாகிய இராவணன் (தன் தம்பியை யிழந்து) படுந்துன்பத்தினை (த் தன்) தந்தை முறை யினனுகிய கும்பகருணனை (க் கொன்று) வென்ருனுகிய இராமனையும் அடையும்படிச் செய்யும் அத்தகைய விருப்பத்தினுலேயாம்.

கு:—கொன்ருன் என்றது, கும்பகருணனைக் கொன்றவனுகிய இராமனை. ஒழிதல் - போரில் எதிர்த்துத் தாக்கப்படுதலினின்றும் நீங்குதல். கொலை கோளறியா நின்ருன் என்றது இலக்குவனை. கொலைகோள் – கொன்று உயிர் கவர்தல். அறிதல் என்றது, ஈண்டு அறிந்து செய்தலை யுணர்த்தி நின்றது. நேடி நின்றது என் எனின் என மாற்றுக, தன் தாதை – அதிகாயனுகிய தன்னைப் பெற்ற தந்தையாகிய இராவணன். அவன் படுந்துயராவது தன் ஆருயிர்த் தம்பியாகிய கும்பகருணனைப் போரில் இழந்து வருந்துதல். 'தன் தந்தை இராவணன் படுந் துயரனைத்தையும் தந்தை முறையினனுகிய கும்பகருணனை வென்ற நின் தமையனுகிய இராமனுக்கு இழைத்தல் வேண்டும் என்ற நோக்குடனேயே அதிகாயன் இலக்குவனுகிய நின்னுடன் போர் குறித்து நிற்கின்ருன்' என மயிடன் இலக்குவ னுக்கு எடுத்துரைத்தான் என்பதாம். (51)

## இராமன் மூவுலகோர் அறியத் தன் இசைவினைத் தெரிவித்தல்

7908. வானோர்களு மண்ணினு ளோர்களுமற்
றேனோர்களு மிவ்வுரை கேண்மினிவன்
ருனேபொரு வானய லேதமர்வந்
தானுருமு டன்பொரு வானமைவான்.

‘வானோர்களும், மண்ணினுளோர்களும், மற்று
ஏனோர்களும், இவ் உரை கேண்மின்; இவன்–
தானே பொருவான்; அயலே தமர் வந்து
ஆனோரும் உடன் பொருவான், அமைவான்.

பொ:—வானிடத்தே யுள்ளவர்களும் மண்ணிடத்தே யுள்ளவர்களும் மற்றைய (பாதலம் முதலிய உலகுகளிலுள்ள) ஏனையோரும் (யான் கூறும்) இம் மொழியினைக் கேட்பீராக. (இலக்குவனாகிய) இவன் தானே (பிறர் துணை வேண்டாது அதிகாயனுடன்) போர் செய்வான். பக்கத்தில் (அவனுடைய) சுற்றத்தார் (துணையாய்) வந்து கூடினோருடனும் போர் புரிதற்கு (உள்ளம்) பொருந்தி நிற்பான்.

கு:—இராமன் கூற்றாக அமைந்தது இச் செய்யுள். இராமன் வானுலகு மண்ணுலகு முதலிய எல்லா வுலகத்தவரும் சான்றாக இவ்வுறுதி மொழியைக் கூறினான். இவன் என்ற சுட்டு, தன்னிற் பிரிவிலாத் தன்மையனாய்த் தன் அருகே நின்ற தம்பியாகிய இலக்குவனைச் சுட்டி நின்றது. அயலே தமர் வந்து ஆனோருடனும் பொருவான் என உம்மையைப் பிரித்துக் கூட்டுக. அமைதல் - பொருந்துதல். (52)

### தூதனது பிதற்றுரை கேட்டு இராமன் இலக்குவனைத் தழுவிப் போர்க்குச் செல்லுமாறு பணித்தல்

7909. என்றேயுல கேழினொ டேழினையும்
தன்றாமரை போலிரு தாளளவா
நின்றானுரை செய்ய நிசாசரனும்
பின்றாவுரை யொன்று பிதற்றினனால்.

என்றே, உலகு ஏழினொடு ஏழினையும்
தன் தாமரை போல் இருதாள் அளவா-
நின்றான் உரைசெய்ய, நிசாசரனும்
பின்றா உரை ஒன்று பிதற்றினனால்.

பொ:—என்று இவ்வாறு, பதினான்கு உலகங்களையும் தன்னுடைய தாமரை மலர் போலும் இரண்டு திருவடியினாற் பொருந்த அளந்து நின்ற நெடியோனாகிய இராமன் எடுத்துரைக்க, (கேட்ட) அரக்கனாகிய தூதனும் பின்னிடாமைக்கு ஏதுவாகியதோர் மறுமொழியைப் பிதற்றினான்.

கு :—ஏழிரெடு ஏழு உலகினையும் தன் தாமரைபோல் இருதாள் அளவா நின்ருன், என்றே உரை செய்ய, நிசாசரனும் உரை யொன்று பிதற்றினன் என முடிக்க. ஏழிரெடு ஏழு – பதினன்கு. தாள் - தாளால் என மூன்ரு முருபு விரித்துரைக்க. அளவா – அளந்து திரிவிக்கிரமனுகிய திருமாலே இங்ஙனம் இராமனுகத் திருவவதாரம் செய்தனன் என்பார், ‘உலகு ஏழிரெடு ஏழினையும் அளவா நின்ருன்’ என்ருர் நிசாசரன் - இரவில் திரிவோன்; என்றது, இரவில் திரியும் இயல்புடைய அரக்கரினத்தானுகிய மயிடன் என்னும் தூதனை. பின்ரு உரை – முற்கூறிய உறுதிமொழியினின் றும் பின்னிடாமைக்கு ஏதுவாகிய மறுமொழி. பின்றுதல் – பின் னிடுதல். பிதற்றுதல் – அறிவின்றி உளறுதல். (53)

7910. எழுவாயினி யென்னுட னென்றெரியும்
மழுவாய்நிகர் வெஞ்சொல் வழங்குதலுந்
தழுவாவுட னேகுதி தாழலெனத்
தொழுவார்தொழு தாளரி சொல்லுதலும்.

‘எழுவாய், இனி என்னுடன்’ என்று, எரியும்
மழு வாய் நிகர் வெஞ் சொல் வழங்குதலும்,
தழுவா, ‘உடன் ஏகுதி தாழல்’ எனத்
தொழுவார் தொழு தாள் அரி சொல்லுதலும்.

பொ :—‘இப்பொழுதே (நீ) என்னுடன் புறப்படுவாயாக’ என்று கனன்று சுடர் வீசும் மழுப்படையின் வாயினை யொத்த வெவ்விய கடுமொழியினைக் கூறிய அளவில் (யாவராலும்) தொழப்படுவோ ராகிய தேவர்களால் தொழுது, போற்றப்பெறுந் திருவடியினை யுடைய திருமாலாகிய இராமன், (தன் தம்பியாகிய இலக்குவனைத்) தழுவி, ‘காலதாமதம் செய்யற்க, உடனே விரைந்து செல்வாயாக’ எனச் சொல்லவும்,

கு :—இச்செய்யுள் குளகம். சொல்லுதலும் என்னும் உம்மீற்று வினையெச்சம், அடுத்த செய்யுளில் உள்ள ‘எனுச் சொல்லாடினன்’ என்னும் பிற கருத்தாவின் வினைகொண்டு முடியும். ‘இனி என்னுடன் எழுவாய்’ என மயிடன் என்னுந் தூதன் இலக்குவனை நோக்கிக் கூறிய அச்சொல், கனன்றெரியும் மழுப்படையின் வாயினையொத்து வெம்மையுடையதாய் இராம இலக்குவரது உள்ளத்தையீரும் கொடுமையுடையதாயிற்று என்பார், ‘எரியும் மழுவாய் நிகர் வெஞ் சொல்’ என்ருர். தொழுவார் தொழுதாள் அரி. தழுவா, ‘உடன் ஏகுதி தாழல்’ எனச் சொல்லுதலும் என இயைக்க. தொழுவார் –

தொழப்படுவார் ; 'இல்வாழ்வான் என்பான்' என்புழிப் போன்று செயப்படு பொருளுணர்த்தும் படுவிகுதி தொக்கு நின்றது. யாவ ராலும் தொழப்படும் தேவர்களாலும் தொழப்படும் திருவடியினை யுடைய திருமாலாகிய இறைவனே இராமனாக அவதரித்தான் என வலியுறுத்துவார், 'தொழுவார் தொழுதாள் அரி' என இராமனைச் சிறப்பித்துரைத்தார். "தொழப்படுந்தேவர் தொழப்படுவானை" என இறைவனைக் குறித்துத் திருநாவுக்கரசர் போற்றிய தொடர் இங்கு ஒப்புநோக்கற்பாலதாகும். (54)

## கவிக் கூற்று

7911. எல்லாமுட னெய்திய பின்னிவனே
வில்லாளொடு போர்செய வேண்டுமெனா
நல்லாறுடை வீடண னாரணன்முன்
சொல்லாடின னன்னவை சொல்லுதுமால்.

'எல்லாம் உடன் எய்திய பின், இவனே
வில்லாளொடு போர் செய வேண்டும்' எனா,
நல்லாறுடை வீடணன், நாரணன் முன்
சொல்லாடினன் ; அன்னவை சொல்லுதுமால்.

பொ :—(வீடுபேற்றிற்குரிய) நல்ல நெறியிற் செல்லுதலையுடைய வீடணன், (நாம்) எல்லாம் (துணையாக) உடன் சென்ற பின்னர் (இலக்குவனாகிய) இவனே வில்லாள(னாகிய அதிகாய)னுடன் போர் புரிதல் வேண்டும்' என்று திருமாலாகிய இராமனது திருமுன் (அதி காயனது பெருவன்மையையும் இலக்குவனைத் துணியின்றித் தனித்து அனுப்புதல் ஒண்ணாதென்பதனையும்) எடுத்துரைத்தான். அவன் கூறியவற்றை (விரித்துச்) சொல்லுவோம்.

கு :—நூலாசிரியர் கூற்றாக அமைந்தது இச்செய்யுள். நல்லா றுடை வீடணன், 'எல்லாம உடன் எய்திய பின் இவனே வில்லா ளொடு போர் செய வேண்டும்' எனா நாரணன் முன் சொல்லாடி னன் என்க. நல்லாறு - வீட்டுலகிற் செலுத்தும் நல்ல நெறி. 'நல்லாறெனினும்' (திருக்குறள் - 222) என்புழி இச்சொல் இப் பொருளிற் பயின்றுள்ளமை காண்க. நாரணன் - திருமால் ; என் றது இராமனை சொல்லாடுதல் - விரிவாக எடுத்துப் பேசுதல். 'அதிகாயனை எதிர்த்து இலக்குவன் பொரக்கருதிய இப்போரில் நாம் எல்லோரும் இலக்குவனுடன் துணையாய் நிற்றல் வேண்டும்' என இராமனை வீடணன் வேண்டிக் கொண்டான் என்க. அதிகாய

னைக் குறித்து வீடணன் கூறியன அடுத்துவரும் இருபத்தொரு செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். (55)

## அதிகாயனது பேராற்றலையும், முற்பிறப்பின் தொன்மை வரலாற்றையும் வீடணன் விரித்துக் கூறுதல்

7912. வாரேறு கழற்சின வாளரியெம்
போரேருெடு போர்புரி வானமையாத்
தேரேறு சினக்கடு வெந்தறுகட்
காரேறென வந்த கதத்தொழிலோன்.

'வார் ஏறு கழல் இன வாள் அரி, எம்
போர் ஏருெடு போர் புரிவான் அமையா
தேர் ஏறு சினக் கடு வெந் தறுகண்
கார் ஏறு என வந்த கதத் தொழிலோன்.

பொ :—தேரில் ஏறிய சினமிக்க வெவ்விய தறுகண்மை வாய்ந்த இடியேற்றுடன் கூடிய கரியமேகம் என(க் கண்டோர் கூறுமாறு) வந்த வெகுளிச் செயலையுடையவனுகிய அதிகாயன், வாரினுற் பிணிக்கப்பட்ட வீரக் கழலையணிந்த கடுஞ்சினமுடைய கொடிய சிங்கம் போலும் எம்முடைய போர்த் தொழிலில் வல்ல காளையாகிய இலக்குவனெடு அமைந்து நின்று போர்புரியும் வன்மையுடையவனுவன்.

கு :—வந்த கதத்தொழிலோன், எம் போரேருெடு அமையாப் போர்புரிவான் என முடிக்க. வந்த கதத் தொழிலோன் என்றது, சினத்துடன் போர் குறித்து வந்த அதிகாயனை. அமையா – அமைந்து; பொருந்தி. வாள் – கொடுமை. போரேறு - பொருதிறன் வாய்ந்த காளை; ஈண்டு உவம ஆகுபெயராய் இலக்குவனைக் குறித்தது. (56)

7913. ஓவாநெடு மாதவ மொன்றுடையான்
றேவாசுர ராதியர் செய்செருவிற்
சாவானிறை யுஞ்சலி யாவலியான்
மூவாமுத னன்முக னர்மொழியால்.

'ஓவா நெடு மாதவம் ஒன்று உடையான்,
தேவாசுரர் ஆதியர் செய் செருவில்
சாவான், இறையும் சலியா வலியான்,
மூவா முதல் நான்முகனர் மொழியால்.

பொ :—(அவ் அதிகாயன்) ஒழியாத நீண்ட பெருந் தவத்தினை யுடையான்; கெடாத படைப்புத் தொழில் முதல்வராகிய நான்முகனார் அளித்த வரத்தினால் தேவர் அசுரர் முதலியோர் (தன்னை எதிர்த்துச்) செய்யும் போரில் இறவாதவன்; (அன்னார்க்குச்) சிறிதும் தளராத பெருவன்மையுடையான்;

கு :—ஓவுதல் - ஒழிதல்; இடையீடின்றி நெடுங் காலஞ் செய்த ஒப்பற்ற பெருந் தவத்தின் வலிமை வாய்ந்தவன் என்பான் 'ஓவா நெடு மாதவம் ஒன்றுடையான்' என்றான். மூவா – கெடாத. மூத்தல்- கேடுறுதல். மொழி – அருளிக் கூறிய சொல்லாகிய வரம். அதிகாயன் பிரம தேவர்பால் தான் பெற்றுள்ள வரத்தினால் தேவர் அசுரர் முதலியோரொடு செய்யும் போரில் சாவாதவனாகவும் சிறிதும் தளராத பெருவன்மை படைத்தவனாகவும் திகழ்கின்றான் என்பதாம். இறை – சிறிது. (57)

7914. கடமேய்கயி லைக்கிரி கண்ணுதலோ
டிடமேற வெடுத்தன னென்றிவனைத்
திடமேலுல கிற்பல தேவரொடும்
வடமேரு வெடுக்க வளர்த்தனனால்.

'கடம் ஏய் கயிலைக் கிரி, கண்ணுதலோடு
இடம் ஏற எடுத்தனன்' என்று, இவனைத்
திடம் மேலுலகில் பல தேவரொடும்
வட மேரு எடுக்க, வளர்த்தனனால்.

பொ :—'காடுகளைப் பொருந்திய கயிலாய மலையைக் கண்ணுதற் கடவுளாகிய இறைவனுடன் இருந்த இடத்தினின்று (பெயர்த்து), மேல் உயரத் தூக்கினேன் (என்னினும் என் மைந்தன் வலியனாதல் வேண்டும்)' என்று எண்ணி, இவ் அதிகாயனை வானுலகில் வாழ்வோராகிய தேவர் பலருடன் வடதிசைக் கணுளதாகிய மேருமலையை(ப் பெயர்த்து) எடுக்கும் வன்மை யுடையவனாகுமாறு உறுதியுடன் வளர்த்தான் (இராவணன்).

கு :—'கடமேய் கயிலைக்கிரி கண்ணுதலோடு இடம் ஏற எடுத்தனன்' என்றது, இராவணன், தன் பேராற்றலைக் குறித்துத் தன் மனத்தகத்தே எண்ணிய எண்ணம். 'கண்ணுதற் கடவுளாகிய ஒருவன் தங்கிய கயிலாய மலையைப் பெயர்த்தெடுத்த வன்மை படைத்த யான், என் மைந்தனாகிய அதிகாயனைத் தேவர் பலர் குழுமிய மேருமலையைப் பெயர்த்தெடுக்கும் திறலுடையனாய் என்

னினும் பெரு வன்மையுடையவனுகச் செய்தல் வேண்டும்' என்னும் பெரு விருப்பத்துடன் இராவணன் இவனை உடல் வன்மையும் உள்ளத்துறுதியும் உடையவனுக வளர்த்தான் என்பான், "கயிலைக் கிரி எடுத்தனன்' என்று இவனை வட மேரு எடுக்க வளர்த்தனன்" என்றுன். இதனுல், தன்னைக் காட்டிலும் தன் மகன் பெரு வன்மை படைத்தவனுதல் வேண்டும் என்னும் தந்தையின் மனக்குறிப்பு இனிது புலனுதல் காணலாம். (58)

7915. மாலாரொடு மந்தர மாசுணமும்
மேலாகிய தேவரும் வேண்டுமெனு
வாலாலமு மாரமிழ் தும்மமையக்
காலானெடு வேலை கலக்கிடுமால்.

'மாலாரொடு மந்தரம் மாசுணமும்
மேலாகிய தேவரும் வேண்டும்?' எனு,
ஆலாலமும் ஆர் அமிழ்தும் அமைய,
காலால் நெடு வேலை கலக்கிடுமால்.

பொ :—(இவன் திருப்பாற்கடலிலே) ஆலகால நஞ்சுடன் அரிய அமுதமும் பொருந்தித் தோன்ற(க் கடைதற்கு)த் திருமாலுடன் (மத்தாக) மந்தர மலையும் (கடை கயிருக, வாசுகி என்னும்) பாம்பும் விண்ணின் மேலாராகிய தேவர்களும் வேண்டுமோ? (வேண்டுவதில்லை) என்று நெடிய ஆழமுடைய பாற்கடலைத் தன்னுடைய கால்களாலே கலக்க வல்லவன்.

கு :—மாலார்-திருமால். மந்தரம்-மந்தரம் என்னும் பெயருடைய மலை. மாசுணம்-(வாசுகியென்னும்) பாம்பு. முற்காலத்தில் திருமால் மந்தர மலையை மத்தாகவும் வாசுகியைக் கடை கயிருகவும் கொண்டு பாற்கடலைக் கடைந்த செய்தியினை,

'வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணுக்கிக்
கடல்வண்ணன் பண்டொருகால் கடல்வயிறு கலக்கினையே'
(சிலப்-ஆய்ச்சியர்-32)

என இளங்கோவடிகள் குறித்துள்ளமை இங்கு நினைத்தற்குரியதாகும். வேண்டும் என்பது, 'வேனிற்றிங்களும் வேண்டுதியென்றே' (சிலப்-புறஞ்-25) என்புழிப் போன்று ஒலி வேற்றுமையால் 'வேண்டுமோ?' என விஞவாய், வேண்டாம் என எதிர்மறைப் பொருளுணர்த்தி நின்றது. இனி, 'வேண்டுமெனுது' எனப் பாடங் கொண்டு, 'வேண்டுமென்று கருதாது எனப் பொருளுரைத்தலும்

உண்டு. பிறருடைய துணையும் பிற சாதனங்களும் வேண்டாது தானொருவனாய் நின்று தன் கால்களாற் பாற்கடலைக் கடைந்து அமுதத்தைப் பெற எண்ணின் அவ்வாறு செய்து முடிக்கும் ஆற்றல் வாய்ந்தவன் இவ் அதிகாயன் என்றவாறு. (59)

7916. ஊழிக்கு முயர்ந்தொரு நாளொருவாப்
பாழித்திசை நின்று சுமந்தபணைச்
சூழிக்கரி தள்ளுத ரோள்வலியோ
வாழிக்கிரி தள்ளுமொ ரங்கையினால்.

'ஊழிக்கும் உயர்ந்து, ஒரு நாள் ஒரு வாப்
பாழித் திசை நின்று சுமந்த பணைச்
சூழிக் கரி தள்ளுதல் தோள் வலியோ?
ஆழிக் கிரி தள்ளும், ஓர் அங்கையினால்.

பொ :—ஊழிக்காலத்திலும் (அழியாமல்) உயர்ந்து ஒருநாளும் (இடம் பெயர்ந்து) நீங்காத வலிமையுடையனவாய் (எட்டு)த் திசைகளில் நின்று (இப் பூமியைத்) தாங்கிய பருமை வாய்ந்த முகபடாம் அணிந்த யானைகளைத் தள்ளுதலாகிய (இராவணனது) செயல் தோள் வன்மையைக் குறித்த செயலாகுமோ? (இவ் அதிகாயன்) அழகிய கை ஒன்றினால் சக்கரவாள மலையையே பெயர்த்துத் தள்ள வல்லவன்.

கு :—ஊழி - யுக முடிவு. ஒருவுதல் – நீங்குதல். பாழி - வன்மை. பணை—பருமை. சூழி—முகபடாம். ஆழிக்கிரி-சக்கரவாளமலை. ஊழிக் காலத்தும் இறவாத திசை யானைகளைத் தள்ளி வெற்றி கொண்ட இராவணன் தோள் வன்மையினும் சக்கரவாள மலையினை ஒரு கையினால் தள்ளவல்ல அதிகாயனது தோள் வலியே பெரிதும் பாராட்டுத் தகுவதென்பதாம். (60)

7917. காலங்கள் கணக்கில கண்ணிமையா
வாலங்கொண் மிடற்றவ னாரழல்வாய்
வேலங்கெறி யக்கொடு விட்டதுநீள்
சூலங்கொ லெனப்பகர் சொல்லுடையான்.

'காலங்கள் கணக்கு இல, கண் இமையா
ஆலம் கொள் மிடற்றவன், ஆர் அழல்வாய்

வேல் அங்கு எறிய, கொடு, ‘விட்டது நீள்
சூலம்கொல்?’ எனப் பகர் சொல் உடையான்;

பொ :—எண்ணில்லாத காலங்கள் சென்ருலும் கண் இமைத்தல் இல்லாத நஞ்சினையுட் கொண்ட கண்டத்தனுகிய சிவபிரான் அங்கு (இவனை எதிர்த்து) வந்து நிறைந்த தீயின் தன்மை வாய்ந்த தன் (மூவிலை) வேற்படையை (இவன்மேல்) எறிந்தால் (அதனைத் தன் கையிற் பற்றிக்) கொண்டு (அவ் விறைவனெதிரே சென்று) (‘நீ) என்மேல் எறிந்தது (வலியற்றதாகிய இச்) சூலப்படைதானே’ என்று வினவும் வீர மொழியினையுடையவன் (இவ் அதிகாயன்).

கு :—கணக்கில காலங்கள் என இயைக்க, ‘ஆலங்கொள் மிடற்றவன்’ என்ற தொடர் ஒரு பெயரளவாய் நின்று ‘கண்ணிமையா’ என்ற ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சத்திற்கு முடிபாயிற்று. ஆலம் நஞ்சு. எறிய என்னும் செயவெனெச்சத்தை எறியின் எனச் செயின் என்னும் வாய்பாட்டு எச்சமாகத் திரித்துப் பொருள் கொள்க. கணக்கில காலங்கள் இறைவன் கண்ணிமையாதிருத்தலை, ‘இமையா துயிராதிருந்தாய் போற்றி’ (6–55-8) எனத் திருநாவுக்கரசர் குறித்துப் போற்றியுள்ளமை இங்குக் கூர்ந்துணரத் தக்கதாகும். காலகாலனுகிய சிவபெருமான் சூலப்படையை எறிவனுயினும் அப் படையினையும் தன் கையாற் பற்றி வீரமொழி பகர வல்லவன் இவ் அதிகாயன் என வீடணன் அவனது பேராற்றலைப் புனைந்துரை வகையாற் புலப்படக்கூறியவாறு. சொல் என்றது, ஈண்டுத் தன்மேல் இகல் குறித்து வந்தாரை அணுகி நின்று கூறும் வீரமொழியினை. (61)

7918. பகையாடிய வானவர் பல்வகையூர்
புகையாடிய நாள்புனை வாகையினுன்
மிகையாருயி ருண்ணென வீசியவெந்
தகையாழி தகைந்த தனுத்தொழிலான்.

‘பகை ஆடிய வானவர் பல்வகை ஊர்
புகை ஆடிய நாள் புனை வாகையினுன்;
“மிகையார் உயிர் உண்” என வீசிய வெந்
தகை ஆழி தகைந்த தனுத் தொழிலான்;

பொ :—(அன்றியும்) பகைமை பாராட்டி எதிர்த்த தேவர்களுடைய பலதிறப்பட்ட நகரங்களையும் (தான் தீக்கொளுவிப்) புகையுண்டாக்கிய அந்நாளிலே (தனது வெற்றிக்கு அடையாளமாக) அணிந்த வெற்றி மாலையை யுடையவன்; (‘அடங்காதாராகிய) பகைவரது உயிரை உண்டு வருக’ என்று (திருமால் ஏவினுல் அவ்வாறு)

செலுத்திய வெம்மைத் தன்மையுடைய சக்கரப் படையினைத் தடுத் தழிக்கும் விற்றொழிலை யுடையவன்.

கு :—வாகை-வெற்றிமாலை. மிகையார்–அடங்காதார்; பகைவர். 'மிகையார் உயிர்உண்' என்றது, சக்கரப்படையினை ஏவுங்காலத்து அதனை நோக்கிக் கூறும் ஏவல்மொழி. தகைதல் - தடுத்தல். தகைந்த–தகையும்; தேற்றம் பற்றி எதிர்காலம் இறந்த காலமாகக் கூறப்பட்டது. தனுத்தொழில்–விற்றொழில். திருமாலால் வெகுண்டு எறியப்படும் பெரும்படையாகிய சக்கரத்தினையும் தன் வில்லினின்று எய்யப்படும் சிறிய அம்பினால் தடுத்து நிறுத்தவல்ல விற்போரிற் சிறந்த வீரன் இவ் அதிகாயன் என அவனது விற்றொழில் வன்மை யினை வீடணன் புனைந்துரை வகையாற் புலப்படக் கூறினான் என்பதாம். (62)

7919. உயிரொப்புறு பல்படை யுள்ளவெலாஞ்
செயிரொப்புறு மிந்திரர் சிந்தியநா
ளயிரொப்பன நுண்டுகள் செய்தவர்தம்
வயிரப்படை தள்ளிய வாளியினான்.

'உயிர் ஒப்புறு பல் படை உள்ள எலாம்,
செயிர் ஒப்புறும் இந்திரர் சிந்திய நாள்
அயிர் ஒப்பன நுண் துகள் செய்து, அவர்தம்
வயிரப் படை தள்ளிய வாளியினான்.

பொ :—(தமக்கு உறுதி பயக்கும் திறத்தில் தமது) உயிரை ஒத்து மதிக்கத்தக்க பலவகை ஆயுதங்களாகவுள்ள எல்லாவற்றையும சினத்தால் ஒப்புடைய இந்திரன் முதலிய தேவர்கள் (தன்மேற்) சிதறிய காலத்தில் (அவற்றை) நுண்மணலை யொப்ப நுண்ணிய பொடிகளாகச் சிதறச் செய்து அத்தேவர்களது வச்சிராயுதத்தையும் பயனற்றதாகத் தள்ளிய அம்பினையுடையவன் (இவ் அதிகாயன்).

கு :—தமக்கு இடர் நீக்கி உறுதி பயக்கும் திறத்தில் தம் உயிரை ஒத்து மதிக்கத் தக்க பலவகை ஆயுதங்களையும் தேவர்கள் இவன் மேற் சிந்திய காலத்து அவற்றையெல்லாம் நுண்பொடிகளாகச் செய்ததுடன் அவர்கள் ஏவிய வச்சிரப் படையையும் தன் வில்லின் அம்பொன்றினாற் பயனற்றதாகச் செய்து தள்ளிய வில்வீரன் இவ் அதிகாயன் என்றவாறு. அஞ்சி ஓடாது வெகுண்டு எதிர்ந்த தேவர்கள் என்பதுபடச் செயிர் ஒப்புறும் இந்திரர் என்றான். செயிர் – கோபம். இந்திரர் - இந்திரன் முதலிய தேவர்கள். அயிர் – நுண் மணல். வயிரப்படை – வச்சிராயுதம். வாளி – அம்பு. (63)

7920. கற்றான்மறை நூலொடு கண்ணுதல்பான்
முற்றாதன தேவர்மு ரட்படைதாம்
மற்றாரும் வழங்க வலாரிலவும்
பெற்றானெடி தாண்மை பிறந்துடையான்.

'கற்றான், மறை நூலொடு கண்ணுதல்பால்;
முற்றாதன தேவர் முரண் படைதாம்
மற்று ஆரும் வழங்க வ(ல்)லார் இ(ல்)லவும்
பெற்றான்; நெடிது ஆண்மை பிறந்துடையான்.

பொ :—(அன்றியும், இவன்) நெற்றியிற் கண்ணுடைய சிவபெருமான்பால் வேதங்களை (ஏனைய) சாத்திரங்களுடன் கற்றுணர்ந்தான்; (பிறர் யாவரிடத்தும்) அடையாதனவும் (தம்மைச்) செலுத்தவல்லார் யாரும் இல்லாதனவும் ஆகிய வன்மை வாய்ந்த தெய்வப் படைக் கலங்களை (அவ்விறைவன்பாற்) பெற்றான். (ஆதலால்) வீரவுணர்வாகிய ஆண்மை (தன்கண்) நெடிது தோன்றப் பெற்றுள்ளான்.

கு :—கண்ணுதல்பால் நூலொடு மறை கற்றான்; முற்றாதன(வும்) மற்று ஆரும் வழங்க வல்லார் இலவும் தேவர் முரண்படைதாம் பெற்றான்; (அதனால்) ஆண்மை நெடிது பிறந்து உடையான் என இயையும். கண்ணுதல் - சிவபெருமான். மறை – வேதம்; படைகளை எய்தற்குரிய மந்திரம் எனினும் அமையும். முற்றுதல்-அடைதல்: 'அணிகிளரடுக்கன் முற்றிய வெழிலி' (இலக்கணவி-754 உரை) என்புழி இச்சொல் இப்பொருளிற் பயின்றுள்ளமை காண்க. முரண் தேவர் படை – வலிமை வாய்ந்த தெய்வப் படைக்கலம். தாம் - அசை. வழங்குதல் - (பகைவர்மேற்) செலுத்துதல். ஆண்மை - வீரம். (64)

7921. அறனல்லது நல்லது மற்றறியான்
மறனல்லது பல்பணி மாறணியான்
றிறனல்லதொ ராருயி ருஞ்சிதையா
னுறனல்லது பேரிசை யென்றுணர்வான்.

'அறன் அல்லது நல்லது மற்று அறியான்;
மறன் அல்லது பல்பணி மாறு அணியான்;
திறன் அல்லது ஓர் ஆருயிரும் சிதையான்;
"உறல் நல்லது பேர் இசை" என்று உணர்வான்;

பொ :—(அன்றியும் இவன்,) அறத்தையன்றி (உயிர்க்கு) நலம் விளைப்பது பிறிதொன்றுளதெனக் கருதான்; வீரத்தையன்றி (த் தான் அணியத்தக்கனவாக) வேறு பல அணிகளை அணிவானல்லன்; (தன்னெடு) இகலுந்திறமாகிய போர் நிலையிலன்றி (மற்றைக் காலத்து) அரிய உயிர் எதனையும் கொன்று சிதைக்க மாட்டான்; பெரும்புகழை யுறுதலே நலந்தருவதென்றுணரும் நல்லுணர்வுடையான்.

கு :—அறன் - அறநெறி. அல்லது - அன்றி. மறம் – வீரம். தனக்கு ஓதிய அறத்தின் வழுவாதொழுகி அறன் அல்லாதன தன்கண் நிகழாதவாறு நீக்கி வீரத்தின் வழுவாத மானமுடையானாக வாழ்பவன் அதிகாயன் என்பது புலப்பட, 'அறன் அல்லது நல்லது மற்று அறியான், மறன் அல்லது பல்பணி மாறு அணியான்' என்ருர். இத்தொடரில் 'அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா, மான முடையதரசு' (திருக்–384) எனவரும் தெய்வப் புலவர் வாய்மொழியினை ஆசிரியர் எடுத்தாண்டுள்ளமை நோக்கத்தக்கதாகும். (65)

7922. காயத்துயி ரேவிடு காலையினு
மாயத்தவர் கூடி மலைந்திடினுந்
தேயத்தவர் செய்யல செய்திடினும்
மாயத்தொழில் செய்ய மதித்திலனல்.

'காயத்து உயிரே விடு காலையினும்,
மாயத்தவர் கூடி மலைந்திடி னும்,
தேயத்தவர் செய்யல செய்திடினும்
மாயத் தொழில் செய்ய மதித்திலனல்.

பொ :—(அன்றியும், இவன்) உடம்பினின்றும் (தன்) உயிரையே துறத்தற்குரிய அல்லற்காலம் நேர்ந்தாலும் வஞ்சனையுடையார் (பலர்) குழுமி (த் தன்னுடன்) போர் செய்தாலும் (பிற) நாட்டவர் செய்யத்தகாத தீச்செயலை (த் தன்கண்) செய்தாலும் (யார் கண்ணும்) வஞ்சனைச் செயலை (த் தன் மனத்தாலும்) கருதுதல் இல்லாதவன்.

கு :—வசையற்று வருகின்ற நற்குடி மரபினேடு ஒத்து வாழ்தல் வேண்டும் என்னும் நன்னேக்கமுடையவன் அதிகாயன் ஆதலின் தன் உயிரைத் துறக்க நேர்ந்த அல்லற்காலத்தும் வஞ்சனைச் சூழ்ச்சியை மேற்கொள்ளாத தூய நன்னெஞ்சத்தினன் ஆதலை வீடணன் புலப்படுத்தியவாறு. காயம் - உடம்பு. மாயத்தவர் - வஞ்சனையாளர். மாயம் – வஞ்சனைச் சூழ்ச்சி. மதித்தல் – (மனத்தால்) கருதுதல். (66)

7923. மதுகைடவ ரென்பவர் வானவர்தம்
பதிகைகொடு கட்டவர் பண்டொருநாள்
அதிகைதவ ராழிய நந்தனேயும்
விதிகைம்மிக முட்டிய வெம்மையினர்.

'மது கைடவர் என்பவர், வானவர்தம்
பதி கைகொடு கட்டவர், பண்டு ஒரு நாள்—
அதி கைதவர், ஆழி அநந்தனேயும்
விதி கைம்மிக, முட்டிய வெம்மையினர்.

பொ:—மிக்க வஞ்சனையுடையராகிய மது, கைடபன் என்னும் பெயரினையுடைய அவுணர் இருவரும் வானுலகத்தவராகிய தேவர்களது நகரைக் கைப்பற்றிக் கொண்டு (அவர்களை அவ்விடத்தினின்றும்) களைந்து போக்கியவராய், பாற்கடலில் (பாம்பணையில் துயில் கொள்ளும்) திருமாலையும் (வினைப்பயனாகிய) விதிதூண்ட முன்னொரு காலத்து எதிர்த்துத் தாக்கிய கொடுமை படைத்தவர்கள்.

கு:—கட்டல் - களைந்து போக்குதல். 'அதி' என்பது, வடசொல்லுள் மிகுதிப் பொருளதோரிடைச் சொல் (திருக்குறள்-636, பரிமேலழகர் உரை). அது, கைதவம் என்ற சொல்லுடன் கூடி 'அதிகைதவம்' என நின்றது. ஆழி - கடல்; ஈண்டுப் பாற்கடலையுணர்த்திற்று. அநந்தன் என்றது திருமாலை. முட்டுதல் - பொருது தாக்குதல். (67)

7924. நீராழியி ழிந்து நெடுந்தகையைத்
தாராயம ரென்றனர் தாமொருநாள்
ஆராழிய வண்ணலு மஃதிசையா
வாராவமர் செய்கென வந்தனனல்.

'நீர் ஆழி இழிந்து, நெடுந்தகையை,
"தாராய் அமர்" என்றனர், தாம் ஒரு நாள்;
ஆர் ஆழிய அண்ணலும் அஃது இசையா,
"வாரா, அமர் செய்கு" என வந்தனனல்.

பொ:—அவர்கள் (இருவரும்) ஒரு நாள் நீர் மயமாகிய பாற்கடலிலே இறங்கிப் பெருமைக்குணமுடைய நெடியோனாகிய திருமாலை (நோக்கி)ப் 'போர் செய்தற்கு இசைவு தருவாயாக' என்று கூறினர். அரிய சக்கரப் படையையுடைய திருமாலாகிய கடவுளும்

அவரது கருத்துக்கு உடன்பட்டு '(இதுகாறும்) நிகழ்ச்சியில் வாராத (பெரும்) போரைச் செய்வேன்' என்று சொல்லிக் கொண்டு அவருடன் (போரேற்று) வந்தான்.

கு :—'நீராழி' என்புழி நீர் என்றது நீரை யுணர்த்தாது அதன் தன்மையாகிய நீர்மையைச் சுட்டி நின்றது. நெடுந்தகை என்பது, ஆடவரிற் சிறந்த பெரியோன் என்ற பொருளில் வழங்கும் உயர் திணைச் சொல். வருதல் - நிகழ்ச்சியில் வருதல். செய்கு - செய் வேன். (68)

7925. வல்லாருரு வாயிர மாய்வரினும்
நல்லார்முறை வீசி நகுந்திறலார்
மல்லாலிள காது மலைந்தனன்மா
லல்லாயிர மாயிர மஃகினவால்.

'வல்லார் உரு ஆயிரம் ஆய் வரினும்,
நல்லார் முறை வீசி, நகும் திறலார்
மல்லால் இளகாது, மலைந்தனன் மால்;
அல் ஆயிரம் ஆயிரம் அஃகினவால்.

பொ :—வல்லமையுடையாராகிய வீரர்கள் ஆயிரம் வடிவு கொண்டு (தனித்தனியே போருக்கு) வந்தாலும் (அவர்களைப் போர் புரியும் வலிமையற்ற) நல்லாராகிய மகளிர் (எனக் கண்டோர் கருதும்) முறையில் துரத்தி (இகழ்ந்து) சிரிக்கும் ஆற்றல் மிக்காராகிய அந்த மது கைடபருடனே திருமால் மற்போர் முறையினால் தளராது நின்று பொருதான்; (அங்ஙனம் பொருது நிற்கும் நிலையில்) பல்லாயிரக் கணக்கான நாட்கள் கழிந்து போயின.

கு :—வல்லார் ஆயிரம் உருவாய் வரினும் என இயைத்துரைக்க. வல்லார் – (மாயத்தால் பல வடிவு கொண்டு) பொருது வெல்லும் வல்லமையுடையராய வீரர்கள். நல்லார் முறை என்றது, அத்தகைய பெருவீரர்களும் தம்மையணுகி யெதிர்க்கும் நிலையில் மெல்லியலாராகிய மகளிர் போன்று எளியராய் வெருண்டோடும் தன்மையராதல். நகுந்திறலார் என்றது, மது கைடபர்களை. நகுந் திறலாரொடு மால் மல்லால் மலைந்தனன் எனவும் ஆயிரம் ஆயிரம் அல் அஃகின எனவும் இருதொடராகக் கொள்க. இளகுதல் – நெகிழ்தல்; தளர்தல், மல் - மற்போர். மலைதல் - பொருதல். அல் – நாள். அஃகுதல் – சுருங்குதல்; இல்லையாய்க் கழிதல். (69)

7926. தன்போல்பவர் தானு மிலாததனிப்
பொன்போலொளிர் மேனிய னைப்புகழோ
யென்போல்பவர் சொல்லுவ தெண்ணுடையா
ருன்போல்பவ ரியாருள ரென்றுரையா.

‘ தன் போல்பவர் தானும் இலாத தனிப்
பொன்போல் ஒளிர் மேனியனை “புகழோய் !
என் போல்பவர் சொல்லுவது, எண் உடையார்
உன் போல்பவர் யார் உளர் ?” என்று உரையா,

பொ —தனக்கு ஒப்பாவார் தன்னையன்றி (ப் பிறர் ஒருவரும்) இல்லாத (கலப்பற்ற) தூய பொன்போன்று ஒளிரும் திருமேனியை யுடைய திருமாலை நோக்கி (மது கைடபர் அவ்விருவரும்) “புகழிற் சிறந்தோனே ! என்னை யொத்த வீரர்கள் (உன்னைப்பற்றிச்) சொல்லத்தக்கது, ‘(வீரர்களால்) மதிக்கத்தக்கார் உன்னைப் போன்றவர் பிறர் யாருளர் ? என்னும் பாராட்டுரை ’ என (த் தனித் தனியே) கூறி,

கு :—உரையா - உரைத்து ; இவ்வினையெச்சம் 72–ஆம் செய் யுளில் வரும் ‘சொல்லுதலும்’ என்னும் வினைகொண்டு முடிந்தது. ‘என்போல்வர்’ என ஒருமையிற் கூறுதலால் அவ்விருவரும் இவ்வாறு தனித்தனியே தம்மைக் குறித்து உரையாடினர் என்பது புலனும். பொன்போல் ஒளிர் மேனியன் என்றது பொன்னையொத்து ஒளி திகழும் திருமேனியனாகிய திருமாலை. (70)

7927. ஒருவோமுல கேழையு முண்டுமிழ்வோ
மிருவோமொடு நீதனி யித்தனை நாட்
பொருவோமொடு நேர்பொரு தாய்புகழோய்
தருவோ நின் மனத்தது தந்தனமால்.

‘ ஒருவோம் உலகு ஏழையும் உண்டு உமிழ்வோம் ;
இருவோமொடு—நீ தனி இத்தனை நாள்—
பொருவோமொடு நேர் பொருதாய் ; புகழோய் !
தருவோம் நின் மனத்தது தந்தனமால் ;

பொ :—(எங்கள் இருவரில்) யாம் ஒருவரே இவ்வுலகங்கள் ஏழினையும் (ஒருசேர) விழுங்கி (மீளவும்) உமிழ்ந்து வெளிப்படுத்த வல்லோம். (அத்தகைய) எம் இருவரோடும் நீ (ஒருவனாகத்) தனித்து இத்தனை நாட்கள் நேர் நின்று போர் புரிந்தாய். புகழுடை

யோனே! நின் மனத்தில் விரும்பியதனைத் தருவோம். (அதனை வெளிப்படக் கூறுவாயாயின் இப்பொழுதே) தந்தோம்.

கு :—'ஒருவராகவே உலகேழினையும் உண்டுமிழ வல்ல பேராற்றல் வாய்ந்த எங்கள் இருவருடனும் நீ ஒருவனாகவே தனித்து நின்று ஆயிரம் ஆயிரம் நாட்கள் தளராது போர் செய்தாய் ஆதலால் திருமாலாகிய நீ வீரத்திற் சிறந்த எங்கள் இருவராலும் புகழத்தக்க வனாயினை. உலகினையுண்டுமிழும் ஆற்றலுடைமையொன்றேபற்றி நீ எங்களை வெல்லுதல் என்பது என்றும் இயலாத செயலாகும். ஆகவே நின் மனத்தில் விரும்பிய வரத்தினை எம்பால் வேண்டிப் பெற்று உய்யக் கருதினையாயின் இப்பொழுதே தந்தோம் பெற்றுச் செல்க' என மது கைடவர் இருவரும் திருமாலை நோக்கிக் கூறினர் என்பதாம். (71)

**7928.** ஒல்லும்படி நல்ல துனக்குதவச்
சொல்லும்படி யென்றவர் சொல்லுதலும்
வெல்லும்படி நும்மை விளம்புமெனக்
கொல்லும்படி யாலரி கூறுதலும்.

"'ஒல்லும்படி நல்லது உனக்கு உதவச்
சொல்லும்படி" என்று அவர் சொல்லுதலும்,
"வெல்லும்படி நும்மை விளம்பும்" எனக்
கொல்லும் படியால் அரி கூறுதலும்.

பொ :—('போரில் எம்மைவெல்ல இயலாது நிற்கும்) உனக்கு (எம்மால்) இயலும் வகையில் உதவி செய்யுமாறு சொல்லுந் தன்மை நலந்தருவதாகும்' என (மது கைடவர்களாகிய) அவர்கள் சொன்ன வுடனே திருமால், 'நும்மிருவரையும் வெற்றிகொள்ளும் முறையினைச் சொல்லுவீராக' என அவர்களைக் கொல்லும் கருத்தாற் சொல்லிய அளவில்,

கு :—இச்செய்யுள் குளகம். 'சொல்லுதலும்' என்றும் உம்மீற்று வினையெச்சம் அடுத்த செய்யுளில் 'நடையிற்படு நீதியர்...துணியா... நல்குதலும்' என்னும் பிறகருத்தாவின் வினைகொண்டு முடிந்தது. 'உனக்கு ஒல்லும்படி உதவச் சொல்லும்படி நல்லது' என்று அவர் கூறுதலும் என மாற்றுக. அவர் – மது கைடவர். 'நும்மை வெல்லும்படி விளம்பும்' என அரி கொல்லும்படியாற் கூறுதலும் என இயைத்துரைக்க. (72)

7929. இடையிற்படு கிற்கிலம் யாமொருநின்
றெடையிற்படு கிற்று மெனத்துணியா
வடையச்செய கிற்றிய தாணையென
நடையிற்படு நீதியர் நல்குதலும்.

“ இடையில் படுகிற்கிலம் யாம்; ஒரு நின்
தொடையின் படுகிற்றும்” எனத் துணியா,
“ அடையச் செயகிற்றி; அது ஆணை” என,
நடையில் படு நீதியர் நல்குதலும்.

பொ :—உலக நடையிற் பொருந்திய நீதி நெறியில் நின்றொழுகியவராகிய மதுகைடவர், ‘யாம் (எம் வாழ்நாளின்) இடையே (வேறு எவ்வாற்றானும்) இறந்துபடுவோமல்லோம்; ஒப்பற்ற நினது துடையினால் (தாக்குண்டு) இறக்குந் தன்மையோம்’ என்று கூறித் (தமது உயிரை விடுதற்குத்) துணிந்து, ‘(உன் துடையிடத்தே எம்மை) அடையச் செய்து அழிக்கவல்லாயாகுக அதுவே எங்களது கட்டளையாகும்’ எனத் (திருமாலுக்கு அவ்வரத்தினைத்) தந்த அளவில்,

கு :—நடையிற்படு நீதியர், ‘யாம் இடையிற் படுகிற்கிலம்; ஒரு நின் தொடையிற் படுகிற்றும்’ எனத்துணியா, ‘அடையச் செயகிற்றி, அது ஆணை’ என நல்குதலும் என இயைத்துரைக்க. ‘நல்குதலும்’ என்னும் எச்சம் அடுத்த செய்யுளில் ‘விட்டான்’ என்னும் பிற கருத்தாவின் வினைகொண்டு முடியும் (73)

7930. விட்டானுல கியாவையு மேலொடுகீழ்
எட்டாவொரு வன்ற னிடத்தொடையை
ஒட்டாதவ ரொன்றின ரூழ்வலியாற்
பட்டாரிது பட்டது பண்டொருநாள்.

‘ விட்டான், உலகு யாவையும், மேலொடு கீழ்—
எட்டா ஒருவன் தன் இடத் தொடையை;
ஒட்டாதவர் ஒன்றினர், ஊழ் வலியால்
பட்டார்; இது பட்டது பண்டு ஒரு நாள்.

பொ :—எல்லாவுலகங்களும் (தனது) முதலும் முடிவும் (இவையென மனத்தாலும் வாக்காலும்) அணுகி அறியமுடியாத இறைவனாகிய திருமால், தன்னுடைய இடத்துடையினை (மதுகைடவர் ஆகிய அவ்விருவர் மேலும்) வீசித் தாக்கினான். (அந்நிலையில்) பகைவராகிய அவ்விருவரும் (அத்துடையில்) அகப்பட்டாராய் விதிவலியால்

இறந்தொழிந்தார்கள். இது முன்னொரு காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியாகும்.

கு :—உலகு யாவையும் மேலொடு கீழ் எட்டா ஒருவன், தன் இடத்தொடையை விட்டான் என மாற்றுக. உலகு என்றது ஈண்டு உணர்ந்து உரைக்குந் தன்மையினையுடைய மக்கள் தேவர் நரகர் முதலிய மனவறிவுடைய உயிர்த்தொகுதியினை. மேல் – முடி. கீழ் - அடி. எட்டுதல் – அணுகி அளந்தறிதல். 'பாதாளம் ஏழினுங்கீழ்ச் சொற்கழிவு பாதமலர், போதார் புனைமுடியும் எல்லாப் பொருண் முடிவே' (திருவாசகம், திருவெம்பாவை. 10) எனவரும் திருவாதவூரடிகள் வாய்மொழி இங்கு நினைக்கத்தக்கதாகும். ஒட்டாதவர் – (உள்ளம்) பொருந்தாதாராகிய பகைவர். பட்டார் – இறந்தார். இது பண்டொரு நாள் பட்டது என்க. பட்டது – நிகழ்ந்தது. (74)

7931. தனிநாயகன் வன்கதை தன்கைகொளா
நனிசாட விழுந்தனர் நாளுலவாப்
பனியாமது மேதை படப்படர்மே
தினியானது பூவுல கெங்கணுமே.

'தனி நாயகன், வன்கதை தன் கைகொளா,
நனி சாட, விழுந்தனர், நாள் உலவா
பனியா ; மது மேதை படப் படர் மே-
தினி ஆனது, பூவுலகு எங்கணுமே.

பொ :—ஒப்பற்ற முதல்வனாகிய திருமால், வலிய தண்டாயுதத்தைக் கையிற் கொண்டு நன்றாகப் புடைத்தலால் (அவ்விருவரும்) வாழ்நாள் கெட்டு நடுங்கி (இறந்து) வீழ்ந்தார்கள். மது என்பானது மேதையாகிய தாது எங்கும் பட்டதனால் அதனைப் பொருந்திய (இந்) நிலவுலகம் மேதினியெனப் பெயர் பெறுவதாயிற்று.

கு :—தனி நாயகன் - தன்னேரில்லாத் தலைவனாகிய திருமால். கதை - தண்டாயுதம். சாடுதல் – புடைத்தல். உலத்தல் - கெடுதல். பனித்தல் – நடுங்குதல். மேதை - உடம்பின் எழுவகைத் தாதுக்களில் ஒன்றாகிய மேதசு. மதுமேதை எங்கணும் படப் படர்பூவுலகு மேதினி ஆனது என இயைக்க. (75)

7932. விதியாலிவ் வுகந்தனின் மெய்வலியான்
மதுவானவ னெம்முன் மடிந்தனனால்

கதிர்தானிகர் கைடவ னிக்கதிர்வே
லதிகாய னிதாக வறிந்தனனுல்.

'விதியால் இ(வ்) உகம் தனில், மெய் வலியான்
மது ஆனவன் எம்முன் கடிந்தனனுல் ;
கதிர்தான் நிகர் கைடவன் இக் கதிர் வேல்
அதிகாயன் ; இது ஆக அறிந்தனனுல்.

பொ :—உடல்வன்மை படைத்தவனுகிய மது என்பவன் இந்த யுகத்தில் என் தமையன் கும்பகருணனுகத் தோன்றியவன் பண்டை விதியால் (நின்னுடன் பொருது) இறந்தொழிந்தான் ; கதிரவனை யொத்த கைடவன் என்பவனே இந்த ஒளி பொருந்திய வேற் படையையுடைய அதிகாயனுவன். இவ்வாருக (இவ்விருவரது பண்டைப் பிறப்பின் செய்திகளை அறிந்தோர் சொல்ல)க் கேட் டறிந்தேன்.

கு :—மெய்வலியான் மது, இவ் உகந்தனில் எம் முன் ஆனவன், விதியால் மடிந்தனன் என இயைத் துரைக்க. 'முன்னையுகத்தில் திருமாலொடு போர் செய்து இறந்த அவுணர்களாகிய மது, கைடவன் என்னும் இருவரும் இந்த யுகத்தில் கும்பகருணன் ஆகவும் அதி காயன் ஆகவும் முறையே பிறந்தார்கள். அவ்விருவருள் என் தமைய னுகிய கும்பகருணன் பண்டை விதியால் நின்னுடன் பொருது இறந் தான். இராவணன் மைந்தனுகிய இவ் அதிகாயன் மட்டும் இன் னும் இறவாதுள்ளான்' என்று இவ்வாறு வீடணன் அதிகாயனது முற்பிறப்பின் பெற்றியையும் அறத்தின் வழாத பேராற்றலையும் இராமபிரானுக்கு விரித்துக் கூறினுன் என்பதாம். (76)

வீடணன் கூறியது கேட்ட இராமன், இலக்குவனது
பெருவன்மையை அவனுக்கு அறிவுறுத்தல்

7933. என்ருனவ் விராவண னுக்கிளையா
னன்ருகுக வென்றெரு நாயகனு
மின்ருனுமிழ் வெண்ணகை வேறுசெயா
நின்ருனிது கூறி நிகழ்த்தினனுல்.

என்ருன், அவ் இராவணனுக்கு இளையான் ;
'நன்று ஆகுக' என்று ஒரு நாயகனும்,
மின்தான் உமிழ் வெண் நகை வேறு செயா–
நின்ருன், இது கூறி நிகழ்த்தினனுல்.

பொ :—என்று இவ்வாறு கூறி முடித்தான் அந்த இராவண னுக்குத் தம்பியாகிய வீடணன். ஒப்பற்ற முதல்வனாகிய இராம பிரானும் (மாற்றான் வலியினைப் புலப்படுத்தும் முறையில் நீ கூறிய இவ்வுரை) 'நல்ல வெற்றியைத் தருவதாகுக' என்று சொல்லி மின் னலின் ஒளியை வெளிப்படுத்தும் வெள்ளிய புன்சிரிப்பினை வெளிப் படச் செய்து நின்றவனாகி(ப் பின்வரும்) இம் மொழியினைக் கூறி (இலக்குவனது பெரு வன்மையை) எடுத்துரைத்தான்.

கு :—இராவணனுக்கு இளையோன் என்றது, வீடணனை. ஒரு நாயகன் என்றது ஒப்பற்ற முதல்வனாகிய இராமபிரானை. ஒரு நாய கனும், 'நன்று ஆகுக' என்று வெண்ணகை வேறு செயா நின்றான், இது கூறி நிகழ்த்தினன் என்க. அவன் கூறியவை அடுத்து வரும் ஒன்பது செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். இலக்குவனுடன் பழகியும் அவனது பேராற்றலை வீடணன் உணர்ந்து கொள்ளாமை பற்றி இராமன்பால் நகை தோன்றியது; இது பிறன்கண் உள்ள பேதைமை பொருளாகத் தோன்றிய நகையாகும். வேறு செய்தல்— வெளிப்படுத்துதல். இது என்றது, இலக்குவனது பெரு வன்மை யைக் குறித்துப் பின்னர்க் கூறப்படும் வார்த்தையினை. (77)

7934. எண்ணாயிர கோடி யிராவணரும்
விண்ணாடரும் வேறுல கத்தெவரும்
நண்ணாவொரு மூவரு நண்ணிடினுங்
கண்ணாலிவன் விற்றொழில் காணுதியால்.

'எண்ணாயிர கோடி இராவணரும்,
விண் நாடரும், வேறு உலகத்து எவரும்,
நண்ணா ஒரு மூவரும் நண்ணிடினும்,
கண்ணால் இவன் வில்தொழில் காணுதியால்.

பொ :—எண்ணாயிரம் கோடி என்னுந் தொகையினராகிய இராவ ணர்களும், வான நாட்டினராகிய தேவர்களும், வேறுலகங்களில் உள்ள யாவரும் (பிறரால்) அணுகுதற்கரிய மும்மூர்த்திகளும் (இவ் இலக்குவனை எதிர்த்து) வந்தாலும் இவன் (அஞ்சாது செய்யும்) விற்றொழில் வன்மையினை (நின்) கண்ணாற் காண்பாய்.

கு :—இவன் விற்றொழில் கண்ணாற் காணுதி என இயையும். இராவணனை யொத்த உடலுரமும் உள்ளத்திண்மையும் கொடுந் தொழிலும் படைத்த பகைவர்கள் எண்ணாயிரம் கோடி என்னும் பெருந் தொகையினராய்க்கூடி எதிர்த்து வந்தாலும் வானுலகத்த

வரும் மற்றைய உலகங்களில் உள்ளோரும் அயன் அரி அரன் என்னும் மூவரும் ஒருங்குகூடி இவனை எதிர்த்தாலும் அவர்களைக் கண்டு அஞ்சாது இவன் செய்யும் விற் போரின் வன்மையினை நீ நேர் நின்று நின் கண்களால் காணப்போகின்ருய் என இராமன் வீடணனை நோக்கிக் கூறினுன் என்க. (78)

**7935.** வானென்பதென் வையக மென்பதென்மா
ருனென்பதென் வேறு தனிச்சிலையோர்
யானென்பதெ னீசனெ னின்றிமையோர்
கோனென்பதெ னெம்பி கொதித்திடுமேல்.

'வான் என்பது என்? வையகம் என்பது என்? மால்—
தான் என்பது என்? வேறு தனிச் சிலையோர்
யான் என்பது என்? ஈசன் என்? இன்று இமையோர்
கோன் என்பது என்?—எம்பி கொதித்திடுமேல்.

பொ:—என் தம்பியாகிய இலக்குவன் உள்ளங் கொதிப்புற்று வெகுள்வானுயின், வானுலகம் என்பது என்ன? மண்ணுலகம் என்பது என்ன? திருமாலாகிய காத்தற் கடவுளின் நிலைதான் என்ன? வேருகச் சிறப்பித்துரைக்கத்தக்க ஒப்பற்ற வில் வீரர்கள் (என்ன?) யான்தான் என்ன? இப்பொழுது இமையோர் தலைவனுகி யுள்ள இந்திரன்தான் என்ன? (எதிர் நிற்கவல்லார் ஒருவருமிலர் என்பதாம்)

கு:—எம்பி கொதித்திடுமேல் வான் என்பது என்? வையகம் என்பது என்? எனத் தனித்தனி இயைத்துரைக்க. எம்பி-என் தம்பி; என்றது, இலக்குவனை. 'எம்பி உள்ளங்கொதித்துப் போர்க்கு எழுவானுயின் வானுலகும் மண்ணுலகும் திருமாலும் வில் வீரர்களும் யானும் ஈசனும் இந்திரனும் அவனுக்கு மாருக எதிர்த்துச் செய்வதற்கு ஒன்றுமில்லை' என இராமன் இலக்குவனது சீற்றத்தின் கொடுமையைப் புலப்படுத்தினுன் என்க. (79)

**7936.** தெய்வப்படை யுஞ்சின முந்திறனும்
மையற்ருெழில் மாதவ மற்றுமெலாம்
எய்தற்குள வோவிவ னிச்சிலையிற்
கைவைப்பள வேயிறல் காணுதியால்.

'தெய்வப் படையும், சினமும் திறனும்
மையல் தொழில் மாதவம், மற்றும் எலாம்
எய்தற்கு உளவோ—இவன் இச்சிலையில்
கைவைப்பு அளவே? இறல் காணுதியால்.

பொ :—தெய்வத்தன்மை வாய்ந்த படைக்கலங்களும் (மாற்ருரது) வெகுளியும் வன்மையும் மயக்க முறுத்துந் தொழிலாகிய வஞ்சனையும் பெருந்தவ வன்மையும் (கடுமொழியாகிய சாபம் முதலாக) மற்று உள்ளன எல்லாமும் (இவ் இலக்குவனைத் துன்புறுத்தும் நிலையில்) அடைதற்குரியன உள்ளனவோ? (உளவாயின், அவை) இவன் தன் வில்லின் கைவைக்கும் அளவிலேயே (விரைவில்) முறிந்தொழிதலை (நேரே) காண்பாய்.

கு :—பகைவராயினுர் மேற்கொள்ளுதற் குரியனவாகிய எல்லா உபாயங்களையும் தனது விற்ருெழில் ஒன்றினுலேயே விரைவிற் சிதைத் தொழிக்க வல்லவன் இவ் இலக்குவன் என்றவாறு. (80)

7937. என்றேவியை வஞ்சனை செய்தெழுவா
னன்றேமுடி வானிவ னன்னவள்சொற்
குன்றேனென வேகிய கொள்கையினு
னின்ருனுள னுகி நெடுந்தகையாய்.

'என் தேவியை வஞ்சனை செய்து எழுவான்
அன்றே முடிவான்; இவன், "அன்னவள் சொல்
குன்றேன்" என எய்திய கொள்கையினுல்
நின்ருன் உளன் ஆகி; நெடுந் தகையாய்.

பொ :—பெருந்தகைமை யுடையோனே! என்னுடைய மனையாளை வஞ்சித்துக் கவர்ந்து மேற்செல்வானுகிய இராவணன் அன்றைப் பொழுதிலேயே இறந்து தொலைவான்; இவ் இலக்குவன் ('சீதையாகிய) அவளுடைய சொல்வரம்பினின்று நிலை தவறேன் என்று (தான் பாதுகாத்திருந்த இலைக்குடிலை நீங்கி, நான் சென்ற இடம் நோக்கி) வந்த கோட்பாட்டினுல் இன்று உயிருடையனுய் உடம்புடன் நிலை பெற்றுள்ளான்.

கு :—வீடணனது பெருந்தகைமை தோன்ற அவனை 'நெடுந் தகையாய்' என முன்னிலையாக்கி அழைத்தான் இராமன். தூர்த்தனுகிய இராவணன் என் மனைவியை வஞ்சனையாற் கவர்ந்து செல்ல வந்த அப்பொழுது இவ் இலக்குவன் அங்கு இருந்திருப்பானுயின்

இவனால் அவ்விராவணன் முடிவெய்தியிருப்பான் என்பதிற் சிறிதும் ஐயமில்லை, என்றவாறு. குன்றுதல்-நிலைதவறுதல். (81)

## 'நீயும் உடன்சென்று, இவனது போர்வன்மையைக் காணுக' என இராமன் வீடணனை ஏவுதல்

7938. ஏகாயுட னீயு மெதிர்ந்துளனா
மாகாயனெடுந்தலை வாளியொடு
மாகாயம ளந்து விழுந்ததனைக்
காகாதிக ணுங்குதல் காணுதியால்.

'ஏகாய், உடன் நீயும்; எதிர்ந்துளனும்
மாகாயன் நெடுந்தலை வாளியொடும்
ஆகாயம் அளந்து விழுந்ததனைக்
காகாதிகள் நுங்குதல் காணுதியால்.

பொ:—நீயும் இவனுடனே செல்வாயாக. (இவனுடன்) போர் எதிர்ந்து வந்துள்ளானாகிய அதிகாயனது நெடிய தலையானது (இவனால் எய்யப்பட்ட) அம்புடன் பொருந்தி வானத்தை யளந்து (நிலத்தின்மேல்) விழுந்ததனைக் காக்கை முதலிய பறவைகள் கொத்தி யுண்ணுதலைக் காண்பாயாக.

கு:—மா காயன்-பெரிய உடம்பினை யுடையவன்; என்றது அதி காயனை. காகம் ஆதிகள் எனற்பாலது, காகாதிகள் எனக் குறைந்து நின்றது. நுங்குதல்-(தோண்டி) உண்ணுதல். 'நீயும் உடன் ஏகாய்; மாகாயன் நெடுந்தலை, வாளியொடும் விழுந்ததனைக் காகாதிகள் நுங்குதல் காணுதி என முடிக்க. (82)

7939. நீரைக்கொடு நீரெதிர் நிற்கொணுமோ
தீரக்கொடி யாரொடு தேவர்பொரும்
போரைக்கொடு வந்து புகுந்ததுநாம்
ஆரைக்கொடு நீய தறிந்திலையோ.

'நீரைக் கொடு நீர் எதிர் நிற்க ஒ(ண்)ணுமோ ?
தீரக் கொடியாரொடு தேவர் பொரும்
போரைக் கொடு வந்து புகுந்தது, நாம்
ஆரைக் கொடு ? நீ அது அறிந்திலையோ ?

பொ :—பெருகி வரும் வெள்ளத்திற்கு எதிராக (நெகிழ்ந் தோடும் நீர்மையதாகிய அத்தகைய) நீரைக்கொண்டு (தடுத்து) நிற்க இயலுமோ? முற்றிய கொடுமையுடையோரான அரக்கர் களுடன் தேவர் பொருட்டுச் செய்தற்குரிய (இப்பெரும்) போரை மேற்கொண்டு இங்கு நாம் வந்து புகுந்தது (இலக்குவனாகிய இவனை யன்றி) வேறு யாரைத் துணையாகக் கொண்டு? (உய்த்துணர் வுடைய) நீ அதனை இன்னும் உணர்ந்திலாயோ?

கு :—பெருகிவரும் வெள்ளத்தைத் தடுத்து நிறுத்த வேண்டு மானால் திணிந்த கற்பாறைகள் முதலியவற்றைக் கொண்டு அணை கட்டித் தடுப்பதல்லது, அவ்வெள்ளத்தை அதனை யொத்த நீர்ப் பெருக்கைக் கொண்டு அடைத்து நிறுத்துதல் இயலுமோ? இய லாது. அதுபோலவே மிக்குவரும் அரக்கர் வெள்ளத்தைத் தடுத்து நிறுத்த வேண்டுமாயின் நெகிழ்ந்தோடுந் தன்மையராய வலியற்ற வர்களைக் கொண்டு அதனைச் செய்ய இயலாது என்பான், 'நீர்க்கு எதிர் நீரைக் கொடு நிற்க ஒண்ணுமோ?' என்றான். நிற்க என்னும் செயவெனெச்சத்து அகரமும் ஒண்ணுமோ என்பதன் இடைநின்ற ணகரமும் விகாரத்தால் தொக்கன. தீரக்கொடியார் – முற்றக் கொடுமையுடையார் என்றது, இரக்கமென்பது சிறிதும் இல்லாத அரக்கர்களை தீர்தல் - (முதிர்ந்து) முற்றுதல், தேவர் பொரும்போர் - தேவர்க்காகப் பொரும்போர்; நான்காமுருபும் பயனும் உடன்தொக்க தொகை. கொடு - கொண்டு. (83)

**7940.** சிவனல்ல னெனிற்றிரு வின்பெருமா
னவனல்ல னெனிற்புவி தந்தருளுந்
தவனல்ல னெனிற்றனி யேவலியோ
னிவனல்ல னெனிற்பிற ரியாருளரோ.

'சிவன்; அல்லன் எனில், திருவின் பெருமான்;
அவன் அல்லன் எனில், புவி தந்தருளும்
தவன்; அல்லன் எனில் தனியே வலியோன்
இவன்; அல்லன் எனில் பிறர் யார் உளரோ?

பொ :—(பகைவராயினர் யாவரையும் எதிர்த்தழிக்கவல்ல ஆற்றல் மிக்காரை எண்ணுங்கால்) அழித்தற் கடவுளாகிய சிவபெரு மான்; அவனையன்றி (மற்றொருவனை)க் கூறவேண்டுமாயின் திருமகள் கேள்வனாகிய அத்திருமால்; அவனையன்றி (வேறொரு வனை)க் கூறவேண்டுமாயின் உலகினைப் படைத்தருளிய பிரம தேவன்; அவனையன்றி (மற்றொருவனை)க் குறிப்பிட வேண்டு

மாயின் (யாவரையும்) தனி நின்று வெல்லும் பெருவன்மை படைத்த (இலக்குவனாகிய) இவன்; இவனையன்றி (வலியின் மிக்கார்) பிறர் யாருளர்?

கு :—உலகினை அழித்துக் காத்து அளிக்கும் தொழிலினராகிய மும்மூர்த்திகளோடு ஒருங்கு வைத்து எண்ணத்தக்க பேராற்றல் படைத்தவன் இவ்விலக்குவன் என்றவாறு. திருவின் பெருமான், புவிதந்தருளுந் தவன், இவன்என்னும் இப்பெயர்கள், ஈண்டு வினைக் குறிப்பின் தன்மையவாய், 'அல்லன் எனில்' என்னும் எச்சத்திற்கு முடிக்குஞ் சொல்லாயின. இச்செய்யுள் ஒப்புமைக் கூட்ட அணியின் பாற்படும். மேல், பாலகாண்டத்தில் 'என்னனைய முனிவரரும்' என்னும் முதற் குறிப்புடைய செய்யுளில் வெள்ளிப் பனிவரை, பாற் கடல், பதுமபீடத்தன்நகர், அயோத்தி என எண்ணிய முறையில் இச் செய்யுளிலும் சிவன், திருவின்பெருமான், புவிதந்தருளும் தவன். இவன் (இலக்குவன்) என அந்நகர்க்குரியோரை நிரலே எண்ணிய முறை இங்கு நினைத்தற்குரியதாகும். இலக்குவன் எய்த அம்புகள் மார்பிற்பட்டுருவக் கீழே விழும் இந்திரசித்து இலக்குவனது போர் வன்மையைக் குறித்து,

"அந்நரன் அல்லனாகின் நாரணன் அனையன் அன்றேல்
பின் அரன், பிரமன், என்பார் பேசுக பிறந்து வாழும்
மன்னர் நம் பதியின் வந்து வரிசிலை பிடித்த கல்வி
இந்நரன் தன்னொடொப்பார் யாருளர் ஒருவர்"

என்றான் (நாகபாசம்) எனப் புகழ்ந்துரைப்பதாக அமைந்த பாடல் இங்கு ஒப்புநோக்குதற்குரியதாகும். (84)

7941. ஒன்றாயிர வெள்ள மொருங்குளவாம்
வன்றானைகள் வந்து வளைந்தவெலாங்
கொன்றானிவ னல்லது கொண்டுடனே
நின்றார்பிற ருண்மை நினைந்தனையோ.

'ஒன்றாயிர வெள்ளம் ஒருங்கு உள ஆம்
வன் தானைகள் வந்து வளைந்த எலாம்
கொன்றான் இவன் அல்லது, கொண்டு உடனே
நின்றார் பிறர் உண்மை நினைந்தனையோ?

பொ :—ஓராயிர வெள்ளம் உள்ளனவாகிய வலிய (அரக்கர்) சேனைகள் ஒருசேர வந்து (தன்னை) வளைந்து சூழ்ந்து கொண்டன எல்லாவற்றையும் இவ் இலக்குவன் (தான் ஒருவனாகவே நின்று,

கொன்றொழித்தான் என்பதல்லது (இவனுக்குத் துணையாகப்) போர் மேற்கொண்டு (உதவியாய்) நின்றார் பிறர் உளர் என நினைந்தாயோ?

கு:—பகைவர் பெருந் தொகையினராய்த் தன்னைச் சூழ்ந்து வளைத்துக்கொண்ட போதும் பிறர்துணை வேண்டாது தானொருவனேயாகத் தனி நின்று பொருதழிக்கும் திறமுடையோன் இவ் இலக்குவன் என்னும் உண்மையை கும்பகருணனுடன் வந்த வீரர்களோடு இவன் முன் செய்த போர்ச் செயலால் நீ எளிதில் உணர்ந்திருத்தல் வேண்டும் என இராமன் வீடணனுக்கு இலக்குவனது துணைவேண்டாச் செருவென்றியை விளங்க எடுத்துரைத்தான் என்பதாம். உடன் நிற்றல் - பகைவரை வெல்லுதற்குத் துணையாய்ப் போரில் உடன் நின்று உதவிபுரிதல். (85)

7942. கொல்வானு மிவன்கொடி யோரையெலாம்
வெல்வானு மிவன்னடல் விண்டுவென
ஒல்வானு மிவன்னுட னேயொருநீ
செல்வாயென வேவுதல் செய்தனனால்.

'கொல்வானும் இவன்; கொடியோரை எலாம்
வெல்வானும் இவன்; அடல் விண்டு என
ஒல்வானும் இவன்; உடனே ஒரு நீ
செல்வாய்' என ஏவுதல் செய்தனனால்.

பொ:—'கொடுந் தொழிலாளராகிய பகைவர் எல்லோரையும் கொன்றொழிக்க இருக்கின்றவனும் இவ் இலக்குவனே; (அவ்வாறு கொன்று) வெற்றிபெறுதற்குரிய பேராற்றல் படைத்தவனும் இவனே; வன்மையுடைய திருமாலைப் போன்று (செயற்கரியவற்றை எளிதிற்) செய்து முடிப்பவனும் இவனே. ஆகவே ஒப்பற்றவனாகிய நீ (இவனது வன்மையைக் குறித்து ஐயுறாது) இவனுடன் செல்வாயாக' என்று சொல்லி (அவ் வீடணனை இலக்குவனுடன்) செல்லுமாறு பணித்தான் (இராமன்).

கு:—கொடியோரை யெலாம் கொல்வானும் இவன், வெல்வானும் இவன் என இயைக்க. அடல் - வன்மை. தன் ஆற்றலை இகழும் கொடியோர்களைப் பொன்றக் கெடுக்கும் பெருவலி படைத்தமை பற்றி 'அடல்விண்டு' எனச் சிறப்பித்தான். விண்டு - திருமால், "புகழொத் தீயே இகழுநரடுநனை" (புறம் - 56) எனப் பிறரும்

அடல் வன்மைக்குத் திருமாலை உவமையாக எடுத்துரைத்தலறிக. ஒல்வான் - செய்து முடிக்க வல்லவன். ஒல்லுதல் - இயலுதல். ஏவுதல் செய்தனன் - ஏவினன். (86)

இலக்குவன் இராமனை வலங்கொண்டு
வீடணன் உடன்வரப் போர்க்களம் புகுதல்

7943. அக்காலையி லக்குவ னாரியனை
முக்காலும் வலங்கொடு மூதுணர்வின்
மிக்கான்மதி வீடணன் மெய்தொடரப்
புக்கானவன் வந்து புகுந்தகளம்.

அக் காலை இலக்குவன் ஆரியனை
முக்காலும் வலங்கொடு, மூதுணர்வின்
மிக்கான், மதி வீடணன் மெய் தொடரப்
புக்கான், அவன் வந்து புகுந்தகளம்.

பொ :—அப்பொழுது இலக்குவன் பெரியோனாகிய இராமனை மும்முறை வலஞ் செய்து வணங்கி, பேருணர்விற் சிறந்தோனாகிய மதிநலம் வாய்ந்த வீடணன், உடம்பின் நிழல்போல் (தன்னைத்) தொடர்ந்துவர, அவ் அதிகாயன் (முன்னமே) வந்து புக்க போர்க் களத்திலே போய்ப் புகுந்தான்.

கு :—ஆரியன் - பெருமைக்குணமுடைய மேலோன்; என்றது, இராமபிரானை. இலக்குவன் இராமனைத் தன் தமையன் என்ற முறையிலமையாது தெய்வம் எனக் கொண்டு அடித்தொண்டு புரிந்து வழிபடும் இயல்பினன் என்பது புலப்படுத்துவார், 'ஆரியனை முக்காலும் வலங்கொடு........புக்கான்' என்றார். மூதுணர்வு - மெய்ந்நூல் கற்றுணர்தலாகிய ஞானம். மதி - இயற்கையறிவு. நூலுணர்விலும் இயற்கையறிவிலும் மிக்குச் சிறந்தவன் வீடணன் என்பார் 'மூதுணர்வின் மிக்கான் மதிவீடணன்' என்றார். ஈண்டு 'அவன்' என்றது, இலக்குவனது வருகையை எதிர்நோக்கிப் போர்க்களத்தில் நிற்போனாகிய அவ் அதிகாயனை. (87)

அரக்கர் சேனைகளும் வானர சேனைகளும்
நெருங்கிப் பொருதல்

7944. சேனைக்கடல் சென்றது தென்கடல்மே
லேனைக்கடல் வந்த தெழுந்ததென

ஆனைக்கட றேர்பரி யாண்மிடையுந்
தானைக்கட லோடு தலைப்படலும்.

சேனைக் கடல் சென்றது, தென் கடல்மேல்
ஏனைக் கடல் வந்தது எழுந்தது எனு;
ஆனைக் கடல், தேர், பரி, ஆள், மிடையும்
தானைக் கடலோடு தலைப் படலும்,

பொ :—தென் திசையிலுள்ள கடல் மீது ஏனைத் திசையிலுள்ள கடல் கிளர்ந்தெழுந்ததாகிப் போர் மேற்கொண்டு வந்தது என்னும் படி சென்றதாகிய (வானர) சேனையாகிய கடல், யானைகளின் மிகுதி தேர் குதிரை காலாள் என்பன நெருங்கி நிறைந்த (அரக்கருடைய) சேனையாகிய கடலுடன் சென்று கூடிய அளவில்,

கு:—தென்கடல் மேல் ஏனைக்கடல் கிளர்ந்தது எழுந்தது எனுச் சென்றது (ஆகிய) சேனைக்கடல், தானைக் கடலோடு தலைப்படலும் என இயைத்துரைக்க. 'தலைப்படலும்' என்னும் உம்மீற்று வினையெச்சம் 'விரிந்ததூளி விசும்பையும் கடந்தது' என அடுத்த செய்யுளில் 'கடந்தது' என்னும் பிற கருத்தாவின் வினையைக் கொண்டு முடிந்தது. (88)

7945. பசும்படு குருதியிற் பண்டு சேறுபட்
டசும்புற வுருகிய வுலக மார்த்தெழக்
குசும்பையி னறுமலர்ச் சுண்ணக் குப்பையின்
விசும்பையுங் கடந்தது விரிந்த தூளியே.

பசும் படு குருதியின் பண்டு சேறுபட்டு
அசும்பு, உற உருகிய உலகம் ஆர்த்து எழ,
குசும்பையின் நறுமலர்ச் சுண்ணக் குப்பையின்
விசும்பையும் கடந்தது, விரிந்த தூளியே.

பொ :—முன்னர்(ப் புதிதாய்) வெளிப்பட்ட பசிய குருதி நீரால் சேறுபட்டு நீர்ப்பொசிவு பொருந்தக் கரைந்து குழம்பாகிய பூமியினிடத்தே (சேனைகள்) ஆரவாரித்தெழுதலால் விரிந்து மேலெழுந்த புழுதித் துகள் செந்துருக்க மலரின் நறுமணம் வாய்ந்த மகரந்தப் பொடிகளின் தொகுதியைப் போன்று (செந்நிறமுடையதாய்) வானத்தையுங் கடந்து பரவியது.

கு:—பண்டு படும் பசுங்குருதியின் அசும்பு உற உருகிய உலகம் (சேனை) ஆர்த்தெழ விரிந்ததூளி விசும்பையும் கடந்தது என இயையும். படுதல் - தோன்றுதல். அசும்பு - நீர்ப்பொசிவு. குசும்பை - செந்துருக்கம். குப்பை - குவியல்; தொகுதி. இன்னுருபு உவமப் பொருளில் வந்தது. முன்பு பட்ட வீரர்களின் செங்குருதியாற் சேருகிய செருநிலத்தின் கண்ணே மீண்டும் சேனைகள் ஆரவாரித்து எழுதலால் அந்நிலம் சேறுலர்ந்து செம்புழுதியாகிச் செந்துருக்க மலர்களின் நறுமணப் பொடி போன்று நிலமெங்கும் பரவி வானிடத்தையும் கடந்து மேற்சென்றது என்பதாம். விசும்பையும் என்புழி உம்மை, இறந்தது தழீஇய எச்சவும்மை. (89)

7946. தாமிடித் தெழும்பணை முழக்குஞ் சங்கின
மாமிடிக் குமுறலு மார்ப்பி னோதையு
மேமுடைக் கொடுஞ்சிலை யிடிப்பு மஞ்சித்தம்
வாய்மடித் தொடுங்கின மகர வேலையே.

தாம் இடித்து எழும் பணை முழக்கும், சங்கு இனம்
ஆம் இடிக் குமுறலும், ஆர்ப்பின் ஓதையும்
ஏமுடைக் கொடுஞ் சிலை இடிப்பும், அஞ்சி, தம்
வாய் மடித்து ஒடுங்கின—மகர வேலையே.

பொ :—தாம் அடிக்கப்பட்டு (எங்கும்) பரவியெழும் போர்ப் பறைகளின் ஒலியும், தொகுதியாகிய சங்கினது இடிபோலும் குமுறலும், (வீரர்கள்) ஆரவாரித்தலா லுண்டாகும் ஓசையும், பாதுகாவலாதலையுடைய வில்லினது இடியொலி போலும் நாணோசையும் (ஆகிய இவற்றிற்கு) அஞ்சி மகர மீன்களைக் கொண்ட கடல்கள் தம் வாயினை மடித்துக் கொண்டு (ஒலியவிந்து) அடங்கின.

கு:—பணை - முரசம். சங்கங்கள் முழங்குங்கால் அவற்றின் உள்ளிருந்து பொங்கியெழும் ஓசை இடியினை யொத்த பேரொலியுடைய தென்பார், 'சங்கினமாம் இடிக் குமுறல்' என்றார். குமுறல் - அதிர ஒலித்தல். தன்னைக் கைப்பற்றி எய்யும் வீரராயினர்க்குப் பாதுகாவலையும் அவர் தம் மாற்றார்க்குக் கொடுந் துன்பத்தையும் ஒருங்கே விளைவிக்கும் இயல்பினதாகிய விற்படை என்பது புலப்பட, 'ஏமுடைக் கொடுஞ்சிலை' என அடை கொடுத்தோதினர். ஏம் - ஏமம்; பாதுகாவல். திசையிலுள்ள கடல்களின் பெரு முழக்கமும் தம் பேராரவாரத்தில் ஒடுங்கி மறையுமாறு சேனைகள் ஆரவாரித்தெழுந்தன

என்பதாம். வாய்மடித்தல் என்றது, வாயின் உதட்டினை மடித்து மூடி உரையாடாதிருத்தலை; அத்தொடர் ஈண்டு ஒலியடங்குதல் என்ற பொருளில் ஆளப் பெற்றது. வேலை - கடல். (90)

7947. உலைதொறுங் குறுதிநீ ரருவி யொத்துக
இலைதுறு மரமெனக் கொடிக ளிற்றுக
மலைதொறும் பாய்ந்தென மான யானையின்
தலைதொறும் பாய்ந்தன குரங்கு தாவியே.

உலைதொறும் குருதி நீர் அருவி ஒத்து உக,
இலைதுறு மரம் எனக் கொடிகள் இற்று உக,
மலைதொறும் பாய்ந்தென, மான யானையின்
தலைதொறும் பாய்ந்தன, குரங்கு தாவியே.

பொ :—(யானை வீரராகிய அரக்கர்கள் புண்பட்டு) அழியும் போதெல்லாம் (அவருடைய உடம்பினின்றும்) இரத்த நீர் (மலையின் வீழ்) அருவியினை யொத்துச் சொரியவும் (அவர் தம் கையிற் கொண்ட) கொடிகள் இலைகள் அடர்ந்த மரம் போன்று தண்டொடிந்து கீழே விழவும் மலைகள் தோறும் (தாவிப்) பாயுமாறுபோல யானைகளின் தலைகள் தோறும் குரங்குகள் தாவிப் பாய்ந்தன.

கு :—உதிரநீர் உக, கொடிகள் உக, யானையின் தலைதொறும் குரங்கு தாவிப் பாய்ந்தன என முடிக்க. உலைதல் - அழிதல். உகுதல் - வழிதல், வீழ்தல். யானை மீது அமர்ந்து போர்புரியும் அரக்கர்கள் புண்பட்டு அழியுங்கால் அவர் தம் உடம்பிலிருந்து வெளிப்பட்டு யானை மத்தகத்தின் வழியே யொழுகும் குருதி நீரானது, மலையிலிருந்து விழும் அருவி நீரை யொத்துத் தோன்றவும், வீரர்கள் கையினின்றும் ஒடிந்து சாயும் கொடிகள் இலைசெறிந்த மரங்கள் ஒடிந்து வீழ்வனவற்றை யொத்துத் தோன்றவும் குரங்குகள் யானைகளின் மத்தகங்கள் தோறும் பாய்ந்து தாக்கின எனவும், யானைகளின் தலைதோறும் குரங்குகள் பாய்ந்த செயல் அவை ஒரு மலையினின்றும் மற்றொரு மலைக்குத் தாவிப் பாயும் தோற்றத்தை யொத்தது எனவும் ஆசிரியர் மலையின் இயற்கைக் காட்சியை உவமை கூறியுள்ள திறம் உணரத் தக்கதாகும். (91)

7948. கிட்டின கிளைநெடுங் கோட்ட கீழுகு
மட்டின வருவியின் மதத்த வானரம்

விட்டன நெடுவரை வேழம் வேழத்தை
முட்டின வொத்தன முகத்தின் வீழ்வன.

கிட்டின கிளை நெடுங் கோட்ட, கீழ் உகு
மட்டின அருவியின் மதத்த, வானரம்
விட்டன நெடு வரை, வேழம் வேழத்தை
முட்டின ஒத்தன, முகத்தின் வீழ்வன.

பொ :—நெருங்கினவாய்க் கிளைத்த கொம்புகளையுடையனவும் கீழே சிந்துகின்ற தேனையுடையனவும் அருவியாகிய மதத்தை யுடையனவுமாகி, குரங்குகளால் (பெயர்த்து) எறியப்பட்டனவாகிய நீண்ட மலைகள் (போர்க்களத்திலுள்ள யானைகளின்) முகத்தின் கண்ணே வந்து வீழ்வன, யானை யானையை முட்டித் தாக்குவனவற்றை ஒத்துத் தோன்றின.

கு:—வானரம் விட்டன நெடுவரை, வேழம் வேழத்தை முட்டின ஒத்தன என முடிக்க. கிட்டின கிளைநெடுங் கோட்ட, கீழ் உகு மட்டின, அருவியின் மதத்த......என நெடுவரைக்கு அடைமொழிகளாக வந்த தொடர்கள், அதனோடு உவமிக்கப்படும் யானைக்கும் பொருந்துமாறு சிலேடை நயம் பொருந்த அமைந்திருத்தல் அறியத் தக்கதாகும். கிட்டுதல் - ஒன்றோடொன்று நெருங்கிப் பொருந்துதல். கோடு - கொம்பு; தந்தம். கீழ் உகும் மட்டின – கீழே சிந்துகின்ற தேனையுடையன; தேனைக் கீழே உகுப்பன. அருவியின் மதத்த - அருவியாகிய மதத்தையுடையன; அருவிபோன்று ஒழுகும் மதநீரை யுடையன. (92)

7949. இடித்தன வுறுக்கின விறுக்கி யேய்ந்தன
தடித்தன வெயிற்றினுற் றலைகள் சந்தறக்
கடித்தன கவிக்குலங் கால்கள் மேற்படத்
துடித்தன குருதியிற் றுரக ராசியே.

இடித்தன; உறுக்கின; இறுக்கி ஏய்ந்தன;
தடித்தன; எயிற்றினுல் தலைகள் சந்து அறக்
கடித்தன;—கவிக்குலம் கால்கள் மேற்படத்
துடித்தன குருதியில், துரக ராசியே.

பொ :—குரங்கின் தொகுதிகள், (அரக்கர் சேனையிலுள்ள குதிரைகளை) மோதித் தாக்கின. அதட்டின; அழுந்தப் பிணித்தன வாய் (அவற்றின்மேற்) பொருந்தின. வெட்டின; தலைகளின் முட்டு

வாய் அற்றுச் சிதையும்படி பற்களாற் கடித்தன. (அதனல்) குதிரைத் தொகுதிகள் கால்கள் மேற்பட இரத்த வெள்ளத்திற் கிடந்து துடிப்பனவாயின.

கு:—கவிக்குலம், இடித்தன, உறுக்கின, இறுக்கி ஏய்ந்தன, தடித்தன, தலைகள் சந்து அறக் கடித்தன; (அதனல்) துரக ராசி, கால்கள் மேற்படக் குருதியில் துடித்தன என இயைத்துரைக்க. கவிக்குலம் - குரங்கின் தொகுதி. இடித்தல் - மோதுதல். உறுக்குதல் - அதட்டுதல். இறுக்குதல் - அழுந்தக் கட்டுதல். தடிந்தன எனற்பாலது, எதுகை நோக்கித் தடித்தன என நின்றது. தடிதல் - வெட்டுதல். துரகம் - குதிரை. ராசி - கூட்டம்; தொகுதி. (93)

**7950.** அடைந்தன கவிக்குல மெற்ற வற்றன
குடைந்தெறி கால்பொரப் பூட்கைக் குப்பைக
ளிடைந்தன முகிற்குல மிரிந்து சாய்ந்தென
வுடைந்தன குலமருப் புகுத்த முத்தமே.

அடைந்தன கவிக்குலம் எற்ற, அற்றன,
குடைந்து எறிகால் பொர, பூட்கைக் குப்பைகள்;
இடைந்தன முகிற்குலம் இரிந்து சாய்ந்தென
உடைந்தன; குலமருப்பு உகுத்த முத்தமே.

பொ:—யானைத் திரள்கள், (தம்மை) நெருங்கினவாகிய குரங்கின் கூட்டம் (கால்களால்) எற்றுதலால் (வன்மை) அற்றனவாய், உட்புகுந்து சுழற்றி வீசும் பெருங்காற்று மோதுதலால் மேகக் கூட்டங்கள் கெட்டுச் சாய்ந்தாற்போலத் தளர்ந்தனவாய், தோற்றழிந்தன. (அவற்றின்) நல்ல தந்தங்கள் (பிளந்து) முத்துக்களைச் சிந்தின.

கு:—பூட்கை - யானை; புழைக்கை என்றது, பூட்கை எனத் திரிந்தது என்பர். குப்பை - தொகுதி. பூட்கைக் குப்பைகள், வானரம் எற்ற அற்றன, குடைந்து எறிகால் பொர முகிற்குலம் இரிந்து சாய்ந்தென இடைந்தன உடைந்தன எனவும், குலமருப்பு முத்தம் உகுத்த எனவும் இரு தொடராக இயைத்துப் பொருள் கொள்க. குடைதல் – உட்புகுந்து சுழற்றுதல். எறிதல் – வீசுதல். கால் - காற்று குடைந்தெறிகால் என்றது, சண்டமாருதம் எனப்படும் பெருங்காற்றினை. பொருதல் - மோதுதல். இடைதல் - தளர்தல். உடைதல் - தோற்றழிதல். (94)

7951. தோல்படத் துதைந்தெழு வயிரத் தூணிகர்
கால்படக் கைபடக் கால பாசம்போல்
வால்படப் புரண்டனர் நிருதர் மற்றவர்
வேல்படப் புரண்டனர் கவியின் வீரரே.

தோல் படத் துதைந்து எழு வயிரத் தூண் நிகர்
கால் பட, கை பட, கால பாசம் போல்
வால் பட, புரண்டனர் நிருதர்; மற்று அவர்
வேல் படப் புரண்டனர், கவியின் வீரரே.

பொ :—(யானை வீரராகிய) அரக்கர்கள், (தாம் ஏறிய) யானை இறந்துபட, விரைந்தெழுகின்ற (வானர வீரர்களின்) வயிரத்தூணை யொத்த (வலிய) கால்கள் எற்றித் தாக்குதலாலும், கைகள் வீசி யறைந்தமையாலும், (கூற்றுவனது) பாசக் கயிற்றை யொத்த வால்கள் பிணித்தமையாலும் (போர்க்களத்தில் வீழ்ந்து) புரண் டார்கள். அவ் அரக்க வீரர்களின் வேற்படை தைத்தமையால் வானர வீரர்கள் (அக்களத்தில் வீழ்ந்து) புரண்டார்கள்.

கு:—தோல் - யானை. தோல்பட என்புழிப் படுதல் - இறந்து படுதல். கால்பட, வால்பட, வேல்பட என்புழிப் படுதல் - பொருந்தி அழுந்துதல். (95)

7952. மரவமுஞ் சிலையொடு மலையும் வாளெயிற்
றரவமுங் கரிகளும் பரியு மல்லவும்
விரவின கவிக்குலம் வீச விம்மலா
லுரவருங் கானெனப் பொலிந்த தும்பரே.

மரவமும், சிலையொடு மலையும், வாள் எயிற்று
அரவமும், கரிகளும், பரியும், அல்லவும்
விரவின கவிக்குலம் வீச, விம்மலால்
உரவரும் கான் எனப் பொலிந்தது, உம்பரே.

பொ :—தொகுதியாய்க் கூடிய குரங்குகள், வெண்கடம்ப மரத் தினையும் கற்களோடு மலைகளையும் வாள்போலும் கூரிய பற்களை யுடைய பாம்பும், யானைகளும், குதிரைகளும் ஆகியவற்றையும் அவையல்லாத பிறவற்றையும் (அரக்கர்மேல்) வீச, (அவை) மிக்குத் தோன்றுதலால், வானமானது, உராய்தலையுடைய காடுபோலத் தோன்றியது.

கு :—மரவம் - வெண்கடம்பு மரம். சிலை - கல். விரவுதல் - கலத்தல்: ஒருங்கு கூடுதல். கவிக்குலம், மரவமும்......அல்லவும் வீச, விம்மலால், உம்பர், கான் எனப் பொலிந்தது என்க. விம்முதல்- மிக்குத் தோன்றுதல். உம்பர் - வானம். உரவரும் - உராய்தல் பொருந்திய. கான் - காடு. (96)

**7953.** தடவரை கவிக்குலத் தலைவர் தாங்கின
வடல்வலி நிருதர்தம் மனிக ராசிமேல்
விடவிட விசும்பிடை மிடைந்து வீழ்வன
படர்கட லினமழை படிவ போன்றவே.

தட வரை, கவிக்குலத் தலைவர், தாங்கின,
அடல் வலி நிருதர்தம் அனிக ராசிமேல்
விடவிட, விசும்பிடை மிடைந்து வீழ்வன,
படர் கடல் இனமழை படிவ போன்றவே.

பொ :—வானரகுல வீரர்கள் தாம் தாங்கினவாகிய பெரிய மலைகளை மிக்க வன்மையினையுடைய அரக்கர்களின் சேனைத் தொகுதி யின்மேல் வீசி எறியுந்தோறும் (அவை) ஆகாயத்தின்கண் நெருங்கி வீழ்வன, மேகக் கூட்டங்கள் பரவிப் பெருகிய கடலிற் படிவனவற்றை ஒத்துத் தோன்றின.

கு :—கவிக்குலத் தலைவர் தாங்கின தடவரை, அடல் வலி அரக்கர்தம் அனிகராசிமேல் விட விட, விசும்பிடை மிடைந்து வீழ்வன, இனமழை படர் கடல் படிவபோன்ற என இயையும். அடல், வலி என்பன ஒரு பொருட் சொற்கள். அனிகராசி - சேனை களின் தொகுதி; சேனைகளின் பரப்புக்குக் கடலும், அவற்றின்மேல் எறியப்பட்டு விழும் மலைகளுக்கு மேகக் கூட்டமும் உவமை. (97)

**7954.** இழுக்கின ரடிகளி னிங்கு மங்குமா
மழுக்களு மயில்களும் வாளுந் தோள்களு
முழுக்கின ருழக்கினர் மூரி யாக்கையை
யொழுக்கினர் நிருத யுதிர வாற்றினே.

இழுக்கினர் அடிகளின், இங்கும் அங்குமா
மழுக்களும், அயில்களும், வாளும், தோள்களும்,
முழுக்கினர், உழக்கினர் மூரியாக் கையை,
ஒழுக்கினர் நிருதரை உதிர ஆற்றினே.

பொ :—(வானரகுலத் தலைவர்கள்,) இங்கும் அங்குமாய் (ஓட முயன்று) கால்கள் வழுக்கியவராகிய அரக்கர்களை மழுப்படைகளும் வேல்களும் வாளும் (அவற்றைத் தாங்கிப் போர்செய்து துணிக்கப் பட்ட) தோள்களும் ஆகியவற்றுடன் அமிழ்த்திக் கலக்கியவராய், அவர்தம் வலிய உடம்புகளைக் குருதியாற்றிலே செல்லும்படி செலுத்தினார்கள்.

கு :—மேற்செய்யுளில் வந்த 'கவிக்குலத் தலைவர்' என்பதனை இச்செய்யுளிலும் எழுவாயாக வருவித்துரைக்க. கவிக்குலத் தலைவர், இங்கும் அங்குமாய் இழுக்கினர் நிருதரை. மழுக்களும் அயில்களும் வாளும் தோள்களும் முழுக்கினர் உழக்கினர், மூரியாக்கையை உதிர ஆற்றின் ஒழுக்கினர் என முடிக்க. இழுக்குதல் - வழுக்குதல். முழுக்குதல் - அமிழ்த்துதல். உழக்குதல் - கலக்குதல். மூரி - வன்மை. ஒழுக்குதல் - செலுத்துதல். குருதியாறு - ஆறாய்ப்பெருகி யோடும் இரத்தவெள்ளம். (98)

**7955.** மிடலுடைக் கவிக்குலங் குருதி வெள்ளநீர்
இடையிடை நீந்தின வெய்த்த யானையின்
றிடரிடைச் சென்றவை யொழுகச் சேர்ந்தன
கடலிடைப் புக்கன கரையுங் காண்கில.

மிடலுடைக் கவிக்குலம், குருதி வெள்ள நீர்
இடை இடை நீந்தின, எய்த்த யானையின்
திடரிடைச் சென்று, அவை ஒழுகச் சேர்ந்தன,
கடலிடைப் புக்கன, கரையும் காண்கில.

பொ :—வலிமையையுடைய குரங்கின் திரள்கள் (போர்க்களத் தின்) இடையிடையே அமைந்த இரத்த வெள்ளமாகிய நீர்ப் பெருக்கிலே நீந்திச் செல்வன (கைதளர்ந்து) இளைத்தனவாய் (அவ் வெள்ளத்தினிடையே கிடந்த) யானையாகிய திடரின் கண்ணே ஏறி, அவ்யானைகள் (வெள்ளத்தால்) இழுக்கப்பட்டுச் செல்ல அவற்றுடன் சேர்ந்து கடலின் நடுவே புக்கனவாய் (முன்தம்கண் ணெதிர்ப்பட்ட) கரையினையும் காணமாட்டாதன வாயின.

கு :—மிடல் - வலிமை. வலிமை வாய்ந்த வானரங்களாயினும் போர்க்களத்தின் இடையிடையே ஓடும் இரத்த வெள்ளத்தினை நீந்திக் கடக்க முயன்று கைதளர்ந்து இளைத்தனவாய், அங்குள்ள யானையாகிய திடரின்மேல் ஏறி, அவ்யானைகளும் வெள்ளத்தால் ஈர்த்துச் செல்லப்பட்டனவாக அவற்றுடன் சேர்ந்து கடல் நடுவே

புக்குத் தாம் முன் தங்கியிருந்த கரையினையும் காணமாட்டாதன வாயின எனப் போர்க்களத்தில் ஓடிய இரத்தப் பெருக்கினை ஆசிரியர் இங்ஙனம் இறப்பப் புனைந்துரைத்தார் என்க. சேர்ந்தன - சேர்ந்து; முற்றெச்சம். (99)

7956. கால்பிடித் தீர்த்திழி குருதிக் கண்ணகட்
சேல்பிடித் தெழுதிரை யாற்றிற் றிண்ணெடுங்
கோல்பிடித் தொழுகுறு குருடர் கூட்டம்போல்
வால்பிடித் தொழுகின கவியின் மாலையே.

கால் பிடித்து ஈர்த்து இழி குருதிக்கண்ண, கண்
சேல் பிடித்து எழு திரை ஆற்றில், திண் நெடுங்
கோல் பிடித்து ஒழுகுறு குருடர் கூட்டம்போல்
வால் பிடித்து ஒழுகின கவியின் மாலையே.

பொ :—குரங்கின் தொகுதிகள், கால்களைப் பற்றி இழுத்துச் செல்லும் குருதி வெள்ளத்தே அகப்பட்டனவாய், கண்போலும் சேல்மீனைக்கொண்டு மேலெழும் அலைகளையுடைய ஆற்றிலே திண்மை வாய்ந்த நீண்ட கோலினைப் பிடித்துக்கொண்டு (ஒருவர் பின் ஒருவராகச்) செல்லும் குருடர்களின் கூட்டத்தையொத்து (ஒன்று மற்றொன்றின்) வாலைப்பற்றிக்கொண்டு செல்வன வாயின.

கு :—கவியின் மாலை, குருதிக்கண்ண, யாற்றிற் கோல்பிடித்து ஒழுகுறு குருடர் கூட்டம்போல், வால்பிடித்து ஒழுகின என இயைத்துரைக்க. மாலை - வரிசை ; தொகுதி. கண்சேல் - மகளிர் கண்களையொத்த சேல் மீன்கள். குருதி வெள்ளத்தில் அகப்பட்டனவாகிய குரங்குகள், ஒன்று மற்றொன்றின் வாலைப் பற்றிக் கொண்டு ஒன்றன்பின் ஒன்றாய் வரிசையாகச் செல்லுந்தோற்றம், குருடர் கூட்டம் கோலைப் பற்றிக்கொண்டு ஒருவர்பின் ஒருவராகத் தொடர்ந்து ஆற்று வெள்ளத்திலே இறங்கிச் செல்வதனை யொத்துத் தோன்றியது என்பதாம். (100)

### வானர சேனை எதிர்க்கலாற்றாது சாய்தல்

7957. பாய்ந்தது நிருதர்தம் பரவை பன்முறை
காய்ந்தது கடும்படை கலக்கிக் கைதொறுந்
தேய்ந்தது சிதைந்தது சிந்திச் சேணுறச்
சாய்ந்தது தகைப்பருங் கவியின் றானையே.

பாய்ந்தது நிருதர்தம் பரவை; பல்முறை
காய்ந்தது, கடும்படை கலக்கி; கைதொறும்
தேய்ந்தது, சிதைந்தது, சிந்திச் சேண் உறச்
சாய்ந்தது—தகைப்ப அரும் கவியின் தானையே.

பொ:—அரக்கருடைய சேனைக் கடல் பலமுறை பாய்ந்து வெம்மையுடைய (வானர) சேனையைக் கலக்கி வெகுண்டு தாக்கியது. தடுத்தற்கரிய (ஆற்றல்மிக்க) வானர சேனை படை வரிசைகள் தோறும் வன்மை குன்றியதாய்ச் சிதைவுற்றதாய்ச் சிதறி நெடுந்தொலைவிற் கெட்டு ஓடியது.

கு:—நிருதர்தம் பரவை, பன்முறை பாய்ந்தது; கடும்படை கலக்கிக் காய்ந்தது; தகைப்பஅரும் கவியின் தானை, கைதொறும் தேய்ந்தது சிதைந்தது! சிந்திச் சேண்உறச் சாய்ந்தது என முடிக்க. பரவை - கடல். தகைத்தல் - தடுத்து நிறுத்துதல். கை – சேனைகளின் அணி; படை வரிசை. சிந்துதல் - பலவிடங்களிலுமாகச் சிதறுதல். சாய்தல் - கெட்டு ஓடுதல். (101)

### வானரர்க்குத் தேறுதல் கூறி, இலக்குவன் விற்போர் விளைத்தல்

7958 அத்துணை யிலக்குவ னஞ்ச லஞ்சலென்
றெத்துணை மொழிகளு மியம்பி யேற்றினன்
கைத்துணை வில்லினைக் காலன் வாழ்வினை
மொய்த்தெழு நாணொலி முழங்கத் தாக்கினான்.

அத் துணை, இலக்குவன், 'அஞ்சல், அஞ்சல்!' என்று
எத் துணை மொழிகளும் இயம்பி, ஏற்றினன்,
கைத் துணை வில்லினை; காலன் வாழ்வினை,
மொய்த்து எழு நாண் ஒலி முழங்கத் தாக்கினான்.

பொ:—அவ்வளவில் இலக்குவன், 'அஞ்சற்க, அஞ்சற்க' என்று எத்துணையோ தேறுதல் மொழிகளைச் சொல்லி, (பகைவரை) அழித்தற்குத்) துணையாய்த் தன் கையிலுள்ள வில்லினை நாணேற்றி யவனாய்க் கூற்றுவன் வாழ்வினை நெருங்கிச் சார்ந்து தோன்றும் வில்நாணினை ஒலிமுழங்கத் தெறித்தான்.

கு:—அத்துணை - அவ்வளவில். அரக்கர்களை எதிர்க்கலாற்றாது போர்க்களத்தினின்றும் பின்னிட்டோடும் தன் சேனை வீரராகிய வானரர்களைத் தனித் தனியே நோக்கி, 'அஞ்சற்க, அஞ்சற்க'

என அபய மொழிகூறி ஊக்குவித்துத் தன்கையிலுள்ள வில்லினை நாணேற்றி விரலால் தெறித்து ஒலி முழக்கஞ் செய்தான் இலக்குவன். இலக்குவனது வில் நாணினின்றும் எழுந்த ஒலி, பகைவர் பலர் இறத்தற்குக் காரணமாய் உயிர் பருகும் கூற்றுவனது வாழ்வுக்கு ஆக்கஞ் செய்வதாய் அவனது வாழ்வுக்குச் சார்புடைய தாய் நெருங்கித் தோன்றியது என்பார், 'காலன் வாழ்வினை மொய்த் தெழுநாண் ஒலி' என்றார். தாக்குதல் என்றது, இங்கு விரலால் தெறித்தலை. (102)

7959. நூன்மறைந் தொளிப்பினு நுவன்ற பூதங்கள்
மேன்மறைந் தொளிப்பினும் விரிஞ்சன் வீயினும்
கான்மறைந் தொளிப்பிலாக் கடையிற் கண்ணகன்
நான்மறை யார்ப்பென நடந்த தவ்வொலி.

நூல் மறைந்து ஒளிப்பினும், நுவன்ற பூதங்கள்
மேல் மறைந்து ஒளிப்பினும், விரிஞ்சன் வீயினும்,
கால் மறைந்து ஒளிப்பு இலாக் கடை யின், கண் அகல்
நான் மறை ஆர்ப்பென நடந்தது, அவ் ஒலி.

பொ:—அறிவு நூல்கள் மறைந்து ஒடுங்கினாலும் (உலகிற்குக் காரணமாகச்) சொல்லப்படும் ஐம்பெரும் பூதங்களும் தமக்கு மேலாயுள்ள மூலப் பகுதியில். மறைந்து ஒடுங்கினாலும் (படைத்தற் கடவுளாகிய) நான்முகன் இறந்துபட்டாலும் காலதத்துவம்மட்டும் ஒடுங்காதுள்ள ஊழிமுடிவில் இடமெல்லாம் பரவும் நால்வேதங் களின் ஆரவாரத்தைப் போன்று பரவிச் சென்றது (இலக்குவனது வில் நாணினின்றும் எழுந்த) அவ்வொலி முழக்கம்.

கு:—இங்கு, 'மேல்' என்றது, ஐம்பெரும் பூதங்கட்கும் காரண மாய் மேலாகவுள்ள மூலப் பகுதியை, மறைந்து ஒளித்தல் - புலப் படாது ஒடுங்குதல். விரிஞ்சன் - பிரமன். வீதல் - இறத்தல். கால் - காலம்; என்றது, உலகத்தோற்ற ஒடுக்கத்திற்குக் காரணமாகிய காலம் என்னும் தத்துவத்தை. கடை - ஊழி முடிவு. அவ்வொலி - இலக்குவனது வில் நாணினின்றும் எழுந்த அவ்வொலி முழக்கம், அவ்வொலி நான்மறை ஆர்ப்பு என நடந்தது என்க. ஊழி முடிவில் எல்லாப் பூதங்களும் அழிந்து மூலப் பகுதியில் ஒடுங்க, அம்மூலப் பகுதி இறைவனுக்குத் திருமேனியாக அமைய அந்நிலையில் என்றும் நிலையுடையனவாகிய நான்மறைகள் அம்முதல்வனைப் பேரொலிபடத் துதித்துப் போற்றுவன என்பர் பெரியோர். (103)

7960. துரந்தன சுடுசரந் துரந்த தோன்றல
கரந்தன நிருதர்தங் கரையில் யாக்கையின்
நிரந்தன நெடும்பிணம் விசும்பி னெஞ்சுறப்
பரந்தன குருதியப் பள்ள வெள்ளத்தின்.

துரந்தன சுடுசரம்; துரந்த தோன்றல
கரந்தன, நிருதர்தம் கரை இல் யாக்கையின்;
நிரந்தன நெடும்பிணம் விசும்பின் நெஞ்சு உற,
பரந்தன குருதி, அப் பள்ள வெள்ளத்தின்.

பொ :—சுடுந்தன்மையனவாகிய அம்புகள் (இலக்குவனுல்) விரைந்து எய்யப்பட்டன. (அங்ஙனம்) செலுத்தப்பட்டவை (காண் போர்கண்ணுக்குப்) புலனுகாதனவாய், அரக்கர்களின் எண்ணற்ற உடம்புகளிலே தைத்துமறைந்தன. நீண்ட பிணங்கள் வானத்தின் நடுவிடம் வரையிலும் இடைவெளியின்றிப் பொருந்த (அவற்றி னின்றும்) இரத்தப் பெருக்குகள், பள்ளமாகிய கடலின் நீரை யொத்து (எங்கும்) பரவின.

கு :—துரத்தல் - விரைந்து செலுத்தல். கரந்தன - மறைந்தன. கரையில் யாக்கை - அளவில்லாத உடம்புகள். கரை - அளவு. நிரந்தரம் - இடைவெளியின்மை. விசும்பின் நெஞ்சு - வானத்தின் நடுவிடம், போர்க்களத்திறப்பட்டோர் உடல்களினின்றும் பெருகிய குருதிநீர்; சகரரால் தோண்டப்பட்ட அத் தொடுகடலாய வெள்ளத்தை யொத்துப் பரவியது என்பார், ‘அப்பள்ள வெள்ளத் தின் பரந்தன குருதி’ என்ருர். (104)

இதன்பின் 52 என்னும் எண்பெற்ற அச்சுப் புத்தகத்திற் பின்வருமாறு ஏழு மிகைப்பாடல்கள் குறிக்கப் பெற்றுள்ளன :—

7960 (a) வெங்கொலை மதகரி வெள்ளம் ஆயிரம்
துங்க நீள் வரைப் புயத்து அரக்கர் தூண்டினர்;
வெங்கணை இலக்குவன் வெகுண்டு, உகாந்தத்தில்
பொங்கிய மாரியின் பொழிதல் பேயினன்.

7960 (b) முடிவுறும் உகம் பொழி மாரிமும் மையின்
விடுகணை மழை நெடுந் தாரை, வெம்மதக்
கடகளிறு அடங்கலும் கழிய, கால், கரம்,
குடல், தலை, குறைத்தமை கூறல் ஆவதோ.

7961. யானையின் கரந்துமித் திரத வீரர்தம்
வானுயர் முடித்தலை தடிந்து வாசியின்
காணிரை யறுத்துவெங் கறைக்கண் மொய்ம்பரை
ஊனுடை யுடல்பிளந் தோடு மம்புகள்.

யானையின் கரம் துமித்து, இரத வீரர் தம்
வான் உயர் முடித் தலை தடிந்து, வாசியின்
கால் நிரை அறுத்து, வெம் கறைக்கண் மொய்ம்பரை
ஊன் உடை உடல் பிளந்து, ஓடும்—அம்புகள் ;

பொ :—(இலக்குவன் எய்த) அம்புகள் (முன்வரிசையிலுள்ள) யானையின் கையினைத் துணித்து, (அடுத்து நின்று பொரும்) தேர் வீரர்களின் மேனோக்கி யுயர்ந்த முடியணிந்த தலையினைத் தடிந்து, (அடுத்து நிற்கும்) குதிரையின் கால்வரிசையினை அறுத்து, குருதிக் கறை படிந்த தோளினையுடைய காலாட்படை வீரர்களின் தசை மிக்க உடம்பினைப் பிளந்து விரைந்து ஓடின.

கு :—இலக்குவன் எய்த அம்புகள் ஒவ்வொன்றும் அவனுக்கு முன்னே நிரல்பட நின்று பொரும் யானை தேர் குதிரை காலாள் ஆகிய நால்வகைச் சேனைகளின் அணிவரிசைகளையும் ஊடுருவிச் சிதைத்து அழித்த செய்தியினை வியந்துரைப்பனவாக அமைந்தன. இதுவும் அடுத்த செய்யுளும் ஆகும்.

" வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி
பேழ்வா யுழுவையைப் பெரும்பே துறீஇப்
புழற்றலைப் புகர்க்கலை யுருட்டி யுரற்றலைக்
கேழற் பன்றி வீழ வயல
தாழற் புற்றத் துடும்பிற் செற்றும்
வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்
புகழ்சால் சிறப்பின் அம்புமிகத் திளைக்கும்
கொலைவன் " (புறம்–152)

என வல்வில் ஓரியின் வில் வன்மையினை வன்பரணர் போற்றி யுள்ளமை இங்கு ஒப்பு நோக்கத் தகுவதாகும். (105)

7962. வில்லிடை யறுத்துவே றுணித்து வீரர்தம்
எல்லிடு கவசமு மார்பு மீர்ந்தெறி
கல்லிடை யறுத்துமாக் கடிந்து தேரழீஇக்
கொல்லியல் யானையைக் கொல்லுங் கூற்றினே.

வில் இடை அறுத்து, வேல் துணித்து, வீரர்தம்
எல்லிடு கவசமும் மார்பும் ஈர்ந்து, எறி
கல் இடை அறுத்து, மாக் கடிந்து, தேர் அழீஇ,
கொல் இயல் யானையைக் கொல்லும், கூற்றினே.

பொ :—(மேலும் அந்த அம்புகள்) பகைவரது வில்லினை நடுவில் முரித்தும், வேற்படையினைத் துண்டித்தும் வீரர்களின் ஒளி வீசும் கவசத்தினையும் (அதனைப் பூண்ட அவர்தம்) மார்பினையும் பிளந்தும், (அவர்களால்) எறியப்படும் கல்லினைத் தடுத்துச் சிதைத்தும், குதிரையினைக் கடிந்தும் தேரினை அழித்தும் கொல்லுந் தன்மையுள்ள யானையைக் கூற்றுவனை யொத்துக் கொன்றொழிப்பனவாயின.

கு :—இடை அறுத்தல் – நடுவே துண்டித்தல். எல் – ஒளி. ஈர்தல்-இரு கூருகப் பிளத்தல். எறிகல்-பகைவரால் எறியப்படும் கற்கள். அறுத்தல்-தடுத்துச் சிதைத்தல். மா-குதிரை. அழீஇ-அழித்து; சொல்லிசையளபெடை. கொல் இயல் யானை-பகைவராயினரை எதிர்த்து மேற்சென்று கொல்லுந் தன்மையினையுடைய போர்க்களிறு. கூற்றின் கொல்லும் என இயைக்க. (106)

## இலக்குவனது அம்பினல் அழிந்துபட்ட போர்க்களத்தின் நிலை

**7963.** வெற்றிவெங் கரிகளின் வளைந்த வெண்மருப்
பற்றெழு விசைகளி னும்ப ரண்மின
முற்றரு முப்பகற் றிங்கள் வெண்முளை
யுற்றன விசும்பிடைப் பலவு மொத்தன.

வெற்றி வெங் கரிகளின் வளைந்த வெண்மருப்பு,
அற்று எழு விசைகளின் உம்பர் அண்மின,
முற்று அரு முப்பகல் திங்கள் வெண்முளை
உற்றன விசும்பிடைப் பலவும் ஒத்தன.

பொ :—வெற்றியினையுடைய சினமிக்க யானைகளின் வளைந்த வெள்ளிய தந்தங்கள் துணிக்கப்பட்டு மேல் எழுகின்ற வேகத்தால் வானத்திலே நெருங்கியவை, முற்றி நிரம்புதல் இல்லாத மூன்ரும் நாட்பிறைச் சந்திரன் வெள்ளிய முளைகள் பலவும் ஆகி விசும்பின் கண்ணே பொருந்தி முளைத்தனவற்றை யொத்தன.

கு :—கரிகளின் வெண்மருப்பு உம்பர் அண்மின, முப்பகல் திங்கள் வெண்முளை பலவும் விசும்பிடை உற்றன ஒத்தன என முடிக்க. மருப்பு-தந்தம். விசை-வேகம். உம்பர்-மேல். அண்முதல்-

நெருங்குதல். முற்றுஅரு-நிரம்புதல் இல்லாத; அருமை, இன்மை குறித்து நின்றது. முப்பகல் திங்கள்—மூன்றும் நாட்பிறைச் சந்திரன். (107)

7964. கண்டகர் நெடுந்தலை கனலுங் கண்ணன
துண்டவெண் பிறைத்துணை கவ்வித் தூக்கிய
குண்டல மீன்குலந் தழுவிக் கோண்மதி
மண்டலம் விழுந்தன போன்ற மண்ணினே.

கண்டகர் நெடுந் தலை, கனலும் கண்ணன,—
துண்டவெண் பிறைத் துணை கவ்வி, தூக்கிய;
குண்டல மீன்குலம் தழுவி, கோள் மதி
மண்டலம் விழுந்தன போன்ற மண்ணினே.

பொ :—(வெகுளியால்) கனன்று ஒளி வீசும் கண்களையுடையனவும், வெண்பிறைத் துண்டங்கள் போலும் (கோரைப் பற்கள்) இரண்டினைக் கவ்வியேந்தினவும் ஆகிய கொடிய அரக்கர்களின் நீண்ட தலைகள் (இலக்குவனது அம்புகளால் அறுபட்டுத் தரையில் வீழ்ந்து கிடப்பன) ஒளியினைக்கொண்ட சந்திர மண்டிலங்கள் குண்டலங்களாகிய நட்சத்திரங்களை உடன்கொண்டு பூமியில் வீழ்ந்தன போன்று காணப்பட்டன.

கு :—கனலுங்கண்ணன வெண்பிறைத் துண்டத்துணை தூக்கிய கண்டகர் நெடுந்தலை, கோண்மதி மண்டலம் குண்டல மீன்குலம் தழுவி மண்ணின் விழுந்தன போன்ற என முடிக்க. கண்டகர்-கொடியோர்; என்றது, கொடுமையே புரியும் இயல்பினராகிய அரக்கர்களை. வெண்பிறைத் துண்டமாகிய துணை என்றது, வெள்ளிய பிறைத் துண்டங்கள் போலும் கோரைப் பற்கள் இரண்டினை. துணை—இரண்டு. குண்டல மீன்குலம்—(காதில் அணியப்பட்ட) குண்டலங்களாகிய நட்சத்திரக் கூட்டங்கள். இச் செய்யுள் உருவகத்தை அங்கமாகக் கொண்ட தற்குறிப்பேற்ற அணி. அரக்கர் முகங்களில் உள்ள கோரைப் பற்கள் இரண்டும் இரண்டு பிறைச் சந்திரனை யொத்துத் தோன்ற, அத் தலைகளில் தாழ்ந்து அசையும் குண்டலங்கள் விண்மீன்களைப் போன்று விளங்குதலால் அவர்தம் தலைகள் மண்ணிடத்தே வீழ்ந்த மதி மண்டலங்களைப் போன்று காணப்பட்டன என்க. (108)

7965. கூர்மருப் பிணையன குறைந்த கையன
கார்மதக் கனவரை கவிழ்ந்து வீழ்வன
போர்முகக் குருதியின் புணரி புக்கன
பாரெடுக் குறுநெடும் பன்றி போன்றன.

கூர் மருப்பு இணையன, குறைந்த கையன,
கார் மதக் கனவரை கவிழ்ந்து வீழ்வன,
போர் முகக் குருதியின் புணரி புக்கன—
பார் எடுக்குறு நெடும் பன்றி போன்றன.

பொ :—கூர்மைவாய்ந்த இரண்டு தந்தங்களையுடையனவும் துணிக்கப்பட்டுக் குறைந்த கையினையுடையனவும் ஆகிய கரியமத நீர் சொரியும் மலைபோலும் யானைகள், (தரையிற்) குப்புற்று வீழ்வன வாய்ப் போர் முனையிற் குருதிக் கடலினுள்ளே புக்கவை, (ஊழிப் பெருவெள்ளத்தில் அழுந்திய) பூமியை (உள்புக்கு) எடுக்க முந்துறும் நீண்ட வராக மூர்த்தியை ஒத்துத் தோன்றின.

கு :—மருப்பிணையன என்பதை, இணைமருப்பின என மாற்றுக. போரிற் கை துணிக்கப்பட்டுத் தரையிற் குப்புற வீழ்ந்து குருதி வெள்ளத்தினுள்ளே புக்க யானைக்கு, ஊழி வெள்ளத்தில் அழுந்திய பூமியை உள் புக்கு எடுக்க முந்திய திருமாலாகிய நெடும் பன்றியை உவமை கூறினர். (109)

7966. புண்ணுற வுயிருகும் புரவி பூட்டறக்
கண்ணகன் றேர்க்குல மறிந்த காட்சிய
எண்ணுறு பெரும்பதம் வினையி னெஞ்சிட
மண்ணுற விண்ணின்வீழ் மானம் போன்றன.

பண் உற உயிர் உகும் புரவு பூட்டு அற,
கண் அகன் தேர்க்குலம், மறிந்த காட்சிய—
எண் உறு பெரும்பதம் வினையின் எஞ்சிட,
மண் உற, விண்ணின் வீழ் மானம் போன்றன.

பொ :—(அம்பு தைத்துப்) புண்ணுற்றமையால் உயிர் நீங்கிய குதிரைகள் (நுகத்திற்) பூட்டறுபட்டுவீழ, இடமகன்ற தேர்த் தொகுதிகள் தலைகீழாக வீழ்ந்த தோற்றத்தினையுடையனவாய், மதித்துப் போற்றுதற்குரிய பெருமை வாய்ந்த (துறக்கப்) பதவி தீவினையால் தீர்ந்தொழிய வான வீதியினின்றும் மண்ணிற் படிய வீழ்ந்து கிடக்கும் வான விமானத்தைப் போன்றன.

கு :—நல்வினைப் பயன் காரணமாகத் துறக்க வுலகத்தை யடைந்து அங்கு விமானத்திற் செல்வோர், அப் புண்ணியம் விரைவில் நீங்க அவ்விமானம் மண்ணிற் பொருந்தத் தலைகீழாக வீழ்ந்தாற்போன்று, அரக்கராற் போரிற் செலுத்தப்பட்ட தேர்கள் குதிரைகள் புண்பட்டுப் பூட்டற்று வீழத் தரையிற் குப்புற வீழ்ந்து கிடந்தன என்பதாம். உயிர் உகுதல்-உயிர் நீங்குதல். மறிதல்-கீழ்மேலாதல். எண்ணுறுதல் - மதிக்கப்பெறுதல். பெரும்பதம் - பெருமையுடைய வானுலக வாழ்வு. வினையின் - தீவினையால். எஞ்சுதல்-நீங்குதல். மானம்-விமானம். வானுலக வாழ்வு பெற்ற உபரிசரவசு என்பவன் தான் நுகர்தற்குரிய புண்ணியந் தீர்ந்த அளவே வானினின்றும் விமானத்தோடு பூமியில் வீழ்ந்தான் என்ற கதை இங்கு நினைத்தற்குரியதாகும். (110)

7367. அடக்கருங் கவந்தநின் றாடு கின்றன
விடற்கரும் வினையறச் சிந்தி மெய்யுயிர்
கடக்கருந் துறக்கமே கலந்த வாமென
உடற்பொறை யுவகையிற் குனிப்ப வொத்தன.

அட, கருங் கவந்தம் நின்று ஆடுகின்றன—
விடற்கு அரும் வினை அறச் சிந்தி, மெய் உயிர்
கடக்க அருந் துறக்கமே கலந்தவாம் என,
உடற் பொறை உவகையின் குனிப்ப ஒத்தன.

பொ :—(இலக்குவன், எண்ணற்ற அரக்கர்களை அம்பினாற்) கொன்றமையால் (அவர்தம்) கரிய உடற்குறைகள் நின்று ஆடுவன, மெய்யுணர்வுடைய உயிர்கள், நீக்குதற்கு அரிய இருவினைகளைத் தொடர்பற நீக்கி, (எளிதிற்) சென்றடைதற்கரிய துறக்க வுலகத்தைச் சேர்ந்தனவாயின என்று கருதி (அவ்வுயிர்தங்கிய) உடல்கள் உவகையினாற் கூத்தாடுவனவற்றைப் போன்றன.

கு :—அட-கொல்ல; செயவென் எச்சம் காரணப் பொருளது. கவந்தம்—தலையற்ற குறையுடல். மெய் உயிர்-மெய் யுணர்வினைப் பெற்ற ஆன்மா. கடத்தல்-தடையாயுள்ளவற்றைத் தாண்டி மேற் சென்றடைதல். ஆடுகின்றன, வினையாலணையும் பெயர். ஆடுகின்றன, குனிப்ப ஒத்தன என முடியும். குனித்தல்-கூத்தாடுதல். (111)

7968. ஆடுவ கவந்தமொன் றுறெண் ணுயிரம்
வீடிய பொழுதெனும் பனுவன் மெய்யதேல்
கோடியின் மேலுள குனித்த கொற்றவன்
பாடினி யொருவராற் பகரற் பாலதோ.

'ஆடுவ கவந்தம் ஒன்று, ஆறு எண்ணுயிரம்
வீடிய பொழுது' எனும் பனுவல் மெய்யதேல்,
கோடியின்மேல் உள, குனித்த; கொற்றவன்
பாடு இனி ஒருவரால் பகரற் பாலதோ?

பொ :—நாற்பத்தெண்ணுயிரம் வீரர்கள் (போர்க்களத்தில்) இறந்துபட்டபொழுது ஒரு கவந்தம் (என்ற முறையிற் கவந்தம்) ஆடுவன என நூல்களிற் கூறப்படும் கணக்கு உண்மையாயிருக்குமாஞல் (அதன்படி) ஆடிய கவந்தங்கள் கோடி என்னும் எண்ணினும் மேற்பட்டனவாயுள்ளன. (எனவே) வெற்றி வேந்தனுகிய இலக்குவனது பெருமை இனி ஒருவரால் முற்றச் சொல்லுதற்குரிய எளிமையுடையதோ?

கு :—'ஆறெண்ணுயிரம் வீடியபொழுது கவந்தம் ஒன்று ஆடுவ' எனும் பனுவல் என்க. ஆறு எண்ணுயிரம்-நாற்பத்தெண்ணுயிரம்; என்றது, அத்தொகையினராகிய வீரர்களை. வீடுதல் - இறத்தல். பனுவல்-நூல்; என்றது நூலிற் கூறப்படும் கொள்கையினை. மெய்யதேல்-உண்மையாயிருக்குமாஞல். குனித்த, கோடியின்மேல் உள என இயையும். கொற்றவன் என்றது, வெற்றிவீரனுகிய இலக்குவனை. பாடு - பெருமை. பகரற்பாலதோ என்புழி ஓகாரம், எதிர்மறை. (112)

7969. ஆனையின் குருதியு மரக்கர் சோரியும்
ஏனைவெம் புரவியி னுதிரத் தீட்டமும்
கானினு மலையினும் பரந்த கார்ப்புனல்
கானயா றுமெனக் கடன்ம டுத்தவே.

ஆனையின் குருதியும், அரக்கர் சோரியும்,
ஏனை வெம் புரவியின் உதிரத்து ஈட்டமும்,
கானினும் மலையினும் பரந்த கார்ப்புனல்
கானயாறு ஆம் எனக் கடல் மடுத்தவே.

பொ :—யானைகளின் இரத்தமும் அரக்கர்களின் இரத்தமும் ஏனைய வெம்மை மிக்க குதிரைகளின் இரத்தப் பெருக்கும் காட்டிலும்

மலையிலும் பரவிப் படிந்த மேகங்கள் பொழிந்த மழை நீராலாகிய காட்டாற்று வெள்ளம் என்னும்படி கடலிற் புகுந்தன.

கு :—குருதி, சோரி, உதிரம் என்பன இரத்தம் என்னும் பொருளையுடைய ஒருபொருட் பன்மொழிகள். கான்-காடு. கார்ப் புனல்-மழைநீர். கானயாறு-காட்டாறு. (113)

7970. தாக்கிய சரங்களிற் றலைக ணீங்கிய
வாக்கைய புரசையோ டளைந்த தாளன
மேக்குய ரங்குசக் கைய வெங்கரி
நூக்குவ கணிப்பில வரக்கர் நோன்பிணம்.

தாக்கிய சரங்களின் தலைகள் நீங்கிய
ஆக்கைய, புரசையோடு அளைந்த தாளன,
மேக்கு உயர் அங்குசக் கைய, வெங்கரி
நூக்குவ, கணிப்பு இல—அரக்கர் நோன்பிணம்.

பொ :—அரக்கர்களின் வலிய பிணங்கள் (இலக்குவனால் எய்யப் பட்டுத்) தாக்கிய அம்புகளால் தலைகள் அறுபட்டு நீங்கிய உடம்பு களையுடையனவாய், (யானையின்) கழுத்திடு கயிற்ரேடு பொருந்திய கால்களையுடையனவாய், மேலே உயர்த்தெடுத்த அங்குசத்தினை ஏந்திய கையினையுடையனவாய் வெம்மை மிக்க யானைகளை(ப் போரிற்) செலுத்துவன எண்ணில்லாதனவுள்ளன.

கு :—அரக்கர் நோன்பிணம், தலைகள் நீங்கிய ஆக்கைய, புரசை யோடு அளைந்த தாளன, அங்குசக் கைய, வெங்கரி நூக்குவ எண்ணில என முடிக்க. உயிர் நீங்கிப் பிணமாய்த் தலையறுபட்ட காலத்தும் பகைவர்மேல் யானையைச் செலுத்திச் செல்லும் உள்ளத் துரனும் வன்மையும் குறையாதன என்பதுணர்த்துவார் 'நோன் பிணம்' எனக் குறித்தார். நோன்மை-பகைவர் படையைத் தாங்கும் வன்மை. சரம்-அம்பு. ஆக்கை-உடல். புரசை-யானை கழுத்திடு கயிறு. நூக்குதல்-செலுத்துதல். (114)

7971. கோளுடைக் கணைபடப் புரவி கூத்தயர்
தோளுடை நெடுந்தலை துமிந்துந் தீர்கில
வாளுடைக் குறைத்தலை யதிர வாடுவ
வாளுடைத் தடக்கைய வாசி மேலன.

கோளுடைக் கணைபட, புரவி கூத்து அயர்
தோளுடை நெடுந்தலை துமிந்தும், தீர்கில
ஆளுடைக் குறைத்தலை அதிர ஆடுவ-
வாளுடைத் தடக்கைய, வாசி மேலன.

பொ :—(மாற்றார் உயிரைக்) கொள்ளுந் தன்மையினையுடைய (இலக்குவனது) அம்பு பட்டதனால் குதிரையொடு கூடியாடும் தோள்களுடன் பொருந்திய நெடிய தலைகள் துண்டிக்கப்பட்டும், வாட்படையை யேந்திய கையினையுடையனவாய்க் குதிரைகளின் மேலுள்ளனவாகிய வீரர்களின் தலையற்ற உடற்குறைகள், (தாம் ஆடும் கூத்தினை) ஒழியாதனவாய்ப் பூமி அதிரும்படி ஆடுவனவாயின.

கு :—கணைபட நெடுந்தலை துமிந்தும், வாளுடைத் தடக்கைய வாசி மேலன-ஆளுடைக் குறைத்தலை, தீர்கில, அதிர ஆடுவ என இயைத்துரைக்க. கணை-அம்பு. புரவிகூத்து-குதிரையொடு கூடியாடும் கூத்து. அயர்தல்-செய்தல்; ஆடுதல். புரவிகூத்து அயர் தோள் எனத் தோளுக்கு அடைமொழியாக்குக. குறைத்தலை-தலையற்ற உடல்; கவந்தம். வாசி-குதிரை. (115).

7972. வைவன முனிவர்சொல் லனைய வாளிகள்
கொய்வன தலைகடோள் குறைத்த லைக்குழாம்
கைவளை வரிசிலைக் கடுப்பிற் கைவிடா
வெய்வன வெனைப்பல விரத மேலன.

வைவன முனிவர் சொல் அனைய வாளிகள்,
கொய்வன தலைகள் தோள்; குறைத்தலைக் குழாம்,
கை வளை வரி சிலைக் கடுப்பின் கைவிடா,
எய்வன எனைப்பல; இரத மேலன.

பொ :—முனிவர்கள் வெகுண்டு கூறுவனவாகிய (சாபச்) சொற்களையொத்த (இலக்குவனுடைய) அம்புகள் (அரக்கருடைய) தலைகளையும் தோள்களையும் அறுத்துத் தள்ளுவன; தேர்மேல் உள்ளனவாகிய தலையற்ற குறையுடற் றொகுதிகள், (முன் தாம் கொண்ட) போர் வேகத்தைக் கைவிடாதனவாய்த் தம் கையிலேயுள்ள வளைக்கப்பட்ட கட்டமைந்த வில்லினின்றும் அம்பினைச் செலுத்துவன மிகப்பலவாம்.

கு :—நிறைமொழி மாந்தராகிய முனிவர்கள் வெகுண்டுகூறும் சாபமொழிகள், அவர்கள் கூறிய அப்பொழுதே தம் பயனைத் தப்

பாமல் விளைத்தல் போன்று, இலக்குவன் எய்த அம்புகள் யாவும் குறி தவறுதனவாய் அரக்கருடைய தலைகளையும் தோள்களையும் விரைந்து கொய்தன என்பார், 'முனிவர் வைவன சொல்லனைய வாளிகள், தலைகள் தோள் கொய்வன' என்றார். 'வைதவைவின் மராமரம் ஏழ்துளை எய்த எய்தவற்கு' (கம்பர்-தற்சிறப்பு-5) எனவும், 'சொல்லொக்குங் கடிய வேகச் சுடுசரம்' (கம்பர்-பால-413) எனவும் இந்நூலாசிரியர் முன்னர்க் கூறியுள்ளமை இங்கு ஒப்புநோக்கத் தக்கனவாகும். இரதமேலன குறைத்தலைக் குழாம், கடுப்பின் கைவிடா கைவளை வரிசிலை எய்வன எனைப் பல என இயைத்துரைக்க. (116)

7973. தாதையைத் தம்முனைத் தம்பி யைத்தனிக்
காதலைப் பெயரனை மருக னைக்களத்
தூதையி னொருகணை யுருவ மாண்டனர்
சீதையென் றொருகொடுங் கூற்றந் தேடினார்.

தாதையை, தம்முனை, தம்பியை, தனிக்
காதலை, பெயரனை, மருகனை, களத்து
ஊதையின் ஒருகணை உருவ, மாண்டனர்-
சீதை என்று ஒரு கொடுங் கூற்றம் தேடினார்.

பொ :—சீதை என்ற பெயரால் ஒரு கொடுந்தன்மை வாய்ந்த கூற்றுவனைத் தேடிக் கொண்டவர்களாகிய அரக்கர்கள், தந்தையையும் தமையனையும் தம்பியையும் ஒப்பற்ற அன்புக்குரிய மைந்தனையும் பெயரனையும் மருகனையும் போர்க்களத்திலே பெருங்காற்றினையொத்து (இலக்குவனது) ஒரே அம்பு தைத்து ஊடுருவிச் செல்ல(க் கண்டு ஆற்றாதவராய்த் தாமும்) இறந்தொழிந்தார்கள்.

கு :—சீதை என்று ஒரு கொடுங் கூற்றந் தேடினார், தாதையை, தம்முனை, தம்பியை, காதலை, பெயரனை, மருகனை ஒருகணை உருவ மாண்டனர் என்க. இராவணன் சீதையைக் கவர்ந்துகொண்டு சென்று சிறைப்படுத்திய செயல், உயிரைத் தப்பாது கவருந் தன்மையனாகிய கூற்றுவனை அரக்கர்கள் தாமே நாடிச் சென்று அழைத்து வந்து தம் மூரில் இருத்திய செயலாய் அரக்கர்குலம் அனைத்திற்கும் இறுதியை விளைப்பதாயிற்று என்பார், 'சீதையென்று ஒரு கொடுங் கூற்றம் தேடினார், தாதையை, தம்முனை, தம்பியை, காதலை, பெயரனை, மருகனை ஒருகணை உருவ மாண்டனர்' என்றார். காதல் என்பது, அன்புக்குரிய மகன் எனப் பொருள் தந்து நின்றது. ஊதை-காற்று; இங்கு ஊழிப் பெருங்காற்றினை யுணர்த்தியது.

கணை-அம்பு. உருவ-உள்புகுந்து ஊடுருவிச் செல்ல. அத் துன்பக் காட்சியைத் தாம் கண்ட நிலையிலேயே ஆற்ருது தம்முயிரைத் துறந்தனர் என்பார், ஒரு கணை உருவ மாண்டனர் என்ருர். (117)

7974. தூண்டருங் கணைபடத் துமிந்து துள்ளிய
தீண்டரு நெடுந்தலை தழுவிச் சேர்ந்தன
பூண்டெழு கரதலம் பொறுக்க லாதன
ஆண்டலை நிகர்த்தன வெருவை யாடுவ.

தூண்டு அருங் கணை படத் துமிந்து, துள்ளிய
தீண்ட அரு நெடுந் தலை தழுவிச் சேர்ந்தன,—
பூண்டு எழு கரதலம் பொறுக்கலாதன
ஆண்டலை நிகர்த்தன ; எருவை ஆடுவ.

பொ :—(இலக்குவனுல்) எய்யப்பட்ட அரிய அம்புதைத்தலால் துண்டிக்கப்பட்டு வீழ்ந்து துள்ளிய தீண்டுதற்கு அரிய (அரக்கரது) நீண்ட தலையினைப்பற்றி (ப் போர்க்களத்தே) சேர்ந்தனவாகிய பருந்துகள் ஆடுவன, (பொருள்களைப்பற்றி) மேற்கொண்டெழும் கையினைச் சுமவாதனவாகிய ஆண்டலைப் பறவைகளை ஒத்துத் தோன்றின.

கு :—தூண்டு அருங்கணை - எய்யப்பட்ட அரிய அம்பு. படுதல் - ஊன்றித்தாக்குதல். துமிதல் - துண்டிக்கப்படுதல். நெடுந்தலை தழுவிச் சேர்ந்தன எருவை ஆடுவ, கரதலம் பொறுக்கலாதன ஆண்டலை நிகர்த்தன என்க. பொருள்களைத் தாங்கி மேலெழுதற்குக் கருவியாகிய கைகள் என்பார், பூண்டெழுகரதலம் என அடை கொடுத்தோதினர். பூணுதல் - மேற்கொண்டு தாங்குதல். கரதலம் - கை. பொறுத்தல் - சுமத்தல் ; பெற்றிருத்தல். 'இருகை சுமந்து வாழ்வேன்' என்ருர் பிறரும். எருவை - பருந்து. ஆண்டலை என்பது, ஆண்மகனது தலைபோன்ற தலையினையுடையதோர் பறவை.

இருசிறகர் ஈர்க்கும் பரப்பி எருவை
குருதி பிணங்கவருந் தோற்றம்—அதிர்விலாச்
சீர்விழாப் பண்ணமைப்பான் போன்ற புனல்நாடன்
நேரானரை யட்ட களத்து (களவழி–20)

எனவரும் பொய்கையார் பாடல் இங்கு நினைக்கத் தகுவதாகும். (118)

7975. ஆயிர மாயிரங் கோடி யாய்வருந்
தீயுமிழ் கடுங்கணை மனத்திற் செல்வன
பாய்வன புகுவன நிருதர் பல்லுயி
ரோய்வன நமன்றமர் கால்க ளோயவே.

ஆயிரம் ஆயிரம் கோடியாய் வரும்
தீ உமிழ் கடுங்கணை, மனத்திற் செல்வன,
பாய்வன, புகுவன ; நிருதர் பல் உயிர்
ஓய்வன, நமன் தமர் கால்கள் ஓயவே.

பொ :—பல்லாயிர கோடிக் கணக்கினவாய் (இலக்குவனது வில்லினின்றும் வெளிப்பட்டு) வரும் நெருப்பைக் கக்கும் கடிய அம்புகள், மனத்தின் விரைவுடையனவாய்ச் செல்வன, (அரக்கருடைய உடம்பிற்) பாய்வனவாய் உட்புகுவன. அவற்ருல் அரக்கர் பலருடைய உயிர்களும் (தம்மைக் கவரவரும்) இயமதூதர்களின் கால்கள் தளர்ந்து ஓயுமாறு (உடம்பைவிட்டு) நீங்குவனவாயின.

கு :—தீயுமிழ் கடுங்கணை, மனத்திற் செல்வன, பாய்வன புகுவன; நிருதர் பல்லுயிர், நமன்தமர் கால்கள் ஓய ஓய்வன என இயையும். ஓய்தல் - தளர்தல்; நீங்குதல். பல்லாயிரகோடி அம்புகளால் தாக்கப்பட்டு எண்ணற்ற அரக்கர்களின் உயிர்கள் ஒரு நொடியில் நீங்குதலால் அவ்வுயிர்களை விரைந்தோடிப் பற்றும் கடமையினையுடைய இயமன் தூதர்களின் கால்கள் ஓடி வலிகுன்றித் தளர்ந்தன என இலக்குவனது விற்போர் வன்மையினையும் அங்கு உயிரிழந்த அரக்கர்களின் பன்மையினையும் ஆசிரியர் புனைந்துரைத்தவாறு.
(119)

7976. விளக்குவான் கணைகளால் விளிந்து மேருவைத்
துளக்குவா ருடற்பொறை துணிந்து துள்ளுவா
ரிளக்குவா ரமரர்தஞ் சிரத்தை யேண்முது
குளுக்குவா ணிலமகள் பிணத்தி னோங்கலால்.

விளக்கு வான் கணைகளால் விளிந்து, மேருவைத்
துளக்குவார் உடற்பொறை துணிந்து, துள்ளுவார் ;
இளக்குவார் அமரர் தம் சிரத்தை ; ஏன் முதுகு
உளுக்குவாள் நிலமகள், பிணத்தின் ஓங்கலால்.

பொ :—மேருமலையையும் பெயர்த்து அசைக்கவல்ல (பெருவலி படைத்த) அரக்கர்கள், (இலக்குவன் எய்த) ஒளிமிக்க பெருமை

வாய்ந்த அம்புகளால் இறந்து (தமது) உடற்சுமை துணிக்கப்பட்டு (அறுபட்ட துண்டங்களாய்த்) துள்ளியெழுந்து ஆடுவாராயினர்; (அதுகண்டு வியந்து) தேவர்கள் தம் தலையை அசைத்தனர். பூமி தேவி (அரக்கருடைய) பிணமலைகளால் வன்மையுடைய முதுகு நெளியப் பெறுவாளாயினள்.

கு :—மேருவைத் துளக்குவார், கணைகளால் விளிந்து உடற் பொறை துணிந்து துள்ளுவார்; அமரர்தம் சிரத்தைத் துளக்குவார்; நிலமகள் பிணத்தின் ஓங்கலால் ஏண் முதுகு உளுக்குவான் என இயையும். இளக்குதல் - அசைத்தல். ஏண் - வலிமை. உளுக்குதல் - நெளிதல். (120)

தாருகன் என்பான் இலக்குவனுடன் பொருது இறத்தல்

7977. தாருகன் னென்றுள னொருவன் றானெடு
மேருவின் பெருமையா னெரியின் வெம்மையான்
போருவந் துழக்குவான் புகுந்து தாங்கினன்
தேரினன் சிலையின னுமிழுந் தீயினன்.

தாருகன் என்று உளன் ஒருவன்—தான் நெடு
மேருவின் பெருமையான், எரியின் வெம்மையான்,
போர் உவந்து உழக்குவான், புகுந்து தாங்கினன்—
தேரினன், சிலையினன், உமிழும் தீயினன்.

பொ :—நெடிய மேருமலையினை யொத்த உயர்ச்சியையுடைய வனும் தீயினையொத்துக் காயும் வெகுளியையுடையவனும் தாருகன் என்று பெயர் கூறப்பட்டுள்ளவனும் ஆகிய அரக்கன் ஒருவன் போரை உவந்து மேற்கொண்டு (பகைவர்களைக்) கலக்கி வருத்தப் புகுந்து. தேரில் ஏறி, வில்லை வளைத்து (க் கண்களினின்று) சொரியும் தீயினையுடையவனாய் (இலக்குவனது சேனையை)த் தடுத்து நின்றான்.

கு :—பெருமையான். வெம்மையான், தாருகன் என்று உளன் ஒருவன், போர் உவந்து உழக்குவான் புகுந்து, தேரினன், சிலை யினன், தீயினன் தாங்கினன் எனமுடிக்க. தேரினன், சிலையினன் என்னும் குறிப்பு முற்றுக்கள், 'கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்' (திருமுருகாற்றுப்படை-208) என்பன போன்று, 'முன்னத்தி னுணருங் கிளவியும் உளவே' (தொல்-எச்ச-63) என்னுஞ் சூத்திரவிதியால், 'தேரையூர்ந்து, வில்லை வளைத்து' எனச் செய்தெ னெச்சப் பொருளை யுணர்த்தி நின்றன. (121)

7978. துரந்தன னெடுஞ்சர நெருப்பின் ருேற்றத்த
பரந்தன விசும்பிடை யொடுங்கப் பண்டுடை
வரந்தனின் வளர்வன வவற்றை வள்ளலுங்
கரந்தனன் கணைகளான் முனிவு காந்துவான்.

துரந்தனன் நெடுஞ் சரம், நெருப்பின் தோற்றத்த;
பரந்தன, விசும்பிடை ஒடுங்க; பண்டு உடை
வரம் தனின் வளர்வன அவற்றை, வள்ளலும்,
கரந்தனன் கணைகளால், முனிவு காந்துவான்.

பொ :—(தாருகன், தான்) முன்னே பெற்றுடைய வரத்தினுல் (ஒன்று பலவாய்க் கிளைத்து) வளர்வனவாகிய நெடிய அம்புகளை (இலக்குவன்மேல்) செலுத்தினுன். நெருப்பின் தன்மையனவாகிய அக்கணைகள் (அகன்ற) வானமும் இடத்திற் சிறியதாய்ச் சுருங்குமாறு (எவ்விடத்தும்) பரவிச் செறிந்தன. வள்ளலாகிய இலக்குவனும் வெகுளியால் உள்ளங் கொதிப்புற்றவனுய் அக்கணைகளைத் தன் அம்புகளால் மறைந்தொழியுமாறு செய்தனன்.

கு :—பண்டுடை வரந்தனின் வளர்வன நெடுஞ்சரம் துரந்தனன்; நெருப்பின் தோற்றத்த (அவை) விசும்பு இடை ஒடுங்கப் பரந்தன; வள்ளலும் முனிவு காந்துவான் அவற்றைக் கணைகளால் கரந்தனன் எனமுடிக்க. மேற் செய்யுளில் உள்ள தாருகன் என்னும் எழுவாய் இங்கும் வருவித்துரைக்கப்பட்டது. இடை - இடம். ஒடுங்குதல் - சுருங்குதல்; சிறியதாதல். கரத்தல் - மறைந்தொழியச் செய்தல். (122)

7979. அண்ணறன் வடிக்கணை துணிப்ப வற்றவன்
கண்ணக னெடுந்தலை விசையிற் காரென
விண்ணிடை யார்த்தது விரைவின் மெய்யுயிர்
உண்ணிய வந்தவெங் கூற்று முட்கவே.

அண்ணல்தன் வடிக் கணை துணிப்ப, அற்று அவன்
கண் அகல் நெடுந் தலை, விசையின் கார் என,
விண்ணிடை ஆர்த்தது, விரைவில் மெய் உயிர்
உண்ணிய வந்த வெங் கூற்றும் உட்கவே.

பொ :—பெருமையுடையோனுகிய இலக்குவனது கூரிய அம்பு விரைவில் துண்டித்தலால் அறுபட்டு அத்தாருகனது இடமகன்ற நீண்ட தலையானது, உடம்பினின்று உயிரைக் கவர்ந்துண்ண

விரைவில் வந்த கொடுமையுடைய கூற்றுவனும் உள்ளந் துணுக்குற்று அஞ்சுமாறு வானின்கண் மேகத்தின் முழக்கத்தினை யொத்து ஆரவாரித்தது.

கு :—அண்ணல் என்றது, பெருமையிற் சிறந்தோனாகிய இலக்குவனை. வடிக்கணை - கூரிய அம்பு. அவன் என்றது தாருகனை. அவன் நெடுந்தலை, கணை விசையின் துணிப்ப அற்று, மெய் உயிர் விரைவில் உண்ணிய வந்த கூற்றும் உட்க விண்ணிடைக் கார் என ஆர்த்தது என்க. கார்என - மேகத்தின் முழக்கமாகிய இடியொலியை ஒத்து. உண்ணிய - உண்ண; செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். உட்குதல் - அஞ்சுதல்; (128)

இலக்குவன் தன்னை எதிர்த்து வந்த காலன் முதலிய ஐவர்களுடைய தலையைத் துணித்து அவர்தம் சேனையைச் சிதற அடித்தல்

7980. காலனுங் குலிசனுங் கால சங்கனும்
மாலியு மருத்தனு மருவு மைவரும்
சூலமுங் கணிச்சியுங் கடிது சுற்றினர்
பாலமும் பாசமு மயிலும் பற்றுவார்.

காலனும், குலிசனும், கால சங்கனும்,
மாலியும், மருத்தனும் மருவும் ஐவரும்
சூலமும் கணிச்சியும் கடிது சுற்றினர்;
பாலமும் பாசமும் அயிலும் பற்றுவார்.

பொ :—(தாருகன் இறக்கவே, அயல்நின்ற) காலன், குலிசன், காலசங்கன், மாலி, மருத்தன் எனப் பொருந்திய அரக்கர் ஐவரும், பிண்டிபாலம், பாசம், வேல் என்பவற்றைக் கையிற் பற்றியவர்களாய்ச் சூலப்படையையும் மழுப்படையையும் விரைந்து சுழற்றுவாராயினர்.

கு :—காலன், குலிசன், காலசங்கன், மாலி. மருத்தன் என்பன அரக்கருடைய பெயர்கள், கணிச்சி - மழு. பாலம் - பிண்டிபாலம் என்னும் ஆயுதம். பாசம் – எறிகயிறு. அயில் - வேல். ஐவரும், பற்றுவார், சுற்றினர் என இயையும். (124)

7981. அன்னவ ரெய்தன வெறிந்த வாயிரம்
துன்னரும் படைக்கலந் துணித்துத் தூவினான்

நன்னெடுந் தலைகளைத் துணித்து நால்வகைப்
பன்னெடுந் தானையைப் பாற நூறினான்.

அன்னவர் எய்தன எறிந்த ஆயிரம்
துன் அரும் படைக்கலம் துணித்து, தூவினான்,
நல் நெடுந் தலைகளைத் துணித்து, நால்வகைப்
பல் நெடுந் தானையைப் பாற நூறினான்.

பொ :—அவ்வரக்கர்கள் எய்தனவும் எறிந்தனவும் ஆகிய கிட்டு தற்கு அரிய ஆயிரக்கணக்கான படைக்கலங்களை யெல்லாம் (இலக்குவன், அம்புகளைத்) துண்டித்தான். அவர்தம் நல்ல (வீரத் திறம் வாய்ந்த) நீண்ட தலைகளைத் துண்டித்து (அவர்க்குத் துணை யாய் வந்த) நால்வகைப்பட்ட பலவாகிய பெருஞ்சேனைகளையும் சிதற அழித்தொழித்தான்.

கு :—அன்னவர் என்றது, காலன், குலிசன், காலசங்கன், மாலி, மருத்தன் எனமேற்குறித்த அரக்கர் ஐவரையும். எய்தன - வில்லில் தொடுத்து எய்யப்பட்ட அம்புகள், எறித்தன – கையால் வீசி எறிந்தனவாகிய சூலம் வாள், மழு முதலிய படைக்கலங்கள். துன்ன அரும் – கிட்டுதற்கு அரிய. துணித்துத் தூவினான் என்பதனைத் தூவித் துணித்தான் என விகுதி பிரித்துக் கூட்டுக பாறுதல் – சிதறுதல். நூறுதல் - அழித்தல். (125)

அதிகாயனுடைய படை வீரர்கள் 'இலக்குவனைச்
சுற்றிநின்று பொருதல்

7982. ஆண்டதி காயன்றன் சேனை யாடவர்
ஈண்டின மதகரி யேழெ ணாயிரந்
தூண்டினர் மருங்குறச் சுற்றி னார்தொகை
வேண்டிய படைக்கல முறையின் வீசுவார்.

ஆண்டு அதிகாயன் தன் சேனை ஆடவர்,
ஈண்டின மத கரி ஏழ்—எண்ணாயிரம்
தூண்டினர், மருங்கு உறச் சுற்றினார்; தொகை
வேண்டிய படைக்கலம் முறையின் வீசுவார்.

பொ :—அப்போழுது அதிகாயனுடைய சேனை வீரர்களாகிய அரக்கர்கள் பலவாய் வந்து கூடிய நாற்பத்தெண்ணாயிரம் மதயானை களை(ப் போரிற்) செலுத்தியவர்களாய்த் தொகுதியாக(த் தாம்)

விரும்பிக் கொண்ட ஆயுதங்களை முறையே வீசுபவர்களாய் (இலக்குவனது) அருகே வந்து சூழ்ந்து கொண்டார்கள்.

கு :—ஆண்டு – அப்பொழுது. ஆண்பாலாரைக் குறித்த ஆடவர் என்ற பெயர் இங்கு வீரர் என்ற பொருளில் ஆளப்பெற்றது. ஈண்டுதல் – பலவாய் வந்து கூடுதல். ஏழ் எண்ணுயிரம் - நாற்பத் தெண்ணுயிரம், தூண்டுதல் – செலுத்துதல். சேனை ஆடவர், தொகை வேண்டிய படைக்கலம் முறையின் வீசுவார், மருங்குஉறச் சுற்றினுர் என இயையும். (126)

7983. போக்கிலா வகைபுறம் வளைத்துப் பொங்கினுர்
தாக்கினுர் திசைதொறுந் தடக்கை மால்வரை
நூக்கினுர் படைகளா னுறுக்கி னுர்குழம்
பாக்கினுர் கவிகடங் கழுவை யார்ப்பினுர்.

போக்கு இலா வகை புறம் வளைத்துப் பொங்கினுர்,
தாக்கினுர், திசை தொறும், தடக்கை மால்வரை
நூக்கினுர் ; படைகளால் நுறுக்கினுர், குழம்பு
ஆக்கினுர் கவிகள்தம் குழுவை ; ஆர்ப்பினுர்.

பொ :—(அதிகாயன் படை வீரர்கள்) ஆரவாரித்தவர்களாய் (வானர சேனை) தப்பிப் போகாதவாறு புறத்தே வளைத்துக்கொண்டு சினம் பொங்கியவர்களாய்த் திசைகள்தோறும் பெரிய கையினை யுடைய பெரியமலைபோலும் யானைகளைச் செலுத்தியவர்களாய்த் தாக்கி அழித்தார்கள். குரங்குகளின் கூட்டத்தைப் படைக்கலங் களால் நையப்புடைத்தவர்களாய் (உருச்சிதைய)க் குழம்பாக் கினுர்கள்.

கு :—மேற்செய்யுளில் உள்ள 'சேனையாடவர்' என்பது, ஈண்டும் எழுவாயாக வருவித்துரைக்கப்பட்டது. அதிகாயன் சேனை ஆடவர், ஆர்ப்பினுர், புறம் வளைத்துப் பொங்கினுர், திசைதொறும் தடக்கை மால்வரை நூக்கினுர் தாக்கினுர், கவிகள்தம் குழுவைப் படைகளால் நுறுக்கினுர் குழம்பாக்கினுர் என இயைத்துரைக்க. தாக்குதல் - மோதி அழித்தல், நூக்குதல் - செலுத்துதல். நுறுக்குதல் - நையப் புடைத்தல். குழம்பாக்குதல் – உருச்சிதையக் குழைத்தல். கவிகள் தம்குழு - குரங்குக் கூட்டம். (127)

7984. எறிந்தன வெய்தன வெய்தி யொன்றொடொன்
றறைந்தன வசனியின் விசையி னாசைக
ணிறைந்தன மழையென நெருக்கி நிற்றலான்
மறைந்தன வுலகொடு திசையும் வானமும்.

எறிந்தன, எய்தன, எய்தி, ஒன்றொடு ஒன்று
அறைந்தன, அசனியின் விசையின் ஆசைகள்
நிறைந்தன, மழை என நெருக்கி நிற்றலால்,
மறைந்தன, உலகொடு திசையும் வானமும்.

பொ :—(வானர வீரர் பறித்து) எறிந்தனவாகிய மலைகளும் (அரக்கர் வில்லில் தொடுத்து) எய்தனவாகிய அம்புகளும் சென்று ஒன்றோடொன்று இடியினை யொத்து வேகத்தால் மோதித்தாக்கின வாய்த் திசைகள்தோறும் நிறைந்தனவாகி மேகக்கூட்டம் போன்று நெருக்கிமீதூர்ந்து நிற்றலால், நிலவுலகோடு திசைகளும் வானமும் (கட்புலப்படாது) மறைவுற்றன.

கு :—எறிந்தன எய்தன, எய்தி ஒன்றோடு ஒன்று அசனியின் விசையின் அறைந்தன, ஆசைகள் நிறைந்தன, மழையென நெருக்கி நிற்றலால், உலகொடு திசையும் வானமும் மறைந்தன என இயைத்துரைக்க. எறிதல் – கையிற் பற்றி வீசுதல். எய்தல் - வில் நாணில் தொடுத்து விடுத்தல். எறிதற்கு வினைமுதல் வானரரும், எய்தற்கு வினைமுதல் அரக்கரும் எனக் கொள்க. அசனி – இடியேறு. அறைதல் - மோதுதல், ஒலித்தல். ஆசை - திசை. மழை - மேகம். (128)

## இலக்குவன் தன்னை எதிர்த்தாரைத் தாக்கி, அவர்தம் யானைப் படையை அழித்து ஒழித்தல்

7985. அப்படை யனைத்தையு மறுத்து வீழ்த்தவர்
துப்புடைத் தடக்கைக டுணித்துச் சுற்றிய
முப்புடை மதமலைக் குலத்தை முட்டினன்
எப்புடை மருங்கினு மெரியும் வாளியான்.

அப் படை அனைத்தையும் அறுத்து விழ்த்து, அவர்
துப்புடைத் தடக் கைகள் துணித்து, சுற்றிய
முப் புடை மத மலைக் குலத்தை முட்டினன்—
எப் புடை மருங்கினும் எரியும் வாளியான்.

பொ :—தீயுமிழும் அம்புகளையுடையனான இலக்குவன், (பகைவர் செலுத்திய) அந்தப் படைக்கலங்களையெல்லாம் அறுத்துத் தள்ளி, அவ் அரக்கர்களின் வன்மையுடைய பெரிய கைகளைத் துண்டித்துத் தன்னைச் சூழ்ந்து வளைத்துக்கொண்ட மும்மதங்களையுடைய மலையின் கூட்டம் எனத்தகும் யானைகளை எல்லாப் பக்கங்களிலும் (அம்பெய்து) தாக்கினான்.

கு :—எரியும் வாளியான் என்றது. தீயுமிழும் கணைகளையுடையனாகிய இலக்குவனை. அவர் என்றது, அவ்வரக்கர்களை. துப்பு - வலிமை. துணித்தல் – துண்டித்தல் ; அறுத்தல், சுற்றுதல்-சூழ்ந்து வளைத்துக் கொள்ளுதல். முப்புடை மதம் - (கன்னம், கபோலம், பீஜம் என்னும்) மூவிடங்களிற் சொரியும் மதநீர். மதத்தையுடைய மலைபோலும் யானைகளை மதமலை எனக் குறித்தார், முட்டுதல் - தாக்குதல். (129)

7986. குன்றன மதகரி கொம்பொடு கரமற
★ வன்றலை துமிதர மஞ்சென மறிவன
ஒன்றல வொருபது மொன்பது மொருகணை
சென்றரி தரமழை சிந்துவ மதமலை.

குன்று அன மத கரி, கொம்பொடு கரம் அற,
வன் தலை துமிதர, மஞ்சு என மறிவன
ஒன்று அல; ஒருபதும் ஒன்பதும்,—ஒரு கணை
சென்று அரிதர,—மழை சிந்துவ மத மலை.

பொ :—குன்றத்தை யொத்த பரு வடிவினையுடைய மதயானைகள் (இலக்குவன் எய்த) ஓரம்பு சென்று அரிந்தமையால் தந்தங்களுடன் துதிக்கையும் அறுபட, வலிய தலை துணிக்கப்பட மேகம் போல் வீழ்வன, ஒன்று என்னும் எண்ணுட்பட்டன அல்ல; மதமழை சொரியும் மலைபோலும் அவ் யானைகள் ஒருபதும் ஒன்பதும் எனப் பலவாகும்.

கு :—மதகரி, ஒருகணை சென்று அரிதர, கொம்பொடு கரம் அற, வன்தலை துமிதர, மஞ்சு என மறிவன, ஒன்று அல ; ஒருபதும் ஒன்பதும் ஆம் என ஆக்கச் சொல் வருவித்து முடிக்க. கொம்பு - தந்தம். மஞ்சு - மேகம். மறிதல் - விழுதல். மலை என்பது உவம ஆகுபெயரால் யானையை உணர்த்தி நின்றது. இலக்குவன் எய்த அம்புகள் ஒவ்வொன்றும் ஒருபதும் ஒன்பதும் என்னும் எண்ணினவாகிய பல யானைகளைத் தடிந்து வீழ்த்தின என அவனது

விற்றொழில் வன்மையை வியந்துரைத்தவாறு. இது முதல் பதினொரு செய்யுட்கள், நெகிழ்ந்த ஓசையினவாகிய நெட்டெழுத்துக்கள் விரவாது குற்றெழுத்துக்களால் இயன்று இடையறவுபடாது முடுகிய ஓசையினையுடையனவாய் வருதலின். உருட்டு வண்ணத்தின்பாற் படுவன. 'உருட்டு வண்ணம் அராகந் தொடுக்கும்' (தொல் – செய்யுளியல் - 232) என்றார் தொல்காப்பியனாரும். அராகம் – முடுகியல். நெகிழாது உருண்ட ஓசையினையுடைய இது, குறுஞ்சீர் வண்ணத்தின் வேறும் எனக் குறித்து,

" உருகெழு முருகிய முருமென வதிர்தொறு
மருகெழு சிறகொடு மணவரு மணிமயில் "

என இவ்வோசையினையே உருட்டு வண்ணத்திற்கு இலக்கியமாக நச்சினார்க்கினியர் எடுத்துக் காட்டியுள்ளமை இங்குக் கூர்ந்து நோக்கத்தகுவதாகும். (130)

7987. ஒருதொடை விடுவன வுருமுறழ் கணைபட
இருதொடை புரசையொ டிறுபவ ரெறிபடை
விருதுடை நிருதர்கண் மலையென விழுவர்கள்
பொருதுடை வனமத மழையன புகர்மலை.

ஒரு தொடை விடுவன உரும் உறழ் கணைபட
இரு தொடை புரசையொடு இறுபவர், எறிபடை
விருதுடை நிருதர்கள், மலை என விழுவர்கள் ;
பொருது உடைவன, மத மழையன புகர் மலை.

பொ :—எறிகின்ற படைக்கலங்களையும் வெற்றிச் சிறப்பாகிய அடையாளத்தினையும் உடைய அரக்கர்கள், (இலக்குவனால்) ஒரே தொடுப்பில் எய்யப்படுவனவாகிய அம்புகள் பட்டமையால் (தம்முடைய) இரண்டு தொடைகளும் யானைக் கழுத்திடு கயிற்றுடன் துணிக்கப்பட்டு மலை போன்று (யானையிலிருந்து கீழே) விழுவார்கள் ; (அவர்கள் ஏறிச் செலுத்திய) மதப்பெருக்கினையுடையனவாகிய புள்ளிகளையுடைய மலைபோலும் யானைகள் தாமும் பொருது நிற்கலாற்றாது தோற்றுப் பின்னிடுவன வாயின.

கு :—எறிபடை விருதுடை நிருதர்கள், கணைபட, இருதொடை புரசையொடு இறுபவர், மலையென விழுவர்கள் எனவும், மதமழையன புகர்மலை. பொருது உடைவன எனவும் இருதொடராக இயைத்துரைக்க, ஒரு தொடை – வில் நாணில் ஒரே முறை தொடுத்து எய்தல். ஒரே தொடுப்பில் எய்யப்பட்ட அம்புகள் யானை

வீரர்களின் துடைகள் இரண்டையும் துண்டித்தன என முரண் அணி அமையக் கூறிய நயம் உணர்க. புரசை - யானையின் கழுத்திடு கயிறு. விருது - வெற்றிச் சிறப்பினைக் குறிக்கும் அடையாளம். உடைதல் - தோற்றுப்பின் செல்லல். (131)

7988. பருமமு முதுகிடு படிகையும் வலிபடர்
மருமமு மழிபட நுழைவன வடிகணை
உருமினும் வலியன வுருள்வன திசைதிசை
கருமலை நிகர்வன கதமலை கனல்வன.

பருமமும், முதுகு இடு படிகையும், வலி படர்
மருமமும், அழிபட, நுழைவன, வடி கணை-
உருமினும் வலியன; உருள்வன, திசை திசை,
கருமலை நிகர்வன;—கதமலை கனல்வன.

பொ :—இடியினும் வலியனவாகிய கூரிய அம்புகள், (யானையின்) கழுத்திலிடப் பெற்ற மெத்தையும் முதுகின் மேல் இடப்பட்ட தவிசும் வலிமை பொருந்திய உயிர்நிலையாகிய அங்கமும் அழிந்து சிதையும் படி (தைத்து) உள்ளே புக்கன. (அதனால்) தீயினைப் போன்று பொங்கிக் கிளரும் மலை போன்றனவாகிய வெகுளிமிக்க யானைகள், திசைகள்தோறும் உள்ள கருமை நிறம் வாய்ந்த மலைகளையொத்தன வாய், (நிலத்தில்) உருண்டு கிடந்தன.

கு :—உருமினும் வலியன வடிகணை, பருமமும் படிகையும் மருமமும் அழிபட நுழைவன எனவும், கனல்வன கதமலை. திசை திசை கருமலை நிகர்வன உருள்வன எனவும் இயையும். கதமலை என்பது ‘அடியளந்தான் தாஅயது' (திருக்குறள் - (610) என்புழிப் போன்று யானை என்னும் பெயரளவாய் நின்றது. பருமம் - யானை யின் கழுத்தில் இடப்படும் மெத்தை. படிகை - யானையின் முதுகின் மேல் இடப்படும் தவிசு மருமம் - உயிர்நிலை. (132)

7989. இறுவன கொடியவை யெறிவன விடையிடை
துறுவன சுடுகணை துணிவன மதகரி
அறுவன வவையவை கடவின ரடிதலை
வெறுமைகள் கெடுவன விழிகுழி கழுதுகள்.

இறுவன கொடியவை, எறிவன இடை இடை
துறுவன சுடுகணை, துணிவன மதகரி;

அறுவன, அவை அவை கடவினர் அடி தலை;
வெறுமைகள் கெடுவன, விழி குழி கழுதுகள்.

பொ:—பிளப்பனவாய்ச் சுட்டழிக்கவல்ல அம்புகள், (பகைவர் சேனையின்) இடையிடையே நெருங்கிச் செல்வன; (அவற்றால்) கொடிகளின் தொகுதிகள் இற்று வீழ்வன; மதயானைகள் துணிக்கப் படுவன; அவ்வவ் யானைகளை யூர்ந்து நடத்திச் செல்லும் வீரர்களின் கால்களும் சிரங்களும் அறுபடுவன; குழிந்தாழ்ந்த கண்களையுடைய பேய்கள், (அங்கு வீழ்ந்த பிணத்தினைப் பெற்றுத்) தம் வெறுமைத் துன்பங்கள் கெட்டொழியப் பெறுவனவாயின.

கு:—எறிவன சுடுகணை, இடை இடை துறுவன; கொடி அவை இறுவன; மதகரி துணிவன; அவை அவை கடவினர், அடி தலை அறுவன; விழிகுழி கழுதுகள் வெறுமைகள் கெடுவன என இயைத்துப் பொருள் கொள்க. கொடி அவை - கொடிகளின் தொகுதிகள். எறிதல் – பிளத்தல். துறுதல் - நெருங்கிச் செறிதல். கடவுதல் - செலுத்துதல். அடி தலை - கால்களும் தலைகளும். வெறுமைகள் - நுகரப்படுவன சிறிதுமின்றி வறுமையுற்றமையால் உளவாம் பசி நோய் முதலிய துன்பங்கள். கெடுதல் - நீங்கப் பெறுதல். கழுது – பேய். (133)

7990. மிடலொடு விடுகணை மழையினு மிகையுள
படலொடு முருமெறி பருவரை நிலையன
வுடலொடு முருள்கரி யுதிரம துருகெழு
கடலொடு பொருதது கரியொடு கரியென.

மிடலொடு விடு கணை மழையினும் மிகை உள
படலொடும், உரும் எறி பரு வரை நிலையன,
உடலொடும் உருள் கரி உதிரமது, உருகெழு
கடலொடு பொருதது, கரியொடு கரி என.

பொ:—(இலக்குவனால்) வலிமையுடன் விடப்பட்ட அம்புகள் மழையின் பெருக்கத்தைக் காட்டிலும் மிகுதியானவை பட்டவுடனே இடியினால் தாக்கப்பட்ட பருத்த மலையின் தன்மையினையுடையனவாய் உடம்புடன் உருண்டு செல்லும் யானைகளின் இரத்த வெள்ளமானது யானையோடு யானை போரில் எதிர்த்துத் தாக்குவதைப் போன்று அஞ்சத்தக்க கடல் நீருடன் மோதிப் பொருவதாயிற்று.

கு :—மிடல் - வலி. உரும் - இடி. எறிதல் - தாக்குதல். பருவரை நிலையன உடலொடும் உருள் கரிஉதிரமது, கரியொடு கரியென உருகெழ கடலொடு பொருதது என இயையும். உதிரம் - இரத்தம். அது, பகுதிப் பொருள் விகுதி. உரு - அச்சம். இலக்குவன் தன்வன்மை புலப்படுமாறு ஏவிய அம்புகள் பட்ட அளவில் இடியினால் தாக்குண்ட மலைகளைப் போன்று வீழ்ந்து உருண்ட யானைகளின் உடம்புகளை யீர்த்துக்கொண்டு செல்லும் இரத்தவெள்ளம், யானையுடன் யானைமுட்டிப் பொருது நிற்பதனை யொத்துக் கடல் நீருடன் எதிர்த்து நின்றது என்பதாம். (134)

7991. மேலவர் படுதலின் விடுமுறை யிலமிடல்
ஆலமு மசனியு மனையன வடுகரி
மாலுறு களியன மறுகின மதமழை
போல்வன தமதம வெதிரெதிர் பொருவன.

மேலவர் படுதலின், விடும் முறை இல, மிடல்
ஆலமும் அசனியும் அனையன, அடு கரி
மால் உறு களியன மறுகின மத மழை
போல்வன, தமதம எதிர் எதிர் பொருவன.

பொ :—மேலே அமர்ந்திருந்து (தம்மைச்) செலுத்தும் வீரர்கள் (இலக்குவன் அம்பினால்) இறந்துபட்டமையால் (பாகராற்) செலுத்தும் முறைமை இழந்தனவும், வன்மையினால் ஆலகால நஞ்சினையும் இடியேற்றினையும் போலும் கொடுமை வாய்ந்தனவுமாகிய கொல்லுந் தொழிலையுடைய யானைகள், மயக்கம் மிகுகின்ற மதக்களிப்பினை யுடையனவாய் மழையினையொத்தமிக்க மதநீரைச் சொரிந்து தத்தமக்குள்ளேயே எதிர்த்துப் போர் புரிவனவாய்க் கலக்கமுற்றன.

கு :—விடுமுறை இல, ஆலமும் அசனியும் அனையன. அடுகரி, மாலுறுகளியன மழைபோல் மதத்தன; தமதம எதிரெதிர் பொருவன என இயைத்துப் பொருள் கொள்க. மேலவர் – மேலே ஏறியமர்ந்து செலுத்தும் யானை வீரர். படுதல் - இறத்தல். ஆலம் – ஆலகால நஞ்சு. அசனி - இடி. மறுகுதல் - மனங்கலங்குதல். (135)

7992. கால்சில துணிவன கரமறு வனகதழ்
வால்சில துணிவன வயிறுகள் வெளிபட
நால்சில குடரன நகழ்வன சிலவரு
தோல்சில கணைபல சொரிவன மழையன.

கால் சில துணிவன ; கரம் அறுவன ; கதழ்
வால் சில துணிவன ; வயிறுகள் வெளிபட,
நால் சில குடரன ; நகழ்வன சில—வரு
தோல் சில, கணை பல சொரிவன மழையன.

பொ :—மழையினையொத்து அம்புகள் பல சொரியப்பட்டனவாய் வரும் யானைகள் கால் துணிக்கப்பட்டன சில ; துதிக்கை அற்றன சில ; விரைவுடன் கூடிய வால் துணிக்கப்பட்டன சில ; வயிறுகள் வெளிப்பட்டுத் தோன்றத் தொங்குங் குடர்களை யுடையன சில ; (அம்புகள் தைத்து ஊன்ற) அழுந்தி வருந்துவன சில ஆயின.

கு :—மழையெனக் கணைபல சொரிவன வருதோல், கால் துணிவன சில ; கரம் அறுவன சில ; வால் துணிவன சில ; வயிறுகள் வெளிபட நால் குடரன சில ; நகழ்வன சில ஆம் என ஆக்கச்சொல் வருவித்து முடிக்க. தோல் - யானை ; பால்பகா அஃறிணைப் பெயராதலின் பன்மை முடிபு கொண்டது. நாலுதல் - தொங்குதல். நகழ்தல் - அழுந்தி வருந்துதல் ; இச்சொல் இப் பொருட்டாதல், 'நகழமால் வரைக் கீழிட் டரக்கர்கோனை நலனழித்து' (6-13-10) எனவரும் திருத்தாண்டகத் தொடரால் அறியப்படும்.
(136)

7993. முட்டின முட்டற முரணுறு திசைநிலை
யெட்டினு மெட்டரு நிலையன வெவையவன்
விட்டன விட்டன விடுகணை படுதொறும்
பட்டன பட்டன படர்பணை குவிவன.

முட்டின முட்டு அற, முரண் உறு திசை நிலை
எட்டினும் எட்ட அரு நிலையன எவை ? அவன்
விட்டன வீட்டன விடுகணை படுதொறும்
பட்டன பட்டன, படர் பணை குவிவன.

பொ :—(தாம்) மோதித் தாக்கின தாக்குதல் நீங்க வலிமிக்க திசைகளில் நிற்றலையுடைய எட்டு யானைகளாலும் நெருங்குதற்கு அரிய வன்மைநிலை பெற்றனவாக (அதிகாயனது சேனையில்) உள்ள யானைகள் யாவை (அவையனைத்தும்) அவ் இலக்குவன் அடுத் தடுத்துத் தொடுத்து எய்துவிட்டனவாகிய அம்புகள் படுந்தோறும் கிளைத்து நீண்ட தந்தங்கள் (நிலத்தில்) நெருங்கக் கூடியனவாய் (க்குப்புற வீழ்ந்து) அடுத்தடுத்து விரைந்து இறந்தொழிந்தன.

கு :—முரண்உறு திசைநிலை எட்டினும் எட்ட அரு நிலையன எவை (அவை), அவன் விட்டன விட்டன விடுகணை படுதொறும் படர்பணை குவிவன பட்டன பட்டன என இயைத்துரைக்க. முட்டுதல் – பகைகொண்டு மோதித் தாக்குதல், முட்டுஅற – தாக்குதல் நீங்க. முரண்உறு – வலிமிக்க. திசைநிலை எட்டு – திசைகளில் நிற்றலையுடைய எட்டு யானைகள். எட்டு, எண்ணுகு பெயர். எட்டினும் – எட்டு யானைகளாலும். இன்னுருபு ஆனுருபின் பொருளில் வந்தது. எட்ட அரு நிலையன – நெருங்குதற்கு ஒண்ணாத வன்மைநிலை பெற்றன, என்றது, அதிகாயனது சேனையுடன் வந்த ஆற்றல்மிக்க யானைகளை. எவை என்னும் வினுக்குறிப்பினால் அவை என்னும் சுட்டு, எழுவாயாக வருவித்துரைக்கப்பட்டது. திசை யானைகளாலும் எதிர்த்து நிற்க ஒண்ணாதனவாய் அதிகாயனது சேனையிலுள்ள ஆற்றல்மிக்க யானைகள் யாவும் இலக்குவன் இடைவிடாது எய்த அம்புகள்பட்டு நிலத்திற்குப்புற வீழ்ந்து அடுத்தடுத்து விரைந்து இறந்தொழிந்தன என்பதாம். அவன் என்றது, இலக்குவனை. விட்டன விட்டன, பட்டன பட்டன என்பன விரைவுப் பொருளில் வந்த அடுக்குகள். படர்தல் - கிளைத்து நீளுதல். பணை - தந்தம். குவிதல் – நெருங்கக்கூடுதல். படர்பணை குவினவாய்ப் பட்டன என்க. (137)

அரக்கர் மீண்டும் யானைப்படை கொண்டு எதிர்க்க,
இலக்குவன் அவற்றை அழித்து வெற்றி கொள்ளுதல்

7994. அறுபதின் முதலினோ டாறமை யாயிரம்
இறுதிய மதகரி யிறுதலு மெரியுமிழ்
தறுகணர் தகையறு நிலையினர் சலமுறு
கறுவின ரவனெதிர் கடவினர் கடலென.

அறுபதின் முதலினோடு ஆறு அமை ஆயிரம்
இறுதிய மதகரி இறுதலும், எரி உமிழ்
தறுகணர், தகை அறு நிலையினர், சலம் உறு
கறுவினர், அவன் எதிர் கடவினர், கடல் என.

பொ :—அறுபத்தாறாயிரம் என்னும் தொகையினவாகிய மத யானைகள் (இலக்குவனுடைய அம்புகள்பட்டு) இறந்தொழிதலும் தீயுமிழும் கண்களையுடையவரும் அஞ்சாமையுடையவரும் (பகைவரால்) தடுத்தல் அற்ற நிலையில் (போரில் ஊன்றி) நிற்பவரும் வெகுளியால் மிக்க செற்றமுடையவரும் ஆகிய அரக்கர்கள், அவ்

இலக்குவனுக்கு எதிரே கடல் போலும் யானைப் படைகளை (மீண்டும்) செலுத்தினார்கள்.

கு :—அறுபதின் முதலினோடு ஆறு அமை ஆயிரம் இறுதிய என்றது, அறுபது என்னும் எண்ணினை முதலாகக் கொண்டு ஆறாகப் பொருந்திய ஆயிரம் என்னும் எண்ணினை முடிவாகவுடைய அறுபத்தாறாயிரம் என்னும் தொகையினை. இறுதல்-இறந்தொழிதல். எரியுமிழ் கணர்தறு கணர் எனக் கண்ணர் என்பதனை ஈரிடத்தும் சேர்க்க. பகைப்படையால் தடுத்தல் அற்ற நிலையிற் போர்க்களத்தே ஊன்றி நிலை கொண்டவர் என்பார், தகையறு நிலையினர் என்றார். சலம்-வெகுளி. கறுவு-செற்றம்; மனவயிரம். (138)

7995. எல்லையின் மதகரி யிரவின தினநிகர்
செல்வன முடிவில தெறுதொழின் மறவனை
வில்லியை யினிதுற விடுகணை மழையினர்
கொல்லுதி யெனவெதிர் கடவினர் கொடியவர்.

எல்லை இல் மதகரி, இரவினது இனம் நிகர்
செல்வன, முடிவு இல, தெறு தொழில் மறவனை
வில்லியை இனிது உற விடுகணை மழையினர்
'கொல்லுதி' என, எதிர் கடவினர்—கொடியவர்.

பொ :—கொடியோராகிய அரக்கர்கள், (எளிதில்) அழியாதனவற்றையும் அழிக்குந் தொழிலில் வல்ல பெருவீரனும் வில்லாளியும் ஆகிய இலக்குவனை நன்கு பொருந்தும்படி விடப்படும் அம்பு மழையைச் சொரிந்தவர்களாய், (இவற்றைக்) 'கொல்வாய் (பார்ப்போம்)' என்று கூறிக்கொண்டு, இரவுப் பொழுதின் கூட்டத்தை யொத்துச் செல்லும் அளவற்ற மதயானைகளை (அவனுக்கு) எதிரே செலுத்தினார்கள்.

கு :—கொடியவர், முடிவு இலதெறு தொழில் மறவனை-வில்லியை இனிது உற விடுகணை மழையினர், 'கொல்லுதி' என, இரவினது இனம் நிகர் செல்வன எல்லைஇல் மதகரி எதிர் கடவினர் என இயையும். கொடியவர் - கொடுந் தொழிலாளராகிய அரக்கர்கள். இருள்நிற முடையனவாய்ச் செல்லும் யானைகளுக்கு, இருள் செறிந்த இரவுப்பொழுதின் தொகுதியை உவமை கூறினார். முடிவு இல-(எளிதில்) அழிதல் இல்லாத ஆற்றல் மிக்க சேனைகள். தெறுதல்-அழித்தல். மறவன், வில்லி என்றது இலக்குவனை. 'கொல்லுதி' என்றது, இலக்குவனை நோக்கி அரக்கர் கூறிய அறை கூவல். கடவுதல்-செலுத்தல். (139)

7996. வந்தன மதகரி வளைதலின் மழைபொதி
செந்தனி யொருசுட ரெனமறை திறலவ
னிந்திர தனுவென வெழுசிலை குனிவுழி
தந்தியி னெடுமழை சிதறின தரையன.

வந்தன மதகரி வளைதலின், மழை பொதி
செந்தனி ஒரு சுடர் என மறை திறலவன்,
இந்திரதனு என எழு சிலை குனிவுழி,
தந்தியின் நெடுமழை சிதறின, தரையன.

பொ :—(அரக்கர்களால் ஏவப்பட்டு) எதிர் வந்தனவாகிய மத யானைகள் (தன்னைச்) சூழ்ந்து வளைத்துக் கொண்டமையால், கரு மேகங்களால் மூடப்பெற்ற செந்நிறமுடைய ஒப்பற்ற கதிரவனைப் போன்று மறைக்கப்பெற்ற ஆற்றல் மிக்கோனாகிய இலக்குவன் தனது நீண்ட வில்லினை (நாணேற்றி) இந்திர வில்லினை யொத்துத் தோன்ற வளைத்தபொழுது, யானைத் திரளாகிய நீண்ட மழை மேகங்கள் சிதறியோடினவாய்த் தரையிற்பட்டன.

கு :—கருநிறமுடைய மத யானைகளாற் சூழ்ந்து வளைக்கப்பட்டு அக்கூட்டத்தினுள்ளே மறைந்து தோன்றும் ஒளிமிக்க சிவந்த மேனியனாகிய இலக்குவனுக்குக் கருமேகங்களால் மறைக்கப்பட்டுத் தோன்றும் செங்கதிரோனையும் அவனால் வளைக்கப்பட்ட ஒளியுடை வில்லுக்கு வானத்தில் தோன்றும் இந்திர வில்லையும் உவமை கூறிய நயம் உணர்ந்து மகிழத்தக்கதாகும். குனிவுழி - வளைத்தபொழுது. குனித்தல் – வளைத்தல். இலக்குவன் தன் கையிலுள்ள வில்லை வளைத்த அளவிலேயே அவனை வளைத்து நின்ற யானைகளாகிய மழை மேகங்கள் பல விடங்களிலும் சிதறியோடித் தரையிற்பட்டன என்றது, தொழிற்குறை விசேடம் என்னும் அணிநலம் அமைந்ததாகும். தந்தியின் நெடுமழை - யானைகளாகிய நீண்ட மழை மேகங்கள். இன், அல்வழி வந்த சாரியை. (140)

7997. மையற்றழை செவிமுற்பொழி
மழைபெற்றன மலையின்
மெய்பெற்றன கடலொப்பன
வெயிலுக்கன விழியின்

மொய்பெற்றுயர் முதுகிற்றன
முகமுக்கன முரண்வெங்
கையற்றன மதமுற்றிய
கதமற்றில களிமா.

மையல் தழை செவி முன்பொழி மழை பெற்றன, மலையின் மெய் பெற்றன, கடல் ஒப்பன, வெயில் உக்கன விழியின் மொய் பெற்று உயர் முதுகு இற்றன; முகம் உக்கன; முரண் வெம் கை அற்றன ; மதம் முற்றிய கதம் அற்றில—களிமா.

பொ :—மத மயக்கத்தால் தழைத்த செவியின் முன்னே சொரியும் (மதநீராகிய) மழையைப் பெற்றனவும், மலைபோலும் (பெரிய) உடம்பினை யுடையனவும், (நிறத்தால்) கருங்கடலை ஒத்தனவும், கண்களில் வெம்மையைச் சிந்துவனவும் ஆகிய மதம் நிறைந்த களிப்பு மிக்க யானைகள் (இலக்குவன் எய்த அம்புகளால்) வன்மையுடையனவாய் உயர்ந்த முதுகு ஒடிதலுற்றன; முகம் சிதைதலுற்றன: வலிய வெம்மையுடைய துதிக்கை அறுபட்டன; (ஆயினும், போரில் தாம் கொண்ட) சினம் தவிர்ந்தில.

கு :—அரக்கரால் இலக்குவன்மேற் செலுத்தப்பட்ட மத யானைகள், இலக்குவனுடைய அம்புகளால் முதுகு ஒடிந்தும் முகம் சிதைந்தும் துதிக்கை யறுபட்டும் வீழ்ந்தனவாயினும் போர் முகத்துத் தாம் கொண்ட வெகுளி மட்டும் தணியப் பெற்றில என்பதாம். இது, யானை மறம் என்னும் புறத்துறையின் பாற்படும். மையல்-மதமயக்கம். மொய்-வலிமை. கதம்-வெகுளி. (141)

இச் செய்யுளின்பின், 23, 26, 43, 44, 70, 71-ஆம் பிரதிகளில் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகிறது :—

7997 (a) மழையுற்றன முகிலொப்பன செவிமும்மத வழியே
விழவுற்றன வெறிவெங்கணை நிமிரப்பொறி சிதற
முழையுற்றன முகில்சிந்தின முன்பேறில முடிய
வுழையுற்றன வுலவும்படி யுலவுற்றன கரிகள்.

7998. உண்ணின்றலை யலைநீருக
விறுதிக்கடை யுறுகால்
எண்ணின்றலை நிமிர்கின்றன
விகல்வெங்கணை யிரணப்

பண்ணின்படர் தலையிற்பட
மடிகின்றன பலவா
மண்ணின்றலை யுருள்கின்றன
மழையொத்தன மதமா.

உள் நின்று அலை அலைநீர் உக இறுதிக் கடை உறு கால்
எண்ணின் தலை நிமிர்கின்றன இகல் வெங்கணை, இரணப்
பண்ணின் படர் தலையிற் பட, மடிகின்றன பல ஆம்,
மண்ணின் தலை உருள்கின்றன—மழை ஒத்தன மதமா.

பொ :—மழைப் பெருக்கினையொத்த மதநீரையுடைய யானைகள், தன் எல்லைக்குள் நின்று வீசும் அலைகளையுடைய கடல்நீர் (அவ் வெல்லை கடந்து) பெருகிப் பரவுமாறு ஊழி முடிவில் வீசும் பெருங் காற்றையொப்ப எண்ணின் வரம்பைக் கடந்து மிக்கு வரும் (இலக் குவனுடைய வலி மிக்க வெவ்விய அம்புகள், பொன்னாற் பண்ணின அலங்காரத்தையுடைய (தம்) பரந்த மத்தகத்தின் கண்ணே படுத லால் மண்ணிடத்தே வீழ்ந்து உருள்கின்றனவாகி இறந்தொழிவன பலவாகும்.

கு :—அலை-கடல். இறுதிக்கடை-ஊழிமுடிவு. உறுகால்-பெருங் காற்று; சண்டமாருதம். எண்ணின் தலை நிமிர்தலாவது, எண்ணின் வரம்பினைக் கடந்து அளவற்றனவாய் வெளிப்படுதல். இகல் வெங்கணை-வலிமையும் வெம்மையும் உடைய அம்பு; என்றது, இலக் குவனால் ஏவப்பட்ட அம்பினை. இரணம்-பொன். 'பண்' என்றது, யானையின் தலையிற் செய்யப்பட்ட அலங்காரத்தினை. படர்தலை-பரந்த மத்தகம். பட - படுதலால்; செயவெனெச்சம் காரணப் பொருளில் வந்தது. மழை யொத்தன மதமா, இகல் வெங்கணை படர்தலையிற்பட, மண்ணின் தலை உருள்கின்றன மடிகின்றன பல வாம் என முடிக்க. மண்ணின் தலை-மண்ணிடத்தே; தலை ஏழாம் வேற்றுமையுருபு. (142)

7999. பிறைபற்றிய வெனுநெற்றிய
பிழையற்றன பிறழப்
பறையற்றமில் விசைபெற்றன
பரியக்கிரி யமரர்க்

கிறையற்றைய முனிவிற்படை
யெறியப்புடை யெழுபொற்
சிறையற்றன வெனவிற்றன
சினமுற்றிய மதமா.

பிறை பற்றிய எனும் நெற்றிய, பிழை அற்றன பிறழ, பறை அற்றம் இல் விசை பெற்றன, பரியக்கிரி, அமரர்க்கு இறை, அற்றைய முனிவில் படை எறியப் புடை எழு பொன் சிறை அற்றன என, இற்றன—சினம் முற்றிய மதமா.

பொ :—கோபம் நிறைந்தனவாகிய மதயானைகள், (இலக்குவனுடைய) குறிதவறுதனவாகிய அம்புகள் (தைத்து) விளங்குதலால், பிறை மதிகள் பல பற்றியுள்ளன என்னும்படி தோன்றும் நெற்றியை யுடையவை, பறத்தலிற் சோர்வில்லாத விரைவினை யுடையனவாகிய மலைகள் வருந்துமாறு தேவர்க்கு அரசனாகிய இந்திரன் முன்னொரு நாள் கொண்ட கோபத்தால் வச்சிரப் படைகொண்டு வீச இரு பக்கத்தும் கிளைத்துள்ள அழகிய சிறகுகள் அறுபட்டனவற்றைப் போன்று அழிவுற்றுக் கிடந்தன.

கு :—சினமுற்றிய மதமா, பிழை அற்றன பிறழப் பிறைபற்றிய எனும் நெற்றிய, பறை அற்றம் இல் விசை பெற்றன கிரி பரிய, அமரர்க்கு அறை, அற்றைய முனிவின் படை எறிய, புடை எழு பொன் சிறை அற்றன என இற்றன என இயைத்துப் பொருள் கொள்க. பிழை அற்றன - குறிதவறுதன; என்றது, இலக்குவன் எய்த அம்புகளை. பிறழ்தல்-விளங்குதல். இலக்குவனால் எய்யப்பட்ட பிறைமுகப் பேரம்புகள் மத யானையின் நெற்றியில் தைத்துள்ளவை, பிறை மதிகளை யொத்துத் தோன்றின என்க. பறை-பறத்தல். அற்றம்-சோர்வு. விசை-வேகம். அமரர்க்கு இறை-இந்திரன். படை-வச்சிராயுதம். எறிதல்-வீசுதல். பொன்சிறை-அழகிய சிறகு. (143)

8000. கதிரொப்பன கணைபட்டுள
கதமற்றில கதழ்கார்
அதிரத்தனி யதிர்கைக்கரி
யளவற்றன வுளவா
லெதிர்ப்பட்டனல் பொழியக்கிரி
யிடறித்திசை யெழுகார்
உதிரத்தொடு மொழுகிக்கட
னடுவுற்றவு முளவால்.

கதிர் ஒப்பன கணைபட்டுள, கதம் அற்றில, கதழ்கார்
அதிரத் தனி அதிர் கைக் கரி அளவு அற்றன உளவால்;
எதிர்பட்டு அனல் பொழிய, கிரி இடறி, திசை எழு கார்
உதிரத்தொடும் ஒழுகி, கடல் நடு உற்றவும் உளவால்.

பொ :—ஞாயிற்றின் கதிர்களை யொத்துத் தெறும் வெம்மை மிக்க அம்புகள் தைக்கப்பட்டுள்ளனவும் வெகுளி நீங்காதனவும் ஆகி, விரைந்த மேகங்கள் நடுக்கமுறத் தனி நின்று பிளிறும் துதிக்கை யினையுடைய யானைகள், அளவற்றனவாக உள்ளன. எதிர்ப்பட்டுத் தீ வெளிப்பட மலைகளில் இடறி விழுந்து திக்குகளில் எழுகின்ற மிக்க குருதி வெள்ளத்தோடும் சென்று கடல் நடுவே புக்க யானைகளும் உள்ளன.

கு:—இலக்குவன் எய்த வெம்மை மிக்க அம்புகள் தைக்கப்பட்ட அளவற்ற யானைகளுள் பல மேகமும் நடுங்குமாறு வெளியே தீங்கா தனவாய் வீறிட்டு அலறின எனவும் அவற்றுட் சில அம்புகளால் தாக்கப்பட்டுத் தீ வெளிப்பட மலைகளில் இடறிக் குருதி வெள்ளத் தால் இழுக்கப்பட்டுக் கடலின் நடுவே சென்றன எனவும் கூறிய வாறு. கதிர் - சூரியனது ஒளிக்கற்றை. கதழ் - விரைவு. அதிர்தல்-முழங்குதல்; இச் சொல் இங்கு வீறிட்டு அலறுதலைச் சுட்டிநின்றது, (144).

8001. கண்ணின்றலை யயில்வெங்கணை
படநின்றன காணா
வெண்ணின்றலை நிமிர்வெங்கத
முதிர்கின்றன வினமா
மண்ணின்றலை நெரியும்படி
திரிகின்றன மலைபோல்
உண்ணின்றலை நிருதக்கட
லுலறிட்டன வுளவால்.

கண்ணின் தலை அயில் வெங்கணை பட நின்றன, காணா,
எண்ணின் தலை நிமிர் வெங் கதம் முதிர்கின்றன, இனமா,
மண்ணின் தலை நெரியும்படி திரிகின்றன, மலைபோல்
உள் நின்று அலை நிருதக் கடல் உலறிட்டன உளவால்.

பொ :—கண்ணிடத்தே கூரிய அம்புகள் தைக்கப்பட்டு நிற் பனவும், காணுந்தன்மை யிழந்தனவும், வெவ்விய கோபம் முதிரப்

பெற்றனவும், எண்ணற்ற தொகுதியினவும் ஆகிய யானைகள் நிலத்தின் மேலிடம் பிளவுற்றுச் சிதையும்படி திரிகின்றனவாய் மலையைப் போன்று (தம் சேனையின்) உள்ளே நின்று பொங்கி யெழுதலையுடைய அரக்கராகிய கடல் நீரை வற்றச் செய்வனவும் உள்ளன.

கு :—கண்ணின் தலை - கண்ணினிடம். எண்ணின் தலை நிமிர்தலாவது, எண் வரம்பினைக் கடந்து மேற்பட்டு அளவிலவாதல். எண்ணின் தலைநிமிர் இனமா என இயையும். கணைபட நின்றன' காணு, கதமுதிர்கின்றன, என வரும் பலவின்பால் முற்றுக்கள் 'இனமா' என்னும் பெயர் கொண்டு முடிந்தன. இனமா, மண்ணின் தலை தெரியும்படி திரிகின்றன, மலைபோல் உள்நின்று அலை நிருதக் கடல் உலறிட்டன உள என முடிக்க. ஆல்-அசை. நிருதர்-அரக்கர். அரக்கர் சேனையைக் கடலாகவும் அச் சேனையுள் நின்று கண் குருடாய் நின்று உழக்கி மிதிக்கும் யானைகளை மலையாகவும் உருவகஞ் செய்தார் ஆசிரியர். உலறிடுதல்-வற்றச்செய்தல். (145)

8002. ஓராயிர மயில்வெங்கணை
யொருகால்விடு தொடையிற்
காராயிரம் விடுதாரையி
னிமிர்கின்றன கதுவுற்
றீராயிர மதமால்கரி
விழுகின்றன வினிமேல்
ஆராய்வதெ னவன்விற்றொழி
லமரேசரு மறியார்.

ஓர் ஆயிரம் அயில் வெங்கணை, ஒருகால் விடு தொடையில்,
கார் ஆயிரம் விடு தாரையின் நிமிர்கின்றன; கதுவுற்று,
ஈராயிரம் மதமால் கரி விழுகின்றன! இனிமேல்
ஆராய்வது என்? அவன் வில் தொழில் அமரேசரும் அறியார்

பொ :—(இலக்குவன்) ஒருமுறை அம்பு தொடுத்து எய்யும் தொடுப்பினில் கருமேகம் ஆயிரக்கணக்கினவாகச் சொரியும் பெரு மழைத் தாரைகளைப் போன்று கூரிய வெம்மையுடைய ஓராயிரம் அம்புகள் வெளிப்பட்டு உயர்ந்து செல்கின்றன; (அவற்றால்) கவ்வப் பட்டு மதச்செருக்குடைய இரண்டாயிரம் யானைகள் (நிலத்தில்) வீழ்கின்றன. அவ் இலக்குவனது விற்றொழில் வன்மையினைத் தலைமைத் தேவர்களும் (இத்தன்மைத்தென) அறியும் வன்மை

யுடையாரல்லர். (அவ்வாருகவும்) இனிமேல் (நாம் அது குறித்து) ஆராய்ந்துரைப்பது எவ்வாறு ?

கு :—ஒருகால் விடுதொடையின், கார் ஆயிரம் விடுதாரையின் அயில் வெங்கணை ஒராயிரம் நிமிர்கின்றன ; கதுவுற்று மதமால்கரி ஈராயிரம் விழுகின்றன ; அவன் விற்ரெழில் அமரேசரும் அறியார் ; இனிமேல் ஆராய்வது என் ? என இயைத்துரைக்க. அமர + ஈசர் — அமரேசர் ; குணசந்தி என்னும் வடமொழிப் புணர்ச்சி. அமரேசர் — தேவர்களில் தலைவர் ; தலைமைத் தேவர். இலக்குவனது வில்தொழில் திறத்தை வானுலகில் மேனின்று காணும் வாய்ப்பினைப் பெற்ற தலைமைத் தேவர்களும் உள்ளவாறு கண்டறிந்திலரெனின் மண்ணிடத்தே வாழும் நம்மனோர் அதனை இத்தன்மையதென ஆராய்ந்துரைத்தல் இயலாது என ஆசிரியர் வியந்துரைத்தவாறு.

(146)

8003. தேருந்தெறு கரியும்பொரு
சினமள்ளரும் வயவெம்
போரின்றலை யுகள்கின்றன
புரவிக்குல மெவையும்
பேருந்திசை பெறுகின்றில
பணையின்பிணை மதவெங்
காரின்றரு குருதிப்பொரு
கடனின்றன கடவா,

தேரும், தெறு கரியும், பொரு சின மள்ளரும், வய வெம்
போரின்தலை உகள்கின்றன புரவிக் குலம் எவையும்,
பேரும் திசை பெறுகின்றில—பணையின் பிணை மத வெங்
காரின் தரு குருதிப் பொரு கடல் நின்றன கடவா.

பொ :—தேர்களும் கொல்லுந்தன்மை வாய்ந்த யானைகளும் போர் புரியும் வெகுளிமிக்க படை வீரர்களும், வலியும் வெம்மையும் வாய்ந்த போர்க்களத்தே தாவிச் செல்லுந் தன்மையினவாகிய குதிரைத் தொகுதிகளும் என (நால்வகைப்பட்ட சேனைகள்) யாவையும், (இலக்குவனுடைய அம்புகளாற் பட்டு வீழ்ந்த) பருத்த தந்தங்களோடு கூடிய மதம் பொருந்திய வெம்மையுடைய மேகம் போலும் யானைகள் சொரியும் குருதிநீர்ப் பெருக்குகள் அலைமறியும் கடல்போல் நின்றனவற்றைக் கடத்தற்கு இயலாதனவாய் இடம் பெயர்ந்து செல்லும் (வேறு) திசையைப் பெருதனவாயின.

கு :—தேர், கரி, மன்னர், புரவிக்குலம் என இருதிணைப் பெயர்களையும் விரவி எண்ணிப் பெரும்பான்மை பற்றி 'எவையும்' என அஃறிணைச் சொல்லால் முடித்தார். எவையும், பணையின் பிணைமத வெங்காரின்தரு குருதிப் பொருகடல் நின்றன கடவா, பேரும் திசை பெறுகின்றில எனமுடிக்க. தெறுதல் – கொல்லுதல். உகளுதல் – தாவுதல். புரவிக்குலம் – குதிரைத்தொகுதி. 'பணை' என்னுஞ் சொல், பருத்த கோடு என்னும் பொருளதாய் யானைத் தந்தத்தை யுணர்த்தியது. காரின்தரு என்புழி இன் அல்வழிவந்த சாரியை. அதிகாயனொடு வந்த சேனையிலுள்ள யானைகள் பலவற்றை இலக்குவன் அம்புகளாற் கொன்று வீழத்தினமையால் அவற்றின் உடல்களிலிருந்து பெருகிய குருதி வெள்ளம் அலைமறியும் கடலை யொத்து நாற்புறமும் பரவி நின்றமையால் அதிகாயனுடைய நால்வகைச் சேனைகளும் அக்குருதிக் கடல்களைக் கடந்து வேறு இடம் பெயர்ந்து செல்லுதற்கு இயலாதனவாயின என்றவாறு. (147)

## மூன்றும் முறையாக இராவணனுல் அனுப்பப்பட்ட யானைப் படைகளையும் இலக்குவன் அழித்தொழித்தல்

8004. நூறுயிர மதவெங்கரி யொருநாழிகை நுவலக்
கூறுயின பயமுற்றெரு குலைவாயின வுலகந்
தேருதன மலைநின்றன தெரியாதன சினமா
வேருயின வவையாவையு முடனேவர விட்டான்.

நூருயிரம் மத வெங்கரி, ஒரு நாழிகை நுவல,
கூறு ஆயின; பயமுற்று ஒரு குலைவு ஆயின உலகம்;
தேருதன, மலைநின்றன, தெரியாதன சினமா
வேறு ஆயின அவை யாவையும் உடனே வர விட்டான்.

பொ :—மதச் செருக்கும் கொடுமையும் உடைய ஒரு நூருயிரம் யானைகள் ஒரு நாழிகை (சென்றது) என்று சொல்லுமளவில் (இலக்குவன் எய்த அம்புகளால்) துண்டிக்கப்பட்டு இறந்தன. (அதுகண்டு) உலகிலுள்ள உயிர்கள் யாவும் அச்சங்கொண்டு ஒருங்கே நடுக்கமுறுவனவாயின. (அச்செய்தி கேட்டு வெகுண்ட இராவணன்) மதமயக்கத்தினின்று தெளியாதனவும் மலைபோல் நின்றனவும் (பிறர் யாரும் இதுவரை) கண்டறியாதனவும் ஆகிய வெகுளிமிக்க யானைகள் (சிறப்பாக) வேறு வைத்துப் பேணப் பட்டுள்ளன அவையெல்லாவற்றையும் விரைந்து வரும்படி ஒருசேர அனுப்பி வைத்தான்.

கு :—நூறாயிரம் - ஒரு லக்ஷம் என்னும் எண். உடனே வர விடுதல் - விரைந்து வருமாறு ஒருசேர அனுப்புதல். உடனே வர விட்டான் இராவணன் என்க. இயைபு நோக்கி இராவணன் என்னும் எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. (148)

8005. ஒருகோடிய மதமால்கரி
யுளவந்தன வுடன்முன்
பொருகோடியி லுயிருக்கன
வொழியப்பொழி மதயா
றருகோடுவ வரவுந்தின
ரசனிப்படி கணைகால்
இருகோடுடை மதவெஞ்சிலை
யிளவாளரி யெதிரே.

ஒரு கோடிய மதமால் கரி, உள வந்தன உடன் முன்
பொரு கோடியில் உயிர் உக்கன ஒழிய, பொழி மத யாறு
அருகு ஓடுவ, வர உந்தினர்—அசனிப் படி கணை கால்
இரு கோடுடை மத வெஞ்சிலை இள வாள் அரி எதிரே.

பொ :—ஒரு கோடி என்னும் தொகையினவாகவுள்ள மதமுடைய பெரிய யானைகள் வந்தவை, முன்னமே பொருதொழில் நிகழும் போர்முனையின் கண்ணே உயிர்நீங்கினவாய் ஒருசேர அழிந்துபடவும், இடியின்தன்மையுடையதாய் அம்புகளைச் சொரியும் (நாண் கட்டப்பட்ட) இருமுனைகளையுடைய வலிமையும் கொடுமையும் வாய்ந்த வில்லினையுடைய இளஞ்சிங்க ஏருகிய இலக்குவனுக்கு எதிரே, சொரிகின்ற மதநீர் ஆறு போன்று அருகே ஓடப் பெறுவன வாகிய கொலை யானைகளைச் செல்லுமாறு விரைந்து செலுத்தினர் (அரக்க வீரர்கள்).

கு :—ஒரு கோடிய உள மதமால் கரி வந்தன, முன் பொரு கோடியில் உயிர் உக்கன உடன் ஒழிய, அசனிப்படி கணைகாள் இரு கோடுடை மதவெஞ்சிலை இளவாள் அரி எதிரே, பொழிமதயாறு அருகு ஓடுவ வர உந்தினர் என இயைத்துப் பொருள் கொள்க. கோடி என்பது முதலடியில் கோடி என்னும் பேரெண்ணை யும் இரண்டாமடியில் முனை என்னும் பொருளையும் தந்தது. 'பொழி மதயாறு அருகு ஓடுவ' என்ற தொடர், பொழிகின்ற மதநீர் ஆறு போல உடன் தொடர்ந்து ஓடும் நிலையில் வரும் மதயானைகளைக் குறித்தது. அசனி - இடி. கணை - அம்பு. காலுதல் - வெளிப்படுத்

தல். இருகோடு – வில்லில் நாண் பூட்டப்பெற்ற இரண்டு முனை. மத - வலி என்னும் பொருளுடைய உரிச்சொல். இளவாள் அரி என்றது கொடுமை வாய்ந்த இளைய ஆண் சிங்கம் போல்வானாகிய இலக்குவனை. முன் அனுப்பப்பட்ட போர் யானைகளுள் ஒரு கோடி யானைகள் போர்முனையில் ஒருசேர இறந்துபட, அதுகண்ட அரக்க வீரர்கள், மதநீர் ஆறுபோல அருகே ஓடுமாறு மதச் செருக்குடையனவாய் வந்த யானைகள் பலவற்றை இலக்குவனுக்கு எதிரே விரைந்து செலுத்தினர் என்பதாம். (149)

8006. உலகத்துள மலையெத்தனை
யவையத்தனை யுடனே
கொலநிற்பன பொருகிற்பன
புடைசுற்றின குழுவாய்
அலகற்றன சினமுற்றிய
வனலொப்பன வவையும்
தலையற்றன கரமற்றன
தனிவிற்றொழி லதனால்.

உலகத்து உள மலை எத்தனை, அவை அத்தனை உடனே
கொல நிற்பன, பொருகிற்பன, புடை சுற்றின—குழுவாய்;
அலகு அற்றன, சினம் முற்றிய, அனல் ஒப்பன, அவையும்;
தலை அற்றன, கரம் அற்றன, தனி வில் தொழில் அதனால்.

பொ :—உலகத்திலேயுள்ள மலைகள் எத்தனையோ அவையனைத்தையும் (எதிர்நின்று முட்டிப்பொருது) ஒருசேர அழிக்கும் முறையில் சலியாது நிற்பனவும், போர்த்தொழிலில் வல்லனவும் ஆகிய யானைகள், (இலக்குவன்) பக்கத்தே கூட்டமாய்ச் சுற்றி வளைத்துக் கொண்டன. அளவில்லாதனவும் கோபம் மூளப்பெற்றனவும் (தன்னை நெருங்கினாரை வருத்துந் திறத்தில்) தீயை ஒப்பனவும் ஆகிய அவ் யானைகள் யாவும், (இலக்குவனது) ஒப்பற்ற விற்றொழிலால் தலையறுபட்டனவும் துதிக்கையறுபட்டனவுமாகி அழிவுற்றன.

கு :—வலிமிக்க யானைகள் மதச் செருக்கின் மிகுதியால் மலைகளையும் தோற்றத்தால்தம் இனமெனப் பிறழக்கொண்டு பொருதுநிற்கும் இயல்புடைய என்பது, ‘மலையொடு பொருத மால்யானை’ என வரும் உரைமேற்கோளால் இனிது விளங்கும். யானைக்குரியனவாகக் குறித்த இவ்வியல்பினையே, ‘உலகத்துள மலையெத்தனை

அவையத்தனையுடனே கொலநிற்பன பொருகிற்பன' எனவரும் இத்தொடரில் ஆசிரியர் விரித்துரைத்துள்ளமை காணலாம். அலகு – அளவு. (190)

8007. நாலாயின நவயோசனை
நனிவன்றிசை யெவையும்
மாலாயின மதவெங்கரி
திரிகின்றன வரலும்
தோலாயின வுலகெங்கணு
மெனவஞ்சின துகளே
போலாயின வயவானமு
மளருனது புவியே.

நாலாயின நவ யோசனை நனிவன் திசை எவையும்
மால் ஆயின மத வெங் கரி திரிகின்றன வரலும்,
தோல் ஆயின உலகு எங்கணும் என அஞ்சின; துகளே
போல் ஆயின வய வானமும் அளருனது புவியே.

பொ :—முப்பத்தாறு யோசனையளவு நீண்ட வலிய திசையெல்லாம் மதக் களிப்புடைய வலிய கொடிய யானைகள் திரிகின்றனவாகி வருதலும் நிலவுலகமெங்கும் யானைகளேயாய் நிரம்பிவிட்டன என்று (எல்லாவுயிர்களும்) அஞ்சின. வலிய வானுலகமும் புழுதியாயின. பூமி (அவ் யானைகளின் மதநீராற்) சேறுபட்டது.

கு :—நாலாயின நவம் – முப்பத்தாறு. நவம் - ஒன்பது. மால் – மதக்களிப்பு. மத – வலி. தோல் – யானை. வயவானமுதுகள் ஆயின; புவி அளருனது என்க. போல், ஒப்பில் போலி. (151)

8008. கடைகண்டில தலைகண்டில
கழுதின்றிரள் பிணமா
இடைகண்டன மலைகொண்டென
வெழுகின்றன திரையால்
புடைகொண்டெறி குருதிக்கடல்
புணர்கின்றன பொறிவெம்
படைகொண்டிடை படர்கின்றன
மதயாறுகள் பலவால்.

கடை கண்டில, தலை கண்டில, கழுதின் திரள், பிணமா
இடை கண்டன, மலை கொண்டென எழுகின்றன; திரையால்
புடை கொண்டு எறி குருதிக் கடல் புணர்கின்றன, பொறி வெம்
படை கொண்டு இடை படர்கின்றன மத யாறுகள் பலவால்.

பொ :—பேய்களின் கூட்டம், போர்க்களத்தின் இறுதியும் கண்டில முதலும் கண்டில. (அங்கு இறந்துபட்ட யானைகளின்) பிணமாகப் போர்க்களத்தினிடையிலே காணப்படுமவற்றை மலையை உயர எடுத்துக்கொண்டாற் போன்று (தூக்கிக்கொண்டு) எழுகின்றன. அலைகளாற் பரவி வீசும் இரத்தக் கடலிலே சென்று சேர்வனவாய்த் தீப்பொறி பறக்கும் வெம்மையுடைய படைக்கலங்களை யடித்துக்கொண்டு போர்க்களத்தினிடையே செல்வனவாகிய மத நீராறுகள் பலவாகும்.

கு :—கடை - இறுதி. தலை - தொடக்கம். பேய்கள் போர்க்களத்தின்கண்ணே பிணமாகக் கிடக்கும் யானைகளைத் தூக்கிக் கொண்டு மேல் எழும் தோற்றம், மலையினைத் தூக்கிக்கொண்டு எழுவதுபோற் காணப்பட்டது எனவும், அங்கு வந்த யானைகளின் மதநீர்ப் பெருக்குகள், அலைகளாற் பக்கங்களிலெல்லாம் மோதி யலைக்கும் குருதிப் பெருங்கடலிலே சென்று சேரும்படி போர்க்களத்தின் இடையிடையே பல ஆறுகளாய்ப் பரவிச் சென்றன எனவும் இலக்குவன் யானைக் கூட்டங்களை அழித்த செய்தியை ஆசிரியர் புனைந்துரைத்தார். (152)

8009. ஒற்றைச்சர மதனோடொரு
கரிபட்டுக வொளிவாய்
வெற்றிக்கணை யுருமொப்பன
வெயிலொப்பன வயில்போல்
வற்றக்கடல் சுடுகிற்பன
மழையொப்பன பொழியுங்
கொற்றக்கரி பதினாயிர
மொருபத்தியிற் கொல்வான்.

ஒற்றைச் சரம் அதனோடு ஒரு கரி பட்டு உக, ஒளி வாய்
வெற்றிக் கணை, உரும் ஒப்பன, வெயில் ஒப்பன, அயில்போல்
வற்றக் கடல் சுடுகிற்பன, மழை ஒப்பன பொழியும்
கொற்றக் கரி பதினாயிரம் ஒரு பத்தியில் கொல்வான்.

பொ :—ஓரம்பினால் ஒரு யானை வீதம் இறந்து வீழ, இடியை ஒத்தனவும் ஞாயிற்றின் கதிர்போலும் வெம்மையுடையனவும் (உக்கிரபாண்டியன் கடல் சுவறவிட்ட) வேற்படைபோன்று (சேனைக்) கடலை வற்றச் செய்வனவும் ஆகிய ஒளிபொருந்திய வெற்றியையுடைய அம்புகளால், கருமுகிலை யொப்பனவாய் (மதம்) பொழியும் வெற்றிமிக்க யானைகள் பதினாயிரத்தையும் ஒரே வரிசையிற் கொல்வானாயினான்.

கு :—ஒற்றைச் சரம் - ஓர் அம்பு. அயில் - வேல்; என்றது, உக்கிரகுமார பாண்டியன் கடல் சுவறவிட்ட வேற்படையினை. உக்கிரகுமார பாண்டியனுடன் இகல்கொண்ட இந்திரன் வருணனைக்கொண்டு கடலைப் பொங்கியெழுச் செய்து மதுரை நகரத்தை வளைக்கச் செய்தபொழுது, சிவபெருமான் சித்தர் வடிவு கொண்டு பாண்டியன் முன்னே தோன்றி வேற்படையைக் கடல் மீது எறியுமாறு பணித்து மறைந்தருளப் பாண்டியனும் தனது வேற்படையைக் கடல்மீது ஏவிக் கடல்நீரை வற்றச் செய்து வருணனை அடக்கினன் என்பது புராண வரலாறு. இச்செய்தியினை 'அடியிற் றன்னள வரசற் குணர்த்தி வடிவே லெறிந்த வான் பகை' எனவரும் தொடரில் இளங்கோவடிகள் குறித்துள்ளார். உக்கிர குமாரன் எறிந்த வேற்படை கடலைச் சுவறச் செய்தாற்போன்று இலக்குவன் எய்த அம்புகளும் சேனைக் கடலை வற்றச் செய்வன என்பார், 'அயில்போல் வற்றக் கடல் சுடுகிற்பன' என்றார். (153)

8010. மலையஞ்சின மழையஞ்சின
வனமஞ்சின பிறவும்
நிலையஞ்சின திசைவெங்கரி
நிமிர்கின்றன கடலின்
அலையஞ்சின பிறிதென்சில
தனியைங்கர கரியும்
கொலையஞ்சுதல் புரிகின்றது
கரியின்படி கொளலால்.

மலை அஞ்சின; மழை அஞ்சின; வனம் அஞ்சின; பிறவும்
நிலை அஞ்சின; திசை வெங்கரி; நிமிர்கின்றன கடலின்
அலை அஞ்சின; பிறிது என் சில? தனி ஐங்கர கரியும்,
கொலை அஞ்சுதல் புரிகின்றது—கரியின் படி கொளலால்.

பொ :—(இவ்வாறு இலக்குவன் யானைகளை வெகுண்டு அழித்தலைக் கண்டு அவ் யானைகளோடு உருவத்தால் ஒப்புடைய) மலைகள் அச்சமுற்றன ; (நிறத்தால் ஒப்புடைய) மேகங்கள் அச்சமுற்றன ; (கருமையுடைய) காடுகளும் (பெருந்தோற்றமுடைய) பிறவும் அச்சமுற்றன ; வெம்மையுடைய திசையானைகள் (தத்தமக்கு வகுத்த) நிலைகளில் நிற்றற்கு அஞ்சின ; கடலின் கண்ணே உயர்ந்தெழுந் தன்மையனவாகிய அலைகள் அஞ்சின ; இதுபற்றிச் சிலவற்றை வேறு கூறுவதெதற்கு ? ஒப்பற்ற ஐந்து கரங்களையுடைய யானையும் யானையின் வடிவைத்தான் கொண்டுள்ளமையால் (இலக்குவனுடைய அம்பினால் நேரும்) கொலைத்துன்பத்தினை யெண்ணி அஞ்சுவதாயிற்று.

கு :—திசை வெங்கரி நிலை அஞ்சின எனவும், தனி ஐங்கர கரியும் கரியின்படி கொளலால் கொலை அஞ்சுதல் புரிகின்றது எனவும் இயைத்துரைக்க. தனி - ஒப்பற்ற. ஐங்கரகரி - ஐந்து கரங்களையுடைய கணபதியாகிய யானை. கொலை அஞ்சுதல் புரிதல் - கொலைத் துன்பத்தினை எண்ணி அச்சமுறுதல். இலக்குவன் யானைகளை வெகுண்டு அழித்தலைக் கண்டு அவ் யானைகளோடு ஒப்புடைய நிலைத்திணையும் இயங்குதிணையுமாகிய பொருள்கள் யாவும் அஞ்சி நடுங்கின என உயர்வு நவிற்சி என்னும் அணியமைய இலக்குவனது விற்போர் வன்மையைப் புனைந்துரை வகையாற் புலப்படுத்தினார் ஆசிரியர். (154)

8011. காலேறின சிலைநாணொலி
கடலேறுகள் படவான்
மேலேறினர் மிசையாளர்க
டலைமெய்தொறு முருவக்
கோலேறின வுருமேறுகள்
குடியேறின வெனலாய்
மாலேறின களியானைகண்
மழையேறென மறிய.

கால் ஏறின சிலை நாண் ஒலி, கடல் ஏறுகள் பட வான்
மேல் ஏறினர் மிசையாளர்கள்; தலை மெய் தொறும் உருவ,
கோல் ஏறின—உரும் ஏறுகள் குடியேறின எனலாய்
மால் ஏறின களி யானைகள் மழை ஏறு என மறிய.

பொ :—இரு முனைகளிலும் (இறுகப் பிணிக்கப் பெற்றுப்) பொருந்திய (இலக்குவனது) வில் நாணின் ஓசையால் கடலில் உள்ள

சுரு முதலிய வலிய மீன்கள் இறந்துபட, யானை மேலுள்ள வீரர்கள் (உயிர் நீத்துத்) துறக்கவுலகத்தை அடைந்தனர். (மேகத்தில் உள்ள) இடியேறுகள் இப்பொழுது தம்பாற்) குடிபுகுந்தன என்னுந் தன்மையனவாகி, மதமயக்கமுடைய களிப்புமிக்க யானைகள் மேகமும் இடியும் என (நிலத்தில்) வீழ்ந்து புரள (இலக்குவன் எய்த) அம்புகள் அவற்றின் தலையிலும் உடம்பிலும் துளைத்து ஊடுருவும்படி ஊன்றித் தைத்தன.

கு:—கால் - முனை. 'ஒருதனு இருகால் வளைய வாங்கி' (என் புழி) இச் சொல் இப் பொருளிற் பயின்றுள்ளமை காணலாம். சிலை நாண் ஒலியால் கடலேறுகள் பட, மிசையாளர்கள் வான்மேல் ஏறினர் எனவும், மால் ஏறின களியானைகள், உரும் ஏறுகள் குடியேறின எனலாய், மழை ஏறு எனமறிய, கோல் (அவற்றின்) தலை மெய்தொறும் உருவ ஏறின எனவும் இரு தொடராக இயைத்துப் பொருள் கொள்க. கடல் ஏறு - கடலிடத்தே வாழும் சுரு, மகரம் முதலிய பெரு மீன்கள் 'கடல்வாழ் சுறவும் ஏறெனப்படுமே' (தொல்-மரபு. 40) எனவும், 'மீனேறுயர்த்த கொடிவேந்தனை' (சீவக – 6) எனவும் வருவன இங்கு ஒப்புநோக்கத் தக்கன. கடவேறு எனப் பாடங்கொண்டு, வனத்தின்கண்ணே வாழும் ஆண் சிங்கம் எனப் பொருளுரைத்தலும் உண்டு. பட – இறக்க. மிசையாளர்கள் - யானை மேலுள்ள வீரர்கள். வான்மேல் ஏறுதல் - உயிர்நீத்துத் துறக்கவுலகத்தையடைதல். கோல் - அம்பு. அம்புகளுடன் வீழ்ந்து புரளும் யானைகளுக்கு இடியேற்றுடன் கூடிய மழைமேகங்களை உவமை கூறினர். (155)

## அப்பொழுது அனுமனும் அங்கே விரைந்து வந்து யானைப் படையை அழித்தல்

8012. இவ்வேலையி னனுமான்முத
லெழுவேலையு மனையார்
வெவ்வேலவர் செலவேவிய
கொலையானையின் மிகையைச்
செவ்வேயுற நினையாவொரு
செயல்செய்குவெ னென்பான்
றவ்வேலென வந்தானவன்
றனிவேலெனத் தகையான்.

இவ் வேலையின், அனுமான்,—முதல் எழு வேலையும் அனையார்
வெவ்வேலவர், செல ஏவிய கொலை யானையின் மிகையைச்
செவ்வே உற நினையா, 'ஒரு செயல் செய்குவென்' என்பார்,
தவ்வேலென வந்தான்,—அவன் தனிவேல் எனத் தகையான்.

பொ :—இந்தச் சமயத்தில் முதன்மை பெற்ற ஏழு கடல்களையும் ஒத்தவரான கொடிய வேற்படையை யுடைய அரக்கர்கள் (இலக்கு வன்மேற்) செல்லும்படி செலுத்திய கொலைத் தொழிலையுடைய யானை களின் மிகுதியை இராமனது வேற்படையை யொத்து உற்றுழி யுதவும் தன்மையனாகிய அனுமன் எண்ணிப் பார்த்து, (இதற்கு மாற் ருக) ஒப்பற்ற (வீரச்) செயலைச் செய்வேன்' எனத் தன் மனத்தே எண்ணியவனாய்(ப் பகைவனை நோக்கி)த் 'தாவிக் குதியற்க' எனக் கூறிக்கொண்டு (அங்கு விரைந்து) வந்தான்.

கு :—இவ்வேலையில், அவன் தனிவேலெனத் தகையானாகிய அனுமன், கொலையானையின் மிகையைச் செவ்வேயுற நினையா, 'ஒரு செயல் செய்குவேன்' என்பான், 'தவ்வேல்' என வந்தான் என முடிக்க. 'முதல் எழுவேலையும் அலையார் வெவ்வேலவர்' என்றது, முதன்மை பெற்ற ஏழு கடல்களும் ஒருங்கு திரண்டாற்போலுந் தோற்றத்தினராய்ப் பெருந்திரளாய் வந்த அரக்கர்களை. மிகை - மிகுதி. அவன் என்றது, இராமபிரானை. பண்டறிசுட்டு. இராமனது வேற்படை அவன்பால் அன்புடையார்க்கு உற்றுழியுதவுமாறு போன்று இராமனன்பர்க்கு உற்றுழியுதவுந் தன்மையன் அனுமன் என்பார், 'அவன் தனிவேலெனத் தகையான்' எனக் குறித்தார் ஆசிரியர். அவன் தனிவேல் என்பதற்கு இலக்குவனது ஒப்பற்ற வேல் எனக் கூறுவாறுமுளர். 'தவ்வேல்' என்றது, பகைவனை நோக்கி அனுமன் கூறிய கூற்று. தவ்வுதல் - தாவிக் குதித்தல்; ஈண்டு, தன்னை வியந்து செருக்குதல் என்ற பொருளில் வந்தது. (156)

8013. ஆர்த்தங்கனல் விழியாமுதிர்
மதயானையை யனையான்
நீர்த்தன்கழல் பரவாமுத
லரிபோல்வரு திறலான்
வார்த்தங்கிய கழலானெடு
மரனின்றது நமனுர்
போர்த்தண்டினும் வலிதாயது
கொண்டான் புகழ்கொண்டான்.

ஆர்த்து அங்கு அனல் விழியா,
முதிர் மத யானையை அனையான்,
தீர்த்தன் கழல் பரவா, முதல்
அரிபோல் வரு திறலான்,
வார்த்தங்கிய கழலான்,—ஒரு
மரன் நின்றது, நமனார்
போர்த்தண்டினும் வலிது ஆயது,
கொண்டான்—புகழ் கொண்டான்.

பொ :—மதம் முற்றிய யானையை யொத்தவனும் முழுமுதற் பொருளாகிய நரசிங்கமூர்த்தியை யொத்த பேராற்றலுடன் வருபவனும் வாராற் பிணித்த வீரக்கழலை யணிந்தவனும் வெற்றிப் புகழ் கொண்டவனுமாகிய அனுமன், தூயோனாகிய இராமபிரானுடைய திருவடிகளைப் பரவிப் போற்றி, அங்கு ஆரவாரித்துத் தீப்பொறி பறக்க வெகுண்டு விழித்து, யமனுடைய போர்த்தொழிற்குரிய தண்டாயுதத்தைக் காட்டிலும் வன்மையுடையதாய் அயலே வளர்ந்து நின்ற மரம் ஒன்றைக் (கையிற் பிடுங்கிக்) கொண்டான்.

கு :—முதிர் மதயானையை அனையான், முதல் அரிபோல் வருதிறலான், வார்த்தங்கிய கழலான், புகழ் கொண்டான் என்ற தொடர்கள், அனுமன் என்னும் ஒரு பொருள்மேல் வந்த பல பெயர்கள். ஆர்த்து, அனல் விழியா, பரவா என இடையிலுள்ள எச்சங்கள் கொண்டான் என்னும் வினைகொண்டு முடிந்தன. (157)

8014. கருங்கார்புரை நெடுங்கையன
களியானைக ளவைசென்
றொருங்காயின வுயிர்மாய்ந்தன
பிறிதென்பல வுரையால்
வருங்காலமும் பெரும்பூதமு
மழைமேகமு முடனாய்ப்
பொருங்காலையின் மலைமேல்விழு
முருமேறெனப் புடைத்தான்.

கருங் கார்புரை நெடுங் கையன
களி யானைகள் அவை சென்று
ஒருங்கு ஆயின, உயிர் மாய்ந்தன;
பிறிது என், பல உரையால்?—

வரும் காலமும் பெரும் பூதமும்
மழை மேகமுப், உடனுய்ப்
பொரும் காலையில் மலைமேல் விழும்
உரும் ஏறு எனப் புடைத்தான்.

பொ :—(மரத்தினைக் கையிற் கொண்டானாகிய அனுமன், உலக முடிவில்) வருதற்குரிய ஊழிக்காலமும் ஐம்பெரும் பூதங்களும் பெரு மழையைப் பொழியும் மேகங்களும் ஒருங்கே கூடி (உலகத்தைப்) பொருது அழிக்கும் நிலையில் மலை மேல் விழும் இடியேற்றினை ஒத்துத் தோன்றுமாறு (அவ் யானைகளைப்) புடைத்தான். (அதனால்) கரிய மழை மேகத்தை யொத்தனவும் நீண்ட துதிக்கையினை யுடையனவும் ஆகிய மதக்களிப்புடைய அவ் யானைகள் திரள் திரளாக(ப் போர் முனையிற்) சென்றவை ஒருங்கே உயிரிழந்தன. (இதுபற்றிப்) பல சொற்களால் விரித்துக் கூறுதற்கு வேறு யாதுளது ?

கு :—புகழ் கொண்டானாகிய அனுமன் போர்த்தண்டினும் வலி தாயது ஒரு மரன் கொண்டான்; மலைமேல் விழும் உருமேறு எனப் புடைத்தான்; (அதனால்) களியானைகள் அவை ஒருங்கு உயிர் மாய்ந்தன; பல உரையால் பிறிது என்? என இயைக்க. (158)

8015. மிதியாற்பல விசையாற்பல
மிடலாற்பல விடறுங்
கதியாற்பல காலாற்பல
வரலாற்பல வாலி
னுதியாற்பல நுதலாற்பல
நொடியாற்பல பயிலுங்
குதியாற்பல குமையாற்பல
கொன்றானற னின்றான்.

மிதியால் பல, விசையால் பல, மிடலால் பல, இடறும்
கதியால் பல, காலால் பல, வாலால் பல, வானின்
நுதியால் பல, நுதலால் பல, நொடியால் பல, பயிலும்
குதியால் பல, குமையால் பல, கொன்றான்—அறன் நின்றான்.

பொ :—அறத்தில் நிலைபெற்றவனாகிய அனுமன் (பகைவர் செலுத்திய யானைக் கூட்டத்திலுள்ள யானைகளில்) மிதித்தலாற் பல வற்றையும் (செல்லும்) வேகத்தாற் பலவற்றையும் உடல்வன்மை யாற் பலவற்றையும் இடறிக்கொண்டு செல்லும் நடையினாற் பல

வற்றையும் வாலினாற் பலவற்றையும் வாலின் நுனியினாற் பலவற் றையும் நெற்றியாற் பலவற்றையும் கைந்நொடியாற் பலவற்றையும் பலமுறையும் குதித்தலால் பலவற்றையும் குமைத்தலாற் பலவற் றையும் கொன்றொழித்தான்.

கு :—அறன் நின்றான்; மிதியால் விசையால் மிடலால், கதியால் காலால், வாயால், துதியால், நுதலால், நொடியால் குதியால், குமை யால் பலபல கொன்றான் என்க. மிதி - மிதித்தல். விசை – செல் லும் வேகம். இடறும் கதி – இடறிக்கொண்டு நடக்கும் நடை. நுதல் – நெற்றி. நெற்றியால் மோதித் தாக்கியும் கை விரலால் நொடித்தும் பலபல யானைகளைக் கொன்றான் என்பதாம். நொடித்தல் என்றது, பெருவிரலை நடுவிரலையும் முறுக்கி ஒலியெழுப்புதல். மிதி – மிதித்தல், குதி – குதித்தல். குமை - குமைத்தல்; துவைத்தல். இவை முதனிலைத் தனிவினைகள். (159)

8016. பறித்தான்சில பகிர்ந்தான்சில
வகிர்ந்தான்சில பணைபோன்
றிறுத்தான்சில விடந்தான்சில
பிளந்தான்சில வெயிற்றாற்
கறித்தான்சில கவர்ந்தான்சில
கரத்தாற்சில பிடித்தான்
முறித்தான்சில திறத்தானையி
னெடுங்கோடுகள் முனிந்தான்.

பறித்தான் சில, பகிர்ந்தான் சில,
வகிர்ந்தான் சில, பணை போன்று
இறுத்தான் சில, இடந்தான் சில,
பிளந்தான் சில, எயிற்றால்
கறித்தான் சில, கவர்ந்தான் சில,
கரத்தால் சில பிடித்தான்,
முறித்தான் சில, திறத்து ஆனையின்
நெடுங் கோடுகள்—முனிந்தான்.

பொ :—சினங் கொண்டவனாகிய அனுமன், பலதிறத்து யானை களின் நீண்ட தந்தங்கள் சிலவற்றை அடியோடு பறித்தான்; சில வற்றை இருகூறாக்கினான்; சிலவற்றைத் துண்டித்தான்; சிலவற்றை மரக்கிளைபோன்று ஒடித்தான்; சிலவற்றை (மூங்கில் முளைபோன்று, காலால்) இடந்தான்; சிலவற்றைப் பிளந்தான்; சிலவற்றைப் பல்

லினாற் கறித்துத் தின்றான் ; சிலவற்றை வலிதிற் பற்றினான் ; சில வற்றைக் கையிற் பிடித்தான் ; சிலவற்றை முறித்தான்.

கு :—பறித்தல் - வேருடன் பிடுங்குதல், பகிர்தல் - பிளத்தல். வகிர்தல் - கூறுபடுத்தல். இறுத்தல் - ஒடித்தல். இடத்தல் - காலால் இடறுதல். கறித்தல் - கடித்தல். (160)

8017. வாரிக்குரை கடலிற்புக
விலகுந்நெடு மரத்தாற்
சாரித்தலைத் துருட்டுந்நெடுந்
தலத்திற்படுத் தரைக்கும்
பாரிற்பிடித் தடிக்குங்குடர்
பறிக்கும்படர் விசும்பின்
ஊரிற்செல வெறியும்மிதித்
துழக்கும்முகத் துதைக்கும்.

வாரிக் குரை கடலில் புக
விலகும் ; நெடு மரத்தால்
சாரித்து அரைத்து உருட்டும் ; நெடுந்
தலத்தில் படுத்து அரைக்கும் ;
பாரில் பிடித்து அடிக்கும் ; குடர்
பறிக்கும் ; படர் விசும்பின்
ஊரில் செல, எறியும் ; மிதித்து
உழக்கும் ; முகத்து உதைக்கும்.

பொ :—(அவ் அனுமன், யானைகளை) இரு கைகளாலும் வாரி யெடுத்து ஒலிக்குங் கடலிற் புகுமாறு எறிவான் ; இடசாரி வலசாரி யாகத் திரிந்து நீண்ட மரத்தினால் (அவற்றை) அலைத்து உருட்டு வான் ; நீண்ட நிலத்திலே தள்ளி அரைப்பான்; (இரு கைகளாலும்) பற்றியெடுத்து நிலத்தில் (ஓங்கி) அடிப்பான் ; அவற்றின் குடர் களைப் பறித்தெடுப்பான் ; இலங்கை நகரத்திற் சென்று விழும்படி பறந்த ஆகாயத்தின் வழியாக வீசி யெறிவான் ; (அவ் யானைகளைக் கால்களால்) மிதித்து உழக்குவான்; (அவற்றின்) முகத்தில் உதைப்பான்.

கு :—குரை கடலில் புக வாரி விலகும் எனவும், ஊரில் புக படர் விசும்பின் எறியும் எனவும் இயைத்துரைக்க. விலகுதல் - எறிதல். சாரித்து என்பது, சாரி என்னும் பெயரடியாகப் பிறந்த வினை

யெச்சம். சாரித்து - இடசாரி வலசாரியாகத் திரிந்து. ஊர் என்றது, இலங்கை நகரத்தை. (161)

8018. வாலால்வர வளைக்குந்நெடு
மலைப்பாம்பென வளையா
மேலாளொடு பிசையும்முழு
மலைமேற்செல விலகும்
ஆலாலமுண் டவனேயென
வகல்வாயினிட் டதுக்கும்
தோலாயிர மிமைப்போதினி
னரியேறெனத் தொலைக்கும்.

வாலால் வர வளைக்கும், நெடு மலைப்பாம்பு என, வளையா,
மேல் ஆளொடு பிசையும், முழு மலைமேல் செல விலகும்;
ஆலாலம் உண்டவனே என, அகல் வாயின் இட்டு அதுக்கும்;
தோல் ஆயிரம் இமைப் போதினின் அரிஏறு எனத் தொலைக்கும்;

பொ :—(தன்) வாலினால் நெடிய மலைப்பாம்புபோன்று (யானைகளை) வளைத்துப் பிணிப்பான்; (அவ்வாறு) வளைத்து (அவ்யானைகளை) மேலுள்ள பாகருடன் பிசைந்து அழிப்பான்; பெரிய மலைமேற் சென்று விழும்படி வீசுவான்; 'ஆலகால நஞ்சினை உட்கொண்ட சிவனே இவன்' எனக் (கண்டோர்) கருதுமாறு அவ்யானைகளை வாயினிடத்தேயிட்டு அதுக்குவான்; ஆண்சிங்கம் போன்று ஆயிரம் யானைகளை இமைப்பொழுதுக்குள்ளே அழித்தொழிப்பான்.

கு :—வெகுளிக் குறிப்புடையனாகி யானையினைக் கொல்லும் அனுமன், தன்மேற் சினந்துவந்த யானையினைக் கொன்ற சிவபெருமானே இவன் எனக் கண்டோர் கருதும்படி தோன்றினன் என்பார், 'ஆலாலமுண்டவனே யென' என்றார். என - என்று எண்ணி. அதுக்குதல் - வாயிலிட்டு மெல்லுதல். தோல் - யானை. அரிஏறு - சிங்கத்துள் ஆண். என, உவமவுருபு. (162)

8019. சையத்தினு முயர்வுற்றன
தறுகட்களி மதமா
நொய்திற்கடி தெதிருற்றன
நூறுயிர மாறு

மையற்கரி யுகிரிற்சில
குழைபுக்குரு மறையத்
தொய்யற்பட ரழுவக்கொழுஞ்
சேருயுகத் துகைத்தான்.

சையத்தினும் உயர்வுற்றன தறுகண் களி மதமா,
நொய்தின் கடிது எதிர் உற்றன, நூருயிரம், மாரு
மையல் கரி, உகிரின் சில குழைபுக்கு உரு மறைய,
தொய்யல் படர் அழுவக் கொழுஞ் சேருய் உகத் துகைத்தான்.

பொ :—மலையைவிட உயர்ச்சி பொருந்தியனவும், அஞ்சாமையும் களிப்பும் உடையனவும் ஆகிய மதயானைகள் மிக விரைவில் எதிர் வந்தன ஒரு நூருயிரத்துள், நீங்காத மதமயக்கமுடைய யானைகள் சில விரல் நகங்களால் ஊன்றப்பட்டுத் தழைகளையொத்து உள்ளே புக்கு உருவம் மறையச் சேறுபடர்ந்த நிலப்பரப்பிலே கொழுவிய சேருய் உருச் சிதையும்படி தன் கால்களால் மிதித்து உழக்கினுன்.

கு :—சையம் - மலை. தொய்யல்படர் அழுவம் - சேறு படர்ந்த மென்னிலமாகிய பரப்பு. குழைபுக்கு உருமறைய - தழைகளைப் போன்று உள்ளே யழுந்தி உருவம் மறைய. குழை - தழை. சேற்று நிலமாகிய வயலிலே உரமாகிய தழைகளை மிதித்து உழக்கும் உழவர்களைப் போன்று அநுமன் யானைகளை அவற்றின் உருச் சிதைந்து மறையும்படி காலால் உழக்கி மிதித்துச் சேறு செய்தான் என்பதாம். (163)

8020. வேருயின மதவெங்கரி
யொருகோடியின் விறலோன்
நூருயிரம் படுத்தானிது
நுவல்காலையி னிளையோன்
கூருயின வெனவன்னவை
கொலைவாளியிற் கொன்ருன்
தேருதவோர் பயத்தானெடுந்
திசைகாவல ரிரிந்தார்.

வேருயின மத வெங் கரி ஒரு கோடியின், விறலோன்,
நூருயிரம் படுத்தான்; இது நுவல்காலையின், இளையோன்,
கூருயின என அன்னவை கொலை வாளியின் கொன்ருன்;
தேருதது ஓர் பயத்தால் நெடுந் திசை காவலர் இரிந்தார்.

பொ :—(இராவணனால்) வேருக அனுப்பப்பட்டனவாகிய வெம்மையும் மதமும் வாய்ந்த ஒரு கோடி யானைகளுள் வெற்றித்திறம் வாய்ந்தவனாகிய அனுமன் (இவ்வாறு) ஒரு நூருயிரம் யானைகளைக் கொன்றெழித்தான். இதனைப் பற்றிக் கூறுமிடத்து (எஞ்சிய யானைகள் யாவும்) இளையோனுக்குரிய பங்காயின என்னும்படி அவையெல்லாவற்றையும் கொலைத் தொழிலையுடைய அம்பினால் துண்டித்துக் கொன்ருன் இலக்குவன். நெடுந்திசைகளைக் காத்தற்ருெழிலையுடையவராகிய தேவர்கள், (பிறர் யாவராலும்) தேறுதல் கூறித் தெளிவிக்க வொண்ணுத பெரும் பயத்தினால் தத்தமக்குரிய நிலையாகிய இருப்பிடங்களை விட்டு விரைந்து ஓடினர்கள்.

கு :—வேருயின மதவெங்கரி என்றது, இராவணன் தன்மைந்தன் அதிகாயனுக்குத் துணை செய்யும் முறையில் வன்மையிற் சிறந்தனவாகத் தேர்ந்து அனுப்பிவைத்த ஒருகோடி யானைகளை. விறலோன் என்றது, வெற்றித் திறத்தில் வல்லவனாகிய அனுமனை. இராவணன் சிறந்தனவாகத் தேர்ந்து அனுப்பிய ஒருகோடி யானைகளில் ஒரு நூருயிரம் யானைகளை அனுமன் கொன்றெழித்தானாக, எஞ்சிய எல்லா யானைகளையும் இலக்குவன் ஒருவனே தன் அம்புகளால் அழித்தொழித்தான் என்பதாம். தேருததோர் பயம் என்றது, தமக்குச் சிறந்தார் யாவராலும் தேறுதல் கூறி நீக்கவொண்ணுதவாறு நெஞ்சிற் குடிகொண்ட தீராத பயத்தினை. (164)

### அரக்கர் சிதறி ஓடத் தேவாந்தகன் சினந்து வந்து அனுமனெடு பொருது மடிதல்

8021. இரிந்தார்திசை திசையெங்கணும்
யானைப்பிண மெற்ற
நெரிந்தார்களு நெரியாதுயிர்
நிலைத்தார்களு நெருக்கா
லெரிந்தார்நெடுந் தடந்தேரிழிந்
தெல்லாருமுன் செல்லத்
திரிந்தானெரு தனியேநெடுந்
தேவாந்தகன் சினத்தான்.

இரிந்தார், திசை திசை எங்கணும் யானைப் பிணம் எற்ற, நெரிந்தார்களும், நெரியாது உயிர் நிலைத்தார்களும், நெருக்கால் எரிந்தார்; நெடுந் தடந்தேர் இழிந்து எல்லாரும் முன் செல்ல, திரிந்தான் ஒரு தனியே, நெடுந் தேவாந்தகன், சினத்தான்.

பொ :—திசைகள்தோறும் விரைந்தோடிய அரக்கர்களுள் யானையின் பிணங்கள் மோதுதலால் நெரிபட்டு உடல் சிதைந்தவர்களும் அவ்வாறு நெரிக்கப்படாது உயிர் தாங்கியவர்களும் நெருக்கத்தினுல் வெதுப்புற்ருர்கள். நீண்ட பெரிய தேர்களை விட்டிறங்கித் தேர் வீரராயினு ரெல்லாம் முன்னே விரைந்து ஓட, நெடிய தேவாந்தகன் என்னும் அரக்க வீரன் சினம் மிக்கவனுய் (ப்போர்க்களத்திலே) தன்னந் தனியனுகத் திரிந்தான்.

கு :—இரிந்தார் - அஞ்சி ஒடிய அரக்கர்கள். இரிந்தார், நெரிந்தார்களும் நெரியாது உயிர்நிலைத்தார்களும் ஆகி எரிந்தார் எனவும், நெடுந் தடந்தேர் இழிந்து எல்லோரும் முன் செல்ல, நெடுந் தேவாந்தகன் சினத்தான் ஒரு தனியே திரிந்தான் எனவும் இரு தொடராக இயைத்துரைக்க. (165)

8022. உதிரக்கடல் பிணமால்வரை
யொன்றல்லன பலவா
எதிரக்கடு நெடும்போர்க்களத்
தொருதான்புகுந் தேற்ருன்
கதிரொப்பன சிலவெங்கணை
யனுமானுடற் கரந்தான்
அதிரக்கட னெடுந்தேரினன்
மறையேறென வார்த்தான்.

உதிரக் கடல், பிணமால் வரை, ஒன்று அல்லன பலவா
எதிர, கடு நெடும் போர்க்களத்து ஒரு தான் புகுந்து ஏற்ருன்
கதிர் ஒப்பன சில வெங்கணை அனுமான் உடல் கரந்தான்,
அதிரக் கடல்–நெடுந் தேரினன்–மழை ஏறு என ஆர்த்தான்.

பொ :—(தேவாந்தகன்) குருதிக்கடலும் பெரிய பிணமலைகளும் ஒன்று என்னும் எண்ணினவன்றிப் பலவாய் எதிர்ப்பட்டுத் தோன்றக் கொடிய நீண்ட போர்க்களத்திலே பெரிய தேரினைச் செலுத்தியவனுய்த் தான் ஒருவனேயாகப் புகுந்து எதிர்த்து, கதிரவனையொத்துத் தெறுவனவாகிய வெம்மை மிக்க சில அம்புகளை அனுமனது உடம்பின் கண்ணே செலுத்திக் கடலும் அதிரும்படி மழையுடன் கூடிய இடியினைப் போன்று ஆரவாரித்தான்.

கு :—(தேவாந்தகன்) நெடுந்தேரினன் போர்க்களத்து ஒரு தான் புகுந்து ஏற்ருன் ; அனுமானுடல் சிலவெங்கணை கரந்தான் ; கடல்

அதிர மழை ஏறு என ஆர்த்தான் என்க. எதிர்தல் - எதிர்ப்படுதல். காத்தல் - உடலினுள்ளே புகுந்து அழுந்தி மறையும்படி செலுத்துதல். (166)

8023. அப்போதினி னனுமானுமொர்
மரமோச்சிநின் றூர்த்தான்
இப்போதிவ னுயிர்போமென
வுருமேறென வெறிந்தான்
வெப்போவென வெயில்கால்வன
வயில்வெங்கணை விசையால்
துப்போவெனத் துணியாம்வகை
தேவாந்தகன் றுரந்தான்.

அப்போதினின், அனுமானும், ஓர்
மரம் ஓச்சி நின்று ஆர்த்தான்,
'இப்போது இவன் உயிர்போம்' என,
உரும் ஏறு என எறிந்தான்;
வெப்போ என வெயில் கால்வன
அயில் வெங்கணை விசையால்,
'துப்போ' என, துணியாம் வகை,
தேவாந்தகன் துரந்தான்.

பொ:—அவ்வேளையில் அனுமானும் ஒரு மரத்தை உயர எடுத்து நின்று ஆரவாரித்தவனாய்; 'இப்பொழுதே இத்தேவரந்தகனது உயிர் போய்விடும்' எனக் கண்டோர் கருதும்படி பெரிய இடியினை யொத்து வீசி யெறிந்தான்; (அதுகண்ட) தேவாந்தகன், 'இஃதொரு வலியுடைய பொருளோ?' என்று இகழ்ந்து (அம்மரம்) துண்டு பட்டுச் சிதையும்படி, கொடிய நெருப்போ என ஐயுறுமாறு வெம்மையை வெளிப்படுத்துவனவாகிய கூரிய அம்புகளை விரைந்து செலுத்தினான்.

கு:—ஓச்சுதல்-எறிதற் பொருட்டு உயர எடுத்தல். 'இப்போது இவன் உயிர்போம்' என்றது, போரினை நேர்நின்று காண்போரது உட்கோள்; இதனை அனுமன் கூற்றாக்குதலும் உண்டு. துப்போ - இஃது வலியுடைய பொருளோ?; என்றது, அனுமனால் எறியப்பட்ட மரத்தினைக் குறித்துத் தேவாந்தகன் இகழ்ந்து கூறிய மொழி. துணி ஆம் வகை - துண்டு பட்டுச் சிதையுமாறு. விசையால் துரந்தான் என இயையும். (167)

8024. மாறுங்கொரு மலைவாங்கினன்
வயவானரக் குலத்தோர்க்
கேறுங்கது வெறியாதமுன்
முறியாயுக வெய்தான்
கோறாங்கிய சிலையானுட
னெடுமாருதி கொதித்தான்
பாறுங்கெனப் புகப்பாய்ந்தவ
னெடுவில்லினைப் பறித்தான்.

மாறு ஆங்கு ஒரு மலை வாங்கினன்,
வய வானரக் குலத்தோர்க்கு
ஏறு; ஆங்கு அது எறியாத முன்,
முறியாய் உக எய்தான்;
கோல் தாங்கிய சிலையானுடன்
நெடு மாருதி கொதித்தான்,
பாறு ஆங்கு எனப் புகப் பாய்ந்து
அவன் நெடு வில்லினைப் பறித்தான்.

பொ :—அப்பொழுது, வெற்றியினையுடைய வானரகுலத்தார்களுள் சிங்க ஏறுபோல்வானாகிய அனுமன், (தேவாந்தகன் விட்ட அம்புக்கு) மாறாக ஒரு மலையைப் பறித்து எடுத்தான்; (அவன் அதனை) எறிவதற்கு முன்னமேயே தாங்கிய வில்லினை யுடையனாகிய தேவாந்தகன் அம்மலையானது முறிபட்டுச் சிதர்ந்து உதிருமாறு அம்பினைச் செலுத்தினான். பெருமையினையுடைய காற்றின் மைந்தனாகிய அனுமன் உடனே சினம் பொங்கியவனாய்ப் பருந்தினைப் போன்று (அத் தேவாந்தகன்மேல்) அழுந்தப் பாய்ந்து அவனுடைய நெடிய வில்லினைப் பறித்துக் கொண்டான்.

கு :—ஆங்கு, வயவானரக் குலத்தோர்க்கு ஏறு, மாறு ஒரு மலை வாங்கினன்; அது எறியாதமுன் தாங்கிய சிலையான் அது முறியாய் உகக்கோல் எய்தான்; உடன் நெடுமாருதி கொதித்தான், பாறு ஆம் எனப் புகப்பாய்ந்து அவன் நெடு வில்லினைப் பறித்தான் என்க. பாறு – பருந்து. புகப் பாய்தல் - தன் உடம்பு அழுந்திப் பதியும்படி வேகமாகப் பாய்தல். 'பொங்கு மடுவிற்புகப் பாய்ந்து' எனவரும் திருவெம்பாவைத் தொடர் இங்கு ஒப்பு நோக்கத் தகுவதாகும். (168)

8025. பறித்தானெடும் படைவானவர்
பலரார்த்திடப் பலவா
முறித்தானவன் வலிகண்டுயர்
தேவாந்தகன் முனிந்தான்
மறித்தாங்கொரு சுடர்த்தோமரம்
வாங்காமிசை யோங்காச்
செறித்தானவ னிடத்தோண்மிசை
யிமையோர்களுந் திகைத்தார்.

பறித்தான் நெடும் படை, வானவர்
பலர் ஆர்த்திட, பலவா
முறித்தான்; அவன் வலி கண்டு உயர்
தேவாந்தகன் முனிந்தான்,
மறித்து ஆங்கு ஒரு சுடர்த் தோமரம்
வாங்கா, மிசை ஓங்கா,
செறித்தான், அவன் இடத்தோள் மிசை;
இமையோர்களும் திகைத்தார்.

பொ:—அங்ஙனம் பறித்துக்கொண்டவனாகிய அனுமன், தேவர் பலரும் மகிழ்ந்து ஆரவாரிக்கும்படி நீண்ட அவ்விற் படையினைப் பல துண்டங்களாக முறித்தான். ஆற்றலால் உயர்ந்த தேவாந்தகன் அவ்வனுமனது பெருவன்மையைக் கண்டு வெகுண்டவனாகி அவ்விடத்து மீண்டும் ஒளிபொருந்திய தோமரம் என்னும் படையை வாங்கி மேலே ஓங்கி அவ்வனுமனுடைய இடைத் தோளின்மேல் செறிந்து அழுந்தும்படி வீசினான். அது கண்டு தேவர்களும் திகைப் புற்றார்கள்.

கு:—பறித்தான், வானவர் ஆர்த்திட நெடும்படை பலவா முறித்தான்; அவன் வலிகண்டு தேவாந்தகன் தோமரம் வாங்கா, அவன் இடத்தோள் மிசைச் செறித்தான்; (அதுகண்டு) இமையோர்களும் திகைத்தார் என்க. மறித்து - மீண்டு. தோமரம் - இரும் புலக்கை. செறித்தல் - பதியும்படி அழுத்துதல். (169)

8026. சுடர்த்தோமர மெறிந்தார்த்தலுங்
கனலாமெனச் சுளித்தா
னடற்றோமரம் பறித்தான்றிரிந்
துருமேறென வடித்தான்

புடைத்தானவன் றடந்தேரொடு
நெடுஞ்சாரதி புரண்டான்
மடற்றோகையர் வலிவென்றவன்
வானோர்முக மலர்ந்தார்.

சுடர்த் தோமரம் எறிந்து ஆர்த்தலும்,
கனல் ஆம் எனச் சுளித்தான்,
அடல் தோமரம் பறித்தான், திரிந்து
உரும் ஏறு என ஆர்த்தான்,
புடைத்தான்; அவன் தடந் தேரொடு
நெடுஞ் சாரதி புரண்டான்;—
மடல் தோகையர் வலி வென்றவன்—
வானோர் முகம் மலர்ந்தார்.

பொ:—ஒளிபொருந்திய தோமரப் படையினை (அனுமன்மேல்) எறிந்து (தேவாந்தகன்) ஆரவாரித்தலும், மடப்பம் பொருந்திய மயில்போலும் சாயலினையுடையராகிய மகளிர் ஏதுவாகவுண்டாகும் காமமாகிய அகப்பகையின் வன்மையை வென்றவனாகிய அனுமன், நெருப்பெனச் சினம் பொங்கியவனாய்(த் தேவாந்தகனது) வலிமிக்க தோமரப் படையினை (வலிந்து) பற்றித் திரிந்து இடியேறுபோன்று ஆரவாரித்து (அவன் தேர்மேல்) புடைத்தான்; (அதனால்) அவனுடைய தேரைச் செலுத்திய பெரிய சாரதி நெடிய தேருடனே புரண்டான். (அது கண்டு) தேவர்கள் (மகிழ்ச்சியால்) முகமலரப் பெற்றார்கள்.

கு:—மடத்தோகையர் வலி என்றது, காமுறுந்தன்மையராகிய மகளிர் ஏதுவாக ஆடவருள்ளத்தே தோன்றும் காமமாகிய வலிய பகை அதனை வென்றவன் என்றது, பிரமசரிய நோன்பினைக் கடைப்பிடித்து ஐம்புலப்பகை கடந்த வீரனாகிய அனுமனை.

மகளிர் காரணமாக வரும் காமமாகிய அகப் பகையின் தீமையினைக் குறித்து வசிட்ட முனிவர் இராமனுக்கு அறிவுறுத்தும் முறையில் அமைந்தது,

'தூமகேது புவிக்கெனத் தோன்றிய
வாம மேகலை மங்கையரால் வரும்
காம மில்லையெனிற் கடுங் கோடையாம்
நாம மில்லை நரகமு மில்லையே.' (மந்தரை சூழ்ச்சி–21)

என வரும் பாடலாகும். மடத்தோகையர் வலிவென்றவன், சுளித்தான், அடல் தோமரம் பறித்தான், திரிந்து உரும்ஏறு என

ஆர்த்துப் புடைத்தான். (அதனால்) நெடுஞ்சாரதி தேருடன் புரண்டான்; (அது கண்டு) வானோர் முகம் மலர்ந்தார் என்க. சாரதி- தேர்ப்பாகன். (170)

இதன்பின் 52 என்னும் எண் பெற்ற அச்சுப்புத்தகத்திற் பின் வருமாறு மிகைப்பாடல் ஒன்று குறிக்கப்பெற்றுள்ளது :—

8026 (a) துள்ளிக்களி வயவானரர்
ஆர்த்தார்; அவைதோன்றக்
கள்ளக்கடு நிருதக்குலம்
கண்டப்படக் கண்டே,
உள்ளக்கடு வேகத்தொடு
தேவாந்தகன், உளத்தே
கொள்ளைப்படை அனையஃதுஒரு
கொடுஞ்சூலம் கைக்கொண்டான்.

8027. சூலப்படை தொடுவான்றனை
யிமையாதமுன் றொடர்ந்தான்
ஆலத்தினும் வலியானும் வந்து
எதிரேபுகுந்து அடர்த்தான்
காலாற்கிரு கண்ணுன்றன
கையாலவன் கதுப்பின்
மூலத்திடை புடைத்தானுயிர்
முடித்தான்சிர மடித்தான்.

சூலப் படை தொடுவான் தனை இமையாதமுன் தொடர்ந்தான்;
ஆலத்தினும் வலியானும் வந்து எதிரே புகுந்து அடர்த்தான் ;
காலற்கு இரு கண்ணுன் தன கையால் அவன் கதுப்பின்
மூலத்திடை புடைத்தான் உயிர் முடித்தான், சிரம் மடித்தான்.

பொ :—(அந்நிலையிற்) சூலப்படையினைக் கையிற்கொண்ட தேவாந்தகனை இமைப்பொழுதிற்குள் (அனுமன்) தொடர்ந்து பொருதான்: ஆலகால நஞ்சினும் கொடியோனாகிய அத் தேவாந்தகனும் (அவனை அணுகி) வந்து எதிரே புகுந்து தாக்கினான். (மாற்றார் உயிரைக் கவருந்திறத்தில்) கூற்றுவனுக்கு இரு கண் போல்வானாகிய அனுமனும், தன் கையால் அத் தேவாந்தகனது கன்னத்தின் அடிப் பாகத்திலே ஓங்கிப் புடைத்து அவனுடைய தலையைத் தடிந்து உயிரைப் போக்கினான்.

கு :—ஆலத்திலும் வலியான் என்றது தேவாந்தகனை. காலற்கு இரு கண்ணன் என்றது, அனுமனை. கதுப்பு-கன்னம். மூலம்-அடிப்பகுதி. (171)

## அதுகண்டு வெகுண்டு தேரில் வந்த அதிகாயன் அனுமனுடன் வீரவுரை பகர்தல்

8028. கண்டானெதி ரதிகாயனுங்
கனலாமெனக் கனன்றான்
புண்டானெனப் புனலோடிழி
யுதிரம்விழி பொழிவா
னுண்டேனிவ னுயிரிப்பொழு
தொழியேனென வுரையாத்
திண்டேரினைக் கடிதேவெனச்
சென்றானவ னின்றான்.

கண்டான் எதிர் அதிகாயனும்,
கனல் ஆம் எனக் கனன்றான்,
புண்தான் எனப் புனலோடு இழி
உதிரம் விழி பொழிவான்,
'உண்டேன் இவன் உயிர் இப்பொழுது;
ஒழியேன்' என உரையா,
'திண்தேரினைக் கடிது ஏவு' என,
சென்றான்,—அவன் நின்றான்.

பொ :—அதிகாயனும் (தேவாந்தகன் இறந்ததனைத்) தன் கண்ணெதிரே கண்டான்; அனல்போல வெகுளி மூளப் பெற்றான்; புண்ணே எனத்தோன்றுமாறு கலுழ்நீருடன் இழியும் குருதியினைக் கண்வழியே சொரிபவனாய், 'இவனுயிரை இப்பொழுதே உண்டேன்; (இவனைக் கொல்லுதலை) ஒழியேன்' எனச் சூளுரைத்து, 'திண்ணிய தேரினை விரைந்து செலுத்துக' என(ப் பாகனுக்குச் சொல்லி) (அனுமன் உள்ள இடத்திற்கு)ச் சென்றான். அவ் அனுமன் (அவன் வருகையை எதிர்நோக்கி) நின்றான்.

கு :—உண்டேன் என்றது, விரைவுபற்றி எதிர்காலம் இறந்த காலமாகக் கூறியது. இவன், அவன் என வந்த சுட்டுப் பெயர்கள் அனுமனைச் சுட்டி நின்றன. (172)

8029. அன்னான்வரு மளவின்றலை
நிலைநின்றன வனிகம்
பின்னானது முன்னானது
பிறிந்தார்களுஞ் செறிந்தார்
பொன்னாலுயர் நெடுமால்வரை
போல்வானெதிர் புக்கான்
சொன்னானிவை யதிகாயனும்
வடமேருவைத் துணிப்பான்.

அன்னான்வரும் அளவின்தலை, நிலை நின்றன அனிகம்,
பின் ஆனதும் முன் ஆனது; பிறிந்தார்களுஞ் செறிந்தார்;
பொன்னால் உயர் நெடுமால் வரை போல்வான் எதிர் புக்கான்,
சொன்னான் இவை, அதிகாயனும், வட மேருவைத் துணிப்பான்.

பொ :—அவ்வதிகாயன் வரும் அளவின் கண்ணே நிலைத்து நின்றனவாகிய (அரக்கர்) சேனைகளுள் பின்னிட்டதும் முன் வருவதாயிற்று. பிரிந்து சென்ற வீரர்களும் (உடன் வந்து) நெருங்கினார்கள். வடதிசைக் கண்ணதாகிய மேரு மலையையும் துணிக்க வல்லனாகிய அதிகாயனும், பொன்னால் உயர்ந்து வளர்ந்த நெடிய பெரிய மலையினையொத்த தோற்றமுடையவனாகிய அனுமனுக்கு எதிரே புக்கு இவ் வார்த்தைகளைக் கூறினான்.

கு :—அளவின் தலை - அளவின் கண்ணே; தலை, ஏழனுருபு அனிகம்-சேனை. பொன்னால் உயிர் நெடுமால்வரை போல்வான் என்றது அனுமனை. வடமேருவைத் துணிப்பான் அதிகாயனும் இவை சொன்னான் என இயையும். அவன் சொல்லியவை அடுத்து வரும் இரண்டு செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். (173)

8030. தேய்த்தாயொரு தனியெம்பியைத்
தலைத்தோடொரு திறத்தால்
போய்த்தாவினை நெடுமாகடல்
பிழைத்தாய்கடல் புகுந்தாய்
வாய்த்தானையு மடித்தாயது
கண்டேனெதிர் வந்தேன்
ஆய்த்தாயது முடிவின்றுனக்
கணித்தாகவந் தடுத்தாய்.

'தேய்த்தாய், ஒரு தனி எம்பியைத்
தலத்தோடு; ஒரு திறத்தால்
போய்த் தாவினை நெடு மாகடல்,
பிழைத்தாய்; கடல் புகுந்தாய்,
வாய்த்தானையும் மடித்தாய்; அது
கண்டேன், எதிர் வந்தேன்;
ஆய்த்து ஆயது முடிவு, இன்று உனக்கு;
அணித்தாக வந்து அடுத்தாய்.

பொ:—என்னுடைய ஒப்பற்ற தம்பியாகிய அட்சகுமாரனை நிலத்தொடு (பொருந்தத்) தேய்த்துக் கொன்றாய்; (நீ கற்று வல்ல) சூழ்ச்சித்திறம் ஒன்றினால் நீண்ட பெருங்கடலைத் தாவிப்போய் உயிர் பிழைத்தாய்; மீண்டும் கடலைத் தாண்டி இங்குப் புகுந்தாய்; (நின்னொடு பொருதற்குக்) கிடைத்தவனாகிய தேவாந்தகனையும் கொன்றொழித்தாய்; (நின் செயலாகிய) அதனை நேரே கண்டேனாகி நின்னெதிரே வந்துள்ளேன்; இன்று உனக்கு அழிவு நெருங்கி விட்டது; (அதனால்தான் நீ எனக்குச்) சமீபமாக வந்து சேர்ந்துள்ளாய்.

கு:—அனுமன் அட்சகுமாரனைக் காலால் தேய்த்துக் கொன்ற செய்தி சுந்தர காண்டத்தில் விரித்துரைக்கப்பட்டது. வாய்த்தான் என்றது, ஈண்டு அனுமனொடு பொருதற்கு வந்து நேர்பட்டவனாகிய தேவாந்தகனை. வாய்த்தல்–நேர்படுதல். ஆய்த்து ஆயது–ஆயிற்று ஆயிற்று; விரைவு பற்றிய அடுக்கு. முடிவு–இறுதி; அழிவு. அணித்தாக–சமீபமாக. (174)

8031. இன்றல்லது நெடுநாளுனை
யொருநாளினு மெதிரே
னென்றல்லது செய்தாயெமை
யிளையோனையு முனையும்
வென்றல்லது மீளாதவென்
மிடல்வெங்கணை மழையாற்
கொன்றல்லது செல்லேனிது
கொள்ளென்றனன் கொடியோன்.

'இன்று அல்லது, நெடுநாள் உனை
ஒரு நாளினும் எதிரேன்;
ஒன்று அல்லது செய்தாய் எமை;
இளையோனையும் உனையும்

வென்று அல்லது மீளாத என்
மிடல் வெங்கணை மழையால்
கொன்று அல்லது செல்லேன்; இது
கொள்' என்றனன், கொடியோன்.

பொ :—'உன்னை இன்றைக்கு(க் கொன்றால் கொல்வேனே) அன்றி இனிவரும் நீண்ட நாட்களுள் ஒரு நாளிலும் எதிர்க்க மாட்டேன். (நீ) எம் திறத்து ஒன்று என்னும் அளவிலன்றி(ப் பல தீங்குகளை)ச் செய்துள்ளாய். (ஆகவே) வெற்றி கொண்டன்றி மீளுத லில்லாத என்னுடைய வலிமிக்க கொடிய அம்புமழையால் (இராமன்) தம்பியாகிய இலக்குவனையும் உன்னையும் கொன்றாலன்றி வறிதே மீளேன்; இதனை (என்னுடைய வஞ்சினமாக நின்னுள்ளத்திற்) கொள்வாயாக' என்று கூறினன் கொடியோனாகிய அதிகாயன்.

கு :—அல்லது என்பது, அன்றி என்னும் பொருளில் ஆளப் பெற்றது. எமை ஒன்றல்லது செய்தாய் என்க. எமை-எமக்கு; உருபுமயக்கம். கொள்-கொள்வாயாக. (175)

அவ்வுரை கேட்டுச் சிரித்த அனுமன், திரிசிரனை
நான் கொல்லும்படி இங்கு அழை எனக் கூறுதல்

8032. பிழையாதது பிழையாதெனப்
பெருங்கைத்தலம் பிசையா
மழையாமெனச் சிரித்தான்வட
மலையாமெனு நிலையான்
முழைவாளரி யனையானையு
மெனையும்மிக முனிவாய்
அழையாய்திரி சிரத்தோனையு
நிலத்தோடுமிட் டரைக்க.

'பிழையாது; இது பிழையாது' எனப்
பெருங் கைத்தலம் பிசையா,
மழை ஆம் எனச் சிரித்தான்—வடமலை
ஆம் எனும் நிலையான்—
'முழைவாள் அரி அனையானையும்
எனையும் மிக முனிவாய்;
அழையாய் திரிசிரத் தோனையும்
நிலத்தோடும் இட்டு அரைக்க.'

பொ :—வடதிசைக் கணுள்ள மேருமலை போன்று சலியாத திண்மை நிலையினனாகிய அனுமன் (அதிகாயன் கூறிய வஞ்சினத்தைக் கேட்டு, 'இது தப்பாது தப்பாது' என்று தன் பெரிய கைகளைப் பிசைந்து, குகையுள் வாழும் சிங்கம் போல்வானாகிய இலக்குவனையும் என்னையும் மிகவும் வெகுள்கின்றாய். (யான்) நிலத்துடன் தள்ளித் தேய்த்துக் கொல்லுதற்கு முத்தலையினனாகிய திரிசிரனையும் (உனக்குத் துணையாக) அழைத்துக் கொள்வாயாக' எனக்கூறி மழையுடன்கூடிய இடியோசையினை யொத்து(ப் பேரொலிபட)ச் சிரித்தான்.

கு :—இது என்றது அதிகாயன் கூறிய வஞ்சினத்தை. பிழைத்தல்–நிகழாது பொய்த்தல். பிழையாது, பிழையாது என்னும் இவ்வடுக்கு, குறிப்பினால் தப்புதல் ஒருதலை என எதிர்மறைப் பொருள் தந்தது. (176)

## அதுகேட்டுத் திரிசிரன் ஆரவாரித்து வர, அனுமன் அவனைத் தரையிலிட்டு அரைத்து மேல் திசை வாயிலுக்குப் போதல்

8033. ஆமாமெனத் தலைமூன்றுடை
யவனார்த்துவந் தடர்த்தான்
கோமான்றனிப் பெருந்தூதனு
மெதிரேசெருக் கொடுத்தான்
காமாண்டவர் கல்லாதவர்
வல்லீரெனக் கழறு
நாமாண்டன ரயனின்றுற
நடுவேபுக நடந்தான்.

'ஆம், ஆம்!' என, தலை மூன்றுடையவன்
ஆர்த்து வந்து, அடர்த்தான்;
கோமன் தனிப் பெருந் தூதனும்,
எதிரே செருக் கொடுத்தான்,
'காமாண்டவர், கல்லாதவர்,
வல்லீர்!' எனக் கழறு,
நாமாண்டனர் அயல் நின்று உற,
நடுவே புக நடந்தான்.

பொ :—(இவ்வாறு அனுமன் கூறக்கேட்டு) மூன்று தலைகளை யுடையனாகிய திரிசிரன் என்பான், 'ஆம் ஆம்' எனச் சொல்லி ஆர

வாரித்துக்கொண்டு வந்து தாக்குதற்கு நெருங்கினன். வேந்தர் பிரானுகிய இராமனது ஒப்பற்ற தூதனுகிய அனுமானும் (திரிசிர னுக்கு) எதிரே பொருதற்கு இசைவு கொடுத்தவனுகி, 'காமத்தால் மிக்கவர்களும் (அற நூல்களைக்) கல்லாதவர்களுமாகிய நீவிர் என் னுடன் போர் செய்தற்கு வல்லீரோ? என இடித்துரைத்து அயலே நின்ற அரக்கர்கள் அச்சத்தின் மிகுதியால் இறந்தொழியுமாறு (அவ் வரக்கர் சேனையின்) நடுவே நடந்து உட்புகுந்தான்.

கு :—ஆம் ஆம்-ஆகும் ஆகும்?; ஆகாது என்பது குறிப்பு. தலை மூன்றுடையவன்-மூன்று தலைகளையுடைய திரிசிரன் என்னும் அரக்கன். கோமான் என்றது சக்கரவர்த்தித் திருமகனுகிய இராமனை. தூதன்-அனுமன். செருக்கொடுத்தல்-போருக்கு இசை வளித்து எதிர் நிற்றல். காமம் என்பது காம் எனக் கடைக் குறைந்தது. கழறுதல்-இடித்துரைத்தல், அயல் நின்றவர் நாம் மாண்டு அற-அருகே நின்ற அரக்கர்கள் அச்சத்தால் இறந்தொழிய. (177)

8034. தேர்மேற்செலக் குதித்தான்றிரி
சிரத்தோனையொர் திறத்தாற்
கார்மேற்றுயின் மலைபோலியைக்
கரத்தாற்பிடித் தெடுத்தான்
பார்மேற்படுத் தரைத்தானவர்
பழிமேற்படப் படுத்தான்
போர்மேற்றிசை நெடுவாயிலி
னுளதாமெனப் போனன்.

தேர்மேல் செலக் குதித்தான், திரி
சிரத்தோனை ஒர் திறத்தால்,
கார்மேல் துயில் மலிபோலியைக்
கரத்தால் பிடித்து எடுத்தான்,
பார்மேல் படுத்து அரைத்தான்,
அவன் பழிமேற்படப் படுத்தான்,
'போர் மேல்திசை நெடுவாயிலின்
உளதாம்' என, போனன்.

பொ :—(சேனையினுட் புகுந்த அனுமன் திரிசிரனுடைய) தேரின் மேற் சென்று பொருந்தும்படி தாவிப் பாய்ந்தான்; மேகங்கள் மேலே படிந்து உறங்கும் மலைபோன்றவனுகிய திரிசிரனை ஒப்பற்ற வன்மைத்

திறத்தால் தன் கையினுற் பற்றியெடுத்தவனுய் அவனைப் பூமியில் தள்ளித் தேய்த்து அவனுக்குப் பழி மிகும்படி கொன்ருன் ; பின்னர் மேலைத் திசையிலுள்ள நீண்ட வாயிலிற் போர் உள்ளது என்று (அங்கு விரைந்து) சென்ருன்.

கு :—இலங்கையின் மேற்றிசை வாயிலை முற்றி நிற்கும் கடமையினையுடைய அனுமன், வடதிசை வாயிலில் அதிகாயனெடு இலக்குவனிடையே நிகழும் போரினையும் மேல்நின்று கண்டு அங்கு விரைந்து வந்து பகைவரைப் பொருதழிப்பவன், தனது காவலிற் பட்ட மேலைத் திசை வாயிலிற் கடும்போர் நிகழ்வதறிந்து அங்கு விரைந்து சென்ருன் என்க. (178)

### உனுமனது ஆற்றலை வியந்த அதிகாயன், தன் வஞ்சினத்தை யெண்ணி இலக்குவனுடன் பொரக் கருதியவனுய்த் தன் தேரை அவன்முன் செலுத்தச் செய்தல்

8035. இமையிடை யாகச் சென்ரு
★ னிகலதி காய னின்ரு
னமைவதொன் ருற்ற றேற்ரு
னருவியோ டழல்கால் கண்ணு
னுமையொரு பாக னேயு
மிவன்முனிந் துருத்த போது
கமையில ஞற்ற லென்னுக்
கதத்தொடுங் குலைக்குங் கையான்.

இமையிடையாகச் சென்ருன் ;
இகல் அதிகாயன் நின்ருன்,
அமைவது ஒன்று ஆற்றல் தேற்ருன்,
அருவியோடு அழல் கால் கண்ணன்,
'உமையொரு பாகனேயும், இவன்
முனிந்து உருத்த போது,
கமையிலன் ஆற்றல்' என்னு,
கதத்தொடும் குலைக்கும் கையான்.

பொ :—(இங்ஙனம்) கண்ணிமைப் பொழுதுக் குள்ளாக (அனுமன் மேலைத்திசை வாயிலை)ச் சென்றடைந்தான். பகைமையுடைய அதிகாயன், தனக்கு ஏற்புடையதொரு (வெற்றிச்) செயலைச் செய்தற் குத் தெளியாதவனுய்(த் தனக்குத் துணையாயினுரைப் போரில்

இழந்தமையாலுளதாகிய) புன்கணீரோடு (வெகுளியால்) நெருப்பினை வெளிப்படுத்தும் கண்களையுடையனாய், 'உமாதேவியை ஒரு பாகத்திற் கொண்ட சிவனேயாயினும் இவ் அனுமன் வெகுண்டு சீற்றத்தை வெளிப்படுத்தியபோது (இவனது) ஆற்றலைப் பொறுத்தல் வன்மையுடையான் அல்லன்' என்று கூறி வெகுளியோடும் மோதித் தாக்கும் கையினையுடையனாகி (த் திகைத்து) நின்றான்.

கு :—இமையிடையாக – இமைப் பொழுதிற் குள்ளாக. இமை – இமைத்தல். இகல் – பகைத்து நிற்கும் வன்மை. தேற்றான் – தெளியான். கமை - பொறுத்தல். கதம் – வெகுளி. குலைத்தல் - ஒன்றோடொன்று மோதித் தாக்குதல். (179)

8036. பூணிப்பொன் றுடைய னாகிப்
புகுந்தநான் புறத்து நின்று
பாணித்தல் வீர மன்றாற்
பருவலி படைத்தோர்க் கெல்லாம்
ஆணிப்பொன் னானன் றன்னைப்
பின்னுங்கண் டறிவெ னென்னாத்
தூணிப்பொற் புறத்தான் றிண்டே
ரிளவன்மேற் றூண்டச் சொன்னான்.

'பூணிப்பு ஒன்று உடையன் ஆகிப்
புகுந்த நான் புறத்து நின்று
பாணித்தல் வீரம் அன்றால்;
பருவலி படைத்தோர்க்கு எல்லாம்
ஆணிப் பொன் ஆனான் தன்னைப்
பின்னும் கண்டு அறிவென்' என்னா,
தூணிப் பொன் புறத்தான், திண் தேர்
இளவல்மேல் தூண்டச் சொன்னான்.

பொ :—(இலக்குவனை வென்றழிப்பது என்னும்) மேற்கோள் ஒன்றினை யுடையவனாகி (இப் போர்க்களத்திற்) புக்க யான், (அதனை நிறைவேற்றாது) புறம்பாக நின்று காலத்தை நீட்டித்தல் வீரம் அன்றாம். மிகுந்த வன்மை படைத்த வீரர்கட்கெல்லாம் (உரைத்து மாற்றறிதற்குரிய) ஆணிப் பொன் போர்ச் சிறப்புடையவனாகிய இலக்குவனைப் பின்னும் எதிர்ப்பட்டு, (அவனது போர்த்திறத்தைக்) கண்டறிவேன் என்று சொல்லி, அம்பருப்புட்டிலைத் தாங்கிய அழகிய முதுகினனாகிய அதிகாயன் (தனது) திண்ணிய தேரினை இராமன்

தம்பியாகிய இலக்குவன்மேற் செலுத்துமாறு (தேர்ப்பாகனுக்குக்) கூறினுன்.

கு :—பூணிப்பு - சிறப்புடையதாகத் தன்ருற் பூணப்பட்ட மேற்கோள். இது பூட்கை எனவும் வழங்கும். பாணித்தல் – காலம் நீட்டித்தல். ஆணிப்பொன் - பொன்னின் மாற்றினை உரைத்து ஒப்பிட்டறிதற்குரிய உரையாணியாகிய மாற்றுயர்ந்த பொன். வீரர்களின் வீரத்தை ஒப்பிட்டுணர்தற்கு உரையாணி போன்று திகழும் வீரருள் வீரன் இலக்குவன் என்பது உணர்த்துவான் 'அவனை ஆணிப்பொன் அனையான்' என அதிகாயன் புகழ்ந்துரைத்தான். தூணி - அம்புப் புட்டில். பொன் - அழகு. புறம் – முதுகு. (180)

8037. தேரொலி கடலைச் சீறச்
சிலையொலி மழையைச் சீறப்
போரொலி முரசி ளேதை
திசைகளிற் புறத்துப் போகத்
தாரொலி கழற்கான் மைந்தன்
ருனையுந் தானுஞ் சென்ருன்
வீரனு மெதிரே நின்ருன்
விண்ணவர் விசயஞ் சொல்ல.

தேர் ஒலி கடலைச் சீற, சிலை ஒலி மழையைச் சீற,
போர் ஒலி முரசின் ஓதை திசைகளின் புறத்துப் போக,
தார் ஒலி கழற்கால் மைந்தன், தானையும் தானும் சென்ருன்;
வீரனும் எதிரே நின்ருன், விண்ணவர் விசயம் சொல்ல.

பொ :—வெற்றி மாலையையும் காலின்கண் ஒலிக்கின்ற வீரக் கழலையும் உடைய இராவணனுடைய புதல்வனுகிய அதிகாயன், (தான் ஏறிச் செல்லும்) தேரின் (மணி) ஓசை கடலின் ஆரவாரத்தை வெகுண்டு அடக்கவும், வில் நாணின் ஓசை மழையின் (இடி) ஓசையைச் சினந்து அடக்கவும், போரிலே முழங்குதலையுடைய முரசின் ஒசை எட்டுத் திசைகளின் அப்பாற் சென்று முழங்கவும் சேனையும் தானுமாக (இலக்குவன்மேற்) சென்ருன். (இலக்குவனுகிய) வீரனும் தேவர்கள் (வெல்க வெல்க என) வெற்றி வாழ்த்துக் கூற (அவனது வரவினை நோக்கி) எதிர் நின்ருன்.

கு :—தாரொலி கழற்கால் மைந்தன் என்றது, அதிகாயனை. மைந்தன், சீற, சீற, போக, தானையும் தானும் சென்ருன் எனவும்,

வீரனும் விண்ணவர் விசயம் சொல்ல எதிரே நின்ருன் எனவும் இரு தொடராக இயையும். வீரன் என்றது இலக்குவனை. (181)

### அங்கதன் வேண்டியவாறு இலக்குவன் அவன் தோள்மேல் ஏறியமர்ந்து, அதிகாயனெடு பொருதல்

8038. வல்லையி னணுக வந்து
வணங்கிய வாலி மைந்தன்
சில்லியந் தேரின் மேலா
னவனமர்ச் செலவி தன்ருல்
வில்லியர் திலத மன்ன
நின்றிரு மேனி தாங்கப்
புல்லிய வெனினு மென்ரே
ளேறுதி புனித வென்ருன்.

வல்லியின் அணுக வந்து
வணங்கிய வாலி மைந்தன்,
'சில்லி அம் தேரின் மேலான் அவன்;
அமர்ச் செலவு இது அன்ருல்;
வில்லியர் திலதம் அன்ன
நின் திருமேனி தாங்கப்
புல்லிய எனினும் என்தோள்,
ஏறுதி, புனித!' என்ருன்.

பொ :—(அந்நிலையில்) விரைவாக அணுகிவந்து (இலக்குவனை) வணங்கிய வாலியின் புதல்வஞகிய அங்கதன், 'வில்லாளராகிய வீரர் கட்கெல்லாம் திலகம் போன்றவனே! அவ் அதிகாயன் சக்கரத்தை யுடைய அழகிய தேரின்மேல் உள்ளான். (தேரில் ஏறிப் பொருதற்கு வந்த அவனெடு நீ நிலத்தில் நின்று போர் செய்ய முற்படுதலாகிய) இச் செயல் போர்த் தொழிற்குரிய ஒத்த நடைமுறையன்று. தூயோனே! என்னுடைய தோள்கள் நின்னுடைய திருமேனியைத் தாங்குற்கு (ஏலாத) சிறுமையுடையன வாயினும் (அச்சிறுமை நோக்காது) ஏறியமர்வாயாக' என வேண்டினன்.

கு :—சில்லி - தேர்ச் சக்கரம். அவன் என்றது அதிகாயனை. ஒருவன் தேர்மேல் நின்று போர, அவனுல் எதிர்க்கப்பட்டவன் தரை மேல் நின்று போர் செய்தல் போரின் ஒத்த நடைமுறையன்று என்பான், 'அமர்ச் செலவு இது அன்று' என்ருன். ஆல்–அசை.

(182)

8039. ஆமென வமலன் றம்பி
யங்கத னலங்கற் றோண்மேற்
றாமரைச் சரணம் வைத்தான்
கலுழனிற் றாங்கிநின்ற
கோமக னாற்ற னோக்கிக்
குளிர்கின்ற மனத்த ராகிப்
பூமழை பொழிந்து வாழ்த்திப்
புகழ்ந்தனர் புலவ ரெல்லாம்.

'ஆம்' என, அமலன் தம்பி, அங்கதன் அலங்கள் தோள்மேல் தாமரைச் சரணம் வைத்தான்; கலுழனின் தாங்கி நின்ற கோமகன் ஆற்றல் நோக்கி, குளிர்கின்ற மனத்தர் ஆகி, பூமழை பொழிந்து வாழ்த்திப் புகழ்ந்தனர், புலவர் எல்லாம்.

பொ :—தூயோனாகிய இராமனுக்குத் தம்பியாகிய இலக்குவன், (அங்கதனது வேண்டுகோளை) அவ்வாறே ஆகுக என ஏற்று, அங்கதனுடைய மாலையணிந்த தோளின்மீது தாமரை மலர்போலும் தன் பாதங்களை வைத்து ஏறியமர்ந்தான். (திருமாலைத் தாங்கிய) கருடனைப் போன்று (இலக்குவனைத் தன் தோள்மேல்) தாங்கி நின்ற அரசகுமாரனாகிய அங்கதனது ஆற்றலைக் கண்டு தேவர்கள் எல்லோரும் உள்ளங் குளிர்ந்தவர்களாய் மலர்மழை சொரிந்து (நீடு வாழ்க என) வாழ்த்திப் புகழ்ந்தார்கள்.

கு :—ஆம் என்பது, அவ்வாறே யாகுக என இசைவுப் பொருள் குறித்து வந்தது. அமலன் - மலமற்றவனாகிய தூயோன்; ஈண்டு இராமனைக் குறித்தது. தம்பி என்றது இராமனுக்குத் தம்பியாகிய இலக்குவனை. கலுழன் - கருடன். கோமகன் – அரசகுமாரன்; என்றது வானர குலத்து இளவரசனாகிய அங்கதனை. புலவர்-தேவர். (183)

8040. ஆயிரம் புரவி பூண்ட
வதிர்குர லசனித் திண்டேர்
போயின திசைக ளெங்குங்
கறங்கெனச் சாரி போமால்
மீயெழி னுயருந் தாழிற்
றாழும்விண் செல்லிற் செல்லுந்
தீயெழ வுவரி நீரைக்
கலக்கினன் சிறுவ னம்மா.

ஆயிரம் புரவி பூண்ட அதிர்குரல் அசனித் திண் தேர்
போயின திசைகள் எங்கும், கறங்கு எனச் சாரி போமால்;
மீ எழின் உயரும்; தாழின் தாழும்; விண் செல்லின் செல்லும்;—
தீ எழ உவரி நீரைக் கலக்கினன் சிறுவன் அம்மா!

பொ:—பாற்கடல் நீரைத் தீயெழக் கடைந்து கலக்கிய வாலியின் மைந்தனாகிய அங்கதன், ஆயிரம் குதிரைகள் பூட்டப்பட்ட அதிர்கின்ற இடியினையொத்த ஓசையினையுடைய (அதிகாயனது) திண்ணிய தேர் சென்ற திசைகளிலெல்லாம் (தானும்) காற்றாடி போலத் திரிந்து செல்வான்; (தேர்) மேலே எழுந்தால் (தானும்) உயர்ந்து மேல் எழுவான்; தாழ்ந்தால் (தானும்) தாழ்வான்; ஆகாயத்திற் சென்றால் (தானும்) உடன் செல்வான்.

கு:—ஆயிரங் குதிரை பூட்டிய தேர் அதிகாயனுக் குரியது. அசனி – இடி. கறங்கு - காற்றாடி. உவரி நீர் – கடல் நீர்; ஈண்டுப் பாற்கடற் பரப்பினைக் குறித்தது. கலக்குதல் - கடைதல். கலக்கினன் என்றது, வாலியை. தேவரும் அசுரரும் கூடி மந்தரமலையை மத்தாகவும் வாசுகி யென்னும் பாம்பினைக் கடைகயிறாகவும் கொண்டு பாற்கடலைக் கடைய முற்பட்டபொழுது, வாலி தானொருவனாகவே நின்று கடைந்து அமிழ்தம் எழச் செய்தான் என்ற செய்தி முன்னரும் வாலிவதைப் படலத்திற் குறிக்கப்பட்டது. (184)

8041. அத்தொழி னோக்கி யாங்கு
வானரத் தலைவ ரார்த்தார்
இத்தொழில் கலுழற் கேயு
மரிதென விமையோ ரெல்லாங்
கைத்தலங் குலைத்தா ராகக்
களிற்றினும் புரவி மேலும்
தைத்தன விளைய வீரன்
சரமெனுந் தாரை மாரி.

அத்தொழில் நோக்கி, ஆங்கு வானரத் தலைவர் ஆர்த்தார்;
'இத்தொழில் கலுழற்கேயும் அரிது' என, இமையோர் எல்லாம்
கைத்தலம் குலைத்தார் ஆக, களிற்றினும் புரவி மேலும்
தைத்தன, இளைய வீரன் சரம் எனும் தாரை மாரி.

பொ:—(அங்கதன் செய்த) அத் தொழிலைப் பார்த்து அங்கு வானரத் தலைவர்கள் (மகிழ்ச்சியால்) ஆரவாரித்தார்கள். 'இத்தகைய

தொழில்வன்மை கருடனுக்கும் (வாய்த்தல்) அரிது' என்று தேவர்கள் எல்லோரும் கைத்தலம் குலைத்தனராக, இளைய வீரனாகிய இலக்குவனுடைய தாரையாகப் பொழிகின்ற அம்பு மழைகள் யானைகளின் மீதும் குதிரைகளின்மீதும் தைத்தன.

கு :—இத் தொழில் என்றது, ஊர்தியாக நின்று தாங்கி விரும்பிய இடங்களுக்குச் சென்று போருக்கு உடனாதலை. கைத்தலம் குலைத்தல் - இளைய வீரன் சரம் எனும் தாரை மாரி, களிற்றினும் புரவிமேலும் தைத்தன என இயையும். (185)

8042. முழங்கின முரசம் வேழ
முழங்கின மூரித் திண்டேர்
முழங்கின முகரப் பாய்மா
முழங்கின முழுவெண் சங்கம்
முழங்கின தனுவி னோதை
முழங்கின கழலுந் தாரும்
முழங்கின தெழிப்பு மார்ப்பு
முழங்கின முகிலின் மும்மை.

முழங்கின முரசம்; வேழம் முழங்கின; மூரித் திண் தேர் முழங்கின; முகரப் பாய்மா முழங்கின; முழுவெண் சங்கம் முழங்கின; தனுவின் ஓதை முழங்கின; கழலும் தாரும் முழங்கின; தெழிப்பும் ஆர்ப்பும் முழங்கின, முகிலின் மும்மை.

பொ :—போர் முரசங்கள் இயம்பின; யானைகள் பிளிறின; வலிய திண்ணிய தேர்கள் ஒலித்தன. கனைக்குந் தன்மையினையுடைய தாவிச் செல்லும் குதிரைகள் கனைத்தன; நிரம்பிய வெள்ளிய சங்குகள் முழங்கின; வில்லின் (நாண்) ஓசை முழங்கின; வீரக் கழலும் கிண்கிணியும் ஒலித்தன. வீரர்களது அதட்டும் ஓசையும் ஆரவாரமும் மழை மேகத்தின் (இடி) முழக்கத்தைக் காட்டிலும் மும்மடங்கு மிகுதியாக ஆரவாரித்தன.

கு :—மூரி - வன்மை. முகரம் - கனைத்தல். கழல் - வீரர்கள் வெற்றிக்கு அடையாளமாகத் தம் கால்களில் அணியும் அணி. தார் — காலில் அணியும் கிண்கிணி. 'கிண்கிணி களைந்த கால் ஒண்கழல் தொட்டு' (புறம் – 72) என்புழி ஆடவர்கள் சிறு பருவத்தில் அணிந்துகொள்ளுதற்குரிய கிண்கிணி என்னும் காலணியும் வெற்றி குறித்துக் காலில் அணிந்துகொள்ளுதற்குரிய வீரக்கழலும் ஒருங்கே குறிக்கப் பெற்றுள்ளமை காணலாம். தெழிப்பு - அதட்டுதல். (186)

8043. கரிபடக் காலாள் வெள்ளங்
களப்படக் கலினக் கால்பொற்
பரிபடக் கண்ட கூற்றும்
பயம்படப் பைம்பொற் றிண்டே
ரெரிபடப் பொருத பூமி
யிடம்பட வெதிர்ந்த வெல்லாம்
முரிபடப் பட்ட வீரன்
முரட்கணை மூரி மாரி.

கரிபட, காலாள் வெள்ளம் களம்பட, கலினக் கால் பொன்
பரிபட, கண்ட கூற்றும் பயம்பட, பைம்பொன் திண் தேர்
எரிபட, பொருத பூமி இடம்பட, எதிர்ந்த எல்லாம்
முரிபட, பட்ட வீரன் முரண் கணை மூரி மாரி.

பொ:—யானைகள் இறக்கவும் போர்க்களத்திலே வெள்ளம் போலும் காலாட்படை வீரர்கள் இறக்கவும், கல்லணை பொருந்திய காற்றினைப்போலும் விரைந்த செலவினையுடைய குதிரைகள் இறக்கவும் (இலக்குவனது போர் நிகழ்ச்சியைக்) கண்ட இயமனும் அச்சப் படவும், பசிய பொன்னினால் இயன்ற திண்ணிய தேர்கள் (தீப்பற்றி) எரியவும், போர் நிகழ்ந்த போர்க்களம் (சேனைகள் அழிந்தமையால்) இடமுடையதாய் (ப்பரவி)த் தோன்றவும், எதிர்ந்த அரக்கர் சேனை யெல்லாம் அழிந்தொழியவும் இலக்குவனுடைய வலிய அம்புகளாகிய மழைத்தாரைகள் யாண்டும் சென்று தைத்தன.

கு:—கரிபட, காலாள் வெள்ளம்பட, பரிபட, கூற்றும் பயப்பட, தேர் எரிபட, பூமி இடம்பட, எதிர்ந்த எல்லாம் முரிபட வீரன் முரண் கணை மூரிமாரி பட்ட என இயையும். படுதல் என்ற சொல் இறத்தல்; உண்டாதல், பொருந்தித் தைத்தல் என்ற பொருள் களில் இங்கு ஆளப்பெற்றது. (187)

இதன் பின் 52 என்னும் எண் பெற்ற அச்சுப்புத்தகத்திற் பின் வரும் பாடல்கள் மிகைப் பாடல்களாகக் குறிப்பிடப் பெற்றுள்ளன:—

8043. (a) ஆங்கு அது நிகழக் கண்ட
அடல் அதிகாயன் சீறி,
தாங்கு பல் அண்ட கோடிதான்
பிளந்து உடைய, தன் கை
வாங்கினன் சிலை; நாண்
ஓசை படைத்தபின், வாளிமாரி
பாங்குறு கவியின் சேனைக்
கடல்மிசைப் பரப்பி ஆர்த்தான்.

(b) ஆர்த்து அரும் பகழி மாரி
ஆயிரகோடி மேலும்
தூர்த்து, அடல் கவியின் சேனை
துகள்படத் துணிந்து சிந்தப்
பேர்த்தனன் சிலை நாண் ஓதை;
பிறைமுகப் பகழி பின்னும்
கோத்தனன், அனந்த கோடி
கோடியின்-கொதித்து வெய்யோன்.

(c) உருத்து அதிகாயன், மேன்மேல்
ஒண் சுடர்ப் பகழி மாரி
நிரைத்தலின், இடைவிடாது
நெடுங்கவிச் சேனை வெள்ளம்
தரைத்தலம் அதனில் பட்டுத்
தலை உடல் சிதற, சோரி
இரைத்து எழு கடலின் பொங்க,
இமையவர் அலக்கணுற்றார்.

(d) கரடியின் சேனையோடு
கவிக் குலத்தானை எல்லாம்
தரைப்பட, சரத்தின் மாரித்
தசமுகன் சிறுவன்-சீற,
கரை அறு கவியின் சேனைத்
தலைவர்கள் கனலின் பொங்கி,
வரையொடு மரமும் கல்லும்
வாங்கினர், விரைவின் வந்தார்.

(e) வானரத் தலைவர் பொங்கி
வருதலும், அரக்கன் மைந்தன்,
போனதிக்கு அறிவுறாமல்,
பொழிந்திடும் பகழி தன்னால்
ஆனவர் உடலம் முற்றும்
அழித்தனன்; குருதி பொங்க,
தான் அறிவு அறிந்து, யாரும்
தனித்தனி தலத்தின் வீழ்ந்தார்.

(f) திசை முகம் கிழிய, தேவர்
சிரம் பொதிர் எறிய, திண்தோள்
தசமுகன் சிறுவன், பின்னும்,
தடஞ் சிலை குழைய வாங்கி,

விசைகொள் நாண் எறிந்து,
மேன்மேல் வெங்கவித்தானை வெள்ளம்
பசை அறப் புலர்ந்து போகப்
பொழிந்தனன், பகழி மாரி.

(g) 'வீரருக்கு ஒருவரான விறல்
அதிகாயன், வெம்போர்
ஆர் இனித் தடுக்க வல்லார்'
எனப் பதைத்து, அமரர் எல்லாம்
சோர்வுறத் துளங்கி, நில்லாது
ஓடினர்; சுடரும் வைவேல்
போர்வலி அரக்கன் சேனை
புகுந்தது கடலின், பொங்கி.

(h) அங்கதன் தோளில் நின்ற
அண்ணல், ஆங்கு அதனைக் கண்டே
செங்கையில் பிடித்த வீரச்
சிலையை நாண் எறிந்து, தீரா
வெங்கொலை அரக்கன் விட்ட
கணை எலாம் விளிய வீசி,
துங்க வேல் நிருதர் தானை
துணிபடச் சொரிந்தான், வாளி.

(i) உரைபெறு புவனம் மூன்றும்
ஒழிந்திடும் காலத்து, ஏழு
கரு முகில் பொழிவது என்னக்
கணைமழை சொரிந்து, காலாள்
இரதமொடு இபங்கள் வாசி
யாவையும் களத்தின் வீழ்த்தி,
பொருதிறல் அரக்கனோடும்
புகுந்து, அமர்கடிதின் ஏற்றான்.

என் உனக்கு இச்சை? என இலக்குவன் வினவ
அதிகாயன் மறுமொழி பகர்தல்

8044. மன்னவன் றம்பி மற்றவ்
விராவணன் மகனை நோக்கி
யென்னுனக் கிச்சை நின்ற
வெறிபடைச் சேனை யெல்லாஞ்

சின்னபின் னங்கள் பட்டாற்
பொருதியோ திரிந்து நீயே
நன்னெடுஞ் செருச்செய் வாயோ
சொல்லுதி நயந்த தென்றான்.

மன்னவன் தம்பி, மற்று அவ்
இராவணன் மகனை நோக்கி,
'என் உனக்கு இச்சை? நின்ற
எறிபடைச் சேனை எல்லாம்
சின்ன பின்னங்கள் பட்டால்,
பொருதியோ? திரிந்து நீயே
நல் நெடுஞ் செருச் செய்வாயோ?
சொல்லுதி, நயந்தது' என்றான்.

பொ:—மன்னன் இராமனுடைய தம்பியாகிய இலக்குவன், அந்த இராவணன் மைந்தனாகிய அதிகாயனைப் பார்த்து, 'எறிதற்குரிய படைக்கலங்களைக் கொண்டு (நினக்குத் துணையாய்) நின்ற சேனைகள் யாவும் சிதறுண்டு அழிந்துபட்டால் (அதன் பின்னர்) என்னுடன் போர் செய்வாயோ? (அல்லது இப்பொழுதே) நீ ஒருவனாகவே என்னுடன் திரிந்து நல்ல நீண்ட பெரும் போரைச் செய்வாயோ? (இவ்விரண்டினுள்) உனக்கு விருப்பமாவது யாது? விரும்பியதனைச் சொல்வாயாக எனக் கூறினான்.

கு:—உனக்கு இச்சை என்? நயந்தது சொல்லுதி என்றான் என்க. (188)

8045. யாவரும் பொருவ ரல்ல
ரெதிர்ந்துள யானு நீயுந்
தேவரும் பிறருங் காணச்
செய்வது செய்வ தெல்லாங்
காவல்வந் துன்னைக் காப்பார்
காக்கவு மமையும் வேறே
கூவிய ததனுக் கன்றோ
வென்றனன் கூற்றின் வெய்யோன்.

'யாவரும் பொருவர் அல்லர்,
எதிர்ந்துள யானும் நீயும்,
தேவரும் பிறரும் காண,
செய்வது, செய்வது எல்லாம்;
காவல் வந்து உன்னைக் காப்பார்
காக்கவும் அமையும்; வேறே
கூவியது அதனுக்கு அன்றோ?'
என்றனன்—கூற்றின் வெய்யோன்.

பொ:—(உயிர் கொள்ளுந் திறத்தில்) இயமனைக் காட்டிலும் கொடுமை யுடையவனாகிய அதிகாயன், ('எனக்குத் துணையாக வேறு) யாவரும் நின்னுடன் போர் செய்வாரல்லர். எதிர்ப்பட்டுள்ள யானும் நீயுமே தேவர்களும் மற்றுமுள்ளோர்களும் காணும்படி செய்தற் குரிய போர்த்தொழில் அனைத்தையும் எஞ்சாமற் செய்வது. (இவ்வகையில், உனக்குப்) பாதுகாவலாக வந்து உன்னைக் காத்தற்கு எண்ணுவோர் (அவ்வாறே உன்னைக்) காத்து நிற்கவும் எனக்குச் சம்மதமே. உன்னைத் தனியே யான் போருக்கு அழைத்ததும் (யானொருவனாகவே தனிநின்று பொருதலாகிய) அதன் பொருட்டே யல்லவா?' என்று கூறினான் (அதிகாயன்).

கு:—எதிர்ந்துள யானும் நீயும், தேவரும் பிறரும் காண, செய்வது எல்லாம் செய்வது எனமுடிக்க, எல்லாம் என்னும் சொல் எஞ்சாமைப் பொருள் தந்தது. வேறே கூவுதல் - தனிநின்று போர் செய்தற்கு அறைகூவி யழைத்தல். (189)

8046. உமையனே காக்க மற்றங்
குமையொரு கூறன் காக்க
விமையவ ரெல்லாங் காக்க
வுலகமோ ரேழுங் காக்க
சமையுமுன் வாழ்க்கை யின்றோ
டென்றுதன் சங்க மூதி
யமையுருக் கொண்ட கூற்றை
நாணெறிந் துருமி னார்த்தான்.

'உமையனே காக்க; மற்று அங்கு
உமை ஒரு கூறன் காக்க,
இமையவர் எல்லாம் காக்க;
உலகம் ஓர் ஏழும் காக்க;

சமையும் உன் வாழ்க்கை இன்றோடு
என்று, தன் சங்கம் ஊதி,
அமை உருக் கொண்ட கூற்றை
நாண் எறிந்து, உருமின் ஆர்த்தான்.

பொ :—(உன்னை) உன் தமையனாகிய இராமனே காத்திடுக; அல்லது உமையொரு பாகனாகிய சிவபெருமானே காத்திடுக; தேவர்கள் எல்லோரும் (ஒருங்கு கூடிக்) காத்திடுக; ஏழுலகத்துள்ளோரும் (ஒருங்குவந்து) காத்திடுக. உன் வாழ்க்கை இன்றோடு பொருந்தி முடிவுற்றது' என்று கூறித் தன் கையிலுள்ள வெற்றிச் சங்கினை எடுத்து ஊதி மூங்கிலுருக்கொண்ட யமனை (தன் வில்லை) நாணைத் தெறித்து (அழைத்து) இடிபோன்று ஆரவாரித்தான்.

கு :—உம் ஐயன் - உன் தமையனாகிய இராமன். உன் வாழ்க்கை இன்றோடு சமையும் என இயைக்க, சமைதல் - முடிவுறுதல்; தீர்தல். அமை - மூங்கில்; இங்கு மூங்கிலாலாய வில்லினைக் குறிக்கும். (190)

அதிகாயன் கூறியவற்றைக் கேட்ட இலக்குவன் புன்முறுவல் செய்து அதிகாயன்மேல் அம்பு தொடுத்தல்

8047. அன்னது கேட்ட மைந்த
னரும்பியன் முறுவ றோன்றச்
சொன்னவர் வாரார் யானே
தோற்கினுந் தோற்கத் தக்கேன்
என்னைநீ பொருது வெல்லி
னவரையும் வென்றி யென்னா
மின்னினு மிளிர்வ தாங்கோர்
வெஞ்சரங் கோத்து விட்டான்.

அன்னது கேட்ட மைந்தன், அரும்பு
இயல் முறுவல் தோன்ற,
'சொன்னவர் வாரார்; யானே
தோற்கினும் தோற்கத் தக்கேன்;
என்னை நீ பொருது வெல்லின்,
அவரையும் வென்றி' என்னா,
மின்னினும் மிளிர்வது ஆங்கு ஓர்
வெஞ்சரம் கோத்து விட்டான்.

பொ :—(அதிகாயன் கூறிய) அச்சொல்லைக் கேட்ட இலக்குவன், (முல்லை) அரும்பின் இயல்பினையுடைய புன்சிரிப்புத் தோன்ற, (நீ சொல்லியவர்களுள் ஒருவரும் (எனக்குத் துணையாக) வரமாட்டார்கள். நான் ஒருவனேயாக (நின்னுடன் பொருது) தோற்றாலும் தோற்பேன் ஆகுக. நீ (என்னுடன்) பொருது என்னை வெற்றி கொள்வாயாயின் (நின்னாற் குறிக்கப்பட்ட) அவர்களையும் வெற்றி கொண்டவன் ஆவாய்' என்று கூறி, மின்னலைக் காட்டிலும் ஒளி விட்டு விளங்குவதாகிய வெம்மையுடைய அம்பு ஒன்றை அப்பொழுது (வில் நாணிற்) கோத்து (அவ் வதிகாயன்மேற்) செலுத்தினான்.

கு :—மைந்தன் என்றது, இலக்குவனை. சொன்னவர்-சொல்லப் பட்டவர்கள்; இராமன், சிவன், முதலியோர். சரம் – அம்பு. கோத்து விடுதல் – வில் நாணிற் கோத்து எய்தல். (191)

இலக்குவனும் அதிகாயனும் தம்முட் பெரும்போர் புரிதல்

8048. விட்டவெம் பகழி தன்னை
வெற்பினை வெதுப்புந் தோளான்
சுட்டதோர் கணையி னாலே
விசும்பிடைத் துணித்து நீக்கி
யெட்டினோ டெட்டு வாளி
யிலக்குவ விலக்கா யென்னாத்
திட்டியின் விடத்து நாக
மனையன சிந்தி யார்த்தான்.

விட்ட வெம் பகழி தன்னை, வெற்பினை வெதுப்பும் தோளான், சுட்டது ஓர் கணையினாலே விசும்பிடைத் துணித்து நீக்கி, எட்டினோடு எட்டு வாளி, 'இலக்குவ விலக்காய்' என்னா, திட்டியின் விடத்து நாகம் அனையன சிந்தி ஆர்த்தான்.

பொ :—மலையினையும் (திண்மையால்) வாட்டமுறச் செய்யும் தோள்களையுடைய அதிகாயன், இலக்குவன் செலுத்திய வெம்மை யுடைய அம்பினைச் சுடுந்தன்மையினதாகிய ஓர் அம்பினால் ஆகா யத்தின் கண்ணே துண்டித்துப் போக்கி, 'இலக்குவனே! (என்னால் எய்யப்படும் இவற்றை) விலக்குவாயாக' என்று கூறி, திட்டிவிடம் என்னும் பாம்பை ஒத்தனவாகிய பதினாறு அம்புகளை (இலக்குவன் மேற்) சிதறி ஆரவாரித்தான்.

கு :—வெற்பினை வெதுப்புந் தோளான், ஓர் கணையினாலே விசும்பிடைத் துணித்து நீக்கி, 'இலக்குவ! விலக்காய்' என்று, எட்டினோடு எட்டு வாளி சிந்தி ஆர்த்தான் என்க. திட்டியின் விடத்து நாகம் என்பது, பார்த்த அளவிலேயே பார்க்கப் பட்டாருயிரைப் போக்கும் கொடிய நஞ்சினையுடைய ஒருவகைப் பாம்பு என்பர். (192)

8049. ஆர்த்தவ னெய்த வாளி
யனைத்தையு மறுத்து மாற்றி
வேர்த்தொலி வயிர வெங்கோன்
மேருவைப் பிளக்கற் பால
தூர்த்தன னிராமன் றம்பி
யவையெலாந் துணித்துச் சிந்திக்
கூர்த்தன பகழி கோத்தான்
குபேரனை யாடல் கொண்டான்.

ஆர்த்து அவன் எய்த வாளி அனைத்தையும் அறுத்து மாற்றி வேர்த்து, ஒலி வயிர வெங்கோல், மேருவைப் பிளக்கற் பால, தூர்த்தனன், இராமன் தம்பி; அவை எலாம் துணித்துச் சிந்தி, கூர்த்தன பகழி கோத்தான் குபேரனை ஆடல் கொண்டான்.

பொ :—ஆரவாரித்து அந்த அதிகாயன் ஏவிய அம்புகள் எல்லாவற்றையும் அறுத்துப் போக்கி, வெகுண்டு, மேருமலையையும் பிளக்கும் வன்மையுடையனவாகிய ஒலிக்கும் திண்ணிய கொடிய அம்புகளை(ச் சொரிந்து) நிரப்பினான், இராமன் தம்பியாகிய இலக்குவன். குபேரனை வெற்றி கொண்டவனாகிய அதிகாயன் (இலக்குவன் எய்த) அந்த அம்புகள் எல்லாவற்றையும் துண்டித்துச் சிதறச் செய்து, கூர்மையுடையனவாகிய அம்புகளை (மேலும்) தொடுத்து விடுத்தான்.

கு :—வேர்த்தல்-வெகுளுதல்; காரணத்தைக் காரியமாக உபசரித்தார். 'பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த், துள்வேர்ப்பர் ஒள்ளியவர்' (திருக்குறள்-487) என்புழி வேர்த்தல் வெகுளுதல் என்ற பொருளில் ஆளப்பெற்றுள்ளமை காண்க. இராமன் தம்பி, அவன் எய்த வாளி அனைத்தையும் அறுத்து மாற்றி மேருவைப் பிளக்கற்பால ஒலி வயிரவெங்கோல் தூர்த்தனன் எனவும், குபேரனை ஆடல் கொண்டான், அவையெலாம் துணித்துச் சிந்தி, கூர்த்தன பழிகோத்தான் எனவும் இரு தொடராக இயைத்

துரைக்க. வாளி, கோல், பகழி என்பன அம்பு என்னும் ஒரு பொருள் குறித்த பல பெயர்கள். ஆடல் கொள்ளுதல்-வெற்றி கொள்ளுதல். (193)

8050. எய்தன வெய்த வெல்லா
மெரிமுகப் பகழி யாலே
கொய்தன னகற்றி யார்க்கு
மரக்கனைக் குரிசில் கோபஞ்
செய்தனன் றுரந்தான் றெய்வச்
செயலன்ன கணையை வெங்கோ
ஞெய்தவன் கவசங் கீறி
நுழைவன பிழைப்பி லாத.

எய்தனன் எய்த எல்லாம்,
எரிமுகப் பகழியாலே,
கொய்தனன் அகற்றி, ஆர்க்கும்
அரக்கனைக் குரிசில் கோபம்
செய்தனன் துரந்தான் தெய்வச்
செயல் அன்ன கணையை; வெங்கோல்
நொய்து அவன் கவசம் கீறி
நுழைவன; பிழைப்பு இலாத.

பொ :—(இலக்குவனால்) அடுத்தடுத்து எய்யப்பட்டனவாகிய எல்லா அம்புகளையும் நெருப்புமிழும் முகத்தினையுடைய அம்புகளாலே அறுத்து விலக்கி ஆரவாரித்து நிற்கும் அரக்கனாகிய அதிகாயனை, வீரருட் சிறந்தோனாகிய இலக்குவன், வெகுண்டவனாய், ஊழின் செயலை யொத்த (தன்னுடைய) அம்புகளை (அவன்மேற்) செலுத் தினான். வெம்மையுடைய (அந்த) அம்புகள் குறி தப்புதல் இல்லாதன வாய் அவ் அதிகாயனுடைய மார்பிற் கவசத்தை எளிதிற் பிளந்து கொண்டு (அவனுடம்பினுள்ளே) நுழைவனவாயின.

கு :—குரிசில் என்றது இலக்குவனை. இலக்குவன் வெகுண்டு எய்த அம்புகள் ஊழின் செயலை யொத்துத் தப்பாது பயனளிக்க வல்லன என்பார், 'தெய்வச் செயலன்ன கணை' எனச் சிறப்பித்தார். தெய்வம்-ஊழ். தப்பாது பயனளிக்குந் தன்மைக்கு ஊழ்வினையை உவமைகூறும் மரபுண்டென்பது, 'காரணி கற்பகம்' (400) எனவரும் திருக்கோவையில் தலைவனை விதியோடு ஒப்பித்தமைக்கு, 'தப்பாது பயன் கொடுத்தலின் விதியோடொக்கும்' எனப் பேராசிரியர் கூறும்

உரை விளக்கத்தால் இனிதுணரப்படும். வெங்கோல், பிழைப்பிலாத, அவன் கவசம் நொய்து கீறி நுழைவன என முடிக்க. நொய்து கீறுதல்-எளிதிற் பிளத்தல். (194)

8051. நூறுகோல் கவசங் கீறி
நுழைதலுங் குழைவு தோன்றத்
தேறலாந் துணையுந் தெய்வச்
சிலைநெடுந் தேரி னூன்றி
யாறினா னதுகா லத்தங்
கவனுடை யனிக மெல்லாங்
கூறுகூ றாக்கி யம்பாற்
கோடியின் மேலுங் கொன்றான்.

நூறு கோல் கவசம் கீறி நுழைதலும், குழைவு தோன்றாத் தேறல் ஆம் துணையும், தெய்வச் சிலை நெடுந் தேரின் ஊன்றி ஆறினான்; அது காலத்து அங்கு அவனுடை அனிகம் எல்லாம் கூறு கூறாக்கி அம்பால், கோடியின் மேலும் கொன்றான்.

பொ :—(இலக்குவன் எய்த) நூறு அம்புகள் (தன் மார்பிலுள்ள) கவசத்தைப் பிளந்துகொண்டு உள்ளே புகுதலும், வாட்டத்தால் மயக்கமுண்டாக, அம் மயக்கந் தெளியுமளவும் தெய்வத்தன்மை வாய்ந்த வில்லினை நெடிய தேரிலே ஊன்றிக்கொண்டு நின்று (சிறிது) இளைப்பாறினான் (அதிகாயன்). அப்பொழுது அங்குள்ள அவனுடைய சேனைகள் எல்லாவற்றையும் சின்னபின்னப் படுத்தித் தன் அம்புகளால் கோடிக்கு மேலாகப் பல உயிர்களைக் கொன்றொழித்தான் (இலக்குவன்).

கு :—தேறலாம் துணையும்-தெளிவு பெறும் அளவும். ஆறுதல்-இளைப்பாறுதல். ஆறினான், அதிகாயன். கோடியின் மேலும் கொன்றான், இலக்குவன். (195)

8052. புடைநின்றார் புரண்ட வாறும்
போகின்ற புங்க வாளி
கடைநின்று கணிக்க வாங்கோர்
கணக்கிலா வாறுங் கண்டா

னிடைநின்ற மயக்கந் தீர்ந்தா
  னேந்திய சிலையன் காந்தித்
தொடைநின்ற பகழி மாரி
  மாரியின் மும்மை தூர்த்தான்.

புடை நின்றார் புரண்டவாறும்,
  போகின்ற புங்க வாளி
கடை நின்று கணிக்க ஆங்கு ஓர்
  கணக்கு இலாவாறும் கண்டான்;
இடை நின்ற மயக்கம் தீர்த்தான்;
  ஏந்திய சிலையின் காந்தி,
தொடை நின்ற பகழி மாரி
  மாரியின் மும்மை தூர்த்தான்.

பொ :—(தன்) அயலேநின்ற வீரர்கள் (அம்புபட்டுப்) புரண்டு இறந்ததனையும், (இலக்குவனால் எய்யப்பட்டு விரைந்து) செல்லுகின்ற கூரிய அம்புகள் முழுவதும் நின்று கணக்கிட ஆங்கு ஓர் எல்லையில்லாத வகையையும் (நேரிற்) கண்ட அதிகாயன், (தனக்கு) இடையிலே யுண்டாகிய மயக்கம் தீர்ந்தவனாய், ஏந்திய வில்லையுடையனாகி, உள்ளங்கொதித்து வில்லில் தொடுக்கப்பட்டுள்ள அம்பு மழையினை மழையினும் மும்மடங்கு மிகுதியாக (சொரிந்து) நிரப்பினான்.

கு :—புடைநின்றார்-தனக்குத் துணையாகத் தன் பக்கத்தே நின்ற அரக்கர்கள். புரளுதல்-வீழ்ந்திறத்தல். புங்கம்-கூர்மை. கடை நின்று-முடிவுவரை முழுவதும் இருந்து. கணித்தல்-எண்ணியறிதல். காந்துதல்-கொதிப்புறுதல்; வெகுளுதல். (196)

இதன்பின் 52 என்னும் எண் பெற்ற அச்சுப்புத்தகத்திற் பின் வருமாறு ஒரு மிகைப் பாடல் உளது:—

8052 (a) புரம் எரித் துடைய புத்தேள் முதலிய புலவர் உள்ளம்
திரிதர, அரக்கன் சீறி, திண்சிலை குழைய வாங்கி,
எரிமுகப் பகழி மாரி இடைவிடாது அனந்தகோடி
சொரிதர, அனுமன் ஆதி வீரர்கள் சோர்ந்து வீழ்ந்தார்.

8053. வானெலாம் பகழி வானின்
  வரம்பெலாம் பகழி மண்ணோ
தானெலாம் பகழி குன்றின்
  றலையெலாம் பகழி சாய்ந்தோ

ரூனெலாம் பகழி நின்ருே
 ருடலெலாம் பகழி வேலே
மீனெலாம் பகழி யாக
 வித்தினன் வெகுளி மிக்கோன்.

வான் எலாம் பகழி, வானின் வரம்பு எலாம் பகழி, மண்ணே
தான் எலாம் பகழி, குன்றின் தலே எலாம் பகழி, சார்ந்தோர்
ஊன் எலாம் பகழி, நின்ருேர் உடல் எலாம் பகழி, வேலே
மீன் எலாம் பகழி ஆக வித்தினன்—வெகுளி மிக்கோன்.

பொ :—சினம் மிக்கவனுகிய அதிகாயன், ஆகாயமெல்லாம் அம்புகள், வானின் வரம்பெல்லாம் அம்புகள், மண்ணிடமெல்லாமும் அம்புகள், மலேயின் சிகரமெல்லாம் அம்புகள், (போர்க்களத்திற்) சேர்ந்துள்ளோரின் உடம்பெல்லாம் அம்புகள், எதிரேற்று நிற்போரின் உயிரெல்லாம் அம்புகள், கடலில் வாழும் மீன்களின் மேலெல்லாம் அம்புகள்ஆக இவ்வாறு (அம்புகளே எங்கும்) விதைத்திட்டான்.

கு :—அதிகாயன் வெகுண்டு எய்த அம்புகள், வானப் பரப்பிலும் நிலப் பரப்பிலும் கடற் பரப்பிலும் எதிர்ந்தோர் உடலிலும் உயிரிலும் சென்று தைத்தன என்பதாம். (197)

8054. மறைந்தன திசைக ளெல்லாம்
 வானவர் மனமே போலக்
குறைந்தன சுடரின் மும்மைக்
 கொழுங்கதிர் குவிந்தொன் ஞென்றை
யறைந்தன பகழி வைய
 மதிர்ந்தது விண்ணு மஃதே
நிறைந்தன பொறியின் குப்பை
 நிமிர்ந்தன நெருப்பின் கற்றை.

மறைந்தன திசைகள் எல்லாம்;
 வானவர் மனமே போலக்
குறைந்தன, சுடரின் மும்மைக்
 கொழுங் கதிர்; குவிந்து ஒன்று ஒன்றை

அறைந்தன, பகழி; வையம்
அதிர்ந்தது; விண்ணும் அஃதே;
நிறைந்தன, பொறியின் குப்பை;
நிமிர்ந்தன நெருப்பின் கற்றை.

பொ :—(அதிகாயன் சொரிந்த அம்புகளால்) திசைகள் எல்லாம் மறைந்தன; தேவர்களின் மனம் (மகிழ்ச்சியிற் குறைந்தாற்) போன்று (ஞாயிறு முதலிய) சுடர்களின் செழுமையுற்ற ஒளித் தொகுதிகள், மும்மடங்கு ஒளி மழுங்கின; அம்புகள் பலவாய்க் கூடியனவாய் ஒன்றேடொன்று மோதி யொலித்தன; பூமி அதிர்ச்சியுற்றது; வானுலகும் அவ்வாறே (நடுக்கமுற்றது). தீப்பொறியின் திரள்கள், எங்கும் நிறைந்தன; நெருப்பின் தொகுதிகள் நிமிர்ந்து தோன்றின.

கு :—அதிகாயனது விற்போரின் கொடுமை கண்டு வானோர் மனம் மகிழ்ச்சியிற் குறைந்தமைபோல, ஞாயிறு முதலிய சுடர்கள் அம்புகளால் மறைக்கப்பட்டு மும்மடங்கு ஒளி மழுங்கின என்பார், வானவர் மனமே போல, சுடரின் கொழுங்கதிர் மும்மை குறைந்தன என்றார். மும்மை-மூன்றுமடங்கு. (198)

8055. முற்றிய தின்றே யன்றே
வானர முழங்கு தானை
மற்றிவன் றன்னை வெல்ல
வல்லனோ வள்ள றம்பி
கற்றது கால னேடோ
கொலையிவ னொருவன் கற்ற
விற்றொழி லென்னே யென்னத்
தேவரும் வெருவ லுற்றார்.

'முற்றியது இன்றே அன்றே வானர முழங்கு தானை?
மற்று இவன் தன்னை வெல்ல வல்லனோ வள்ளல் தம்பி?
கற்றது காலனோடோ, கொலை இவன்? ஒருவன் கற்ற
வில் தொழில் என்னே!' என்ன, தேவரும் வெருவலுற்றார்.

பொ :—'ஆரவாரிக்கின்ற வானர சேனை இன்றோடு தீர்ந் தொழிந்ததல்லவா? வள்ளன்மையுடைய இராமனது தம்பியாகிய இலக்குவன் இவ் அதிகாயனை வெல்ல வல்லனோ? (இவ் அதிகாயன்) கொல்லுதற்றொழிலைக் கற்றுக்கொண்டது இயமனுடன்தானோ? ஒப்பற்றவனாகிய இவன் கற்றுள்ள வில் வித்தை (இருந்தவாறு)

என்னே' என (வியந்து) கூறி (மேலுள்ள) தேவர்களும் அச்சமுற்றார்கள்.

கு:—முழங்கு வானர தானை இன்றே முற்றியது அன்றோ? வள்ளல் தம்பி இவன் தன்னை வெல்ல வல்லனோ? இவன் கொலை கற்றது காலனோடோ? ஒருவன் கற்ற வில் தொழில் என்னே!' என்றுத் தேவரும் வெருவலுற்றார் என இயைத்துரைக்க. முற்றுதல்-தீர்ந்தொழிதல். (199)

8056. அங்கத னெற்றி மேலுந்
தோளினு மாகத் துள்ளும்
புங்க முந்தோன்ற வண்ணம்
பொருசரம் பலவும் போக்கி
வெங்கணை யிரண்டு மொன்றும்
வீரன்மே லேவி மேகச்
சங்கமு மூதி விண்ணோர்
தலைபொதி ரெறிய வார்த்தான்.

அங்கதன் நெற்றி மேலும் தோளினும் ஆகத்துள்ளும்
புங்க முந்தோன்ற வண்ணம் பொரு சரம் பலவும் போக்கி,
வெங்கணை இரண்டும் ஒன்றும் வீரன்மேல் ஏவி, மேகச்
சங்கமும் ஊதி, விண்ணோர் தலை பொதிரெறிய ஆர்த்தான்.

பொ:—(அந்நிலையில் அதிகாயன்) அங்கதனுடைய நெற்றியின் மேலும் தோளின் மேலும் மார்பினுள்ளும் அடிப்பகுதியும் தோன்றாத வாறு பொருகின்ற அம்புகள் பலவற்றையும் (ஆழச்) செலுத்தி, வெம்மையுடைய அம்புகள் மூன்றினை இலக்குவன் மேற் செலுத்தி மேகத்தின் முழக்கத்தினை யொத்த வெற்றிச் சங்கத்தினையும் ஊதி வானோர் தலை நடுக்கமுற ஆரவாரித்தான்.

கு:—ஆகம் - மார்பு. புங்கம் - அம்பின் அடிப்பாகம். இரண்டும் ஒன்றும் - மூன்று. வீரன் - இலக்குவன். பொதிர் எறிதல் - நடுக்கமுறுதல். (200)

8057. வாலிசேய் மேனி மேலு
மழைபொரு குருதி வாரி
காலுயர் வரையிற் செங்கே
ழருவிபோ லொழுகக் கண்டான்

கோலொடு பத்து நூற்றுற்
குதிரையின் றலேகள் கொய்து
மேலவன் சிரத்தைச் சிந்தி
வில்லேயுந் துணித்தான் வீரன்.

வாலிசேய் மேனி மேலும் மழை
பொரு குருதி வாரி,
கால் உயர் வரையின் செங்கேழ்
அருவிபோல் ஒழுகக் கண்டான்;
கோல் ஒரு பத்து—நூற்ருல்
குதிரையின் தலேகள் கொய்து,
மேலவன் சிரத்தைச் சிந்தி,
வில்லேயும் துணித்தான்—வீரன்.

பொ :—வில் வீரனுகிய இலக்குவன், (தன்னேத் தாங்கிய) வாலியின் மைந்தனுகிய அங்கதனது உடம்பின் மேலும் மழையினே யொத்துப் பொழியும் குருதி வெள்ளமானது, அடிப்பரப்பு உயர்ந்தோங்கிய தாழ்வரையிலே செந்நிறமாக இழியும் அருவியினேப் போன்று ஒழுகுவதனேக் கண்டவனுய், ஒராயிரம் அம்புகளால் (அதிகாயன் தேரிற் பூட்டிய) குதிரைகளின் தலேகளேக் கொய்து தேர்மேலுள்ள பாகனுடைய சிரத்தினேயும் போக்கி (அதிகாயனது) வில்லேயும் துண்டித்தான்.

கு:—வீரன், கண்டான், கொய்து, சிந்தித் துணித்தான் என முடிக்க. வீரன் என்றது இலக்குவனே. செங்கேழ் - செந்நிறம். கோல் – அம்பு. பத்து நூறு - ஆயிரம். மேலவன் – தேர் மேல் உள்ளவனுகிய தேர்ப்பாகன். (201)

8058. மாற்ருெரு தடந்தே ரேறி
மாருெரு சிலேயும் வாங்கி
யேற்றவல் லரக்கன் றன்மே
லெரிமுதற் கடவு ளென்பா
னுற்றல்சால் படையை விட்டா
னுரிய னரக்க னம்மா
வேற்றுள தாங்க வென்னு
வெய்யவன் படையை விட்டான்.

மாற்று ஒரு கடந்தேர் ஏறி,
மாறு ஒரு சிலையும் வாங்கி,
ஏற்ற வல் அரக்கன் தன்மேல்,
எரிமுதற் கடவுள் என்பான்
ஆற்றல் சால் படையை விட்டான்,
ஆரியன்; அரக்கன் அம்மா,
வேற்றுள, 'தாங்க!' என்று,
வெய்யவன் படையை விட்டான்.

பொ:—(அந்நிலையில்) மற்றொரு பெரிய தேர் மேல் ஏறி, வேறொரு வில்லையும் எடுத்துக்கொண்டு எதிர்ந்து வந்த வலிய அரக்கனாகிய அதிகாயன்மீது முதன்மையினை யுடைய அங்கியங்கடவுளது வலிமை மிக்க படைக்கலத்தினைச் செலுத்தினன், மேலோனாகிய இலக்குவன். அதிகாயனும் ('இதுபோன்று என்பால்') வேறும் உள்ளன. ('இதனைத்) தாங்குக' என்று சொல்லி (அதே) ஆக்கினேயாத்திரத்தை (அவ் இலக்குவன்மேற்) செலுத்தினன்.

கு:—அம்மா – வியப்பிடைச் சொல். ஆரியன் – மேலோன்; என்றது இலக்குவனை. எரிமுதற் கடவுள். வெய்யவன் என்பன அங்கியங்கடவுளாகிய தெய்வத்தைக் குறித்த பெயர்கள். எரிமுதற் கடவுள் முதல் எரிக் கடவுள் – முதன்மையினை யுடைய தீயாகிய தெய்வம். தீக் கடவுளுக்குரிய முதன்மையாவது வேள்வியுள் நின்று எல்லாத் தேவர்கட்கும் உணவினைப் பெற்று அளிக்கும் சிறப்பு. (203)

8059. பொருபடை யிரண்டுந் தம்மிற்
பொருதன பொருத லோடு
மெரிகணை யுருமின் வெய்ய
விலக்குவன் றுரந்த மார்பை
யுருவின் வுலப்பி லாத
வுளைகில ஞற்ற லோயான்
சொரிகணை மழையின் மும்மை
சொரிந்தனன் றெழிக்குஞ் சொல்லான்.

பொரு படை இரண்டும் தம்மில்
பொருதன; பொருதலோடும்,
எரிகணை, உருமின் வெய்ய,
இலக்குவன் துரந்த, மார்பை

உருவின, உலப்பு இலாத;
 உளைகிலன், ஆற்றல் ஓயான்
சொரிகணை மழையின் மும்மை
 சொரிந்தனன், தெழிக்கும் சொல்லான்.

பொ :—பொருதலில் வல்ல அக்கினிப் படைகள் இரண்டும் தம்மிற் பொருதன ; அவ்வாறு பொரும் நிலையில், இலக்குவன் ஏவிய இடியினும் வெம்மையுடைய அனலம்புகள் அழியாதனவாய் (அதிகாயனுடைய) மார்பினை ஊடுருவித் துளைத்தன ; (அவை அங்ஙனம் துளைத்துச் செல்லவும் (அதற்குச் சிறிதும்) வருந்தாதவனாய் ஆற்றல் குறையப் பெறாதவனாய் நின்ற அதிகாயன் அதட்டுகின்ற சொல்லையுடையவனாய் (இலக்குவனாற்) சொரியப்பட்ட அம்பு மழையினும் மும்மடங்கு மிகுதியான அம்புகளை (அவன்மேற்) சொரிந்தான்.

கு :—இலக்குவன் துரந்த உருமினும் வெய்ய எரிகணை, உலப்பிலாத மார்பை உருவின எனவும், உளைகிலன் ஆற்றல் ஓயான், தெழிக்குஞ் சொல்லான், சொரிகணை மழையின் மும்மை சொரிந்தனன் எனவும் இரு தொடராக இயைத்துப் பொருள் கொள்க. (203)

8060. பின்னின்றார் முன்னின் றாரைக்
 காணலாம் பெற்றித் தாக
மின்னின்ற வயிர வாளி
 திறந்தன மேனி முற்று
மந்நின்ற நிலையி னாற்றல்
 குறைந்தில னாவி நீங்கான்
பொன்னின்ற வடிம்பின் வாளி
 மழையெனப் பொழியும் வில்லான்.

பின் நின்றார் முன் நின்றாரைக் காணலாம் பெற்றித்து ஆக,
மின் நின்ற வயிர வாளி திறந்தன, மேனி முற்றும் ;
அந் நின்ற நிலையின், ஆற்றல் குறைந்திலன், ஆவி நீங்கான்
பொன் நின்ற வடிம்பின் வாளி மழை எனப் பொழியும் வில்லான்.

பொ :—(இலக்குவனால் ஏவப்பட்ட) ஒளி பொருந்திய திண்ணிய அம்புகள், (அதிகாயனுக்குப்) பின்னே நிற்பவர்கள் முன்னே நிற்பவர்களைக் காணத்தக்க தன்மையுடையதாக (அவ் அதிகாயனுடைய) மேனி முழுவதனையும் (சல்லடைக் கண்கள் போலத்) தொளையாக்கி விட்டன. அங்ஙனம் (உடல் முழுதும் துளைக்கப்பட்டு) நின்ற நிலை

யினும் தன் வன்மை குறையாதவனாய் உயிர் நீங்கப் பெருதவனாய்ப் பொன்னின் தன்மை நிலைபெற்ற கூர்மையைக் கொண்ட அம்புகளை மழைபோலப் பொழிகின்ற வில்லையுடையவன் ஆயினான்.

கு:—மின் - ஒளி. வடிம்பு - கூர்மை. வயிரம் - திண்மை. மின் நின்ற வயிரவாளி, பின் நின்றார் முன் நின்றாரைக் காணலாம் பெற்றித்து ஆக மேனி முற்றும் திறந்தன என்க. இவ்வாறு தன் உடல் முழுவதும் துளைக்கப்பட்ட நிலையிலும் அதிகாயன் தன் வன்மையில் தளராதவனாய் உயிர் தாங்கி நின்று இடியினையொத்த அம்புகளைக் கோத்து மழைபோன்று இடைவிடாது சொரிந்தான் என அவனது தளரா வீரத்தினை ஆசிரியர் புலப்படுத்தினாராயிற்று. (204)

இதன்பின் 52 என்னும் எண்பெற்ற அச்சுப் புத்தகத்திற் பின் வருமாறு ஒரு மிகைப் பாடல் உளது :—

வில்லினுக்கு ஒருவன் ஆகி, உலகு ஒரு மூன்றும் வென்ற
வல் அதிகாயன் என்னும் வாள் எயிற்று அரக்கன் ஓயான்,
கல் இடும் மாரி என்னக் கணைமழை பொழியக் கண்ட
வில்லியும், விடாது, வெய்ய கணைமழை விலக்கி நின்றான்.

### அந்நிலையில் வாயுதேவன் தோன்றி, 'இவன் பிரமாத்திரத்தாலன்றி இறக்கமாட்டான்' எனக் கூற, இலக்குவன் அதனைச் செலுத்த அதிகாயன் தலையறுபடுதல்

8061. கோன்முகந் தள்ளி யள்ளிக்
கொடுஞ்சிலை நாணிற் கோத்துக்
கான்முகங் குழைய வாங்கிச்
சொரிகின்ற கானை வீரன்
பான்முகந் தோன்ற நின்று
காற்றினுக் கரசன் பண்டை
நான்முகன் படையா லன்றிச்
சாகில னம்ப வென்றான்.

கோல் முகத்து, அள்ளி அள்ளி, கொடுஞ் சிலை நாணில் கோத்து,
கால் முகம் குழைய வாங்கி, சொரிகின்ற காளை வீரன்—
பால் முகம் தோன்ற நின்று, காற்றினுக்கு அரசன், 'பண்டை
நான்முகன் படையால் அன்றிச் சாகிலன் நம்ப!' என்றான்.

பொ :—அம்புகளை அள்ளி அள்ளி முகந்தெடுத்துக் கொடுமைத் தன்மையுடைய வில்லின் நாணிலே கோத்து வில்லின் முகம் குழை

யும்படி வளைத்துச் சொரியும் காளை போலும் இளைய வீரனான இலக்குவனிடத்து வாயுதேவன் தன் முகம் தோன்ற (நேரில் வந்து) நின்று, 'நம்பனே! பழமை வாய்ந்த பிரமனது படையாலன்றி (இவ் அதிகாயன்) சாதல் இலன்' எனக் கூறினான்.

கு :—காளைவீரன் - காளை போல்வானாகிய வீரன்; என்றது இலக்குவனை. காற்றினுக்கு அரசன் - காற்றுக்கு அதி தெய்வமாகிய வாயுதேவன். காளை வீரன்பால் காற்றினுக்கு அரசன் முகம் தோன்ற வந்து நின்று, 'நம்ப! நான்முகன் படையாலன்றிச் சாகிலன்' என்றான் என்க. வீரன்பால் - வீரனிடத்து. முகம் தோன்ற வருதலாவது, தான் இன்னான் என்பது புலப்படும்படி கண் முன் நேரே வந்து தோன்றுதல். நான்முகன் படை - பிரமாத்திரம். நம்பன் – விரும்பத்தக்க குணங்களையுடையோன். (205)

8062. நன்றென வுவந்து வீர
னான்முகன் படையை வாங்கி
மின்றனி திரண்ட தென்னச்
சரத்தொடுங் கூட்டி விட்டான்
குன்றினு முயர்ந்த தோளான்
றலையினைக் கொண்ட வாளி
சென்றது விசும்பி னூடு
தேவருந் தெரியக் கண்டார்.

'நன்று' என உவந்து, வீரன்,
நான்முகன் படையை வாங்கி,
மின் தனி திரண்டது என்னச்
சரத்தொடும் கூட்டி விட்டான்,
குன்றினும் உயர்ந்த தோளான்
தலையினைக் கொண்டு அ(வ்) வாளி,
சென்றது, விசும்பி னூடு;
தேவரும் தெரியக் கண்டார்.

பொ :—(வாயுதேவன் கூறிய மொழியினை) வீரனாகிய இலக்குவன் நன்மையுடையதே என்று மகிழ்ந்து ஏற்றுப் பிரமாத்திரத்தை வாங்கி, மின்னல் தனியே திரண்டது என்னும்படி அம்புடனே சேர்த்துச் செலுத்தினான். அந்த அம்பானது மலையினும் உயர்ந்த தோள்களையுடையனான அதிகாயனது தலையினைத் துணித்து எடுத்

துக்கொண்டு வானத்தின் வழியாகச் சென்றது. (அதனைத்) தேவர்களும் தம் கண்களால் தெளிவாகக் கண்டார்கள்.

கு :—நான்முகன் படை - பிரமாத்திரம். சரத்தொடுங் கூட்டி விடுதலாவது அபிமந்திரித்து அம்புடன் தொடுத்து எய்தல். குன்றினும் உயர்ந்த தோளான் என்றது, பெரிய உடம்பினனாகிய அதிகாயனை. (206)

### வானோர் பூமழை பொழிய இலக்குவன் அங்கதன் தோளினின்றும் இறங்குதல்

8063. பூமழை பொழிந்து வானோர்
போயதெம் பொரும லென்றார்
தாமழைத் தலறி யெங்கு
மிரிந்தன ரரக்கர் தள்ளித்
தீமையுந் தகைப்பு நீங்கித்
தெளிந்தது குரக்குச் சேனை
கோமகன் றோளி னின்றுங்
குதித்தனன் கொற்ற வில்லான்.

பூமழை பொழிந்து, வானோர்,
'போயது எம்பொருமல்' என்றார்;
தாம் அழைத்து அலறி எங்கும்
இரிந்தனர், அரக்கர் தள்ளி;
தீமையும் தகைப்பும் நீங்கித்
தெளிந்தது குரக்குச் சேனை
கோமகன் தோளின் நின்றும்
குதித்தனன், கொற்ற வில்லான்.

பொ :—விண்ணோராகிய தேவர்கள் மலர்மழை சொரிந்து, 'எம்முடைய துன்பம் போய் ஒழிந்தது' என்று சொல்லி மகிழ்ந்தனர்; அரக்கர்கள் தாங்கள் கதறிக் கூவிய வண்ணம் (ஒருவரையொருவர்) தள்ளிக்கொண்டு எங்கும் நிலைகெட்டு ஓடினார்கள்; வானரசேனை (அரக்கரால் நேர்ந்த) துன்பமும் தடையும் நீங்க மனக்கலக்கம் நீங்கித் தெளிவுபெற்றது; வெற்றியினையுடைய வில் வீரனாகிய இலக்குவன், அரசகுமாரனாகிய அங்கதன் தோளினின்றும் (கீழே) குதித்தான்.

கு :—வானோர், பூமழை பொழிந்து, 'எம் பொருமல் போயது' என்றார் ; அரக்கர், தாம் அழைத்து அலறித் தள்ளி எங்கும் இரிந்தனர் ; குரங்குச் சேனை, தீமையும் தகைப்பும் நீங்கித் தெளிந்தது ; கொற்ற வில்லான், கோமகன் தோளினின்றும் குதித்தனன் என இயையும். பெருமல் - துன்பம். தீமை - துன்பம். தகைப்பு - தடை. கோமகன் – அரசகுமாரன் என்றது அங்கதனை. கொற்ற வில்லான் - வெற்றியையுடைய வீல்வீரன் ; இலக்குவன். (207)

## இலக்குவனது வெற்றியைக் கண்டு வியந்த வீடணன், 'இந்திரசித்து இறப்பது திண்ணம்' என்றல்

8064. வெந்திறற் சித்தி கண்ட
விடணன் வியந்த நெஞ்ச
னந்தரச் சித்த ரார்ப்பு
மமலையுங் கேட்டா னையன்
மந்திர சித்தி யன்ன
சிலைத்தொழில் வலியி தாயி
னிந்திர சித்தி னார்க்கு
மிறுதியே யியைவ தென்றான்.

வெந்திறல் சித்தி கண்ட வீடணன், வியந்த நெஞ்சன்,
அந்தரச் சித்தர் ஆர்ப்பும் அமலையும் கேட்டான் ; 'ஐயன்
மந்திர சித்தி அன்ன சிலைத் தொழில் வலி இது ஆயின்,
இந்திர சித்தினார்க்கும் இறுதியே இயைவது' என்றான்.

பொ :—(இலக்குவனது) வெம்மையுடைய பேராற்றலின் விளைவினை நேரிற்கண்ட வீடணன், வியப்புற்ற மனத்தினனாய், வானத்திலே உலவும் சித்தர்கள் ஆரவாரிக்கின்ற ஆரவாரத்தையும் செவிமடுத்தான். 'ஐயனாகிய இலக்குவனது வில் தொழில் வன்மை இத்தகையதாயின் இனி இந்திரசித்திற்கும் மரணமே வருதல் உறுதி' எனக் கூறினான்.

கு :—சித்தி - நற்செயலின் முற்றிய பயன். அந்தரசித்தர் - வானத்திலே உலவும் சித்தர்கள், அமலை - ஆரவாரம் ஐயன் - வியக்கத்தக்க நற்பண்புகளை யுடையவன் ; என்றது, இலக்குவனை. (208)

இதன்பின் 52 என்னும் எண் பெற்ற அச்சுப் புத்தகத்திற் பின் வருமாறு ஒரு மிகைப்பாடல் உள்ளது :

8064. (a) விறல் அதிகாயன் வீழ,
வெந்திறல் அரக்கன் மைந்தர்
குறுகினர், மும்மையான
ஆயிரகோடி உள்ளார்;
எறிகடற் சேனேயோடும்
எங்கணும் இரிய ஆர்த்து,
செறிய எண்திசையும் வந்து
சூழ்ந்தனர், தெழிக்கும் சொல்லார்.

அதிகாயனுகிய தன் தமையன் கொல்லப்பட்டதறிந்து
வெகுண்ட நராந்தகன் இலக்குவனே நோக்கி,
'போகலே போகல்' என்று போர் செய்யத் தொடர்தல்

**8065.** ஏந்தெழி லாகத் தெம்மு
னிறந்தன னென்று நீநின்
சாந்தகன் மார்பு திண்டோ
ணேக்கிநின் றனுவை நோக்கிப்
போந்தகைக் குரிய தன்ருற்
போகலே போக லென்ஞ
நாந்தக மின்னத் தேரை
நராந்தக னடத்தி வந்தான்.

'ஏந்து எழில் ஆகத்து எம்முன்
இறந்தனன் என்று, நீ நின்
சாந்து அகல் மார்பு, திண்தோள்,
நோக்கி, நின்தனுவை நோக்கி,
போம் தகைக்கு உரியது அன்ருல்;
போகலே, போகல்!' என்ஞ,
நாந்தகம் மின்ன தேரை
நராந்தகன் நடத்தி வந்தான்.

பொ :—'மிகுந்த பேரழகினே யுடைய மேனியைக் கொண்ட என் தமையனுகிய அதிகாயன் இறந்துவிட்டான் என்று கருதி நீ சந்தனம் பூசிய அகன்ற நின் மார்பினேயும் திண்ணிய தோள்களேயும் பார்த்து (வெற்றிக்குரிய) நின் வில்லேயும் பார்த்து (நின்னுள்ளே மகிழ்ந்து) போகுந்தன்மைக்கு உரிய எளிமை யுடையதன்று (இப் போர் நிகழ்ச்சி); போகாதே போகாதே' என்று (இலக்குவனே நோக்கி)

கூறிக்கொண்டு நராந்தகன் என்பான், (தன்கையில்) வாட்படை மின்னும்படி தனது தேரைச் செலுத்தி வந்தான்.

கு :—ஏந்துதல் - உயர்தல், மிகுதல். எம்முன் - என் தமையன்; என்றது அதிகாயனை. மார்பினையும் தோளினையும் நோக்குதல் என்றது, தனது வெற்றியை யெண்ணிச் செருக்குற்று வியத்தலை. 'நகுவேன் பண்டுதோள் நோக்கி நாணமில்லா நாயினேன்' என வரும் திருவாசகத்தொடர் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது. நராந் தகன், 'போகலை போகல்' என்று, நாந்தகம் மின்னத் தேரை நடத்திவந்தான் என்க. நாந்தகம் - வாள். (209)

8066. தேரிடை நின்று கண்க
டீயுகச் சீற்றம் பொங்கப்
பாரிடைக் கிழியப் பாய்ந்து
பகலிடைப் பரிதி யென்பா
னூரிடை நின்று னென்னக்
கேடக மொருகை தோன்ற
நீரிடை முகிலின் மின்போல்
வாளிடை நிமிர வந்தான்.

தேரிடை நின்று, கண்கள் தீ உக, சீற்றம் பொங்க,
பாரிடைக் கிழியப் பாய்ந்து, பகலிடைப் பருதி என்பான்.
ஊரிடை நின்றான் என்ன, கேடகம் ஒருகை தோன்ற,
நீரிடை முகிலின் மின்போல் வாள் இடை நிமிர வந்தான்.

பொ :—(நராந்தகன்) கண்களிலிருந்து நெருப்புப்பொறி சிதற, பெருங்கோபம் கிளர்ந்து தோன்றத் தான் இருந்த தேரினின்று பூமியின் இடம் பிளக்கும்படி (விரைந்து) குதித்து, பகற் பொழுதிலே சூரியன் என்பான் ஊர்கோளின் நடுவே நின்றான் என்னும்படி (தனது) ஒரு கையிற் கேடகம் விளங்கவும், நீர் நிறைந்த கருமுகிலி னிடையே தோன்றும் மின்னலைப் போன்று வாட்படை (மற்றொரு கையின்) இடையே உயர்ந்து விளங்கவும் (இலக்குவனை நோக்கி) வந்தான்.

கு :—உக, பொங்க, தேரிடை நின்று பாய்ந்து, என்ன, தோன்ற நிமிர, வந்தான் என முடிக்க. ஊர் - ஊர்கோள்; சந்திர சூரியர் களைச் சுற்றித் தோன்றும் ஒளிவட்டம். இது, பரிவேடம் எனவும் வழங்கப்படும். நீர் இடை முகில் - நீர் செறிந்தமேகம். இடைதல் - நெருங்குதல்; செறிதல். (210)

இதன்பின் 52 என்னும் எண் பெற்ற அச்சுப் புத்தகத்திற் பின் வருமாறு ஒருமிகைப் பாடல் உள்ளது:—

8066. (a) வருதலும் அரக்கன், மற்று (அவ்)
வானரச் சேனை பின்னும்
பொரு சினம் திருகி முற்று,
பொங்கு அழல் என்னப் பொங்கி,
மரமொடு மலைகள் ஏந்தி,
மாதிரம் மறைய வல்லே
உரும் எனச் சொரிய வீசி
உடற்றினர், ஒழிவு இலாதார்.

அதுகண்ட அங்கதன் நராந்தகனொடு பொருது, அவன் கையிலுள்ள வாளினாலேயே அவனை வீழ்த்துதல்

8067. வீசின மரமுங் கல்லும்
விலங்கலும் வீற்று வீற்று
ஆசைக டோறுஞ் சிந்த
வாளினா லறுத்து மாற்றித்
தூசியு மிரண்டு கையு
நெற்றியுஞ் சுருண்டு நீர்மேல்
பாசியி னொதுங்க வந்தா
னங்கத னதனைப் பார்த்தான்.

வீசின மரமும் கல்லும் விலங்கலும், வீற்று வீற்று
ஆசைகள் தோறும் சிந்த, வாளினால் அறுத்து மாற்றி,
தூசியும், இரண்டு கையும், நெற்றியும், சுருண்டு, நீர்மேல்
பாசியின் ஒதுங்க வந்தான்; அங்கதன் அதனைப் பார்த்தான்.

பொ:—(நராந்தகன் தன்மேல் வானரவீரர்கள்) வீசி யெறிந்த மரமும் கல்லும் மலைகளும் வேறு வேறாகத் திசைகள் தோறும் சிதறி விழவும் (அவற்றைத் தன்) வாட்படையால் துண்டித்துப் போக்கி, தூசிப்படையும் கைகோட்படையும் நெற்றிப்படையும் வாட்டமுற்று நீர் மேற்படர்ந்த பாசிபோல் விலகி ஒதுங்க(ச் சேனையின் நடுவே) வந்தான். அவன் வருவதனை அங்கதன் கண்டான்.

கு:—ஆசைகள் - திசைகள். தூசி - முன்னணிப்படை. இரண்டுகை - இரு பக்கத்திலும் உள்ள சேனைகள்; இவை கைகோட் படை என வழங்கப்படுவன. நெற்றி என்பது, போர்முனையின் நடுவில் நின்று பொரும்படை. சுருண்டு - வாட்டமுற்று. (211)

8068. மரமொன்று விரைவின் வாங்கி
வாய்மடித் துருத்து வள்ளல்
சரமொன்றிற் கடிது சென்று
தாக்கினுன் ருக்கி ஞன்றன்
கரமொன்றிற் றிரிவ தாருங்
காண்கிலா ததனைத் தன்கை
அரமொன்று வயிர வாளா
லாயிரங் கண்டங் கண்டான்.

மரம் ஒன்று விரைவிள் வாங்கி, வாய்மடித்து உருத்து, வள்ளல் சரம் ஒன்றின் கடிது சென்று, தாக்கினுன்; தாக்கினுன் தன் கரம் ஒன்றில் திரிவது ஆரும் காண்கிலாது அதனைத் தன்கை அரம் ஒன்று வயிர வாளால் ஆயிரம் கண்டம் கண்டான்.

பொ :—(நராந்தகன் வருதலைக் கண்ட அங்கதன்) மரம் ஒன்றை விரைவிலே பறித்தெடுத்து வாயை மடித்து வெகுண்டு வள்ளலாகிய இராமபிரானது ஒப்பற்ற அம்பினைப் போன்று விரைந்து சென்று (நராந்தகனைத்) தாக்கினுன். (அவ்வாறு) தாக்கிய அங்கதனுடைய ஒரு கையினுற் சுழற்றப்படுவதாகிய அம் மரத்தினை ஒருவருங் காணுத வாறு தன்கையிலுள்ள அரத்தினுற் கூர்மை செய்யப்பட்ட திண்ணிய வாட்படையினுல் விரைந்து ஆயிரந் துண்டங்களாகச் செய்தான் (நராந்தகன்).

கு :—வள்ளல் சரம் - இராமபாணம். தாக்கியவன் அங்கதன். தாக்கினுன் தன் கரம் ஒன்றில் திரிவது அதனை ஆரும் காண்கிலாது தன்கை வாளால் ஆயிரம் கண்டம் கண்டான் என்க. வாளின் கூர்மையும் திண்மையும் விளங்க அரம் ஒன்று வயிரவாள் என அடை கொடுத்தோதினுர். கண்டம் - துண்டம். காணுதல் - செய்தல். கண்டான் என்றது நராந்தகனை. (212)

8069. அவ்விடை வெறுங்கை நின்ற
வங்கத ணுண்மை யன்று
லிவ்விடை பெயர்த லென்னு
விமையிடை யொதுங்கா முன்னர்
வெவ்விட மென்னப் பொங்கி
யவனிடை யெறிந்த வீச்சு
தவ்விட வுருமிற் புக்கு
வாளொடுந் தழுவிக் கொண்டான்.

அவ் இடை வெறுங்கை நின்ற அங்கதன், 'ஆண்மை அன்றால்
இவ் இடை பெயர்தல்' என்னு, இமை இடை ஒதுங்கா முன்னர்,
வெவ் விடம் என்னப் பொங்கி, அவன் இடை எறிந்த வீச்சுத்
தவ்விட, உருமின் புக்கு, வாளொடும் தழுவிக் கொண்டான்.

பொ:—அவ்விடத்தின் கண்ணே வெறுங் கையோடு நின்ற அங்கதன், '(யான்) இவ்விடத்தை விட்டுப் பெயர்ந்து (தப்பிச்) செல்லுதல் ஆண் தன்மையன்று' என்று எண்ணி இமைப்பொழுது கழிதற்குள்ளேயே கொடிய (ஆலகால) நஞ்சினைப் போன்று கொதித்தெழுந்து (நராந்தகனாகிய) அவன் இடையே எறிந்த வாள்வீச்சு குறி தவறும்படி இடிபோற் புகுந்து வாட்படையுடன் (அவனை இறுகக் கட்டித்) தழுவிக்கொண்டான்.

கு:—'இவ் இடை பெயர்தல் ஆண்மையன்று' என்னு, புக்கு, தழுவிக்கொண்டான் என்க. ஆண்மை - ஆடவர்க்குரிய தன்மையாகிய வீரம். தவ்வுதல் - தவறுதல். (213)

**8070.** அத்தொழில் கண்ட வானோ
ராவலங் கொட்டி யார்த்தார்
இத்தொழி லிவனுக் கல்லா
லீசற்கு மியலா தென்பார்
குத்தொழித் தவன்கை வாடன்
கூருகிர்த் தடக்கை கொண்டான்
ஒத்திரு கூருய் வீழ
வீசிவா னுலைய வார்த்தான்.

அத் தொழில் கண்ட வானோர்
ஆவலம் கொட்டி ஆர்த்தார்;
'இத் தொழில் இவனுக்கு அல்லால்
ஈசற்கும் இயலாது' என்பார்;
குத்து ஒழித்து அவன் கைவாள் தன்
கூர் உகிர்த் தடக்கை கொண்டான்,
ஒத்து இரு கூருய் வீழ வீசி,
வான் உலைய ஆர்த்தான்.

பொ:—(அங்கதன் செய்த) அவ் வீரச்செயலை (நேரிற்) கண்ட தேவர்கள், இத்தகைய செயல் (அங்கதனாகிய) இவனுக்கு இயல்வதே யன்றி ஈசனாகிய உருத்திர மூர்த்தியாலும் செய்ய இயலாது என்பா

ராய் (வெற்றி மகிழ்ச்சி தோன்ற) வாய்கொட்டி ஆரவாரித்தார்கள். (அங்கதன்) குத்துதல் தொழிலைச் செய்யாது நீக்கி, அந் நராந்தகன் கையிலே யுள்ள வாட்படையைக் கூரிய நகங்களையுடைய தன் பெரிய கையிலே பற்றிக்கொண்டவனை (அவனது உடல்) ஒத்த இரு பகுதி யாகி (உயிர்நீங்கி) விழும்படி (வாளால்) வீசி வானுலகத்தவர்களும் அஞ்சி நடுங்கும்படி ஆரவாரித்தான்.

கு :—வானோர், இத்தொழில் ஈசற்கும் இயலாதென்பார், ஆவலங்கொட்டி ஆர்த்தார் என்க. ஆவலங் கொட்டுதல் - வாய் கொட்டி ஆரவாரித்தல். இத்தொழில் என்றது, வாள் கொண்டு விரைந்து எறியவரும் பகைவனை வெறுங்கையுடன் மேற்சென்று இறுகப் பற்றிக் கொள்ளுதலை. இவனுக்கு அல்லால் - அங்கதன் ஆகிய இவனுக்கு அன்றி. (214)

போர்மத்தன் நீலனொடு பொருது இறத்தல்

8071. கூர்மத்தின் வெரிநின் வைத்து
வானவ ரமுதங் கொண்ட
நீர்மத்தி னிமிர்ந்த தோளா
னிறைமத்த மதுவைத் தேக்கி
யூர்மத்த முண்டா லன்ன
மயக்கத்தா னுருமைத் தின்பான்
போர்மத்த னென்பான் வந்தான்
புகர்மத்தப் பூட்கை மேலான்.

கூர் மத்தின் வெரிநின் வைத்து
வானவர் அமுதம் கொண்ட
நீர் மத்தின் நிமிர்ந்த தோளான்,
நிறை மத்த மதுவைத் தேக்கி
ஊர் மத்தம் உண்டாலன்ன
மயக்கத்தான், உருமைத் தின்பான்,
போர் மத்தன் என்பான் வந்தான்—
புகர் மத்தப் பூட்கை மேலான்.

பொ :—ஆமையின் முதுகிலே வைத்து வானோர் தமக்குரிய அமுதத்தைக் (கடைந்து) கொள்ளுதற்குக் காரணமா யமைந்த பெருமையினையுடைய மந்தர மலையினைப் போன்று உயர்ந்த தோளினையுடையவனும், நிறைந்த களிப்பை யுண்டாக்கவல்ல மதுவை நிறையக் குடித்து ஊமத்தங்காயைத் தின்றாலொத்த மத

மயக்கத்தை யுடையவனும் இடியையும் மென்று தின்னவல்லவனும் ஆகிய போர்மத்தன் என்பான், புள்ளிகளையுடைய மத யானையின் மேல் ஏறியவனாகிப் பொருதற்கு வந்தான்.

கு:—கூர்மம் - ஆமை. தேவர் முதலியோர் மந்தரமலையை மத்தாகக்கொண்டு பாற்கடலைக் கடைந்தபொழுது மத்தாகிய அம் மலை உள்ளே அழுந்தாதவாறு திருமால் ஆமை வடிவு கொண்டு அடைகள்போன்று அம் மத்தினைத் தாங்கினார் என்பது புராணகதை. ஊர்மத்தம்-ஊமத்தம்; என்றது அதன் காயினை. போர்மத்தன் என் பான், புகர்மத்தப் பூட்கை மேலான் (ஆகி) வந்தான் என்க. பூட்கை-புழைக்கை; யானை. (215)

8072. காற்றன்றேற் .கடுமை யென்னாங்
கடலன்றேன் முழக்க மென்னாங்
கூற்றன்றேற் கொலைமற் றென்னா
முருமன்றேற் கொடுமை யென்னாஞ்
சீற்றந்தா னன்றேற் சீற்றம்
வேறொன்று தெரிப்ப தெங்கே
மாற்றன்றே மலைமற் றென்னே
மத்தன்றன் மத்த யானை.

காற்று அன்றேல், கடுமை என் ஆம்?
கடல் அன்றேல், முழக்கம் என் ஆம்?
கூற்று அன்றேல், கொலை மற்று என் ஆம்?
உரும் அன்றேல், கொடுமை என் ஆம்?
சீற்றம்தான் அன்றேல், சீற்றம்
வேறு ஒன்று தெரிப்பது எங்கே?
மாற்று அன்றே, மலை; மற்று என்னே?—
மத்தன்தன் மத்த யானை.

பொ:—(போர்மத்தன் ஏறிவந்த மதயானை) காற்றாயிருத்தல் வேண்டும், அஃது அன்றாயின் விரைவு (அதற்கு) எவ்வாறுளதா யிற்று? கடலாயிருத்தல் வேண்டும், அஃது அன்றாயின் முழக்கம் எவ்வாறுண்டாகும்? கூற்றுவனாயிருத்தல் வேண்டும், அவன் அல்ல னாயின் கொலைத்தொழில் (அவற்கு) எவ்வாறுளதாயிற்று? இடியா யிருத்தல் வேண்டும், அஃது அன்றாயின் கொடுமைத் தன்மை எப்படி வந்தது? வெகுளியின் வடிவாயிருத்தல் வேண்டும், அஃதன்றாயின் சீற்றத்தின் உருவமிதுவென வேறொன்றைத் தெரி

வித்தல் எவ்வாறு? மலை இதற்கு ஒப்பாவதன்று (இதன் இயல்புகள் இவ்வாருயின்) வேறு உவமை கூறுதல் எங்ஙனம்?

கு :—இதுவும் அடுத்த செய்யுளும் போர்மத்தன் ஏறிவந்த மத யானையின் இயல்பினைப் புனைந்துரைப்பன. மத்தனது யானை விரைந்து செல்லும் தன்மையாற் காற்றெனவும், பெருமுழக்கத்தாற் கடலெனவும், கொலைத்தொழிலாற் கூற்றெனவும், தாக்கும் கொடுமையால் இடியெனவும், சினத்தால் சீற்றத்தினுருவெனவும், கருதுமாறு மலையினும் மிக்க உயர்ச்சியுடையதாய் விளங்கியது என்பதாம். (216)

8073. வேகமாக் கவிகள் வீசும்
வெற்பினம் விழுவ மேன்மேற்
பாகர்காற் சிலையிற் றூண்டு
முண்டையா மெனவும் பற்ரு
மாகமா மரங்க ளெல்லாங்
கடாத்திடை வண்டு சோப்பி
ஆகிலு மாம தன்றேற்
கரும்பென்றே யறைய லாமால்.

வேகமாக் கவிகள் வீசும்
வெற்பினம் விழுவ, மேன்மேல்,
பாகர் கால் சிலையின் தூண்டும்
உண்டையாம் எனவும் பற்ரு;
மாகமா மரங்கள் எல்லாம்
கடாத்திடை வண்டு சோப்பி
ஆகிலும் ஆம்; அது அன்றேல்,
கரும்பு என்றே அறையலாமால்.

பொ :—(அவ் யானையின்மேல்) வானரங்கள் விரைந்து எறிகின்ற மலைத் தொகுதிகள் விழுவன, யானைப்பாகர்கள் முனைகளை யுடைய வில் நாணிற் செறித்துத் தூண்டும் வில்லுண்டைகள் என்று சொல்லுதற்கும் போதியன அல்ல. (வானரங்கள் பறித்து வீசும்) வானுற வோங்கிய பெரு மரங்கள் யாவும் மதநீரிற் படியும் வண்டுகளை யோட்டுதற்குரிய ஈச்சோப்பி போன்று அமையினும் அமையும்; அன்ருயின் (அவற்ருல் முறித்துண்ணப்படும்) அவற்றைக் கரும்பென்றே சொல்லிவிடலாம்.

கு :—கவிகள் - வானரங்கள். காற்சிலை - இருமுனையினையுடைய வில். தூண்டுதல் - செலுத்தல். வில்லுண்டையாவது, வில் நாணிற் செறித்து விளையாட்டாக எய்யப்படும் களிமண்ணுருண்டை. சோப்புதல் - ஓட்டுதல். ஈச்சோப்பி - ஈயோட்டி. வானரங்கள் அவ் யானையின்மேல் வீசிய மலைகள் களிமண் உருண்டைகள் போலவும் மரங்கள் ஈயோட்டி போலவும் கரும்பு போலவும் பயனற்றன வாயின என்பதாம். (217)

8074. காலிடைப் பட்டு மானக்
கையிடைப் பட்டுக் கால
வாலிடைப் பட்டும் வெய்ய
மருப்பிடைப் பட்டு மாண்டு
நாலிடைப் பட்ட சேனை
நாயகன் றம்பி யெய்த
கோலிடைப் பட்ட தெல்லாம்
பட்டது குரக்குச் சேனை.

காலிடைப் பட்டும், மானக் கையிடைப் பட்டும், கால
வாலிடைப் பட்டும், வெய்ய மருப்பிடைப் பட்டும், மாண்டு,
நாலிடைப் பட்ட சேனை, நாயகன் தம்பி எய்த
கோலிடைப் பட்டது எல்லாம் பட்டது—குரக்குச் சேனை.

பொ :—வானர சேனையானது, (அவ் யானையின்) கால்களின் இடையிலே அகப்பட்டும் பெரிய துதிக்கையின் கண்ணே அகப்பட்டும் காலனது தன்மையினை யுடைய வாலிலே அகப்பட்டும் கொடிய தந்தங்களினிடையில் அகப்பட்டும் உயிர் நீங்கி, (அரக்கருடைய) நால்வகைச் சேனைகள் இராமன் தம்பியாகிய இலக்குவன் எய்த அம்பினிடையிலே அகப்பட்டு அடைந்த இன்னல்களை யெல்லாம் ஒரு சேர அடைந்தது.

கு :—குரக்குச் சேனை, நால்வகைப்பட்ட சேனை நாயகன் தம்பி எய்த கோலிடைப்பட்ட தெல்லாம் பட்டது என முடிக்க. நாலிடைப் பட்ட சேனை - யானை, தேர், குதிரை, காலாள் என நால்வகைப்பட்ட அரக்கர் சேனை. நாயகன் தம்பி - இலக்குவன். கோல் - அம்பு. (218)

8075. தன்படை யுற்ற தன்மை
நோக்கினுன் றரிக்கி லாமை
யன்படை யுள்ளத் தண்ண
லனலன்றன் புதல்வ னுழி
வன்படை யனைய தாங்கோர்
மராமரஞ் சுழற்றி வந்தான்
பின்படை செல்ல நள்ளார்
பெரும்படை யிரிந்து பேர.

தன்படை உற்ற தன்மை
நோக்கினுன், தரிக்கி லாமை
அன்பு அடை உள்ளத்து அண்ணல்
அனலன்தன் புதல்வன், ஆழி
வன் படை அனையது ஆங்கு ஓர்
மராமரம் சுழற்றி வந்தான்—
பின்படை செல்ல, நள்ளார்
பெரும்படை இரிந்து பேர.

பொ :—அன்பு நிறைந்த மனத்தினையுடைய (படைத்) தலைவனும் அக்கினி குமாரனுமாகிய நீலன் என்பான், தன்னுடைய (வானர) சேனை அடைந்த (துன்ப) நிலையினை நோக்கினவனுய் உள்ளம் பொருது, பின்னுள்ள தன்சேனை முன்னே செல்லவும் பகைவரது பெருஞ்சேனை (புறங்கொடுத்து) இடம் பெயர்ந்து ஓடவும், (திருமாலின்) வலிய சக்கரப் படையினை ஒத்ததொரு மராமரத்தைச் சுழற்றிக்கொண்டு (போர் மத்தனை எதிர்த்து) வந்தான்.

கு :—அனலன் தன் புதல்வன் - அக்கினி குமாரனுகிய நீலன் ; வானரசேனைத் தலைவன். பின்படை செல்ல - பின்னுள்ள சேனை (முன்னே) செல்ல. நள்ளார் - பகைவர். இரிந்து பேர - பேர்ந்து இரிய; இடம் பெயர்ந்து ஓட. செல்ல, பேர, வந்தான் என இயையும். (219)

8076. சேறலுங் களிற்றின் மேலான்
றிண்டிற லரக்கன் செவ்வே
யாறிரண் டம்பி னுலந்
நெடுமர மறுத்து வீழ்த்தான்

வேறொரு குன்ற நீலன்
வீசின னதனை விண்ணி
னூறுவெம் பகழி தன்னா
னுறுக்கினன் களிறு நூக்கி.

சேறலும், களிற்றின் மேலான்,
திண் திறல் அரக்கன், செவ்வே,
ஆறு இரண்டு அம்பினால்
அந்நெடுமரம் அறுத்து வீழ்த்தான்;
வேறு ஒரு குன்றம் நீலன்
வீசினான்; அதனை விண்ணில்
நூறு வெம்பகழி தன்னால்,
நுறுக்கினன், களிறு நூக்கி.

பொ :—(இவ்வாறு நீலன்) செல்லுதலும் யானையின்மேல் உள்ளானாகிய மிக்க வலிபடைத்த அரக்கன், நேரே பன்னிரண்டு அம்புகளால் (நீலன் கையிலுள்ள) அந்த நெடிய மரத்தைத் துண்டித்துத் தள்ளினான். நீலன் மற்றொரு மலையை எடுத்து (அவன் மேல்) வீசி எறிந்தான். யானையை முன்னர்ச் செலுத்தியபடியே அம்மலையினை நூறு அம்புகளால் ஆகாயத்திலே பொடியாக்கினான் (போர்மத்தன்).

கு :—களிற்றின் மேலான் என்றது, போர்மத்தனாகிய அரக்கனை. செவ்வே – நேரே. நூக்குதல் - முற்படச் செலுத்துதல். நுறுக்குதல்- போடியாக்குதல். (220)

8077. பின்னெடுங் குன்றந் தேடிப்
பெயர்குவான் பெயரா வண்ணம்
பொன்னெடுங் குன்றஞ் சூழ்ந்த
பொறிவரி யரவம் போல
வந்நெடுங் கோப யானை
யமரரும் வெயர்ப்ப வங்கி
தன்னெடு மகனைப் பற்றிப்
பிடித்தது தடக்கை நீட்டி.

பின், நெடுங் குன்றம் தேடிப்
பெயர்குவான் பெயரா வண்ணம்,
பொன் நெடுங் குன்றம் சூழ்ந்த
பொறி வரி அரவம் போல,

அந் நெடுங் கோப யானை,
அமரரும் வெயர்ப்ப, அங்கி,
தன் நெடு மகனைப் பற்றிப்
பிடித்தது, தடக்கை நீட்டி.

பொ :—(தான் வீசிய மலை துகளாயின) பின்னும் நெடிய மலையினைத் தேடி இடம் பெயர்ந்து செல்பவனாகிய நீலன், அவ்விடத்தை விட்டுத் தப்பிச் செல்லாதபடி நீண்டுயர்ந்த பொன்மலையைச் சுற்றி வளைத்துக்கொண்ட (படத்திற்) புள்ளிகளையும் (உடலிற்) கோடுகளையும் உடைய (வாசுகி என்னும்) பாம்பினைப் போன்று (போர்மத்தன் செலுத்திய) அந்த யானை தேவர்களும் (அஞ்சி) உடல் வியர்க்கும்படி அங்கியின் மைந்தனாகிய நீலனைத் தனது பெரிய துதிக்கையினை நீட்டிப் பற்றிப் பிடித்தது.

கு :—நீலனுக்குப் பொன்னெடுங் குன்றமும் அவனைப் பற்றி வளைத்த யானையின் துதிக்கைக்குப் பொறிவரி அரவமும் உவமை. அங்கிதன் நெடுமகன் என்றது நீலனை. (221)

8078. ஒடுங்கின னுரமு மாற்ற
லூற்றமு முயிரு மென்னக்
கொடும்படை வயிரக் கோட்டாற்
குத்துவான் குறிக்குங் காலை
நெடுங்கையுந் தலையும் பிய்ய
நொய்தினி னிமிர்ந்து போனான்
நடுங்கின ரரக்கர் விண்ணோர்
நன்றுநன் றென்ன நக்கார்.

'ஒடுங்கினன், உரமும், ஆற்றல்
ஊற்றமும், உயிரும்' என்ன,
கொடும் படை வயிரக் கோட்டால்
குத்துவான் குறிக்கும் காலை,
நெடுங் கையும் தலையும் பிய்ய,
நொய்தினின் நிமிர்ந்து போனான்;
நடுங்கினர், அரக்கர்; விண்ணோர்,
'நன்று, நன்று' என்ன நக்கார்.

பொ :—(அப்பொழுது, நீலன்) வலிமையும் ஆற்றலும் ஊக்கமும் உயிரும் ஒடுங்கினுன் என்று (கண்டோர்) கருதுமாறு கொடிய படைக் கலத்தையொத்த திண்ணிய தந்தங்களால் (அவ்யானே, அவனேக்) குத்துதற்கு எண்ணிய பொழுது (அங்கதன்) அதன் நீண்ட துதிக்கை யினேயும் தலேயையும் (ஒருசேரப்) பிய்த்து எடுத்துக்கொண்டு விரைந்து மேலெழுந்து சென்ருன். (அதுகண்டு) அரக்கர்கள் நடுக்க முற்ருர்கள்; வானேர்கள் இச்செயல் நன்று நன்று எனக் கூறி நகைத்தார்கள்.

கு :—ஒடுங்குதல் - வரவரக் குறைதல். ஊற்றம் - மனவெழுச்சி; ஊக்கம். கோடு - தந்தம். குறித்தல் – எண்ணுதல். நொய்தினின் - விரைவில். (222)

8079. தறைத்தலே யுற்ரு னீல
 னென்பதோர் காலந் தன்னி
னிறைத்தலே வழங்குஞ் சோரி
 நீத்தத்து நெடுங்குன் றென்னக்
குறைத்தலே வேழம் வீழ
 விசும்பின்மேற் கொண்டு நின்ருன்
பிறைத்தலே வயிர வாளி
 மழையெனப் பெய்யுங் கையான்.

‘தறைத்தலே உற்ருன் நீலன்’
 என்பது ஓர் காலம் தன்னில்,
நிறைத் தலேவழங்குஞ் சோரி
 நீத்தத்து நெடுங்குன்று என்னக்
குறைத்தலே வேழம் வீழ,
 விசும்பின்மேல் கொண்டு நின்ருன்,
பிறைத்தலே வயிர வாளி
 மழை எனப் பெய்யும் கையான்.

பொ :—நீலன் (யானேயைக் கொன்று மேலெழுந்து மீண்டும்) தரையின் கண்ணே வந்து பொருந்தினுன் என்னும் அவ்வளவில் நிறையினேயுடைய தலேயினின்றும் வீழும் குருதி வெள்ளத்தி னிடையே நெடியமலேபோன்று தலேயற்ற அவ் யானேயின் உடல் வீழ்தலால், பிறைபோன்ற நுனியினேயுடைய திண்ணிய அம்புகளே மழைபோன்று மிகுதியாகச் சொரியும் கையினேயுடையனுய் வானத் தின்மேற் சென்று நின்ருன் (போர்மத்தன்).

கு :—தறை - தரை. தலை - ஏழாம் வேற்றுமையுருபு. நிறைத் தலை - நிறையினையுடைய தலை; என்றது கனமான யானைத்தலையை. குறைத்தலை - தலைகுறைந்த உடல். பிறைத்தலை வயிரவாளி - பிறையின் நுனியினையுடைய திண்ணிய அம்பு; அர்த்தசந்திரபாணம். மழையெனப் பெய்யுங்கையான், விசும்பின் மேற்கொண்டு நின்றான் என முடிக்க. (223)

8080. வாங்கிய சிரத்தின் மற்றை
வயிரவான் கோட்டை வவ்வி
வீங்கிய விசையி னீல
னரக்கன்மேற் செல்ல விட்டா
னாங்கவ னவற்றை யாண்டோ
ரம்பினா லறுத்தோ ரம்பா
லோங்கல்போற் புயத்தி னான்ற
னுரத்திடை யொளிக்க வெய்தான்.

வாங்கிய சிரத்தின் மற்றை
வயிரவான் கோட்டை வவ்வி,
வீங்கிய விசையின், நீலன்,
அரக்கன்மேல் செல்ல விட்டான்;
ஆங்கு, அவன், அவற்றை ஆண்டு
ஓர் அம்பினால் அறுத்து, ஓர் அம்பால்
ஓங்கல் போல் புயத்தினான் தன்
உரத்திடை ஒளிக்க எய்தான்.

பொ :—(அந்நிலையில்) நீலன் என்பான், (தான் முன்னர்ப் பிய்த்து) எடுத்துக்கொண்ட யானையின் தலையிலேயுள்ள திண்மை வாய்ந்த வெள்ளிய தந்தங்களைப் பறித்து மிக்க வேகத்துடன் (போர் மத்தன் என்னும்) அரக்கன் மேலே சென்று படும்படி வீசினான்; அப்பொழுது அவ் அரக்கன் அத் தந்தங்களை ஓர் அம்பினால் துணித் துப் போக்கி மற்றோர் அம்பினால் மலைபோலும் தோளினனாகிய நீல னது மார்பிலே அழுந்தி மறையும்படி எய்தனன்.

கு :—ஓங்கல்போற் புயத்தினான் என்றது நீலனை. ஓங்கல் - மலை. புயம் - தோள். ஒளிக்க — அழுந்தி மறையும்படி. (224)

8081. எய்தது கால மாக
வீழ்ந்தில தியானை யென்னக்
கையுடை மலையொன் றேறிக்
காற்றெனக் கடாவி வந்தான்
வெய்யவ னவனைத் தானு
மேற்கொளா வில்லி னோடு
மொய்பெருங் களத்தி னிட்டான்
மும்மதக் களிற்றின் முன்னர்.

எய்த அது காலமாக,
'விளிந்திலது யானை' என்ன,
கையுடை மலை ஒன்று ஏறி,
காற்று எனக் கடாவி வந்தான்,
வெய்யவன்; அவனைத் தானும்
மேற் கொளா, வில்லினோடு
மொய்பெருங் களத்தின் இட்டான்,
மும்மதக் களிற்றின் முன்னர்.

பொ :—வெம்மையுடையனாய அவ் அரக்கன் (தான் அம்பினை) எய்த அப்பொழுதே ('முன்னர் ஏறிவந்த) யானை (இன்னும்) இறந்திலது' எனக் (கண்டோர்) கருதும்படி (அதே தன்மையதாகிய) கையினையுடைய மலைபோலும் (வேறொரு) களிற்றின்மேல் ஏறி (அதனை)க் காற்றென்னும்படி விரைந்து செலுத்திக்கொண்டு வந்தான். (அங்ஙனம் வந்த போர்மத்தனாகிய அவனை (நீலன்) தானும் தூக்கிக்கொண்டு மேற்சென்று (சேனைகள்) நெருங்கிய போர்க்களத்திலே மும்மதங்களுடைய அவனது யானையின் முன்னே விற்படை விழத் தள்ளினான்.

கு:—வெய்யவன், எய்த அது காலமாக, கையுடை மலை ஒன்று ஏறிக் காற்று எனக் கடவி வந்தான் என முடிக்க. வெய்யவன் என்றது, கொடியோனாகிய போர்மத்தனை. யானை விளிந்திலது என – முன் செலுத்தி வந்த யானை இன்னும் இறந்திலது எனக் கண்டோர் கருதும்படி ; என்றது, பின் செலுத்திவந்த யானையும் முன்னர் ஏறி வந்த அதே யானையென்று சொல்லும்படி வினைபயன் மெய் உருவுகளால் ஒத்துவிளங்க என்றவாறு. அவனை மும்மதக் களிற்றின் முன் இட்டான் நீலன் என்க. (225)

8082. இட்டவ னவனி நின்று
மெழுவதன் முன்னம் யானை
கட்டமை வயிரக் கோட்டாற்
களப்பட வீழ்த்திக் காலா
லெட்டிவன் றடக்கை தன்னு
லெடுத்தெங்கும் விரைவின் வீசப்
பட்டிலன் ருனே தன்போர்க்
கரியினைப் படுத்து வீழ்த்தான்.

இட்டவன் அவனி நின்றும்
எழுவதன் முன்னம், யானை
கட்டு அமை வயிரக் கோட்டால்
களம்பட வீழ்த்தி, காலால்
எட்டி, வன் தடக்கை தன்னல்
எடுத்து, எங்கும் விரைவின் வீச,
பட்டிலன், தானே தன்போர்க்
கரியினைப் படுத்து வீழ்த்தான்.

பொ :—(நீலனல்) இடப்பட்டவனாகிய போர்மத்தன், பூமியினின்றும் எழுவதற்கு முன்னரே (அவன் ஏறிவந்த) யானையானது (அவனைத் தன் தலைவன் என உணராது) கிம்புரியாகிய பூண் அணியப்பட்ட திண்ணிய தந்தங்களால் அவனைப் போர்க்களத்திலே தள்ளிக் காலால் எட்டி (மிதித்து)த் தன்னுடைய வலிய பெரிய துதிக்கையினுற் பற்றி எடுத்து எல்லாப் பக்கங்களிலும் (சுழற்றி) விரைந்து வீசி எறியவும் (அவ் வரக்கன்) இறவாதவனுய்த் தன்னுடையதாகிய (அப்) போர் யானையைத் தானே கொன்று வீழ்த்தினன்.

கு :—இட்டவன் - இடப்பட்டவன்; கீழே தள்ளப்பட்டவன்; செயப்படு பொருளை வினைமுதல் போலக் கூறினர். கட்டு என்றது, யானைத் தந்தங்களிற் கட்டப்பட்ட கிம்புரி என்னும் பூணினை. பட்டிலன் - இறந்திலன். (226)

8083. தன்கரி தானே கொன்று
தடக்கையாற் படுத்து வீழ்த்த
மின்கரி தென்ன மின்னு
மெயிற்றினன் வெகுளி நோக்கிப்

பொன்கரி தென்னுங் கண்கள்
பொறியுக நீலன் புக்கான்
வன்கர முறுக்கி மார்பிற்
குத்தினன் மத்தன் மாண்டான்.

தன் கரி தானே கொன்று,
தடக் கையால் படுத்து வீழ்த்தும்
மின் கரிது என்ன மின்னும்
எயிற்றினுன் வெகுளி நோக்கி,
பொன் கரிது என்னும் கண்கள்
பொறி உக, நீலன் புக்கான்,
வன்கரம் முறுக்கி, மார்பில்
குத்தினன்; மத்தன் மாண்டான்.

பொ:—தன்னுடைய யானையைத் தானே கொன்று தன் தடக் கையினுல் தள்ளி வீழ்த்திய, மின்னலும் கரிது என்னும்படி ஒளிரும் வெள்ளிய கோரப் பற்களையுடையனுகிய போர்மத்தனது சினமிகுதியைக் கண்டு, நீலன் என்பான், பொன்னும் கரியதென்னுமாறு தன் கண்களினின்றும் தீப்பொறி சிதற (அவன் முன்னே) புகுந்து நின்று தன் வலிய கையினை முறுக்கி அவனது மார்பிலே குத்தினுன். (அதனுல்) மத்தன் மாண்டு ஒழிந்தான்.

கு:—எயிற்றினுன் என்றது, போர்மத்தனை. எயிறு-கோரப்பல். (227)

வயமத்தன் விரைந்து போர்க்குவர, இடபன் அவனை எதிர்த்தல்

8084. உன்மத்தன் வயிர மார்பி
னுருமொத்த கரஞ்சென் றுற்ற
வன்மத்தைக் கண்டு மாண்ட
மதமத்த மலையைப் பார்த்துஞ்
சன்மத்தின் றன்மை யானுந்
தருமத்தைத் தள்ளி வாழ்ந்த
கன்மத்தின் கடைக்கூட் டானும்
வயமத்தன் கடிதின் வந்தான்.

உன்மத்தன் வயிர மார்பின் உரும்
ஒத்த கரம் சென்று உற்ற
வன்மத்தைக் கண்டும், மாண்ட
மதமத்த மலையைப் பார்த்தும்,
சன்மத்தின் தன்மையானும்,
தருமத்தைத் தள்ளி வாழ்ந்த
கன்மத்தின் கடைக் கூட்டானும்,
வயமத்தன் கடிதின் வந்தான்.

பொ:—உன்மத்தனது வயிரம்போலும் திண்ணிய மார்பிலே (நீலனது) இடியினையொத்த கை சென்று தாக்கிய இகலின் வன்மையை நேரிற் கண்டும் (அங்கு) மாண்டு கிடந்த மதத்தையுடைய மலைபோலும் யானையைப் பார்த்தும், (உடன் பிறப்பாகிய) பிறவியின் தன்மையினாலும், அறத்தை அகற்றி வாழ்ந்த தீவினையின் முதிர்ச்சியாகிய முடிவுகாலம் நெருங்கினமையாலும் வயமத்தன் என்னும் அரக்கன் (நீலனுடன்) விரைவிற் போர்க்கு வந்தான்.

கு:—உன்மத்தன் - போரிற் பித்துற்றவன்; என்றது போர் மத்தனை. உரும் - இடி. வன்மம் - (இகலின்) வன்மை. சன்மம் - பிறப்பு; ஈண்டு உடன்பிறப்பாகிய தொடர்பினைக் குறித்தது. (228)

8085. பொய்யினும் பெரிய மெய்யான்
பொருப்பினைப் பழித்த தோளான்
வெய்யனென் றுரைக்கச் சாலத்
திண்ணியான் வில்லின் செல்வன்
பெய்கழ லரக்கன் சேனை
யார்த்தெழப் பிறங்கு பல்பே
யையிரு நூறு பூண்ட
வாழியந் தேரின் மேலான்.

பொய்யினும் பெரிய மெய்யான்;
பொருப்பினைப் பழித்த தோளான்;
'வெய்யன்' என்று உரைக்கச்
சாலத்திண்ணியான்; வில்லின் செல்வன்;
பெய்கழல் அரக்கன், சேனை
ஆர்த்து எழ, பிறங்கு பல் பேய்
ஐ-இருநூறு பூண்ட ஆழி
அம் தேரின் மேலான்;

பொ :—(தான் கற்று வல்ல) பொய்யைக் காட்டிலும் பெரிய உடம்பினை யுடையவனும், மலையையும் (ஒப்பாகாதென) இகழ்ந்து உயர்ந்த தோளினை யுடையவனும் 'வெம்மை யுடையோன் (இவன்') என்று உரைக்கும்படி மிகுந்த திண்மையுடையவனும் விற்போர் வன்மையாகிய செல்வம் படைத்தவனும் ஆகிய வீரக்கழலையுடைய (வயமத்தன்) என்னும் அரக்கன் (தன்) சேனை ஆரவாரித்து எழ மாறுபட்டுப் பிறழ்ந்த பற்களையுடைய பேய்கள் ஆயிரம் பூண்ட சக்கரத்தையுடைய அழகிய தேரின்மேல் ஏறினன்.

கு:—பொய் - மாயம் ; வஞ்சனை. அவன் கற்றுவல்ல மாயத்தை விட அவன் பெற்றுள்ள உடம்பு ஆற்றலால் மிகப் பெரியது என்பார், பொய்யினும் பெரிய மெய்யன் என்றார். (229)

8086. ஆர்க்கின்ற னுலகை யெல்லா
மதிர்க்கின்ற னுருமு மஞ்சப்
பார்க்கின்றான் பொன்றி னாரைப்
பழிக்கின்றான் பகழி மாரி
தூர்க்கின்றான் குரக்குச் சேனை
துரக்கின்றான் றுணிபை நோக்கி
யேற்கின்ற ரில்லை யென்ன
விடபன்வந் தவனோ டேற்றான்.

ஆர்க்கின்றான், உலகை எல்லாம்
அதிர்க்கின்றான், உருமும் அஞ்சப்
பார்க்கின்றான், பொன்றினாரைப்
பழிக்கின்றான், பகழி மாரி
தூர்க்கின்றான், குரங்குச் சேனை
துரக்கின்றான், துணிபை நோக்கி,
'ஏற்கின்றார் இல்லை' என்ன, இடபன்
வந்து அவனோடு ஏற்றான்.

பொ :—(தேர்மேலன் ஆகிய அவன்,) ஆரவாரிக்கின்றவனாய் உலகையெல்லாம் நடுங்கும்படி செய்கின்றான் ; இடியும் அஞ்சும்படி சினந்து நோக்குகின்றான் ; போரில் இறந்தொழிந்தவர்களை (அவர்களது வலியற்ற தன்மையை)ப் பழித்துரைக்கின்றான் ; அம்புமழையினை(ப் போர்க்களத்தில்) நிரம்பச் சொரிகின்றான் ; வானரச் சேனைகளைப் புறங்காட்டி யோடச் செய்கின்றான் ; அவனது உள்ளத்துணிபினை நோக்கி, (இவனுடன்) எதிர் ஏற்று நிற்பவர் பிறர் இல்லையே

என்று சொல்லி இடபன் என்னும் வானரவீரன் வந்து அவனுடன் போரில் எதிர்த்து நின்ருன்.

கு:—அதிர்த்தல் - நடுங்கச் செய்தல். தூர்த்தல் - நிறையப் பெய்து நிரப்புதல். துரத்தல் - ஓட்டுதல். ஏற்றல் - போரில் எதிர்த்து நிற்றல். (230)

### வயமத்தனும் இடபனும் தம்முள் வீரவுரை பகர்தல்

8087. சென்றவன் றன்னை நோக்கிச்
சிரித்துநீ சிறியை யுன்னை
வென்றவ மும்மை யெல்லாம்
விளிப்பெனோ விரிஞ்சன் ருனே
யென்றவ னெதிர்ந்த போது
மிராவணன் மகனை யின்று
கொன்றவன் றன்னைக் கொன்றே
குரங்கின்மேற் கொதிப்பெ னென்ருன்.

சென்றவன் தன்னை நோக்கி,
சிரித்து, ‘நீ சிறியை; உன்னை
வென்று அவம்; உம்மை எல்லாம்
விளிப்பெனோ? விரிஞ்சன் தானே
என்றவன் எதிர்ந்த போதும்,
இராவணன் மகனை இன்று
கொன்றவன் தன்னைக் கொன்றே
குரங்கின்மேல் கொதிப்பென்’ என்ருன்.

பொ:—பொருதற்குச் சென்றவனுகிய இடபனை நோக்கி (இகழ்ந்து) சிரித்து, ‘நீ மிகவும் சிறியவனுக உள்ளாய். (ஆற்றலிற் குறைந்த) உன்னை வெல்வதாற் பயனில்லை. (தகுதியற்ற) உங்களை யெல்லாம் யான் போருக்கு அழைப்பேனே? பிரமதேவன் இவன் தானே என(ப் பலரும) வியந்துகூறத் தக்கவனுகிய அநுமன் வந்து எதிர்த்தபோதும் இராவணன் மைந்தனுகிய அதிகாயனை இன்று கொன்றவனுகிய இலக்குவனைக் கொன்ற பின்பே (அக்) குரங்கின் மீது வெகுள்வேன் என்று கூறினன்.

கு:—சென்றவன் - போர் புரிதற்குச் சென்ற இடபன். அவம் - பயனின்மை; வீண். விரிஞ்சன் - பிரமன். ‘விரிஞ்சன்தானே என்றவன்’ என்றது, நான்மறைகளை முற்றக்கற்ற பெற்றிமை நோக்கி

'இவன் பிரமன்தானே' எனப் பலராலும் வியந்து பாராட்டப்பெறும் நல்லறிஞனாகிய அநுமனை. 'யார்கொல் இச் சொல்லின் செல்வன், வில்லார்தோள் இளையவீர விரிஞ்சனோ விடைவல்லானோ' (அனுமப்-20) என இராமன் அநுமனை வியந்து பாராட்டியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும். (231)

8088. வாய்கொண்டு சொற்றற் கேற்ற
வலிகொண்டு பலியுண் வாழ்க்கைப்
பேய்கொண்டு வெல்ல வந்த
பித்தனே மிடுக்கைப் பேணி
நோய்கொண்டு மருந்து செய்யா
வொருவநின் றோன்மை யெல்லா
மோய்கின்றாய் காண்டி யென்று
வுரைத்தன னிடப னொல்கான்.

'வாய் கொண்டு சொற்றற்கு ஏற்ற
வலிகொண்டு, பலி உண் வாழ்க்கைப்
பேய்கொண்டு வெல்ல வந்த
பித்தனே! மிடுக்கைப் பேணி
நோய் கொண்டு மருந்து, செய்யா
ஒருவ! நின் தோன்மை எல்லாம்
ஓய்கின்றாய் காண்டி!' என்று,
உரைத்தனன், இடபன், ஒல்கான்.

பொ:—(வயமத்தனது வஞ்சினத்தைச் செவிமடுத்த) இடபன், (சிறிதும் மனம்) தளராதவனாய் (அவனை நோக்கி), 'வாயளவிற் சொல்லுதற்கு ஏற்ற வலியினை மேற்கொண்டும், பலியை யுண்ணும் வாழ்வையுடைய பேய்களைத் துணையாகக் கொண்டும் (போரில்) வெற்றிகொள்ளவந்த பித்தனே! பெருவன்மையைப் பேணிப் பாது காக்க எண்ணி, (அதற்கு மாறான) நோயினை மேற்கொண்டு (அந் நோய் தீர்க்கும்) மருந்தினை (த்தேடி)ச் செய்துகொள்ள மாட்டாத ஒருவனே! நின் வன்மை யெல்லாம் ஒழியப் போகின்றாய் பார்' என்று கூறினான்.

கு:—'வாய்கொண்டு சொற்றற்கு ஏற்ற வலிகொண்டு' எனவே மெய்கொண்டு செயலிற் காட்டுதற்குரிய வன்மை நின்பால் இல்லை எனக் குறிப்பால் உணர்த்தியவாறு. பலி – தன்முயற்சியால் ஆக்கிக் கொண்டதன்றிப் பிறர்தரப் பெறும் உணவு. தனக்குரிய உணவைத்

தானே தேடிப்பெறும் ஆற்றல் இல்லாத பேய்களைத் துணையாகக் கொண்டு (எங்களை) வெல்லுதற்கு வந்த நீ அறிவு மயங்கிய பித்தனே யாதல் வேண்டும் என்பான், 'பலியுண் வாழக்கைப்பேய் கொண்டு வெல்லவந்த பித்தனே' என விளித்தான். தன்னுடைய வன்மையினை மேலும் மேலும் பெருக்க விரும்பியவன், அவ்விருப்பத் திற்கு முரணாக நோயினைக் கொண்டு அந்நோய் தீர்க்கும் மருந்தினை நாடிச் செய்துகொள்ளாதிருத்தல் போன்று. மேலும் மேலும் போரில் வெற்றிபெறுதலை விரும்பிய நீ அவ்வெற்றிக்கு அடிப்படையாகிய அறநெறியினைப் பின்பற்றி யொழுகாது அறநிலை திறம்பிப் பிறன்மனை நயந்த தூர்த்தனது சொல்வழி யொழுகுதலாய பாவத்தினை மேற் கொண்டு, அப்பாவந்தீரும் வழியை ஒரு சிறிதும் நாடாது தீநெறியிற் செல்கின்றா யாதலின் இப்பொழுதுள்ள வலிமையையும் இழந்து கெடுதல் உறுதி என இடித்துரைப்பான், 'நோய்கொண்டு மருந்து செய்யா ஒருவ நின் நோன்மை யெல்லாம் ஒய்கின்றாய் காண்டி' என்றான். காண்டி - முன்னிலையசை. இடபன், ஒல்கான் உரைத் தனன் என முடியும். (232)

## இருவரும் தம்முட் பொருதநிலையில் வயமத்தன் இறந்து வீழ்தல்

8089. ஓடுதி யென்ன வோடா
துரைத்தியே லுன்னோ டின்னே
யாடுவென் விளையாட் டென்னா
வயிலெயிற் றரக்க னம்பொற்
கோடுறு வயிரப் போர்விற்
காலொடு புருவங் கோட்டி
யீடுற விடபன் மார்பத்
தீரைந்து பகழி யெய்தான்.

"'ஓடுதி" என்ன, ஓடாது
உரைத்தியேல், உன்னோடு இன்னே
ஆடுவென் விளையாட்டு' என்னா,
அயில் எயிற்று அரக்கன், அம்பொன்
கோடு உறு வயிரப் போர்வில்
காலொடு புருவம் கோட்டி,
ஈடு உற, இடபன் மார்பத்து
ஈர் - ஐந்து பகழி எய்தான்.

பொ :—(இடபன் கூறிய அம்மொழியினைக் கேட்ட) கூரிய பற்களை யுடைய (வயமத்தன் என்னும்) அரக்கன், (இடபனை நோக்கி) 'நீ ஓடி உயிர் பிழைப்பாயாக' என்று யான் கூறவும் இவ்விடத்தை விட்டு ஓடாமல் (என்னெதிர் நின்று இவ்வாறு) எதிர்மொழி யுரைப்பாயானால், உன்னோடு இப்பொழுதே பொருதலாகிய விளை யாட்டினை நிகழ்த்துவேன்' என்று கூறி, அழகிய மேருமலையைப் போலும் திண்ணிய போர்த்தொழிற்குரிய வில்லின் முனைகளோடு தன் புருவத்தையும் வளைத்து, இடபனது மார்பின் கண்ணே நன்கு பதியுமாறு பத்து அம்புகளைச் செலுத்தினன்.

கு :—ஆடுதல் – செய்தல். அம்பொன்கோடு - அழகிய பொன் மலை. விறகால் – வில்லின்முனை. கோட்டி - வளைத்து. போர்விற் காலொடு புருவங்கோட்டி என்பது உடனவிற்சியணி. ஈடுஉற - வலி திற் பொருந்தும்படி. (233)

8090. அசும்புடைக் குருதி பாயு
மாகத்தான் வேகத் தாலத்
தசும்புடைக் கொடுந்தேர் தன்னைத்
தடக்கையா லெடுத்து வீசப்
பசுங்கழற் கண்ண பேயும்
பறந்தன பரவை நோக்கி
விசும்பிடைச் செல்லுங் காரின்
றாரைபோ னான்ற மெய்யான்.

அசும்புடைக் குருதி பாயும்
ஆகத்தான், வேகத்தால் அத்
தசும்புடைக் கொடுந் தேர்தன்னைத்
தடக்கையால் எடுத்து வீச,
பசுங்கழல் கண்ண பேயும்
பறந்தன, பரவை நோக்கி;
விசும்பிடைச் செல்லும் காரின்
தாரைபோல் நான்ற மெய்யான்.

பொ —(வயமத்தன் எய்த அம்புபட்டு) ஊற்றுப் பெருக்குடைய தாய் இரத்தம் சொரியும் உடம்பினை யுடையனாகிய இடபன், கலசத்தையுடைய கொடிய தேரினைத் தன் பெரிய கையினால் விரை வுடன் எடுத்து எறிய, பசிய கழற்சிக்காய் போலும் கண்களையுடைய பேய்களும் கடலை நோக்கி விரைந்தோடின. (அத்தேரிலிருந்த

வயமத்தன்) வானத்திற் செல்லும் மேகத்தின் இறக்கத்தை யொத்துத் தொங்குகின்ற உடம்பினை யுடையனாகி,

கு :—அசும்பு - ஊற்றுப்பெருக்கு. ஆகம் - உடம்பு. வேகம் - விரைவு. தசும்புகலசம்; ஈண்டுத்தேரின் முகட்டிலுள்ள கலசத்தைக் குறித்தது. கழல் – கற்சிக்காய். பேயின் கண்களுக்குக் கழற்சிக்காயினை உவமை கூறுதல் மரபு. நான்ற மெய்யான் என்னும் குறிப்பு முற்று ஈண்டு எச்சமாய், 'தேரொடுங் கடலின் வீழ்ந்து நிமிர வந்தான்' என அடுத்த செய்யுளில் வரும் வினைகொண்டு முடிந்தது. (234)

8091. தேரொடுங் கடலின் வீழ்ந்து
சிலையுந்தன் றலையு மெல்லாம்
நீரிடை யழுந்திப் பின்னு
நெருப்பொடு நிமிர வந்தான்
பாரிடைக் குதியா முன்ன
மிடபனும் பதக நீபோ
யாரிடைப் புகுதி யென்னா
வந்தரத் தார்த்துச் சென்றான்.

தேரொடும் கடலின் வீழ்ந்து, சிலையும் தன் தலையும் எல்லாம்
நீரிடை அழுந்தி, பின்னும் நெருப்பொடு நிமிர வந்தான்;
பாரிடைக் குதியா முன்னம், இடபனும், 'பதக! நீபோய்
ஆரிடைப் புகுதி!' என்னா, அந்தரத்து ஆர்த்துச் சென்றான்.

பொ :—(தான் ஏறியுள்ள) தேருடனே கடலில் (குப்புற) வீழ்ந்து விற்படையும் தன் தலையும் எல்லாம் கடல் நீருள்ளே அழுந்தி மீண்டும் (சினத்) தீயுடன் மேலெழுந்து வந்தவனாகிய வயமத்தன் நிலத்திலே குதிப்பதற்கு முன்னே இடபனும் 'தீவினையாளனே! நீ போய் யாரிடத்தே அடையப்போகின்றாய்' என்று கூறிக்கொண்டு ஆகாயத்தின் கண்ணே ஆரவாரித்துச் சென்றான்.

கு :—நீரிடை அழுந்தி நெருப்போடு நிமிரவந்தான் என்பது முரண் அணி. நிமிர்தல் - உயர்ந்தெழுதல். பதகன் – பாதகன்; தீவினைகளைச் செய்வோன். (235)

8092. அல்லினைத் தழுவி நின்ற
பகலென வரக்கன் றன்னைக்
கல்லினும் வலிய தோளாற்
கட்டியிட் டிறுக்குங் காலைப்
பல்லிடைப் பிலவா யூடு
பசும்பெருங் குருதி பாய
வில்லுடை மேக மென்ன
விழுந்தன னுயிர்விண் செல்ல.

அல்லினைத் தழுவி நின்ற பகல் என, அரக்கன் தன்னை,
கல்லினும் வலிய தோளால், கட்டியிட்டு இறுக்கும் காலை,
பல்லுடைப் பில வாயூடு பசும் பெருங் குருதி பாய,
வில்லுடை மேகம் என்ன, விழுந்தனன், உயிர் விண் செல்ல.

பொ :—இரவுப் பொழுதினைத் தழுவி நின்ற பகற் பொழுதினைப் போல (இடபன்,) வயமத்தனாகிய அரக்கனை மலையினும் வலிய தன் தோள்களால் இறுகக் கட்டிக்கொண்டு நெருக்கியபொழுது, (அவ் அரக்கன்) கோரப் பல்லினையுடைய பிலம்போலும் பெரிய வாயின் வழியாகப் பசியதாய் மிகுந்த இரத்தம் பாய்ந்தொழுகத் தனது உயிர் விண்ணிற் செல்ல, வில்லைப் பூண்ட மேகத்தை யொத்துக் தரையில் விழுந்தான்.

கு :—அல் - இரவுப்பொழுது. இருள்நிறத் தரக்கனாகிய வயமத்தனை வெண்ணிற மேனியனாகிய இடபன் இறுகத் தழுவிப் பிணித்த தோற்றம், இருளுடையதாய இரவுப்பொழுதினை வெயில் மிக்க பகற் பொழுது வளைத்துத் தழுவிக்கொண்டது போன்றிருந்தது என்பதாம். வில்லை ஏந்திய கருநிறத்தரக்கனுக்கு வானவில்லுடன் கூடிய மேகம் உவமை. போரில் இடபனால் நெருக்கப்பட்டு இறந்த வயமத்தன் வீரமரணம் எய்திய தனது இன்னுயிர் துறக்க வுலகத்திற்புகத் தனது உடல்மட்டும் தரையில் விழும் நிலையினை எய்தினான் என்பார், ‘உயிர் விண்செல்ல, வில்லுடை மேகம் என்ன விழுந்தனன்’ என்றார். (236)

சுக்கிரீவனும் கும்பனும் பொருதல்

8093. குரங்கினுக் கரசும் வென்றிக்
கும்பனுங் குறித்த வெம்போ
ரரங்கினுக் கழகு செய்ய
வாயிரஞ் சாரி போந்தார்

மரங்கொடுந் தண்டு கொண்டு
மலையென மலையா நின்ருர்
சிரங்களுங் கரமு மெல்லாங்
குலைந்தனர் கண்ட தேவர்.

குரங்கினுக்கு அரசும், வென்றிக்
கும்பனும், குறித்த வெம் போர்
அரங்கினுக்கு அழகு செய்ய,
ஆயிரம், சாரி போந்தார்,
மரம் கொடும், தண்டு கொண்டும்,
மலை என மலையா நின்ருர்;
சிரங்களும் கரமும் எல்லாம்
குலைந்தனர், கண்ட தேவர்.

கு:—வானர மன்னனும் வெற்றியையுடைய கும்பனும் (தங்களாற்) குறித்துக் கொள்ளப்பட்ட கொடிய போர், போர்க்களத்தினுக்கு அழகினைச் செய்யும் வகையில் ஆயிரம் முறை இடசாரி வலசாரியாகத் திரிந்து வந்தார்கள். மரத்தினைக் கொண்டும் தண்டாயுதத்தைக் கையிற்கொண்டும் மலைகள் ஒன்ருேடொன்று பொருவது) போன்று தம் முட்போர் செய்தார்கள். (அவ்விருவரது போர் நிகழ்ச்சியைக்) கண்ணுற்ற தேவர்கள் தலைகளும் கைகளும் எல்லாம் நடுங்குத லுற்றனர்.

கு:—குரங்கினுக்கு அரசு-வானரமன்னன் சுக்கிரீவன். கும்பன் - கும்பகருணன் மைந்தர் இருவருள் ஒருவன்; மற்ருெருவன் நிகும்பன். குரங்கினுக்கரசு மரங்கொடும் கும்பன் தண்டு கொண்டும் மலையாநின்ருர் என்க. மலைதல் - போர் செய்தல். குலைதல் - நடுங்குதல். (237)

3094. கிடைத்தா ருடலிற் கிழிசோரியை வாரித்
★ துடைத்தார் விழியிற் றழன்மாரி சொரிந்தா
ருடைத்தா ரொடுபைங் கழலார்ப்ப வுலாவிப்
புடைத்தார் பொருகின் றனர்கோளரி போல்வார்.

கிடைத்தார், உடலில் கிழி சோரியை வாரித்
துடைத்தார், விழியில் தழல் மாரி சொரிந்தார்,
உடைத் தாரொடு பைங்கழல் ஆர்ப்ப உலாவிப்
புடைத்தார், பொருகின்றனர்—கோள் அரி போல்வார்.

பொ :—வலிய சிங்கத்தைப் போல்வாராகிய அவ் இருவரும், ஒருவரை யொருவர் கிட்டியவராய், உடம்பிற் கிழிந்து பெருகுகின்ற இரத்தத்தைக் (கையால்) வழித்துத் துடைத்தார்கள்; கண்களி னின்றும் நெருப்பு மழையைச் சொரிந்தார்கள்; தாம் அணிந்துள்ள பொன்னரி மாலையுடனே பசும்பொன்னால் இயன்ற வீரக்கழல்கள் ஆரவாரிப்ப (ப்போர்க்களம் எங்கும்) திரிந்து (ஒருவரை யொருவர்) தாக்கிப் போர் செய்வாராயினர்.

கு :—கோள் அரி போல்வார் என்றது, சுக்கிரீவன் கும்பன் ஆகிய அவ்விருவரையும். கோளரி போல்வார், கிடைத்தார்; துடைத்தார்; புடைத்தார்; பொருகின்றனர் என முடிக்க. கிடைத்தல் - கிட்டுதல். தார் - மார்பின்மாலை. (238)

8095. தண்டங்கையின் வீசிய தக்க வரக்க
னண்டங்கள் வெடிப்பன வென்ன வடித்தான்
கண்டங்கது மாமர மேகொடு காத்தான்
விண்டங்கது தீர்ந்தது மன்னன் வெகுண்டான்.

தண்டம் கையின் வீசிய தக்க அரக்கன்,
அண்டங்கள் வெடிப்பன என்ன, அடித்தான்;
கண்டு, அங்கு, அது மா மரமே கொடு காத்தான்;
விண்டு, அங்கு, அது தீர்ந்தது; மன்னன் வெகுண்டான்

பொ :—தண்டத்தைக் கையிற்கொண்டு சுழற்றிய (போர்த்) தகுதியுள்ள அரக்கனாகிய கும்பன், அண்டங்கள் பிளந்தனவோ என் னும்படி (பேரொலி யுண்டாகச் சுக்கிரீவனை) அடித்தான். அப்போது (சுக்கிரீவன்) அதனைக் கண்டு பெரிய மரத்தைக் கொண்டு (தண்டத் தின் வீச்சு தன்மேற் படாதவாறு) தடுத்தான். (ஆயினும்) அங்கு அம்மரம் பிளந்து முரிந்துவிட்டது. (அந்நிலையிற்) சுக்கிரீவ மன்னன் பெரிதும் சினங் கொள்வானாயினன்.

கு :—அரக்கன் அடித்தான்; அதுகண்டு மன்னன் மரமேகொடு காத்தான்; அது விண்டு தீர்ந்தது; வெகுண்டான் என இயையும். விண்டு தீர்ந்தது - பிளந்து முரிந்தது. (239)

8096. பொன்றப்பொரு வேனினி
யென்று பொருதான்
ஒன்றப்புகு கின்றதொர்
கால முணர்ந்தான்

நின்றப்பெரி யோனினை
யாதமு னீலன்
குன்றெப்பதோர் தண்டு
கொணர்ந்து கொடுத்தான்.

'பொன்றப் பொருவேன், இனி' என்று, பொருதான்,
ஒன்றப் புகுகின்றது ஓர் காலம் உணர்ந்தான்,
நின்று அப்பெரியோன் நினையாத முன் நீலன்
குன்று ஒப்பது ஓர்தண்டு கொணர்ந்து கொடுத்தான்.

பொ :—(சுக்கிரீவனது வெகுளிகண்டு) மனம் பொருதவனாகிய கும்பன், 'நீ இப்பொழுதே இறந்தொழியும்படி போர் செய்வேன்' என்று சொல்லி (அவனை) நெருங்கப் புகுகின்றதாகிய அச் செவ்வியினை நன்குணர்ந்தவனாகிய நீலன், அப்பெரியோனாகிய சுக்கிரீவன் (அவ்விடத்தில்) நின்று (தன்போர்க்குரியதாக ஒன்றை) நினைப்பதற்கு முன்னே மலையினைப் போன்றதொரு தண்டாயுதத்தை (அச் சுக்கிரீவன்பாற்) கொண்டுவந்து கொடுத்தான்.

கு :—பொன்றுதல் – இறத்தல். பொருதான் 'இனி, பொன்றப் பொருவேன்' என்று ஒன்றைப் புகுகின்றதோர் காலம் உணர்ந்தான் நீலன், அப்பெரியோன் நின்று நினையாத முன் குன்று ஒப்பதோர் தண்டு கொணர்ந்து கொடுத்தான் என்க. பொருதான் என்றது, சுக்கிரீவன் தன்னை வெகுண்டு நோக்கக் கண்டு உள்ளம் பொருதானாகிய கும்பனை. ஒன்றுதல் - நெருங்குதல். அப்பெரியோன் என்றது வானரகுலத் தலைவனாகிய சுக்ரீவனை. (240)

8097. அத்தண்டு கொடுத்தது கைக்கொ டடைந்தான்
ஒத்தண்டமு மண்ணு நடுங்க வுருத்தான்
பித்தன்றட மார்பொடு தோள்கள் பிளந்தான்
சித்தங்க ணடுங்கி யரக்கர் திகைத்தார்.

அத்தண்டு கொடுத்தது கைக்கொடு அடைந்தான்,
ஒத்து அண்டமும் மண்ணும் நடுங்க உருத்தான்,
பித்தன் தட மார்பொடு தோள்கள் பிளந்தான்;
சித்தங்கள் நடுங்கி அரக்கர் திகைத்தார்.

பொ :—(நீலனால்) தரப்பட்டதாகிய அத் தண்டாயுதத்தைக் கையிலே கொண்டு (கும்பனைத் தாக்குதற்குப்) பொருந்தியவனான சுக்கிரீவன், விண்ணுலகமும மண்ணுலகமும் ஒருசேர நடுங்கும்படி

வெகுண்டவனாகி, (போர்ப்) பித்துடையவனாகிய கும்பனுடைய விரிந்த மார்புடனே தோள்களைப் பிளந்தான். (அதுகண்டு) அரக்கர்கள் மனம் நடுங்கித் திகைப்புற்றார்கள்.

கு :—கொடுத்தது அத்தண்டு – நீலனால் காலமுணர்ந்த கொடுக்கப்பட்டதாகிய அத் தண்டாயுதம். தண்டு கைக்கொடு அடைந்தவன், சுக்கிரீவன். அடைந்தான், உருத்தான், பிளந்தான் என்க. (241)

8098. அடியுண்ட வரக்க னருங்கனல் மின்னா
விடியுண்டதொர் மால்வரை யென்ன விழுந்தான்
முடியும்மிவ னென்பதொர் முன்னம் வெகுண்டா
னொடியும்முன தோளென மோதி யுடன்றான்.

அடியுண்ட அரக்கன், அருங் கனல் மின்னா
இடியுண்டது ஓர் மால்வரை என்ன விழுந்தான்!
'முடியும் இவன்' என்பது ஓர்முன்னம், வெகுண்டான்,
'ஒடியும் உனதோள்' என, மோதி உடன்றான்.

பொ :—(சுக்கிரீவனால் தண்டு கொண்டு) தாக்கப்பட்ட அரக்கனாகிய கும்பன், (தப்புதற்கு) அரிய தீயுடன் மின்னி இடியினால் தாக்கப்பட்டதாகிய பெருமலை என்னுமபடி விழுந்தவன், 'இவன் இறந்தொழிவான்' என்று (கண்டோர்) கருதுதற்கு முன்னமே வெகுண்டெழுந்தவனாய் (ச் சுக்கிரீவனை நோக்கி) 'உன் தோள் ஒடியும்' என்று சொல்லி (அவனுடைய தோளில்) தாக்கிப் போர் செய்தான்.

கு :—அடியுண்டவன் என்றது, கும்பனை. அடியுண்டு விழுந்த அரக்கனுக்குத் தீயுடன் கூடி மின்னி இடியினால் தாக்கப்பட்ட மலை உவமை. ஓர்முன்னம் – ஓர்தற்கு முன்னே. ஓர்தல் – கருதுதல். (242)

8099. தோளிற்புடை யுண்டயர் சூரியன் மைந்தன்
றாளிற்றடு மாற றவிர்ந்து தகைந்தான்
வாளிக்கடு வல்விசை யாலெதிர் மண்டி
யாளித்தொழி லன்னவன் மார்பி னறைந்தான்.

தோளில் புடையுண்டு அயர் சூரியன் மைந்தன்,
தாளில் தடுமாறல் தவிர்ந்து, தகைந்தான்,

வாளிக் கடு வல் விசையால் எதிர் மண்டி
ஆளித் தொழில் அன்னவன் மார்பின் அறைந்தான்.

பொ :—தோளிலே தாக்குண்டு வருந்துகின்ற சூரியன் புதல்வனுகிய சுக்கிரீவன் (தனது போர்) முயற்சியில் தடுமாற்றம் நீங்கி (வில்லினின்று துரக்கப்படும்) அம்பினது மிக்க விரைவுடன் (கும்பனுக்கு) எதிரே நெருங்கிச் சென்று (அவனைத்) தடுத்து நிறுத்தியவனுய்ச் சிங்கத்தின் தொழில் போலும் வீரச்செயலை யுடையவனுன அக் கும்பனது மார்பிலே மோதினுன்.

கு:—தகைதல் - தடுத்து நிறுத்துதல். கடுவல் விசை - மிக்க விரைவு. மண்டுதல் - நெருங்குதல். ஆளித் தொழிலையுடைய அன்னவன் என உருபும் பயனும் விரித்துரைக்க. ஆளி - சிங்கம். அன்னவன் என்றது, அத்தன்மையனுன கும்பனை. அறைதல் - மோதுதல். (243)

8100. அடியாயிர கோடியின் மேலு மடித்தார்
முடியாரி னியாரென வானவர் மொய்த்தார்
இடியோடிடி கிட்டிய தென்ன விரண்டும்
பொடியாயின தண்டு பொருந்தினர் புக்கார்.

அடி ஆயிர கோடியின் மேலும் அடித்தார்;
'முடியார் இனியார்?' என வானவர் மொய்த்தார்;
இடியோடு இடி கிட்டியது என்ன, இரண்டும்
பொடியாயின தண்டு; பொருந்தினர் புக்கார்.

பொ :—அடிகள் ஆயிர கோடிக்கும் மேலாக (விழும்படி, ஒருவரை யொருவர் தண்டாயுதத்தால்) அடித்தார்கள். (இக் கடும் போரில்) 'இறவாதவர் இனி யாருளர் ?' என்று தேவர்கள் (அங்கு) நெருங்கினுர்கள். இடியோடு இடி நெருங்கி மோதிய தென்னும்படி (அவர்கள் வீசிய) தண்டுகள் இரண்டும் (தம்முள் மோதிப்) பொடியாய்ச் சிதறின. (அந்நிலையில், இருவரும்) தம்முள் நெருங்கியவராய் (மற்போர் புரிய) முற்பட்டார்கள்.

கு :—முடிதல் - இறத்தல். தண்டு இரண்டும் பொடியாயின என்க. (244

8101. மத்தச்சின மால்களி றென்ன மலைந்தார்
பத்துத்திசை யுஞ்செவி டெய்தின பல்காற்
றத்தித்தழு வித்திர டோள்கொடு தள்ளிக்
குத்தித்தனி குத்தென மார்பு கொடுத்தார்.

மத்தச் சின மால் களிறு என்ன மலைந்தார்;
பத்துத் திசையும் செவிடு எய்தின; பல்கால்
தத்தித் தழுவி, திரள் தோள்கொடு தள்ளி,
குத்தி, தனி 'குத்து' என, மார்பு கொடுத்தார்.

பொ :—(அவ்விருவரும்) மதத்தினையும் வெகுளியினையும் உடைய பெரிய மதயானைகளைப் போன்று (தம்முட்) போர் புரிந்தார்கள். பல முறை தாவித் தழுவி நெருக்கி, திரண்ட தோள்களைக் கொண்டு மோதித் தள்ளி (ஒருவர் ஒருவரைக்) குத்தித் தனி நின்று 'என்னைக் குத்துக' என்று தம் மார்பைக் கொடுத்தார்கள். (அவர்தம் போர் முழக்கத்தின் மிகுதியால்) பத்துத் திசைகளும் செவிடுபட்டன.

கு :—தத்துதல் - தாவிப் பாய்தல். தழுவுதல் என்றது, கைகளால் இறுகத் தழுவி நெருக்குதலை. (245)

8102. நிலையிற்சுட ரோன்மகன் வன்கை நெருங்கக்
கலையிற்படு கம்மியர் கூட மலைப்ப
வுலையிற்ப டிரும்பென வன்மை யொடுங்க
மலையிற்பிள வுற்றது தீயவன் மார்பம்.

நிலையில் சுடரோன் மகன் வன்கை நெருங்க,
கலையில் படு கம்மியர் கூடம் அலைப்ப
உலையில் படு இரும்பு என, வன்மை ஒடுங்க,
மலையின் பிளவுற்றது, தீயவன் மார்பம்.

பொ :—(அவ்விருவரும் மற்போர் செய்யும்) அந்நிலையிலே சூரியன் மைந்தனாகிய சுக்கிரீவனுடைய வலிய கை (முட்டியாக) நெருங்கினமையால் தம் தொழிலிற் பயின்ற கொல்லரது சம்மட்டி தாக்குதலால் உலைக்களத்தில் அகப்பட்ட இரும்பினையொத்து வன்மை கெடக் கொடியோனாகிய கும்பனது மார்பு மலை பிளந்தாற் போன்று பிளவுபட்டது.

கு :—சுடரோன் மகன் வன்கை நெருங்க, தீயவன் மார்பம், உலையிற்படு இரும்பு என வன்மை ஒடுங்க, மலையின் பிளவுற்றது என

இயையும். கலையிற் படுதல் - தமக்குரிய தொழிலில் நன்கு பயின் றிருத்தல். கம்மியர் – கொல்லர். கூடம் - சம்மட்டி. சுடரோன் மகன் வன்கைக்குச் சம்மட்டியும் தீயவன் வன்மை கெடுதற்கு உலை யிற்படு இரும்பும் தீயவன் மார்பிற்கு மலையும் உவமை. (246)

சுக்கிரீவன் கும்பனது நாவினைப் பறித்தலால் கும்பன் இறத்தல்

8103. செய்வாயிக லென்றவ னின்று சிரித்தா
னைவாயர வம்முழை புக்கென வையன்
கைவாய்வழி சென்றவ னருயிர் கக்கப்
பைவாய்நெடு நாவை முனிந்து பறித்தான்.

'செய்வாய் இகல்?' என்று அவன் நின்று சிரித்தான்;
ஐவாய் அரவம் முழை புக்கென, ஐயன்
கை வாய் வழி சென்று, அவன் ஆருயிர் கக்க,
பை வாய் நெடு நாவை முனிந்து பறித்தான்.

பொ :—(மார்பு பிளவுற்ற கும்பனாகிய) அவன் (சிறிதும் மனந் தளராதவனாய்) நின்று, (சுக்கிரீவனை நோக்கி) 'என்னுடன் மேலும் போர் செய்வாய்' என்று சொல்லிச் சிரித்தான். (வானரகுலத்) தலை வனாகிய சுக்கிரீவன் வெகுண்டு, ஐந்தலைப் பாம்பு குகையினுள்ளே நுழைந்தாற்போன்று தன் கையானது (கும்பனது) வாயினுள்ளே செல்ல(ச் செலுத்தி) அவன் தன் அரிய உயிரை (வெளியே) கக்கும் படி (அவனது) பைபோலும் நீண்ட நாவினைப் பறித்தனன்.

கு :—அவன் நின்று 'இகல் செய்வாய்' என்று சிரித்தான் ; ஐயன் முனிந்து கை வாய்வழி சென்று பைவாய் நெடுநாவைப் பறித் தான் என்க. அவன் என்றது, கும்பனை. ஐயன் என்றது, சுக்கிரீ வனை. ஐவாய் அரவம் - ஐந்து தலைகளையுடைய பாம்பு. முழை - குகை. சுக்கிரீவனது ஐந்து விரல்களையுடைய கைக்கு ஐந்தலைப் பாம்பும், கும்பனது வாய்க்கு முழையும் உவமை. சென்று – செல்ல; செய்தெனெச்சம் செயவென் னெச்சமாகத் திரிக்கப்பட்டது. 'செலுத்தி' என ஒரு சொல் வருவித்துரைக்கப்பட்டது. (247)

அப்பொழுது நிகும்பன் உருத்துவர, அங்கதன் எதிர்த்தல்

8104. அக்காலை நிகும்ப னனற்சொரி கண்ணன்
புக்கானினி யெங்கட போகுவ தென்னா

மிக்கானெதி ரங்கத னுற்று வெகுண்டா
னெக்காலமு மில்லதொர் பூச லிழைத்தார்.

அக்காலை, நிகும்பன், அனல் சொரி கண்ணன்,
புக்கான், 'இனி, எங்கு அட போகுவது ?' என்று,
மிக்கான் எதிர் அங்கதன் உற்று வெகுண்டான்;
எக்காலமும் இல்லது ஒர் பூசல் இழைத்தார்.

பொ :—(சுக்கிரீவனுற் கும்பன் கொலையுண்ட) அப்பொழுது நிகும்பன் என்பான், நெருப்பினைக் கக்கும் கண்களை யுடையனுய், 'இனி எங்கேயடா நீ தப்பிப் போவது ?' என்று சொல்லிக்கொண்டு, (சுக்கிரீவனுக்கு எதிரே வந்து) புகுந்தான். செருக்குற்றவனுகிய அந் நிகும்பனுக்கு எதிராக அங்கதன் சென்று சினந்து நின்முன். (அவ்விருவரும்) எக்காலத்திலும் நிகழ்ந்திராத கடும்போரைச் செய் தார்கள்.

கு :—நிகும்பன் - கும்பகருணனுடைய புதல்வன் ; கும்பனுடைய சகோதரன். மிக்கான் - செருக்கினுல் மேற்சென்ற நிகும்பன். பூசல் - போர். (248)

8105. சூலப்படை யானிடை வந்து தொடர்ந்தா
னாலத்தினும் வெய்யவ னங்கத னங்கோர்
தாலப்படை கைக்கொடு சென்று தடுத்தா
னீலக்கிரி மேனிமிர் பொற்கிரி நேர்வான்.

சூலப் படையானிடை வந்து தொடர்ந்தான்,
ஆலத்தினும் வெய்யவன் ; அங்கதன், அங்கு ஓர்
தாலப் படை கைக் கொடு சென்று தடுத்தான்,
நீலக் கிரிமேல் நிமிர் பொற்கிரி நேர்வான்.

பொ :—ஆலகால நஞ்சினும் கொடியவனுகிய நிகும்பன், சூலப் படையினை ஏந்தியவனுய் நடுவே வந்து (அங்கதனைத்) தொடர்ந்து எதிர்த்தான். அந்நிலையில் அங்கதன் ஒப்பற்ற பனைமரமாகிய படையினைக் கைக்கொண்டு நீலமலைமேல் நிமிர்ந்து செல்லும் பொன் மலையினை ஒத்தவனுய்ச் சென்று (அவனைத்) தடுத்தான்.

கு :—ஆலத்தினும் வெய்யவன் சூலப்படையான் (ஆகி) இடை வந்து தொடர்ந்தான் ; அங்கு அங்கதன் ஓர் தாலப்படை கைக் கொடு, நீலகிரிமேல் நிமிர் பொன்கிரி நேர்வான் (ஆகிச்) சென்று தடுத்தான் என இரு தொடராக இயைத்துப் பொருள்கொள்க.

ஆலத்தினும் வெய்யவன் என்றது, நிகும்பனை. தாலம் – பனை. நீல நிறத் தாக்கனாகிய நிகும்பனைப் பொன்மேனியனாகிய அங்கதன் எதிர்த்து மேற்சென்ற தோற்றம், நீலமலைமேல் பொன்மலை மேற் செல்வதனை யொத்துத் தோன்றிய தென்பதாம். ((249)

நிகும்பன் அங்கதனைக் கொல்லுதற்குச் சூலப்படையினை எடுத்தபொழுது அனுமன் விரைந்துவந்து அதனைத் தடுத்து நிகும்பனை அறைந்து கொல்லுதல்

8106. எறிவானிகல் சூல மெடுத்தலு மின்னே
முறிவானிக லங்கத னென்பதன் முன்னே
யறிவானடன் மாருதி யற்ற முணர்ந்தான்
பொறிவானுகு தீயென வந்து புகுந்தான்.

எறிவான் இகல் சூலம் எடுத்தலும், 'இன்னே
முறிவான் இகல் அங்கதன்' என்பதன் முன்னே,
அறிவான் அடல் மாருதி அற்றம் உணர்ந்தான்,
பொறி வான்உகு தீ என வந்து புகுந்தான்.

பொ :—(நிகும்பன், அங்கதனை) எறியும் பொருட்டு வலிய சூலப் படையை எடுத்தலும் (இதனால்) 'அங்கதன் இப்பொழுதே இறந் தொழிவான்' எனக் கருதும் நிலைமை எற்படுவதன் முன்னே (இவ் விருவரும் தம்முட் பொருதற்கு முந்தும். இந்நிகழ்ச்சியை மேல் நின்று) அறிபவனாகிய போர்வலிமிக்க அநுமன், இறுதி வந்த எல்லை யாகிய செவ்வியை அறிந்தவனாகி வானத்தினின்று சொரியும் பொறி களையுடைய தீப் பிழம்பினைப் போன்று (அங்கே) வந்து புகுந்தான்.

கு :—மாருதி - மருத்தின் மைந்தன் ; வாயுகுமாரனாகிய அநுமன். மருத் – வாயு அற்றம் - மெலிவுவந்த எல்லை. வான்உகு பொறித் தீயென மாற்றுக. (250)

இதன்பின் 52 - என்னும் எண் பெற்ற அச்சுப்புத்தகத்திற் பின் வருமாறு ஒருமிகை பாடல் உளது :—

8106. (a) மற்றும் திறல் வானர வீரர்கள் யாரும்,
கொற்றம் கொள் இராவணன் மைந்தன் குலைந்தே
முற்றும்படி மோதினர் ; மேத முடிந்தே
அற்று, அங்கு அவர் யாவரும் ஆவி அழிந்தார்.

8107. தடையேதுமில் சூல முனிந்து சலத்தால்
விடையேநிக ரங்கதன மேல்விடு வானை
யிடையேதடை கொண்டுத னேடவி ழங்கைப்
புடையேகொடு கொன்றடன் மாருதி கொன்றான்.

தடை ஏதும் இல் சூலம் முனிந்து, சலத்தால்,
விடையே நிகர் அங்கதன்மேல் விடுவானை,
இடையே தடைகொண்டு, தன் ஏடு அவிழ் அம் கைப்
புடையே கொடு கொன்று, அடல் மாருதி போனான்.

பொ :—(மேல்வந்து) தடுத்தற் குரியது எதுவும் இல்லாத சூலப் படையினைக் காளைபோல் வானாகிய அங்கதன்மேல் தணியாத வெகுளியால் எறிதற்கு முந்துவோனாகிய நிகும்பனைப் போர் வலியுடைய அநுமன், இடையே தடுத்து நிறுத்தி, (தாமரையின்) இதழ் மலர்ந்து விரிந்தாற்போலும் தனது அழகிய கையினால் புடைத்தல் ஒன்றையே செய்து உயிர்போக்கி (த்தான் இருந்த மேற்றிசை வாயிலை நோக்கி)ச் சென்றான்.

கு :—தன்னைத் தடுத்துத் துணித்ததற்குரிய சிறந்த ஆயுதமாகத் தனக்குமேல் ஒன்றுமில்லாத ஆற்றல் மிக்க சூலம் என்பார், 'தடையேதுமில் சூலம்' என்றார். சலம் - தணியாக்கோபம். விடை-காளை. அங்கைப் புடையே கொடு - அழகிய கையினால் புடைத்த லொன்றையே செய்து. புடை - புடைத்தல்; அறைதல். (251)

## அரக்கர் அஞ்சியோடுதல்

8108. நின்றார்க டடுப்பவ ரின்மை நெளிந்தார்
பின்றாதவர் பின்றி யிரிந்து பிரிந்தார்
வன்றாண்மரம் வீசிய வானர வீரர்
கொன்றார்மிகு தானை யரக்கர் குறைந்தார்.

நின்றார்கள் தடுப்பவர் இன்மை நெளிந்தார்,
பின்றாதவர் பின்றி இரிந்து பிரிந்தார்;
வன்தாள் மரம் வீசிய வானர வீரர்
கொன்றார்; மிகு தானை அரக்கர் குறைந்தார்.

பொ :—(படையில்) முன்னின்ற அரக்கர்கள், (வானரசேனையைத்) தடுத்து நிறுத்தவல்ல தலைவர்கள் இல்லாமையால் வலி தளர்ந்து பின்னிடாதவர்கள் சேனையை விட்டுப் பிரிந்தவர்களாய்ப்

பின்னிட்டு அஞ்சியோடினார்கள்; வலிய தாளையுடைய மரங்களைப் பறித்து வீசிய வானரவீரர்கள் (அவ்வரக்கர்களைக்) கொன்றொழித்தார்கள். (அதனால்) மிகுந்த சேனைகளிலுள்ள அரக்கர்கள் எண்ணிக்கையிற் குறைந்து சுருங்கினார்கள்.

கு:—நின்றார் படைமுன் நின்ற வீரர்கள். நெளிதல் - வலி தளர்ந்து வளைதல். பின்றுதல் - பின்னடைதல். (252)

8109. ஓடிப்புகு வாயி னெருக்கி னுலந்தார்
கோடிக்கதி கத்தினு மேலுளர் குத்தாற்
பீடிப்புறு புண்ணுட லோடு பெயர்ந்தார்
பாடித்தலை யுற்றவ ரெண்ணிலர் பட்டார்.

ஓடிப் புகுவாயில் நெருக்கின் உலந்தார்,
கோடிக்கு அதிகத்தினும் மேல் உளர்; குத்தால்
பீடிப்புறு புண்ணுடலோடு பெயர்ந்தார்,
பாடித்தலை உற்றவர், எண் இலர் பட்டார்.

பொ:—போர்க்களத்தை விட்டு ஓடி (நகரத்தினுள்ளே) நுழையும் வாயிலின் நெருக்கத்தால் இறந்த அரக்கர்கள் கோடியென்னும் தொகைக்கு மேலும் அதிகமாவார்கள். (வானரர்கள் குத்திய) குத்துக்களாற் பீடிக்கப்பட்டுப் புண்ணுடம்புடனே திரும்பிச் சென்று பாசறையிலே பொருந்தியவராகி இறந்த அரக்கர்கள் எண்ணற்றவர்.

கு:—ஓடி நெருக்கின் உலந்தார் கோடிக்கு அதிகத்தினும் மேலுளர் எனவும், புண்ணுடலோடு பெயர்ந்தார், பாடித்தலையுற்றவர் பட்டார் எண்ணிலர் எனவும் இயையும். பாடி - பாசறை. தலை - ஏழாம் வேற்றுமையுருபு. (253)

8110. தண்ணீர்தரு கென்றனர் தாவுற வோடி
யுண்ணீரற வாவி யுலந்தன ருக்கார்
கண்ணீரொடு மாவி கலுழ்ந்தனர் காலால்
மண்ணீர முறக்கடி தூர்புக வந்தார்.

'தண்ணீர் தருக' என்றனர் தாவுற ஓடி,
உள் நீர் அற, ஆவி உலந்தனர், உக்கார்;
கண்ணீரொடும் ஆவி கலுழ்ந்தனர், காலால்
மண் ஈரம் உற, கடிது ஊர்புக வந்தார்.

பொ :—வருத்தம் மிக ஓடிச் சென்று, 'தண்ணீர் தருக' என்று கேட்ட அரக்கர்கள் (நீர் கிடைப்பதற்கு முன்) நாவினுள்ளே நீர்ப் பசை அற வறண்டு உயிர் நீங்கினார்கள். தம் கால்களின் வழியே மண்ணும் ஈரம் அடையும்படி தம் ஊரினுள்ளே புகுதற்கு விரைந்தோடிவந்த அரக்கர்கள் (போரில் தாம் உற்ற துன்ப மிகுதியாற் சொரியும்) கண்ணீருடன் தமது உயிரையும் ஒருங்கே வெளிப்படுத்தி இறந்தார்கள்.

கு :—தாவுற ஓடி, 'தண்ணீர் தருக' என்றனர் உள நீர் அற ஆவி உலந்தனர் உக்கார் எனவும், காலால் மண் ஈரம் உற, ஊர்புக கடிது வந்தார் கண்ணீரொடும் ஆவிகலுழ்ந்தனர் எனவும் இரு தொடராகக் கொள்க. தாஉற - வருத்தம் மிக. காலால் மண் ஈரம் உற ஊர் புகக்கடிது வந்தார் என்புழி, ஈரம் என்றது, நீரல் ஈரத்தை. இறந்த அரக்கர்களுள் உண்ணீரின்றி இறந்தவர்களும் காலால் மண் ஈரம் உற இறந்தவர்களும் உளர் எனக் குறித்த நயம் கூர்ந்துணரத்தக்கது. (254)

8111. விண்மேனெடி தோடின ராருயிர் விட்டார்
மண்மேனெடு மால்வரை யென்ன மறிந்தார்
எண்மேலு நிமிர்ந்துள ரீரு டயங்கப்
புண்மேலுடை மேனியி னார்திசை போனார்.

விண்மேல் நெடிது ஓடினர், ஆருயிர் விட்டார்,
மண்மேல் நெடுமால் வரை என்ன மறிந்தார்;
எண்மேலும் நிமிர்ந்துளர், ஈருள் தயங்கப்
புண் மேலுடை மேனியினார் திசை போனார்.

பொ :—விண்ணின்மீது நெடுந்தூரம் ஓடிச் சென்று தமது அரிய உயிரை விட்டவர்களாய்ப் பூமியின்மீது நெடியமலை என்னும்படி விழ்ந்து கிடப்பவர்களும், ஈரல் வெளியே தெரியப் புண்கள் பல வற்றை யுடைய உடம்பினராகிப் பல திசைகளிலும் ஓடியவர்களும் ஆகிய அரக்கர்கள் எண்ணி அளவிடுதற்கு அடங்காது மேற்பட்டுள்ளார்கள்.

கு :—'எண்மேலும் நிமிர்ந்துளர்' என்ற தொடர், முன்னுள்ள 'மறிந்தார்' என்பதனோடும் பின்னுள்ள 'போனார்' என்பதனோடும் இயைந்து இடைநிலை விளக்காய் நின்றது. ஈருள் - ஈரல். தயங்குதல் - விளங்குதல்; இங்கு வெளிப்பட்டுத் தெரிதல் என்னும் பொருளிற் பயின்றது. (255)

8112. அறியும்மவர் தங்களை யையவி வம்பைப்
பறியும்மென வந்து பறித்தலு மாவி
பிறியும்மவ ரெண்ணிலர் தம்மனை பெற்ருர்
குறியும்மறி கின்றிலர் சிந்தை குறைந்தார்.

அறியும்மவர் தங்களை, 'ஐய, இவ் அம்பைப்
பறியும்' என, வந்து பறித்தலும், ஆவி
பிறியும் அவர் எண் இலர்; தம் மனை பெற்ருர்,
குறியும் அறிகின்றிலர், சிந்தை குறைந்தார்.

பொ:—(தம்முடன் முன்) அறிந்து பழகியவர்களை எதிர்ப்பட்டு, 'ஐயா, (என் உடம்பில் தைத்துள்ள) இந்த அம்பினைப் பறித்து எடுப்பீராக' எனவேண்ட (அவர்கள்) வந்து பறித்தவுடனே உடம்பைவிட்டு உயிர் பிரிந்தவர்களும், தம் மனையை அடைந்தவர்களாய் (வீட்டிலுள்ள மனைவி மக்கள் முதலிய சுற்றத்தாரால் இன்னுரென) அடையாளம் கண்டறியப் பெருராய் மனம் குன்றியவர்களும் (ஆகிய அரக்கர்கள்) எண்ணற்றவராவர்.

கு:—எண்ணிலர் என்பது, இடைநிலை விளக்காய் முன்னும் பின்னும் சென்றியைந்தது. அறியும்மவர் - தம்முடன் முன் அறிந்து பழகியவர்கள். குறி - அடையாளம். (256)

8113. பரிபட்டு விழச்சிலர் நின்று பதைத்தார்
கரிபட்டுரு ளச்சிலர் கால்கொடு சென்ருர்
நெரிபட்டழி தேரிடை யேபலர் நின்ரு
ரெரிபட்ட மனைக்கு ளிருந்தவ ரென்ன.

பரி பட்டு விழ, சிலர் நின்று பதைத்தார்;
கரி பட்டு உருள, சிலர் கால்கொடு சென்ருர்;
நெரிபட்டு அழி தேரிடையே பலர் நின்ருர்,
எரிபட்ட மனைக்குள் இருந்தவர் என்ன.

பொ:—(அரக்கரிற்) சிலர் (தாம் ஏறிச் செலுத்திய) குதிரை இறந்து விழுந்தமையால் (இன்னது செய்வதென ஒன்றும் தோன்ருமல்) நின்று மனம் பதைப்புற்ருர்கள்; சிலர் (தமது) யானை தாக்குண்டு இறந்துகிடந்தமையால் காலால் நடந்து சென்ருர்கள். சிலர் சுற்றிலும் (தீப்பற்றி) யெரியும் மனையின்கண்ணே இருந்தவர்களைப் போன்று நெரிபட்டு அழிந்த (தம்முடைய) தேரினிடத்தே (திகைப்புற்று) நின்ருர்கள்.

கு :—பரி - குதிரை. படுதல் - இறத்தல். கரி - யானை. கால் கொடு – காலைக்கொண்டு ; காலால். எரிபட்ட மனையின்கண் இருந்தவர் என்ன, நெரிபட்டு அழி தேரிடையே சிலர் நின்றார் என்க.

(257)

8114. மண்ணின்றலை வானர மேனியர் வந்தார்
புண்ணின்ற வுடற்பொறை யோர்சிலர் புக்கார்
கண்ணின்ற குரங்கு கலந்தன வென்னா
வுண்ணின்ற வரக்கர் மலைக்க வுலந்தார்.

மண்ணின் தலை வானர மேனியர் வந்தார்,
புண் நின்ற உடற் பொறையோர் சிலர் புக்கார்,
'கண் நின்ற குரங்கு கலந்தன' என்னா,
உள் நின்ற அரக்கர் மலைக்க, உலந்தார்.

பொ :—புண்கள் நிலை பெற்ற உடற்பாரத்தை யுடையோரான அரக்கர் சிலர் (வானரசேனைகள் தம்மைப் பின்தொடர்ந்து தாக்காதிருத்தல் வேண்டி) மண்ணிடத்தே குரங்கின் உருவினை மேற்கொண்டவராகி வந்து புகுந்தாராக (இலங்கை நகரத்தின்) உள்ளே நின்ற அரக்கர்கள், 'நமது கண் முன் நின்று பொருத குரங்குகள் (இப்பொழுது நம் சேனையினுள்ளும் வந்து) கலந்துவிட்டனவே என்றெண்ணிப் பொருது தாக்கினமையால் இறந்து போனார்கள்.

கு :—வானர சேனைகளால் தாக்குண்டு புண்பட்டு ஆற்றாது ஓடி வரும் அரக்கர் சிலர், அக் குரங்குகள் தம்மை மேலும் பின்தொடர்ந்து தாக்காதவாறு வானரமேனியராய் உருமாறித் தம் நகரத்தினுள்ளே புகுந்தாராக, உள்ளேயிருந்த அரக்கர்கள் அவர்களைத் தம்மினத்தாரென்றறியாது பகைவரென்றெண்ணித் தாக்கினமையால் அவர்கள் இறந்தொழிந்தார்கள் என்பதாம். உயிர்பிழைத்தற்கெனக் கொண்ட உருவமே தமது அழிவிற்குக் காரணமாய் முடிந்துவிட்டது என்றவாறு. (258)

8115. இருகணுந் திறந்து நோக்கி
★ யயலிருந் திரங்கு கின்ற
வுருகுதங் காத லோரை
யுண்ணுநீ ருதவு மென்றார்

வருவதன் முன்ன மாண்டார்
சிலர்சிலர் வந்த தண்ணீர்
பருகுவா ரிடையே பட்டார்
சிலர்சிலர் பருகிப் பட்டார்.

இருகணும் திறந்து நோக்கி,
அயல் இருந்து இரங்குகின்ற
உருகு தம் காதலோரை,
'உண்ணும் நீர் உதவும்' என்றூர்,
வருவதன் முன்னம் மாண்டார்
சிலர்; சிலர் வந்த தண்ணீர்
பருகுவார் இடையே பட்டார்;
சிலர் சிலர் பருகிப் பட்டார்.

பொ :—தமது பக்கத்தேயிருந்து (துன்ப நிலையினை நினைந்து) வருந்துகின்ற நெஞ்சம் நெகிழ்ந்துருகும் தம்முடைய காதற்சுற்றத்தார்களை இரண்டு கண்களும் விழித்துப் பார்த்து, 'பருகும் நீர் தாருங்கள்' என வேண்டிய (அரக்க) வீரர்களுட் சிலர் (தண்ணீர்) வருவதற்கு முன்னே இறந்தார்கள்; சிலர் கொண்டுவரப்பட்ட தண்ணீரைப் பருகுகின்றவர்கள் (பருகி முடிப்பதற்குள்) இடையே இறந்துபட்டார்கள்; சிற்சிலர் (அத் தண்ணீரைப்) பருகி முடித்த பின் இறந்துபோனூர்கள்.

கு :—போர்முகத்துப் புண்பட்டு மூர்ச்சையுற்றுக் கிடக்கும் அரக்கர்களுள் ஒரு சிறிது உணர்வு வந்து விழித்துத் தம் அருகேயுள்ள சுற்றத்தார்களை நோக்கி 'உண்ணும் நீர் வேண்டும் என்று கேட்டவர்களிற் சிலர் தண்ணீர் வருவதற்கு முன்னரும், சிலர் தண்ணீரைப் பெற்றுப் பருகிக் கொண்டிருக்கும் நிலையிலேயும், சிற்சிலர் பருகி முடித்தபின்னரும் இறந்துபோனூர்கள் என்னும் இச்செய்தி, இவ்வுலக நுகர்ச்சியை விரும்பியவர்களுள் ஒரு சிலர் தாம் விரும்பியனவற்றைச் சிறிதும் பெருமலும் பெற்ற பின்னும் முற்ற நுகரப் பெருமலும், நுகர்ந்தும் நுகர்ச்சிப் பயனுகிய அமைதியில் நிலை பெருமலும் வாழ்க்கையைத் துறந்து இறந்தொழியும் துயர நிலைகளை முறையே புலப்படுத்தி நிற்றல் அறியத்தக்கதாகும். (259)

8116. மக்களைச் சுமந்து செல்லுந்
தாதையர் வழியி னுவி
யுக்கன ரென்ன வீசித்
தம்மைக்கொண் டோடிப் போனூர்

கக்கினர் குருதி வாயாற்
கண்மணி சிதறக் காலால்
திக்கொடு நெறியுங் காணுர்
திரிந்துசென் றுயிருந் தீர்ந்தார்.

மக்களைச் சுமந்து செல்லும்
தாதையர், வழியின் ஆவி
உக்கனர் என்ன வீசி,
தம்மைக் கொண்டு ஓடிப் போனுர்;
கக்கினர் குருதி வாயால்,
கண்மணி சிதற, காலால்
திக்கொடு நெறியும் காணுர்,
திரிந்து சென்று, உயிரும் தீர்ந்தார்.

பொ :—(போரிற் புண்பட்ட தம்) மக்களைச் சுமந்து செல்லுகின்ற தந்தையராகிய அரக்கர்கள், வழியிடையிலே (அம் மைந்தர்கள்) உயிர் நீங்கினுராக (அவர்களது உடம்பை) எறிந்துவிட்டுத் தம்மை (மட்டும் பாதுகாத்து)க் கொண்டு ஓடிப்போனவர்கள், வாய்வழியே இரத்தங் கக்கியவர்களாய்க் கண்ணின் கருமணிகள் தெறித்துவிழத் (தாம் செல்லும்) திசையும் (செல்லுதற்குரிய) வழியும் காணுதவர்களாய்க் கால்களால் (தடவிக்கொண்டு பல இடங்களிலும்) திரிந்து அலைந்து தம்முயிரும் தீர்ந்தொழிந்தார்கள்.

கு :—ஆவி உக்கனர் - உயிர் துறந்தார். வாயாற் குருதி கக்கினர் - வாய்வழியே இரத்தம் கக்கியவர்களாய். தீர்தல் - விட்டு நீங்குதல். (260)

அதிகாயன் முதலியோர் இறந்த செய்தியைத் தூதர் இராவணனிடம் சென்று அறிவித்தல்

8117. இன்னதோர் தன்மை யெய்தி
யிராக்கத ரிரிந்து சிந்திப்
பொன்னகர் புக்காரிப் பாற்
பூசல்கண் டோடிப் போன
துன்னருந் தூதர் சென்ருர்
தொடுகழ லரக்கர்க் கெல்லாம்
மன்னவ னடியில் வீழ்ந்தார்
மழையினீர் வழங்கு கண்ணுர்.

இன்னது ஓர் நன்மை எய்தி,
இராக்கதர் இரிந்து சிந்தி,
பொன் நகர் புக்கார்; இப்பால்
பூசல் கண்டு ஓடிப் போன
துன்ன அருந் தூதர் சென்றார்,
தொடு கழல் அரக்கர்க்கு எல்லாம்
மன்னவன் அடியில் வீழ்ந்தார்,
மழையின் நீர் வழங்கு கண்ணார்.

பொ :—இத்தகையதொரு துயர்நிலையை யடைந்து அரக்க வீரர்கள் நிலைகெட்டு ஓடிச் சிதறிப் பொன்மயமான (இலங்கை) நகரத்தை அடைந்தார்கள். இப்பால் நிகழும் போர் நிகழ்ச்சியைக் கண்ணுற்று (அஞ்சி) ஓடிய நெருங்குதற்கு அரிய வலியினையுடைய தூதர்கள் சென்றவர்கள், மழைபோன்று நீரைச் சொரியும் கண்களை யுடையராய் வீரக்கழலை யுடைய இராக்கதர் வேந்தனாகிய இராவணனுடைய அடிகளில் வீழ்ந்து வணங்கினார்கள்.

கு :—தூதர் சென்றார், மழையின் நீர் வழங்கு கண்ணாராகி அரக்கர்க்கெல்லாம் மன்னவன் அடியில் வீழ்ந்தார் என்க. சென்றார், வினையாலணையும் பெயர். கண்ணார், முற்றெச்சம். (261)

8118. நோக்கிய விலங்கை வேந்த
னுற்றது நுவன்மி னென்றான்
போக்கிய சேனை தன்னிற்
புகுந்துள விறையும் போதா
வாக்கிய போரி னைய
வதிகாயன் முதல்வ ராய
கோக்குலக் குமர ரெல்லாங்
கொடுத்தன ராவி யென்றார்.

நோக்கிய இலங்கை வேந்தன்,
'உற்றது நுவல்மின்' என்றான்;
'போக்கிய சேனை தன்னில்
புகுந்துள இறையும் போதா;
ஆக்கிய போரின், ஐய!
அதிகாயன் முதல்வர் ஆய
கோக்குலக் குமரர் எல்லாம்
கொடுத்தனர், ஆவி' என்றார்.

பொ :—(தூதர்கள் வந்து தன்னடிகளில் வீழக்) கண்ட இலங்கை மன்னனாகிய இராவணன், 'நிகழ்ந்ததைக் கூறுங்கள்' எனப் பணித்தான். 'ஐயனே! (நீ) அனுப்பிய சேனைகளில் (இறவாமல்) மீண்டு வந்தவை (அவற்றை யெண்ணி உறையிடுதற்குச்) சிறிதும் போதியன அல்ல. (இலக்குவனுடன்) நிகழ்த்திய போரிலே அதிகாயனை முதலாக வுடையராகிய அரசர்குல மைந்தர்களெல்லாரும் தம் முயிரைக் கொடுத்தார்கள்' எனக் கூறினான்.

கு :—உற்றது - நிகழ்ந்தது. இறை - சிறிது. போதா - போதுமானவை அல்ல. அதிகாயனை முதலாக வுடைய அரசகுல மைந்தராவார் வீராந்தகன், நராந்தகன், கும்பன், நிகும்பன் முதலியோர். அவர்கள் இறந்த செய்தியை இராவணனுக்குக் கூறவந்த தூதர்கள் கோக்குலக் குமரராகிய அவர்கள் பகைவர்களாற் போரிற் கொல்லப்பட்டனர் என்று கூறாது ஆவி கொடுததனர் எனக் கூறிய நயம் கூர்ந்துணரத் தக்கதாகும். (262)

இதன்பின் 52-என்னும் எண்பெற்ற அச்சுப் புத்தகத்திற் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் உளது :—

8118. (a) அளப்பு இல மைந்தர் எல்லாம்,
ஆனை, தேர், பரி, ஆள் என்னும்
வழக்குறும் சேனை வெள்ளம்
அளப்பு இலமடிய, தாமும்
களத்திடைக் கவிழ்ந்தார் என்ற
மொழியினைக் காதில் கேளா,
துளக்கம்இல் அரக்கன், மேருத்
துளங்கியது என்ன, சோர்ந்தான்.

### மைந்தர்கள் இறந்தமை கேட்டு மனங் கலங்கிய இராவணனது நிலை

8119. ஏங்கிய விம்மன் மான
மிரங்கிய விரக்கம் வீர
மோங்கிய வெகுளி துன்ப
மென்றிவை யொன்றிற் கொன்று
தாங்கிய தரங்க மாகக்
கரையினைத் தள்ளித் தள்ளி
வாங்கிய கடல்போ னின்ரு
னருவிநீர் வழங்கு கண்ணான்.

ஏங்கிய விம்மல் மானம்,
இரங்கிய இரக்கம் வீரம்,
ஓங்கிய வெகுளி துன்பம்—
என்று இவை, ஒன்றிற்கு ஒன்று
தாங்கிய தரங்கம் ஆகக்
கரையினைத் தள்ளித் தள்ளி,
வாங்கிய கடல் போல் நின்றான்—
அருவிநீர் வழங்கு கண்ணான்.

பொ:—(தன்குல மைந்தர்களையும் சேனைகளையும் இழந்தமையால்) அருவிநீர் போன்று துன்பநீர் சொரியும் கண்களையுடையனான இராவணன், ஏக்கங் கொள்ளுதற்குக் காரணமான அழுகையும் (அதனை மீதூரும்) மானவுணர்ச்சியும், இரங்கி வருந்துதற்குக்காரணமாகிய பரிதாபமும் (அதனை மீதூரும்) வீரவுணர்வும், (தன்கண்) கிளர்ந்து ஓங்கிய கோபமும் (செயலற்ற நிலையில் தானடைந்த) துன்பமும் ஆகிய இவை, தம்முள் ஒன்றற்கு ஒன்று எதிராக மோதித் தள்ளும் அலைகள் போன்றமையக் கரையினை மோதி மோதி மீளவும் தன்பால் வாங்கிக்கொள்ளும் (அலைகளையுடைய) கடலையொத்து நின்றான்.

கு:—இராவணன் தன்கண்ணே விம்மலும் மானமும், இரக்கமும் வீரமும், வெகுளியும் துன்பமும் ஆகியவை தம்முள் மாறுபடக் கிளர்ந்து தோன்ற ஒன்றன்மேலொன்றாகத் தோன்றிக் கரையினை மோதித் தள்ளும் அலைகளையுடைய கடல்போல் அலைவுற்ற மனத்தினனானான் என்க. தாங்குதல் - தள்ளுதல். தரங்கம் - அலை.

(263)

8120. திசையினை நோக்கு நின்ற
தேவரை நோக்கும் வந்த
வசையினை நோக்குங் கொற்ற
வாளினை நோக்கும் பற்றிப்
பிசையுறுங் கையை மீசை
சுறுக்கொள வுயிர்க்கும் பேதை
நசையிடைக் கண்டா னென்ன
நகுமழு முனியு நாணும்.

'திசையினை நோக்கும்; நின்ற
தேவரை நோக்கும்; வந்த
வசையினை நோக்கும்; கொற்ற
வாளினை நோக்கும்; பற்றிப்
பிசையுறும் கையை; மீசை
சுறுக்கொள உயிர்க்கும்; பேதை
நசையிடைக் கண்டான் என்ன,
நகும், அழும், முனியும், நாணும்.

பொ:—(மைந்தர்களது பிரிவால் வருத்தமுற்ற இராவணன், தான் வெற்றிகொண்ட) திசைகளை (வெகுண்டு) நோக்குவான்; (தனக்குளதாகிய இத்துன்ப நிலையினைக் கண்டு அச்சமின்றி) நின்ற தேவர்களை (வெகுண்டு) நோக்குவான்; தனக்கு நேர்ந்த பழியினை எண்ணிப் பார்ப்பான்; (அப்பழியைப் போக்கக் கருதி) வெற்றியைத் தரும் தன் வாட்படையினை நோக்குவான்; (செயலற்ற நிலையில்) தன்கைகளை இறுகப் பற்றிப் பிசைவான்; தன்மீசை சுறுக்கொண்டு தீயும்படி வெய்துயிர்ப்பான்; (ஒரு பொருளிலே வைத்த) ஆசை காரணமாகப் பித்துக்கொண்டானைப் போன்று சிரிப்பான்; அழுவான், வெகுள்வான்; நாணமுறுவான்.

கு:—நசையிடைப் பேதை கண்டான் என இயைத்து, ஒரு பொருளில் வைத்த ஆசை காரணமாகப் பித்துக்கொண்டவன் எனப் பொருள் கொள்க. நசை - ஆசை. பேதை காணுதல் – பித்தேறுதல். என, உவம உருபு. இனி, 'பேதை நசையிடைக் கண்டான்' என்பதற்குத் 'தன் மனைவியைப் பிறனொருவனது ஆசைப்பிணிப்பின் கண்ணே நேரிற் கண்டவன்' எனப் பொருள் கொள்ளுதலும் உண்டு. 'தன்பால் மனையாள் அயலான்றலைக் கண்டு' (சீவக-443) எனவரும் தொடர் இப்பொருளில் ஒப்பு நோக்குதற் குரியதாகும். (264)

8121. மண்ணினை யெடுக்க வெண்ணும்
வானினை யிடிக்க வெண்ணு
மெண்ணிய வுயிர்க ளெல்லா
மொருகணத் தெற்ற வெண்ணும்
பெண்ணெனும் பெயர வெல்லாம்
பிளப்பெனென் றெண்ணு மெண்ணிப்
புண்ணிடை யெரிபுக் கென்ன
மானத்தாற் புழுங்கு கின்றான்.

மண்ணினை எடுக்க எண்ணும்;
வானினை இடிக்க எண்ணும்;
எண்ணிய உயிர்கள் எல்லாம்
ஒரு கணத்து எற்ற எண்ணும்;
'பெண் எனும் பெயர எல்லாம்
பிளப்பென்' என்று எண்ணும்; எண்ணிப்
புண்ணிடை எரிபுக் கென்ன,
மானத்தால் புழுங்கு கின்றான்.

பொ:—(சினமுற்ற இராவணன்) மண்ணுலகத்தைப் பறித்து வீச எண்ணுவான்; வானுலகத்தை இடித்துத் தகர்க்க நினைப்பான்; (மனவுணர் வுடையனவாக) எண்ணிய உயிர்த் தொகைகளை யெல்லாம் ஒரு நொடியில் எற்றி யழிக்கக் கருதுவான்; 'பெண் என்னும் பெயருடைய எல்லாவற்றையும் பிளந்து தீர்ப்பேன்' என எண்ணுவான்; இவ்வாறு எண்ணிப் புண்ணிலே நெருப்புப் புகுந்தாற்போல மான வுணர்வினால் மனம் புழுங்கி வருந்துவான்.

கு:—அரக்கர்குல மைந்தர்களாகிய அதிகாயன் முதலியோர் பகைவரால் இறந்துபடக் கண்டிருந்தமைபற்றி வெகுளிமீக் கூர்ந்த இராவணன், மண்ணுலக மக்களையும் விண்ணுலகத் தேவர்களையும் எண்ணப்படும் உணர்வுடைய ஏனைய உயிர்த் தொகைகளையும் அழித்தொழிக்க எண்ணினான்; தனக்கு நேர்ந்த இத்துணைத் துன்பங்களுக்கும் காரணம் சீதை யென்னும் பெண்ணாதலின் பெண் என்னும் பெயர்க்குரிய எல்லா வுயிர்களின் உடம்புகளையும் என் வாளினாற் பிளந்து ஒழிப்பேன் என எண்ணினான். தான் விரும்பியவாறு சீதையை அடையப்பெறாது புண்பட்டு வருந்தும் இராவணனது உள்ளத்தின் கண்ணே அதிகாயன் முதலிய பெருவீரர்களை யிழந்த துயரமும் புகுந்து வருத்துவது, புண்ணினுள்ளே தீச்சுடர்களை நுழைப்பது போன்று பெருந் துன்பத்தை விளைத்தது என்பதாம்.

(265)

### அதிகாயன் தாய் தானியமாலி, தன் மைந்தன் இறந்தமை கேட்டுப் புலம்பி இராவணனடிகளில் வீழ்ந்து முறையிட்டு அரற்றுதல்

8122. ஒருவரு முரையார் வாயா
லுயிர்த்தில ருள்ள மோய்வார்
வெருவருந் தகைய ராகி
விம்மின ரிருந்த வேலை

தருவன மனைய தோளான்
றன்னெதிர் தானி மாலி
யிரியலிட் டலறி யோயாப்
பூசலிட் டேங்கி வந்தாள்.

ஒருவரும் உரையார் வாயால்,
உயிர்த்திலர், உள்ளம் ஓய்வார்
வெருவருந் தகையர் ஆகி,
விம்மினர் இருந்த வேலை,
தருவனம் அனைய தோளான்தன்
எதிர் தானி மாலி
இரியலிட்டு அலறி, ஓயாப்
பூசலிட்டு, ஏங்கி வந்தாள்.

பொ :—(இங்ஙனம் இராவணன் பெருந்துயரால் வெகுளியுற்ற நிலையில்) அங்குள்ளார் ஒருவரும் வாய்திறந்து (ஒன்றும்) கூற மாட்டாதவராய், உயர்ப்பு அடங்கியவராய் மனந்தளர்ந்து அஞ்சிய தன்மையினராய்ப் பொருமுதலுற்று வருந்தி யிருந்தபொழுது, மரங்கள் அடர்ந்த வனத்தினை யொத்துச் செறிந்த (இருபது) தோள்களை யுடையனாகிய இராவணனுக்கு முன்னே (அவன் மனைவி) தானியமாலினி என்பாள் நிலைகெட்டு அலறி ஒழியாத பேரொலிபட அரற்றி அழுதுகொண்டு வந்தாள்.

கு :—உயிர்த்தல் – மூச்சு விடுதல். வெருவருதல் - அஞ்சுதல். விம்முதல் - பொருமியழுதல். தருவனம் - மரம் அடர்ந்த காடு. இராவணனுடைய இருபது தோள்களும் மரங்கள் அடர்ந்துள்ள வனம்போன்று தோன்றின என்பார், 'தருவனம் அனைய தோளான்' என்றார். தாந்யமாலிநீ என்னும் வடமொழிப் பெயரைத் 'தானிமாலி' எனத் தமிழோசை பொருந்த ஆசிரியர் திரித்து வழங்கிய திறம் நோக்கத் தக்கதாகும். இரியலிடுதல் – அஞ்சி நிலைகெட்டு ஓடுதல். பூசலிடுதல் – பேரொலிபட அரற்றுதல். ஏங்குதல் - இரங்கியழுதல். (266)

8123. மலைக்குவட் டிடிவீழ்ந் தென்ன
வளைகளோ டார மேங்க
முலைக்குவட் டெற்றுங் கையாண்
முழைதிறந் தன்ன வாயா

டலைக்குவட் டணைந்த செக்கர்
சரிந்தன குழல்க டத்தி
யுலைக்குவட் டுருகுஞ் செம்பொத்
துதிர நீ ரொழுகுங் கண்ணாள்.

மலைக்குவட்டு இடி வீழ்ந்தென்ன,
வளைகளோடு ஆரம் ஏங்க,
முலைக்குவட்டு எற்றும் கையாள்;
முழை திறந்தன்ன வாயாள்;
தலைக்குவட்டு அணைந்த செக்கர்
சரிந்தன குழல்கள் தத்தி
உலைக்குவட்டு உருகுஞ் செம்பு ஒத்து
உதிரநீர் ஒழுகும் கண்ணாள்.

பொ:—மலைச் சிகரங்களின் மேலே இடி விழுந்தாற் போன்று (கையிலுள்ள) வளையல்களுடனே (மார்பிலணியப்பெற்ற) மணி மாலைகளும் ஒலிக்கக் கொங்கையின் உச்சியிலே மோதி மறையும் கையினளாய், குகை (அகலத்) திறந்தாற்போலும் வாயினளாய், மலைமேற் சிகரத்திலே பொருந்திய செவ்வானம் சரிந்து (கீழே) படர்ந்தாற் போலும் (செந்நிறமுடைய) கூந்தல் அவிழ்ந்து எங்கும் பரவ, (கொல்லனது) உலைக்களத்தின் கண்ணே திரளாய் நின்று உருகிய செம்பினை யொத்துக் குருதிநீர் சொரியும் கண்களை யுடையவளாயினாள்.

கு:—குவடு – சிகரம்; உச்சி. எற்றுதல் – மோதுதல். தானிமாலை மார்பிற் கைகளால் மோதுதல் மலைச் சிகரங்களில் இடி வீழ்தலை யொத்தது. உலைக்கு – உலையின்கண்; உருபு மயக்கம். வட்டு – திரண்ட பொருள். உதிரம் - இரத்தம். (267)

8124. வீழ்ந்தன ளரக்கன் றாண்மேன்
மென்மைத்தோ ணிலத்தை மேவப்
போழ்ந்தனள் பெரும்பாம் பென்னப்
புரண்டனள் பொருமிப் பொங்கிச்
சூழ்ந்தனை கொடியா யென்னாத்
துடித்தருந் துயர வெள்ளத்
தாழ்ந்தனள் புலம்ப லுற்று
ளழக்கண்டு மறிந்தி லாதாள்.

வீழ்ந்தனள் அரக்கன் தாள்மேல்,
மென்மைத் தோள் நிலத்தை மேவப்
போழ்ந்தனள், பெரும் பாம்பு என்னப்
புரண்டனள், பொருமிப் பொங்கி,
'சூழ்ந்தனை கொடியாய்!' என்னு,
துடித்து, அருந் துயர வெள்ளத்து
ஆழ்ந்தனள், புலம்பலுற்ருள்,
அழக்கண்டும் அறிந்திலாதாள்.

பொ :—(தன் முன்னே பிறர் துயரமிகுதியால்) அழுதலைப் பார்த்தும் அறியாதவளாகிய தானிமாலி, தன்னுடைய மெல்லிய தோள்களால் நிலத்தைப் பிளந்தவளாய், இராவணனுடைய பாதங்களிற் பொருந்த வீழ்ந்தாள்; பெரும்பாம்பு (புரளுமாறு)போல (த்தரையிற்) புரண்டாள்; 'தீவினையாளனே! கேடு சூழ்ந்தாய்' என்று கூறித் துடிதுடித்துக் கடத்தற்கரிய துன்ப வெள்ளத்துள் அழுந்தியவளாய்ப் (பின்வருமாறு) புலம்பத் தொடங்கினுள்.

கு :—அழக்கண்டும் அறிந்திலாதாள், மென்மைத்தோள்(ஆல்) நிலத்தைப் போழ்ந்தனள், அரக்கன் தாள்மேல் மேவ வீழ்ந்தனள், பெரும் பாம்பு என்னப் புரண்டனள், 'கொடியாய் சூழ்ந்தனை' என்னு துடித்து அருந்துயர வெள்ளத்து ஆழ்ந்தனள் எனமுடிக்க. பின்வரும் ஐந்து செய்யுட்கள் தானிமாலியின் புலம்புதலாக அமைந்தன. (268)

8125. மாட்டாயோ விக்காலம்
★ வல்லோர் வலிதீர்க்க
மீட்டாயோ வீர
மெலிந்தாயோ தோளாற்றல்
கேட்டா யுணர்ந்திலையோ
வென்னுரையுங் கேளாயோ
காட்டாயோ வென்னுடைய
கண்மணியைக் காட்டாயோ.

'மாட்டாயோ, இக்காலம் வல்லோர் வலி தீர்க்க?
மீட்டாயோ, வீரம்? மெலிந்தாயோ, தோள் ஆற்றல்?
கேட்டாய், உணர்ந்திலையோ? என் உரையும் கேளாயோ?
காட்டாயோ, என்னுடைய கண்மணியைக் காட்டாயோ?

பொ :—இப்பொழுது வலிய பகைவர்களின் வன்மையைத் தீர்க்க வலியற்ருயோ? நின் வீரத்தன்மையினை (வெளிப்படுத்தாது நின் கண்ணேயே) மீட்டுக் கொண்டாயோ? நின் தோள்வன்மை மெலிந் தனையோ? (பகைவரால் நேர்ந்த இத் துன்ப நிலையைக்) கேள்வி யுற்ற நீ (அதனுல் இனி நேரவிருக்கும் விளைவினை யெல்லாம்) சிந்தித் துணர்ந்திலேயோ? (அல்லற் பட்டவளாகிய) என்னுடைய அரற்றுரையினையும் (செவிகொடுத்துக்) கேட்கமாட்டாயோ? என் கண்ணிற் கருமணி போல்வானுகிய என் புதல்வனை (எனக்குக் காட்டமாட்டாயோ? காட்டமாட்டாயோ?

கு :—இக்காலம், வல்லோர் வலிதீர்க்க மாட்டாயோ? வீரம் மீட்டாயோ? தோளாற்றல் மெலிந்தாயோ? என இயைத்துரைக்க. கேட்டாய் - நிகழ்ந்த செய்தியைக் கேள்வியுற்ருயாகிய நீ. கண்மணி என்றது, தன்கண்ணிற் கருமணி போல்வானுகிய புதல்வன் அதிகாயனை. காட்டாயோ காட்டாயோ என்ற அடுக்கு. புலம்பல் பற்றியது. மாட்டாமை - வன்மையின்மை. மாட்டுதல் - வல்லராதல். (269)

8126. இந்திரற்குந் தோலாத நன்மகனை யீன்ருளென்
றந்தரத்து வாழ்வாரு மேத்து மளியத்தேன்
மந்தரத்தோ ளென்மகனை மாட்டா மனிதன்ற
னுந்து சிலைப்பகழிக் குண்ணக் கொடுத்தேனே.

"'இந்திரற்கும் தோலாத நன்மகனை ஈன்ருள்'' என்று
அந்தரத்து வாழ்வாரும் ஏத்தும் அளியத்தேன்
மந்தரத் தோள் என்மகனை மாட்டா மனிதன்தன்
உந்து சிலைப் பகழிக்கு உண்ணக் கொடுத்தேனே.'

பொ :—'இந்திரனுக்கும் தோற்காத (ஆற்றல் மிக்க) நல்ல புதல்வனைப் பெற்றுள்ளாள்' என்று வானுலகில் வாழ்வோராகிய தேவர்களும் போற்றும் அருள்புரியக்கடவ அருமையுடையளாகிய யான், மந்தரமலைபோலும் தோளினையுடைய என் மைந்தனை வன்மையில்லாத மனிதன் ஒருவனது வில்லினின்று செலுத்தப்படும் அம்புக்கு உண்ணும் உணவாகப் பறிகொடுத்து விட்டேனே.

கு :—'தோலாத நன்மகன்' என்றது, அதிகாயனை. அந்தரத்து வாழ்வார் – வானுலகில் வாழ்வோராகிய தேவர்கள். அளியத்தேன் – அருள்புரியக் கடவ அரிய தகுதியினை யுடையேன். 'அளியத்தேன்' (திருமாலை – 27) என்பதற்கு, 'ஸர்வவித கைங்கரியங்களுக்கும் தகுதி

யுள்ள அருமந்த வஸ்துவான நான்' என முன்னோர் கூறிய உரை இங்கு ஒப்பு நோக்குதற் குரியதாகும். மாட்டா மனிதன் - வன்மை யற்ற மனிதருள் ஒருவன்; என்றது, ஈண்டு இலக்குவனை. சிலை உந்து பகழி என மாற்றுக. சிலை - வில். உந்துதல் - செலுத்துதல். பகழி - அம்பு. தேவர்களும் போற்றுமாறு நல்ல மைந்தனைப் பெற்றுப் பிறரை அஞ்சலென்று அருள்புரியக் கடவ தகுதியினை யுடையவளாகிய யான், இன்று வலிமையற்ற மனிதருள் ஒருவனது அம்புக்கு என் மைந்தனை இரையாக அவலங்கொண் டழிகின்றேன் என இராவணன் மனைவி தானிமாலி கையற்று இரங்கியவாறு. (270)

8127. அக்க னுலந்தா னதிகாயன் றுன்பட்டான்
மிக்கதிறத் துள்ளார்க ளெல்லாரும் வீடினார்
மக்களினின் றுள்ளான் மண்டோ தரிமகனே
திக்கு விசய மினியொருகாற் செய்வாயோ.

'அக்கன் உலந்தான்; அதிகாயன்தான் பட்டான்
மிக்க திறத்து உள்ளார்கள் எல்லோரும் வீடினார்;
மக்களின் இன்று உள்ளான், மண்டோதரி மகனே,
திக்கு விசயம், இனி, ஒருகால் செய்வாயோ?'

பொ:—(நின் புதல்வர்களில்) அட்சகுமாரன் இறந்தொழிந்தான்; அதிகாயனும் இறந்துபட்டான்; (போர்த்துறையில்) மிக்க திறமுடைய வரிசையிலுள்ளார் அனைவரும் இறந்துபோனார்கள்; (நின்னுடைய) புதல்வர்களுள் இன்று உயிரோடுள்ளவன் மண்டோதரி மைந்தன் ஒருவனே. (எஞ்சியுள்ள அவனை மட்டும் துணையாகக் கொண்டு) இனிமேலும் திசைகளில் (உள்ளாராகிய பகைவரைப்) போரில் வெற்றிகொள்ள வல்லாயோ?

கு:—அக்கன் - அட்சகுமாரன்; இராவணனுடைய இளைய மகன். அதிகாயன் - இராவணனுக்குத் தானிமாலையிடத்திற் பிறந்தவன். மிக்க திறத்துள்ளார்கள் என்றது, வீராந்தகன், நராந்தகன் கும்பன், நிகும்பன் முதலியவர்களை. வீடுதல் - இறத்தல் அக்கன் அதிகாயன் முதலிய நின் மக்களைத் துணையாகக் கொண்டு முன்பு திசையிலுள்ளாரை யெல்லாம் போரில் வெற்றி கொண்ட நீ, அவர்கள் எல்லாரும் இறந்தொழிந்த இந்நிலையில், இறவாது எஞ்சியுள்ள மண்டோதரி மைந்தன் இந்திரசித்தினை மட்டும் துணையாகக் கொண்டு திசைகளிலுள்ளாரைப் பொருது வெற்றிகொள்ள வல்லாயோ? அவ்வாறு வெல்லும் வல்லமையை உடையாயல்லை

என்பாள், 'திக்குவிசயம் இனியொருகாற் செய்வாயோ' என வினவி னாள். ஓகாரம் எதிர்மறை. (271)

8128. ஏதையா சிந்தித் திருக்கின்ரு யெண்ணிறந்த
கோதையார் வேலரக்கர் பட்டாரைக் கூவாயோ
பேதையாய்க் காமம் பிடிப்பாய் பிழைப்பாயோ
சீதையா லின்னம் வருவ சிலவேயோ.

'ஏது ஐயா சிந்தித்து இருக்கின்ருய்" எண் இறந்த
கோதை ஆர் வேல் அரக்கர் பட்டாரைக் கூவாயோ?
பேதை ஆய்க் காமம் பிடிப்பாய் பிழைப்பாயோ?
சீதையால் இன்ன வருவ சிலவேயோ?

பொ :—ஐயனே! நீ எதனைச் சிந்தித்துக்கொண்டு (இவ்வாறு சும்மா) இருக்கின்ருய்? மாலையினையணிந்த வேற்படையினையுடைய எண்ணற்ற அரக்கர்கள் இறந்துபட்டவர்களை (மீண்டும் உயிர்பெற்று நினக்குத் துணையாக வருமாறு) அழைத்துக்கொள்ள வல்லாயோ? பேதைமையுடையையாய்க் காமமாகிய குற்றத்தினை இறுகப் பற்றிய நீ (இனியும்) உயிர்பிழைக்க வல்லாயோ? இனிமேலும் சீதை காரண மாக வருந் துன்பங்கள் சிலவாய் அடங்குவனவோ?

கு :—தன் புதல்வன் போரில் உயிர் கொடுத்தமை கேள்வியுற் றுத் தாயாகிய தான் கதறியரற்றுதலைக் கேட்டும் அதுபற்றி எதுவும் ஆறுதல் கூருது செயலற்ற நிலையிற் சிந்தனையிலே ஆழ்ந்திருக்கும் தன் கணவனுகிய இராவணனது பிழையினை எடுத்துக் காட்டி அணுகி இடித்துக் கூறும் முறையில் 'ஏதையா சிந்தித்திருக்கின்ருய்' என வினவினுள் தானிமாலே. தனக்காகப் போரில் உயிர்கொடுத்த வீரர்களின் தொகையினை மீண்டும் நிரப்பி ஈடுசெய்து கொள்ள முடியாத நிலையில் தான் பேரிழப்பினை யடைந்ததோடல்லாமல் மேலும் மேலும் இத்தகைய இழப்புக்குக் காரணமாகிய காமமாகிய கடுங்குற்றத்தினை இறுகப் பற்றியுள்ள இராவணனது பேதைமைத் தன்மையினைப் புலப்படுத்துவாள், 'எண்ணிறந்த கோதையார் வேலரக்கர் பட்டாரைக் கூவாயோ, பேதையாய்க் காமம் பிடிப்பாய் பிழைப்பாயோ' என வினவினுள். பிறன் வரையாளாகிய, சீதையின் பால் நீ கொண்டுள்ள பொருந்தா வேட்கையால் இனிமேலும் விளையவிருக்கும் துன்பங்கள் சிலவாதலன்றி மேலும் மேலும் பல வாய் வருதல் உறுதி என அறிவுறுத்துவாள், 'சீதையால் இன்னம் வருவ சிலவேயோ' என்ருள்.

'பேதைமை என்பதொன் றியாதெனின் ஏதங்கொண்
டூதியம் போக விடல்.' (திருக்குறள்–831)

எனவரும் திருவள்ளுவர் வாய்மொழி இங்கு நினைக்கத் தக்கதாகும். கோதை - மாலை. கூவுவாயோ எனற்பாலது, கூவாயோ என நின்றது. கூவுதல் - அழைத்தல். (272)

8129. உம்பி யுணர்வுடையான் சொன்ன வுரைகேளாய்
நம்பி குலக்கிழவன் கூறு நலமோராய்
கும்ப கருணனையுங் கொல்வித்தென் கோமகனை
யம்புக் கிரையாக்கி யாண்டா யரசைய.

'உம்பி, உணர்வுடையான், சொன்ன உரை கேளாய்.
நம்பி, குலக்கிழவன் கூறும் நலம் ஓராய்;
கும்பகருணனையும் கொல்வித்து என் கோமகனை
அம்புக்கு இரை ஆக்கி, ஆண்டாய் அரசு ஐய!'

பொ:—நல்லுணர்வுடையானாகிய உன் தம்பி (வீடணன்) சொல்லிய அறவுரையைக் கேட்டாயல்லை. ஆடவரிற் சிறந்த அரக்கர் குலத் தலைவன் (மாலியவான்) கூறிய நற்பொருளையும் சிந்தித்து உணர மாட்டாயாயினை. ஐயனே! (இவ்வாறு பிறர் கூறியனவற்றையுங் கேளாது தானும் ஓர்ந்துணராமையால், நின் அன்புடைத் தம்பி யாகிய) கும்பகருணனையும் (பகைவர்களாற்) கொல்வித்து என் சிறந்த (அரச) குமாரனாகிய அதிகாயனையும் (பகைவனது) அம்புக்கு இரையாக்கி (நன்கு) அரசாட்சி புரிந்தனை (அல்லையோ ?).

கு:—உணர்வுடையானாகிய உம்பி என்க. உம்பி - உன் தம்பி; என்றது, எதிரதாக் காக்கும் நல்லுணர்வு படைத்த வீடணனை. 'உம்பர் மந்திரிக்கு மேலாவொரு முழமுயர்ந்த ஞானத் தம்பி' (இலங்கைகாண்–15) என வீடணன் சிறப்பிக்கப் பெற்றுள்ளமை இங்கு நினைத்தற் குரியதாகும். நம்பி குலக் கிழவன் என்றது, மாலியவானை. அவன் நலமுரைத்தமை இலங்கைகாண் படலம் 6 முதல் 16 வரையுள்ள செய்யுட்களால் அறியப்படும். நீ கொண்ட பொருந்தாக் காமத்தால் நின்னுயிரினுஞ் சிறந்த தம்பி கும்பகருணனுக்கு இறுதி தேடியதோடன்றி, என் அருமருந்தன்ன புதல்வன் அதிகாயனையும் பகைவனது அம்புக்கு இரையாக்கி நின் அரசாட்சியில் நின் குலத்தார்க்கு தீமையே புரிந்தனை என்பாள், 'கும்பகருணனையும் கொல்வித்து என் கோமகனை அம்புக்கு இரையாக்கி அரசு

ஆண்டாய்' என்ருள். 'ஆண்டாய் அரசு' ஏன்பது, 'கற்கறித்து நன்கு அட்டாய்' என்பதுபோன்று, இகழ்ச்சிக் குறிப்பாய் நின்றது. (273)

### உருப்பசியும் மேனகையும் தானியமாலியை அரண்மனைக்குக் கொண்டு செல்லுதல்

8130. என்று பலபலவும் பன்னி யெடுத்தழைத்துக்
கன்று படப்பிழைத்த தாய்போற் கவல்வாளை
நின்ற வுருப்பசியு மேனகையு நேர்ந்தெடுத்துக்
குன்றுபுரையு நெடுங்கோயில் கொண்டணைந்தார்.

என்று, பலபலவும் பன்னி எடுத்து அழைத்து,
கன்றுபடப் பிழைத்த தாய்போல் கவல்வாளை,
நின்ற உருப்பசியும் மேனகையும் நேர்ந்து எடுத்து,
குன்று புரையும் நெடுங்கோயில் கொண்டு அணைந்தார்.

பொ :—என்று இவ்வாறு பல்வேறு அரற்றுரைகளையும் அடுத் தடுத்து எடுத்துக் கூறிக் கதறி யழைத்துத் தன் கன்று இறந்துபடத் தான்மட்டும் பிழைத்து வருந்தும் தாய்ப் பசுவினைப் போன்று கதறு பவளாகிய தானிமாலையை (அங்கு) நின்ற உருப்பசியும் மேனகையும் ஆகிய தேவமகளிர் அங்கு அணுகி வந்து எடுத்து மலையினையொத்த பெரிய மாளிகையினுள்ளே கொண்டு சேர்ந்தார்கள்.

கு :—பன்னுதல் - பலமுறை சொல்லுதல். கன்றுபடப் பிழைத்த தாய் என்றது, தன் கன்றினை யிழந்து உயிர்தாங்கி வருந்தும் தாய்ப் பசுவை. மனுச்சோழன் மகன் ஊர்ந்த தேர்க்காலில் தன் கன்று அகப்பட்டு இறக்க ஆற்ருது அரண்மனை வாயிற்கடை மணியைக் கோட்டினல் அடித்துக் கதறிய தாய்ப் பசுவின் துயரத்தை ஆசிரியர் ஈண்டுக் குறிப்பாக உணரவைத்தார் எனக் கொள்ளுதல் தகும். கவல்வாள் என்றது, தானிமாலையை, (274)

### இலங்கை நகரத்தார் யாவரும் வருந்துதல்

8131. தானை நகரந் தளரத் தலைமயங்கிப்
போன மகவுடையா ரெல்லாம் புலம்பிஞர்
ஏனை மகளிர் நிலை யென்ஞகும் எண்ணிறந்த
வான மகளிருந்தம் வாய்திறந்து மாழ்கிஞர்.

தானை நகரம் தளரத் தலைமயங்கி,
போன மகவுடையார் எல்லாம் புலம்பினர்—
ஏனை மகளிர் நிலை என் ஆகும்?—எண் இறந்த
வான மகளிரும் தம் வாய்திறந்து மாழ்கினர்.

பொ :—(வலிமிக்க) சேனைகளையுடைய இலங்கை நகரம் தளர்ச்சியுற்று வருந்த ஒன்றுகூடி, இறந்துபோன புதல்வர்களை யுடையார் எல்லாரும் புலம்பி வருந்தினர்கள். எண்ணற்ற தேவர் மகளிரும் தம்முடைய வாய்திறந்து கதறி வருந்தினர்கள், (இவ்வாறாயின், அந்நகரத்திலுள்ள) ஏனைய மகளிரின் அரற்றுதலின் நிலை எத் தன்மையதாகும்?

கு :—தானை - சேனை. தளர்தல் – உள்ளமும் உடம்பும் சோர்ந்து வருந்துதல். தலைமயங்கி - ஒன்றுகூடி. போன மகவு உடையார் - தாம் பெற்றுடைய மகவினை இழந்தவர்கள்; இத் தொடர் 'இலாத வெண் கோவணத்தான்' என்பது போன்றமைந்தது. சேனைகளின் மிகுதியை யுடைய இலங்கை நகரத்தில் தம் புதல்வர்களை யிழந்தோர் அனைவரும் இரங்கி வருந்தினர்கள். அதுகண்டு அங்குப் பணிபுரியும் வானவர் மடந்தையரும் தம் வாய்விட்டு அரற்றி வருந்தினர்கள் என்றால் மற்றைய மகளிரது அரற்றுதலின் மிகுதியை அளவிட்டுரைத்தல் இயலாதென்பதாம். (275)

8132. தாரகலத் தண்ண றனிக்கோயி றாசரதி
பேரவுல குற்ற துற்றதாற் பேரிலங்கை
யூரகல மெல்லா மரந்தை யுவாவுற்ற
ஆர்கலியே யொத்த தழுத குரலோசை.

தார் அகலத்து அண்ணல் தனிக் கோயில் தாசரதி
பேர, உலகு உற்றது உற்றதால், பேர் இலங்கை;
ஊர் அகலம் எல்லாம் அரந்தை; உவா உற்ற
ஆர்கலியே ஒத்தது, அழுத குரல் ஓசை.

பொ :—பெரிய இலங்கை நகரமானது, மாலையினை யணிந்த மார்பினையுடைய தசரதச் சக்கரவர்த்தியின் அரண்மனையினின்றும் (தசரதன் மைந்தன்) இராமன் பெயர்ந்து (வனத்திற்குச்) செல்ல, (அதனால்) உலகம் உற்ற பெருந்துன்பத்தை அடைந்தது. (இலங்கையாகிய) ஊர்ப்பரப்பு முழுவதும் துன்பமே (நிரம்பியது). (அந் நகரத்தார்) அழுத அழுகைக் குரலின் ஆரவாரமானது, நிறைமதியைக் கண்டு பொங்கியெழுந்த அலைகடலின் ஆரவாரத்தையே ஒத்தது.

கு :—தார் அகலத்து அண்ணல் என்றது, மாலை மார்பனுகிய தசரதச் சக்கரவர்த்தியை. தனிக் கோயிலினின்றும் என ஐந்தா முருபு விரித்துரைக்க. தாசரதி - தசரதன் மைந்தன்; என்றது. இராமபிரானை. தாசரதி, தத்திதாந்த நாமம். பேர - பேர்தலால். பேர்தல் - இடம் பெயர்ந்து செல்லுதல், உலகு என்றது, ஈண்டு அயோத்தி நகர மக்களை. போர்க்களத்தில் தம் மைந்தர்கள் இறந்து பட்டமையால் இலங்கையில் அரக்கர் உற்ற பெருந்துன்பத்திற்கு, மணிமுடி துறந்து வனம்புகும் இராமனைப் பிரிந்தமையால் அயோத்தி நகர மக்கள் அடைந்த பெருந்துயர் நிலையை உவமையாக எடுத்துரைத்தார் ஆசிரியர். கோவலன் பிரிந்தமையால் புகார் நகர மக்கள் அடைந்த பெருந்துயரத்தை விளக்கக் கருதிய இளங்கோ வடிகள்,

'பெருமகன் ஏவ லல்ல தியாங்கணும்
அரசே தஞ்சமென் றருங்கான் அடைந்த
அருந்திறல் பிரிந்த அயோத்தி போலப
பெரும்பெயர் மூதூர்பெரும்பே துற்றதும்'

(சிலப்–புறஞ். 63–66)

என இவ்வுவமையினை முன்னமே எடுத்தாண்டுள்ளமை இங்கு ஒப்பு நோக்கி யுணரத் தகுவதாகும். அரந்தை - துன்பம். அழுத குர லோசை ஆர்கலியே ஒத்தது என்க. ஆர்கலி - கடல். (276)

அதிகாயன் வதைப் படலம் முற்றிற்று

# 18. நாகபாசப் படலம்

இந்திரசித்து விடுத்த நாகபாசத்தின் விளைவைப் பற்றிக் கூறும் பகுதியாகலின் இது நாகபாசப் படலம் எனப் பெயர் பெறுகின்றது. நாகபாசம் என்றது நாகாத்திரமாகிய பாசம் என இருபெயரொட்டுப் பண்புத் தொகையாகக் கொள்க. பாசம் – கயிறு. கயிறுபோலக் கட்டுதற்கு உரியது ஆதல் பற்றி நாகாத்திரம் நாகபாசம் எனப் பட்டது. இந்திரசித்து நாகபாசப் படலம் எனவும் சில ஏடுகளில் இப்படலத்தின் பெயர் காணப்படுகின்றது.

அரக்கிமார்கள் மார்பில் அடித்துக்கொண்டு அழும் ஒலிகேட்டு இந்திரசித்து இவ்வழுகைக்குக் காரணம் யாதோ? என்று கலங்கிச் சென்று இராவணனைக் கண்டு கேட்டுத் தன் இளவல் அதிகாயன் முதலிய வீரர்கள் இறந்தமையால் உண்டான அழுகை ஒலி என் பதை உணர்கின்றான். தன் தம்பியைக் கொன்ற இலக்குவனைத் தப்பாமல் கொல்வதாகச் சூள் உரைத்துவிட்டுப் போர்க்கோலம் கொண்டு இராவணன்பால் விடைபெற்றுக்கொண்டு அரக்கர் பெருஞ்சேனையோடு போர்க்களம் புகுகின்றான். அதுகண்ட இலக் குவன் வீடணனால் இந்திரசித்தின் வலிமை உணர்ந்து பெரிய துணைவரோடு சேர்ந்தே போர்செய்ய வேண்டும் என்ற அவன் ஆலோசனையை யேற்றுக் கொள்கின்றான்.

அப்போது இலக்குவன்மீது இந்திரசித்து போர்க்கு வருவதை உணர்ந்த அனுமன் தான் காத்திருந்த வாயிலை விடுத்து அவன் எதிர் வருகின்றான். அங்கதனும் சுக்கிரீவனும் தம் பெருஞ் சேனை யுடன் முன்னரே ஆங்கு வந்திருக்கின்றனர். இருதிறச் சேனைக்கும் பெரும் போர் நிகழ்கின்றது. அரக்கர் சேனை குரங்குச் சேனையால் மொத்துண்டு தளர்தல் கண்டு இந்திரசித்து தனியே வந்து போர் செய்து குரக்குச் சேனையை நிலைகெட்டு ஓடச் செய்கின்றான். அது கண்ட இலக்குவன், தானே சென்று பகை வெல்லாது தன் குரக்குச் சேனையை முன்னே போர்செய்ய அனுப்பியது பிழை என்று வருந்திக் கூறுகின்றான். இந்நிலையில் இந்திரசித்து ஒற்றர்களால் இலக் குவன் வலிமை பற்றி வினவி அறிகின்றான். அப்போது அரக்க வீரர் பலர் இலக்குவனை எதிர்த்துத் தோல்வி யுறுகின்றனர். பின்பு இந்திர சித்து இலக்குவனை நெருங்குகின்றான். அதை யறிந்த அனுமன் அங்குவந்து தன் தோள்மீது ஏறிக்கொண்டு போர் செய்யமாறு இலக்குவனை வேண்டுகின்றான். அவன் விரும்பியவாறே அவன் தோள்மேல் ஏறிக்கொண்டு இலக்குவன் இந்திரசித்தோடு போர்

செய்கின்றான். இருவரும் மும்முரமாகப் போர் செய்கின்றனர். இலக்குவனது போர்த்திறனைக் கண்டு இந்திரசித்து வியந்து பாராட்டுகின்றான். இலக்குவன் தன் சிறந்த கணைகளை விடுத்து இந்திரசித்தின் கவசத்தைப் பிளக்கின்றான். உடற்காப்பு வேறின்மையால் அம்புபட்டு இந்திரசித்து மூர்ச்சை யுறுகின்றான். அப்போது தூமிராக்கனும் மகாபாரிசவனும் வந்து இலக்குவனோடு பொருது தோல்வியுறுகின்றனர். சூரியன் மேற்கு மலையில் மறைகின்றான். வீடணன் கூறிய சொற்படி இலக்குவன் இந்திரசித்தைக் கொல்ல முயன்று அவன் தேரை அழிக்கின்றான். தேரை இழந்து தளர்ந்த இந்திரசித்து தன் மாயையினால் விண்ணில் மறைந்து நாகாத்திரம் எய்து இலக்குவனையும் வானரர்களையும் கட்டி வீழ்த்திவிட்டுத் தன் தந்தை இராவணனிடம் சென்று தான் செய்ததை உரைத்துவிட்டுத் தன் மாளிகையை அடைகின்றான்.

இலக்குவன் நாகக்கணையால் கட்டுண்டு வீழ்ந்து கிடப்பது கண்டு வீடணன் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி மனம் நைகின்றான். அனலன் அதுகண்டு அல்லலுறும் வீடணனைத் தேற்றிவிட்டு வழிபாடு செய்துகொண்டிருந்த இராமனிடம் சென்று இலக்குவனுக்கு நேர்ந்த நிலையினைக் கூறுகின்றான். அதுகேட்ட இராமன் திடுக்கிட்டுப் போர்க்களத்திற்கு விரைந்து வந்து அங்கியின் கணையால் ஒளியுண்டாக்கி இலக்குவனைத் தேடிக் கண்டு மனமயங்கி வருந்துகின்றான். அவன் வருத்த நிலைகண்ட வீடணன் பல சொல்லி இராமனைத் தேற்றுகின்றான். இலக்குவனைப் பிணித்துள்ள நாகபாசத்தின் வரலாற்றினைப் பற்றி வீடணனை வினவி இராமன் அறிகின்றான். நாகக்கணையால் இலக்குவனுக்கு நேர்ந்த துன்ப நிலையை நினைந்த வருத்தத்தாலும் அதை யெறிந்த பகைவன் மேல் எழுந்த சீற்றத்தின் மிகுதியாலும் இராமன் பல பல கூறுகின்றான். அப்போது கருடன் வந்து இராமனை மனத்துக்குள்ளே துதித்துவிட்டுத் தன் சிறகுகளை விரித்துப் பறக்கின்றான். போர்க்களத்தில் இலக்குவனையும் வானர சேனையினையும் பிணித்திருந்த நாகபாசம் நீங்கி அழிகின்றது. இராமன் மகிழ்ச்சியுறுகின்றான்; கருடன் செய்யாமல் செய்த பேருதவியை நினைந்து பாராட்டி அவனை யார்? என அறிய விழைகின்றான். தான் பழைய நண்பன் என்று கூறி இராவணனோடு நேர்ந்த போர்வினை முடிந்தபின் வந்து தனக்குற்ற உறவினை உணர்த்துவதாகச் சொல்லிக் கருடன் விடை பெறுகின்றான்.

பிறகு அனுமன் ஆலோசனையின்படி வானரர்கள் போர் ஆரவாரம் செய்கின்றனர். இலக்குவன் வில்லினை வளைத்து நாணொலி யெழுப்புகின்றான். அந்தப் போர் ஆரவாரத்தைக் கேட்ட இராவ

ணன், இந்திரசித்து பகை வென்றதாகக் கூறியது பொய்போலும் என இகழ்ந்து கூறிவிட்டு அவ் விந்திரசித்தின் அரண்மனைக்குச் செல்கின்றான். இலக்குவனது அம்பு தைத்த புண்களால் வருந்திப் புரண்டு கொண்டிருக்கின்ற இந்திரசித்து தந்தையின் வரவை யறிந்து வணங்கி நள்ளிரவில் வருதற்குரிய காரணம் வினவுகின்றான். நீ நாகபாசத்தால் கட்டியதாகக் கூறிய இலக்குவனது வில் நாண் ஒலியையும் வானரங்களின் வானைப் பிளக்கும் போர் ஆரவாரத்தையும் கேட்டிலையோ? என இராவணன் வினவுகின்றான். இந்திரசித்து நாகபாசத்தின் பெருமையைக் கூறி, அது ஒருவரால் நீக்க முடியாததாயிற்றே என்று கூறிக்கொண் டிருக்கும்போது தூதுவர் வந்து போர்க்களத்துக் கருடன் வந்து நாகபாசத்தை நீக்கியதை விளக்கமாகக் கூறுகின்றார்கள். அது கேட்ட இராவணன் கருடனை இகழ்ந்து கூறிவிட்டு, இந்திரசித்தினைப் பார்த்து 'நீயே சென்று அக் கருடன் நாணுமாறு போர்செய்து அப்பகைவரைக் கொல்வாயாக' என்கின்றான். இந்திரசித்து, 'அம்புபட்ட புண்களின் துயர்தீர இன்று ஓய்வுடன் இருந்து நாளைப் போர்க்குச் சென்று நின் மனத் துயரை மாற்றுகின்றேன்' என்கின்றான். அவன் துன்பநிலை உணர்ந்த இராவணன் அவ்வாறே செய்க என்று சொல்லிவிட்டுத் தன் அரண்மனைக்குச் செல்கின்றான் என்பது இப்படலத்துக் கூறப்படும் வரலாறு.

## கம்பர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. இராமன் வானர சேனையோடு சென்று இலங்கையை முற்றுகையிட்டபோது வானரர்க்கும் அரக்கர்க்கும் பெரும்போர் நிகழ்ந்து கொண்டிருக்கும் நிலையில் சூரியன் மறைந்து இரவு வந்தது. இரவு வந்த பின்னரும் அந்தப்போர் நீடித்து நிகழ்கின்றது. அப்போரில் இந்திரசித்து அங்கதனால் தேர் முதலியவற்றை இழந்து தோற்று மாயையினால் விண்ணில் மறைந்து நின்று இராம இலக்குவர்மீதும் அவர் வானரப் படைமீதும் நாகபாசத்தை விடுத்துக் கட்டிவிடுகின்றான். இராம இலக்குவர் முதலிய அனைவரும் மூர்ச்சையுற்றுக் கீழ் வீழ்கின்றார்கள். இராம இலக்குவர்க்கு நேர்ந்த துன்பங்கண்டு சுக்கிரீவன் கலங்குகின்றான். வீடணன் வந்து இராம இலக்குவரின் முகத்தெளிவு முதலிய குறிகளைக் காட்டித் தேற்றி அவர்கட்குத் தீங்கு நிகழவில்லை என்பதைத் தெளிவுபடுத்தி முன் சிதறியோடிய வானரர்களையும் நிலை நிறுத்துகின்றான். இது முற்றுகையிட்ட முதல் நாளிலேயே நிகழ்ந்த நிகழ்ச்சியாகவும் கும்பகருணன் வதை, அதிகாயன் வதை எல்லாம் பின் நிகழ்ந்தனவாகவும் வான்மீகம் கூறுகின்றது.

கம்பர் இக் கதைப்போக்கை அப்படியே பின்பற்ருமல் வேண்டிய இடங்களில் மாற்றஞ் செய்துள்ளார். இந்திரசித்து இராவணனைப் போல் பெரிய வீரன் ஆகலின், அவனது போரை எடுத்த எடுப்பிலே கூறுவதைவிட இராவணனது போர்க்கு முன்பு அடுத்து நிகழ்ந்த தாகக் கூறுவது நல்லது என்ற எண்ணத்தால், கும்பகருணன்வதை, அதிகாயன் வதை, முதலியன நிகழ்ந்த பிறகு நிகழ்ந்ததாகக் கூறி யுள்ளார் போலும். இதனுல் இந்திரனை வென்ற இந்திரசித்தின்பால் கம்பனுக்கு இருந்த நன்மதிப்புப் பெறப்படும்.

2. மேலும் இந்திரசித்து அங்கதனுல் தேர் முதலியவற்றை இழந்து விண்ணில் மாயையால் மறைந்ததாக வான்மீகம் கூறவும், கம்பர் அதை மாற்றி இலக்குவனுல் தேர் முதலியவற்றை இழந்து விண்ணில் மறைந்ததாகக் கூறியுள்ளார். இதுவும் இந்திரசித்தின் பால் கம்பனுக்கிருந்த நன்மதிப்பையே காட்டுகின்றது. இராவணன் மகனுகிய இந்திரசித்தும் இராமன் தம்பியாகிய இலக்குவனும் ஒத்த வலிமை யுள்ளவர்கள் ஆதலின், ஒத்த வீரனிடத்தில் இந்திரசித்து தோற்றதாகக் கூறுவது அவன் பெருமைக்கு ஏற்றதாதலும் அங்க தன் என்ற வானர வீரனுக்குத் தோற்ருன் என்பது இந்திரனை வென்ற அவன பெருமைக்கு ஏலாது இழுக்குடையதாதலும் தெளிவாம்.

3. இந்திரசித்தின் நாகக்கணையால் இராம இலக்குவர் இரு வரும் கட்டுண்டதாக வான்மீகம் கூறவும், கம்பர் அதை மாற்றி இலக்குவன் மட்டுமே நாகபாசத்தால் கட்டுண்டான் எனவும் இரா மன் சந்தியா வந்தனத்திற்காக நீர் நிலைக்குச் சென்றிருந்தான் எனவும் கூறி, இராமனுடைய பெருமைக்கு இழுக்கு நேராவண்ணம் செய்துள்ளார். நாகபாசத்தால் இராமன் கட்டுண்டும் தன் பேராற்ற லுடைமையால் மூர்ச்சை தெளிந்து முன்னெழுந்து இலக்குவன் மூர்ச்சித்து இறந்தவன்போல விழுந்து கிடப்பதைக் கண்டு கலங்கிய தாக வான்மீகம் கூறுகின்றது. சேய்மையிலுள்ள நீர் நிலையில் இராமன் சந்தியாவந்தனம் செய்துகொண் டிருந்ததாகவும் அனலன் அங்குச் சென்று, இலக்குவன் நாகக்கணையால் கட்டுண்டு வீழ்ந்து கிடக்கும் நிலையை உணர்த்தியதாகவும், பின்பு இராமன் விரைந்து வந்து அங்கியங்கணை விடுத்து இருளைப்போக்கி இலக்குவனைத் தேடிக் கண்டு புலம்பியதாகவும் கம்பர் மாற்றி அமைத்துள்ளார்.

4. அங்கதனுக்குத் தோற்று விண்ணில் மறைந்து நாக பாசத்தை விடுத்து இராம இலக்குவரையும் வானர சேனையையும் கட்டி வீழ்த்திய இந்திரசித்து தன் தந்தையிடம் சென்று இராம இலக்குவர் முதலியோரை கட்டி வீழ்த்திய தன் வீரச் செயலைக் கூறினுக, அது கேட்டு மகிழ்ந்த இராவணன் இட்ட கட்டளையின்

படி அரக்கியர் சீதையைப் புட்பக விமானத்தில் ஏற்றிச் சென்று போர்க்களம் குறுகி இராம இலக்குவர் வீழ்ந்து கிடக்கும் நிலையைக் காட்ட, அதுகண்ட சீதை இராமன் மாண்டதாகவே எண்ணிப் பலவாறு புலம்பாநிற்க, அப்போது திரிசடை, இராமன் பிழைத்திருக்கின்றான் என்பதை அவர் தம் முகமலர்ச்சி முதலிய நற்குறிகளைக் கொண்டு தெளிவித்துச் சீதையைத் தேற்றுகின்றாள். திரிசடையின் சொல்லால் ஒருவாறு தேறிய சீதை மீண்டும் அரக்கியரால் கொண்டு போகப்பெற்று அசோக வனத்தை அடைந்து துயருற்றிருந்தாள்; என்று வான்மீகம் கூறுகின்றது.

கம்பர் இந்நிகழ்ச்சியை இங்கு அறவே கூறவில்லை. ஆனால், பின்பு பிரமாத்திரத்தால் இராம இலக்குவர் கட்டுண்டிருந்தபோது, சீதையைப் போர்க்களத்திற்குக் கொண்டுவந்து காட்டியதாகவும் சீதை புலம்பியதாகவும் திரிசடை தேற்றித் தேறியதாகவும் கூறப்படும் இச்செய்தி நிகழ்ந்ததாக மாற்றி அமைத்துள்ளார். பிரமாத்திரத்திற்குப் பெருமை கொடுக்கவேண்டிக் கம்பர் இவ்வாறு மாற்றி அமைத்தார்போலும். நாகபாசத்தினும் வலிமையும் சிறப்பும் மிக்க பிரமாத்திரத்தால் கட்டுண்ட நிலையில் சீதைக்குப் போர்க்களம் காட்டி இராம இலக்குவர் வீழ்ந்து கிடக்கும் நிலையைக் காட்டியதாகக் கூறி யிருப்பது பொருத்தமாகவே உள்ளது.

5. "நாகபாசத்தால் கட்டுண்டு மூர்ச்சித்து வீழ்ந்த இராமன் தன் ஆற்றல் மிகுதியால் முன்பு தெளிந்து தன்னருகில் மூர்ச்சித்து வீழ்ந்து கிடக்கும் இலக்குவனைக் கண்டு பல சொல்லிப் புலம்புவது கண்ட சுக்கிரீவன் தன் மாமனாகிய சுடேணனை நோக்கி 'நீ வானர வீரர்களுடன் இந்த இராம இலக்குவரைக் கிட்கிந்தைக்கு அழைத்துச் செல்க! யான் ஒருவனே இராவணனை அழித்துவிட்டுச் சீதையை மீட்டு வருகின்றேன்' என்று கூறியதாகவும், அப்போது சுடேணன் 'முன் தேவாசுரப்போரில் இறந்த தேவர்களைத் தேவகுருவாகிய வியாழன் பிழைப்பித்த சஞ்சீவகரணி முதலிய மூலிகைகள் தேவர்களால் பாற்கடலின் நடுவேயுள்ள சந்திரம், துரோணம் என்னும் மலைகளில் வைக்கப்பட்டுள்ளன; அம் மூலிகைகளை அனுமன் இப்போது கொணர்வனாக' என்று கூறிக்கொண்டிருக்கும்போது கருடன் அங்குவந்து தோன்றவே நாகபாசம் சின்ன பின்னமாயது என்று வான்மீகம் கூறுகின்றது.

இக்கதை நிகழ்ச்சியைக் கம்பர் கூறவே இல்லை. சுடேணன் கூறியது செயலால் பயன் தாராமையானும், சுக்கிரீவன் தனியாக இராவணனை வென்று சீதையை மீட்டதாகக் கூறியது பயனில் வீரமொழியாய்க் கழிவதாலும் இவற்றைக் கூறாது விடுத்தார் போலும்.

## படலப் பொருட் சிறப்பு

இலக்குவனுக்கும் இந்திரசித்துக்கும் நிகழ்ந்த போர் நிகழ்ச்சியைக் கூறும் இப்படலத்திலும் வீரச்சுவை மிக்க விழுமிய உரையாடல்களும், உவகையூட்டும் உவமை நலங்களும், அவலச்சுவை மிக்க தனியுரையாடல்களும், துன்பச் சுவையின் பல்வகை நிலைகளும், பத்திச்சுவையின் பரவுறு நிலையும் ஆங்காங்கே விரவிப் படலத்தை அழகு செய்கின்றன.

## வீர உரையாடல்

இந்திரசித்து, அரக்கியரின் அழுகை ஒலி கேட்டு, 'யாது நடந்ததோ?' என ஐயுற்று இராவணன்பால் சென்று வினவித் தன் தம்பிமாரும் சிறந்த வீரர்களும் இறந்தமை கேள்விப்பட்டவுடன் சீற்றமிக்கவனாய்த் தன் தந்தையை நோக்கிப் பேசுகின்ற பேச்சு அவன் வீரச்சிறப்பை விளக்குகின்றது. 'வந்துள்ள பகைவரோ வலிமை மிக்கவர்கள்; வலிய படைவலி யுடையவர்கள்; அவர்களை வெல்லவேண்டுமாயின் மிகுவலிபடைத்த தகுதிசால் வீரரையே அனுப்பியிருக்கவேண்டும். வயதிலும் வலிமையிலும் இளையவர்களாகிய அதிகாயன் முதலியவர்களை அப்பகைவரோடு போர்செய்யுமாறு நீ அனுப்பியது தவறு' என்பதைச் சுவைபட விளக்குகின்றான்.

> "கொன்றா ரவரோ கொலைசூழ்கென நீ கொடுத்தாய்
> வன்தானையர் மானிடர் வன்மை யறிந்தும் மன்னா!
> என்றேனும் எனைச்செல ஏவலை இற்றது" (நாகபாசப்-7)

என்று இந்திரசித்து இராவணனை நோக்கிக் கூறும் சொற்கள் அவன் வீரச்சிறப்பை விளக்கியதோடு தருக்க முறையில் தன் கருத்தை நிலைநிறுத்தும் வாதச் சிறப்பையும் உணர்த்துதல் காணலாம். இந்திரன் முதலிய அந்தமில் பகைவரை வென்று புகழ்கொண்ட பெருவீரனாகிய என்னை அனுப்பியிருந்தால் அப் பகைவர் அனைவரையும் முன்னமே அழித்து ஒழித்திருப்பேன்; ஒன்றும் போதா இளைஞர்களைப் போர்க்கு அனுப்பியதால் தம் மாட்டாமையால் அப் பகைவர் கையில் மாய்ந்தனர். எனவே, பகைவர் அவர்களைக் கொன்றார்கள் என்பதைக் காட்டிலும் நீதான் 'கொல்க' என்று கொடுத்தாய் என்றலே உண்மையாகும்; என்பதை முதலடியால் எவ்வளவு தெளிவாக விளக்குகின்றான் பாருங்கள். தந்தை தன்னைப் போர்க்கு அனுப்பவில்லையே என்ற அவன் ஏக்கத்தை—அவன் நெஞ்சத் துடிப்பை—'என்றானும் எனைச் செலவேவலை' என்ற சொற்றொடர் எவ்வளவு தெளிவாக விளங்குகின்றது காண்மின்! 'எனை' என்பது விண்ணுலகுக்கு அரசனாகிய இந்திரனை வென்று பெயர்பெற்ற என்னை; என்ற பொருள் பொதிந்த சொல்லாகும். தான் போர்க்கு முன்னமே

சென்றிருந்தால் எல்லோரையும் வென்றிருக்கலாம் என்றது இக் கருத்து இந்திரசித்தின் உள்ளத்தில் வேரூன்றிக் கிடக்கும் கருத்தாகும் போர் என்ன வீங்கும் பொலங்கொள் திண்டோளினன் அல்லனோ அவன்! பின்பு போர்க்களம் புக்கு அனுமனை எதிர்கண்ட போதும் இக் கருத்தே அவனுக்கு மேலோங்கி நிற்கின்றது.

"நில்லடா சிறிது நில்லடாவுனை
நினைத்து வந்தனன் முனைக்குநான்
வில்லெடாமை நின தாண்மை பேசி
யுயிரோடு நின்று விளையாடினுய்" (73)

என்று கூறுகின்ருன். தன் தம்பியரில் சிலர் அனுமனால் இறந்தனர் என்று தன் தந்தை சொல்லக் கேட்டு வந்தான், ஆகலின் அனுமனைக் கண்டவுடன் இந்திரசித்துக்குச் சினம் பொங்கியெழுகின்றது. 'உனை நினைத்துத்தான் போர்க்கு வந்தேன்' என்கின்ருன். 'உனை நினைந்து' என்றது என் தம்பியரைக் கொன்ற உன்னைக் கொல்ல வேண்டும் என்று நினைத்தே என்றவாறு. 'தட்டிப் பேச ஆளில்லா விடத்தில் தம்பி சண்டப்பிரசண்டன்' என்பதற் கேற்ப, "நான் இது காறும் வில்லெடுத்துக்கொண்டு போர் செய்ய வராமையால் நின் ஆண்மையைப் பேசிக்கொண்டு, உயிரோடும் நின்றுகொண்டு பலரைக் கொன்று விளையாடிக் கொண்டிருந்தாய். யான் இப்போது வில்லெடுத்துக்கொண்டு போர்க்கு வந்துவிட்டேன்; இனி நீ விளையாட முடியாது" என்பது கருத்து. போர் செய்யும் விருப்பத்தால் தினவுமிக்க தோள்களோடு இந்திரசித்து தந்தையின் கட்டளையை எதிர்நோக்கிக் கொண்டிருந்தான் என்பது இதனால் புலனாகின்றதன்றோ? அரக்கனாயினும் தான்தோன்றியாய்ப் போர்க்குப புறப்படாமல் தந்தையின் ஏவலை எதிர்நோக்கியிருந்தான் என்பது அவன் பெருமையை மிகுதிப்படுத்துதல் காணலாம்.

இவ்வாறு தன் வில்வீரத்தைச் சிறப்பித்துப் பேசிய இந்திரசித்து தன் வலிமையை அழிப்பதற்குரிய ஆயுதம் ஏதும் அனுமானிடம் இல்லாமை குறித்து இகழ்ந்து,

"கல்லடா நெடு மரங்களோ வரு கருத்தினேன்
வலி கடப்பவோ"

என்கின்ருன். நீ எறிந்த மலை என்னைக் கொல்லவில்லை; என்பதை நீயே கண்டாய். இனி, நீ எறியும் நெடிய மரங்களோ உன்னோடு பெரும் போர் புரியுங் கருத்தோடு வந்துள்ள என் வலிமையைக் கடக்கப்போகின்றன? என்று எள்ளி இந்திரசித்து பேசியது கேட்ட அனுமன் அவ்விந்திரசித்தின் மனம் நையுமாறு பதில் கூறுகின்ருன்.

"ஏ மெலியோனே! வில்லெடுத்துப் போர் செய்யும் வீரம் உனக்கு மட்டுமே உண்டு என்று நினைந்து செருக்காதே! வில்லெடுத்துப் போர் செய்தற்குரிய கொடுமையான வீரர்கள் இங்கும் இருக்கின்றார்கள். அவர்கள் வலிமையை நோக்கும்போது நீ மிக மிக மெலியவன் ஆவாய். நாங்கள் நின்னோடு கல்லெடுத்துப் போர் செய்வதை இழிவாக நினைக்கின்றாய். வில்லெடுக்க உரியவர்கள் உன்னைக் கொன்றவுடன் நினக்குக் கல்லெடுப்பதற் குரியவனும் இங்கு இருக்கின்றான். அந்தக் கல்லெடுப்பை நீ இகழ்ந்து பேசமுடியாது. அந்த நிலையை இன்று அல்லது நாளைக்குள் பார்க்கலாம்! என்று அனுமன் கூறுகின்ற மறுமொழி மிக்க நயமுடையதாகத் திகழ்கின்றது.

"வில்லெடுக்க வுரியார்கள் வெய்ய சில
வீரர் இங்கும் உளர் மெல்லியோய்!
கல்லெடுக்க உரியானும் நின்றனன்
அதுஇன்று நாளையிடை காணலாம்" (74)

என்றது காண்க. இந்திரசித்து வில் வீரச் செருக்கினால் பேசிய பேச்சையும் கல்லும் மரமும் அன்றி வேறு ஆயுதம் இல்லாத நிலையை இகழ்ந்து கூறிய பேச்சையும் இந்த இரண்டு அடிகளால அனுமான் அடித்துக் கூறி, அவனை மல்லினால் வெல்லுமுன் தன் சொல்லினால் வென்றமை சிந்திக்கத்தக்க சிறப்புடையதாகும்.

## உவமை

இலக்குவன் எய்த அம்புகள் தன் மார்பில் ஆழப் பதிந்துகிடந்த நிலையில் சில அரக்கர்கள் தம் வீட்டிற்கு ஓட்டமெடுக்கின்றார்கள். அவர்கள் நிலையைக் கண்ட அவர்தம் உறவினர் அவ்வீரர் மார்பில் உள்ள அம்புகளை வாங்கினால் அவர்கள் துன்பம் குறையுமே என்ற எண்ணத்தால் அந்த அம்புகளை மெல்ல வாங்க முயல்கின்றார்கள். அவர்தம் முயற்சி கண்ட வீரர்கள் 'வாங்கிடில் இறப்பம்' என்று கூறி மறுக்கின்றார்கள். ஆனால், அம்பு தைத்த துன்பம் தாங்கமாட்டாது பெருமூச்சு விட்டுக்கொண்டு வருந்துகின்றார்கள். இவர்கள் நிலையை விளக்க எந்த உவமையைக் கூறுவது என்று சிந்தித்து, மிகமிகப் பொருத்தமான உவமை ஒன்றைக் கூறி விளக்குகின்றார் கம்பர். சொல்லம்புக்கும் வில்லம்புக்கும் ஒற்றுமையுண்டு. 'சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம்' (பால-தாடகை-71) எனவும், 'நின்மைச்சுடு சரம் அனைய சொல்லால்' (அகலிகைப்-78) எனவும் ஒன்றற்கொன்று உவமையாக முன் கூறியுள்ளதும் காணலாம். அவ்விரண்டிடங்களிலும் சொல் என்றது சாபச் சொல்லையே யாகும். ஆனல், பிறரால் வாங்கக் கூடாதபடி வீரர் மார்பில் ஆழ்ந்து தைத்துக் கிடக்கின்ற

அம்புகட்கு, நல்லோர் கேள்வியுற்ற பிறர் முன் சொல்லமுடியாத பழிச் சொல்லையே இங்கு உவமையாகக் கூறியுள்ளார்.

நல்லோர் உள்ளம் இனிமை மிக்க தூய்மையான பால் போன்றது. அவ்வுள்ளம், பிரைசேர்ந்த பாலைப் போலத் திரிந்து வேறுபடும் வண்ணம் அவர்கள் பிறர்முன் சொல்ல இயலாத பழிச்சொல்லிற்கு ஆளானார்கள். அந்தப் பழிச்சொல்லைப் பிறர்முன் சொன்னால் மனத்துயர் சிறிது நீங்க வாய்ப்புண்டு. ஆனால், பிறர் முன் சொல்லிப் பின் வாழ்வதைக் காட்டிலும் இறத்தலே நன்று என்று எண்ணுமாறு இருக்கின்றது அப் பழிச்சொல். எனவே பிறரிடம் சொல்லித் தம் மனத்துயரைத் தணித்துக்கொள்ளவும் வழியில்லை. அப் பழிச் சொல்லை மறந்து வாழவும் இயலவில்லை; அப் பழிச்சொல்லை நினைந்து நினைந்து, 'இந்த அடாப் பழியை நம்மேல் சுமத்தினார்களே என்று பெருமூச்சு விட்டுக்கொண்டு தமக்கு உள்ளே வருந்திக் கொண்டு உயிர்தேய்வார்கள். அந்த நல்லோரைப் போலவே அம்பு பட்ட வீரர்களும் பிறர் வந்து தம் மார்பில் தைத்த அம்புகளை எடுக்க விடவும் முடியாதவர்களாய், அவ்வம்புகளாலாய துன்பத்தைப் பொறுக்கவும் முடியாதவர்களாய்ப் பெருமூச்சு விட்டுக்கொண்டு வருந்துவாரயினர் என்கின்றார்.

" வரையுண்ட மதுகைமேனி
மருமத்து வள்ளல் வாளி
இரையுண்டு துயிலச் சென்றார்
வாங்கிடின் இறப்பம் என்பார்
பிரையுண்ட பாலின் உள்ளம்
பிறிதுற, பிறர்முன் சொல்லா
உரையுண்ட நல்லோர் என்ன
உயிர்த்து உயிர்த்து உழைப்பதானார்.

என்றது காணலாம். இந்த உவமை எவ்வளவு சிறப்புடையதாகக் காணப்படுகின்றது காண்மின்! பிறரால் வாங்கக்கூடாத நிலையில் வீரர் மார்பில் ஆழ்ந்து கிடக்கும் அம்பும், பிறர்முன் சொல்ல வியலாததாய் நல்லோர் நெஞ்சில் ஆழ்ந்து கிடக்கும் பழிச்சொல்லும், துன்பம் விளைப்பதில் ஒப்புமையுடையவாய் உயிரையே போக்கும் இயல்பினவாதல் காணலாம். இத்தகைய உவமையை ஆய்ந்துரைத்த கம்பர் தம் புலமை மாட்சி வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந்ததொன்றாக விளங்குகின்றது. இவ்வுவமையினால் இலக்குவனது அம்பின் வன்மை நன்கு புலனாதல் காணலாம். கருடன் சிறைக்காற்றுப் பட்டவுடன் வானரசேனையைக் கட்டியிருந்த நாகபாசம் விட்டமைக்கு உவமையாகச் 'சடையன்றன் வெண்ணெ அணுகும் மறைவாளர், செஞ்சொல் அறிவாளர், பசிபோல் அகன்றது' என்று கூறித் தம்மை

ஆதரித்த சடையப்ப வள்ளலின் பெருமையைப் புலப்படுத்தித் தம் நன்றியுடைமையைக் காட்டியிருக்கும் முறை சாலவும் போற்றத் தகுவதாகும்.

## வீடணன் துன்புறு நிலை

இந்திரசித்து விடுத்த நாகக்கணை இலக்குவன் முதலிய யாவரையும் கட்டி வீழ்த்தியதைக் கண்டு, கட்டுறாத வீடணன் கலங்கித் தன்னைப் பற்றி உலகத்தார் என்ன நினைப்பாரோ? என்று ஐயுற்று அரற்றுகின்ற சொற்கள் கன்னெஞ்சையும் கரைவிக்கும் தன்மையன வாக வுள்ளன.

"கொல்வித்தா னுடனே நின்றங்
 கென்பரோ? கொண்டு போனான்
வெல்வித்தான் மகனை என்று
 பகர்வரோ? வினைவிற்கெல்லாம்
நல்வித்தாய் நடந்தான முன்னே
 என்பரோ? நயந்தோர் தத்தம்
கல்வித்தாம் வார்த்தை என்று
 கரைவித்தான் உயிரைக் கண்போல்.

என்பது காணலாம். தன் உள்ளத்தால் பொய்யாத உண்மை அன்போடு வீடணன் நடந்துகொண்டான் ஆயினும், நாகபாசத்தால் இலக்குவனுக்கே பேரிடர் உற்றபோது, அந்த நாகபாசத்தை வீசிய இந்திரசித்துக்குச் சிறிய தந்தையாகிய தன்மீது உலகத்தார் ஐயுறுதற்கும் இடமுண்டு என்பதையும் அந்த ஐயத்தால் உலகத்தார் தத்தம் அறிவுத் திறத்திற்கு ஏற்றவாறு கற்பனை செய்து கூறலாம் என்பதையும் நினைந்து, அவர்கள் கற்பனை எத்தகையவாக இருக்கலாம் என்பதற்குச் சில எடுத்துக்காட்டுகளும் கூறிக் கண்ணீர்விட்டு உயிர்சோயுமாறு புலம்பும் நிலையை இப்பாடல் எவ்வளவு தெளிவாகக் காட்டுகின்றது காண்மின்! 'ஆருறவாகத் தக்கேன்' எனவும், "அத்தலைக் கல்லேன் யான் ஈண்டு அபயம் என்று அடைந்துநின்ற இத் தலைக்கு அல்லேன் நின்றேன் இருதலைக் கொள்ளி ஒப்பேன்" எனவும் வீடணன் கூறும் சொற்கள் கேட்போர் உள்ளத்தை உருக்கத் தகுவனவாகும்.

## இராமன் கலக்கம்

தம்பியை யல்லது உயிர் வேறு இல்லை என்று எண்ணுகின்ற இராமன் இந்திரசித்தின் நாகபாசத்தால் கட்டுண்டு இறந்தவனைப் போலக்கிடக்கும் இலக்குவனைக் கண்டு கலங்கும் நிலையைக் கம்பர் பல பாடல்களில் விளக்குகின்றார். ஆரணிய காண்டத்தில் அயோ

முகியின் அடாத செயலால் சிறிதுபோது வாராது தாழ்த்த அளவிற்கே பொருது இலக்குவன் இறந்தான் என்றுகொண்டு தன்னுயிரை மாய்த்துக்கொள்ளத் துணிந்த இராமன், இப்போது கண் முன்னே உயிர்ப்பறுக் கிடக்கின்ற இலக்குவனைக் கண்டு தரிப்பனே? தம்பிமேல் வைத்த பாசம் எத்தகையது? என்பதை இராமன் இன்று படுந்துயர் காட்டிவிடுகின்றது. களத்தில் வீழ்ந்து கிடக்கும் பொன்னிறமுள்ள இலக்குவன் உடம்பின்மேல் நீலவண்ணனாகிய இராமன் செஞ்ஞாயிற்றைச் சேர்ந்த கருமுகில் போலும்படி விழ்ந்து தன்மார்பு அழுந்தத் தழுவி 'இவன் பிழைக்கமாட்டான்' என்று கூறிக் கொண்டு பெருமூச்சு விட்டுக்கொண்டே நைந்து உருகிக் கண்ணீர் விட்டுக்கொண்டு வருந்துகின்றான். அவன் துன்புறு நிலையையும் அன்புறு செயல்களையும் கம்பர் தம் சொல்லோவியங்களால் நம் கண் முன் நிறுத்துகின்றார்.

உழைக்கும் வெய்துயிர்க்கும் ஆவி
    உருகும் போய் உணர்வு சோரும்
இழைக்குவ தறிதல் தேற்றான்
    இலக்குவா! இலக்குவா! என்று
அழைக்கும்; தன்கையை வாயின்
    மூக்கின்வைத்து அயர்க்கும் ஐயா!
பிழைத்தியோ? என்னும்; மெய்யே
    பிறந்தேயும் பிறந்தி லாதான்.

தாமரைக் கையால் தாளைத்
    தைவரும்; குறங்கைத் தட்டும்;
தூமலர்க் கண்ணை நோக்கும்;
    மார்பிடைத் துடிப்பு உண்டு என்னா
எழுறும்; விசும்பை நோக்கும்;
    எடுக்கும்; தன்மார்பின் எற்றும்;
பூமியில் வளர்ந்தும் கள்வன்
    போய் அகன்றானே? என்னும்.

என்பன காணலாம். தன் அன்புறு தம்பி வீழ்ந்துகிடக்கும் நிலையைக் கண்டவுடன் மனம் திடுக்கிட்டு வருந்துதலும், அவ்வருத்தம் மிகமிகப் பெருமூச்சு உண்டாதலும், பின்பு உயிரும் உடம்பும் உருகுதலும், உருக்கம் முதிர்ந்த நிலையில் உணர்வு சோர்ந்திருத்தலும் பின் செய்வது அறியாது திகைத்தலும், தான் அழைத்ததால் தன் குரல் கேட்ட அளவில் தம்பி எழுதலும் கூடும் என்று கருதி, இலக்குவா! இலக்குவா! என்று அழைத்தலும், அழைக்கும் கண்திறவாத நிலையைக் கண்டு ஐயுற்று உயிர்ப்பு இருக்கின்றதோ என்று ஆராயத் தன் கையை இலக்குவன் வாயிலும் மூக்கிலும் வைத்துப் பார்த்தலும்

உயிர்ப்பு இல்லாமை கண்டு மீண்டும் வருந்துதலும், 'பிழைப்பாயோ தம்பீ!' என்று அரற்றுதலும் ஒன்றன்பின் ஒன்றாக அன்புடையார் மாட்டு இயல்பாக நிகழும் நிகழ்ச்சிகளாக அமைந்திருத்தல் காண லாம். இவ்வாறு வருந்துதற்கு உரியனல்லாத தெய்வத்தன்மை வாய்ந்த இராமனும் தம்பிமேல் வைத்த பாசத்தால் தன் பெருமை யையும் மறந்து வருந்துகின்றானே! என்ற ஏக்கத்தை உண்டாக்குவ தாக, 'மெய்யே பிறந்தேயும் பிறந்திலாதான்' என்ற தொடர் அமைந்து, இத்துன்ப நிலையை மிகுதிப்படுத்தல் நோக்குதற் குரியது.

இனி, மூர்ச்சையுற்றோரை எழுப்புதற்கு மக்கள் மேற்கொள்ள வேண்டிய முயற்சிகள் இவையெனக் காட்டுவான்போல இராமன் தன் தாமரை மலர்போன்ற கையினால் இலக்குவன் பாதங்களைத் தடவிக் கொடுக்கின்றான்; (இவ்வாறு தைவருதலால் சில்லிட்டுள்ள பாதத்தில் வெப்பம் உண்டாகி மூர்ச்சை தெளியலாம்) அடுத்து இலக்குவன் துடைகளைத் தட்டுகின்றான்; (இவ்வாறு தட்டுவதால் தடையுற்றிருந்த இரதத ஓட்டம் மீண்டும் தொடங்கிப் பிராணவாயு இயங்கத் தொடங்கலாம்) அவ்வாறு தட்டியும் உயிர்ப்பு வாராமை யால் அவனுடைய தூய மலர்போன்ற கண்களைப் பிரித்துப் பார்க் கின்றான். (இறந்தவன் கண்ணுயின் இரத்த ஓட்டம் இன்றி ஒளி மழுங்கிக் காணப்படும்) இவற்றையெல்லாம் பார்த்தபின்னும் ஐயம் அருமையின் மார்பைத் தொட்டுப் பார்த்து இதயத்துடிப்பு இருக் கின்றது என்று மகிழ்கின்றான். அம் மகிழ்ச்சியால் இலக்குவன் உடம்பை எடுத்துத் தன் மார்பின்மேல் சார்த்திக் கொள்கின்றான்; (இவ்வாறு செய்வதால் தன்னுடம்பின் வெப்பம் அவ்விலக்குவன் உடம்பிற்கு ஏறி உயிர்ப்பு வரலாம்) பெருவீரனாகிய இலக்குவன் உடம்பைத் தன்மார்பில் நெடிது வைத்துக்கொள்ள இயலாமையால் பூமியில் படுக்கவைக்கின்றான்; பின்பு இவனை இங்ஙனம் செய்த இந்திரசித்து இருக்கின்றானோ' என்று விண்ணினைப் பார்க்கின்றான்; அங்கு அவன் இல்லாமை கண்டு 'கள்வன் போய்விட்டானோ?' என்கின்றான்.

இங்ஙனம் பலவாறாகச் செய்து துன்புற்ற இராமன், இறுதியாக வீடணனை நோக்கி, 'நீ, இலக்குவனுக்கு இந்திரசித்துடன் போர் நேர்ந்துளது என்று என்னை அழைத்திருந்தால், யான்வந்து நாக பாசம் தொடுக்கும் அவன் கையைத் தலையுடன் துணித்திருப்பேன்; நீ அவ்வாறு அழைக்காமல் என்னைக் கெடுத்தனையே வீடணா!' என்று சொல்லித் துன்புறுகின்றான் தன்னுயிரினும் சிறந்தானாக நட்புக்கொண்ட வீடணனைப் பார்த்து இங்ஙனம் இராமன் சொல்ல வேண்டுமாயின், தன் தம்பிமேல அவன் வைத்திருந்த பாசம் எத்தகையது? என்பது தெளிவாம். இதற்கு மேலாக ஒன்று

கூறுகின்ருன். 'எம்பியே இறக்கும் என்னின் எனக்கினி இலங்கை வேந்தன் தம்பியே! புகழ்தான் என்னை? பழியென்னை? அறந்தான் என்னை?' என்கின்ருன். இதனுல், புகழும் பழியும் பாவமும் அறமும் பார்ப்பது, இலக்குவன் இருக்கும்போதுதான் என்பதும், அவன் இறப்பானுயின் அவற்றைப் பார்க்கப் போவதில்லை என்பதும், புலப் படுத்தியவாறு காணலாம். இங்ஙனம் இராமனது துன்ப நிலையைக் கம்பர் விளக்கிடும் திறம் இப்படலத்து மிகச் சிறப்பாக அமைந் துள்ளது.

இலக்குவனைப் பிணித்துள்ள பாசத்தின் பிணிப்பை மீண்டும் பார்க்கின்ருன். 'இப்பிணிப்பு இலக்குவனை இறக்கச் செய்யுமாயின் யானும் இறப்பேன்' என்று மனங் கலங்கியிருக்கும்போது கருடன் இராமனுக்கு நேர்ந்த துன்பத்தை உணர்ந்து அத்துன்பம் தீர்க்க விண்வழி வருகின்ருன்.

## கருடன் அன்பு

திருமால் இராமனுகப் பிறந்தபின் அவனை நேரிற்காணும் வாய்ப்புப் பெற்றவர்கள் பலர். அவருள் இந்திரனும் கருடனும் தம் தெய்வநிலை மாறுபடாமல் வந்து கண்டு வணங்குகின்றனர். விராதனும் கவந்தனும் ஆகிய இருவரும் சாபத்தால் அரக்கருடம்பு பெற்றவர்கள். இராமனுல் தண்டிக்கப்பெற்றுப் பழைய தெய்வவுடம்பு பெற்ற நிலையில் இராமனுடைய பழைய தெய்வநிலையை நினைந்து துதிக்கின்ருர்கள். இவ்வேறுபாடு இருப்பினும் இராமனை மனிதவடிவிற்கண்டு பழைய தெய்வநிலையை நினைந்து துதிக்கும் தன்மையில் இந்த நால்வரும் ஒத்த இயல்பினராகவே உள்ளனர். இராமன் அறிய அவன் தெய்வநிலையை வெளிப்படுத்தாமல் தம் ஆர்வத்தை அடக்கிக்கொண்டு தம் மனத்துக்குள் துதிக்கும் முறையை இந்நால்வரும் விழிப்புடன் கையாண்டுள்ளனர்.

இந்திரன் சரபங்கர் ஆசிரமத்துக்கு அருகில் இராமனைக் கண்ட அளவில் அவன் பழைய தெய்வநிலையை நினைந்து மனத்துக்குள் வழிபட்டுவிட்டு இராமனை நெருங்கி வணங்காமல் சென்ருன் என்பதைக் கம்பர், 'காப்பானைக் காணு அவசமாய்ச் சிந்தை அழிந்து அயலே நின்ருன்' என்றும்,

"இன்னன பலநினைந் தேத்தி னியம்பாத்
துன்னுதல் இடையுளது என நனி துணிவான்
தன்னிகர் முனிவனைத் தாவிடை என்னுப்
பொன்னெளிர் நெடுமுடி புரந்தரன் போனுன்"

என்றும் தெளிவாகக் கூறியுள்ளார். இதில் 'நினைந்தேத்தினன்' என்று அவன் ஏத்திய முறையை விளக்கியிருத்தல் காணலாம். துன்னுதல் இடையுளது என நனி துணிவானாய் (இராமனை நெருங்கி) இயம்பாமல் சரபங்க முனிவனை மட்டும் வணங்கி விடைதருக என்று சொல்லி இந்திரன் போனான் என்பது இப்பாடலின் கருத்தாதல் தெளியலாம். துன்னுதல் இடையுளது என்பதற்கு 'இராமனை இப்போது நெருங்குவதில் இடையூறு உளது' என்று பொருள் கொள்க. இடையூறு என்றது, முன்பு, தேவசபையில் நடந்த இரகசியத்தை யாரும் எங்கும் வெளிப்படுத்தலாகாது, என்ற முடிவுக்கு மாறுபடுதலாகிய இடையூறு என்றவாறு.

இவ்வாறே, கவந்தன் உடம்பில் நின்று நீங்கிய தனு என்னும் கந்தருவனும் விண்ணில் நின்று இராமனைப் பலவாறு தனக்குள் துதித்துவிட்டு, இராமனது தெய்வநிலையை அறியக் கூறாது அவனை நெருங்கி அன்புறு மொழிகளைக் கூறினான் என்பதைக் கம்பர்,

> "என்றால் இனிதியம்பி யின்றறியக் கூறுவனேல்
> ஒன்றாது தேவர் உறுதிக் கென உன்னாத்
> தன் தாயைக் கண்ணுற்ற கன்றனைய தன்மையனாய் நின்றானை"

எனப் புலப்படுத்தி யுள்ளமை காணலாம். இதனால் கவந்தன் கூறிய தோத்திரங்கள் யாவும் இராமன் அறியக் கூறியன அல்ல; தன் மனத்திற்குள் சொல்லிக் கொண்டனவே என்பதும், அவ்வாறு அறியக் கூறாமைக்குக் காரணம் 'தேவர் உறுதிக்கு ஒன்றாது' என்பதே ஆம் என்பதும் நன்கு புலனாதல் காணலாம். கவந்தன் முன்பு தனு என்னும் பெயருடைய கந்தருவனாக இருந்தவனாதலின் அவனுக்குத் தெய்வ வுடம்பு வந்தவுடன் அத்தேவசபையின் முடிவும் நினைவிற்கு வருகின்றது. அதனால், இவ்வாறு நினைக்கலாயினன் என்க. விராதனும் தெய்வவுடம்பு பெற்றுப் பழைய தும்புருத்தனாக மாறியபின் இவ்வாறே இராமனை மனத்திற்குள் துதித்து நின்றான் என்றே கருத இடமுண்டு; ஆண்டுக்காண்க. மருத்துமலைப் படலத்தில் சாம்பவனும் இராமனைத் தேற்றும்போது "உன்னை நீயுணர்கிலை யடியனேன் உனை, முன்னமே யுணர்குவன் மொழிதல் தீதது; என்னெனில் இமையவர் எண்ணுக்கு ஈனமாம்" (82) எனக் கூறுவது இங்கு நினைதல் தகும்.

கருடன் விண்ணில் நின்று, இராமன் மண்ணில் இருந்து துன்புறுகின்ற நிலையைக் காண்கின்றான். கண்ட அளவில் அவனைத் துதிக்க வாய்துடிக்கின்றது. அவனைத் தரையில் விழுந்து வணங்க வேண்டும் எனத் தலை விரும்புகின்றது. ஆனால், இராமன் முன்னிலையில் தரையில் விழுந்து வணங்கினால் அவனுடைய தெய்வ

நிலையை வெளிப்படுத்தியதாக முடியும். ஆகவே அங்ஙனம் செய்ய முடியாமைக்குக் கருடன் வருந்தும் நிலையைக் கம்பர்,

" முடிமேல் நிமிர்ந்த முகிழேறு கையன்
முகில்மேல் நிமிர்ந்த வொளியான்
அடிமேல் விழுந்து பணியாமல்
நின்ற நிலையுன்னியுன்னி யழிவான் "

எனவும் 'பலகால் நினைந்து பணிவான்' எனவும் கூறிப் புலப்படுத்தியுள்ளார். இதனால் கருடன் கருமுகில் போன்ற நீலவண்ணனாகிய இராமனுடைய அடியில் விழுந்து பணிய முடியாமல் நின்ற நிலையை - தேவ இரகசியத்தை யாரும் எவ்வழியிலும் வெளிப்படுத்தலாகாது என்ற நிலையை – நினைந்து நினைந்து மனம் வருந்தினன் என்பதும் மனத்தினுள் நினைந்தே பலகால் பணிந்தான் என்பதும் நன்கு புலனாதல் காணலாம்.

கருடன் இராமனைக் கண்டவுடன் தன் மனத்தில் எழுந்த ஆர்வத்தையும் அடக்கிக்கொண்டு முன்னைய முடிவை மீறாமல் மனத்திற்குள் துதித்த முறை பாராட்டுதற் குரியதாகும். இவ்வாறு இராமன் அறிந்துகொள்ளாமல் கருடன் துதித்தமையினால் பின்பு அவன் சிறகுகளை விரித்துக்கொண்டு இராமனை நெருங்கியபோது, 'இவன் யாவன்' என்று அவன் நிமிர்ந்து பார்க்க வேண்டியவன் ஆனான் என்க. இராமன் அறியுமாறு கருடன் துதித்திருப்பின், அவன் நெருங்கியபோது 'இவன் யாவன்' என்று நிமிர்ந்து பார்க்கும் நிலை உண்டாகாது, 'ஐய நீ யாரை' என்று அவனை வினவ வேண்டிய நிலையும் உளதாகாது; 'பண்டிலை நண்பு; நாங்கள் செய்வதென்? என்று சொல்லவும் நேர்ந்திராது என்க.

இதனால், இந்திரனும் கவந்தனும் விராதனும் இராமனைத் தம் மனத்திற்குள் துதித்ததுபோலவே கருடனும் இராமன் அறியத் தோத்திரம் செய்யாமல் தன் மனத்திற்குள்ளே துதித்தான் என்பது தெளிவாதல் காணலாம். கருடன் தோத்திரமாக அமைந்த பாடல்கள் கருத்துச் செறிவுடையவாய் அழகிய சந்தமுடையவாய் ஞான நெறியை விளக்குவனவாக உள்ளமை காணலாம்.

# 18. நாகபாசப் படலம்

## அரக்கியர் அழுவதுணர்ந்து இந்திரசித்து எழுதல்

8133. குழுமிக் கொலைவாட்க ணரக்கியர்
கூந்தல் தாழத்
தழுவித் தழுவித் தங்
கைகொடு மார்பினெற்றி
அழுமித் தொழிலியாது கொல்லென்ரு
ரயிர்ப்பு முற்ரு
னெழிலித் தனியே றெனவிந்
திரசித் தெழுந்தான்.

'குழுமி, கொலைவாட்கண் அரக்கியர்
கூந்தல் தாழ,
தழுவித் தழுவித் தம்
கைகொடு மார்பின் எற்றி,
அழும் இத்தொழில் யாது கொல்?' என்று,
ஓர் அயிர்ப்பும் உற்ருன்,
எழிலித் தனி ஏறு என
இந்திரசித்து எழுந்தான்.

பொ :—இந்திரசித்து,—'கொலை செய்யும் வாள்போன்ற கண்ணை யுடைய அரக்கியர்கள் எல்லாம் ஒன்றுசேர்ந்து கொண்டு தம் கூந்தல் அவிழ்ந்து சோரா நிற்க, ஒருவரை ஒருவர் தழுவிக் கட்டிக்கொண்டும், தம் கைகளைக்கொண்டு மார்பில் அடித்துக் கொண்டும், அழுகின்ற இச் செயலுக்குக் காரணம் யாதாக இருக்கக்கூடும்?' என்று ஓர் ஐய முற்றவனுய், மேகத்திலிருந்து எழுகின்ற ஒப்பற்ற பெரிய இடியைப் போல(ச் சினந்து) எழுந்தான்.

கு :—அரக்கியர் குழுமிக் கூந்தல் தாழத் தழுவித் தழுவி எற்றி அழும் இத்தொழில் என இயையும். பெண்டிர் அழும்போது ஒரு சேரக் கூடிக் கட்டிக்கொண்டு அழுதலும் மார்பில் அடித்துக்கொள்ளு தலும், அந்நிலையில் கூந்தலை முடிக்கவும் மறந்தமையால் கூந்தல் சோர்தலும் இயல்பு. இவ்வாறு அழுகைத் தொழிலின் தன்மைகளை எடுத்துரைத்தமையால் இது தொழில் தன்மை யணியாகும். அழும் இத் தொழிலுக்குக் காரணம் யாது கொல் என்பது, தொழில் யாது

கொல் எனக் காரணத்தைக் காரியமாகக் கூறப்பட்டது. அழுகை ஒலிகேட்டு எழுந்த இந்திரசித்தின் சினமும் விரைவும் புலப்பட 'எழிலித் தனியேறென எழுந்தான்' என்றார். எழிலி - மேகம். ஏறு - இடி தனியேறு என்றது பேரிடியை. மேகநாதன் என்ற பெயர்க் காரணமும் இவ்வுவமையால் புலப்படுத்தியவாறு. பிறந்ததும் அழுத ஒலி இடியினும் பெரிதாக இருந்தமையால் இவன் 'மேக நாதன்' எனப் பெயரிடப் பெற்றான். இந்திரனை வென்றமையால் 'இந்திரசித்து' எனப் பிரமனால் பெயர் கொடுக்கப்பெற்றான். (1)

## இந்திரசித்தின் ஐயப்பாடு

8134. எட்டாகிய திக்கையும் வென்றவ
னின்று மீடு
பட்டான்கொ லதன்றெனிற் பட்டழிந்
தான்கொல் பண்டு
சுட்டானிவ் வகன்பதி யைத்தொடு
வேலை யோடும்
கட்டான்கொ லிதற்கொரு காரண
மென்கொ லென்றான்.

'எட்டு ஆகிய திக்கையும் வென்றவன்
இன்றும் ஈடு
பட்டான் கொல்? அது அன்று எனின்,
பட்டு அழிந்தான் கொல்? பண்டு
சுட்டான் இவ் அகன் பதியைத் தொடு
வேலை யோடும்
கட்டான் கொல்? இதற்கு ஒரு காரணம்
என் கொல்?' என்றான்.

பொ :—'எட்டுத் திசையிலும் உள்ளவர்களை யெல்லாம் வென்றவனாகிய இராவணன், (முதல் நாள் போல) இன்றும் (பகைவரால்) பெருமை குன்றித் தோற்றானோ? அல்லது, இறந்தொழிந்தானோ? (அல்லது,) முன்பு (இலங்கையைச்) சுட்டெரித்தவனாகிய அனுமன், (இப்போது) இந்தப் பெரிய இலங்கை நகரத்தை(ச் சகரரால்) தோண்டப்பட்ட கடலோடும் பெயர்த்தெடுத்தானோ? இவ்வழுகைக்குக் காரணம் யாது?' என்று ஐயமுற்றான் இந்திரசித்து.

கு :—திக்கு என்றது இட ஆகுபெயராய் திக்கில் உள்ளாரை உணர்த்தியது. பெருந்திசையும் கோணத்திசையும் சேர்த்து எண்

திசையாக எண்ணப்படும் மரபு தோன்ற 'எட்டாகிய திக்கையும்' என்ருர். உம்மை முற்றும்மை. ஏடு – பெருமை. படுதல் – குறைதல்; தோற்றல். அரக்கியரின் அழுகையை நோக்கின், அது இராவணன் அழிவையோ இலங்கையின் அழிவையோ குறிப்பதாக இருக்கின்றது என்றவாறு. 'இவ்வகன் பதியை' என்பது இடைநிலை விளக்காய் இவ்வகன் பதியைச் சுட்டான் என முன்னும் இயையும். பண்டு இவ்வகன்பதியைச் சுட்டான் என்றது அனுமனை. சகரரால் தோண்டப்பட்டமை தோன்ற 'தொடுவேலை' என்ருர். சகரரால் தோண்டப்பட்டது கீழ்க்கடலின் வடபகுதியே யாயினும் எல்லாக் கடலுக்கும் பொதுவாகத் தொடுகடல் எனவும் சாகரம் எனவும் வழங்குதல் கவி மரபு. கட்டல் - பெயர்த்தல். இதற்கு என்றது, இவ்வழுகைக்கு என்றவாறு. இலங்கையைச் சுட்ட அனுமன் அதனைப் பெயர்க்கவும் வல்லனே! என இந்திரசித்து மதித்தமை இதனுல் புலப்படும். என்ருன் என்பதற்கு முன்னைச் செய்யுளில் வந்த இந்திரசித்துவையே எழுவாயாகக் கொள்க. 'என்ருன்' என்பதற்கு 'என்று ஐயுற்ருன்' எனப் பொருள் கொள்க.

(2)

## இந்திரசித்து இராவணனைக் காணுதல்

8135. கேட்டா னிடையுற்றதென் னென்று
கிளத்தல் யாரும்
மாட்டாது நடுங்கினர் மாற்ற
மறந்து நின்ருர்
ஓட்டா நெடுந்தேர் கடிதோட்டி
யிமைப்பி னுற்ருன்
காட்டாதன காட்டிய தாதையைச்
சென்று கண்டான்.

கேட்டான், 'இடை உற்றது என்?' என்று
கிளத்தல் யாரும்
மாட்டாது நடுங்கினர்; மாற்றம்
மறந்து நின்ருர்,
'ஒட்டா நெடுந்தேர் கடிது' ஒட்டி
இமைப்பின் உற்ருன்,
காட்டாதன காட்டிய தாதையைச்
சென்று கண்டான்.

பொ :—(இந்திரசித்து அங்குள்ளாரை நோக்கி) நடுவே நேர்ந்த துன்பம் என்ன என்று கேட்டான் ; அங்குள்ளார் அனைவரும் (இது நடந்தது என்று) சொல்லமாட்டாது நடுங்கினர்கள் ; (அத் துன்பத்தைக் கண்டு) தன் கட்டளை மொழியையும் மறந்துநின்றவராய்ப் பாகர் ஓட்டாத நெடிய தேரைத் தானே விரைந்து ஓட்டிக்கொண்டு இமைப்பொழுதில் அடைந்தவனாய், இதுகாறும் காட்டாத துன்பங்களை யெல்லாம் (சீதையைக் கவர்ந்தமையால் எல்லோரும் காணுமாறு) காட்டிய இராவணனாகிய தந்தையைப் போய்ப் பார்த்தான்.

கு:—இடையுற்றது என்றது, இடையே நேர்ந்த துன்பத்தை. அதிகாயன் இறந்தான் என்று சொல்வதற்கு அஞ்சினார்களாதலின் கிளத்தல் யாரும் மாட்டாது நடுங்கினர். ஆனார், இடையுற்றது என் என்று கேட்டான் என இயையும். யாரும் என்றது. எத்தகைய துணிவுடையோரும் என்றவாறு. மாற்றம் என்றது, இந்திரசித்தின் கட்டளைச் சொல்லை. அச் சொல்லை இத் துன்பநிலை கண்டமையால் மறந்து நின்ற பாகர் தேரை ஓட்டாது நின்றார் எனவும் அதையறிந்த இந்திரசித்துத் தானே அத்தேரைக் கடிதோட்டி இராவணனுடைய அரண்மனையை இமைப்பில் அடைந்து இராவணனைக் கண்டான் எனவும் கொள்க. நின்றார் என்பது, வினையாலணையும் பெயராய்ப் பாகரை உணர்த்தியது. மறந்து நின்றார் ஓட்டாத தேரைத் தானே ஓட்டியது, அழுகைக்குரிய காரணத்தை விரைந்தறியும் விருப்பத்தால் என்க. இராவணன் இதுகாறும் தன்னாட்சியில் உள்ளார்க்குக் களிப்பும் சிரிப்பும் இன்பமுமே காட்டியுள்ளான் ; கவலையும் அழுகையும் துன்பமும் காட்டிற்றிலன் ; இப்போது அரக்கர்கள் முன் கண்டிராத கவலையையும் அழுகையையும் துன்பத்தையும் கண்டு அறியுமாறு சீதை காரணமாகப் பெரும்பகை தேடிக்கொண்டானாகலின் அவனைக் 'காட்டாதன காட்டிய தாதை' என்று இகழ்ச்சி தோன்றக் குறிப்பிட்டவாறு. 'களிக்கின்றாரலால் கவல்கின்றா ரொருவரைக் காணேன்' (சுந்தர–ஊர்தேடு-30) என அனுமன் கூறியது இங்கு நினையலாம்.

(3)

## இந்திரசித்தின் வினவும் இராவணன் விடையும்

8136. கண்டா னிறையாறிய நெஞ்சினன்
கைகள் கூப்பி
யுண்டாய தெனிவ்வுழி என்றலு
மும்பி மாரைக்

கொண்டா னுயிர்காலனுங் கும்ப
நிகும்ப ரோடும்
விண்டா னடைந்தா னதி
காயனும் வீர வென்ருன்.

கண்டான், இறை ஆறிய நெஞ்சினன்,
கைகள் கூப்பி,
'உண்டாயது என், இவ்வுழி?' என்றலும்
'உம்பி மாரைக்
கொண்டான் உயிர் காலனும்; கும்ப
நிகும்ப ரோடும்
விண்தான் அடைந்தான்,
அதிகாயனும்—வீர!' என்ருன்.

பொ :—(இந்திரசித்து இராவணனைக்) கண்டு சிறிது துன்பம் தணிந்த நெஞ்சினனய்த் தன் கைகளைக் கூப்பி வணங்கி, 'இவ் விடத்து உண்டாய துன்பம் என்ன? என்று (இராவணனை) வினவுத லும். (அவன் இந்திரசித்தை நோக்கி) 'வீரனே! உன் தம்பிமாரை எமனும் உயிர் கவர்ந்தான்; கும்பன், நிகும்பன் என்பவரோடு அதி காயனும் விண்ணுலகு அடைந்தான்'' என்று கூறினன்.

கு :—அரக்கியர் அழுதல் கண்டு இராவணனே இறந்துபட் டானே என்று ஐயமுற்றவன் இந்திரசித்து ஆதலின். இராவணன் நலமுடன் இருக்கக் கண்டவுடன் இறையாறிய நெஞ்சினன் ஆனன் என்க. காலனும் என்புழி உம்மை இழிவு சிறப்புப் பொருளது. நமக் குத் தோற்று அஞ்சிக் கிடந்த காலனும் அஞ்சாது வந்து உயிர் கொண்டானே என்ற குறிப்பினதாதல் காண்க. 'உம்பிமாரை' என முன்னே தொகுத்துச் சுட்டிப்பின் 'கும்ப நிகும்பரோடு அதிகாயனும் விண் அடைந்தார்கள்' என வகுத்துக் காட்டியவாறு. அதிகாயன், இராவணனுக்குத் தானியமாலினியின் வயிற்றில் பிறந்தவன். கண் டான், நெஞ்சினன் என்பன முற்றெச்சங்கள். (4)

### இந்திரசித்து ஏங்கி நைதல்

8137. சொல்லாத முன்னஞ் சுடரைச்
சுடர்தூண்டு கண்ணன்
பல்லா லதரத்தை யதுக்கிவிண்
மீது பார்த்தான்

எல்லாரு மிறந்தன ரோவென
வேங்கி நைந்தான்
வில்லா ளரையெண்ணில் விரற்குமுன்
னிற்கும் வீரன்.

சொல்லாத முன்னம், சுடரைச்
சுடர்தூண்டு கண்ணன்,
பல்லால் அதரத்தை அதுக்கி,
விண்மீது பார்த்தான்;
எல்லாரும் இறந்தனரோ!' என
ஏங்கி நைந்தான்;
வில்லாளரை எண்ணின் விரற்குமுன்
நிற்கும் வீரன்.

பொ:—வில்வீரர்களை விரல்விட்டு எண்ணினால் முதல் விரலில் நிற்பதற்குரிய வீரனாகிய இந்திரசித்து, (இராவணன் அவ்வாறு) சொல்லாத முன்னமே விண்ணில் செல்லும் சூரியனாகிய சுடரைத் தன் சினப்பொறியாகிய சுடரால் தூண்டுகின்ற கண்ணையுடையவனாய்ப் பல்லினால் உதட்டைக் கடித்துக்கொண்டு விண்மீது பார்த்தவனாய், எல்லாரும் இறந்துபட்டனர் அந்தோ! என்று அழுது வருந்தினான்.

கு:—வில்வீரரில் சிறந்தவன் இந்திரசித்து என்பார் 'வில்லாளரை எண்ணில் விரற்குமுன் நிற்கும் வீரன்' என்றார். மடக்கிய விரல்களை ஒவ்வொன்றாக நீட்டி வில்லாளர்கள் தகுதி நோக்கி எண்ணுங்கால் முதல் விரலை நீட்டி எண்ணத்தக்கவன் இந்திரசித்து என்றவாறு. முன் விரலில் நிற்கும் வீரன் என்க. விரற்கு என்பது உருபு மயக்கம்; விரலில் என ஏழனுருபாக மாற்றுக. இராவணன் சொன்னதும் இந்திரசித்து விண்மீது பார்த்து நைந்ததும் உடனிகழ்ந்தன என இந்திரசித்தின் சின விரைவை யுணர்த்துவார் 'சொல்லாத முன்னம்......நைந்தான்' என்றார். சினத்தால் தீப் பொறி பறக்கும் கண்களையுடையவன் என்பார், 'சுடரைச் சுடர் தூண்டு கண்ணன்' என்றார். இவன் கண்ணில் தோன்றிய தீப் பொறியின் சுடர் விண்ணில் செல்லும் ஞாயிற்றுச் சுடரையும் தூண்டி ஒட்டத்தக்கதாக இருந்தது என்றவாறு. பல்லால் அதரத்தை அதுக்குதலும் விண்ணைப் பார்த்தலும் சினமிகுதியால் உளவாகும் செயல்கள். 'இறந்தனர் ஓ' எனப் பிரிக்க. ஓ இரக்கக் குறிப்பு உணர்த்திய இடைச்சொல்; ஐயோ என்றாற்போல. ஏங்குதல் – அழுதல். நைதல் – வருந்துதல். (5)

## உம்பியரைக் கொன்றோர் இவர் என இராவணன் உரைத்தல்

8138. ஆர்கொன்றவ ரென்றலும் பேரதி
காய னென்னும்
பேர்கொன்றவன் வென்றி யிலக்குவன்
பின்பு நின்றார்
ஊர்கொன்றவ னாற்பிற ராலென
வுற்ற வெல்லாம்
தார்கொன்றையி னான்கிரி சாய்த்தவன்
றானு ரைத்தான்.

'ஆர் கொன்றவர்' என்றலும் பேர்
அதிகாயன் என்னும்
பேர் கொன்றவன் வென்றி இலக்குவன்;
பின்பு நின்றார்
ஊர் கொன்றவனால், பிறரால் என
உற்ற எல்லாம்,
தார் கொன்றையினான் கிரி
சாய்த்தவன்தான் உரைத்தான்.

பொ:—(அவ்வாறு ஏங்கி நைந்த இந்திரசித்து இராவணனை நோக்கி) 'இவர்களைக் கொன்றவர் யார்?' என்று வினவுதலும் பெரிய 'அதிகாயன் என்னும் பேருடையானைக் கொன்றவன் வெற்றியுடைய இலக்குவன் ஆவன்; பின்பு நின்றவர்களாகிய கும்ப நிகும்பர் முதலியோர் இலங்கையை எரித்து அழித்த அனுமனாலும் பிறராலும் கொல்லப்பட்டார்;' என்று நிகழ்ந்த எல்லாவற்றையும், கொன்றைமாலை யணிந்த சிவனுடைய கயிலாயமலையை எடுத்துச் சாய்ந்தவனாகிய இராவணன் சொன்னான்.

கு:—பேர் என்றது, பேருடையானை உணர்த்தியது. பின்பு நின்றார் என்றது கும்ப நிகும்பர் முதலியோரை. இலங்கையைத் தன் வாலில் மூட்டிய நெருப்பினால் அழித்தவன் அனுமன் ஆதலின் அவன் ஊர்கொன்றவன் எனப்பட்டான். பின்பு நின்றார் ஊர் கொன்றவனால் பிறரால் கொல்லப்பட்டார் என இசையெச்சமாக வருவித்துரைக்க. அனுமன் நிகும்பனையும் (அதிகாயன்-250) சுக்கிரீவன் கும்பனையும் (அதிகா-247) அங்கதன் நராந்தகனையும் (அதிகா-214) கொன்றமை முன்னம் கூறப்பட்டிருத்தல் காணலாம். "வண்ண மார்பில் தாருங் கொன்றை" (புறநா-1) எனச் சிவபிரானுக்கு அடையாளமாலை கொன்றையாதலைக் கூறியிருத்தல் காண்க. தார்

கொன்றையினன் கிரி என்றது, கயிலைமலையை. கயிலைமலையைச் சாய்த்த ஆற்றலுடைய இராவணனுக்கு வானரசேனையைச் சாய்க்கும் வன்மை இன்மை புலப்படக் 'கிரி சாய்த்தவன் தான் உரைத்தான்' என்றார். (6)

## இந்திரசித்து இராவணனைச் சினத்தல் 8139-8140

8139. கொன்றா ரவரோ கொலைசூழ்கென
நீகொ டுத்தாய்
வன்றானையர் மானுடர் வன்மை
யறிந்து மன்னா
என்றானு மெனைச்செல வேவலை
யற்ற தென்னா
நின்றா னெடிதுன்னி முனிந்து
நெருப்பு யிர்ப்பான்.

'கொன்றார் அவரோ! ''கொலை சூழ்க'' என நீ கொடுத்தாய்;
வன்தானையர் மானிடர் வன்மை அறிந்தும், மன்னா!
என்றானும் எனைச் செல ஏவலை; இற்றது' என்னா
நின்றான், நெடிது உன்னி, முனிந்து, நெருப்பு உயிர்ப்பான்.

பொ :—(இந்திரசித்து இராவணனை நோக்கி) 'அரசே! என் தம்பியைக் கொன்றவர் அவரோ? (அல்லர்) இவரைக் கொலை செய்யுங்கள் என்று நீயே எம்பியரை அனுப்பிக் கொல்வித்தாய்; வலிய சேனையை யுடையவராகிய மானிடரின் வலிமையை அறிந்திருந்தும் என்றைக்கேனும் என்னைச் செல்லுமாறு சொல்லவில்லை; அதனால், நம் படைவலிமை அழிந்தது' என்று கூறிவிட்டு நெடிது சிந்தித்து, கோபம்மிக்கு நெருப்புப்போலப் பெருமூச்சு விடுபவனாய் நின்றான்.

கு :—போர்த்திறமிக்க தன்னை அனுப்பாமல் இளைஞரை அனுப்பினமையால் அவர்கள் இறந்தார்கள் என்பது இந்திரசித்தின் கருத்து. வலியவர்கள்பால் மெலியவரை அனுப்பிய குற்றம் இராவணனுடையது ஆகலின், தன் தம்பியர் கொலைக்கு இயற்றுதல் கருத்தா இராம இலக்குவர்; ஏவுதல் கருத்தா இராவணன் என்பது நிறுவியவாறு. கொலை செய்தவரினும் கொலை செய்வித்த இராவணன் குற்றமே பெரிது என்பது காட்டியவாறு. தன் குற்றம் காணாது பகைவர் கொன்றதாக எண்ணிப் புலம்புவதில் பயனில்லை என்றவாறு உயிர்ப்பவனாய் நின்றான் என முற்றெச்சமாக்கி முடிக்க. (7)

8140. அக்கப் பெயரோனை நிலத்தொ
டரைத்து ளானை
விக்கற்கொரு வெவ்வுரைத் தூதுவ
னென்று விட்டாய்
புக்கத் தலையெய்த நினைந்திலை
புந்தி யில்லாய்
மக்கட் டுணையற்றனை யிற்றதுன்
வாழ்க்கை மன்னே.

'அக்கப் பெயரோனை நிலத்தொடு அரைத்துளானை,
விக்கற்கு ஒரு வெவ்வுரைத் தூதுவன் என்று விட்டாய்;
புக்கு அத் தலை எய்த நினைந்திலை; புந்தி இல்லாய்!
மக்கள் துணை அற்றனை; இற்றது உன் வாழ்க்கை மன்னே!

பொ :—அட்சகுமாரனைத் தரையோடு வைத்து அரைத்தவனாகிய அனுமனை (க் கொல்லாமல்) பகைவனது விருப்பமான சொல்லைச் சொல்லவந்த தூதுவன் என்று (அறங்கூறி) விட்டுவிட்டாய்; அவன் மூலம் பகைவர் உள்ள இடத்தை அறிந்து புகுந்து அவ்விடத்தை அடைந்து அப்பகைவரை அழிக்க நினைந்தாயில்லை; புத்தி இல்லாதவனே! அதனால் நின்மக்கள் துணையையே இழந்து விட்டாய்; உன் வாழ்க்கை ஒழிந்தது.

கு :—எழில் மிக்க பொழிலை அழித்த குற்றமேயன்றி நின் காதற் புதல்வனாகிய அக்கனையும் தரையில் அரைத்துக்கொன்ற அனுமனைத் தூதுவன் என்று அறங் கூறிவிட்டதால் இவ்வளவு அல்லலும் விளைந்தது என முன்னைய பிழையை இராவணனுக்கு எடுத்துக் காட்டியவாறு. இராவணன் புத்தியுள்ளவனாக இருந்தால், வந்த அனுமன் மூலம் பகைவர் உள்ள இடத்தை அறிந்து அவர் நிலத்துள்ள இடத்திலேயே சென்று புகுந்து அவரை அழித்திருக்க வேண்டும். என்பது இந்திரசித்தின் எண்ணம். இலங்கையுள் புகுந்த அனுமனைப் பிரமாத்திரத்தினால் பிணித்தும், அவனைக் கொல்லாது விட்டதோடு, அவன் மூலம் பகைவர் உள்ள இடத்தை அறிந்து அவ்விடத்தே சென்று அவரை அழிக்காதது பெருங்குற்றம் என்றவாறு. அனுமனைக் கொன்றிருந்தாலும், அப்பகைவருள்ள இடத்தில் சென்று அவரை அழித்திருந்தாலும் இத்தகைய விளைவுகள் நிகழாவே! அங்ஙனம் செய்யாமையால் இராவணன் மக்களை இழந்ததோடு தன் வாழ்வையும் இழக்கப் போகின்றானே என்ற இரக்கம் தோன்ற 'இற்றதுன் வாழ்க்கை மன்னே' என்றான். "மைந்து பொருளாக வந்த வேந்தனைச் சென்று தலையழிக்குஞ் சிறப்பிற்

றென்ப" (தொல் - பொருள் - 703) என்ற சூத்திரத்தில் ஒரு வேந்தன், தன் வலிமையைப் பொருளாக மதித்துத் தன்னுடுநோக்கி வந்தானுயின் அவ்வாறு வந்த வேந்தனே அவன் உள்வழிச் சென்று அவன் தலைமையை அழிக்கும் சிறப்புத் தும்பைத் திணைக்கு உண்டு ஆதலின், 'புக்கு அத்தலை யெய்த நினைந்திலை' என இந்திரசித்துக் கூறுவானுயினன். அத்தலை எய்தலாவது அப்பகைவருள் வழிச் சென்று அவரை அழித்து அவருள்ள இடத்தையும் தனக்குரியதாக எய்துதல். இற்றதுன் வாழ்க்கை என்பது தெளிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாயிற்று. காலவழுவமைதி. விக்கல் என்பது கொல்லுதல் என்னும் பொருளில் வந்தது. (8)

## இந்திரசித்தின் வஞ்சினம் 8141-8145

8141. என்னின்று நினைந்து மியம்பியு
மெண்ணி யுந்தான்
கொன்னின்ற படைக்கலத் தெம்பியைக்
கொன்று ளானை
அந்நின்ற நிலத்தவ னுக்கையை
நீக்கி யல்லால்
மன்னின்ற நகர்க்கினி வாரலென்
வாழ்வும் வேண்டேன்.

'என், இன்று நினைந்தும், இயம்பிவும், எண்ணியும் தான்?
கொன் நின்ற படைக்கலத்து எம்பியைக் கொன்றுளானை,
அந்நின்ற நிலத்து அவன் ஆக்கையை நீக்கி அல்லால்,
மன் நின்ற நகர்க்கு இனி வாரலென்; வாழ்வும் வேண்டேன்.

பொ :—இப்போது கடந்துபோனவற்றை நினைவு கூர்ந்தும் நினக்குச் சொல்லியும், அப்பிழைகள் எத்தனை என எண்ணியுந்தான் என்னபயன்? கொலைத்தொழில் நிலைபெற்ற படைக்கலத்தை யுடைய என் தம்பி அதிகாயனைக் கொன்றவனுகிய இலக்குவனை அவன் நின்ற நிலத்தில் (சென்று) அவன் உடம்பைவிட்டு உயிரை நீக்கியபின் அன்றிப் பெருமை பொருந்திய இலங்கை நகர்க்கு இனி வரமாட்டேன்; (அவ்வாறு அவனைக் கொல்ல இயலவில்லை என்றுல்) உயிர் வாழ்க்கையையும் விரும்பமாட்டேன் (இறப்பேன்)

கு :—நினைதல் என்பது கடந்தவற்றை நினைவு கூர்தல். எண்ணுதல் என்பது இத்தனை என எண்ணுதல்; கருதுதலன்று. எண்ணியுந்தான் என்? என இயையும். கொல் நின்ற - கொலைத்

தொழில் நிலைபெற்ற. கொலைத் தொழில் செய்து செய்து பழகிய படைக்கலம் என்றவாறு. அத்தகைய படைக்கல மேந்தியிருந்த அதிகாயனைக் கொல்வது எளிதன்று என்பது புலப்படக் 'கொன்றுளானை' என்றான். அந்நின்ற நிலம் என்றது, அவ்விலக்குவன் நின்ற இடம். அவ்விடம் பகைவர் வயத்துள்ளது ஆயினும் அவ்விடத்தே சென்று அவ்விலக்குவனைக் கொல்லாது மீளேன் என வஞ்சினம் கூறியவாறு, 'யான் அவனைக் கொல்வது; இல்லையேல் அவனால் யான் மாய்வது' என்பான் "அவனுக்கையை நீக்கி யல்லால் மன்னின்ற நகர்க்கினி வாராலென்; வாழ்வும் வேண்டேன்" என்றான். மன் - பெருமை. இனி, மன்னவனாகிய நீ நின்றநகர்க்கு எனலும் ஆம். (9)

8142. மாற்ருவுயி ரெம்பியை மாற்றிய
மானி டன்றன்
ஊற்ருர்குரு திப்புனல் பார்மக
ளுண்டி லாளேல்
ஏற்ருனிக லிந்திர னீரிரு
காலெ னக்கே
தோற்ருன்றனக் கென்னெடுஞ் சேவகந்
தோற்க வென்ருன்.

'மாற்ரு உயிர் எம்பியை மாற்றிய மானிடன்தன்
ஊற்று ஆர் குருதிப் புனல் பார்மகள் உண்டி லாளேல்,
ஏற்ருன் இகல் இந்திரன் ஈர்—இரு கால், எனக்கே
தோற்ருன் தனக்கு என் நெடுஞ் சேவகம் தோற்க என்ருன்.

பொ:—'பிறரால் வாங்கமுடியாத உயிரையுடைய என் தம்பியை உயிர்வாங்கிய மனிதனுடைய. சுரக்கும் தன்மையுள்ள இரத்தநீரை நிலமகள் உண்ணவில்லையானல், என்னேடு எதிர்த்தவனும், நான்கு முறை எனக்கே தோற்றவனும் ஆகிய மாறுபாட்டையுடைய இந்திரனுக்கு என் பெரியவீரம் தோற்பதாக' என்று கூறினன்.

கு:—மானிடன் என்றது இலக்குவனை. இகழ்ச்சிக் குறிப்பால் அப்பெயரால் கூறினன். குருதிப்புனலைப் பார்மகள் உண்ணுதல் என்றது, இலக்குவனது இரத்தம் பூமியில் பெருக்கெடுத்து ஓடச் செய்தலை உணர்த்தியது. நான்கு முறை தனக்குத் தோற்ற இந்திரனுக்கு இந்திரசித்துத் தோற்பது இயல்பன்ருயினும், இலக்குவனைக் கொல்லாது போனல், தனக்குத் தோற்ற இந்திரனிடம் தோல்வி

யுற்றது போன்ற இழிவைப் பெறுவானாக' என்று வஞ்சினம் கூறிய வாறு. சேவகம் - வீரம். இலக்குவனைக் கொல்லாமை இந்திரனுக் குத் தோற்பதோடொக்கும் என்றபடி. (10)

8143. வெங்கண் ணெடுவானரத் தானையை
வீற்று வீற்றாய்ப்
பங்கம் முறநூறி யிலக்குவ
னைப்ப டேனேல்
அங்கந் தரவஞ்சியென் னாணை
கடக்கி லாத
செங்கண் ணெடுமான் முதற்றேவர்
சிரிக்க வென்னை.

வெங்கண் நெடு வானரத் தானையை வீற்று வீற்றாய்ப்
பங்கம் உற நூறி, இலக்குவனைப் படேனேல்,
அங்கம் தா அஞ்சி என் ஆணை கடக்கிலாத
செங்கண் நெடு மால் முதல் தேவர் சிரிக்க, என்னை!

பொ :—கொடுந் தன்மையுடைய பெரிய குரங்குச் சேனையை வேறுவேறாத் துண்டுபடுமாறு அழித்து இலக்குவனைக் கொல்லாமல் விடுவேனாயின், அழகிய தலையை எனக்குத் தரவேண்டுமே என்று அஞ்சி என் ஆணையைக் கடவாது அடங்கி நடக்கும் செங்கண்ணை யுடைய நெடிய திருமால் முதலான தேவர்கள் என்னைப் பார்த்துச் சிரிப்பார்களாக.

கு :—வெங்கண் – கொடுந்தன்மை. வீற்று வீற்று – வேறுவேறு. பங்கம் - குறை; இங்குத் துண்டங்களை உணர்த்தியது. படேனேல் என்றது, பிறவினைப் பொருளது. படச் செய்யேனேல் என்று பொருள் தந்தது; "அருஞ்சமம் சிதையத்தாக்கி முரசமொ, டொருங் ககப் படேஎ னாயின்" (புறநா - 72) என்புழிப்போல. படுதல், தன் வினை. படுத்தல் பிறவினை. படுத்தல் - கொல்லுதல். இலக்குவனைப் படுத்தேனேல் என்று பிறவினையாகச் சொல்லவந்த இந்திரசித்து, அமங்கலமாகப் 'படேனேல்' என்று தன்வினைச் சொல்லால் சொல் விப் பின்னிகழ்ச்சியை முன்னறிவித்ததாக அமைதல் காணலாம். அம்கம் - அழகியதலை. மார்பு எனலும் ஆம். திருமால் முதலான தேவர்கள் எதிர்த்து வந்தால் அவர்கள் தலைகளை வாங்கிவிடுவேன் என்ற அச்சத்தால் தன்னாணைக்கு அடங்கி நடக்கின்றார்கள் என்பது இந்திரசித்தின் தன் மேம்பாட்டுரை. இலக்குவனை யான் கொல்லா

விட்டால் என் ஆணைக்கு அடங்கினவர்களும் என் எளிமை கண்டு எள்ளிச் சிரிப்பார்களாக என வஞ்சினங் கூறியவாறு. (11)

8144. பாம்பிற் றருவெம்படை பாசு
பதத்தி னோடும்
தேம்பற் பிறைசென்னி வைத்தான்றரு
தெய்வ வேதி
யோம்பித் திரிந்தேற் கினியின்
றுதவாது போமேல்
சோம்பித் துறப்பென் னுயிர்சோறு
முகந்து வாழேன்.

'பாம்பின் தரு வெம்படை, பாசு பதத்தினோடும்,
தேம்பல் பிறை சென்னி வைத்தான் தரு தெய்வ ஏதி,
ஓம்பித் திரிந்தேன் எனக்கு இன்று உதவாது போமேல்,
சோம்பித் துறப்பென் உயிர்; சோறும் உகந்து வாழேன்.

பொ :—பாம்பின் வடிவமாக அமைந்த கொடிய நாகாத்திரத்தையும், குறைந்த கலையினையுடைய பிறைச் சந்திரனைத் தலையில் அணிந்து கொண்டுள்ள சிவபிரான் தந்த பாசுபதத்தினோடு தெய்வத் தன்மையுடைய வாளையும் இதுகாறும் பாதுகாத்து வைத்துக் கொண்டு (பகைவரைத் தேடித்) திரிந்துகொண்டிருந்த எனக்கு, (பகைவனைக் கிடைக்கப்பெற்ற) இன்றைக்கு உதவாது போகுமாயின் இனிப் போர் முயற்சியே யில்லாமல் சோம்பியிருந்து உயிரை விடுவேன்; உடம்பை வளர்க்கும் சோற்றையும் விரும்பி வாழ மாட்டேன்.

கு :—பாசுபதம் - பசுபதியால் கொடுக்கப்பட்ட அம்பு; தத்தி தாந்தம் - பாசுபதமும் வாளும் சிவபிரான் கொடுத்தவை. தேம்பற் பிறை என்றது குறைந்த இருகலையையே யுடைய பிறைச் சந்திரனை. இனித் தக்கன் சாபத்தால் சாதேம்புதலை யுடைய பிறைச் சந்திரனை எனலும் ஆம். தேம்புதலையுடைய பிறைச்சந்திரனையும் தலைமேல் வைத்துச் சிறப்பித்துக் காப்பாற்றிய சிவபிரான் தந்த ஆயுதங்கள் எனக்கு உதவுதல் தப்பா என்ற கருத்துப் புலப்படவே 'தேம்பற் பிறை சென்னி வைத்தான்' எனச் சிவபிரானைக் குறிப்பிட்டான். ஏதி – வாள். நாகாத்திரமும் பாசுபதமும் வாளும் இதுகாறும் பயன் படுத்தப் பகைவரைப்பெறாது திரிந்தேன் என்பான் 'ஓம்பித் திரிந் தேன்' என்றான். ஓம்புதல் – பாதுகாத்தல். இனி என்பதை உயிர்

துறப்பேன் என்பதோடு இயைக்க. சோம்புதல் – போர் முயற்சியை விடுதல். உடம்பை வளர்க்குச் சிறப்புடைமையால் சோறு எல்லா ராலும் விரும்பப்படுவதாதல் தோன்றச் 'சோறும்' என உயர்வு சிறப்பும்மை கொடுத்துக் கூறியவாறு. உகத்தல் - விரும்புதல். நாகாத்திரத்தையும் பாசுபதத்தையும் தெய்வவாளையும் கொண்டு இலக்குவனை ஈடு அழிக்கலாம் என்ற கருத்தினன் இந்திரசித்து என்பது இதனால் புலப்படுத்தியவாறு. (12)

8145. மருந்தே நிகரெம்பிதன் னாருயிர்
வெளவி னானை
விருந்தே யெனவந்தகற் கீகிலென்
வில்லு மேந்திப்
பொருந்தேவர் குழாநகை செய்திடப்
போந்து பாரி
லிருந்தே னெனினான விராவணி
யல்லெ னென்றான்.

'மருந்தே நிகர் எம்பிதன்
ஆருயிர் வவ் வினானை
விருந்தே என அந்தகற்கு
ஈகிலென், வில்லும் ஏந்தி,
பொரும் தேவர் குழாம் நகை
செய்திடப் போந்து, பாரின்
இருந்தேன் எனின், நான் அவ்
இராவணி அல்லென்' என்றான்.

பொ :—'தேவர் அமிழ்தை ஒத்த என் தம்பி அதிகாயனுடைய அருமையான உயிரைக் கவர்ந்த இலக்குவனை எமனுக்கு விருந்தாகக் கொடாமல் வில்லையும் ஏந்திக்கொண்டு வந்து, என்னோடு போர் செய்த தேவர்கூட்டம் என்னைக் கண்டு சிரிக்கப் பூமியில் இருந்தேன் என்றால் நான் அந்த இராவணன் மகன் அல்லேன்' என்றான்.

கு :—மருந்து - அமிழ்தம். தம்பியின் அருமை தோன்ற 'மருந்தே நிகர் எம்பி' என்றான். அமிழ்தம் உண்டார் போலச் சாக்காடின்றி வாழத்தக்க எம்பி எனக் கருத்துக் கூறலும் ஆம். விருந்து என்பது இங்கு விருந்துணவை உணர்த்தியது. பகைவனை அழிக்க இயலாத வனுக்கு வில் வெறும் சுமையேயாதல் தோன்ற 'வில்லும் ஏந்தி' என்றான். பகைவரை யழித்தற்குரிய சிறப்புடைய வில்லும் எனப்

பொருள்படுதலின் உம்மை உயர்வு சிறப்பு. ஏந்திப் போந்து பாரில் இறந்தேன் எனின் என்க. 'தேவர்குழாம் நகைசெய்திட' என்றது இடைப்பிறவரல். தன்னோடு போர் செய்து தோற்ற தேவர்குழாம் நகைசெய்திடப் பூமியில் இருப்பது வீரனுக்குப் பேரிழிவு தருவதொன்றாகலின் 'பாரில் இருந்தேனெனின் நான் அவ்விராவணி அல்லென்' என்றான். தன் வீரத்தால் மூவுலகையும் தன்னடிப்படுத்திய இராவணனுக்கு யான் மகன் என்பது உண்மையாயின் இலக்குவனைக் கொல்லாது விடேன் என்றவாறு. தம்பியைக் கொன்ற பகைவனைக் கொல்லாது வில்லேந்திப் பாரில் இருத்தல் இராவணன் மகனுக்கு ஏற்புடையதன்று என்பது விளக்கியவாறு. இராவணி – இராவணன் மகன் ; தத்திதாந்தம். (13)

இராவணன் இந்திரசித்தைப் பாராட்டுதல்

8146. ஏகா விதுசெய் தெனதின்னலை
நீக்கி டெந்தைக்
காகா தனவும் முளவோவெனக்
காற்ற லார்மேல்
மாகால் வரிவெஞ் சிலையோடும்
வளைத்த போது
சேகாகு மென்றெண்ணி யிவ்வின்னலிற்
சிந்தை செய்தேன்.

'ஏகா, இது செய்து, எனது இன்னலை
நீக்கிடு; எந்தைக்கு
ஆகாதனவும் உளவோ? எனக்கு
ஆற்றலார் மேல்
மாகால் வரி வெஞ்சிலை யோடும்
வளைத்த போது
சேகு ஆகும் என்று எண்ணி
இவ் இன்னலில் சிந்தை செய்தேன்.

பொ :—(இவ்வாறு கூறிய இந்திரசித்தை நோக்கி இராவணன் கூறுகின்றான்) நீ போர்க்களத்திற்குச் சென்று நீ கூறிய இவ்வீரச் செயலைச் செய்து என் துன்பத்தை நீக்குவாயாக! என் ஐயனாகிய உனக்கு ஆகாத செயல்களும் உளவோ? (ஆற்றமுடியாத) இந்தப் புத்திரசோகத்தில் யான் வருந்தும்போது, எனக்கு ஆற்றாத பகைவர் மேல் நீ பெரிய தண்டினையையுடைய கட்டமைந்த கொடிய வில்லோ

டும் சென்று வளைத்துக்கொண்டபோது நமக்கு உறுதி உண்டாகும் என்று எண்ணி உன்னை நினைத்தேன்.

கு :—'என்றானை' என அடுத்த செய்யுளோடு தொடரும், இந்திர சித்துக் கூறிய வஞ்சின மொழிகளைக் கேட்ட இராவணன் உவந்து அவ் இந்திரசித்தைப் பாராட்டி ஊக்குவிக்கின்றான். அன்புமிகுதி யால் தன் மகனை எந்தைக்கு என வழுவமைதியாகக் கூறினான் இராவணன். இது என்றது இந்திரசித்து கூறியவாறு நாகாத்திர முதலியவற்றைக் கொண்டு இலக்குவனை வெல்லுதலை உணர்த் தியது. ஆற்றலார் என்றது தனக்குப் போரில் ஆற்றமுடியாத பகைவரை. இராவணன், இகழ்ச்சி தோன்ற இராம இலக்குவரை இங்ஙனம் குறிப்பிட்டவாறு. புத்திர சோகத்தால் வருந்திக் கொண டிருக்கும் தன் நிலைமை கண்டு பகைவர் படை புகுந்து அரக்கரை யெல்லாம் அழிக்கவும் கூடுமாகலின், இந்திரசித்து அவரை வளைத் துக்கொண்டு போர் செய்வது உறுதி தருவதாகும் என்று எண்ணி னான் இராவணன் என்க. சேடு - வயிரம்; உறுதி. இவ்வின்னல் என்றது, அதிகாயனை யிழந்த துன்பத்தை. (14)

## இந்திரசித்தின் போர்க்கோலம்

8147. என்றானை வணங்கி யிலங்கயில்
வாளு மார்த்திப்
பொன்றா னுமரு வுருவா
வுடற்காவ லோடும்
பொன்றாழ் கணையின்னெடும் புட்டில்
புறத்து வீக்கி
வன்றாள் வயிரச்சிலை வாங்கினன்
வானை வென்றான்.

என்றானை வணங்கி, இலங்கு அயில் வாளும் ஆர்த்திட்டு,
ஒன்றானும் அரு, உருவா, உடற்காவ லோடும்,
பொன் தாழ் கணையின் நெடும் புட்டில் புறத்து வீக்கி,
வன் தாள் வயிரச்சிலை வாங்கினன்—வானை வென்றான்.

பொ :—என்று கூறிய இராவணனை—விண்ணுலகை வென்றவ னாகிய இந்திரசித்து வணங்கி, விளக்கமுடைய கூரிய உடைவாளையும் கட்டிக்கொண்டு, ஓராயுதத்தினாலும் பிளக்க இயலாததும் ஊடுருவ முடியாததும் ஆகிய கவசத்தோடு, பொன்னாலியன்றதும் உள்ளாழ்ந் ததுமாகிய நெடிய அம்பறாத்தூணியை முதுகின் புறத்திலே கட்டிக்

கொண்டு, வலிய குதையையுடைய உறுதியான வில்லைக் கையில் ஏந்திக்கொண்டான்.

கு :—உடற்காவல் என்றது, மெய்புகு கவசத்தை; அதன் உறுதி புலப்பட 'ஒன்றுனும் அரு, உருவா உடற்காவல்' என்றுர். இந்திர சித்தின் செல்வச் சிறப்புத் தோன்ற அவன் அம்பருத்தூணி பொன் ஞல் செய்யப்பட்டிருந்தது என்க. பொன், தாழ் புட்டில் என இயை யும். அம்புகள் மிகுதியாகத் தங்குதற்கேற்ற உட்குடைவு உள்ளது ஆகலின் தாழ்புட்டில் எனப்பட்டது. வீக்குதல் - கட்டுதல். விண் ணுலகிற்கு அரசனை வென்றவன் ஆதலின், இந்திரசித்து வானை வென்றுன் எனப்பட்டான். தாள் என்றது, வில்லின் முனையாகிய குதையை. வாங்குதல் இங்கு எடுத்தலை உணர்த்தியது. போர்க்கு ஆயத்தமாக வில்லை வளைத்துக்கொண்டான் என்றலும் ஆம். (15)

## வில்லின் பெருமை

8148. வயிரந் நெடுமால்வரை கொண்டு
மலர்க்கண் வந்தான்
செயிரொன்று முருவகை யிந்திரற்
கென்று செய்த
வுயர்வெஞ் சிலையச்சிலை பண்டவன்
றன்னை யோட்டித்
துயரின் றலைவைத் திவன்கொண்டது
தோற்ற மீதால்.

வயிரந் நெடு மால்வரை கொண்டு, மலர்க்கண் வந்தான்,
செயிர் ஒன்றும் உருவகை, இந்திரற்கு என்று செய்த
உயர் வெஞ்சிலை; அச்சிலை பண்டு அவன் தன்னை ஒட்டி,
துயரின் தலை வைத்து, இவன் கொண்டது; தோற்றம் ஈதால்.

பொ :—இந்திரசித்துக் கைக்கொண்ட அவ்வில்—தாமரைமலரில் தோன்றினவனுகிய பிரமன் வயிரத்தினுலாய நீண்ட பெரிய மலை யைக் கொண்டு குற்றம் ஒன்றும் பொருந்தாதபடி இந்திரனுக்கு என்றே செய்த உயர்ந்த கொடிய வில்லாகும்; முன் காலத்து அந்த இந்திரனைப் போரில் தோற்றோடச் செய்து துன்பத்தின்பால் வைத்து விட்டு இந்த இந்திரசித்துக் கைப்பற்றியதாகும்; (அவ்வில்லின்) வரலாறு இதுவாகும்.

கு:—இந்திரனுக்கு என்றே பிரமன் படைத்துக் கொடுத்த வில்லே. இந்திரசித்து இந்திரனை வென்று சிறைப்படுத்திக் கைப்பற்றிக்கொண்டான். அந்த வில்லையே இப்போது இலக்குவனை எதிர்க்க இந்திரசித்து எடுத்துக்கொண்டான் என்க. மலர்க்கண் வந்தான் என்றது, திருமாலின் உந்திக்கமலத்தில் தோன்றிய பிரமனை. வயிரந் நெடுமால்வரை கொண்டு செய்தது, இந்திரற்கென்று செய்தது என்க. செயிர் - குற்றம்; தீங்கு இந்திரனுக்குத் தீங்கு உருவகையால் வயிரமலைகொண்டு பிரமன் செய்து தந்த வில் என்றவாறு. அச் சிலையின் பெருமையும் கொடுமையும், தோன்ற உயர் வெஞ்சிலை என ஈரடை கொடுத்துக் கூறியவாறு. அவன்தன்னை என்றது, இந்திரனை. துயரின் தலை வைத்து என்றது இந்திரனைச் சிறையில் துயருற வைத்து என்றவாறு. தலை - இடம். தோற்றம் என்றது, வில்லின் வரலாற்றினை. மேலைச் செய்யுளில் 'வண்தாள் வயிரச் சிலை வாங்கினன்' எனக் கூறிய வில்லின் சிறப்பையே இச்செய்யுளில் புலப்படுத்தியவாறு. (16)

அம்பறாத்தூணியின் பெருமை

8149. தோளிற் கணைப்புட்டிலு மிந்திரன்
றோற்ற நாளே
யாளித் திறலன்னவன் கொண்டன
வாழி யேழும்
மாளப் புனல் வற்றினும் வாளி
யறாத வன்கட்
கூளிக் கொடுங்கூற்றினுக் காவதோர்
கூடு போல்வ.

தோளில் கணைப் புட்டிலும், இந்திரன் தோற்ற நாளே
ஆளித் திறல் அன்னவன் கொண்டன; ஆழி ஏழும்
மாளப் புனல் வற்றினும் வாளி அறாத; வன்கண்
கூளிக் கொடுங் கூற்றினுக்கு ஆவது ஓர் கூடு போல்வ.

பொ:—சிங்கத்தின் வலிமை கொண்ட அவ் இந்திரசித்து தன் தோள்களில் கட்டிய அம்பறாப் புட்டில்களும், இந்திரன் தோற்ற அப்போதே அவனிடத்திருந்து கைப்பற்றியன. கடல்கள் ஏழும் அழியுமாறு நீர் வற்றினாலும், அம்புகள் வற்றாதன. தறுகண்மை மிக்க பூதங்களையுடைய கொடிய எமன் தங்குவதற்கு ஏற்ற கூண்டைப் போல்வன.

கு :—உயிர்களைக் கவரும் அம்புகள் தங்கும் புட்டிலை எமன் தங்கும் கூடாகக் கூறியதால் அப் புட்டிலில் உள்ள அம்பு ஒவ்வொன்றும் எமனைப் போன்று அழிவு செய்யுந் திறத்தன என்பது புலப்படுத்திய வாறு. அம்பருத்தூணி வந்த வரலாறும் அதன் பெருமையும் அம்பின் கொடுமையும் இதனுல் புலப்படுத்தியவாறு. ஆணித்திறலன்னவன் தோளில் கணைப்புட்டிலும் என இயையும். புட்டிலும் என்புழி உம்மை இறந்தது தழுவிய எச்சப் பொருளது; வில்லேயன்றிப் புட்டிலும் இந்திரன் தோற்ற நாளே கொண்டன எனப் பொருள்படுதல் காணலாம். கடல்கள் ஏழும் வற்றும் தன்மையன அல்ல வாகலின் 'புனல் வற்றினும்' என எதிர்மறை உம்மை கொடுத்துக் கூறினுர். வாளி - அம்பு. கடல்நீர் வற்றினும் இப் புட்டிலில் அம்புகள் வற்ருமல் - நீங்காமல் நிறைந்திருக்கும் என்றவாறு. வன்கட்கூளி என்றது கூற்றுவனுக்குத் துணையாய் வரும் எமதூதர்களை. (17)

## இந்திரசித்து ஆயுதங்களை ஆய்ந்து கொள்ளுதல்

8150. பல்லாயிர கோடி படைக்கலம்
பண்டு தேவர்
எல்லாரு முனைத்தலை யாவரு
மீந்த மேரு
வில்லாளன் கொடுத்த விரிஞ்ச
னளித்த வெம்மை
அல்லாற் புரியாதன யாவையு
மாய்ந்து கொண்டான்.

பல்லாயிர கோடி படைக்கலம், பண்டு, தேவர்
எல்லாரும் முனைத்தலை யாவரும் ஈந்த, மேரு
வில்லாளன் கொடுத்த, விரிஞ்சன் அளித்த, வெம்மை
அல்லால் புரியாதன, யாவையும் ஆய்ந்து, கொண்டான்.

பொ :—(இந்திரசித்து) முற்காலத்துப் போர்முனையில் தேவர் எல்லாரும் பிறர் யாவரும் (தனக்குத் தோற்று) கொடுத்தனவும், மேருவை வில்லாகக் கொண்ட சிவபிரான் கொடுத்தனவும், பிரமன் கொடுத்தனவும் கொடுமையல்லால் செய்யாதனவுமாய பல்லாயிர கோடி ஆயுதங்கள் யாவையும் ஆராய்ந்து எடுத்துக் கொண்டான்.

கு :—இந்திரசித்து போர்செய்யத் தொடங்கியபோது தேவர்களும் தானவர் முதலிய பிறரும் தோற்றுத் தம் படைக்கலங்களைக் கொடுத்துச் சென்றனர் எனவும், இந்திரசித்தின் தவத்தைக் கண்டு

மகிழ்ந்து சிவபிரானும் பிரமனும் படைக்கலங்களைக் கொடுத்தார்கள் எனவும் கொள்க. இவ்விருதிறப் படைக்கலங்களில் நல்லனவாகப் பல்லாயிர கோடி படைக்கலங்கள் யாவையும் ஆராய்ந்து எடுத்துக் கொண்டான் என்றவாறு. ஈந்த கொடுத்த, அளித்த என்பன, அன்சாரியை பெறாத அகரவீற்று முற்றுகள், வினையாலணையும் பெயராய்ச் செயப்படுபொருளை யுணர்த்தின. ஈயப்பட்டனவற்றையும், கொடுக்கப்பட்டனவற்றையும், அளிக்கப்பட்டனவற்றையும், என விரிக்க. முனைத் தலை பண்டு தேவர் எல்லாரும் யாவரும் ஈந்த, கொடுத்த அளித்த, புரியாதன, ஆய பல்லாயிர கோடி படைக்கலம் யாவையும் ஆய்ந்துகொண்டான் என இயையும். (18)

### இந்திரசித்து ஏறிய தேரின் பெருமை

8151. நூறுயிரம் யாளியி னேன்மை
தெரிந்த சீயத்
தேருமவை யன்னவை யாயிரம்
பூண்ட தென்ப
மாருயொ ரிலங்கை நிகர்ப்பது
வானு ளோரும்
தேருதது மற்றவ னேறிய
தெய்வ மாத்தேர்.

நூறுயிரம் யாளியின் நோன்மை தெரிந்த சீயத்து
ஏரும் அவை அன்னவை ஆயிரம் பூண்டது என்ப;
மாருய் ஓர் இலங்கை நிகர்ப்பது; வானுளோரும்
தேருதது மற்று அவன் ஏறிய தெய்வ மாத்தேர்.

பொ:—அந்த இந்திரசித்து ஏறிய தெய்வத்தன்மை வாய்ந்த தேர் - லட்சம் யாளிகளின் வலிமை பெற்றுள்ளனவும் தமக்குத் தாமே உவமையாகத் தக்கனவும் ஆய ஆயிரம் ஆண்சிங்கங்கள் பூட்டப்பட்டது; இவ்விலங்கைக்கு மாருகச் செய்த ஓர் இலங்கை நகரை ஒப்பது; தேவர்களாலும் (இத்தன்மையது) என அறியப் படாதது.

கு:—'என்ப' அசைநிலை. தெரிதல் இங்கு இலக்கணையால் பெறுதலை யுணர்த்தியது. அவையன்னவை என்றது, தமக்குத் தாமே யுவமையாவன - உவமையில்லாதன என்றவாறு. நோன்மை தெரிந்த அவையன்னவை ஆம் ஆயிரம் சீயத்தேறு பூண்டது என மாறிக் கூட்டுக தேர், பூண்டது, நிகர்ப்பது, தேருதது, என இயையும்.

இலங்கை நகரத்திற்குள்ள பரப்பும் பாதுகாப்பும் அழகும் அமைப்பும் இந்திரசித்தின் தேர்க்கும் இருத்தலின் 'மாருய் ஓர் இலங்கை நிகர்ப்பது' என்ருர். இமையா நாட்டமுடைய வானுளோரும் தேருதது என்பது கருத்தாகலின், 'வானுளோரும்' என்புழி உம்மை உயர்வு சிறப்புப் பொருளது. அத்தேரின் இயல்புகள் முற்றும் இமையவர்களாலும் தெளியப்படாத சிறப்பின என்றவாறு. நோன்மை - வலிமை. ஒவ்வொரு சீயமும் நூருயிரம் யாளிகளின் வலிமை கொண்டவை என அச்சீயங்களின் வலிமை புலப்படுத்திய வாறு. சீயத்தேறு - ஆண் சிங்கம். (19)

### அத்தேரின் விரைவும் வலிமையும்

**8152.** பொன்சென் றறியா வுவணத்தனிப்
புள்ளி னுக்கும்
மின்சென் றறியா மழுவாளன்
விடைக்கு மேனுள்
பின்சென்ற தல்லாலோர் பெருஞ்சிறப்
புற்ற போதும்
முன்சென் றறியாதது மூன்றுல
கத்தி னுள்ளும்.

**பொன் சென்று அறியா உவணத் தனிப் புள்ளினுக்கும், மின் சென்று அறியா மழுவாளன் விடைக்கும், மேல் நாள் பின் சென்றது அல்லால் ஓர் பெருஞ்சிறப்பு உற்ற போதும் முன் சென்று அறியாதது, மூன்று உலகத்தினுள்ளும்.**

பொ :—பொன்வண்ணம் நீங்காத ஒப்பற்ற (திருமாலின் ஊர்தி யாகிய) கருடப் பறவைக்கும், மின்னெளி நீங்காத மழுப்படையுடைய சிவபிரான் ஊர்தியாகிய விடைக்கும் முற்காலத்தில் பின்சென்று துரத்தியதன்றி (அவர்களிருவரும் சேர்ந்துவந்து பெருஞ் சிறப்புற்ற காலத்தும், மூவுலகத்துள்ளும் (எந்த ஊர்தியாலும் துரத்தப்பட்டு) முன்னே சென்று அறியாதது அத்தேர்.

கு :—போரில் இந்திரசித்தின் தேர் பிறர்க்குத் தோற்ருேடியறி யாதது என்று அதன் வெற்றிச் சிறப்பை விளக்கியவாறு. உவணம்- கருடன். அது பொன்னிறம் உடையது ஆதலின், 'பொன் சென்றறியா உவணம்' என்ருர். பொன் என்றது பொன்னிறத்தை. பொன்னிறம் கருடனை விட்டு நீங்காது அதனுடம்பில் பொருந்தியே யிருக்கும் என்றவாறு. உவணத் தனிப்புள் என்றமையால், திருமா

வின் ஊர்தியாகிய கருடப்புள் என்பது புலப்படும். மழுப்படை மின்னும் தன்மை யுடையது என்பார் 'மின் சென்றறியா மழு 'வாள்' என்ருர். மழுவாளன் என்றது சிவபிரானை. 'நீரு நிலனுந்தீயும் வளியு, மாக விசும்போடைந்துட னியற்றிய, மழுவாணெடியோன் தலைவனுக' (மதுரைக் காஞ்சி. 454, 455) எனச் சிவபிரானுக்கு மழுவாள் உண்மை கூறப்படுதல் காணலாம். போரில் முன் செல்லுதலாவது, பிறர்க்குத் தோற்று முன்னேடுவது. இந்திரசித்தின் தேர் இந்த மூவுலகத்துள் எந்தப் போரிலும் தோற்ருேடியதை அறியாதது என்றவாறு (20)

பேய்க் கொடி

8153. ஏயாத் தனிப்போர்வலி காட்டிய
இந்தி ரன்றன்
சாயாப் பெருஞ்சாய்கெடத் தாம்புக
ளாற்ற டந்தோள்
போயார்த்தவன் வந்தனன் வந்தன
னென்று பூசற்
பேயார்த் தெழுந்தாடு நெடுங்கொடி
பெற்ற தம்மா.

'ஏயாத் தனிப் போர் வலி
காட்டிய இந்திரன் தன்
சாயாப் பெருஞ்சாய் கெட,
தாம்புகளால் தடந் தோள்
போய் ஆர்த்தவன் வந்தனன்
வந்தனன், என்று பூசல்
பேய் ஆர்த்து எழுந்து ஆடு
' நெடுங்கொடி பெற்றது அம்மா!

பொ :—'ஒப்பில்லாத சிறந்த போர் வலிமையைக் காட்டிப் போர் செய்த இந்திரனுடைய, யார்க்கும் தோலாத, பெரிய புகழொளி கெடுமாறு போய் அவனுடைய பெரிய தோள்களைத் தாம்புகளால் கட்டிய பெருவீரன் வந்தனன் வந்தனன்' என்று ஆரவாரத்தை யுடைய பேய் இரைத்து எழுந்து ஆடுகின்ற நெடிய கொடியைப் பெற்றுள்ளது (அத்தேர்)

கு:—அம்மா, வியப்பிடைச் சொல். ஏய்தல் - ஒத்தல். சாய் என்றது புகழ் ஒளியை. ஆர்த்தல் - கட்டுதல். தாம்பு - கயிறு. தாம்பு களால் இந்திரன் தடந்தோளை ஆர்த்தவன் என்றது, இந்திரசித்தை. இந்திரசித்தின் தேரில் பேய்க்கொடி கட்டியிருந்தது என்று கூறி வந்தவர், அக் கொடியில் உள்ள பேய் செய்யும் ஆரவாரத்தையும் ஆடலையும் உடன் கூறினர். தேரின் முன்கட்டிய கொடியில் உள்ள பேய், 'இந்திரனை வென்று கட்டிக் கொணர்ந்த பெருவீரன் வந்த னன் வந்தனன்' என்று ஆரவாரித்துக்கொண்டு ஆடுமாம். அவ் வாறு பேய் ஆரவாரத்துக் கொண்டு ஆடும். கொடியை அவன் தேர் பெற்றிருந்தது என்றவாறு. தேர் பெற்றது என்க. மேலைச் செய்யுளி லிருந்து தேர் என்னும் எழுவாய் வருவிக்கப்பெற்றது. கொடியிலுள்ள இப்பேயின் ஆரவாரத்தைக் கேட்டே பகைவர் அஞ்சி ஓடுவர் என்க. (21)

### தேர்ச் சக்கரமும் மொட்டும்

8154. செதுகைப் பெருந்தானவ ரூனெடுந்
தேய்ந்த நேமி
யதுகைத் திசையானையை யோட்டிய
தென்ன லாமே
மதுகைத் தடந்தோள்வலி காட்டிய
வான வேந்தன்
முதுகைத் தழும்பாக்கிய மொய்யொளி
மொட்ட தம்மா.

செதுகைப் பெருந் தானவர் ஊனெடும் தேய்த்த நேமி—
யது; —'கைத்திசை யானையை ஓட்டியது' என்னலாமே?—
மதுகைத் தடந்தோள்வலி காட்டிய வான வேந்தன்
முதுகைத் தழும்பு ஆக்கிய மொய் ஒளி மொட்டது அம்மா!

பொ:—(மேலும் அந்தத் தேர்) பொரும் தன்மையுள்ள பெரிய அசுரர்களை(த் தள்ளி அவர்களுடைய) உடம்போடும் தேய்த்து அழிந்த சக்கரங்களை யுடையது; உரமிக்க பெரிய தோள்வலியைக் காட்டிப் போர்செய்த விண்ணுலக வேந்தனுகிய இந்திரனது முது கைத் தழும்புடையது ஆக்கிய நெருங்கிய ஒளியையுடைய மொட்டு என்னும் உறுப்பினை யுடையது; இவ்வளவு சிறப்பினையுடைய தேர், துதிக்கையையுடைய திக்கு யானையை ஓட்டியது என்று கூறின் அதற்குப் பெருமை யாகுமோ?

கு:—திசை யானைகளை யோட்டிய வீரச் செயலினும் மிக்கவாகத் தானவரைத் தேய்த்த சக்கரத்தையும் வான வேந்தனுக்குத் தழும் புண்டாக்கிய மொட்டினையும் உடையது ஆகலின் தேருக்கு அத்திசை யானையை ஒட்டிய செயல் சிறப்பளிக்காது என்பார், திசையானை யோட்டிய தென்னலாமே? என்றார். செதுகை - பொருதல். இரா வணனால் வெல்லமுடியாதபடி இந்திரன் போர்த்திறங் காட்டியமை புலப்படுத்த. 'மதுகைத் தடந்தோள்வலி காட்டிய வானவேந்தன்' என்றார். இந்திரனை இந்திரசித்து தன் தேர்மொட்டில் கட்டிக் கொண்டு சென்றானாகலின், அவன் முதுகு தழும்பாயிற்று என்க. மொட்டு என்பது தேர்த்தட்டின் முன்பாகத் தாமரை மொட்டின் வடிவாக அமைந்திருக்கும் ஒருறுப்பாகும். இதனைக் கொடுஞ்சி என்றும் கூறுவர். (22)

சேமத்தேர் பின்வர இந்திரசித்து தேரேறிச் செல்லுதல்

8155. அத்தேரினை யேறிய தொப்பன
வாயி ரந்தேர்
ஒத்தேய்வன சேமம தாய்வர
வுள்ளம் வெம்போர்ப்
பித்தேறின னென்ன நடந்தனன்
பின்ப லான்மற்
றெத்தே வரையும் முகங்கண்
டறியாத வீட்டான்.

அத் தேரினை ஏறியது ஒப்பன ஆயிரம் தேர்
ஒத்து ஏய்வன சேமமதாய் வர, 'உள்ளம் வெம்போர்ப்
பித்து ஏறினன்' என்ன நடந்தனன்—பின்பு அலால், மற்று
எத் தேவரையும் முகம் கண்டு அறியாத ஈட்டான்.

பொ:—எல்லாத் தேவரையும் தோற்றோடச்செய்து அவர்கள் பின்புறத்தைக் கண்டதன்றித் தன்னை எதிர்த்து நிற்கும் எத்தேவர் முகத்தையும் கண்டறியாத இந்திரசித்து - அந்தத் தேரினை ஏறிக் கொண்டு அத்தேரை ஒப்பனவாகிய ஆயிரம் தேர்கள் தம்முன் ஒத்தனவாய் நெருங்கிச் சேமத்தேர்களாய்ப் பின்வர, 'மனத்தில் கொடிய போர்வெறி கொண்டான்' என்று கண்டோர் கூறுமாறு போர்க்களத்திற்குச் சென்றான்.

கு:—இந்திரசித்தினைக் கண்டவுடன் தேவர் யாவரும் புறங் காட்டி, ஓடுவதன்றி முகங்காட்டிப் போர் செய்வாரின்மையின் 'எத்

தேவரையும் முகங் கண்டறியாத விட்டான்' என அவனைச் சிறப்பித்தவாறு. ஈடு - வலிமை. ஏறியுள்ள தேர் அழியுமாயின் மீட்டும் ஏறிப் போர்செய்தற்காக உடன்வரும் தேர் சேமத்தேர் எனப்படும். அவ்வாயிரம் சேமத்தேர்களும் முன்னேரிய தேரொடு ஒத்த சிறப்பின வாகவே இருந்தன என்பார், 'அது ஒப்பன ஆயிரம் தேர்' என்றார். தேரேறிப் போர்க்களத்திற்குச் செல்லும் இந்திரசித்தினைக் கண்டவர்கள் 'இவன் வெம்போர்ப்பித்து ஏறினன்' என்று சொல்லும் வண்ணம் அவன் வீரத்தோற்றம் விளங்கிற்று என்க. அத்தேரினையேறி நடந்தனன் என இயையும். (23)

இந்திரசித்துடன் சென்ற சேனையின் அளவு

8156. அன்றொடு போகிய தானை
யறிந்து கூற
என்றலரி தேனு மியம்புவான்
மீக னென்னும்
நன்றான் மறையானது நாற்பது
வெள்ள மென்னச்
சொன்றான் பிறர்யாரஃ துணர்ந்து
தொகுக்க வல்லார்.

அன்றொடு போயின தானை அளந்து கூற
என்றால் அரிதேனும், இயம்பு வான்மீகன் என்னும்
நல் நான்மறையான், 'அது நாற்பது வெள்ளம்' என்னச்
சொன்றான்; பிறர் யார், அஃது உணர்ந்து தொகுக்க வல்லார்?

பொ :—இந்திரசித்துக்கு உதவியாக அவனோடு சென்ற சேனையின் அளவை அறிந்துசொல்ல என்றால் முடியாது ஆயினும் இராம காதையை முன்சொன்ன வான்மீகன் என்னும் நல்ல நான்கு வேதங்களையும் உணர்ந்த முனிவன் 'அச்சேனையின் அளவு நாற்பது வெள்ளம்' என்று சொல்லியுள்ளான்; (அதையே நானும் கூறுகின்றேன்.) அதை உணர்ந்து தொகை கூறத்தக்கவர் வேறு பிறர் யாருளர்?

கு :—இயம்புதற்குச் செயப்படு பொருள் வடமொழி இராமாயணம். முன்னே இந்த இராமாயணத்தைத் தேவபாடையில் சொன்ன வான்மீகி சொன்னதையே யானும் உடன்படுவதன்றி அச்சேனையின் அளவை யுணர்ந்துசொல்ல என்றால் இயலாது எனக் கம்பர் கூறியவாறு. தெய்வ அருளால் முதனூல் செய்த

வான்மீகியன்றி அதையுணர்ந்து தொகை கூறத்தக்கவர் பிறரில்லை என்பார் 'பிறர் யாரஃதுணர்ந்து தொடுக்க வல்லார்' என்ருர். வன்மீகம் - புற்று. புற்றிலிருந்து வெளிப்பட்ட காரணம் பற்றி வான்மீகி எனப் பெயர்பெற்ருன். இவன் முதலில் பிருகுவின் வழிவந்த ருக்ஷருக்கு மகனுய்ப் பிறந்தவன். மணப்பருவம் உற்ற போது வேட்டுவப்பெண்ணை மணந்து மக்களைப் பெற்று வேட்டுவற் குரிய ஆறலை கள்வனுய் வழிப்பறிசெய்து வாழ்ந்து வருங்காலத்து அவ்வழியே வந்த சப்த இருடிகளின் பொருள்களையும் கவர்ந்து ஓரிடத்தில் வைத்தானுக, அம் முனிவர்கள் இப்பொருள்களை இங்கேயே வைத்துப்போய் உன் மனைவி மக்களைக் கண்டு "நான் உங்களைக் காப்பாற்றுதற்காகச் செய்யும் பாவத்தில் உங்களுக்குப் பங்கு உண்டா?" என்று கேட்டுவா; பின்பு இப்பொருளை எடுத்துக் கொண்டு போகலாம்' என்று சொல்ல, இவனும் போய் அவ்வாறே அவர்களைக் கேட்க, அவர்கள் 'ஓகோ இது என்ன வியப்பு! பாவத் தில் பங்கு பெறுவாருண்டோ' என்ன, அதைக் கேட்ட இவன் திடுக்கிட்டுச் சென்று அம் முனிவர்களை அடைக்கலமாக அடைந்து உய்யுநெறி காட்டுமாறு வேண்ட அவ்விருடிகள் ராம என்ற நாமத் தைச் சொல்லமுடியாத அவ்வேடனுக்கு மரா என்ற சொல்லை மீண் டும் மீண்டும் சொல்லித் தவஞ் செய்யுமாறு சொல்ல அவனும் அப்படியே சொல்லிக்கொண்டு தவஞ் செய்யும்போது அவன்மேல் புற்று மூடிக்கொண்டதாகப் பின்னெருகால் பொழிந்த பெருமழை யால் அப்புற்றுச் சிதைய வெளிவந்தமையால் 'வான்மீகி' என்று பெயர் பெறுவாராயினர். வேடனுயினும் தவஞ் செய்து முனிவ ராயினமையின் நன்ஞன்மறையான் எனப்பட்டார். வான்மீகத்தில் இந்திரசித்தோடு நாற்பது வெள்ளம் சேனை சென்றதாகக் குறிப் பிட்ட விடம் கிடைத்திலது (24)

### பல்லிய மார்த்தல்

8157. தூமக்க ணரக்கனுந் தொல்லமர்
யார்க்குந் தோலா
மாபக்கனு மந்நெடுந் தேர்மணி
யாழி காக்கத்
தாமக் குடைமீ துயரப்பெருஞ்
சங்கம் விம்ம
நாமக் கடற்பல்லிய நாற்கடன்
மேலு மார்ப்ப.

தூமக்கண் அரக்கனும், தொல் அமர் யார்க்கும் தோலா
மா பக்கனும், அந்நெடுந் தேர் மணி ஆழி காக்க,
தாமக் குடை மீது உயர பெருஞ் சங்கம விம்ம,
நாமக் கடற் பல் இயம் நாற்கடல் மேலும் ஆர்ப்ப.

பொ :—புகைக் கண்ணன் (தூமிராட்சன்) ஆகிய அரக்கனும் பழைய போர்களில் யார்க்கும் தோல்வியுருத மாபக்கனும் (மகாபாரிசவனும்) (தான் ஏறிய) அந்த பெரிய தேரின் அழகிய சக்கரங்களை அருகிருந்து காப்பாற்றி வரவும், மாலையையுடைய வெண்கொற்றக் குடைமேலே உயர்ந்து தோன்றவும், பெரிய சங்குகள் ஒலி செய்யவும், அச்சம் தரத்தக்க கடல்போல் பரவியுள்ள பலவகையான வாத்தியங்கள் நாலு கடல்களின் ஒலிக்கும் மேற்பட்டு ஆரவாரிக்கவும்,

கு :—சென்றனன் என அடுத்த செய்யுளில் முடியும். தூமக் கண்ணன் இராவணனுக்கு மாமன் முறையினன்; மாபக்கன் தம்பி முறையினன். தூமிராக்ஷன். மகாபாரிசவன் என்ற வடமொழிப் பெயர்களைத் தூமக்கண்ணன், மாபக்கன் எனக் கம்பர் தமிழில் மொழிபெயர்த்துக் கூறியுள்ளார். பகைவர்கள் தேர்சக்கரம் சுழலச் செய்தும் தீமை புரியலாம் ஆதலின், இவ்விருவரும் தேர்மரையாழி காத்து வரலாயினர். வாத்தியங்கள் பரப்புணர்த்த ‘நாமக்கடற் பல்லியம்’ என்ருர். வீரர்களுக்குப் போருணர்ச்சி வீறுகொண்டு எழும் பொருட்டுத் தோற்கருவி துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக் கருவி எனப்படும் பல்வகை வாத்தியங்களை முழக்குதல் வழக்கம். விம்முதல் - ஒலித்தல். நாம் - அச்சம். அது ஈறு திரிந்து நாம என நின்றது. நாற்கடலும் சேர்ந்து ஒலிக்கின்ற ஒலியினும் நால்வகையான வாத்தியங்களின் முழங்கொலி மிக்கது என ஒலி மிகுதியைப் புலப்படுத்தியவாறு. (25)

நால்வகைச் சேனையும் உடன்வர இந்திரசித்துச் செல்லுதல்

8158. தேராயிர மாயிர கோடிதன்
மாடு செல்லப்
போரானை புறத்தி னவற்றி
னிரட்டி போதத்
தாரார் புரவிக்கடல் பின்செலத்
தானை வீரப்
பேராழி முகஞ்செலச் சென்றனன்
பேர்ச்சி யில்லான்.

தேர் ஆயிரம் ஆயிர கோடி தன் மாடு செல்ல,
போர் ஆனை புறத்தின் அவற்றின் இரட்டி போத,
தார் ஆர் புரவிக கடல் பின் செல, தானை வீரப்
பேர் ஆழி முகம் செல, சென்றனன்—பேர்ச்சி இல்லான்.

பொ :—யார்க்கும் பின் பெயராத இந்திரசித்து தன் இரு பக்கத்திலும் ஆயிரங்கோடி ஆயிரங்கோடி தேர்கள் செல்லவும் பின்புறத்தில் நாலாயிரங்கோடி போர் யானைகள் வரவும், கிண்கிணி மாலை யணிந்த குதிரைப் படையாகிய கடல் அவ் யானைப் படைக்குப் பின் வரவும், காலாட்சேனையாகிய வீரப் பெருங்கடல் முன் செலவும் (போர்க்களத்திற்குச்) சென்றான்.

கு :—மாடு - பக்கம். தேரில் செல்கின்ற இந்திரசித்தின் இரு பக்கத்திலும் தேர்ப்படை செல்லுதலே தக்கது ஆகலின் 'தேராயிர மாயிரகோடிதன் மாடு செல்ல' என்றார். ஒரு பக்கத்திற்கு ஆயிரங் கோடி ஆக இரு பக்கத்திற்கும் ஈராயிரங் கோடி என்பார், 'ஆயிரம் ஆயிரங்கோடி தன்மாடு செல்ல' என்றார். இந்திரசித்தின் பின்புறத்தில் நாலாயிரம் யானைப்படையும் அவ் யானைப் படைக்குப் பின் குதிரைப்படையும் சென்றன என்க. தானை வீரப்பேராழி என்றது காலாட்படையை. கடல்போன்ற காலாட்படை என்பார், 'தானை வீரப் பேராழி' என்றார். முகம் என்றது. முன்னிடத்தை. பேர்ச்சி என்றது பகைவர்க்கு அஞ்சிப் பின்னிடுதலை. தேர்ப்படையின் அளவு ஈராயிரங்கோடி, யானைப்படையின் அளவு நாலாயிரங்கோடி என்று குறித்தவர், குதிரைப் படையையும் காலாட்படையையும் அங்ஙனம் எண்ணால் குறிப்பிடாமல் புரவிக்கடல் எனவும், தானை வீரப் பேராழி எனவும், குறிப்பிட்டு அவ்விருவகைப் படைகளின் பரப்பு மிகுதியை உருவகத்தால் புலப்படுத்தியுள்ளார்; அவை எண்ணில் அடங்காமை நினைந்துபோலும். (26)

## இலக்குவன் போரை விரும்பி நிற்றல்

8159. நின்றன னிலக்குவன் களத்தை நீங்கலன்
★ பொன்றின னிராவணன் புதல்வன் போர்க்கினி
அன்றவ னல்லனே லமரர் வேந்தனை
வென்றவன் வருமென விரும்புஞ் சிந்தையான்.

நின்றனன் இலக்குவன், களத்தை நீங்கலன்—
'பொன்றினன் இராவணன் புதல்வன்; போர்க்கு இனி,
அன்றவன், அல்லனேல் அமரர் வேந்தனை
வென்றவன், வரும்' என விரும்பும் சிந்தையான்.

பொ :—'இராவணன் புதல்வனாகிய அதிகாயன் போரில் இறந்து பட்டான், இனி, மாறு கொண்டவனாகிய இராவணன், அல்லனேல் இந்திரசித்து, வருவான்' என்று இலக்குவன் போரை விரும்பும் சிந்தையனாய்ப் போர்க்களத்தை நீங்காமல் நின்றான்.

கு :—இராவணன் புதல்வன் என்றது இங்கு அதிகாயனை' அன்றுதல் - மாறுபடுதல். "ஆர் அறத்தினொடு அன்றி நின்றார்" (ஆரணிய-அகத்தியப்-22) என்புழியும் இச் சொல் இப் பொருளில் ஆளப்பட்டிருத்தல் காணலாம். அன்று அவன் என்பது வினைத் தொகை. இப் போர்க்குக் காரணமாய் மாறுபட்டு நிற்பவன் இராவணனே ஆதலின் அவன் அன்றவன் எனக் கூறப்பட்டான். அமரர் வேந்தனை வென்றவன் என்றது இந்திரசித்து என்றவாறு; அப் பெயர்க்கு அதுவே பொருளாதல் நினைக. இலக்குவன் வரும் என விரும்புஞ் சிந்தையனாய் நீங்கலனாய் நின்றனன் என் முற்றெச்சமாக்கி முடிக்க. சிந்தையான் குறிப்பு முற்றெச்சம். நீங்கலன், எதிர்மறை முற்றெச்சம். இலக்குவனுக்குப் போரில் உள்ள ஆர்வத்தை இதனால் புலப்படுத்தியவாறு. அதிகாயன் இறந்தமையால் அவன் தந்தையோ அண்ணனோ போர்க்கு வருதல் தப்பாது என்று இலக்குவன் அறிந்து வென்றிகொண்ட இடத்திலேயே நின்றுகொண்டிருந்தான் என்றவாறு. (27)

யாரிவன் என்ற இலக்குவனுக்கு வீடணன், இந்திரசித்து எனல்

8160. யாரிவன் வருபவ னியம்பு வாயென
வீரவெந் தொழிலினான் வினவ வீடணன்
ஆரிய விவனிக லமரர் வேந்தனைப்
போர்கடந் தவனின்று வலிது போரென்றான்.

'யார், இவன் வருபவன்? இயம்புவாய்!' என
வீர வெந் தொழிலினான் வினவ வீடணன்,
'ஆரிய! இவன் இகல் அமரர் வேந்தனைப்
போர் கடந்தவன்; இன்று வலிது போர்' என்றான்.

பொ :—(இந்திரசித்து வருவதைக் கண்டு) கொடிய வீரச்செயலை யுடைய இலக்குவன் (வீடணனை நோக்கி) வருகின்ற இவன் யார்? சொல்லுவாயாக! என்று கேட்க, வீடணன், ஐயனே! இவன், வலிமைமிக்க தேவேந்திரனைப் போரில் வென்றவனாகிய இந்திர சித்து; இன்று போர் வலியதாகும் என்றான்.

கு :—இந்திரசித்தினைக் கேட்டறிந்ததன்றிக் கண்டறியான் இலக்குவன் ஆதலின், வீடணனை வினவியறியலானான். ஆரியன் - ஐயன். அமரர் வேந்தனைப் போர்கடந்தவன் என்றது, இந்திர சித்து என்றவாறு. இகல் அமரர்வேந்தனையே போர்வென்றவன் இவன் ஆதலின், இவனோடு கடும்போர் செய்யவேண்டிவரும் என்பான், 'வலிது போர்' என்றான். (28)

## வீடணன் இலக்குவனுக்குச் சில சொல்லுதல்

8161. எண்ணின துணர்த்துவ துளதொன் றெம்பிரான்
கண்ணகன் பெரும்படைத் தலைவர் காத்திட
நண்ணின துணையொடும் பொருத னன்றிது
திண்ணிதி னுணர்தியாற் றெளியுஞ் சிந்தையால்.

'எண்ணினது உணர்த்துவது உளது, ஒன்று—எம்பிரான்!—
கண்ணகன் பெரும் படைத் தலைவர் காத்திட,
நண்ணின துணையொடும் பொருதல் நன்று;—இது
திண்ணிதின் உணர்தியால் தெளியும் சிந்தையால்.

பொ :—(இலக்குவனை நோக்கி வீடணன்) எம்பெருமானே! யான் எண்ணினது ஒன்று. உனக்கு உணர்த்தவேண்டியுளது; இடமகன்ற பெரிய படையையுடைய தலைவர்கள் அருகில் நின்று காவல் செய்ய, நெருங்கிய துணைவரோடும் சென்று இந்திரசித்தோடு போர் செய்தல் நல்லது; தெளிவுமிக்க சிந்தையால் இதை உறுதியாக உணர்வாயாக!

கு :—தன்னினும் மேம்பட்ட தகுதியுடையவன் இலக்குவன் ஆகலின் வீடணன், தன் பணிவுதோன்ற 'உணர்த்துவதுளது' எனவும், 'தெளியுஞ் சிந்தையால் திண்ணிதின் உணர்தியால்' எனவும் கூறுவானாயினன். சிந்தியாமல் சொல்வது அன்று என்பான் 'எண்ணினது' எனவும் பல அன்று என்பான் 'ஒன்று' எனவும், யான் சொல்வதைக் கட்டளையாகக் கருதலாகாது என்பான், 'தெளியுஞ் சிந்தையால் உணர்தியால்' எனவும் கூறினான், 'போர்வீரர் இயல்பைத் தெளிந்தவனாதலின் நீயே இதன் நன்மையை உணரத்தக்கவன்; யான் கூறுவது மிகை' என்பது உட்கோள். நண்ணின துணை என்றது, அன்பால் நெருங்கிய துணைவர் என்றவாறு. இத்தன்மையோர் யார் யார் என்பதை வருஞ் செய்யுளில் விளக்குகின்றான். (29)

### உடன் வரத்தக்க வீரர் இவர் எனல்

8162. மாருதி சாம்பவன் வான ரேந்திரன்
தாரைசேய் நீலனென் றினைய தன்மையார்
வீரர்வந் துடனுற விமல நீநெடும்
போர்செயத் தகுதியாற் புகழின் பூணினாய்.

'மாருதி, சாம்பவன், வான ரேந்திரன்,
தாரை சேய், நீலன், என்று இனைய தன்மையார்,
வீரர், வந்து உடன் உற,—விமல,—நீ நெடும்
போர் செயத் தகுதியால்—புகழின் பூணினாய்.

பொ :—குற்றமற்றவனே! புகழாகிய அணிகலனை யுடையவனே! அனுமன், சாம்பவன், சுக்கிரீவன், அங்கதன், நீலன் என்ற இத் தன்மையுடையவர்களாகிய வீரர்கள் வந்து நின்னுடன் பொருந்த நீ (இந்திரசித்தோடு) பெரிய போரினைச் செய்தல் தக்கது.

கு :—மாருதம் - காற்று. அனுமன் மாருதத்தின் மகனாதலின் மாருதி எனப்பட்டான் ; தத்திதாந்தம். சுக்கிரீவன் வானரர்களுக்கு வேந்தனாகலின் 'வானரேந்திரன்' எனப்பட்டான். வானர இந்திரன் வானரேந்திரன் என வந்தது, வடமொழி குணசந்தியாகும். தாரை சேய் என்றது அங்கதனை. வாலிக்குத் தாரையின்பால் தோன்றிய வன் என்க. இனையதன்மையாராகிய வீரர் என இரு பெயரொட்டுப் பண்புத் தொகையாக்குக. விமலன் - குற்றமற்றவன். நீ குற்றமற்ற வீரனாயினும் போர் செய்யுங்கால் தக்க துணையின்றிப் போர் செய்யலாகாது என்ற கருத்துப் புலப்பட 'விமல !' என்றும், தக்க துணையொடு போர் செய்வதால் நின்புகழ் பெருகுமேயன்றிக் குன்றாது என்பது புலப்படப் 'புகழின் பூணினாய்' என்றும் விளித்தான். மேல் நண்ணின துணை யென்று பொதுவாகையால் கூறியதை இங்கு அனுமன், சாம்பவன், சுக்கிரீவன், அங்கதன், நீலன் என்று விளக்கிய வாறு. நண்ணிய துணைவர் வரிசையில் மாருதிக்கு முதலிடம் கொடுத்ததும் நுண்ணிய அறிவும் திண்ணிய நிலையும் பற்றியாகும். சாம்பவனை அடுத்து எண்ணியது, முதுமைக்கேற்ற மூதறிவும் வலிமையும் பற்றியாகும். வானரர்க்கு அரசன் என்ற தகுதி பற்றி அடுத்துச் சுக்கிரீவனும் அவன் மகன் எனும் தகுதிபெற்ற அங்கத னும், சேனைத் தலைவன் என்ற தகுதிபற்றி நீலனும் வரிசையால் நோக்கிக் கூறப்பட்டிருத்தல் காணலாம். (30)

வீடணன் கூறும் இந்திரசித்தன் வீரச் சிறப்புகள் 8163-8164

8163. பல்பதி னுயிரந் தேவர் பக்கமா
எல்லையில் சேனைகொண் டெதிர்ந்த விந்திரன்
ஒல்லையி னுடைந்தன னுயிர்கொண் டுய்ந்துளான்
மல்லலந் தோளினு யமிழ்தின் வன்மையால்.

'பல் பதினுயிரம் தேவர் பக்கமா,
எல்லை இல் சேனை கொண்டு எதிர்ந்த இந்திரன்
ஒல்லையின் உடைந்தனன், உயிர்கொண்டு உய்ந்துளான்—
மல்லல் அம் தோளினுய் !—அமிழ்தின் வன்மையால்.

பொ :—வளம் பொருந்திய அழகிய தோளினை யுடையாய்! பல்லாயிரக் கணக்கான தேவர்கள் துணையாகவர அளவில்லாத சேனையைக் கொண்டு இவ்விந்திரசித்தை எதிர்ந்த இந்திரன், மிக விரைவில் தோற்றுப்போனுன்; (அன்றே இறந்திருக்க வேண்டிய வன்) தான் உண்ட அமிழ்தின் வலிமையால் இப்போதும் உயிர் கொண்டு வாழ்ந்திருக்கின்ருன்.

கு :—நல்ல துணையுடனிருந்தே இலக்குவன் இந்திரசித்தோடு போர்செய்தல் வேண்டும் என்பதை வற்புறுத்தவே இந் நிகழ்ச்சியை வீடணன் கூறுகின்ருன். தேவர் பல்லாயிரவர் துணை நிற்க எதிர்த்த இந்திரனே இவனுக்குத் தோற்ருன் என்றது இந்திரசித்தின் ஆற்றலை உள்ளவாறு அறிவித்து இலக்குவனை உரமிக்கவனுகச் செய்த படி. "வினைவலியுந் தன் வலியு மாற்ருன் வலியும் துணைவலியுந் தூக்கிச் செயல்" (குறள் - 471) என மாற்ருன் வலியும் ஆராய்ந்தே போர் தொடங்க வேண்டும் என்பதை வற்புறுத்தியுள்ளது நினைக. இந்திரன் அமிழ்தம் உண்ணுதிருந்தால் அன்றே இறந்திருப்பான் என்பான் 'உயிர்கொண் டுயர்ந்துளான் - அமிழ்தின் வன்மையால்' என்ருன். அமிழ்தம் பிணி மூப்புச் சாக்காடுகளை நீக்கவல்லது ஆகலின், இங்ஙனம் கூறினுன். (31)

8164. இனியவை மறையுமோ விந்தி ரன்புயப்
பனிவரை யுளநெடும் பாசப் பஃறமும்
பனுமனைப் பிணித்துள னுன போதவன்
தனுமறை வித்தகந் தடுக்கற் பாலதோ.

'இனி அவை மறையுமோ, இந்திரன் புயப்
பனி வரை உள நெடும் பாசப் பல் தழும்பு?

அனுமனைப் பிணித்துளன் ஆனபோது, இவன்
தனுமறை வித்தகம் தடுக்கற் பாலதோ?'

பொ:—இந்திரனது தோள்களாகிய இமயமலையில் இவன் நீண்ட பாசத்தால் கட்டிய பல தழும்புகள் உளவாயின; இனியும் அவை மறையுமோ? (மறையாது) (அப்பாசத்தால்) அனுமனையும் கட்டியுளான் ஆனல், அவ்விந்திரசித்தின் வில் வேதத்திறமை பிறரால் தடுக்கத் தக்கதோ?

கு:—புயப்பனிவரை என்றது உருவகம். பல் தழும்பு உளவாயின என்க. அத்தழும்புகள் மறையா என்றது, இந்திரசித்தின் வீரப்புகழ் மறையாமை யுணர்த்தியவாறு. அனுமனையும் என்புழி உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. இலங்கை எரியூட்டிய ஆற்றலையுடைய அனுமனையே அப்பாசத்தால் பிணித்தவன் நின்னையும் பிணித்தல் தப்பாது என்பது குறிப்பால் புலப்படுத்தியவாறு. வில் வேதம் என்றது, மற்றைய ஆயுதப் பயிற்சியையும் உணர்த்தியது. தனு - வில். தனுமறை, உபவேதங்கள் நான்கில் ஒன்று. வித்தகம் – திறமை. யாராலும் தடுக்கத்தக்கதன்று என்பான், தடுக்கற்பாலதோ? என்றான். இந்திரசித்திடமுள்ள பாசத்தின் சிறப்பை விண்ணுலகில் இந்திரனைக் கொண்டும் மண்ணுலகில் அனுமனைக் கொண்டும் நிறுவியவாறு. (32)

## அனுமன் இலக்குவனை அடைதல்

8165. என்றவ னிறைஞ்சலு மிளைய வள்ளலும்
நன்றென மொழிதலு நணுகி னனரோ
வன்றிறன் மாருதி யிலங்கைக் கோமகன்
சென்றன னிளவன்மே லென்றுஞ் சிந்தையான்.

என்று, அவன் இறைஞ்சினன்; இளைய வள்ளலும்,
'நன்று' என மொழிதலும், நணுகினன் அரோ—
வன் திறல் மாருதி, 'இலங்கைக் கோமகன்
சென்றனன் இளவல்மேல்' என்னும் சிந்தையான்.

பொ:—என்று கூறி வீடணன் வணங்குதலும் இளைய வள்ளலாகிய இலக்குவனும் (நீ கூறியது) நல்லது என்று சொல்லுதலும், மெய்வலியும் அறிவுத் திறனும் உடைய அனுமன், - இலங்கையரசன் மகனாகிய இந்திரசித்து, இளவலாகிய இலக்குவன்மேல் போர்க்குச் சென்றிருக்கின்றான் என்ற நினைவினனாய் (இலக்குவனை) நெருங்கினன்.

கு :—இந்திரசித்தின் வீரச் செயலை நன்கறிந்த வீடணன் அவனைப் புகழ்ந்து கூறியது, துணையுடன் நின்று விழிப்புடன் தன் திறமை முழுவதுங் காட்டி இலக்குவன் போர்செய்ய வேண்டும் என்ற கருத்தினுல் ஆதலின், அவன் ‘நன்று’ என உடன்பட்டுக் கூறினுன். அவன் கருத்திற்கேற்ப அனுமனும், இந்திரசித்து இளவலோடு போர் செய்யும்போது தான் உடனிருத்தல் இன்றியமையாதது என்னும் கருத்தால் வந்து சேர்ந்தான் என்க. வன்மை உடம்பிற்கும் திறல் அறிவுக்கும் உரிய அனுமனுக்கு இவ்விரண்டும் உண்மை புலப்பட ‘வன்றிறல் மாருதி’ என்ருர். இந்திரசித்தின் போர்த்திறனை நேரில் கண்டவன் அனுமன் ஆதலின், இலக்குவனுக்குத் துணையாக வந்து சேர்ந்தான். (33)

### அனுமன் வருவதற்குக் காரணம்

8166. கூற்றமுங் கட்புலம் புதைப்பக் கோத்தெழு
தோற்றமு மிராவணி துணிவு நோக்குரு
மேற்றிசை வாயிலை விட்டு வெங்கடுங்
காற்றென வணுகினுன் கடிதின் வந்தரோ.

கூற்றமும் கட்புலம் புதைப்ப, கோத்து எழு
தோற்றமும், இராவணி துணிவும், நோக்குரு,
மேல் திசை வாயிலை விட்டு, வெங்கடும்
காற்று என அணுகினுன் கடிதின் வந்து அரோ.

பொ :—எமனும் கண்களை மூடிக்கொள்ளுமாறு (சேனை அச்சுறுத்திக்கொண்டு) தொடர்ந்து எழுந்து செல்லுகின்ற தோற்றத்தையும், இராவணன் மகனுகிய இந்திரசித்தின் துணிவையும் நோக்கி அனுமன் மேலைத் திசையில் உள்ள வாயிற்காவலை விடுத்து வெவ்விய கடிய காற்றுப்போலக் கடிது வந்து அணுகினுன்.

கு :—அச்ச மிகுதியால் கண்களை மூடிக்கொள்ளுதல் இயல்பு. இந்திரசித்தின் சேனைக்கடலின் பரப்பையும் சிறப்பையும் நோக்கிப் பயந்து எமனும் கண்களைக் கைகளால் மூடிக்கொண்டான் என அச்சேனையின் பெருமையைப் புலப்படுத்தியவாறு. இராவணி துணிவாவது இலக்குவனைக் கொன்றன்றி மீளேன் என்பது. நோக்குதல், கண்ணுலும் மனத்தாலும் நோக்குதல். மேற்றிசைவாயிலில் இருந்த அனுமன் அக்காவலை விடுத்து விரைந்து இலக்குவனை அடையக் காரணம் இந்திரசித்து சேனையின் தோற்றமும் அவன் துணிவும் நோக்கியதே என்பது புலப்படுத்தியவாறு. காற்றின் மகனுதல்

தோன்றக் காற்றென வந்து அணுகினன் அனுமன் என்றவாறு. கூற்றமும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு; எல்லா வுயிர்களையும் அஞ்சுவித்து உயிர்வாங்கும் கூற்றுவனும் அஞ்சிக் கண்புதைக்க என்று பொருள் படுதல் காண்க. (34)

## சுக்கிரீவன் சேனையொடு இலக்குவனை அடைதல்

8167. அங்கதன் முன்னரே யாண்டை யானயல்
துங்கவன் றோளினு ரெவருஞ் சுற்றினர்
செங்கதி ரோன்மகன் முன்பு சென்றனன்
சங்கநீர்க் கடலெனத் தழீஇய தானையான்.

அங்கதன் முன்னரே ஆண்டையான்; அயல்
துங்கவன் தோளினர் எவரும் சுற்றினர்;
செங்கதி ரோன் மகன் முன்பு சென்றனன்,
சங்க நீர்க் கடல் எனத் தழீஇய தானையான்.

பொ :—அங்கதன் முன்பே அவ்விடத்திலிருந்தான்; இலக்குவன் பக்கத்திலும் மிக்க வலிமையுள்ள தோள்களையுடைய வானரத் தலைவர் யாவரும் சுற்றி நின்றார்கள்; சுக்கிரீவன், சங்குகள் நிறைந்த நீரையுடைய கடல்போலச் சூழ்ந்த சேனையை யுடையவனாய் இலக்குவனுக்கு முன்பு சென்றான்.

கு :—அயல் – பக்கம். தோளினர் எவரும் அயல் சுற்றினர் என்க. செங்கதிரோன் – சூரியன்; அவன் மகன் என்றது சுக்கிரீவனை. தானையானாய் முன்பு சென்றனன் என இயையும். தானையான் முற்றெச்சம். துங்கவன்றோளினர் என்று குறிப்பிட்டவர்களில் நீலனும் சாம்பனும் போன்றோர் அடங்குவர். துங்கம் - வன்மை. துங்கவன் என்பன, ஒருபொருட் பன்மொழியாய்த் தோளுக்கு அடையாயின. (35)

## இரு சேனைகளும் சினமிக்கு எதிர்தல்

8168. இருதிரைப் பெருங்கட லிரண்டு திக்கினும்
பொருதொழில் வேட்டெழுந் தார்த்துப் பொங்கின
வருவன போன்றன மனத்தி னுற்கினம்
திருகின வெதிரெதிர் செல்லுஞ் சேனையே.

இரு திரைப் பெருங் கடல் இரண்டு திக்கினும்
பொரு தொழில் வேட்டு எழுந்து ஆர்த்துப் பொங்கின
வருவன போல்வன—மனததினுல் சினம்
திருகின எதிர் எதிர் செல்லும் சேனையே.

பொ :—மனத்தில் சினமுதிர்ந்தனவாய் (போர்செய்ய) எதிர் எதிரே செல்லும் சேனையின தோற்றம் – அலைகளையுடைய இரண்டு பெருங் கடல்கள் இரு திசையிலுமிருந்து போர்த்தொழிலை விரும்பி எழுந்து ஆரவாரித்துப் பொங்கி வருவனவற்றைப் போன்றன.

கு :—பரப்பாலும் ஆரவாரத்தாலும் சேனைக்கும் கடற்கும் ஒப்புமை யுண்மை நினைந்து, இருபெருஞ்சேனை சினந்து எழுந்தமைக்கு இல்பொருளுவமையாக, இருபெருங்கடல் பொருதொழில் வேட்டு எழுந்து ஆர்த்து வருவன போன்றன என்றார். மனத்தினுல் என்பதை மனத்தின் கண் என வேற்றுமை மயக்க மாக்குக. திருகுதல் – முறுகுதல் ; முதிர்தல். ‘பருதிகாய் சினந்திருகிய கடுந்திறல் வேனில்’ (பெரும்பாண் - 3) என்புழியும், இச்சொல் இப்பொருளில் வந்திருத்தல் காணலாம். (36)

விண்ணவர் போரைக்காண விரும்பி வருதல்

8169. கண்ணினுன் மனத்தினுற் கருத்தி னுற்றெரிந்
தெண்ணினுற் பெறுபய னெய்து மின்றென
நண்ணின ரிமையவர் நங்கை மாரொடும்
விண்ணின முறைவிடம் வெறுமை கூரவே.

‘கண்ணினுல் மனத்தினுல் கருத்தினுல் தெரிந்து,
எண்ணினுல் பெறு பயன் எய்தும், இன்று’ என,
நண்ணினர் இமையவர் நங்கை மாரொடும்—
விண்ணின் நாடு உறைவிடம் வெறுமை கூரவே.

பொ :—இமையா நாட்டமுடைய தேவர்கள் - நாம் ஆராய்ந்து எண்ணிப்பார்த்தால், நம் கண்ணினுலும், மனத்தினுலும், கருத்தினுலும் பெறுதற்குரிய பயன்கள் எல்லாம் இன்று நமக்குக் கிடைக்கும் என்று கூறிக்கொண்டு, விண்ணுலகமாகிய தம் உறைவிடம் மிக வெறிதாம்படி தம் மனைவிமாரொடும் போர்க்களத்தினை அடைந்தனர்.

கு :—பூமியில் நடக்கும் போர்களை விண்ணவர் வானத்திலிருந்து பார்ப்பார்கள் என்பது கவிமரபு. தேவர் யாவரும் பார்க்க வந்து

விட்டமையால் விண்ணுலகம் வெறுமை மிக்கதாயிற்று. கண்ணினுல் கண்டு மகிழ்தற்குரிய காட்சிகளும், மனத்தினுல் சிந்திப்பதற்குரிய நிகழ்ச்சிகளும், கருத்தினுல் ஆராய்தற்குரிய போர்த்திறங்களும், இலக்குவனும் இந்திரசித்தும் செய்யும் போரில் கிடைக்கும் என்பார். 'கண்ணினுல், மனத்தினுல் கருத்தினுல் பெறுபயன் எய்தும் இன்று' என்ருர். மனம் நினைப்பதற்குரியது; கருத்து ஆராய்தற்கு உரியது என்று வேறுபடக் கொள்க. "வாயானை மனத்தானை மனத்துள் நின்ற கருத்தானை" (திருநாவுக்கரசு-தேவா - 6-19-8) என்புழி மனமும் கருத்தும் வெவ்வேருகக் கூறப்பட்டிருத்தல் காணலாம். இனிக் கண்ணினுல் பெறுபயன் வாயிற்காட்சி எனவும், மனத்தினுல் பெறுபயன் மானதக் காட்சி எனவும், கருத்திஞற் பெறுபயன் தன் வேதனைக் காட்சி எனவும் கொள்ளலும் ஆம். கண்ணினுலும் மனத்தினுலும் கருத்தினுலும் பெறுதற்குரிய பயன் எல்லாம் எய்துவது இன்றுதான் எனக் கூறினர் எனலும் ஆம். இப்பொருட்டு இன்றே என்ற தேற்றேகாரம் தொக்கதாகக் கொள்க. கண்ணிமையாது எல்லாக் காட்சிகளையும் விடாது பார்க்கத்தக்கவர் என்ற கருத்தைப் புலப்படுத்த, தேவர்களை 'இமையவர்' என்ற பெயரால் கூறினுர். விண்ணின் நாடாகிய உறைவிடம் என்க. கூர்தல் - மிகுதல். வெறுமை மிகும்படி என்க. 'இமையவர், பயன் எய்தும் இன்று எனு, விண்ணினுடு வெறுமைகூர, நங்கைமாரொடும் நண்ணினுர்' என இயையும். (37)

## போர் ஆரவாரம்

8170. ஒத்திரு தானையு முடற்ற வுற்றுழி
யத்தனை வீரரு மார்த்த வார்கலி
நத்தொலி முரசொலி நடுக்க லாற்றலை
பொத்தினர் செவிகளைப் புரந்த ராதியர்.

ஒத்து இரு தானையும் உடற்ற உற்றுழி,
அத்தனை வீரரும் ஆர்த்த அவ் ஒலி,
நத்து ஒலி, முரசு ஒலி, நடுக்கலால், தலை,
பொத்தினர் செவிகளைப் புரந்த ராதியர்.

பொ :—அரக்கர் சேனையும் குரங்குச் சேனையும் ஆகிய இருவகைச் சேனைகளும் தம்முள் கலந்து போர் செய்யத் தொடங்கியபோது, அவ்வளவு வீரர்களும் ஆரவாரித்த ஆரவாரமும், சங்கின் ஒலியும், முரசின் முழக்கமும், (சேர்ந்து வந்து) தலையை நடுங்கச் செய்தமை

யால் இந்திரன் முதலிய தேவர்கள் தம் காதுகளைக் கைகளால் மறைத்துக் கொண்டனர்.

கு:—பேரொலி கேட்க முடியாதபோது செவிகளைக் கைகளால் மூடிக்கொள்வது இயல்பு. அவ்வாறு செய்வதால் அப்பேரொலியால் உளதாகும் தீமையைச் சிறிது தடுக்கலாம். வீரர் ஆர்ப்பொலியும் சங்கங்களின் ஊதொலியும் முரசங்களின் முழங்கொலியும் சேர்ந்து பேரொலியாய்ப் பெருகி, விண்ணிடை நின்ற இந்திரன் முதலிய தேவர்களின் தலைகளை நடுங்கச் செய்தமையால், அவர்கள் தம் கைகளால் செவிகளை மூடிக்கொண்டனர் என்க. புரந்தரன்—இந்திரன். உடற்றுதல்-போரிடுதல். (38)

8171. எற்றுமின் பற்றுமி னெறிமி னெய்ம்மினென்
றுற்றன வுற்றன வுரைக்கு மோதையும்
முற்றுறு கடையுகத் திடியின் மும்மடி
பெற்றன பிறந்தன சிலையின் பேரொலி.

'எற்றுமின், பற்றுமின், எறிமின், எய்ம்மின்' என்று,
உற்றன உற்றன உரைக்கும் ஓதையும்,
முற்றுறு கடை யுகத்து இடியின் மும்மடி
பெற்றன; பிறந்தன, சிலையின் பேர் ஒலி.

பொ:—அடியுங்கள், பிடியுங்கள், ஆயுதங்களைப் பகைவர்மேல் எறியுங்கள், அம்புகளை விடுங்கள் என்று அவ்வவர்க்குப் பொருந்தின பொருந்தின சொற்களைச் சொல்கின்ற ஓசையும், உலகம் அழிதற்குரிய பேரூழி இறுதியில் இடிக்கின்ற பேரிடியினைப் போல மூன்று மடங்கு பெருமை பெற்றனவாயின; வில் நாணின் பேரொலிகள் தோன்றின.

கு:—மேற்கூறிய வீரர் ஆர்ப்பும் சங்கொலியும் முரசொலியுமே யன்றி உரைக்கும் ஓதையும் என்று பொருள்படுதலின், ஓதையும் என்புழி உம்மை இறந்தது தழுவிய எச்ச உம்மையாகும். இடியின் என்புழி இன் ஒப்புப்பொருளது; இடியினைக் காட்டிலும் மும்மடி என்று பொருள்கொண்டு உறழ்பொருள் ஆக்கலும் ஆம். மும்மடி—மும்மடங்கு. (39)

8172. கற்பட மரம்படக் கால வேல்பட
விற்படு கணைபட வீழும் வீரர்தம்

எற்படு முடல்பட விரண்டு சேனையும்
பிற்பட நெடுநிலம் பிளந்து பேருமால்.

கல்பட, மரம்பட, கால வேல் பட,
வில்படு கணைபட, வீழும் வீரர்தம்
எல்படும் உடல்பட, இரண்டு சேனையும்
பிற்பட, நெடு நிலம் பிளந்து பேருமால்.

பொ :—(வானரர் எறிகின்ற) கற்கள் படுதலாலும், மரங்கள் படுதலாலும், (அரக்கர்கள் எறிகின்ற) எமனைப்போன்ற கொடுமையுடைய வேல் படுதலாலும், அவர்தம் வில்லில் பொருந்தி வருகின்ற அம்புகள் படுதலாலும், இறந்து வீழ்கின்ற இரு திறத்து வீரர்களுடைய ஒளிமாழ்கிய உடம்புகள் வீழ்தலாலும், இருதிறச் சேனையும் பிற்பட்டு விலகுதலாலும் நெடிதாகிய பூமி பிளவுண்டு நிலைகுலையும்.

கு :—கற்களும் மரங்களும் வானரரால் வீசப்பட்டன; வேலுங் கணையும் அரக்கரால் எறியப்பட்டன என்பது உய்த்துணர்ச்சியால் பெறலாம். வீழும் வீரர்தம் எற்படும் உடல் என்றது, இறந்து வீழ்கின்ற வீரர்களின் உயிரற்ற உடம்புகளை. உயிர் நீங்கிய உடம்பிற்கு ஒளியின்மை இயல்பாதலின் அதனை 'எற்படும் உடல்' என்றார். எல்-ஒளி. படுதல்-குறைதல். இரண்டு சேனையும் ஒன்று சேர்ந்து பொருவதை விடுத்து இருவகையாகிப் பிரிந்து பிற்படுதலால், அவ்விருதிறப்படைக்கும் இடமாக இருந்த நெடுநிலமும் இரு நிலமாய்ப் பிளந்து விலகிற்று என்பது உயர்வு நவிற்சியாகக் கூறியது. இதனால், இருதிறச் சேனையிலும் இறந்தோர் தொகையும் இருந்தோர் தொகையும் மிக்கிருந்தமை புலப்படுத்தியவாறு. நிலம் பிளவுறும் அளவிற்குச் சேனையின் மிகுதியிருந்தது என்க. (40)

## அரக்கர் கவந்தம் ஆடுதல்

8173. எழுத்தொடர் மரங்களா லெற்ற முற்றிய
விழுத்தலை முழுவதுஞ் சிதறி வீழ்ந்தன
வழுத்திய பெருஞ்சினத் தரக்க ராக்கைகள்
கழுத்துள தலையில களத்தி னாடுவ.

எழுத்தொடர் மரங்களால் எற்ற முற்றிய
விழுத்தலை முழுவதும் சிதறி வீழ்ந்தன,
அழுத்திய பெருஞ் சினத்து அரக்கர் ஆக்கைகள்
கழுத்து உள, தலை இல, களத்தின் ஆடுவ.

பொ :—இரும்புத் தூண்போன்ற மரங்களால் (வானரர்) தாக்கிய தால், முதிர்ந்த சிறந்த தலைகள் முழுவதும் சிதறி வீழப் பெற்றன வாகிய—எல்லாப் பண்புகளையும் கீழ் அழுத்தியெழுந்த பெரிய கோபத்தையுடைய அரக்கர்தம் உடம்புகள், கழுத்துகள் மட்டும் உள்ளனவாய்த் தலைகள் இல்லாதனவாய்ப் போர்க்களத்தில் (கவந் தங்களால்) ஆடுவன ஆயின.

கு :—அரக்கர் உடம்புகள் கவந்தங்களாய் ஆடினமை இதனால் புலப்படுத்தியவாறு. எழு-இரும்புத் தூண். தொடர், உவமையுருபு. முதிராத இளைஞர் தலை அன்றென்பார், 'முற்றிய விழுத்தலை' என்றார். எண் சாண் உடம்பில் தலையே சிறப்புடையதாதலின், அது விழுத்தலை எனச் சிறப்பிக்கப்பெற்றது. தலை சிதறி வீழப்பெற்றன வாகிய அரக்கர் ஆக்கைகள் என்க. சினம் தோன்றுங்கால் எல்லாப் பண்புகளையும் கீழடக்கி மேலெழும் அதன் இயல்பு புலப்பட 'அழுத்திய பெருஞ்சினம்' என்றார். இனி, வலித்தல் விகாரம் எனக் கொண்டு நெஞ்சில் அழுந்திய பெரிய சினம் எனப் பொருள் கூறலும் ஆம். அரக்கர் ஆக்கைகள் கழுத்துள்ளனவாய் தலை இல்லன வாதற்குக் காரணம் புலப்படவேண்டி 'விழுத்தலை முழுவதும் சிதறி வீழ்ந்தன' என்பது கூறப்பட்டது. அரக்கராக்கைகள் தலையில வாய்க் களத்தில் ஆடுவன ஆயின என்க. (41)

### குரங்குகளின் உடம்புகளில் குருதி சோர்தல்

8174. வெட்டிய தலையன நரம்பு வீசமேல்
முட்டிய குருதிய குரங்கின் மொய்யுடன்
சுட்டுயர் நெடுவனந் தொலைந்த பின்னெடுங்
கட்டைக ளெரிவன போன்று காட்டுவ.

வெட்டிய தலையன, நரம்பு வீச மேல்
முட்டிய குருதிய, குரங்கின் மொய்யுடல்—
சுட்டு உயர் நெடுவனம் தொலைந்தபின், நெடுங்
கட்டைகள் எரிவன போன்று காட்டுவ.

பொ :—அரக்கர்களால் வெட்டப்பட்ட தலைகளையுடையனவும், அறுபட்ட நரம்புகள் வீசுவதால் மேல்நோக்கிப் பாயும் இரத்தத்தை யுடையனவும், ஆய குரங்குகளின் வலிமை மிக்க உடம்புகள்-உயர்ந்த நெடிய காடு மேற்பகுதி சுடப்பட்டுத் தொலைந்த பின் கீழுள்ள கட்டைகள் எரிவனவற்றைப் போன்று தோன்றுகின்றன.

கு :—தலைகள் அறுபட்டுக் குருதி கொப்புளிக்கும் குரங்குகளின் செந்நிறத் தோற்றம் பெரிய காடு வெந்தொழிந்த பின் அடிக் கட்டைகள் எரிவதைப்போன்று இருந்தன என்றவாறு. குரங்குச் சேனை தலை வெட்டுண்டமை, காடுகளின் மேற்பகுதி வெந்தொழிந் தமை போன்றது எனவும், அறுபட்ட நரம்புகளில் குருதி சோரும் குரங்குடம்புகளின் தோற்றம் அக்காட்டில் அடிக்கட்டைகள் எரி வதைப் போன்றது எனவும் உவமையை விரித்துக் கொள்க. மரங் களின் மேற்பகுதி முன்னெரிந்து அழிதலும். அடிப்பகுதிகள் பெரிய வாதலின் பின்பும் எரிந்து கொண்டிருத்தலும் இயல்பு. தலையற்ற குரங்குடம்புகள் செந்நீர் பெருக்கும் தோற்றமும் காட்டில் அடி மரங்கள் எரியும் தோற்றமும் ஒப்புமை யுடையவாகலின் இங்ஙனம் உவமை கூறினர். வெட்டிய தலையன என்றது, செயப்படு பொருளைச் செய்ததுபோலக் கூறியது. நரம்பு என்றது கழுத்து நரம்புகளை. தலை வெட்டுண்ணவே கழுத்தில் உள்ள நரம்புகள் இரத்தத்தை விரைந்து சொரிந்தன. மேல் முட்டுதலாவது மேலே தாக்குவது போல விரைந்து எழுதல். மொய் வலிமை. சுட்டுத் தொலைந்த பின்னரும் என இயையும். தற்குறிப்பேற்ற உவமையணி. (42)

## குரக்குச் சேனை அரக்கர் சேனையை அழித்தல்

8175. பிடித்தன நிருதரைப் பெரிய தோள்களை
யொடித்தன கால்விசைத் துதைத்த வுந்தின
கடித்தன கழுத்தறக் கைக ளாலெடுத்
தடித்தன வரைத்தன வார்த்த வானரம்.

பிடித்தன நிருதரை, பெரிய தோள்களை
ஒடித்தன, கால் விசைத்து உதைத்த உந்தின,
கடித்தன கழுத்து அற, கைகளால் எடுத்து
அடித்தன, அரைத்தன, ஆர்த்த—வானரம்.

பொ :—வானரங்கள்—அரக்கரைப் பிடித்தன, பிடித்து அவர்தம் பெரிய தோள்களை ஒடித்தன, கால்களை விசையோடு தூக்கி உதைத்துத் தள்ளின, அவர்கள் கழுத்து அறுமாறு கடித்தன, தம் கைகளால் ஓங்கி அடித்தன, (தரையில் தள்ளித்) தேய்த்தன, (அவர் தம் அழிவு கண்டு) ஆரவாரித்தன.

கு :—வானரர் அரக்கரை அழித்த தொழில் தன்மைகளை வரிசைப் படுத்திக் கூறியவாறு. இது தொழில் தன்மையணி.

'உதைத்த உந்தின' என்புழி 'உதைத்த' என்பது முற்றெச்சம். உந்துதல்-தள்ளுதல். அரக்கரை உதைத்துத் தள்ளின என்றவாறு. அரைத்தல்-தேய்த்தல். பிடித்தலும், ஒடித்தலும், உதைத்தலும், உந்துதலும், கடித்தலும், அடித்தலும், அரைத்தலும், ஆர்த்தலும் ஆகிய எண்வகையான தொழில் வேறுபாடுகளை வானரங்கள் நிகழ்த்தின என்றவாறு. (43)

### அரக்கர் குரங்குகளை அழித்தல்

8176. வாள்களிற் கவிக்குல வீரர் வார்கழற்
றாள்களைத் துணித்தனர் தலையைத் தள்ளினர்
தோள்களைப் பிரித்தன ருடலைத் துண்டவன்
போழ்களிற் புரட்டினர் நிருதர் பொங்கினர்.

வாள்களின் கவிக்குல வீரர் வார்கழல்
தாள்களைத் துணித்தனர், தலையைத் தள்ளினர்,
தோள்களைப் பிரித்தனர், உடலைத் துண்டவன்
போழ்களின் புரட்டினர், நிருதர் பொங்கினர்.

பொ :—அரக்கர்கள் கோபித்தவர்களாய்—தம் வாள்களால் வானர வீரரின் நீண்ட கழல் அணிந்த கால்களைத் துணித்தார்கள், தலைகளை வெட்டித் தள்ளினார்கள், தோள்களை வெட்டி வேருக்கினார்கள், (எஞ்சியுள்ள) உடம்புகளை வலிய பனந்துண்டங்களைப் போலத் தரையில் புரட்டினார்கள்.

கு :—தாள்களும் தோள்களும் தலைகளும் அற்ற குரங்குகளின் உடம்புகள் பனைமரத் துண்டங்களைப்போன்று தோன்றுதலின் அவற்றிற்கு 'துண்டவன் போழ்களை' உவமையாக்கினார். போழ்-பனங்குருத்து; இங்குச் சினையாடுபெயராய்ப் பனைமரத்தை உணர்த்தியது. 'மிசையலங்குளைய பனைப்போழ் செரீஇ' (புறநா – 22) என்புழிப் பனையின் தோடாகிய உறுப்புப் போழ் எனப் பெயர் பெற்றிருத்தல் காணலாம். "முழாவரைப் போந்தை யரவாய் மாமடல், நாரும் போழுங் கிணையொடு சுருக்கி" (புறநா–375) என்புழிப்போழ், பனங்குருத்தை யுணர்த்துதல் காண்க. போழ்வன் துண்டங்களில் என மாற்றி, வலிய பனைமரத் துண்டங்களைப்போல எனப் பொருள் கொள்க. நிருதர் பொங்கினராய்த் துணிந்தனர் என முற்றெச்சமாக்கி முடிக்க. துணித்தனர், தள்ளினர், பிரித்தனர் என்பன வெட்டினர் என்ற ஒரே பொருள் குறித்து வந்த பல பெயர்த்திரி சொல். (44)

## குரங்குகள் அரக்கரைக் கொல்லுதல்

8177. மரங்களி லரக்கரை மலைகள் போன்றுயர்
சிரங்களைச் சிதறின வுயிரைச் சிந்தின
கரங்களைக் கழல்களை யொடியக் காதின
குரங்கெனப் பெயர்கொடு திரியுங் கூற்றமே.

மரங்களில், அரக்கரை மலைகள் போன்று உயர்
சிரங்களைச் சிதறின; உடலைச் சிந்தின;
கரங்களை, கழல்களை, ஒடியக் காதின—
குரங்கு எனப் பெயர் கொடு திரியும் கூற்றமே.

பொ :—குரங்கு என்று பெயர் வைத்துக்கொண்டு கொலை செய்து திரியும் எமன்கள்—மரங்களினால் அரக்கருடைய மலைகள் போன்று உயர்ந்த தலைகளைச் சிதறடித்தன ; உயிரைப் போக்கின ; அவர்தம் கைகளையும் கால்களையும் ஒடியுமாறு மோதின.

கு :—வடிவால் குரங்காகத் தோன்றிச் செயலால் எமனைப் போன்று கொல்லுதலால் 'குரங்கெனப் பெயர் கொடு திரியும் கூற்றமே' என்றார். 'வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங்கொல்' (கலி -56) 'வாடையாய்க் கூற்றினாரும் உருவினை மாற்றி வந்தார்' (கம்பர்–கிட். கார்காலப்-60) எனக் கூற்றுக்கு உருமாறித் திரிதல் உண்டு என்பது படப் புலவர்கள் கற்பனை செய்திருத்தல் காணலாம். தன்மை கருதி இங்ஙனம் கூறுதல் மரபு என்பதை 'அரசுருக் கொண்டமைந்த வேதியா' (கும்பகருணன் வதைப்-357) என்று கூறியுள்ளதாலும் அறியலாம். கழல் ஆகுபெயராய்க் காலை உணர்த்தியது. காதுதல் – தாக்குதல் ; கொல்லுதல். மரங்களில் என்புழி இல் ஏதுப் பொருளில் வந்தது. (45)

## சில குரங்குகளின் வீரச் செயல்

8178. சுடர்த்தலை நெடும்பொறி சொரியுங் கண்ணன
அடர்த்தலை நெடுமர மற்ற கையன
உடர்த்தலை வயிரவே லுருவ உய்த்தவர்
மிடற்றினைக் கடித்துடன் விளிந்து போவன.

சுடர்த்தலை நெடும் பொறி சொரியும் கண்ணன,
அடர்த்தலை நெடுமரம் அற்ற கையன,
உடர்த்தலை வயிரவேல் உருவ, உய்த்தவர்
மிடற்றினைக் கடித்து, உடன் விளிந்து போவன.

பொ :—ஒளியைத் தன்னிடத்தே கொண்டுள்ள நீண்ட நெருப்புப் பொறி சொரியும் கண்களையுடையனவும் பகைவரை வருத்துதலைச் செய்யும் நீண்ட மரம் அற்ற (வெறுங்) கைகளையுடையனவுமாகிய வானரங்கள், தம் உடம்பில் வயிரவேல் பாய்ந்து உருவா நிற்கவும், (வருந்தி வீழாது) அவ் வேலினைச் செலுத்திய அரக்கரின் கழுத்தினைக் கடித்து அவ்வரக்கரோடு இறந்துபோவன ஆயின.

கு :—குரங்குகளின் கோபமிகுதியைப் புலப்படுத்த நெடும்பொறி சொரியுங் கண் கூறப்பட்டது. கண்ணின கையன என்ற வினையாலணையும் பெயர்கள், கடித்தற்கும் விளிதற்கும் எழுவாயாக நின்றன. அடர்த்தல் - நெருக்குதல்; வருத்துதல். அடர்த்தலைச் செய்யும் நெடுமரம் என ஒரு சொல் வருவிக்க. சொல்லெச்சம். தம் கையில் தாங்கிய மரங்கள் அரக்கர் படைக்கலங்களால் அற்று வீழ்ந்தமை தோன்ற 'நெடுமரமற்ற கையன' என்றார். நெஞ்சில் சினமிருந்தும் கையில் மரமில்லாது போனமை குறிப்பிட்டு, அஃதில் வழியும் பல்லினையே படையாகக் கொண்டு பகைவர் உயிர்குடித்துத் தாமும் மாண்ட இருவருந்தபு நிலையை விளக்கியவாறு. உடல், உடர் எனப் போலியாய் வந்தது. 'தம் மார்பில் வேல் பாய்ந்த வழியும் வருந்தி வீழாமல் அவ் வேலைச் செலுத்திய அரக்கருடைய மிடற்றைக் கடித்துக் கொன்றபின்னரே மாண்டு வீழ்ந்த வானரரின் வீரச்செயல் வான்புகழ் கொண்டதாதல் காணலாம். இத்தகைய சேனையை ஊறஞ்சா வெல்படை வள்ளுவர் என்பர். உடன் விளிந்து போவன என்றதால், வேலை உய்த்த அரக்கரும் இறந்தமை புலப்படுத்தியவாறு. வயிரவேல் என்றது உறுதியான வேற்படையை. வயிரத்தாலாயவேல் எனலும் ஆம். (46)

## கரடிப்படை அரக்கரின் யானைப்படையை அழித்தல்

8179. அடர்ந்தன கிரிகளை யசனி யேறெனத்
தொடர்ந்தன மழைபொழி தும்பிக் கும்பங்கள்
இடந்தன மூளைக ளினிதி னுண்டன
கடந்தன பசித்தழல் கரடி காதுவ.

அடர்ந்தன கிரிகளை அசனி ஏறு எனத்
தொடர்ந்தன, மழைபொழி தும்பிக் கும்பங்கள்
இடந்தன, மூளைகள் இனிதின் உண்டன,
கடந்தன, பசித்தழல்—கரடி, காதுவ.

பொ :—போர் செய்யவந்த கரடிகள், தொடர்ந்து சென்று, மலைகளை அழிக்கின்ற பேரிடிகளைப் போல மதமழை பொழிகின்ற யானைகளின் மத்தகங்களைப் பிளந்து, அவற்றில் உள்ள மூளைகளை இனிதாக உண்டு பசிதணிந்தன.

கு :—யானைகள் மலைகளைப் போன்றன எனவும், யானைகளைப் பிளக்கும் கரடிகள் மலைகளைத் தகர்க்கும் பேரிடி போன்றன எனவும் கொள்க. அடர்தல் - அழித்தல். அசனிஏறு - பேரிடி. கரடிகள் கூட்டமாகச் செல்லும் இயல்பு புலப்படுத்த 'தொடர்ந்தன' என்றார். தும்பி என்ற குறிப்பால் மழை என்றது. மதமாகிய மழையை என்பது புலப்படும். தும்பி - யானை. கும்பம் - மத்தகம். இடத்தல் - பிளத்தல். பெரிய புற்றுகளை இடந்து அவற்றில் உள்ள புற்றுஞ்சோற்றை உண்ணுதல் கரடிக்கு இயல்பாதலின், இங்குச் சாம்பவன் படையிலுள்ள கரடிகள் யானைகளின் மத்தகங்களை இடந்து அவற்றிலுள்ள புற்றுஞ்சோறு போன்ற மூளைகளை இனிதருந்தின என்க. ''ஈயற்புற்றத் தீர்ம்புறத்திருந்த குறும்பி வல்சிப் பெருங்கையேற்றை, தூங்குதோல் துதிய வள்ளுகிர் கதுவலின்'' (அகநா-8) எனவும், ''நாளுலாவெழுந்த கோள்வல் உளியம், ஓங்குசினை இருப்பைத் தீம்பழம் முனையின், புல்லளைப் புற்றின் பல்கிளைச் சிதலை, ஒருங்குமுயன்றெடுத்த நனைவாய் நெடுங்கோடு இரும்பூது குருகின் இடந்து இரை தேரும்'' (அகநா-81) எனவும் கரடி புற்றினை இடந்து புற்றுஞ்சோற்றைத் தின்னும் இயல்பை எடுத்து விளக்கியிருத்தல் காணலாம், (47)

## வானரப்படை அரக்கர்களின் நால்வகைப் படைமேலும் தாவிச் சென்று அழித்தல்

8180. கொலைமதக் கரியன குதிரை மேலன
வலமணித் தேரன வாளின் மேலன
சிலைகளின் குடுமிய சிரத்தின் மேலன
மலைகளிற் பெரியன குரங்கு வாவுவ.

கொலை மதக் கரியன, குதிரை மேலன,
வல மணித் தேரன, ஆளின் மேலன,
சிலைகளின் குடுமிய, சிரத்தின் மேலன,—
மலைகளின் பெரியன குரங்கு—வாவுவ.

பொ :—வடிவத்தால் மலைகளினும் பெரியவாகிய குரங்குகள்,—கொலை செய்யும் மதயானைகளின் மேலும் பின்பு குதிரைகளின் மேலும், பின்பு வலிமைமிக்க மணிகள் கட்டிய தேரின் மேலும், பின்பு

வீரர் ஏந்திய வாளின்மேலும், அவர்கள் பிடித்துள்ள விற்களின் உச்சி மேலும், காலாளின் தலைகளின் மேலுமாய்த் தாவிச்சென்று அழிப் பனவாயின.

கு:—கரி, பரி, தேர், காலாள் என்ற நால்வகைப் படைமேலும் குரங்குகள் தாவிச் சென்று அவற்றை அழித்தமை இதனால் புலப் படுத்தியவாறு. குரங்குகளின் ஒன்றை விட்டு ஒன்றைப் பற்றும் இயல்பினையே போரிலும் காட்டி, அரக்கரின் யானைகளின் மேல் தாவி அவற்றை அழித்தும், பின்பு குதிரைகளின்மேல் தாவி அவற்றை அழித்தும், பின்பு தேர்களின்மேல் தாவி அவற்றை அழித்தும், பின்பு காலாள்மேல் தாவி அவர்கள் வாளினையும் வில்லையும் தலையையும் அழித்தும் போர் செய்தமை உணர்த்தியவாறு. வாவுவ என்றது, வாவிச் சென்று அழித்ததை. சிலை - வில். கரியன என்றது, கரியின் மேலன என்றவாறு. குரங்கு கரியின் மேலனவும் குதிரைமேலன வும், தேரின் மேலனவும், வாளின் மேலனவும், சிலைகளின் குடுமி மேலனவும் சிரத்தின் மேலனவும் ஆய் வாவுவ என முடிக்க. (48)

குரங்குச் சேனையில் குருதியாறு பெருகி ஓடுதல்

8181. தண்டுகொண்டு அரக்கர் தாக்கத்
★ தகர்ந்துகு தலைக டள்ளித்
துண்டங்க ளாக வாளிற்
றுணித்த பேருடலைத் தூவிக்
கொண்டெழு மலைக ளோடுங்
குரக்கினப் பிணத்தின் குப்பை
மண்டுவெங் குருதி யாறம்
மறிகடன் மடுத்த மாதோ.

தண்டு கொண்டு அரக்கர் தாக்கத்
தகர்ந்து உகு தலைகள் தள்ளி,
துண்டங்களாக வாளில் துணித்த
பேருடலைத் தூவிக்
கொண்டு எழும் அலைகளோடும்
குரக்கினப் பிணத்தின் குப்பை
மண்டு வெங் குருதியாறு அம்
மறிகடல் மடுத்த மாதோ.

பொ:—அரக்கர் தண்டாயுதங் கொண்டு தாக்கியதால் உடைந்து சிந்திய வாணரங்களின் தலைகளை இருபுறத்தும் தள்ளிக்கொண்டும், அவர்கள் வாளினால் துண்டங்கள் ஆகுமாறு துணித்த குரங்குகளின் பெரிய உடலை இருபுறத்தும் தூவிக்கொண்டும் எழுகின்ற அலைக ளோடும், குரங்கினத்துப் பிணக்குவியல் நிறைந்த வெப்பமுடைய இரத்த ஆறுகள் அங்குள்ள அலைகள் மறியும் கடலில் புகுந்தன.

கு:—பிணத்தின் குப்பை மண்டு வெங்குருதியாறு, தலைகளைத் தள்ளிக்கொண்டும் உடலைத் தூவிக்கொண்டும் எழுகின்ற அலைக ளோடும் அம் மறிகடல் மடுத்தன என வினை முடிவு செய்க. ஆறு நிரம்பி ஓடும்போது தன்கண் உள்ள பருப்பொருள்களை இருபுறமும் வீசிக்கொண்டு செல்வது இயல்பு ஆகலின், இந்த இரத்த ஆறும் வானரங்களின் தகர்ந்த தலைகளையும் உடலின் துண்டங்களையும் இரு புறமும் வீசியெறிந்துகொண்டு கடலிடைக் கலந்ததாகக் கூறினார். இதனால் இறந்த வானரங்களின் தொகை மிகுதி புலப்படுத்திய வாறு. (49)

### அனுமனால் அரைப்புண்ட அரக்கர் சேனையின் நிலை

8182\. பனிவென்ற பதாகை யென்றும்
பல்லுளைப் பரிமா வென்றும்
தனுவென்றும் வாளி யென்றுந்
தண்டென்றுந் தனிவே லென்றும்
சினவென்றி மதமா வென்றுந்
தேரென்றுந் தெரிந்த தில்லை
அனுமன்கை வயிரக் குன்று
லரைப்புண்ட அரக்கர் தானை.

பனி வென்ற பதாகை என்றும்,
பல் உளைப் பரிமா என்றும்,
தனு என்றும், வாளி என்றும்,
தண்டு என்றும், தனிவேல் என்றும்,
சின வென்றி மதமா என்றும்,
தேர் என்றும், தெரிந்தது இல்லை—
அனுமன் கை வயிரக் குன்றால்
அரைப் புண்ட அரக்கர் தானை.

பொ :—அனுமனுடைய கையாகிய வயிரக் குன்றத்தினுல் தரையில் வைத்துத் தேய்க்கப்பெற்ற அரக்கர் சேனையில்—வெண்ணிறத்தால் பனியையும் வென்ற பெருங்கொடி என்றும், பலவாகிய பிடரி மயிரினையுடைய குதிரை என்றும், வில் என்றும், அம்பு என்றும், தண்டாயுதம் என்றும், ஒப்பற்ற வேலாயுதம் என்றும், சினத்தையும் வெற்றியையும் மதத்தையும் உடைய யானை என்றும், தேர் என்றும் வேறுபாடு அறிய இயலவில்லை ; (எல்லாம் ஒரே குழம்பாக ஆயது என்றபடி.,

கு :—அனுமன் கையினுல் அரைப்புண்ட அரக்கர்சேனை உருக்குலைந்து ஒரே குழம்பாக மாறிவிட்டமையால், யானை, தேர், குதிரை, வீரர் என்ற நால்வகைப் படையின் வேறுபாடோ வில், அம்பு, தண்டு, வேல், என்ற படைக்கல வேறுபாடோ அறியவியலவில்லை என்றவாறு. பதாகை - பெருங்கொடி. அது வெண்ணிறத்ததாய் வெள்ளிய பனிப்படலம் போல் காணப்படும் இயல்பு எண்ணிப் பனி வென்ற பதாகை' என்ருர். உளை - பிடரிமயிர். காலாளை இனம் பற்றிக் கொள்ளவைத்தார். தனு முதலிய படைக்கலங்களைக் கூறவே அவற்றை யேந்திய காலாள் வீரரும் கூறப்பட்டார் எனக் கொள்ளலும் ஆம். கைவயிரக் குன்று என்றது உருவகம். இனிக் கையில் ஏந்திய வயிரக்குன்று எனலும் ஆம். (50)

## அங்கதனுல் அழிந்த அரக்கர் சேனை

8183. பொங்குதேர் புரவி யானை
பொருகழ னிருத ரென்னும்
கங்கையு மிலாத வண்ணந்
தன்னுளே தழுவிக் கூற்றம்
எங்குள வுயிரென் றெண்ணி
யிணைக்கையாற் கிளைத்த தென்ப
அங்கதன் மரங்கொண் டெற்ற
வளறுபட் டழிந்த தானை.

பொங்கு தேர், புரவி, யானை,
பொரு கழல் நிருதர், என்னும்
சங்கையும் இல்லா வண்ணம்,
தன் உளே தழுவி, கூற்றம்,

'எங்குள, உயிர்?' என்று எண்ணி,
இணைக்கையால் இளைத்தது என்ப—
அங்கதன் மரம் கொண்டு எற்ற,
அளறு பட்டு அழிந்த தானை.

பொ :--அங்கதன் மரத்தைக்கொண்டு தாக்கியதால் சேறுபட்டு அழிந்த - மிகுதியான தேர், குதிரை, யானை, போர் செய்யும் வீரக் கழலை யணிந்த அரக்கர் என்னும் நால்வகைச் சேனையில், எமன் தன் மனத்தில் அச்சம் சிறிதும் இல்லாதபடி வந்து பொருந்தி(த் தான் கவரவேண்டிய) உயிர்கள் எங்கு உள்ளன என்று தேடி இரண்டு கைகளாலும் கிளைத்துப் பார்த்தான் என்பர்.

கு :—எமன் முன்பு அரக்கரைக் கண்டு அஞ்சி ஒதுங்கி நின்றவன் ஆதலின், இப்போது அத்தகைய அச்சம் சிறிதும் இன்றி அரக்கர் உயிர்களைக் கவரப் பிணச்சேற்றில் இரு கையாலும் கிளைத்துத் தேடினன் என அவன் துணிவும், அவன் தேடுமாறு சேனையை உருக் குலைத்த அங்கதன் ஆற்றலும் புலப்படுத்தியவாறு. அங்கதன் எற்ற அழிந்த நிருதரென்னும் தானையில் கூற்றம், தன்னுளே சங்கையும் இலாதவண்ணம் தழுவி எண்ணிக் கிளைத்தது என வினை முடிவு செய்க. சங்கை - அச்சம். கூற்றம் என்ற அஃறிணைச் சொல்லிற் கேற்ப, கிளைத்தது என அஃறிணை முடிபு கொடுத்தவாறு. (51)

## முனிவர் போரைக் கண்டு வியத்தல்

8184. தாக்கிய திசைக டோறுந்
தலைத்தலை மயங்கித் தம்மின்
நூக்கிய களிறுந் தேரும்
புரவியு நூழில் செய்ய
ஆக்கிய செருவை நோக்கி
யமரரோ டசுரர் போரைத்
தூக்கிய முனிவ ரென்னே
யிதற்கது தோற்கு மென்றார்.

தாக்கிய திசைகள் தோறும்
தலைத்தலை மயங்கி, தம்மில்
நூக்கிய களிறும், தேரும்,
புரவியும், நூழில் செய்ய,

ஆக்கிய செருவை நோக்கி,
அமரரோடு அசுரர் போரைத்
தூக்கினர் முனிவர், 'என்னே?
இதற்கு அது தோற்கும்' என்ருர்.

பொ :—எதிர்த்துப் போர் செய்கின்ற எல்லாத் திசைகளிலும் அவ்வவ்விடங்களில் தம்மில் கலந்து எதிர்த்த யானைகளையும் தேர்களையும் குதிரைகளையும் (வானரர்கள்) கொன்று குவிக்க, (இவ்வாறு) செய்த இப்போரைப் பார்த்து, (முன்பு) தேவர்களோடு அசுரர் செய்த போரையும் ஒப்பிட்டு ஆராய்ந்த முனிவர்கள், என்னே வியப்பு! இப்போருக்கு அப்போர் ஈடு ஆகாது; தோற்கும் என்று கூறினர்.

கு :—நூழில் செய்தல் – கொன்று குவித்தல். தேவர்களோடு முனிவர்களும் வானிடத்து நின்று இப்போரைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். இப்போரின் கடுமையை நோக்கின் முன்னே தாம் கண்ட தேவாசுரர் போர் பெரியதன்று என்று வியந்தவர்கள் என்றபடி. இப்போது நடைபெறும் போரைக் கண்ணுற்ற முனிவர்க்கு முன்னைய போர் நினைவிற்குவருதல் இயல்பு ஆதலின், இப்போரோடு அப்போரை ஒப்பிட்டுப் பார்த்து வியக்கலானுர் என்க. அரக்கர்க்கும் வானரர்க்கும் நடக்கும் இப்போர் தேவர்க்கும் அசுரர்க்கும் நடந்த போரினும் சிறப்புடையது என்றவாறு. "தேவாசுர ராமாயண மாபாரத முளவென்ரேவாவுரை யோயும்படி யுளதப் பொருகளமே" (கலிங்கத்துப்பரணி–472) என முன்னடந்த போர்களை ஒப்பிட்டுக் கூறும் மரபுண்மை காண்க. (52)

அரக்கரால் நிலைகெட்ட வானரரை வானர வீரர்
தடுத்துக் காத்தல்

8185. எடுத்தது நிருதர் தானை
யிரிந்தது குரங்கு னீட்டம்
தடுத்தனர் முகங்க டாங்கித்
தனித்தனி தலைவர் தள்ளிப்
படுத்தன ரரக்கர் வேலை
பட்டது படவும் பாரார்
கடுத்தனர் கடுத்த பின்னுங்
காத்தனர் கவியின் வீரர்.

எடுத்தது நிருதர் தானை;
இரிந்தது குரங்கின் ஈட்டம்;
தடுத்தனர் முகங்கள் தாங்கி,
தனித்தனி தலைவர் தள்ளி
படுத்தனர்; அரக்கர் வேலை
பட்டது; படவும் பாரார்
கடுத்தனர்; கடுத்த பின்னும்,
காத்தனர் கவியின் வீரர்.

பொ :—அரக்கர்படை தலையெடுத்து வந்தது; குரங்கின் கூட்டம் பின்னிட்டு ஓடிற்று; (அப்போது) வானரத் தலைவர்கள் முன்னணிப் படையைத் தனித்தனியே தாங்கித் தடுத்தனராய் பகைவரைத் தள்ளிக் கொன்றனர். அரக்கர் கடல் அழிந்தது; அது அழியவும் அதனைப் பொருளாகக் கருதாதவராய் அரக்கர்கள் விரைந்து போர் செய்தனர்; அவ்வாறு போர் செய்த பின்னும் வானர வீரர்கள் அவ் வரக்கர்களைத் தடுத்துக் கொன்றார்கள்.

கு :—தலைவர் முகங்கள் தாங்கித் தனித்தனி தடுத்தனராய்ப் பகைவரைத் தள்ளிப் படுத்தனர் என ஒரு சொல் வருவித்து முடிக்க. இரிந்தோடும் வானரர்களை வானரத் தலைவர்கள் தாங்கித் தடுத்து நிறுத்தியதோடு பகைவரையும் தள்ளிக் கொன்றார்கள் என்க. வானரத் தலைவர்களின் வீரச் செயலால் அரக்கர் சேனையாகிய கடல் பட்டது; அவ்வாறு படவும் அதைப் பொருட்படுத்தாமல் அரக்கர் மீண்டும் விரைந்து போர் செய்தனராகக் கவியின் வீரர் அவ்வரக் கரை மீண்டும் காய்ந்து அழித்தனர் என்றவாறு. பாரார் என்றது, அதைப் பொருட்படுத்தாதவராய் என்னும் பொருளது. கடுத்தல்—விரைந்து போர் செய்தல். முகங்கள் என்றது, முன்னணிப் படையை. ஓடுகின்றபோது முன்னணியில் உள்ளாரைத் தடுத்து நிறுத்தினால் படையிலுள்ளார் அனைவரும் நிற்பர் ஆதலின், தலைவர் முகங்கள் தாங்கித் தடுத்தனர் என்க. காத்தல்—தடுத்தல். (53)

நீலன் போர்த்திறம்

8186. சூலமு மழுவுந் தாங்கித்
தோளிரு நான்குந் தோன்ற
மூலம்வந் துலகை யுண்ணு
முருத்திர மூர்த்தி யென்ன

நீலனின் றுழியே நின்ரு
　　னிரந்தரங் கணங்க ளோடு
காலனென் ஞெருவன் யாண்டும்
　　பிரிந்திலன் பாசக் கையான்.

சூலமும் மழுவுந் தாங்கித்
　　தோள் இரு நான்கும் தோன்ற,
மூலம் வந்து உலகை உண்ணும்
　　உருத்திர மூர்த்தி என்ன,
நீலன் நின்றுழியே நின்ருன்;
　　நிரந்தரம், கணங்க ளோடும்,
காலன் என்று ஒருவன், யாண்டும்
　　பிரிந்திலன், பாசக் கையான்.

பொ :—சூலமும் மழுவும் தாங்கிக்கொண்டு எண்தோளும் தோன்ற வந்து, உலகத்தை அழிக்கின்ற மூலப்பொருளாகிய உருத்திரமூர்த்தியைப் போல, நீலன் என்னும் வானரத் தலைவன், போர் செய்து கொண்டு நின்றவிடத்திலே நின்ருனக, எமன் என்கின்ற ஒருவன் பாசம் பற்றிய கையோடு தன் தூதுவர்களோடும் எப்போதும் எவ்விடத்தும் நீங்காமல் சென்று நின்று உயிர்களைக் கவர்ந்தான்.

கு :—சிவன், ஊழியிறுதியில் உருத்திரனய் உலகை அழிக்கும் போது சூலப்படையும் மழுப்படையும் கைக்கொண்டு எட்டுத் தோள்களையுடையனய் நின்று நின்ருங்கே உலகு அனைத்தையும் அழிப்பதுபோல, நீலன் என்பவனும் நின்றவிடத்தே நின்று அரக்கர் சேனையைக் கொன்று குவித்தானக; அரக்கர்கள் இறந்துபடும் எவ்விடத்தும் பிரியாமல் எமன் தன் தூதுவரொடும் சென்று உயிர்களைக் கவர்ந்தான் என்றவாறு. நீலன் நின்று கொன்ற உயிர்களைக் காலன் பலருடன் சென்று கொன்று கவரவேண்டியவனுனன் என்று காலனைக் காட்டிலும் நீலனுக்குள்ள சிறப்பை நிலைநாட்டியவாறு. இவன் சிறப்பை முன்னும், "நீலன் நின்றவ னெருப்பின் மகன் திண், சூலமுங் கயிறு மின்மை துணிந்தும், ஆலமென்னு நிறமின்மை யறிந்தும், காலன் என்பர் இவனைக் கருதாதார்" (இராவணன் வானரத்தானை காண்படலம்–26) எனப் புலப்படுத்தியுள்ளமை நினையலாம். மூலமாகிய உருத்திரமூர்த்தி என இயையும். அழித்தலில் நீலன் உருத்திரமூர்த்தி போன்றவன் என்றவாறு. மேல் 'காய்ந்தனர் கவியின்வீரர்' என்ருரன்றே, அவர் தம்முள் சிலரைப் பெயர்கூறிச் சிறப்பிப்பாராய் இச் செய்யுளில் நீலனைப் பற்றிக் கூறினர். (54)

## குமுதன் போர்த்திறன்

8187. காற்றலன் புனலோ வல்லன்
கனவல்ல னிரண்டு கையால்
ஆற்றல னுற்று கின்ற
வருஞ்சம மிதுவே யாகின்
ஏற்றமென் பலவுஞ் சொல்லி
யென்பத மிழந்தே னென்னுக்
கூற்றமுங் குலுங்கி யஞ்ச
வெங்கதக் குமுதன் கொன்றான்.

"காற்று அலன்; புனலோ அல்லன்;
கனல் அல்லன்; இரண்டு கையால்,
ஆற்றலன், ஆற்று கின்ற
அருஞ் சமம் இதுவே ஆகில்,
ஏற்றம் என் பலவும் சொல்லி?
என்பதம் இழந்தேன்" என்னுக்
கூற்றமும் குலுங்கி அஞ்ச,
வெங்கதக் குமுதன் கொன்றான்.

பொ :—"இவன் ஊழியிறுதியில் வீசி அழிக்கும் காற்ரே எனின் அல்லன்; ஊழியிறுதியில் பொங்கியெழுந்து உலகை யழிக்கும் பிரளய வெள்ளமோ எனின், அவ்வெள்ளமும் அல்லன்; ஊழிக்காலத்து மிக்கெழுந்து உலகையழிக்கும் வடவைக் கனலோ எனின், அக் கனலும் அல்லன்; இரண்டு கைகளினுல் ஆற்றல் மிக்குடையவனுய்ச் செய்கின்ற அரிய போர் இதுவே ஆனுல், பல சொல்லிப் பயனென்னே? என்னுடைய எமபதவியையே இழந்தேன் ஆவேன்" என்று எமனும் உடல் நடுங்கி அஞ்சுமாறு கொடிய கோபத்தை யுடைய குமுதன் என்ற வானரத் தலைவன் அரக்கர் படையைக் கொன்று குவித்தான்.

கு :—குமுதன் அரக்கரை அழிக்கும் திறத்தைக் காண்போர், இவன் ஊழிக்காற்ரே? அல்லது, ஊழி வெள்ளமோ? அல்லது ஊழித்தீயோ? என்று ஐயுறுமாறு அம் மூன்று பூதங்கள் செய்யும் அழிவைக் குமுதன் ஒருவனே இரண்டே கைகளைக்கொண்டு செய்கின்ற வியத்தகு செயலை எமனே கண்டு வியந்து இங்ஙனம் கூற லானுன் என்க. எமனைவிடக் குமுதன் மிகுதியாகக் கொல்கின்றான் ஆதலின், எமன் தன் பதவியை இழந்ததாகக் கூறினன். குமுதனே எம்பதவியை யேற்கத்தக்கவன் என்றபடி. 'இழப்பேன்' என எதிர்

காலத்தால் கூறவேண்டியதைத் துணிவு பற்றி, இழத்தேன் என இறந்த காலத்தாற் கூறியவாறு. ஆற்றலனுற்றுகின்ற - அற்றலுடையவனுய்ச் செய்கின்ற. ஆற்றுதல் செய்தல். (55)

## இடபன் போர்த்திறம்

8188. மறிகடல் புடைசூழ் வைப்பின்
மானவன் வாளி போன
செறிபணை மரமே நின்ற
மரங்களிற் றெரியச் செப்பும்
குறியுடை மலைக டம்மிற்
குலவரைக் குலமே கொள்ளா
எறிதலோ டறைதல் வேட்ட
விடவனன் றிடந்தி லாத.

மறிகடல் புடைசூழ் வைப்பின்
மானவன் வாளி போன
செறிபணை மரமே நின்ற,
மரங்களில்; தெரியச் செப்பும்
குறியுடை மலைகள் தம்மில்
குலவரைக் குலமே—கொள்ளா,
எறிதலோடு அறைதல் வேட்ட,
இடவன் அன்று இடந்திலாத.

பொ :—அரக்கர்மேல் வீசி எறிதற்கும் கையில்கொண்டு அவர்களைத் தாக்குதற்கும் விரும்பிய இடபன் என்னும் வானரத் தலைவன், அன்று வேரோடு பிடுங்கி எடுக்காதன,—அலைகள் மறித்து வீசும் கடல் பக்கத்தில் சூழப்பெற்றுள்ள இந்நிலவுலகத்தில் நின்ற மரங்களில், மனுகுலத்தவனுகிய இராமனது அம்பு ஊடுருவிப்போன, நெருங்கிய கிளையுடைய மராமரங்களே ஆம்; அவனுல் பெயர்க்கப் படாதன, தெளிவாக எல்லோரும் சொல்கின்ற பெயரையுடைய மலைகளில் எட்டுத் திசையிலுள்ள குலமலைகளின் கூட்டமே யாம்.

கு :—மராமரமல்லாத மரங்கள் எல்லாவற்றையும், எட்டுக் குலவரை யல்லாத மலைகள் எல்லாவற்றையும் இடபன் இடந்து அரக்கர் மேல் எறிந்தும் அறைந்தும் போர் செய்தான் என்றவாறு. மானவன் என்றது இராமனை. வாளிபோன மரம் என்றது, ஏழு மராமரங்களை. இராமன் துளைத்த மரம் என்ற நன் மதிப்பினல் மராமரங்களையும்

தனக்கு ஆதாரமாக உள்ள பூமியைத் தாங்கி நிற்கின்றமையால் குலவரைகளையும் இடபன் எடுக்காமல் விடுத்தான் என்றபடி. வைப்பு-நிலம். வைப்பின் நின்ற மரங்களில் என்க. தெரியச் செப்பும் குறியுடை மலைகள் என்றது, எல்லாராலும் அறியப்பட்ட பேர்போன மலைகளை. இடவன் அன்று இடந்திலாதன வாளிபோன மரமே, கொள்ளாதன குலவரைக் குலமே என இயையும். "நலங்கிளர் பூமி யென்னும் நங்கையை நறுந்துழாயின், அலங்கலான் புணருஞ் செல் வங் காணவந் தடைந்திலாதார், இலங்கையி னிருதரே இவ்வேழுல கத்து வாழும், விலங்கலும் ஆசை நின்ற விடாமத விலங்கலேயால்" (அயோத்தி-கைகேசி சூழ்வினைப்-71) என்ற பாடல் போன்ற அமைப் புடையது இப்பாடல். உயர்வு நவிற்சியணி. (56)

சாம்பவன் போர்த்திறம்

8189. வாம்பரி மதமா மான்றேர்
வாளெயிற் றரக்கர் மாயப்
பாம்பினும் வெய்யோர் சாலப்
படுகுவர் பயமின் றின்றே
தூம்புறழ் குருதி மண்டத்
தொடர்நெடு மரங்கள் சுற்றிச்
சாம்பவன் கொல்லச் சாம்பு
மென்றுகொண் டமர ரார்த்தார்.

'வாம்பரி, மதமா, மான் தேர்,
வாள் எயிற்று அரக்கர், மாயப்
பாம்பினும் வெய்யோர், சாலப்
படுகுவர்; பயம் இன்று இன்றே—
தூம்பு உறழ் குருதி மண்ட,
தொடர் நெடு மரங்கள் சுற்றிச்
சாம்பவன் கொல்ல,—சாம்பும்—
என்று கொண்டு அமரர் ஆர்த்தார்.

பொ :—"சாம்பவன், கிளைகளோடு தொடர்பு கொண்டுள்ள நீண்ட மரங்களைச் சுழற்றித் தாக்கிக் கொல்லுதலால்,—தாவிச் செல்லும் குதிரைப் படையையும், மதமிக்க யானைப் படையையும், குதிரைகள் பூட்டிய தேர்ப் படையையும் கூரிய கோரைப் பற்களை யுடைய அரக்கராகிய காலாட் படையையும் உடைய, வஞ்சகமிக்க, பாம்பைக் காட்டிலும் கொடியோராகிய அரக்கர் தலைவர்கள் (தம்

முடம்பில்) தூம்பில் வீழும் நீர்போல இரத்தம் பெருக, அதிகமாக இறந்துபடுவார்கள்; (நமது) பயம் இன்றைக்கு இப்போதே அழியும்'' என்று உரையாடிக்கொண்டு தேவர்கள் ஆரவாரித்தார்கள்.

கு:—தேவர்கள் கூற்றில் வைத்துச் சாம்பவன் போர்த்திறத்தை விளக்கியவாறு. இதுகாறும் அரக்கர்க்கு அஞ்சியிருந்த தேவர்கள், சாம்பவனது போர்த்திறங் கண்டு தங்கள் பயம் இப்போதே நீங்கும் என்று மகிழ்ந்து ஆரவாரித்தார்கள் என்றவாறு. வாம்பரி மதமா மான்றேர் வாளெயிற் றரக்கர் என்ற நால்வகைப் படைகளையுடைய வெய்யோர் என்க. செவ்வெண்ணின் தொகை தொக்கு நின்ற தாகக் கொள்க. அரக்கர் என்றது காலாட்படையை. நால்வகைப் படையுள் மூவகைப் படையையும் முறையுறக் கூறியதால், நான்காவ தாக எண்ணப்பட்டவர் காலாட்படையினரே என்பது தெளிவாம். வெய்யோர் என்றது அரக்கர் தலைவர்களை. மாயத்தையுடைய வெய் யோர், பாம்பினும் வெய்யோர் என இயையும். பாம்பு தன்னைத் துன்புறுத்தியவரை யன்றிக் கொல்லாது; அரக்கர், தமக்கு இனிய செய்தாரையும் கொல்லும் கொடியராதலின் 'பாம்பினும் வெய்யோர்' என்றார். இனி, பாம்பு மந்திரத்திற்குக் கட்டுப்பட்டு நிற்கும்; அரக்கர் அதற்கும் கட்டுப்படார் ஆதலின், அங்ஙனம் கூறினர் எனலும் ஆம். பயம் இன்று இன்றே காம்பும் என இயையும் இன்றே என்றது இப் போதே என்னும் பொருளது. சாம்பன் மரங்கள் சுற்றிக் கொல்ல வெய்யோர் குருதி மண்ட சாலப்படுகுவர் என இயையும். தூம்பு—நீர்விழும் மதகுவாயில். மதகுவாயில் நீர் வீழ்தல்போல அரக்கர் உடம்பில் குருதி மண்டப்படுகுவர் என்க. (57)

பனசன் படைக்கடலைக் கலக்குதல்

8190. பொருங்குலப் புரவி யான
திரைகளுங் கலம்பொற் றேரும்
இருங்களி யானை யான
மகரமு மிரியல் போக
நெருங்கிய படைக ளான
மீன்குல நெரிந்து சிந்தக்
கருங்கடல் கலக்கு மத்திற்
பனசனுங் கலக்கிப் புக்கான்.

பொருங் குலப் புரவி ஆன
    திரைகளும், கலம் பொன் தேரும்,
இருங்களி யானை ஆன
    மகரமும், இரியல் போக,
நெருங்கிய படைக ளான
    மீன் குலம் நெரிந்து சிந்த,
கருங்கடல் கலக்கும் மத்தின்
    பனசனும் கலக்கிப் புக்கான்.

பொ :—போர் செய்கின்ற சிறந்த குதிரைகளாகிய அலைகளும், பொன்மயமான தேர்களாகிய மரக்கலங்களும் பெரிய மதக்களிப்பை யுடைய யானைகளாகிய மகரமீன்களும் பின்னிட்டு ஓடவும், நெருங்கிய காலாட்படையினரான மீன் கூட்டங்கள் நெரிப்புண்டு சிதறவும், பனசன் என்ற வானரத் தலைவன் பெரிய கடலைக் கலக்கிக்கடைந்த மந்தரமலையாகிய மத்தைப்போல (அரக்கர் சேனையாகிய கருங் கடலைக்) கலக்கிக்கொண்டு புகுந்தான்.

கு :—அரக்கர் சேனையைக் கருங்கடலாக உருவகஞ் செய்ய வேண்டி அச்சேனையிலுள்ள நால்வகைப் படைகளையும் குதிரைச் சேனையை அலைகளாகவும், தேர்ப்படையை மரக்கலங்களாகவும், யானைப்படையை மகரமீன்களாகவும், காலாள் வீரரை மீன்களாகவும் உருவகஞ் செய்தவாறு. இது இயைபு உருவகம். கருங்கடல் என்பது, பெரிய கடல் எனவும், கரிய அரக்கராகிய கடல் எனவும் இருபொருள் பட்டது இரட்டுறமொழிதல்தாவிச் செல்லும் தன்மை பற்றிக் குதிரையை அலைகளாக உருவகஞ் செய்தல் மரபு. "வளைமுக நுரையுக வருபரி கடலிடை மறிதிரையென வெழவே" கலிங்கத்துப் பரணி - 396) என வளைமுக முடைமையும் நுரை தள்ளுதலும் தாவி வருதலும் ஆகிய தன்மைகள்பற்றி அவ்விரண்டினையும் உவமித் திருத்தல் காணலாம். கடலிடை மரக்கலங்கள் போலச் சேனைக் கடலில் தேர்கள் உயர்ந்து நகர்ந்து ஓடுதலின் அவற்றை மரக்கலங்க ளாக உருவகஞ் செய்தல் மரபு. பொற்றேரான கலங்களும் என மாறிக் கூட்டுக. "இரதமும் மறிகடல் மிசைவிடு கலமெனவே" (கலிங்கத் - 399) எனக் கூறப்படுதல் காணலாம். யானைகளும் மகர மீன்களும் துதிக்கை யுடைமையாலும் உருவப் பருமையாலும் வலிமையாலும் ஒப்புமை யுடையனவாதலின், யானைகளை மகரமீன்க ளாக உருவகஞ் செய்தார். "புழையுடைத் தடக்கை யொன்றோ டொன்றிடை பொருந்தச் சுற்றி..............மழையெனப் பொருத வேலை மகரமும் மத்தமாவும்" (சேதுபந்தனப் – 21) என இவை ஒத்த வன்மையுடன் பொருதமை கூறப்பட்டிருத்தல் நினைக. நெருங் கிய படைகள் என்றது காலாள் வீரரை. இவர்கள் நீரைப் பிளந்து

கொண்டு திரியும் மீன்களைப் போலப் படையைப் பிளந்துகொண்டு திரியும் தன்மை நினைந்து மீன்களாக உருவகஞ் செய்தார். "இசைபெற வுயிரையும் இகழ்தரும் இளையவர் எறி சுறவின மெனவே" (கலிங்கத்-399) எனக் காலாள் வீரரைச் சுறாமீன் களோடு ஒப்பிட்டுக் கூறியிருத்தல் காண்க. பனசன் என்ற வானர வீரன் இந்த நால்வகைப் படையினையும் கலக்கிக்கொண்டு புகுந்தான் என அவன் திறமை புலப்படுத்தியவாறு. (58)

## மயிந்தன் முதலிய வானரவீரரின் போர்

8191. மயிந்தனுந் துமிந்தன் றானு
மழைக்குலங் கிழித்து வானத்
துயர்ந்தெழு மெருவை வேந்த
ருடன்பிறந் தவரை யொத்தார்
கயங்குடைந் தாடும் வீரக்
களிறொத்தான் கவயன் காலிற்
பெயர்ந்தில னுற்ற தல்லாற்
கேசரி பெரும்போர் பெற்றான்.

மயிந்தனும் துமிந்தன் தானும்,
மழைக்குலம் கிழித்து, வானத்து
உயர்ந்து எழும் எருவை வேந்தர்
உடன் பிறந்தவரை ஒத்தார்;
கயம் குடைந்து ஆடும் வீரக்
களிறு ஒத்தான், கவயன்; காலின்
பெயர்ந்திலன், உற்றது அல்லால்,
கேசரி பெரும் போர் பெற்றான்.

பொ :—மயிந்தனும் அவன் இளவலாகிய துமிந்தனும், மேகக் கூட்டங்களைக் கிழித்துக்கொண்டு விண்ணில் உயர்ந்து எழுந்த (சடாயு, சம்பாதி என்கின்ற) உடன் பிறந்தவராகிய கழுகு அரசரை ஒத்தார்கள்; கவயன் என்ற வானரவீரன் பெரிய நீர்நிலையில் குடைந்து ஆடுகின்ற வீரமுடைய ஆண் யானையைப் போன்று போர் செய்தான்; கேசரி என்னும் வானரவீரன் ஓரிடத்தில் நின்றதல்லால் காலில் இடம் பெயராதவனாய்ப் பெரிய போரைப் பெற்றான்.

கு :—அரக்கர்களின் யானைச் சேனையைக் கிழித்துக்கொண்டு போர் செய்த உடன்பிறந்த மயிந்த துமிந்தர்கட்கு, மேகங்களைக் கிழித்துக்கொண்டு எழுந்த சம்பாதி ஜடாயு உவமையாயினர்.

எருவை - கழுகு. அரக்கர் சேனையாகிய கடலில் தன் வீரங்காட்டிப் போராடிய கயவனுக்குக் கயங்குடைந்தாடும் களிறு உவமையாயது. கேசரி என்பவன் அநுமனுக்குத் தந்தை முறையினன். அவன் நின்ற இடத்தில் நின்றே பெரிய போர் செய்தமை புலப்படுத்த. 'காலில் பெயர்ந்திலன் உற்றதல்லால்' என்றார். இதுகாறும் கிடைக் கப்பெறாத பெரிய போரைச் செய்ய வாய்த்ததை கேசரி பெரும் பேறாகக் கருதினமை புலப்படப் பெரும்போர் செய்தான் என்னாது பெரும்போர் பெற்றான் என்றார். (59)

### அரக்கர் சரிய இந்திரசித்துப் போர் செய்யத் தொடங்குதல்

8192. பெரும்படைத் தலைவர் யாரும்
பெயர்ந்திலர் பிணத்தின் குப்பை
வரம்பில பரம்பி யார்த்து
மலைகின்ற பொழுதின் வந்துற்
றிரிந்தன கவியுங் கூடி
யெடுத்தன வெடுத்த லோடும்
சரிந்தது நிருதர் தானை
தாக்கின னரக்கன் றானே.

பெரும் படைத் தலைவர் யாரும்
பெயர்ந்திலர், பிணத்தின் குப்பை
வரம்பு இல பரப்பி ஆர்த்து
மலைகின்ற பொழுதின் வந்துற்று,
இரிந்தன கவியும் கூடி
எடுத்தன; எடுத்த லோடும்,
சரிந்தது நிருதர் தானை;
தாக்கினன் அரக்கன், தானே.

பொ :—வானரரில் பெரிய படைத்தலைவர்கள் யாவரும் இடம் விட்டுப் பெயராதவர்களாய் அரக்கர்களின் பிணக்குவியலை அளவி லாதபடி பரப்பி ஆரவாரித்துப் போர்செய்கின்றபோது,முன் பின்னிட் டோடிய வானரங்களும் வந்து கூடிப் போரை மேற்கொண்டன; அவ்வாறு அவை மேற்கொள்ளுதலும் அரக்கர் சேனை தளர்ந்து சரிந்தது ; இந்திரசித்து ஒருவனே வானரங்களைத் தாக்கினான்.

கு :—வானரத் தலைவர் யாரும் இளைத்துப் பெயராமல் போர் செய்வது கண்டு, முன் இளைத்துப் பின்னிட்ட வானரங்களும் வந்து

கூடிப் போர்செய்தமையால் அரக்கர் சேனை சரிந்து ஓடியது; அந்நிலையில் இந்திரசித்துத் தானே போர் செய்யத் தொடங்கினான் என்றவாறு. பெயர்ந்திலராய்ப் பரம்பி ஆர்த்து என முற்றெச்சமாக்கி முடிக்க. பரம்புதல் - பரப்புதல். மலைதல் – போர்செய்தல். எடுத்தல் போரை மேற்கொண்டு செய்தல். அரக்கன் என்றது இங்கு இந்திரசித்தினை. (60)

## இந்திரசித்து நாண் தெறித்தல்

8193. பூணெ றிந்தகுவ டனைய தோள்களிரு
புடைப ரந்துயர வடல்வலித்
தூணெ றிந்தனைய விரல்கள் கோதையொடு
சுவடெ றிந்ததொரு தொழில்படச்
சேணெ றிந்துநிமிர் திசைக ளோடுமலை
செவிடெ றிந்துடைய மிடல்வலோன்
நாணெ றிந்துமுறை முறைதொ டர்ந்துகட
லுலகம் யாவையு நடுக்கினான்.

பூண் எறிந்த குவடு அனைய தோள்கள்
இருபுடை பரந்து உயர அடல்வலித்
தூண் எறிந்தனைய விரல்கள் கோதையொடு
ஒரு தொழில்பட சுவடு எறிந்தது
சேண் எறிந்துநிமிர் திசைகளோடுமலை செவிடு
எறிந்து உடைய — மிடல்வலோன்
நாண் எறிந்து, முறைமுறை தொடர்ந்து
கடல் உலகம் யாவையும் நடுக்கினான்.

பொ :—வலிமையிற் சிறந்தோனாகிய இந்திரசித்து அணிகலன்கள் ஒளிவீசுகின்ற மலைச்சிகரங்களைஒத்த தன் தோள்கள் இரு பக்கத்தும் பரவிப் பூரித்து உயர்ந்து தோன்றவும், மிக்க வலிமையையுடைய தூண்களைப் பதித்தாற்போன்ற பருத்த விரல்கள் தழும்பை நீக்குவதாகிய ஒப்பற்ற விரற் செறியோடு தொழிலில் பொருந்துமாறும், நெடுந்தொலைவு வரையில் பரவி நீண்டுள்ள திசைகளோடு மலைகளும் செவிடுபட்டு உடையவும், தன் வில் நாணினை முறைமுறையே தொடர்ந்து தெறித்துக் கடல் சூழ்ந்த உலகம் முழுவதையும் நடுங்கச் செய்தான்.

கு :—இந்திரசித்து வில் நாணைத் தெறித்து ஒலி யெழுப்பினமை இதனால் புலப்படுத்தியவாறு, 'பூணெறிந்த வேடனைய' என்றது இல் பொருள் உவமை. இந்திரசித்தின் அணிகலன் அணிந்த தோள்களுக்கு உவமையாக வேண்டி இங்ஙனம் உவமித்தவாறு. இதனால், இந்திரசித்தின் தோள்களில் பொன்னணிகள் பொருந்தி ஒளி வீசினமை புலப்படும். விரல்களின் பருமை புலப்படுத்த 'தூணெறிந் தனைய விரல்கள்' என்றார். விரல்களால் வில் நாணைத் தெறிக்கும் போதும் கணைகளைத் தொடுக்கும்போதும் தழும்புகள் உளவாகாமல் காப்பது விரற் செறியாகலின் 'சுவடெறிந்ததொரு கோதையொடு தொழில்பட' என்றார். கோதை – விரற்செறி; உடும்புத் தோலால் செய்தது. மிடல்வலோன் விரல்கள் கோதையொடு தொழில்பட நாண் எறிந்து நடுக்கினான் என இயையும். எட்டுத் திசைகளும் எட்டுக் குலமலைகளும் இந்திரசித்தின் நாணொலியால் செவிடுபட்டும் உடைந்தும் போயின என்க. திசைகள் செவிடெறிய மலைகள் உடைய என நிரனிறையாகக் கொள்க. பன்முறை நாண் எறிந்தமை புலப்பட 'முறை முறை தொடர்ந்து நாண் எறிந்து' என்றார். உலகம் முழுவதும் உலகத்தில் உள்ள உயிர்கள் யாவும் நடுங்கின என்பார், உலகம் யாவையும் நடுக்கினான் என்றார். (61)

## இந்திரசித்து அம்பு எய்தல்

8194. சிங்க வேறுகடல் போன்மு ழங்கி
நிமிர்தேர்க டாய்நெடிது செல்கெனா
அங்க தாதிய ரனுங்க வானவர்க
ளஞ்ச வெஞ்சின மனந்தமாச்
சங்க பால குளிகாதி வாலெயிறு
தந்த தீவிட முமிழ்ந்து சார்
வெங்க ணாகமென வேக மாயுருமு
வெள்க வெங்கணைகள் சிந்தினான்.

சிங்க ஏறு கடல்போல் முழங்கி,
நிமிர்தேர்கடாய் நெடிது செல்கெனா,
அங்கதாதியர் அனுங்க, வானவர்கள் அஞ்ச
வெஞ்சின அனந்தன் மாச்
சங்க பால குளிகாதி வால் எயிறு
தந்த தீவிடம் உமிழ்ந்து சார்
வெங்கண் நாகம் என, வேகமாய்,
உருமு வெள்க, வெங்கணைகள் சிந்தினான்.

பொ :—(தேரில் பூட்டப்பட்ட) ஆண் சிங்கங்கள் கடலைப்போல முழங்கி ஆரவாரித்துக்கொண்டு, உயர்ந்த தேரைச் செலுத்திக் கொண்டு பகைவர் சேனைக்குள் நெடுந்தொலைவு போவதாக என்று கட்டளை யிட்டுவிட்டு, அங்கதன் முதலிய வானரத் தலைவர்கள் வருந்தவும் தேவர்கள் அஞ்சவும், இடியும் நாணவும், வெண்மையான பற்கள் தந்த கொடிய நஞ்சினை உமிழ்ந்துகொண்டு வருகின்ற சங்கபாலன், குளிகன் முதலிய கொடுமையான கண்ணையுடைய நாகங்களைப்போல வேகமாகப் பல கொடிய அம்புகளை மிக்க கோபத் துடன் சொரிந்தான்.

கு :—இந்திரசித்தின் தேரில் பூட்டப்பட்டவை சிங்கங்களே யாதலின், சிங்கவேறு கடல்போல் முழங்கி நிமிர் தேர் கடாய் நெடிது செல்க எனப் பாகனை நோக்கிக் கட்டளை இட்டான் என்க. "நூரு யிரம் யாளியினேன்மை தெரிந்து சீயத்து ஏருமவை யன்னவையா யிரம் பூண்டது என்ப......... மற்றவனேறிய தெய்வ மாத்தேர்" (19) என முன்னம் கூறியிருப்பது நினைக. அனுங்க, அஞ்ச, வெள்க அனந்தமா வெங்கணைகள் வெஞ்சினத்துடன் சிந்தினான் எனப் பொருளுக்கு இயையச் சொற்களைக் கொண்டு கூட்டி முடிக்க. குளிகாதி வெங்கணுகம் வாலெயிறு தந்த தீவிடமுமிழ்ந்து சார் வெங்கணுகம் எனத் தனித்தனி இயையும். சங்கபாலன், குளிகன் ஆதி என்பார், சங்கபால குளிகாதி என வடமொழி நடைபற்றிக் கூறினார். எட்டு நகரங்களில் இந்த இரண்டைக் கூறி ஏனைய ஆறினையும் ஆதி என்பதால் பெறவைத்தார். நாகபாசப் படலம் என்பதற்கேற்ப முதல் அம்பு தொடுக்கும்போதே அட்ட நாகங்களைப் போன்ற அம்புகளைத் தொடுத்தான் என்ற பொருத்தம் காண்க. ஏனைய நாகங்கள் ; வாசுகி, அநந்தன், தக்ககன், பதுமன், மகா பதுமன், கார்க்கோடகன் என்பனவாம். அம்புகள் தம்மேல் படலால் அங்கதன் முதலியோர் அனுங்கினர் ; வானவர்கள் அஞ்சுதலே செய்தனர், அம்பு படாமையால் அனுங்குதல் அவர்க்கு இல்லையாயது. சிந்தினான் என்பதற்கு வினைமுதல் மேலைச் செய்யுளில் வந்த மிடல் வலோன் என்பதையே கொள்க. (62)

## இந்திரசித்தோடு வானரர் போர்

8195. சுற்றும் வந்துகவி வீரர் வீசிய
சுடர்த்த டங்கல்வரை தொன்மரம்
இற்றெ றிந்துபொடி யாயு திர்ந்தன
வெழுந்து சேணிடை யிழிந்தபோல்

வெற்றி வெங்கணை படப்ப டத்தலைகள்
விண்ணி னூடுதிசை மீதுபோய்
அற்றெ ழுந்தன விழுந்து மண்ணிடை
யழுந்து கின்றன வனந்தமால்.

சுற்றும் வந்து, கவிவீரர் வீசிய
சுடர்ந்தடங்கல் வரை, தொல்மரம்
இற்று எறிந்து பொடியாய் உதிர்ந்தன ;
எழுந்து சேணிடை இழிந்தபோல்
வெற்றி வெங்கணை படப்படத் தலைகள்
விண்ணினூடு திசைமீது போய்
அற்று எழுந்தன விழுந்து, மண்ணிடை
அழுந்து கின்றன அனந்தமால்.

பொ :—வானர வீரர்கள் சுற்றிலும் வந்து (இந்திரசித்தின்மேல்) வீசிய, ஒளிவாய்ந்த பெரிய கற்களையுடைய மலைகளும், பழமையான பெரிய மரங்களும், முரிந்து எரிபட்டுப் பொடியாக உதிர்ந்தனவும்,– இந்திரசித்தின் வெற்றிமிக்க கொடிய அம்புகள் படப்பட (வானரங்களின்) தலைகள் அறுபட்டு எழுந்தனவாய் விண்ணில் திசைகளுக்கு மேல் சென்று, இயல்பாக விண்மேல் பறந்தெழுந்து கீழே இறங்குவனபோல, மண்ணிடை விழுந்து அழுந்துகின்றனவும் மிகப் பலவாகும்.

கு :—உதிர்ந்தனவும் அழுந்துகின்றனவும் அனந்தம் என்று இயையும். வனரவீரர் வீசிய மலைகளும் மரங்களும் இந்திரசித்தின் உடம்பில் பட்டு முரிந்து எரிந்து பொடியாயின என அவன் உடம்பின் வன்மை புலப்படுத்தியவாறு. “கார்உதிர் வயிரக்குன்றைக் காத்திலன் தோள்மேல் ஏற்றான். ஓர் உதிர் நூறுகூறாய் உக்கது, எவ்வுலகும் உட்க’’ (கும்ப - 197) என முன் வந்திருத்தல் இங்கு நினைதல் தகும். இந்திரசித்தின் கணைகள் படுந்தோறும் வானரர் தலைகள் அறுபட்டவை இயல்பாக விண்ணில் பறந்து இறங்கி வருவனபோல, விண்மேல் எழுந்து சென்று போய், மீண்டும் மண்மேல் வீழ்ந்து அழுந்துவன ஆயின என்றமையால் அவன் கணைகளின் கடுமை புலப்படுத்தியவாறு. வானரங்கள் வீசிய மலைகளாலும் மரங்களாலும் இந்திரசித்துக்கு ஊறு நேராமையும் அவன்விட்ட கணைகளால் வானரங்களுக்கு ஊறு நேர்ந்தமையும் ஆக இருவகையிலும் வானர சேனைக்கே இழப்புண்டானமை இதனால் புலப்படுத்தியவாறு. எழுந்து சேணிடை யிழிந்தபோல் என்பது தற்குறிப்பேற்ற வுவமை; படுத்து வைத்தன்ன பாறை மருங்கின் எடுத்து நிறுத்தன்ன விட்டருஞ்

சிறு நெறி'' (மலைபடுகடாம் - 15) என்புழிப்போல, மிக உயரத்தி லிருந்து விழுந்தமையால் தலைகள் மண்ணில் அழுந்துவன வாயின. அம்மண்ணும் இரத்தநீரால் குழைவுபட்டிருந்தமையால் தலைகள் அழுந்துதல் எளிதாயது. (63)

8196. சிலைத்த டம்பொழி வயக்க டும்பகழி
செல்ல வொல்கினர் சினத்தினால்
உலைத்தெ றிந்திட வெடுத்த குன்றுதொ
றுடற்ப ரங்கள்கொ டொதுங்கினர்
நிலைத்து நின்றுசின முந்து செல்லவெதிர்
சென்று சென்றுற நெருக்கலால்
மலைத்த லங்களொ டுரத்த லங்கழல
வூடு சென்றபல வாளியே.

சிலைத் தடம்பொழி வயக் கடும்பகழி
செல்ல, நல்கினர், சினத்தினால்
உலைத்து எறிந்திட எடுத்த குன்று
தொறு உடல்பரங்கள் கொடு ஒதுங்கினர்,
நிலைத்து நின்று, சினம் முந்து செல்ல,
எதிர் சென்று சென்று, உற நெருக்கலால்,
மலைத் தடங்க ளொடு உரத்தலம்
கழல, ஊடுசென்ற பல வாளியே.

பொ :—(இந்திரசித்து) வில்லினிடமாகச் சொரிகின்ற வலிய கடுமையான அம்புகள் தம்மேல் வருதலால் தளர்ந்தவர்களாகிய வானரர்கள் (முன்பு) கோபத்தினால் அவன்மேல் எறிந்திட அசைத்துப் பறித்தெடுத்த குன்றுகள்தோறும் தம் உடம்பைச் சுருக்கிக் கொண்டு ஒதுங்கினராய் நிலைபெற்று நின்று, (பின்பு) தம் வெகுளி அவன்மேல் முற்பட்டுச் செல்லத் தாமும் அவன் எதிர்சென்று நெருக்குதலால், (அவன் எய்த) பல அம்புகள், அவ்வானரங்கள் மறைவாகக் கைக்கொண்ட மலைகளோடு மார்பிடத்தும் ஊடுருவுமாறு அவற்றினிடையே சென்றன.

கு :—இந்திரசித்தின் அம்புகளுக்கு ஆற்றாது தளர்ந்த வானரங்கள், அவன்மேல் எறிய முன் எடுத்த மலைகளையே தமக்கு மெய்ம் மறையாகக் கொண்டு ஒதுங்கினராய் அவ் வம்புகளால் தாக்குண்ணாது நிலைத்து நின்று, பின்பும் அவன்மேல் பொங்கிய வெகுளியால் எதிர்சென்று, அம் மெய்ம்மறையாகிய மலைகளோடே மிகவும் நெருக்

கினர்களாக, அவன் விட்ட பல அம்புகள் அவ் வானரங்களுக்குக் கவசமாக உதவிய மலைகளையும் துளைத்து, அவர்கள் மார்புகளையும் துளைத்தன என்றவாறு. உரத்தலம் - மார்பிடம். உலைத்தல் - அலைத்தல் ; அசைத்தல். (64)

8197. முழுத்த மொன்றிலொரு வெள்ள வானர
முடிந்து மாள்வன தடிந்துபோய்க்
கழுத்த கையநிமிர் கால வால பல
கண்ட மானபடி கண்டுநேர்
எழுத்தொ டர்ந்தபடர் தோள்க ளாலெறிய
வெற்ற வுற்றன வெழுந்துமேல்
விழுத்த பைந்தலைய வேணு மால்வரைகள்
வீசி வீசியுடன் வீழுமால்.

முழுத்தம் ஒன்றில், ஒரு வெள்ள வானரம்
முடிந்து மாள்வன, தடிந்துபோய்,
கழுத்த, கைய, நிமிர்கால, வால, பல
கண்டமானபடி கண்டு, நேர்
எழுத் தொடர்ந்தபடர் தோள்களால் எறிய,
எற்ற, அற்றன எழுந்துமேல்,
விழுத்த பைந்தலைய வேணுமால் வகைகள்
வீசி வீசி, உடன் வீழுமால்.

பொ :—ஒரு முழுத்த நேரத்தில் ஒரு வெள்ளம் என்ற அளவை யுடைய வானரங்கள் ஆயுள் முடிவுற்று மாள்வனவாய், வெட்டுண்டு போன,—கழுத்தையுடையனவும்,—கைகளையுடையனவும்,—கால்களை யுடையனவும், வால்களையுடையனவுமாய்ப் பல துண்டங்களான தன் மையை நேரே கண்டு (பொருத சில வானரங்கள்) இரும்புத் தூண் கள் போன்று பொருந்தியுள்ள படர்ந்த தம் தோள்களால் மலைகளைக் கொண்டு எறியவும் (கைகளால்) மோதவும் தொடங்கினவாய் எழுந்து. (இடையே இந்திரசித்தின் அம்புகளால் துணிபட்டு, மேலி ருந்து வீழ்த்திய பசுமையான தலைகளையுடையவாய் மூங்கில் நிறைந்த பெரிய மலைகளை அவன்மேல் வீசிவீசி எறிந்துவிட்டுப் பின் கீழ்விழும்.

கு :—முழுத்தம் என்றது மூன்றே முக்கால் நாழிகை கொண்டது. ஒரு வெள்ளம் வானரங்கள் சிறிது நேரத்தில் கண்டதுண்டமாய் அழிந்துவிடுதல் கண்ட வேறு சில வானரங்கள், இந்திரசித்தினை மலைகொண்டெறியவும் மோதவும் தொடங்கியெழுந்தனவாக, அந்

நிலையில் இந்திரசித்தின் அம்புகள் அவர்கள் தலைகளைத் துணித்தன; தலைகளை யிழந்து கவந்தமான பின்னும் அவை முன்னினைத்தபடி தம் கையில் உள்ள மலைகளை அவன்மேல் வீசிவிட்டு அதற்குப் பின் தரையில் விழும்; என்று வானரங்களின் வீரவுணர்ச்சியைப் புலப் படுத்தியவாறு. தலையற்ற பின்னும் முன் கருதியதை முடித்த பின்னரே கீழ் வீழ்ந்தன என்க. "அடுசிலை பகழி தொடுத்துவிடப் புகும் அளவினில் அயமெதிர்விட்டவர் வெட்டின, உடல்சில இருதுணி பட்டன பட்டபின் ஒரு துணி கருதும் இலக்கை அழிக்குமே" (கலிங் கத்துப்-421) என்ற செயங்கொண்டார் செய்யுள் இங்கு ஒப்புநோக் கத் தகுவது. கடிந்து போய் என்ற செய்து என் எச்சத்தைச் செய் வென் எச்சமாகத் திரிக்க. தடிந்துபோய கழுத்த, கடிந்துபோன கைய என்க. வானரம் முடிந்து மாள்வனவாய்த் தடிந்துபோய கழுத்த, கைய, கால, வாலவாய்ப் பல கண்டமானபடி கண்டு என்று முற்றெச்சமாக்கி முடிக்க. கழுத்தனவாய் எனக் குறிப்பு முற்றை எச்சமாக்குக. எழு – இரும்புத் தூண். விழுத்த பைந்தலைய என்றது, அம்புகளால் வீழ்த்தப்பட்ட தலைகளை யுடையனவாய் என்றபடி; தலை கள் வீழ்த்தப்பட்ட முண்டங்களாய் என்றவாறு. தலை யிழந்தும் குறிக்கோளை இழவாது மலைகளை அவன்மேல் வீசிய பின்னரே தரை யில் வீழ்ந்தன என்க. உடன் என்றது, வீசிய பின் என்னும் பொருளது. வேணு - மூங்கில். (65)

8198. அற்ற பைந்தலை யரிந்து சென்றன
வயிற்க டுங்கணை வெயிற்கள்போல்
புற்ற டைந்தகொடி வெவ்வ ராவினெடு
நாக லோகமது புக்கவால்
வெற்ற வெள்ளிடை விரிந்து போவதொரு
மேடு பள்ளம்வெளி யின்மையால்
உற்ற செங்குருதி வெள்ள முள்ளதிரை
யோத வேலையொடு மொத்ததால்.

அற்ற பைந்தலை அரிந்து சென்றன
அயில் கடுங்கணை வெயில்கள்போல்
புற்று அடைந்த கொடு வெவ் அராவின்
நெடு நாகலோகம் அது புக்கவால்;
வெற்ற வெள்ளிடை விரிந்து போவதுஒரு
மேடு பள்ளம் வெளி இன்மையால்
உற்ற செங்குருதி வெள்ளம், உள்ளதிரை
ஓத வேலையொடும் ஒத்ததால்.

பொ :—அறுபட்டன ஆகுமாறு வானரங்களின் பசுமையான தலைகளை அரிந்து சென்றனவாகிய (இந்திரசித்தின்) கூரிய கடுமையான அம்புகள், (குருதி தோய்ந்தமையால்) வெயிற்கதிர்கள் போன்ற தோற்றம் கொண்டு, புற்றின்கண் நுழைந்த மிகக் கொடிய பாம்புகளைப் போல, நீண்ட நாகலோகத்தில் புகுந்தன ; (சேனைகள் யாவும் அழிந்தமையின்) வெறுமையான வெள்ளிடையே விரிவடைந்து, (வெள்ளம்) போவதற்குரிய ஒரு மேடும், பள்ளமும், அவ்வெளியிடத்தில் இல்லாமையால் (ஒரே இடத்தில்) தேங்கிக் கிடந்த சிவந்த இரத்த வெள்ளம், முன்னமே உள்ள அலைகளையுடைய கடலோடு ஒத்த பரப்பினையுடையது ஆயது.

கு :—அற்ற ஆமாறு அரிந்து என ஒரு சொல் வருவிக்க. செங்குருதி தோயப் பெற்ற இந்திரசித்தின் அம்புகள், ஞாயிற்றின் செங்கதிர்கள் போன்ற தோற்றமுடையனவாயின. வானரங்களின் தலைகளை யரிந்த பின்னும் அம்பின் வேகம் குறையாமையால் தரையிடைப் புகுந்து நாகலோகத்தை யடைந்தது என்க. கொடுமையாலும் வடிவாலும் நாகலோகம் புக்க செயலாலும் அம்புகள் பாம்புகளை ஒத்தனவாதலின், 'புற்றடைந்த கொடு வெவ்வராவின் நெடு நாகலோகமது புக்க' என்றார். இதனால் அம்புகளின் வேகம் புலப்படுத்தியவாறு. 'உலையுருவக் கனலுமிழ் கட் டாடகைதன் னுரனுருவி. மலையுருவி மரமுருவி மண்ணுருவிற் றொருவாளி' (பால-குலமுறை – 26) என இராமன் அம்பு புகழப்பட்டிருத்தல் இங்கு நினையலாம். மேடும் பள்ளமும் இருப்பின் மேட்டில் உள்ள இரத்தம் பள்ளத்தில் புகும் ; இக்களத்தில் அவையின்மையினால், இரத்தவெள்ளம் போவதற்கு வழியின்றித் தேங்கிக் கிடந்த நிலை, கடல்போல் தோன்றிற்று என்பார், 'உள்ளதிரை ஓத வேலையொடும் ஒத்ததால்' என்றார். திரைஓதம் என்பது, ஒருபொருட் பன்மொழி. ஓதம் - அலை. இதனால், இந்திரசித்தின் அம்புபட்டு இறந்தோரின் தொகை மிகுதி புலப்படுத்தியவாறு. (66)

8199. விழிக்கு மேல்விழிய நிற்கின் மார்பிடைய
மீருமேன் முதுக மேனிய
கழிக்கு மேலுயர வோடு மேனெடிய
கால வீசினிமிர் கையவாய்த்
தெழிக்கு மேலகவு நாவ சிந்தையின
வுன்னு மேற்சிகரம் யாவையும்
பழிக்கு மேனிய குரக்கின் மேலவன்
விடுங்கொ டும்பகழி பாயுமே.

விழிக்குமேல் விழிய, நிற்கின் மார்பிடைய
மீருமேல் முதுக, மேனிய
கழிக்குமேல், உயர ஓடுமேல் நெடிய
கால, வீசின் நிமிர்கைய, வாய்த்
தெழிக்குமேல் அகவும் நாவ, சிந்தையின்
உன்னுமேல் — சிகரம் யாவையும்
பழிக்கும் மேனிய குரங்கின்மேல், அவன்
விடும்கொடும் பகழி பாயுமே.

பொ :—மலைகள் எல்லாவற்றையும் சிறியன எனப் பழிக்கத்தக்க பெரிய வடிவினையுடைய குரங்குகளின்மேல் அவ்விந்திரசித்து விடுகின்ற கொடிய அம்புகள்,—அவ்வானரங்கள், விழித்துப் பார்த்தால் அவ்விழிகளின் கண்ணும், எதிர்த்து நிற்குமேல் அவற்றின் மார்பின் கண்ணும், மீண்டுபோமாயின் அவற்றின் முதுகின்கண்ணும், (தம் மேல் படாது) கழிக்க முயலுமேல் அவற்றின் உடம்பின்கண்ணும், உயரப் பாய்ந்து ஓடுமாயின், அவற்றின் நீண்ட காலின்கண்ணும், கைகளை வீசினுல் நிமிர்ந்த கையின்கண்ணும், வாயால் அதட்டுமேல் அகவுதற்குரிய நாவின்கண்ணும், அவ் வம்பின் கொடுமையை நினைக்குமாயின் அவற்றின் சிந்தையின் கண்ணும், பரவும்.

கு :—பகழி - விழிய, மார்பிடைய, முதுக, மேனிய, கால, கைய, நாவ, சிந்தையின் பாயும் என இயையும். விழிய முதலியவற்றில் உள்ள அகரம், இடப்பொருளில் வந்த குறிப்பு வினைமுற்று விகுதி ; அவை எச்சப் பொருள்பட்டு விழியின் கண்ணவாயும், மார்பிடையனவாயும், முதுகின்கண்ணவாயும், மேனியின்கண்ணவாயும்,காலின் கண்ணவாயும், கையின்கண்ணவாயும், நாவின்கண்ணவாயும், சிந்தையின்கண்ணவாயும் என விரிந்து பாயும் என்ற முற்றுவினை கொண்டு முடியும். குரங்குகளின் வடிவப் பெருமை புலப்படுத்தச் 'சிகரம்' யாவையும் பழிக்கும் மேனிய குரக்கின்மேல், என்ருர். சிகரம் – மலை. மேனிய குரங்கு என்புழி அகரம் குறிப்புப் பெயரெச்ச விகுதி. உடைமைப் பொருளில் வந்தது ; மேனியையுடைய குரங்கு என்க. இதனுல், இந்திரசித்தின் அம்புகள் வானரங்களைத் துன்புறுத்திய கொடுமையைப் புலப்படுத்தியவாறு. (67)

8200. மொய்யெ டுத்தகணை மாரி யாலிடை
முடிந்த தொன்றுமுறை கண்டிலார்
எய்வி டத்தெறியு நாணி னேசையல
தியாது மொன்றுசெவி யுற்றிலார்

மெய்யெ டுத்தகவி வெள்ளம் யாவையும்
விழுந்து போனவெனும் விம்மலால்
கய்யெ டுத்தன குரங்கி னேடு
முறைகண்டு தேவர்கள் கலங்கினர்.

மொய் எடுத்தகணை மாரியால், இடைமுடிந்தது
ஒன்றும் முறை கண்டிலார்;
எய்விடத்து எறியும் நாணின் ஓசையலது
யாதும் ஒன்று செவி உற்றிலார்;
'மெய் எடுத்தகவி வெள்ளம் யாவையும்
விழுந்துபோன' எனும் விம்மலால்
கய்எடுத்தன குரங்கின் ஓடும் முறை
கண்டு — தேவர்கள் — கலங்கினர்.

பொ:—(விண்ணில் போர் கண்டு நின்ற) தேவர்கள்—இந்திர சித்து சொரிந்த வலிமை மிக்க அம்பு மழையால் நடுவே நிகழ்ந்தது. ஒன்றையும் முறையே கண்டிலர்; அவன் அம்பு எய்யும்போது தெறித்த நாணின் ஒலியல்லது வேறு யாதொன்றையும் செவியால் கேள்வியுறவில்லை; ஆனல், உடம்பெடுத்த குரங்கு வெள்ளம் முழுமையும் இறந்துபட்டனவே என்ற துன்பத்தால், கைகளை உயர்த்தினவாய் ஓடுகின்ற குரங்கின் தன்மை கண்டு கலங்கினர்கள்.

கு:—தேவர்கள் இமையா நாட்டமுடையராய் இருந்தும் இந்திரசித்தின் நாண் தெறித்த ஒலி கேட்டதன்றி, அம்பு மழையால் அங்கு நிகழ்ந்த அழிவுகளையெல்லாம் அறியாராய்க் குரங்குகள் ஓடுவதை மட்டுமே கண்டு, அங்கு நிகழ்ந்ததை உய்த்துணர்ந்து, கலங்குவாராயினர் என்க. மொய்-வலிமை. இதனல், இந்திரசித்தின் விற்ருெழிலின் சிறப்புப் புலப்படுத்தியவாறு. "தடுத்திமையாம லிருந்தவர் தாளின், மடுத்தது நாணுதி வைத்தது நோக்கார், கடுப்பினி லியாரும் அறிந்திலர் கையான், எடுத்தது கண்டன ரிற்றது கேட்டார்" (பால-கார்முகப்-34) என்ற செய்யுள் இங்கு ஒப்புநோக்குதற்குறியது. குரங்குகள் என்று சொல்லப்படுவன எல்லாம் விழுந்து போன என்பார், "மெய்யெடுத்த கவிவெள்ளம் யாவையும் விழுந்து போன" என்ருர். களைகளைவார் எவரும் இல்லையே என்ற ஏக்கத்தால் கைகளை உயர்த்திக்கொண்டு குரங்குகள் ஓடுவன ஆயின. கை எடுத்தனவாய் ஓடும் குரங்கின்முறை என இயையும். முற்றெச்சம். (68)

## சுக்கிரீவன் எதிர்த்தல்

8201. கண்ட வானர மனந்த கோடிமுறை
கண்ட மானபடி கண்டவக்
கண்டன் மாருருவ ரின்மை கண்டுகணை
மாறினுன் விடுத லின்மையாக்
கண்ட காலையில் விலங்கி னுனிரவி
காதல் காதுவதோர் காதலால்
கண்ட கார்சிதைய மீது யிர்ந்தொளிர்
மராம ரஞ்சுலவு கையினுன்.

கண்ட வானரம் அனந்தகோடி முறை
கண்டமானபடி கண்ட அக்
கண்டன், மாறுஒருவர் இன்மை கண்டு,
கணைமாறினுன், விடுதல் இன்மையான்
கண்ட காலையில், விலங்கினுன் இரவி
காதல், காதுவது ஓர் காதலால்
கண்ட கார் சிதைய மீதுஉயர்ந்து ஒளிர்
மராமரம் சுலவு கையினுன்.

பொ :—தன் கண்ணிற் கண்ட வானரங்கள் பலகோடி வகையாகக் கண்ட துண்டம் ஆன தன்மையைக் கண்ட அக் கொடியனுகிய இந்திரசித்து, எதிர்ப்பார் ஒருவரும் இல்லாமை கண்டு, கணை விடுதல் இல்லையாகப் போரை நிறுத்தினுன்; அதைக் கண்டபோது, சூரியன் மகனுகிய சுக்கிரீவன், அவனைத் தாக்கும் ஓர் விருப்பத்தால் காணப்பட்ட மேகம் சிதையுமாறு மேலே உயர்ந்து விளங்குகின்ற மராமரத்தைப் பற்றிச் சுழற்றுகின்ற கையையுடையனுய் எதிர்த்தான்.

கு :—கண்டன், கண்டகன் என்பதன் மரூஉ; முள்போன்ற கொடியனுகிய இந்திரசித்து என்றவாறு. கணை விடுதல் இன்மையா மாறினுன் என இயையும். கணை விடுதலை விடுத்து விடாமையில் மாறினுன் என்க. அம்பு விடாமல் நிறுத்தினுன் என்றவாறு. இரவி காதல் என்றது சுக்கிரீவனை. காதுதல்-மோதுதல். மராமரத்தின் உயர்ச்சி புலப்படக் 'கண்ட கார்சிதைய மீது உயர்ந்து ஒளிர்' என்ருர். சுலவுதல் – சுழற்றுதல். மராமரம் அலவு கையினுனுய் விலங்கினுன் என இயையும். விலங்குதல்-குறுக்கிடுதல்; ஆவது, எதிர்த்தல். (69)

சுக்கிரீவன் மராமரங்கொண்டு அரக்கர் படைக்கடலைக் கலக்குதல்

8202. உடைந்து தன்படை யுலைந்து சிந்தியுயி
ரொல்க வெல்செரு வுடற்றலால்
கடைந்து தெள்ளமுது கொள்ளும் வண்ணமென
மேனி மிர்ந்ததொர் கடுப்பினன்
இடைந்து சென்றவனை யெய்தி யெய்தரிய
காவல் பெற்றிக லியற்றுவான்
மிடைந்து நின்றுபடை வேலை காறளர
வீசி னணிருதர் கூசினர்.

உடைந்து, தன்படை உலைந்து சிந்தி,
உயிர் ஒல்க, வெல்செரு உடற்றலால்,
கடைந்து தெள் அமுது கொள்ளும் வண்ணம்
என மேல்நிமிர்ந்தது ஓர் கடுப்பினன்
இடைந்து சென்றவனை எய்தி, எய்தரிய
காவல்பெற்று இகல் இயற்றுவான்
மிடைந்து நின்ற படை வேலை கால்தளர
வீசினன்; நிருதர் கூசினர்.

பொ —தன் சேனை தோற்று வருந்திச் சிதறி உயிர் தளருமாறு (இந்திரசித்து) வெல்லும் போரைச் செய்தமையால், (சுக்கிரீவன்) கடலைக் கடந்து தெளிவான அமிழ்தினைக் கொள்ளும் தன்மைபோல மிக வுயர்ந்த விரைவினையுடையவனாய்—விலகிச்சென்ற இந்திர சித்தினை நெருங்கி, அவன் மீண்டும் இலங்கைக்குப் புக முடியாதபடி காவல் செய்தலை மேற்கொண்டு, போர் செய்வதற்காக நெருங்கி நின்ற அரக்கர் சேனையாகிய கடல் நிலைகுலையுமாறு அம் மரத்தைச் சுற்றிக்கொண்டு போர் செய்தான்; (அதைக் கண்டு) அரக்கர்கள் கூசினர்கள்.

கு :—சுக்கிரீவன் மராமரத்தைக் கையில்கொண்டு அரக்கர் சேனையாகிய கடலைக் கலக்குவது, அமுது கொள்வதற்காக மந்தர மலை கடலைக் கலக்குவது போல இருந்தது என்றவாறு. 'கடைந்து தெள்ளமுது கொள்ளும் வண்ணமென' என்றாராயினும், அமுது கொள்ளும் வண்ணம் கடைந்ததென என்பதே கருத்தாகக் கொள்க. அமுது கொள்ளக் கடலை மந்தரமலை கடைந்தது போலச் சுக்கிரீவன் மிக வுயர்ந்த விரைவுடையனாய்ப் படை வேலை கால் தளர வீசினன் என்க. கடுப்பு-விரைவு; கடுமை. கடுப்பினனாய் எய்தி, காவல்பெற்று

வீசினான் என இயையும். இடைந்து சென்றவன் என்றது இந்திர சித்தினை. போர் செய்யாது விலகிச் சென்றவனை என்றவாறு. எதிர்ப்போர் இல்லையென இந்திரசித்து மீண்டு இலங்கைக்குச் சென்றுவிடாதபடி இலக்குவன் வரும் வரையில் அவனைத் தடுத்துப் போர் செய்து கொண்டிருத்தல் வேண்டும் என்ற கருத்தினால் சுக்கிரீவன் வந்துளான் என்பார், 'எய்தரிய காவல் பெற்று' என்றார். காத்தல்-தடுத்தல். இகலியற்றுவான் நின்ற படை என்க. நின்ற படை நிலைதளர்ந்திட வீசினான் என்றமையால், சுக்கிரீவன் தாக்குதலை எதிர்க்க முடியாமல் அரக்கர் படை அல்லலுற்றமை புலப்படுத்தியவாறு. கூசுதல்-நாணுதல். (70)

### சுக்கிரீவன் கையிலிருந்த மரத்தை இந்திரசித்து பொடியாக்குதல்

8203. சுற்றி நின்றபடை சிந்தி யோடவொர்
மராம ரங்கொடு துகைத்துளான்
வெற்றி கண்டுவலி நன்று நன்றென
வியந்து வெங்கணை தெரிந்தவன்
நெற்றி யின்றலை யிரண்டு மார்பிடையொ
ரஞ்சு நஞ்சென நிறுத்தவன்
பற்றி வந்தமரம் வேறு வேறுற
நுறுக்கி நுண்பொடி பரப்பினான்.

சுற்றும் நின்றபடை சிந்தி ஓட, ஓர்
மராமரம் கொடு துகைத்துளான்
வெற்றி கண்டு, 'வலிநன்று, நன்று!' என
வியந்து, வெங்கணை தெரிந்து, அவன்
நெற்றியின்தலை இரண்டு, மார்பிடை ஓர் அஞ்சு,
நஞ்சு என நிறுத்தினான்
பற்றி வந்த மரம் வேறு வேறு உற
நுறுக்கி, நுண்பொடி பரப்பினான்.

பொ :—(இந்திரசித்து) தன்னைச் சுற்றி நின்ற சேனை சிதறி ஓடுமாறு ஒரு மராமரம் கொண்டு தாக்கிக் கொண்டுள்ள சுக்கிரீவனது வெற்றியைக் கண்டு, 'இவன் வலிமை பெரிது பெரிது' என்று வியப்படைந்து, கொடிய அம்புகளை ஆராய்ந்து அந்தச் சுக்கிரீவனது நெற்றியில் இரண்டும் மார்பில் ஐந்தும் ஆக நஞ்சு போலத் துன் புறுத்துமாறு அழுத்திவிட்டு அவன் கையில் பற்றி வந்த மராமரம்

சிதைந்து வேறுவேறு ஆகுமாறு நொறுக்கி, நுண்ணிய துகளாகப் பரவச் செய்தான்.

கு :—துகைத்துளானது வெற்றி என்க. துகைத்துளான் வினைப் பெயர். நன்று-பெரிது. 'நன்று பெரிதாகும்' (தொல்-சொல்-343) என்றது காண்க. தலை-இடம். நஞ்சு என நிறுத்தான் என்றது, நஞ்சு போலத் துன்புறுத்துமாறு அழுத்தினான் என்றவாறு. நஞ்சு போன்ற கொடிய அம்புகளை எய்தான் என்றபடி. சுக்கிரீவன் கையிலிருந்த மராமரம் வேரும் முதலும், கவடும் விளாரும் சுள்ளியும் இலையும் தளிரும், பூவும் என்ற உறுப்புகள் சிதைந்து வேறுவேறு ஆகிப் பின் பொடியாய் நொறுங்கிப் பரவுமாறு செய்தான் இந்திரசித்து என்க. (71)

### அனுமன் வந்து வீசிய குன்றை இந்திரசித்துப் புழுதியாக்குதல்

8204. அக்க ணந்தனும னால காலமென
லாய தோர்வெகுளி யாயவட்
புக்க னைத்துலக முங்கு லுங்கநிமிர்
தோள்பு டைந்துருமு போலுரு
இக்க ணத்தவ னிறக்கு மென்பதொரு
குன்டுற வுத்துமிசை யேவினான்
உக்க தக்கிரி சொரிந்த வாளிகளி
னூழி லாதசிறு பூழியாய்.

அக் கணத்து, அனுமன் ஆலகாலம்
எனலாயது ஓர் வெகுளி ஆய் அவண்
புக்கு, அனைத்து உலகமும் குலுங்க
நிமிர் தோள்புடைத்து உருமுபோல்உரு,
'இக் கணத்து அவன் இறக்கும்' என்பது
ஒரு குன்று எடுத்து, மிசை ஏவினான்;
உக்கது அக்கிரி, சொரிந்து வாளிகளின்,
ஊழ் இலாத சிறு பூழியாய்.

பொ :—(சுக்கிரீவன் தளர்ந்த) அக்கணத்தில் அனுமன் ஆலகாலம் என்று சொல்லத்தக்கதொரு கோபமுடையவனாய் அவ்விடத்தில் புகுந்து, அனைத்துலகமும் அதிருமாறு உயர்ந்த தன் தோள்களைத் தட்டி, இடியினைப்போல முழங்கிக்கொண்டு, 'இந்தக் கணத்தில் அவ்விந்திரசித்து இறப்பான்' என்று கருதத்தக்கதொரு

மலையை எடுத்து அவன்மேல் வீசினன் ; அந்த மலை (இந்திரசித்து) சொரிந்த அம்புகளினால், (மதிக்கத்தக்க) முறைமை இல்லாத சிறிய புழுதியாய்ச் சிதறியது.

கு:—இந்திரசித்தின் அம்புகளால் சுக்கிரீவன் தளர்ந்தமை அனுமன் வரவினால் புலப்படுத்தியவாறு. ஆலகாலம் - பெருநஞ்சு. பாற்கடலில் தோன்றிய நஞ்சினை ஆலகாலம் என்பர். அனுமனது வெகுளிக்கு வேறு உவமை சொல்ல இயலாமையின் ஆலகாலமே என்று சொல்லுதற்குரிய வெகுளி என்றார். வெகுளி யுடையனாய் என்னாது வெகுளியாய் என்றமையால், அனுமன் வெகுளி வடிவானமை புலப்படுத்தியவாறு. எவ்வுயிர்க்கும் தாயாகிய சீதையை வஞ்சனையால் கவர்ந்த வன்கணன் புதல்வன் இந்திரசித்து ஆகலின் அனுமன் அப்பாதகனைக் கண்டவுடன் பெருஞ்சினம் உடையவனானான். போர்வீரர் பகைவரைக் கண்டவுடன் தோள்புடைத்தலும் கொக்கரித்தலும் இயல்பு ஆதலின் அனுமனும் அவற்றைச் செய்தான் என்றவாறு. அவன் தோள்களைத் தட்டியதால் அனைத்துலகமும் குலுங்கின; அவன் வீரகர்ச்சனை இடியொலிபோலத் தோன்றிற்று; என்றது, அனுமனது பேருருவிற் கேற்பக் கூறியது. உருமுபோலுரு என்றது, உருமுபோலப் பொருந்த என்றவாறு; உருமுபோலப் பொருந்துதலாவது வீரமுழக்கம் செய்தல். குன்றின் பெருமை புலப்படுத்த 'இக்கணத்தவன் இறக்கும் என்பதொரு குன்று என்றார். அக்கிரி பூழியாய் உக்கது என இயையும். ஊழ் என்றது மதிக்கத்தக்க முறைமையினை. பூழி - புழுதி; துகள். (72)

இந்திரசித்து அனுமனை நோக்கிக் கூறிய வீரமொழி

8205. நில்ல டாசிறிது நில்ல டாவுனை
நினைந்து வந்தனென் முனைக்குநான்
வில்லெ டாமைநின தாண்மை பேசியுயி
ரோடு நின்றுவிளை யாடினாய்
கல்ல டாநெடு மரங்க ளோவிரு
கரத்தி னேன்வலி கடப்பநீ
சொல்ல டாவென வியம்பி னானிக
லரக்க னையனிவை சொல்லினான்.

"நில்லடா! சிறிது நில்லடா! உனை நினைத்து
வந்தனென் முனைக்கு நான்
வில் எடாமை, நினது ஆண்மை
பேசி, உயிரோடு நின்று விளையாடினாய்;

கல் அடா; நெடு மரங்களோ
இருகரத்தினேன் வலி கடப்ப? நீ
சொல்லடா!" என இயம்பினுன் இகல்
அரக்கன்; ஐயன் இவை சொல்லினுன்.

பொ:—(அனுமன் வீசிய மலை பொடிப் பொடியானபின்) போர் வலிமிக்க இந்திரசித்து (அனுமனை நோக்கி,) "(எனை எதிர்த்து) நில்லடா! சிறிது நேரம் நில்லடா! உனை நினைத்தே போர் முனைக்கு வந்தேன்; யான் வில்லெடுத்துக் கொண்டு போர்க்கு வராமையால் நின்னுடைய ஆண்மையைக் காட்டிக் கொண்டு உயிரோடு நின்று இதுகாறும் விளையாடிக் கொண்டிருந்தாய்; நீ வீசிய பெரிய மலை என்னைக் கொல்லாமல் சிதைந்தது; இனி, இரண்டு கைகளையுடைய என் வலிமையை வெல்லத்தக்கன நீண்ட மரங்களோ? நீ சொல்லடா" என்று சொன்னுன்; (அதுகேட்ட) அனுமன் இச் சொற்களைச் சொல்லலானுன்.

கு:—'அடா' என்பது, இழிந்தவர்களை நோக்கிக் கட்டளையிடும் போதும் விளிக்கும்போதும் வரும் இடைச்சொல். இகழ்ச்சிக் குறிப்பைத் தோற்றுவிக்கும் இயல்பினது. நெடிது நிற்கமாட்டாமை யுணர்த்த 'சிறிது நில்லடா' என்ருன். அரக்கர் தலைவர் பலர் அனுமனுல் கொல்லப்பட்டனர் என்பதை முன்னர் இராவணன் சொல்லக் கேட்டுவந்தான் ஆகலின், அவ்வனுமனை முன்னர்க் கொல்லவேண்டும் என்ற எண்ணத்தோடு வந்தமை தோன்ற 'உனை நினைத்து வந்தனென் முனைக்கு' என்ருன். தான் வில்லெடுத்துப் போர்க்கு வந்திருந்தால் அனுமன் முன்னமே அழிந்திருப்பான் என்ற கருத்தினன் இந்திரசித்து ஆகலின், "நான் வில்லெடாமை நினதாண்மை பேசி யுயிரோடு நின்று விளையாடினுய்" என்று கூறினுன். இந்திரசித்து இதுகாறும் போர்க்கு வரவில்லை என்பதை "கொன்ருரவரோ கொலை சூழ்கென நீ கொடுத்தாய், வன்ருனையர் மானிடர் வன்மை யறிந்தும் மன்னு, என்ருனுமெனைச் செல வேவலை; இற்றது; என்னு நின்ருன்" (7) என இராவணனை நோக்கி இவன் கூறியிருத்தல் கொண்டு உணரலாம். வில்லெடுத்தல் என்றது, வில்லெடுத்துக் கொண்டு போர்க்கு வருதலை உணர்த்தியது. எடாமையால் என மூன்றனுருபு விரிக்க.

கொத்துறு தலையான் வைகும்
குறும்புடை யிலங்கைக் குன்றம்
தத்துறு தடநீர் வேலை
தனிஞெரு சிறையிற்ருதல்

ஒத்துற வுணர்ந்திலாமை
யுயிரொடு முறவினேடும்
இத்துணை இருந்தது என்னும்
தன்மையும் இயம்பு வீரால். (ஒற்றுக்கேள்வி-35)

என்ற செய்யுளில், உணர்ந்திலாமையால் என விரிக்குமாறு அமைந்ததுபோல் இங்கும் அமைந்துள்ளமை நினைக. 'நான் வில் லெடாமையால் நினது ஆண்மை பேசி நின்று விளையாடினாய்' என்றது, 'வில்லெடாமை நினதாண்மை பேசி' என்பதற்கு 'நீ வில் எடுக்காமல் நினது ஆண்மையைப் பேசிக்கொண்டு' என அனுமனை நோக்கிக் கூறியதாகக் கூறுவதுமுண்டு. நான் இப்போது வில்லெடுத்து வந்தமையால் நீ உயிர்நீங்கப் போகின்றாய் என்பதை அருத்தாபத்தியால் தோற்றுவித்து நின்றது. தான் வராமையால் அனுமன் பல வீரர்களை முயற்சியின்றியே கொன்றான் என்னுங் கருத்தால் 'நினது ஆண்மை பேசி...விளையாடினாய்' என்றான். பேசுதல் இங்குக் காட்டுதலை உணர்த்தியது. கல் என்றது அனுமன் வீசிய பெருமலையை. பெரிய மலையே அடாதபோது அம் மலையில் முளைத்த மரங்களோ என் வலிமையை வெல்லவல்லன? என்று எள்ளியவாறு. மலையும் மரமும் அன்றி வானரங்கட்கு வேறு படையின்மை இதனால் புலப்படுத்தியவாறு. ஐயன் என்றது அனுமனை. அவன் சொல்லியவை வரும் செய்யுளில் காண்க. (73)

### அனுமன் கூறும் மறுமொழி

8206. வில்லெ டுக்கவுரி யார்கள் வெய்யசில
வீர ரிங்குமுளர் மெல்லியோய்
கல்லெ டுக்கவுரி யானு நின்றன
னதின்று நாளையிடை காணலாம்
எல்லெ டுத்தபடை யிந்தி ராதிய
ருனக்கி டைந்துயிர்கொ டேகுவார்
புல்லெ டுத்தவர்க ளல்லம் வேறுசில
போரெ டுத்தெதிர் புகுந்துளேம்.

வில் எடுக்க உரியார்கள் வெய்யசில
வீரர், இங்கும்உளர்; மெல்லியோய்!
கல் எடுக்க உரியானும் நின்றனன்;
அது இன்றுநாளையிடை காணலாம்;

எல் எடுத்தபடை இந்திராதியர் உனக்கு
இடைந்து உயிர்கொடு ஏகுவோர்;
புல் எடுத்தவர்கள் அல்லம்; வேறுசில
போர் எடுத்து, எதிர் புகுந்துளோம்.

பொ :—மெலியவனே! (வில்வீரன் நீ மட்டும்தான் என்று நினையாதே) வில் எடுத்துப்போர் செய்தற்குரியார்களாகக் கொடிய சில வீரர்கள் இங்கும் இருக்கின்றார்கள்; நினக்குக் கல்லெடுக்க உரியவனும் இங்கு இருக்கின்றான்; அதை இன்று அல்லது நாளை பார்த்து விடலாம்; ஒளி வீசும் படைகளை யுடைய இந்திரன் முதலிய தேவர்கள், உனக்குத் தோற்று (புல்லைக் கவ்வி) உயிரைப் பாதுகாத்துக் கொண்டு போவார்கள்; (நாங்கள் அவர்களைப் போலப்) புல்லைக் கவ்வுதற் குரியவர்கள் அல்லேம். அவ்வியல்புக்கு வேறாகச் சில போர்களை மேற்கொண்டு வெற்றி பெற்றே உன் எதிரே போர்செய்யப் புகுந்திருக்கின்றோம்.

கு :—இந்திரசித்து நான் வில்லெடாமையால் நினதாண்மை பேசி யுயிரோடு நின்று விளையாடினாய், எனத் தன் வில்வீரத்தைச் சிறப்பித்துப் பேசினான் ஆதலின், அனுமன் அவனுக்கு விடைகூறு முகத்தால், 'வில்லெடுக்க வுரியார்கள் வெய்ய சில வீரர் இங்குமுளர்' என்றான். உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை. நீ மட்டுமல்ல எங்கள் சேனையிலும் வில்வீரர் உளர் என்பது கருத்து. அவர்கள் வீரத்தை நோக்கின் நீ மிகவும் மெலியவன் ஆவாய் என்ற கருத்துத் தோன்ற 'மெல்லியோய்' என விளித்தான். சில வீரர் என்றது, இராம இலக்குவரை. ஒருவர்க்கு மேற்பட்டமையால் 'சில வீரர்' என்றான். இரண்டுக்கு மேற்பட்டால் பல ஆகும். கல்லும் மரமும் எடுத்து என்னை வெல்ல இயலுமோ? என அவன் வினவியதால், நாங்கள் கல்லெடுக்க நீ இறவாய் ஆயினும் நீ இறந்தபின் நினக்குக் கல்லெடுத்தே ஆகவேண்டும்; அவ்வாறு நினக்குக் கல்லெடுத்தற்கு உரிய வீடணன் இங்கு இருக்கின்றான் என்று விடை கூறலானான். நினக்குக் கல்லெடுப்பு விரைவில் நடைபெறும் என்பான். 'அது இன்று நாளையிடை காணலாம்' என்றான். இறுதிச் சடங்கினைக் கல்லெடுப்பு என்னும் உலக வழக்கினை நினைந்து கூறியவாறு. வீரர் இறந்தபின் அவர் உடம்பு புதைத்த இடத்தில் வீரக்கல் நடுதல் இயல்பு. இந்திராதியர் படைக்கலங்களின் பயனின்மை புலப்பட 'எல்லெடுத்த படை' என்று புகழ்ந்தான். அழகுக்கே ஏற்றவை என்றபடி. தோற்றோர் தம் தோல்வியைப் புல்லைக் கவ்வி யுணர்த்துதல் மரபு. யாம் யார்க்கும் தோற்றதில்லை என்பான், 'புல்லெடுத்தவர்களல்லர்' என்றான். சில போரெடுத்து என்றது, சில போர்களில் வெற்றி பெற்று என்றவாறு. (74)

யாரொடு போர் செய்கின்ருய் என இந்திரசித்தை வினவுதல்

8207. என்னொ டேபொருதி யோவ தன்றெனி
னிலக்குவப் பெயரி னெம்பிரான்
தன்னொ டேபொருதி யோவு னுந்தைதலை
தள்ள நின்றதனி வள்ளலாம்
மன்னொ டேபொருதி யோவு ரைத்தது
மறுக்கி லேமென வழங்கினன்
பொன்னொ டேபொருவி னல்ல தொன்ெறாடு
பொருப்ப டாவுயர் புயத்தினன்.

'என்னேடே பொருதியோ? அது அன்று
எனின் இலக்குவப் பெயரின் எம்பிரான்—
தன்னேடே பொருதியோ? உன் உந்தைதலை
தள்ள நின்ற தனிவள்ளலாம்
மன்னேடே பொருதியோ? உரைத்தது
மறுக்கிலோம்' என வழங்கினன்—
பொன்னேடே பொருவின் அல்லது ஒன்ெறாரு
பொருப்படா உயர் புயத்தினன்.

பொ :—(நீ) என்னுடனே போர் செய்கின்ருயோ? அல்லது இலக்குவன் என்ற பெயரையுடைய என் எம்பிரான் தன்னேடு போர் செய்கின்ருயா? அல்லது உன் தந்தையின் தலைகளை(ப் பனங்காய்கள் போலத்) தள்ளுதற்காகவே வந்து நின்றிருக்கின்ற ஒப்பற்ற வள்ள லாகிய இராமனேடு போர் செய்கின்ருயோ? (சொல்) நீ சொன்னதை மறுக்கமாட்டோம் என (வீர மொழிகளை) வழங்கினன்; (யாரெனில்) பொன்மயமான மேரு மலையோடு ஒப்பாயின் அல்லது வேறு ஒரு பொருளோடு ஒப்பாகாத உயர்ந்த தோள்களையுடைய அனுமன்.

கு:—இந்திரசித்து அனுமனை 'நில்லடா' என ஒருமையாக விளித்துக் கூறியதற்கேற்ப, அனுமனும் தன் பெருமை புலப்பட அச்சொல்லால் விளித்துக் கூறவில்லையாயினும் அச் சொல் போன்று ஒருமை யுணர்த்துகின்ற 'டே' என்ற சொல் விரவுமாறு 'என்னொடே, பொருதியோ? என்ருற் போன்ற சொற்களை அமைத்துக் கூறியுள்ள நுட்பம் காண்க. டே, டேய், என்பன ஒருமை யுணர்த்துவதை உலக வழக்கில் காணலாம். இராவணன் பத்துத் தலைகளும் பனங்காய் போல்வன என்னுங் கருத்தால் 'தள்ள' என்ற வினையால் கூறினன். 'பனங்காய் தள்ளு' என்ற வழக்கு நோக்குக. இராவணன் தன் பத்துத் தலைகளையும் கொய்தல் இராமனுக்குப் பனங்காய் தள்ளுவது

போன்று எளிதாக இருக்கும் என்பது கருத்து. வள்ளலாம் மன் என்றது இராமனை. இராவணனை இராமன் அம்புதான் கொய்ய இயலும் என்பதை உணர்ந்தவன் அனுமன் ஆகலின், இங்ஙனம் அறுதியிட்டுக் கூறினான். இராவணன் செய்த தீமைக்கேற்றவாறு அவன் தலைகளைக் கொய்து தண்டித்துத் தூய்மையாக்கும் இராமனது பெருங் கருணையை நினைந்து 'தனி வள்ளலார் மன்' என்று சிறப்பித்தான். வரையாது வழங்குவோர் இரப்போர் கேட்டதை மறுது கொடுப்பது போல, இந்திரசித்து விரும்பிய போரை மறுது கொடுப்போம் என்று கூறுகின்ற அனுமனையும் வள்ளலாக்கி 'வழங்கினான்' என்ற வினையால், சொன்னான் என்பதை உணர்த்திய நயம் காண்க. பொன் என்றது, ஆகுபெயரான பொன்மலையாகிய மேருமலையை உணர்த்தியது. அனுமனது தோளோடு ஒப்பாதற்குரியது மலையாவதன்றிப் பொன்னாகாமையும் அறிக. பொரு - ஒப்பு (75)

## இந்திரசித்தின் தன் மேம்பாட்டுரை

8208. எங்கு நின்றன னிலக்குவப் பெயரவ்
வேழை யெம்பியதி காயனும்
சிங்கம் வந்தவனை வென்று தன்னுயி
ரெனக்கு வைத்ததொர் சிறப்பினான்
அங்க வன்றனை மலைந்து கொன்றுமுனி
வாற வந்தனன தன்றியும்
உங்க டன்மையி னடங்கு மோவுல
கொடுக்கும் வெல்கணை தொடுக்கினே.

எங்கு நின்றனன் இலக்குவப் பெயர்
அவ் ஏழை, எம்பி அதிகாயனும்
சிங்கம் வந்தவனை வென்று, தன் உயிர்
எனக்கு வைத்தது ஓர் சிறப்பினான் ?
அங்கு அவன்தனை மலைந்து கொன்று,
முனிவு ஆற வந்தனன் ; அது அன்றியும்,
உங்கள் தன்மையின் அடங்குமோ, உலகு
ஒடுக்கும் வெங்கணை தொடுக்கினே ?

பொ :—(இந்திரசித்து அனுமனை நோக்கி) என் தம்பி அதிகாயன் என்னும் (போர் செய்ய) வந்த சிங்கத்தைப் போன்றவனை வென்று தன்னுடைய உயிரை (நான் கொல்லுதற்கு என்று) வைத்துள்ள தொரு சிறப்பினை யுடையவனாகிய இலக்குவப் பெயரையுடைய அந்த

அறிவிலி எங்கு நின்றுளான்? நின்ற அவ்விடத்தே அவனொடு போர் செய்து அவனைக் கொன்று கோபம் ஆறுதற்காகவே வந்திருக்கின்றேன்; அதுவல்லாமலும் யான் உலக முழுமையுமே ஒடுக்கத் தக்க கொடிய அம்பைத் தொடுத்தேனாயின், அது உங்கள் அளவில் அடங்கி நிற்குமோ? (நில்லாது உலகத்தையும் அழிக்கும்).

கு:—'இலக்குவப்பெயரின் எம்பிரான்' என அனுமன் கூறிய உயர்மொழியைப் பொருது இந்திரசித்து இங்கு 'இலக்குவப் பெயரவ் வேழை' என இழித்துக் கூறுவானானன். ஏழை – அறிவிலி. அதிகாயனுயிரைப் போக்கித் தன்னுயிர்க்குத் தீங்கை வரவழைத்துக்கொண்ட அறிவிலி என்ற கருத்தால் இங்ஙனம் இந்திரசித்து இழித்துக் கூறினான். வந்தவனாகிய சிங்கத்தை என மாற்றுக. தன் தம்பி என்ற பற்றினால் வெற்றிகொள்ளாது இறந்த அதிகாயனையும் சிங்கம் என்று புகழ்ந்தான். சிங்கம் என்பது சிங்கம் போன்ற வீரனை உவமையாகு பெயராய் உணர்த்தியது. தன் தம்பியைக் கொன்ற இலக்குவன் உயிரைத் தான் கொல்லுதல் தப்பாது என்ற உறுதியால் 'தன்னுயிர் எனக்கு வைத்ததொர் சிறப்பினான்' என்றான். சிறப்பு என்பது குறிப்பு மொழி. சிறப்பிலாதவனாய் இறத்தற்குரியவன் என்றபடி. இலக்குவனைக் கொல்வதோடு என்போர் முடிந்துவிடாது, உங்கள்சேனை முழுமையும் அழிப்பேன் என்பான், உங்கள் தன்மையினடங்குமோ? என்றான். உலகத்தையே அழிக்கவல்ல என் கணையைத் தொடுத்தால் அது உங்களையும் உலகத்தையும் சேர்த்து அழித்துவிடும் எனத் தன் வில்லினாற்றலை இந்திரசித்து வியந்தவாறு. (76)

8209. ஆரு மென்படைஞ ரெய்த லின்றியய
லேக யானுமிகல் வில்லுமோர்
தேரி னின்றுமை யடங்க லுந்திரள்
சிரந்து ணிப்பெனிது திண்ணமால்
வாரு முங்களுடன் வானு ளோர்களையு
மண்ணு ளோரையும் வரச்சொலும்
போரு மின்றொரு பகற்க ணேபொருது
வெல்வென் வென்றலது போகிலேன்.

யாரும் என்படைஞர் எய்தல் இன்றிஅயல்
ஏக, யானும், இகல் வில்லும், ஓர்
தேரின் நின்று, உமை அடங்கலும்
திரள் சிரம் துணிப்பென்; இதுதிண்ணமால்;

வாரும் ; உங்களுடன் வானுளோர்களையும்
மண்ணுளோரையும் வரச் சொலும் ;
போரும், இன்றுஒரு பகற்கணே பொருது,
வெவ்வென் ; வென்று அலது போகலேன்.

பொ :—என் படைவீரர் யாரும் என்னோடு துணையாக வராமல் அப்புறம் விலகிச் செல்ல, யானும் வலிமைமிக்க வில்லும் ஒருதேரில் நின்று, உங்கள் அனைவருடைய திரளான தலைகளையும் துணித்து வீழ்த்துவேன் ; இது உறுதியாகும் ; (நீங்கள் எல்லோரும்) வாருங்கள் ; உங்களோடு விண்ணில் உள்ள தேவர்களையும், மண்ணிலுள்ள மக்களனைவரையும் துணையாக வரச்சொல்லுங்கள் ; இன்று ஒரு பகற்பொழுதிற்குள்ளே அனைவரோடும் போர்செய்து வெல்வேன் ; வென்று அல்லது மீண்டு போகமாட்டேன்.

கு :—கூட்டு ஒருவரையும் கொள்ளாது தனித்து நின்றே விண்ணுளோரும் மண்ணுளோரும் சேர்ந்து வரினும் வந்த அனைவரையும் வெல்லும் ஆற்றலுடைமையை இந்திரசித்து இதனால் புலப்படுத்தியவாறு. துணையாரும் இன்றி ஒரு வில்லையும் ஒரு தேரையுமே கொண்டு விண்ணவரையும் மண்ணவரையும் ஒரு பகலில் வெல்வேன் என்பதில் உறுப்புக்குறை விசேடம் என்னும் அணி அமைந்திருத்தல் காணலாம். யானும் இகல்வில்லும் தேரினின்று சிரந்துணிப்பேன் என்றது, தலைமைப் பொருளையும் தலைமையில் பொருளையும் விராயெண்ணித் தலைமைப் பொருட்டு வினை கொடுப்பவே தலைமையில் பொருளும் முடிந்தன வாவதோர் முறைமை பற்றி வந்தது ; 'தானுந் தேரும் பாகனும் வந்தென் நலனுண்டான்' என்புழிப்போல, வாரும், வரச்சொலும் என்பன, முன்னிலைப் பன்மையில் வந்த உம்மீற்று ஏவல் ; புதியன புகுதல் ; காலவகையினான்வழுவில வாயின. உல கொடுக்கும் வெங்கணை தொடுக்கின் உங்கள் தன்மையில் அடங்குமோ ? என மேற்கூறியதற்கேற்ப இங்கும் 'வானுளோர்களையும் மண்ணுளோரையும் வரச்சொலும்' என்றான். போரும் பொருது வெல்வென் என்றியையும். இன்று ஒரு பகற்கண் வெல்வேன் என்றது. குறுகிய காலத்தில் பெரிய வெற்றிபெறுவேன் என்று தன் மேம்பாட்டை யுணர்த்தியவாறு. வென்றலது போகேன் என்று மீட்டுங் கூறியது, வெற்றியுறுதி என்பதை எதிர்மறை முகத்தானும் வற்புறுத்தியவாறு. (77)

## இந்திரசித்தும் அனுமனும் போர்செய்தல்

8210. என்று வெம்பகழி யேழு நூறுமிரு
நூறும் வெஞ்சிலைகொ டேவினன்
குன்று நின்றனைய வீர மாருதிதன்
மேனி மேலவை குழுக்களாச்
சென்று சென்றுருவ லோடும் வாளெயிறு
தின்று சீறியொரு சேமவன்
குன்று நின்றது பறித்தெ டுத்தவனை
யெய்தி நொய்தினிது கூறினன்.

என்று, வெம்பகழி, ஏழுநூறும், இருநூறும்,
வெஞ்சிலை கொடு ஏவினன்
குன்று நின்றனைய வீர மாருதிதன்
மேனிமேல் அவை குழுக்களாய்ச்
சென்று சென்று உருவலோடும், வாள்
எயிறு தின்று சீறி, ஒரு சேமவன்
குன்று நின்றது பறித்து எடுத்து,
அவனை எய்தி, நொய்தின் இது கூறினன்.

பொ:—என்று கூறிக்கொண்டே கொடிய தொள்ளாயிரம் அம்புகளை வெவ்விய வில்லினைக் கொண்டு எய்தான்; அந்த அம்புகள் ஒரு குன்றம் நின்றாற்போன்ற தோற்றத்தையுடைய வீரமிக்க அனுமன் உடம்பின்மேல் கூட்டமாகச் சென்று சென்றுபட்டு ஊடுருவிச் செல்லுதலும், (அந்த அனுமன்) தன் வெண்மையான பற்களைக் கடித்து, கோபித்துக்கொண்டு பாதுகாப்பில் நின்றதாகிய வலிய குன்றினைப் பறித்து எடுத்துக்கொண்டு அந்த இந்திரசித்தினை விரைந்து நெருங்கி இதைச் சொன்னான்.

கு:—சீறும்போது பல்லைக் கடித்தல் இயல்பு ஆதலின் 'வாளெயிறு நின்று சீறி' என்றார். சேமத்தேர் போலச் சேமக் குன்றும் இருந்தது போலும். பின் உதவப் பாதுகாப்பில் வைக்கப் பட்ட மலை என்க. நொய்து - விரைவு. (78)

## அனுமன் இந்திரசித்தின் மலையை எறிதல்

8211. தும்பி யென்றுலகி னுள்ள யாவையவை
யேவையுந் தொகுபு துள்ளுதாள்
வெம்பு வெஞ்சின மடங்க லொன்றின்வலி
தன்னை நின்றெளிதின் வெல்லுமோ

தம்பி தம்பியென தெம்பி ரான்வரு
துணைத்த ரிக்குலை நலித்தியேல்
அம்பின் முந்தியுன தாவி யுண்ணுமிது
காவடா சிலைவ லாண்மையால்.

தும்பி என்று உலகின் உள்ள யாவை
அவை ஏவையும் தொகுபு, துள்ளுநாள்
வெம்பு வெஞ்சின மடங்கல் ஒன்றின்
வலிதன்னை இன்று எளிதின் வெல்லுமோ?
நம்பி தம்பி, எனது எம்பிரான்,
வருதுணைத் தரிக்கிலை நலித்தியேல்
அம்பின் முந்தி உனது ஆவி உண்ணும்
இது; கா, அடா! சிலைவல் ஆண்மையால்.

பொ:—யானை என்று பெயர்பெற்று உலகத்தில் உள்ளன எவையோ அவை யாவையும் ஒன்றுகூடி, துள்ளிக் குதித்தற்குரிய கால்களையும் கொதிக்கின்ற கொடிய கோபத்தையும் உடைய சிங்கம் ஒன்றின் வலிமையை எதிர்த்து நின்று எளிதாக வென்றுவிடுமோ? (அதுபோல, உலகிலுள்ள அரக்கர் யாவரும் ஒன்று திரண்டு வந்தாலும் என்னை வெல்ல வியலாது) இராமனுடைய தம்பியாகிய எம்பிரான் வருமளவு தரிக்காமல் என்னை வருத்துவாயானால், நின் அம்பிற்கு முந்திவந்து உன் உயிரை உண்டுவிடும் இம்மலை. உன் வில் வீரத்தால் உன்னைக் காப்பாற்றிக்கொள்ளடா!

கு:—தும்பி - யானை. முன்னிரண்டடிகளும் ஒட்டணி. யானை போன்ற அரக்கர் பலர் கூடினாலும் சிங்கம் போன்ற என்னை வெல்ல இயலாது என்பது கருத்து. தரித்தல் - பொறுத்தல். உன்னம்பு இம்மலையை அழிப்பதற்கு முன் இம்மலை உன் உயிரை உண்ணும் தன்மையது; நின் வில் வீரத்தால் உன்னைக் காத்துக்கொள் பார்ப்போம் என்றவாறு. கா - பாதுகாத்துக்கொள். இது என்றது, அனுமன் கையிலிருந்த மலையை. அடா என்றது, இகழ்ச்சிக் குறிப்பால் இந்திரசித்தினை விளித்தது. இலக்குவனோடு போர்செய்ய விரும்புகின்றாய் என வாளா இருந்தேனே அன்றிப் போர்செய்ய இயலாமையால் அன்று; அந்த அமையத்தில் அம்பு எய்தல் முறையன்று என்பான் 'தரிக்கிலை நலித்தியேல்' என்றான். (79)

## அனுமன் எறிந்த மலை இந்திரசித்தின் மார்பில் பட்டுத் துகளாதல்

8212. செருப்ப யிற்றிய தடக்கை யாளிசெல
விட்ட குன்றுதிசை யானையின்
மருப்பை யுற்றதிர டோளி ராவணன்
மகன்றன் மார்பினுயிர் வச்சிரப்
பொருப்பை யுற்றதொர் பொருப்பெ னக்கடி
தொடிந்தி டிந்துதிசை போயதால்
நெருப்பை யுற்றதொ ரிரும்பு கூடமுற
நீறு பட்டது நிகர்த்ததால்.

செருப் பயிற்றிய தடக்கை ஆளி செல
விட்ட குன்று, திசை யானையின்
மருப்பை உற்ற திரள்தோள் இராவணன்
மகன் தன் மார்பின், நெடு வச்சிரப்
பொருப்பை உற்றது ஓர் பொருப்பு எனக்
கடிது ஒடிந்து இடிந்து, திசைபோயதால்;
நெருப்பை உற்றது ஓர் இரும்பு கூடம்
உற, நீறுபட்டது நிகர்த்ததால்.

பொ:—போர்ப் பயிற்சி பெற்றுள்ள பெரிய கையையுடைய சிங்கம் போன்ற அனுமன், செல்லுமாறு வீசிய மலை – திக்கு யானைகளின் கொம்புகளைப் பதியப் பெற்றுள்ள திரண்ட தோளையுடையவனாகிய இராவணன் மகன் இந்திரசித்தின் மார்பில் உயர்ந்த வச்சிர மலையைத் தாக்கிய பிறிதொரு மலையைப்போலத் (தாக்கி) விரைவாக முரிந்து இடிபட்டுத் துகளாய்த் திசைகளில் சிதறிப்போவது; நெருப்பில் பொருந்திக் காய்ந்த ஓர் இரும்பு சம்மட்டியால் அடிக்கப்பட்டுப் பொடியாய்ச் சிதறியதையும் ஒத்தது.

கு:—ஆளி என்றது, சிங்கம்போன்ற வீரமுடைய அனுமனை. செரு - போர். போரில் பழகிய கையினால் வீசிய மலையும் இந்திரசித்தின் வலிமையை மெலிவு செய்யவில்லை என்ற கருத்துப் புலப்படச் 'செருப்பயிற்றிய தடக்கை ஆளி செயவிட்ட குன்று' எனச் சிறப்பிக்கப்பட்டது. தந்தையொப்பான் மகன் என்ற கருத்துப் புலப்படத் 'திசையானையின் மருப்பையுற்ற திரள்தோள் இராவணன் மகன் தன் மார்பின்' என்று மரபு கூறினர். திசையானைகளின் மருப்பொசித்த மார்பினன் ஆகிய இராவணனுக்கு மகன் மார்பும் தந்தையின் மார்புபோன்றே வலிமையுடையது ஆதல் இதனல்

புலப்படுத்தியவாறு காணலாம். வச்சிரமலை போன்றது இந்திரசித்தின் மார்பு என்றவாறு. கல்மலை வச்சிரமலையைத் தாக்கினால் கல்மலையே உடைதல்போல இந்திரசித்தின் மார்பில் தாக்கிய மலை உடைந்து துகளாயது என்றவாறு. இல்பொருளுவமை. பழுக்கக் காய்ச்சிய இரும்பு போன்றது அனுமன் எறிந்த மலை; சம்மட்டி போன்றது இந்திரசித்தின் மார்பு. சம்மட்டி பட்டவுடன் காய்ச்சிய இரும்பு துகளாதல்போல, இந்திரசித்தின் மார்பு பட்டவுடன் அனுமன் எறிந்த மலை துகளாயிற்று என வேறும் ஓர் உவமை கூறியவாறு. கூடமுற நீறுபட்டதும் நிகர்த்தது என்புழி உம்மை, இறந்தது தழுவிய எச்ச உம்மை; முன்பு 'வச்சிரப் பொருப்பையுற்ற தோர் பொருப்பென' என்று கூறிய உவமையைத் தழுவியது. கூடம் - சம்மட்டி. ஆல் இரண்டும் அசைநிலை. (80)

## இந்திரசித்து அனுமன்மேல் அம்புகளை எய்தல்

8213. விலங்கன் மேல்வர விலங்கல் வீசிய
விலங்க னீறுபடு வேலையில்
சலங்கை மேனிமிர வெஞ்சினந் திருகி
வஞ்சன் மேனிமிர் தருக்கினன்
வலங்கொள் பேருலக மேரு வோடுடன்
மறிக்கு மாருதிதன் வாசநா
றலங்கன் மார்பினெடு தோளி னேடுருவ
வாயி ரஞ்சர மழுத்தினன்.

விலங்கல்மேல் வர விலங்கல் வீசிய
விலங்கல் நீறு படு வேலையில்,
சலம் கைமேல் நிமிர, வெஞ்சினம் திருகி,
வஞ்சன்மேல் நிமிர் தருக்கினன்,
வலம் கொள் பேர் உலகம் மேருவோடு உடன்
மறிக்கும் மாருதிதன் வாசம் நாறு
அலங்கல் மார்பும் உயர் தோளும் ஊடுருவ,
ஆயிரம் கரம் அழுத்தினன்.

பொ :—தன்மலை போன்ற மார்பின்மேல் மலைபோன்ற தோற்றமுடைய அனுமன் வீசிய மலை துகளாகியபொழுதில் – வஞ்ச நெஞ்சத்தானாகிய இந்திரசித்து, மாறுபாடு ஓங்கக் கொடிய கோபம் முதிர்ந்து மிகவிஞ்சிய செருக்குக் கொண்டவனாய், வலிமைகொண்ட பெரிய உலகத்தை மேருமலையோடு கீழ்மேலாகத் திருப்பவல்ல

அனுமானது வாசனைவீசும் மாலையணிந்த மார்பிலும் தோளிலும் உருவுமாறு ஆயிரம் அம்புகளை எய்தான்.

கு :—விலங்கல் மூன்றில் முன்னையது இந்திரசித்தின் மார்பை உவமையாகு பெயராய் உணர்த்தியது. இரண்டாவது விலங்கல் உவமையாகு பெயராய் அனுமனை உணர்த்தியது. மூன்ருவது விலங்கல் மலை என்ற பொருளது. சலம் - மாறுபாடு. மேல் நிமிர் தருக்கினன் என்றது இந்திரசித்தினை. அனுமன் வீசிய மலை தன் மார்பில் பட்டுத் துகளானது கண்டவுடன் அவனுக்குச் செருக்குமேல் நிமிர்வதாயிற்று. அனுமனது ஆற்றலைப் புலப்படுத்த 'வலங்கொள் பேருலக மேருவோடுடன் மறிக்கும் மாருதி' என்ருர். மறித்தல், கீழ் மேலாய் மாற்றுதல். வாசநாறு அலங்கல் மார்பு என்றது, இந்திரன் கொடுத்த பொற்ருமரை மாலையை அனுமன் அணிந்திருந்தமை புலப்படுத்தியவாறு என்னலாம். (81)

அனுமன் தளர நீலன் இந்திரசித்தை எதிர்த்தல்

8214. ஒன்று போல்வனவொ ராயி ரம்பகழி
யூடு போயுருவ வாடகக்
குன்று காலெறிய மெய்கு லைந்திடை
குலுங்க நின்றனைய கொள்கையான்
மன்ற னறுதட மேனி மேலுதிர
வாரி சோரவரு மாருதி
நின்று தேறுமள வின்கண் வெங்கண்ணடல்
நீலன் வந்திடை நெருக்கினன்.

ஒன்று போல்வன ஓராயிரம் பகழி
ஊடுபோய் உருவ, ஆடகக்
குன்று கால்எறிய மெய்குலைந்துஇடை
குலுங்க நின்றனைய கொள்கையான்,
மன்றல் நாறுதட மேனிமேல் உதிர
வாரி சோரவரும் மாருதி,
நின்று தேறும் அளவின்கண், வெங்கண் அடல்
நீலன் வந்து இடை, நெருக்கினன்.

பொ :—(இந்திரசித்துவிட்ட) ஒன்றுபோன்ற ஆயிரம் அம்புகள் மார்பில் ஊடுருவிச்செல்ல, பொன்மலையாகிய மேரு, பெருங்காற்று வீசியதால் வடிவம் குலைந்து நடுவிடம் எல்லாம் நடுங்க நின்ருற் போன்ற தன்மையனாய் மணம் வீசுகின்ற பெரிய மேனிமேல் இரத்த

வெள்ளம் ஒழுகுதலால், போர் செய்யவந்த அனுமன், சிறிது நேரம் நின்று இளைப்பாறும் அளவில் கொடிய கண்ணையுடைய வலிமைமிக்க நீலன் நடுவே வந்து இந்திரசித்தை எதிர்த்தான்.

கு :—கொடுமையில் ஒரு தன்மையவான அம்புகள் என்பார், 'ஒன்றுபோல்வன வொராயிரம் பகழி' என்றார். பொன்னிறமும் பெருந்தோற்றமும் உடைய அனுமன், இந்திரசித்தின் அம்புகளால் தளர்ச்சியுற்றமைக்குப் பொன்னிறமுள்ள மேருமலை பெருங்காற்றால் மெய்குலைந்து நடுங்குதல் உவமை. கொள்கை இங்கு இயல்பினை உணர்த்தியது. மன்றல் - வாசனை. நல்லிலக்கணமுள்ள உடம்புக்கு இயற்கை மணம் உண்டு ஆதலின் அனுமன் மேனியை 'மன்றல் நாறு தடமேனி' என்றார். சோரி சோர்தலால் நின்று, தேறும் அளவின்கண் என்க. போர் செய்யவந்த அனுமன் சோர்ந்து நிற்றற்கு அவன் மேனிமேல் உதிரவாரி சோர்தலே காரணம் என்க தேறும் அளவின் கண் என்றது, சோர்வு தெளியும் அளவில், என்ற வாறு இடைவந்து நெருக்கினான் என்க. நெருக்குதலாவது எதிர்த்தல். (82)

## நீலன் எறிந்த மலையை இந்திரசித்து அம்பினால் பொடி செய்தல்

8215. நீல னின்றதொரு நீல மால்வரை
நெடுந்த டக்கையி னிடந்துநேர்
மேலெ ழுந்தெரி விசும்பு செல்வதொரு
வெம்மை யோடுவர வீசலும்
சூல மந்தக னெறிந்த தன்னது
துணிந்து சிந்தவிடை சொல்லுறும்
கால மொன்றுமறி யாம லம்புகொடு
கல்லி னானெடிய வில்லினான்.

நீலன் நின்றது ஒரு நீலமால்வரை
நெடுந்தடக்கையின் இடந்து, நேர்
மேல் எழுந்து, எரி விசும்பு செல்வது
ஒரு வெம்மையோடு வர வீசலும்
சூலம் அந்தகன் எறிந்தது அன்னது
துணிந்து சிந்த, இடை சொல்லுறும்
காலம் ஒன்றும் அறியாமல், அம்புகொடு
கல்லினான், நெடிய வில்லினான்.

பொ :—நீலன் பக்கத்தி லிருந்ததாகிய ஒரு நீலநிறமுடைய பெரிய மலேயைத் தன் நீண்ட கையால் பெயர்த்து எடுத்து, நெருப்பு மேல் எழுந்து விண்ணில் செல்கின்றது போன்ற வெப்பத்தோடு இந்திரசித்தின் நேரே செல்லுமாறு வீசுதலும், நீண்ட வில்லேயுடைய இந்திரசித்து, எமன் எறிந்ததாகிய சூலம் போன்றதாகிய அம்மலே துண்டுபட்டுச் சிதறுமாறு, நடுவே கணக்கிட்டுச் சொல்லத்தக்க காலம் சிறிதும் அறியமுடியாதபடி, தன் அம்புகளேக் கொண்டு சிதைத்தான்.

கு :—நீலன் எறிந்த மலே, விரைந்து செல்லும் வெப்பத்தால், நெருப்புப் போன்றது ; கொடுமையால், எமனுடைய சூலம் போன்றது, என்றவாறு. வில்லினுன் அம்புகொடு கல்லினுன் என இயையும். நீலன் மலே யெறிந்ததற்கும் இந்திரசித்து அம்பு எய்து அதனேச் சிதைத்தற்கும் கால இடையீடு இல்லே என்பார், இடை சொல்லுறும் காலம் ஒன்றும் அறியாமல், என்ருர். நீலன் மலேயை யெறிந்த அப்போதே, இந்திரசித்து அம்பை எய்து அம்மலேயைச் சிதைத்து விட்டான் என்றவாறு. கல்லுதல், இங்குச் சிதைத்தலே உணர்த்தியது. (83)

## இந்திரசித்தின் அம்பு துளேக்க நீலன் நடுங்குதல்

8216. ஊக மெங்குமுயி ரோடு நின்றனவு
மோட வானவர்க ளுள்ளமும்
மோக மெங்குமுள வாக மேருவினு
மும்ம டங்குவலி திண்மைசால்
ஆக மெங்கும்வெளி யாக வெங்குருதி
யாறு பாயவன லஞ்சுவாய்
நாக வெங்கணகு வாளி பாய்தொறு
நடுங்கி ஞன்மலே பிடுங்கினுன்.

ஊகம் எங்கும் உயிரோடு நின்றனவும்
ஓட, வானவர்கள் உள்ளமும்
மோகம் எங்கும் உளவாக, மேருவினும்
மும்மடங்கு வலி திண்மை சால்
ஆகம் எங்கும் வெளிஆக, வெங்குருதி
ஆறு பாய, அனல் அஞ்சுவாய்
நாக வெங்கண் நகு, வாளி
பாய்தொறும் நடுங்கினுன் மலேபிடுங்கினுன்.

பொ :—(இறந்தவை போக) உயிரோடு நின்ற வானரங்களும் அஞ்சி ஓடவும், விண்ணில் உள்ள தேவர்கள் மனத்திலும் மற்றை யோர் மனத்திலும் மயக்கம் உண்டாகவும், மேருமலையினும் மும்மடங் குயர்ந்த வலிமையும் திண்மையும் மிக்க (நீலன்) உடம்பு எங்கும் (சல்லடைக் கண்களைப் போலத் துளைபட்டு) வெளியாகவும் வெவ்விய இரத்த ஆறு பாயவும் நெருப்பும் அஞ்சுதற்குரிய வாயினையுடைய நாகம்போன்ற கொடுமை விளங்கும் அம்புகள் தன்மேல் பாயுந் தோறும், மலையைப் பிடுங்கி எறிந்த நீலன் நடுங்குவா னாயினன்.

கு :—உயிரோடுள்ள குரங்குகளும் நீலனுக்குத் துணைசெய்ய வியலவில்லை என்பார் உயிரோடு நின்றனவும் ஓட என இறந்தது தழுவிய எச்ச உம்மை கொடுத்துக் கூறினர். இறந்த குரங்குகள் துணையாகாமையே யன்றி உயிர் உள்ள குரங்குகளும் துணைசெய்யா மல் ஓட என்பது கருத்து. உயிரோடு நின்ற ஊகமும் எங்கும் ஓட எனப் பிரித்து இயைக்க. மோகம் – மயக்கம்; திகைப்பு. எங்கும் உளவாக என்றது, விண்ணவரல்லாத மற்றையோர் மனத்தும் மோகம் உண்டாக என்றவாறு. திண்மை - கனம் நீலன் உடம்பின் திண்மையாலும் வலிமையாலும் மேருமலையினும் மும்மடங்கு சிறந் தவன் என்றவாறு. ஓட, மோகம் உளவாக, வெளியாக, பாய, வாளி பாய்தொறும் மலை பிடுங்கினன் நடுங்கினன் என இயையும். நீலன் இந்திரசித்தின் அம்பினால் நடுங்கியபோது எஞ்சியிருந்த வானரங்கள் அஞ்சி ஓடின; தேவரும் பிறரும் மனம் மயங்கினர். நீலன் உடம்பு துளைகள்பட்டு வெளியாயது; குருதியாறுகள் அவனுடம்பில் பெருகின என்க. மலையைப் பிடுங்கும் ஆற்றலுடைய நீலனும் இந்திரசித்தின் அம்புக்கு ஆற்றாது நடுங்கலானான் என அவ் விந்திர சித்தின் வில் வீரத்தை வியந்தவாறு. வெங்கண் – கொடுமை. நகுதல் இங்கு விளங்குதலை உணர்த்தியது. பாய்தொறும் என்றதால், அம்புகள் பலமுறை பாய்ந்தமை புலப்படுத்தியவாறு. நாகம் போன்ற வாளி என்க. அஞ்சுவாய் நாகம் என நாகத்திற்கு அடையாக்கி, ஐந்தலை நாகம் போன்ற அம்பு எனலும் ஆம். (84)

அங்கதன் வந்து இந்திரசித்தின்மேல் மலையை எறிதல்

8217. மேரு மேருவென வல்ல வல்லவென
வேரி னேடுநெடு வெற்பெலாம்
மாரின் மேலுமுயர் தோளின் மேலும்வர
வாலி காதலன் வழங்கினன்

சேரு மேயவை தனுக்கை நிற்கவெதிர்
செல்லு மேகடிது செல்லினும்
பேரு மேகொடிய வாளி யான்முறி
பெறுக்க லாவகை நுறுக்கினன்.

'மேரு, மேரு' என, 'அல்ல, அல்ல' என
வேரினோடு நெடுவெற்பு எலாம்,
மாரின் மேலும் உயர்தோளின் மேலும்உற,
வாலி காதலன் வழங்கினன்;
சேருமே அவை, தனுக் கைநிற்க ? எதிர்
செல்லுமே ? கடிது செல்லினும்
பேருமே ? கொடிய வாளியால் முறி
பெறுக்கலாவகை நுறுக்கினன்.

பொ :—'இவை, மேருமலையே' எனச் சிலர் சொல்லவும், சிலர் 'மேருமலை அல்ல அல்ல' என உண்மை யுணர்ந்து சொல்லவும் நீண்ட மலைகளை யெல்லாம் வேரோடு (பிடுங்கி இந்திரசித்தின்) மார்பின்மேலும் உயர்ந்த தோளின்மேலும் செல்லுமாறு அங்கதன் (ஒன்றன்பின் ஒன்ருக) எறிந்தான்; அம்மலைகள் இந்திரசித்தின் கையில் வில்லிருக்கும்போது அவன்மேல் சென்று சேருமோ? அவன் எதிரில்தான் செல்லுமோ? அப்படியே விரைந்து சென்ருலும் சிதைவுருது பெயருமோ? கொடிய அம்புகளால், அம்மலைகள் துண்டு களாம் தன்மை பெருதபடி (உருத்தெரியாது பொடியாமாறு) நுறுங் கச் செய்தான்.

கு :—மலையின் பெருமைகண்ட சிலர் மேருமலை எனவும் அல்ல வெனவும் இருதலைப்பட்டுக் கூறுதற்குரிய மிகப் பெரிய மலைகளை வேரோடு பறித்து, அங்கதன், இந்திரசித்தின்மேல் வீசினன் என்க. மார்பு என்ற சொல் எதுகைநோக்கி மார் என மருவி நின்றது. இது புதியன புகுதல். இக்காலத்து வழக்கிலும் மார்பு மார் என்று வழங்கு வது காணலாம். 'செல' என்ற பொருளில் 'வர' என்ற சொல் வந்தது. இடவழு வமைதியாகக் கொள்க. வாலிகாதலன் என்றது வாலியின் அன்புக்குரிய மகனுகிய அங்கதனை உணர்த்தியது. பெரு மலைகளை வீசிக்கொண்டே இருந்தான் என்பார், வழங்கினன் என்ருர். தனுக்கை நிற்க அழுவை சேருமே? எதிர் செல்லுமே? கடிது செல்லினும் பேருமே? என வினவினர். முறி – துண்டம் முறிபெறுகலாவகை என்றது, 'துண்டங்களாக உருப்பெற்றுத் தோன்ருதவண்ணம்' என்றவாறு. உருவில்லாது பொடியாகப்

போமாறு நுறுக்கினான் என்க. பெறுகலாவகை என்றது, ஓசை நோக்கி விரித்தல் விகாரம் பெற்று 'பெறுக்கலாவகை' எனவாயது. (85)

அங்கதன் இந்திரசித்தின் அம்பினால் மயங்கி வீழ்தல்

8218. நெற்றி மேலுமுயர் தோளின் மேலு
நெடு மார்பின் மேலுநிமிர் தாளினும்
புற்றி னூடு நுழை நாக மன்னபுகை
வேக வாளிகள் புகப்புகத்
தெற்றி வாளெயிறு தின்று கைத்துணை
பிசைந்து கண்களெரி தீயுக
வற்றி யோடுதிர வாரி சோர்வுற
மயங்கி னானில முயங்கினான்.

நெற்றிமேலும், உயர் தோளின்மேலும்,
நெடுமார்பின்மேலும், நிமிர் தாளினும்
புற்றினூடு நுழை நாகம் அன்ன,
புகை வேக வாளிகள் புகப்புக,
தெற்றி வாள் எயிறு தின்று, கைத்துணை
பிசைந்து, கண்கள் எரி தீ உக,
வற்றி ஓடு உதிர வாரி சோர்வுற,
மயங்கினான், நிலம் முயங்கினான்.

பொ :—அங்கதன், தன் நெற்றிமேலும் உயர்ந்த தோள்களின் மேலும், அகன்ற மார்பின்மேலும் நீண்ட கால்கள்மேலும், புற்றில் நுழைகின்ற பாம்புபோன்ற, புகைந்துகொண்டு வேகத்தோடு வருகின்ற அம்புகள் பாயப்பாயத் தடுமாறி, வெள்ளிய பற்களைக் கடித்துக்கொண்டு, இருகைகளையும் பிசைந்துகொண்டு, கண்கள் எரிகின்ற தீயைச் சொரிய, வாடி (த்தன் உடம்பிலிருந்து) விரைந்து வெளிப்படுகின்ற இரத்த வெள்ளம் பெருக, உணர்விழந்தவனாய்த் தரையில் விழுந்தான்.

கு :—அங்கதன் உடம்பில் இந்திரசித்தின் கூரிய அம்புகள் நுழைவது புற்றில் நுழையும் பாம்புகள் போலத் தோன்றின என்றவாறு. புகைந்துகொண்டு விரைந்துவரும் அம்புகளைப் 'புகைவேக வாளிகள்' என்றார். அம்புகட்கும் சினக்கனல் கூறப்படுதலுண்டு ஆகலின், இங்குப் புகையும் கூறப்பட்டது. தெற்றுதல்-தடுமாறுதல்.

துன்பத்தின் மிகுதி பொறுக்க முடியாமையால் பல்லைக் கடித்தல் இயல்பு. வாளிகள் புகப்புக, தெற்றி, தின்று, பிசைந்து, கார்கள் தீயுக, வற்ற? சோர்வுற, மயங்கினுனாய் நிலம் முயங்கினான் என முற்றெச்சமாக்கி முடிக்க. நிலமுயங்கினான் என்றது, தரையில் விழுந்தான் என்றவாறு. நாகமன்ன வாளிகள் என இயையும். புகை வேக வாளிகள் என வாளிக்கு அடையாக்குக. (86)

### வானரசேனையின் சிதைவு கண்ட இலக்குவன் சினந்து சொல்லத் தொடங்கியது

8219. மற்றை வீரர்கட மார்பின் மேலுமுயர்
தோளின் மேலுமழை மாரிபோல்
கொற்ற வெங்கணை யுலக்க வெய்தவை
குளிப்ப நின்றுடல் குலுங்கினர்
இற்ற விந்தன பெரும்ப தாதியுயி
ருள்ள வெங்கணு மிரிந்தவப்
பெற்றி கண்டிளைய வள்ள லொள்ளெரி
பிறந்த கண்ணனிவை பேசினன்.

மற்றை வீரர்கள்தம் மார்பின்மேலும், உயர்
தோளின்மேலும், மழை மாரிபோல்
கொற்ற வெங்கணை உலக்க, எய்தவை
குளிப்ப நின்று, உடல் குலுங்கினர்;
இற்று அவிந்தன, பெரும் பதாதி; உயிர்
உள்ள எங்கணும் இரிந்த; அப்
பெற்றி கண்டு, இளைய வள்ளல், ஒள்
எரி பிறந்த கண்ணன் இவை பேசினன்.

பொ:—மற்றைய வீரர்கள் தம் மார்பிலும் தோள்களிலும், மழைத்தாரைகள் போல - அவர்கள் அழியுமாறு, இந்திரசித்து எய்தனவாகிய வெற்றிவாய்ந்த கொடிய - அம்புகள் அழுந்தின மையால், அசையாமல் நின்று உடல் நடுங்கலாயினர்; பெரிய காலாட் படையாகிய வானரசேனை இறந்து அழிந்தன; உயிர் உள்ள வானரங்கள், எல்லா விடங்களிலும் அஞ்சி ஓடினன; இளைய வள்ளலாகிய இலக்குவன் அந்தத் தன்மையைக் கண்டு ஒளிமிக்க நெருப்புப்பொறி பறக்கும் கண்களை யுடையனாய் (வீடணனிடம்) இவற்றைச் சொல்லலானான்.

கு :—அனுமன், நீலன், அங்கதன் என்போர் இந்திரசித்தின் அம்புகளால் தளர்ச்சி யுற்றமை முன் கூறினராகலின், அவரை ஒழிந்த வீரர்களை மற்றை வீரர்கள் என்றார். மாரி என்பது இங்குத் தாரை என்ற பொருளில் வழங்கப்பட்டது. மழை மாரிபோல் கணை குளிப்ப என இயையும். மழைத்தாரைக்கும் கணைக்கும் ஒற்றுமை உண்மை, " கரம்பயில் நெடுந்துளி நிமிர்ந்த புயல் " (கார்காலப் – 83) என முன் வந்துள்ளமையால் அறியலாம். உலத்தல் – அழிதல். உலக்க எய்தவையாகிய வெங்கணை, வீரர்கள் தம் மார்பின்மேலும் தோளின்மேலும் மழை மாரிபோல் குளிப்ப, நின்றுடல் குலுங்கினர் என இயைக்க. பதாதி என்றது, ஊர்தியில்லாத காலாள் வீரர்களை. இந்திரசித்தின் அம்புகளால் வானரசேனையின் பெரும்பகுதி அவிந்தன ; எஞ்சிய வானரங்கள் இரிந்தோடின ; இந்நிலையை இலக்குவன் கண்டு வெகுண்டு வீடணனிடம் சில கூறுகின்றான் என்றவாறு. (87)

## இலக்குவன் சொன்னது

8220. பிழைத்தது கொள்கை போதப்
★ பெரும்படைத் தலைவர் யாரும்
உழைத்தனர் குருதி வெள்ளத்
துலந்தது முலப்பிற் றன்றே
அழைத்திவன் றன்னை யானே
யாருயிர் கொளப்ப டாதே
இழைத்தது பழுதே யன்றோ
வீடண வென்னச் சொன்னான்.

பிழைத்தது, கொள்கை போத ;
பெரும்படைத் தலைவர் யாரும்
உழைத்தனர், குருதி வெள்ளத்து ;
உலந்ததும் உலப்பிற்று அன்றே ;
அழைத்து இவன்தன்னை யானே
ஆருயிர் கொளப்படாதே ?
இழைத்தது பழுதே அன்றோ ? —
வீடண ! என்னச் சொன்னான்.

பொ :—வீடண ! நம் கொள்கை மிகவும் தவறிவிட்டது ; நம் பெரிய படைத்தலைவர்கள் எல்லாம் இரத்தவெள்ளத்தோடு வருந்தினார்கள் ; இறந்த நம் படையும் அளவிடற்கு உரியதன்று ; (எண்ணிறந்தன) இந்த இந்திரசித்தினை யானே போர்க்கு அழைத்து இவன்

அரிய உயிரை வாங்கியிருக்கப்படாதா? இத் தலைவர்களைப் போர் செய்யச் செய்தது வீண் செயலன்றோ?' என்ன இலக்குவன் கூறினான்.

கு:—கொள்கை என்றது, துணையொடும் சென்று பொருதல் வேண்டும் என்று முன்கொண்ட கொள்கையை. 'நண்ணின துணையொடும் பொருத னன்று' (29) என முன் வீடணன் கூறியுள்ளது காண்க. பெரும்படைத் தலைவர் என்றது, அனுமன், நீலன், அங்கதன் முதலியோரை. குருதி வெள்ளத்தோடு உழைத்தனர் என மூன்றனுருபு விரித்து இயைக்க. உழைத்தல் - வருந்துதல். உலத்தல்- இறத்தல்; உலப்பு - அளவு. இவன் என்றது, இந்திரசித்தினை யான் போர்க்கு அழைத்து இவனைக் கொன்றிருந்தால், படைத் தலைவர் வருத்தமும் வானரவீரர் இறத்தலும் நிகழாதிருக்கும் அன்றோ என்றவாறு. இழைத்தல் - செய்தல். யான் போர்செய்யாது படைத்தலைவரைப் போர்செய்யச் செய்தது வீணாயிற்று என்றவாறு. 'பழுது பயமின்றே' (தொல் - சொல் - 324) என்றது கொண்டு வீண் எனப் பொருள் கூறப்பெற்றது. (88)

8221. ஐயவீ தன்ன தேயா
லாயிரங் கோடி தேவர்
எய்தின ரெய்தி னார்க
ளீடுபட் டிரிந்த தல்லால்
செய்தில ரிவனை யொன்று
நீயிது தீர்ப்பி னல்லால்
உய்திற னுண்டோ வேறிவ்
வுலகினுக் குயிரோ டென்றான்

'ஐய! ஈது அன்னதே யால்;
ஆயிரங் கோடித் தேவர்
எய்தினர்; எய்தினார்கள்
ஈடுபட்டுஇரிந்தது அல்லால்,
செய்திலர் இவனை ஒன்றும்; நீ
இது தீர்ப்பின் அல்லால்,
உய்திறன் உண்டோ, வேறு இவ்
உலகினுக்கு உயிரோடு' என்றான்.

பொ:—ஐய! (நீ சொன்ன) இது உண்மையே; (முன்னொருகால் இந்த இந்திரசித்தோடு போர்புரிதற்கு) மேல் மேல் வந்தவர்களாகிய

எண்ணிலாத தேவர்கள் தம் வலிமை அழிந்து ஓடியதன்றி; இவனை ஏதும் செய்யமாட்டாராயினர்; இத்தகைய இவனுடைய வலிமையை நீ அழித்தால் அன்றி, இவ்வுலகத்திற்கு உயிரோடு உய்யும் திறம் வேறு உளதோ? என்று (வீடணன்) கூறினான்.

கு:—இலக்குவன் தனக்குத் தலைவன் ஆதலின் 'ஐய' என அவனை வீடணன் விளித்தான். ஐயன் – தலைவன். இலக்குவன் கூறியதை யுடன்பட்டவன் ஆதலின் 'ஈது அன்னதே' என்றான். நீ சொன்ன இது உண்மையே என்றவாறு. நீ இந்திரசித்தினை அழைத்துப் போர் செய்திருந்தால் நம் சேனைக்கு இந்தத் துன்பம் நேர்ந்திராது என்பது உண்மையே என்றவாறு. ஆயிரங்கோடி தேவர் என்றது, மிகப் பலர் என்னும் கருத்தினாற் கூறியது; தேவர் முப்பத்து முக்கோடியே என்பது வரையறை செய்யப்பட்ட தொகை யாதலின், இவ்வாறு கொள்ளுதலே முறை. மேலும் மேலும் தேவர் போர்செய்ய வந்தமை தோன்ற எய்தினர் எய்தினர்கள் என அடுக்கிக் கூறினர். இது என்றது, தேவர் பலராலும் வெல்ல வியலாத இந்திரசித்தின் வலிமையை. இந்திரசித்தின் வலிமையை இலக்குவன் அழித்தாலன்றி இவ்வுலகத்தில் வேறு ஒருவர் அழிக்க இயலாது என்பது குறிப்பிட்டவாறு. பதினான்கு ஆண்டு உறக்கம் இல்லாதவனாலே யன்றிப் பிறரால் கொல்லப்படாத வரம் பெற்றவன் இந்திரசித்து, என்ற உண்மை நினைந்து, இங்ஙனம் வீடணன் கூறினான் என்பர். இவனை நீ கொல்லாது விட்டால் இவ்வுலகத்தையே அழித்து விடுவான் என்ற கருத்தால், 'உய்திற னுண்டோ வேறிவ்வுலகினுக் குயிரோடு' என்று கூறினான். இதனால், இலக்குவனை வீடணன் ஊக்கியவாறும் ஆயிற்று. (89)

### இந்திரசித்து இலக்குவனை ஒற்றனால் துணிதல்

8222. என்பது சொல்லக் கேட்ட
விந்திர வில்லி னேடும்
பொன்பொரு மேக மொன்று
வருவது போல்கின் றனை
முன்பனை முன்பு நோக்கி
யிவன்கொலாம் பரதன் முன்னேன்
தன்பெருந் தம்பி யென்று
னுமெனச் சாரன் சொன்னன்.

என்பது சொல்லக் கேட்ட,
இந்திர வில்லி னேடும்
பொன் பொரு மேகம் ஒன்று
வருவது போல்கின்ருனே,
முன்பனே, முன்பு நோக்கி,
'இவன்கொலாம், பரதன் முன்னேன்—
தன் பெருந் தம்பி ?' என்ருன்
ஆம் எனச் சாரன் சொன்னன்.

பொ :—என்பதை (வீடணன்) சொல்லக் கேட்டவனுகிய - வான வில்லோடும் பொன்னேயொத்த மேகம் ஒன்று வருவதுபோல் வருகின்றவனும், வலியவனும் ஆகிய இலக்குவனே, (இந்திரசித்து) தன்னெதிரே நோக்கி, 'இவன்தானே பரதனுக்கு முன்னேனை இராமன் தன் பெரியதம்பி?' என்று வினவினன் ; சாரன் என்ற ஒற்றன் ஆம், எனச் சொன்னன்.

கு :—பொன்னிறமுடைய இலக்குவன் வில்லேந்திவரும் தோற்றம், இந்திர வில்லொடு வரும் பொன்னிற மேகம் போன்று தோன்றுதலால் இங்ஙனம் உவமை கூறினர். இல்பொருளுவமை ; மேகத்திற்குப் பொன்னிறம் இன்மையின் இல்பொருளாதல் காண்க. பொரு ஒப்புப்பொருளது. வருவதுபோல்கின்ருனே என்றமையால், இலக்குவனும் வீடணனும் உரையாடிக்கொண்டு வருகின்றமை புலனும். போல்கின்ருனே என்பது இரண்டனுருபேற்ற வினையாலணையும் பெயராதலின், கேட்ட என்ற பெயரெச்சத்திற்கு முடிபாயிற்று. போல்கின்ருனே முன்பனே என ஒரு பொருள்மேல் பலபெயர் பிரிவின்றி வந்தன. முன்பனே - வல்லமை யுடையவனே. இலக்குவன் தோற்றமே இந்திரசித்துக்கு வருபவன் இன்னனெனக் காட்டியதாகலின் 'வருபவன் யார் ?' என வினவாமல் இவன்கொலோ பரதன் முன்னேன் தன் பெருந்தம்பி?' என்று சாரனே வினவுவானுனன். பரதன் முன்னேன் என்றது இராமனே. சத்துருக்கனே விலக்க இலக்குவனேப் பெருந்தம்பி என்ருன். பெருமையுடைய தம்பி எனலும் ஆம். சுகன் சாரன் என்ற அரக்கர் வானரவேடத்தோடு வானரசேனையில் புகுந்து அங்குள்ள நிலையை அறிந்துவந்தமை ஒற்றுக் கேள்விப்படலத்தில் கூறப்பட்டுள்ளமை காணலாம். இராமன் சேனையில் வீடணன் அரக்கர்களேப் பற்றிக் கூறுவதுபோல அங்குச் சாரன் என்பவன் இராமன் படையிலுள்ளவரைப் பற்றிக் கூறுதற்கு உடன் இருக்கின்ருன் என்க. (90)

## அரக்க வீரர் இலக்குவனை எதிர்த்தல்

8223. தீயவ னிளவ றன்மேற்
செல்வதன் முன்னஞ் செல்கென்
றேயின ரொருவ ரின்றி
யிராக்கதத் தலைவ ரெங்கள்
நாயகன் மகனைக் கொன்றாய்
நண்ணினை நாங்கள் காணப்
போயினி யுய்வ தெங்கே
யென்றெரி விழித்துப் புக்கார்.

தீயவன் இளவல் தன்மேல்
செல்வதன்முன்னம், 'செல்க!' என்று
ஏயினர் ஒருவர் இன்றி,
இராக்கதத் தலைவர், 'எங்கள்
நாயகன் மகனைக் கொன்றாய்!
கண்ணினை நாங்கள் காண;
போய் இனி உய்வது எங்கே?'
என்று, எரி விழித்துப் புக்கார்.

பொ :—கொடியவனாகிய இந்திரசித்து, இலக்குவன்மேல் போர்க்குச் செல்வதற்கு முன்பு, இராக்கதத் தலைவர்கள் தம்மைச் 'செல்க' என்று ஏவினவர் ஒருவரும் இல்லாமலே (தாங்களாகவே முன்வந்து) 'எங்கள் தலைவன் மகனாகிய அதிகாயனைக் கொன்றவனே! நாங்கள் காண வந்துவிட்டாய் இனி எங்களிடத்திலிருந்து தப்பிச் சென்று பிழைப்பது ஏது' என்று நெருப்புப்போலக் கண்களை அகல விழித்துக்கொண்டு (இலக்குவன் முன்பு) புகுந்தார்கள்.

கு :—தீயவன் என்றது இந்திரசித்தினை. அரக்கர் தலைவர் பலர் தாமாகவே முன்வந்து இலக்குவனை எதிர்த்தார் என்பார். 'செல்கென்றேயின ரொருவரின்றி இராக்கதத் தலைவர் - புக்கார்' என்றார். 'நண்ணினை நாங்கள் காண' என்றமையால் அதிகாயனைக் கொன்ற இலக்குவனைக் கண்டு பழிதீர்த்துக் கொன்ற அரக்கர்கள் துடித்துக் கொண்டிருந்தமை புலப்படும். நாயகன் மகன் என்றது, இராவணன் மகனாகிய அதிகாயனை. எங்கள் கண்காண வந்துவிட்டமையால் எம்மிடத்தினின்று தப்பமுடியாது என்பார், 'போயினி உய்வதெங்கே' என்றார். இனி எம்மிடத்திலிருந்து தப்பி உய்வது என்பது எங்கே நடக்கப் போகின்றது? என்றவாறு. கண்கள் கோபத்தால் நெருப்புப்போல் தோன்றுமாறு விழித்துப் புகுந்தார் என்றவாறு. இலக்

குவன் போர் தொடங்குமுன் வானரவீரர் வந்து இந்திரசித்தோடு பொருததுபோல அரக்கர் வீரர், இந்திரசித்துப் போர் தொடங்குமுன் இலக்குவனோடு பொருதனர் என்க. (91)

இலக்குவன் எதிர்த்த அரக்கரை அம்பு கொண்டழித்தல்

8224. கோடிநூ றமைந்த கூட்டத்
திராக்கதர் கொடித்திண் டேரும்
ஆடன்மாக் களிறு மாவுங்
கடாவின ரார்த்து மண்டி
மூடினர் மூடினுரை முறை
முறை துணித்து வாகை
சூடின னிராமன் பாதஞ்
சூடிய தோன்ற றம்பி.

கோடி நூறு அமைந்த கூட்டத்து
இராக்கதர், கொடித்திண் தேரும்,
ஆடல் மாக் களிறும், மாவும்,
கடாவினர் ஆர்த்து மண்டி
மூடினர்; மூடினுரை முறை
முறை துணித்து, வாகை
சூடினன், இராமன் பாதம்
சூடிய தோன்றல் தம்பி.

பொ :—நூறுகோடி அளவாக அமைந்த கூட்டத்தினராகிய அரக்கர், கொடிகட்டிய திண்ணிய தேர்களையும், வலிமை மிக்க பெரிய யானைகளையும், குதிரைகளையும், ஊர்ந்தனராய் ஆரவாரித்துக் கொண்டு நெருங்கி இலக்குவனைச் சூழ்ந்து கொண்டார்கள்; அவ்வாறு சூழ்ந்து மொய்த்துக்கொண்டவர்களை - இராமனது பாதுகையை முடியாகச் சூடிக்கொண்டு சென்ற பரதனுக்குத் தம்பியாகிய இலக்குவன், முறை முறையே அம்புகளால் துண்டித்து, அழித்து, வெற்றிமாலை சூடினன்.

கு :—இராமன் பாதம் என்றது, இராமன்'து பாதுகையை. பரதன், இராமனை முடிசூடிக்கொள்ளுமாறு அழைத்தபோது வாராமையால், அவ் இராமனுடைய பாதுகையைக் கேட்டு வாங்கித் தலையில் சூடிக் கொண்டு சென்றமை நினைந்து 'இராமன் பாதம் சூடிய தோன்றல்' என அப்பரதன் குறிக்கப்பெற்றான். பரதன் தம்பி என்றது இலக்

குவனை. வாகை என்றது, வெற்றிபெற்ரோர் சூடுதற்குரிய பூமாலையை; வாகைப் பூவினுல் ஆயமாலையைச் சூடுதல் மரபு. வெற்றிபெற்ருன் என்பார், 'வாகை சூடினுன்' என்ருர். (92)

அரக்கர் படை அழிதல்

8225. அதிர்ந்தன வுலக மேழு
மனற்பொறி யசனி யென்னப்
பிதிர்ந்தன மலையும் பாரும்
பிளந்தன பிணத்தின் மேன்மேல்
உதிர்ந்தன தலைகண் மண்டி
யோடின வுதிர நீத்தம்
விதிர்ந்தன வமரர் கைகள்
விளைந்தது கொடிய வெம்போர்.

அதிர்ந்தன உலகம் ஏழும்;
அனற்பொறி அசனி என்னப்
பிதிர்ந்தன; மலையும் பாரும்
பிளந்தன; பிணத்தின் குன்றத்து
உதிர்ந்தன, தலைகள்; மண்டி
ஓடின உதிர நீத்தம்
விதிர்ந்தன, அமரர் கைகள்;
விளைந்தது கொடிய வெம்போர்.

பொ :—இலக்குவனது அம்பின் வேகத்தால் ஏழு உலகங்களும் அதிர்ச்சியுற்றன; அவ்வம்புகளிலிருந்து நெருப்புப் பொறிகள், இடியிலிருந்து பிதிர்தல் போலப் பிதிர்ந்து உதிர்ந்தன; பிணக்குவியல்களில் மேலும் மேலும் அரக்கர் தலைகள் அறுபட்டு உதிர்ந்தன; இரத்தவெள்ளம் கடலை நெருங்கி ஓடின; இவற்றைக் கண்டு தேவர் தம் கைகள் விதிர்விதிர்ப்புற்றன; கொடிய வெப்பமான போர் மூண்டது.

கு :—இலக்குவனது அம்பு ஆர்த்துச் செல்லுங்கால் ஏழு உலகங்களும் அதிர்ச்சியுற்றன என்க. அம்புகள் தீப்பொறி பறக்கச் சென்றன என்பார், 'அசனி என்ன அனற்பொறி பிதிர்ந்தன' என்ருர். இடிகளில் அனற்பொறி பிதிர்வதுபோல, அம்புகளில் அனற்பொறி பிதிர்ந்தன என்க. அம்புகளால் தலையறுக்கப்பட்டு வீழும் பிணங்களின்மேல் அறுபட்ட தலைகள் உதிர்ந்தன என்க. மண்டுதல் -

நெருங்குதல் ; விரைதலும் ஆம். அமரர்கள் வியப்பினுல் கைவிதிர்த்தனர் என்க. (93)

## இலக்குவன் விட்ட அம்புகளின் வீரச்செயல்கள்

8226. விட்டனன் விசிகம் வேகம்
விடாதன வீரன் மார்பில்
பட்டன வுலக மெங்கும்
பரந்தன பதாகைக் காட்டைச்
சுட்டன துரக ராசி
துணித்தன பணைக்கைம் மாவை
சுட்டன கூற்ற மென்ன
வடர்ந்தன வனந்த மம்மா

விட்டனன் விசிகம் வேகம்
விடாதன வீரன், மார்பில்
பட்டன ; உலகம் எங்கும்
பரந்தன பதாகைக் காட்டைச்
சுட்டன ; துரக ராசி
துணித்தன பனைக்கைம் மாவை
சுட்டன ; கூற்றம் என்ன
அடர்ந்தன ; அனந்தம் அம்மா.

பொ :—பெருவீரனை இலக்குவன் வேகம் குறையாத பல அம்புகளை விட்டான்; அவ்வம்புகள் அரக்கர் மார்பில் பட்டன; பின் உலகம் முழுவதும் பரவிச் சென்றன ; பெருங்கொடிகளின் திரளை எரித்தன ; குதிரைகளின் கூட்டத்தைத் துணித்தன ; பெரிய துதிக்கைகளையுடைய யானைகளைக் கொன்றன ; எமனைப்போல, (கொலைத் தொழிலைச் செய்துகொண்டு போர்க்களம் முழுவதும்) நெருங்கின.

கு :—வீரன் விசிகம் அனந்தம் விட்டனன் என்க. வேகம் விடாதன விசிகம் என்றது, வேகம் குறையாத அம்பினை. மார்பில் பட்டன என்றமையால் காலாட்படையைக் கொன்றமையும், பதாகைக்காட்டைச் சுட்டன என்றமையால் பதாகை கட்டிய தேர்ப்படையை அழித்தமையும் புலப்படுத்தியவாறு. நால்வகைப் படையில் மற்றை யிரண்டையும் துரகராதி துணித்தன ; பனைக்கைம்மாவை அட்டன என வெளிப்படக் கூறியுள்ளார். இதனுல் இலக்குவன் அம்புகள், இந்திரசித்தின் நால்வகைப் படைகளையும் அழித்தமை கூறியவாறு

பதாகை - பெருங்கொடி. காடு என்றது, கொடிகளின் திரளை. ராசி - கூட்டம். பணை - பருமை. கைம்மா - யானை. நால்வகைப் படைகளையும் அழித்தபின் அங்கு அழித்தற்குரியன இன்மையால் கூற்றமென்ன போர்க்களம் முழுமையும் நெருங்கிச் சென்றன என்க. அம்மா, வியப்பிடைச் சொல். (94)

8227. உலக்கின்று ருலக்கின் றுரை
யெண்ணுவா னுற்ற விண்ணோர்
கலக்குறு கண்ண ராகிக்
கடையுறக் காண லாற்றார்
விலக்கரும் பகழி மாரி
விளைக்கிறை விளைவை யுன்னி
இலக்குவன் சிலையொ டேகொ
லெழுமழை பயின்ற தென்றார்.

உலக்கின்றார்; உலக்கின்றாரை
எண்ணுவான் உற்ற விண்ணோர்
கலக்குறு கண்ணர் ஆகி,
கடையுறக் காணல் ஆற்றார்
விலக்கரும் பகழி மாரி
விளைக்கின்ற விளைவை உன்னி
இலக்குவன் சிலையொடே கொல்,
எழுமழை பயின்றது என்றார்.

பொ :—இலக்குவனுடைய அம்பினால் இறந்துபட்டுக் கொண்டே இருக்கின்ற மிகுதியான அரக்கரை எண்ணுவதற்குத் தொடங்கிய தேவர்கள் கலக்கமடைந்த கண்களையுடையராகிக் கடைசிவரையில் காணமுடியாதவராய், தடுத்தற்கு அரிய அம்பு மழை செய்கின்ற செயலை நினைத்துப் பார்த்து, 'ஏழு மேகங்களும் பெய்தற்குக் கற்றுக் கொண்டது இலக்குவனுடைய வில்லொடுதானோ ?' என்று வியந்து கூறினர்.

கு :—உலக்கின்றார் உலக்கின்றாரை என்ற அடுக்கு, உலப்பவரின் மிகுதியை உணர்த்தியது. இமையா நாட்டமுடைய தேவர்களும் எண்ணிப் பார்க்கத் தொடங்கிக் கண்கலங்கிக் கடையுறக் காணலாற்றார் ஆயினர் என்றதால் இறந்தவர்களின் தொகை மிகுதி புலப்படுத்தியவாறு. இலக்குவன் வில் ஏழு மேகங்களும் சேர்ந்து பொழிகின்ற மழையைக் காட்டிலும் மிகுதியாக அம்புமாரியைச்

சொரிகின்றமையால் 'ஏழுமழை பயின்றது இலக்குவன் சிலையோடே கொல்?' என விண்ணவர் வியந்து பாராட்டுவாராயினர். (95)

## இலக்குவன் அம்பு யானைகளையும் குதிரைகளையும் கொல்லுதல்

8228. ஒளியொண் கணைக டோறு
முந்தின வேழ மொற்றை
வாளியின் றலைய பாரின்
மறிவன மலையிற் சூழ்ந்த
ஆளியின் றுப்பின் வீரர்
பொருளகத் தார்த்த வாளித்
தூளியின் தொகைய வள்ளல்
சுடுகணைத் தொகையு மம்மா.

ஒளிஒண் கணைகள் தோறும்
உந்தின வேழம், ஒற்றை
வாளியின் தலைய பாரின்
மறிவன, மலையில் சூழ்ந்த;
ஆளியின் துப்பின் வீரர்
பொருகளத்து, ஆர்த்த வாளித்
தூளியின் தொகைய, வள்ளல்
சுடுகணைத் தொகையும் அம்மா !

பொ :—யானைக் கூடங்களில் உள்ள சிறந்த யானைத்தூண்கள் தோறுமிருந்து (வீரர்களால்) செலுத்தப்பட்டு வந்த யானைகள் (ஒவ்வொன்றும்,) (இலக்குவன் விட்ட) ஒவ்வோர் அம்பினை யேந்திய தலையையுடையனவாகித் தரையில் புரண்டு இறந்து வீழ்ந்து மலைகள் போலச் சூழ்ந்து கிடந்தன ; சிங்கம்போன்ற வலிமையுடைய அரக்க வீரர்களால் செலுத்தப்பட்டுப் போர்க்களத்தில் வந்து ஆரவாரித்த, வாளிவேகம் பயின்ற குதிரைகளின் தொகை அளவினையுடையன ஆயின, இலக்குவன் (விட்ட) சுடுகின்ற அம்புகளின் தொகையும்.

கு :—இலக்குவன் தன்னை எதிர்த்துவந்த யானைகள்மேலும், குதிரைகள்மேலும் ஒவ்வோர் அம்பு விட்டு அவை எல்லாவற்றையும் அழித்தான் என்றவாறு. ஒளி – யானை கட்டும் கூடம். கணை - யானை கட்டும் தூண், கட்டுத்தறி. உந்தின வேழம் - வீரர்களால் செலுத்தப்பட்டு வந்த யானைகள். மூன்றுமடியில் உள்ள ஆளியின் துப்பின் வீரர் என்பதனை மேலும் இயைத்து, ஆளியின் துப்பின் வீரர் தும்பின் வீரர் என்பதனை மேலும் இயைத்து, ஆளியின் துப்பின் வீரர்

உந்தின வேழம் என்க. முதலடியிலுள்ள 'உந்தின' என்பதை வீரர் உந்தின தூளி எனப் பின்னும் இயைக்க. யானையும் குதிரையும் மேலாள் இன்றிப் போர்க்கு வருதல் இல்லை என்பது நினைக. ஒவ்வோர் யானைத் தலையிலும் ஒவ்வோர் அம்பு விட்டுவீழ்த்தினான் இலக்குவன் என்பார், 'வேழம் ஒற்றை வாளியின் தலைய பாரின் மறிவன' என்றார். ஒவ்வொரு யானையும் இலக்குவன் விட்ட ஒவ்வோர் அம்பினை ஏந்திக்கொண்ட தலையினையுடையவாய்த் தரையில் புரண்டு இறந்து வீழ்ந்தன என்றவாறு. யானைகள் வந்தவுடன் அம்பு தைத்து வீழ்ந்த தோற்றம், அவ் யானைகள் தாமே விரும்பி அம்புகளை யேற்றுக் கொண்டன போன்றது என்ற குறிப்பும் புலப்படுத்திய வாறு. 'வாளியின்' என்பது (இன்)சாரியை யுள்வழித் தன்னுருபு நிலையாது வந்தது ; 'உரைசால் சிறப்பின் உரவோர்' (புறநா–166) என்புழிப் போல. தலைய என்பதில் உள்ள அகரம் குறிப்பு முற்றெச்ச விகுதி. மறிவன என்பது முற்றெச்சப் பொருளதாய்ச் சூழ்ந்த என்ற முற்றுவினையோடு முடிந்தது. ஒவ்வொரு யானைக்கும் பல அம்பு எய்யாமல் ஒவ்வோர் அம்பினாலேயே கொன்றான் என்று இலக்குவனுடைய விற்றொழிலின் மேன்மையை விளக்கியவாறு. வீரர்களின் வன்மை புலப்பட 'ஆளியின் துப்பின் வீரர்' என்றார். 'அரிமா வன்ன அணங்குடைத் துப்பின்' (பட்டினப்பாலை-298) என்றதும் காண்க.

பின் இரண்டு அடிகளில் குதிரைகளை ஒவ்வோரம்பினால் இலக்குவன் கொன்றமை கூறியுள்ளார். தூளி - குதிரை. வாளி – வட்டமிட்டுச் செல்லும் ஒருவகைச் செலவு. அந்தச் செலவினைப் பயின்ற தூளி என்பார், 'வாளித் தூளி', என்றார். "கொப்புறு கலினப் பாய்மா குலான்மகன் முடுக்கிவிட்ட மட்கலத் திகிரிபோல வாளியின் வருவ" (பால-மிதிலைக்–13) எனக் குதிரைகள் வாளிவேகத்தில் வருந் தன்மையை விளக்கிக் கூறியிருத்தல் காணலாம். யானையும் குதிரையும் தானைவீரர் போலத் தம் வீரங்காட்டிப் போர் செய்யும் இயல்பினவாதலின் அவ்விருவகைச் சேனைகளையும் கொன்றமை தனியே சிறப்பிக்கப்பட்டது என்க. "தானை யானை குதிரை என்ற நோனாருட்கு மூவகை நிலையும்" (தொல்–புறத்–72) எனத் தானையோடு அவ்விரண்டினையும் சேர்த்துத் தொல்காப்பியர் கூறியுள்ளதும் காண்க. இவற்றின் வீரம் யானைமறம், குதிரைமறம் எனச் சிறப்பிக்கப்படும். இவ்விருவகை மறத்தையும் இலக்குவன் எளிதாக அழித்தான் என்றவாறு. ஒவ்வொரு குதிரைமேலும் ஒவ்வோர் அம்பே விடுத்து அக் குதிரைப் படையை அழித்தான் என்பார், 'வாளித் தூளியின் தொகைய வள்ளல் சுடுகணைத் தொகையும்' என்றார். குதிரைகளின் எண்ணிக்கை எவ்வளவோ, அவ்வளவு அம்புகளையே விடுத்து அவற்றை அழித்தான் என்க. வள்ளல் என்றது, இலக்குவனை.

'அம்மா' வியப்பிடைச் சொல். தொகைய என்பதில் அகரம் பலவின் பால் குறிப்பு வினைமுற்று விகுதி. இது ஆக்கவினைக் குறிப்பு ஆகலின், தொகையையுடையன ஆயின என ஆக்கச்சொல் வருவித்துரைக்கப் பட்டது. சுடுகணைத் தொகையும் தூளியின் தொகைய ஆயின என்க. குதிரைகளின் எண்ணிக்கை தெரிந்தால் இலக்குவன் அக் குதிரைகள் மேல் விட்ட அம்புகளின் எண்ணிக்கையும் தெரியும் என்றபடி. (96)

### இலக்குவன் அம்புகளால் காலாள் வீரர் பட்டமை

8229. பிறவியிற் பெரிய தோற்றப்
பிசிதமுண் டுழலும் பெற்றிச்
சிறையவே. யென்ன நோக்கித்
தேவரும் திகைக்கத் தோற்றித்
துறைதொறுந் தொடர்ந்து வானம்
வெளியறத் துவன்றி வீழும்
பறவையிற் பெரிய பட்டார்
பிணத்தின்மேற் பகழி மாதோ.

'பிறவியில் பெரிய தோற்றப்
பிசிதம் உண்டு, உழலும் பெற்றிச்
சிறையவே' என்ன நோக்கித்
தேவரும் திகைக்கத் தோற்றி –
துறைதொறும் தொடர்ந்து, வானம்
வெளி அறத் துவன்றி, வீழும்
பறவையின் பெரிய, பட்டார்
பிணத்தின்மேல் பகழி மாதோ.

பொ :—இறந்துபட்ட (காலாள் வீரர்தம்) பிணத்தின்மேல் (தைத்துக் கொண்டுள்ள இலக்குவனுடைய) அம்புகள்,—'பிறவியிலேயே பெரிய தோற்றத்தை உடையராகிய அரக்கரின் ஊனை உண்டு திரிகின்ற இயல்பினவாகிய சிறகுகளையுடைய பறவைகளே' என்று நோக்கித் தேவரும் திகைக்குமாறு, (இறகுகளையுடைய தம் வடிவைப்) புலப்படுத்திக்கொண்டு,—வானத்தில் இடைவெளியில்லையாம்படி நெருங்கிப் பறந்து, (போர்க்களத்தில்) எல்லாவிடங்களிலும் (கிடக்கும் பிணங்களையுண்ணத்) தொடர்ந்து வந்து (அப் பிணங்கள்மேல்) வீழ்கின்ற (கழுகு முதலிய) பறவைகளைக் காட்டிலும் பெரிய அளவினவாகக் கிடந்தன.

கு :—பகழி, தோற்றி, பறவையிற் பெரியவாயின என இயையும். பெரிய, அகர வீற்றுப் பலவின்பால் குறிப்பு வினைமுற்று; ஆக்கம் வருவித்துரைக்கப்பட்டது. பறவைகட்கும் அம்புகட்கும் உள்ள வடிவ ஒப்புமையால் இமையா நாட்டமுடைய தேவர்களும் அம்புகளைப் பறவைகளே என மயங்கினர் என்க. இது மயக்கவணி. காலாள் வீரர்மேல் இலக்குவன் விட்ட சிறகுகளையுடைய அம்புகள் அவ்வீரரைக் கொன்று அவர் உடம்பில் தைத்துக்கொண்டு கிடக்கின்ற தோற்றம், அரக்கர் ஊனை உண்ணும் கழுகு முதலிய பறவைகளே என்று தேவரும் நோக்கித் திகைக்குமாறு இருந்தது என்பது முதலிரண்டடிகளின் கருத்து. பிசிதம் – ஊன். பிறவியிற் பெரிய தோற்றப் பிசிதம் என்றது, பேருடம்பினவாகிய அரக்கரின் ஊன் என்றவாறு. சிறையவே – சிறகுகளையுடைய பறவைகளே; ஏகாரம் தோற்றம். தோற்றி – தம் வடிவைப் புலப்படுத்தி. இலக்குவன் அம்புகள் பறவைகள் போன்றே இருந்தன என்றவாறு. இலக்குவன் அம்புகள் தைக்க இறந்த வீரர்கள்தம் உடம்புத் தசையை உண்ணக் கழுகு முதலிய பறவைகள் விண்ணில் நெருங்கிப் பறந்து போர்க்களத்தில் பல இடங்களிலும் உள்ள அரக்கர் பிணங்களில் வீழ்கின்றன. அவ்வாறு வீழ்கின்ற பறவைகளைக் காட்டிலும், அப்பிணங்களில் முன்னமே தைத்துக் கொண்டிருக்கின்ற அம்புகள் எண்ணிக்கையில் அளவில் பெரியன என்பது பின்னிரண்டு அடிகளின் கருத்து. தேவரும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. இமையா நாட்டமுடைய தேவரும் திகைக்க என்க. துவன்றி - தொடர்ந்து வீழும் பறவை என்க. மேல் யானைப் படையையும் குதிரைப் படையையும் அழிந்தமை கூறி இச் செய்யுளால் காலாட்படையை அழித்தமை கூறினர். (97)

8230. திறந்தரு கவியின் சேனை
செறிகழ னிருதன் சீற
இறந்தன கிடந்த வெள்ள
மெழுபதிற் பாதி மேலும்
பறந்தலை முழுதும் பட்ட
வஞ்சகர் படிவ மூட
மறைந்தன குருதி யோடி
மறிகடன் மடுத்த மாதோ.

திறம்தரு கவியின் சேனை,
செறிகழல் நிருதன் சீற,
இறந்தன கிடந்த வெள்ளம்
எழுபதின் பாதி மேலும்
பறந்தலை முழுதும் பட்ட
வஞ்சகர் படிவம் மூட,
மறைந்தன ; குருதி ஓடி,
மறிகடல் மடுத்த மாதோ.

பொ :—வீரக்கழல் கட்டியுள்ள இந்திரசித்து வெகுண்டு போர் செய்ததால், எழுபது வெள்ளத்தில் பாதிக்கு மேலாக இறந்து கிடந்த திறம்பொருந்திய வானரசேனை, போர்க்களம் முழுவதும் இறந்துபட்ட வஞ்சக அரக்கர்களின் உடம்புகள் மூடுதலால் மறைந்து போயின ; (அவ்வரக்கர் உடம்பிலிருந்து வெளிப்பட்ட) இரத்த ஆறுகள் ஓடி அலைவீசும் கடலில் கலந்தன.

கு :—இறந்தன கிடந்த சேனை, வஞ்சகர் படிவம் மூட மறைந்தன என இயையும். இந்திரசித்தின் சீற்றத்தால் முப்பத்தைந்து வெள்ளத்திற்கு மேலாக வானரசேனை அழிந்தது என்றது நாற்பது வெள்ளம் அழிந்தது என்றவாறு. 'ஐய அமர்த்தலை, நீயு நாற்பது வெள்ள நெடும்படை மாய வெங்கணை மாரி வழங்கினை' (158) எனப் பின் கூறப்படுதல் நினைக. இறந்த நாற்பது வெள்ளம் வானர சேனையும் வஞ்சகர் படிவம் மூடுதலால் மறைந்தன என்றமையால், இலக்குவன் அம்புகளால் இறந்த அரக்கர் சேனையின் மிகுதி புலப் படுத்தியவாறு. 'வஞ்சகர் படிவம்' என்றது, அரக்கரின் பிணங்களை. ஓடி என்ற குறிப்பால் குருதியாறுபோலப் பரந்தொழுகினமையும் மடுத்த என்ற பன்மையால் அவ்வாறுகள் பலவாகப் பெருகின என்பதும் புலப்படுத்தியவாறு. மடுத்தல் - கலத்தல் ; புகுதலும் ஆம். (98)

அரக்கர் அழிவு

8231. கய்யற்றார் கால்க ளற்றார்
கழுத்தற்றார் கவச மற்றார்
மெய்யற்றார் குடர்கள் சோர
விசையற்றார் விளிவு மற்றார்
மய்யற்றார்க் காயுந் தேரும்
வாசியு மற்று மற்றார்
உய்யச்சாய்ந் தோடிச் சென்றா
ருயிருள்ளா ராகி யுள்ளார்.

கை அற்றார்; கால்கள் அற்றார்;
கழுத்து அற்றார்; கவசம் அற்றார்
மெய் அற்றார் குடர்கள் சோர,
விசை அற்றார் விளிவும் அற்றார்;
மையல் தார்க் கரியும், தேரும்,
வாசியும் மற்றும் அற்றார்
உய்யச் சாய்ந்து ஓடிச் சென்றார்,
உயிர் உள்ளார் ஆகி உள்ளார்.

பொ :—(இலக்குவன் அம்பால் அரக்கர்) கைகள் அறுபட்டார்கள்; கால்கள் அறுபட்டார்கள்; கழுத்து அறுபட்டார்கள்; மெய் புகு கருவியாகிய கவசமும் அறுபட்டார்கள்; உடம்பு அறுபட்டார்கள்; வயிற்றிலுள்ள குடல்கள் வெளிப்பட்டு வீழ வேகமும் அற்றார்கள் கூப்பிடும் ஆற்றலும் அற்றார்கள்; மதமயக்கத்தையும் கழுத்திடு கயிற்றையும் உடைய யானைகளும் தேர்களும் குதிரைகளும் பிறவும் அறப்பெற்றார்கள்; உயிரோடிருந்தவர்கள், தாம் உய்ந்துகொள்ள வேண்டிப் பிறர் காணாவாறு குனிந்து ஓடிச் சென்றார்கள்.

கு :—அரக்கர் சேனை அழிந்த தன்மையை விளக்கியவாறு. சிலர் கையற்றார்; சிலர் கால்கள் அற்றார் எனத் தனித்தனி அழிவைக் கூறியதாகக் கொள்ளலும் ஆம். விசை - வேகம். விளிவு – விளிக்குந் தன்மை. தார் என்றது, யானை கழுத்திடு கயிறாகிய புரசையை. வாசி - குதிரை. மற்றும் என்றது, காலாட்படையினரை. நால்வகைப் படையுடன்வந்த அரக்கர் தலைவர்கள் அந்த நால்வகைப் படைகளையும் இழந்தார்கள் என்றவாறு. அற்றார் என்பதை முற்றெச்சமாக்கி அற்றாராய் உயிருள்ளாராகியுள்ளார் ஓடிச் சென்றார் என இயைத்துக் கூறலும் ஆம். நிமிர்ந்தோடினால் பிறர்காண்பரே என்ற அச்சத்தால் சாய்ந்து ஓடிச் சென்றார் என்க. இலக்குவனை எதிர்த்துவந்த அரக்கர்கள் யாரும் இறந்தவரும் ஓடினவருமே ஆயினர் என்பது புலப்படுத்தியவாறு. (99)

### இந்திரசித்து இலக்குவனெதிர் வருதல்

8232. வற்றிய கடலு ணின்ற
மலையென மருங்கின் யாரும்
சுற்றின ரின்றித் தோன்றுந்
தசமுகன் றோன்ற அள்ளித்

தெற்றின புருவத் தோன்றன்
மனமெனச் சொல்லுந் தேரான்
உற்றன னிளைய கோவை
யனுமனு முடன்வந் துற்ருன்.

வற்றிய கடலுள் நின்ற
மலைஎன, மருங்கின் யாரும்
சுற்றினர் இன்றி, தோன்றும்
தசமுகன் தோன்றல், துள்ளித்
தெற்றின புருவத்தோன் தன்
மனம்எனச் செல்லும் தேரான்,
உற்றனன், இளைய கோவை; அனுமனும்
உடன் வந்து உற்ருன்.

பொ :—நீர் முழுவதும் வற்றிய கடலினுள் தனித்து நின்ற மலையைப்போலப் பக்கத்தில் சுற்றி யிருந்தவர்கள் யாரும் இல்லாமல் தனித்துக் காணப்படும் இந்திரசித்து, துடித்துக்கொண்டு வளைந்த புருவத்தை யுடையவனுய்த் தன் மனம்போலச் செல்லுகின்ற தேரின் மேலனுய் இலக்குவனை நெருங்கினன்; அனுமனும் உடன்வந்து இலக்குவனுக்குத் துணையாய்ப் பொருந்தினன்.

கு :—இந்திரசித்து, தன் சேனையால் சுற்றப்பட்டிருந்த நிலை கடலால் சுற்றப்பட்ட மலைபோல இருந்தது; இலக்குவன் அம்பினல் மருங்கிற் சுற்றினர் யாவரும் இறந்துபட்டமையால் இப்போது வற்றிய கடலுள் நின்ற மலைபோல இந்திரசித்து தோன்றலானன் என்றவாறு. தசமுகன் – இராவணன், தசமுகன் தோன்றல் என்றது, அவன் மகனுகிய இந்திரசித்தினை. இந்திரசித்து தேரோடு நின்ற தோற்றம் மலைபோன்றது எனக் கொள்க. கோபத்தினல் புருவங்கள் துடித்தலும் மேல்நோக்கிச் சென்று வளைதலும் உண்டு ஆதலின் துள்ளித் தெற்றின் புருவத்தோன், என்ருர். துள்ளுதல் – துடித்தல். 'துள்ளுநர்க் காண்பார் தொடர்ந்துயிர் வௌவலின்' (கலி – 4) என்புழியும் இச்சொல் இப்பொருளில் வழங்கப்பட்டிருத்தல் காணலாம். தெற்றுதல் – மாறுபடுதல்; இங்கு மேல்நோக்கிச் சென்று வளைந்ததை உணர்த்தியது. தசமுகன் தோன்றல், புருவத்தோனுய், தேரனுய் இளையகோவை உற்றனன் என முற்றெச்சமாக்கி முடிக்க. இந்திரசித்து இலக்குவனை நெருங்குவது கண்ட அனுமன், விரைந்துவந்து இலக்குவனுக்குத் துணையாகச் சேர்ந்தான் என்றவாறு. மனம் எனச் செல்லுந் தேரான் என்றது அத்தேர் 'உள்ளம்போல வுற்றுழியுதவும் புள்ளியற் கலிமா வுடைமையான்' என்க. (100)

## இலக்குவன் அனுமன் தோள்மேல் ஏறி இந்திரசித்தோடு பொருதல்

8233. தோளின்மே லாதி யைய
வென்றடி தொழுது நின்ருன்
ஆளிபோன் மொய்ம்பி னுனு
மேறின னமர ரார்த்தார்
காளியே யனைய காலன்
கொலையன கனலின் வெய்ய
வாளிமேல் வாளி தூர்த்தார்
மழையின்மேல் மழைவந் தன்ஞர்.

'தோளின்மேல் ஆதி' ஐய!'
என்று அடி தொழுது நின்ருன்;
ஆளிபோல் மொய்ம்பினுனும்
ஏறினன்; அமரர் ஆர்த்தார்;
காளியே அனைய காலன்
கொலைஅன, கனலின் வெய்ய,
வாளிமேல் வாளி தூர்த்தார்,—
மழையின்மேல் மழை வந்தன்ஞர்.

பொ :—(வந்துற்ற அனுமன் இலக்குவனை நோக்கி) 'ஐய! என் தோளின்மேல் ஏறிக்கொள்க' என்று கூறிக்கொண்டு அடிதொழுது நின்ருனுக, சிங்கம்போல் வலிமை யுடைய இலக்குவனும் (அவன் விரும்பியவாறே) ஏறி அமர்ந்தான்; (அதுகண்டு) தேவர்கள் மகிழ்ந்து ஆரவாரித்தனர்; மேகங்களின்மேல் மேகங்கள் வந்தாற்போன்று (ஊர்திகளின்மேல் ஊர்ந்துவந்த) இலக்குவனும் இந்திரசித்தும், காளிபோன்ற கடுநிறமுடைய எமனது கொலைத்தொழிலை யுடையனவும், நெருப்பினைக் காட்டிலும் வெப்ப முடையனவும் ஆன அம்புகளை (ஒருவர்மேல் ஒருவர்) மேன்மேலும் பெய்து நிரப்பினுர்கள்.

கு :—காலனது கருநிறம் புலப்படக் 'காளியே அனைய காலன்' என்ருர். காளி கருநிறமுடையவள் என்பது தெளிவு. இனிக் காளி என்பது பாம்பின் பல் எனக்கொண்டு பாம்பின் பல்போன்ற வாளி எனலும் ஆம். கொலைத் தொழிலால் காலனையும் வெம்மையால் நெருப்பையும் போன்ற வாளி என்க. இந்திரசித்து தேரின்மேலும் இலக்குவன் அனுமன்மேலும் அமர்ந்து அம்புமாரி பெய்யும் தோற்றம் மேகங்களின்மேல் மேகங்கள் ஏறிக்கொண்டு மழை பெய்வதுபோல் தோன்றியது என்பார், 'மழையின்மேல் மழை வந்தன்ஞர், வாளி

மேல் வாளி தூர்த்தார்' என்றார். இனி, ஒரு மேகம் மற்றொரு மேகத்தின்மேல், போர்செய்ய வந்தாற்போன்ற இலக்குவனும் இந்திரசித்தும் அம்புகள்மேல் அம்புகளைப் பெய்து தூர்த்தார் எனலும் ஆம். தூர்த்தல் - நிறைத்தல். (101)

## நாணொலிகளின் விளைவும் அம்புகளின் செயலும்

8234. இடித்தன சிலையி னாண்க
ளிரிந்தன திசைக ளிற்று
வெடித்தன மலைகள் விண்டு
பிளந்தது விசும்பு மேன்மேல்
பொடித்தவிவ் வுலக மெங்கும்
பொழிந்தன பொறிகள் பொங்கிக்
கடித்தன கணைக ளோடு
கணைகடம் மயில்வாய் கவ்வி.

இடித்தன சிலையின் நாண்கள்;
இரிந்தன, திசைகள் இற்று;
வெடித்தன, மலைகள் விண்டு;
பிளந்தது; விசும்பு; மேன்மேல்
பொடித்த, இவ் உலகம் எங்கும்;
பொழிந்தன பொறிகள் பொங்கி;
கடித்தன, கணைகளோடு
கணைகள்தம் அயில்வாய் கவ்வி.

பொ :—இருவர் தம் வில்லின் நாண்களும் பேரொலி செய்தன; (அப்பேரொலியால்) திசைகள் இற்று நிலை கெட்டன; மலைகள் வேறாகி வெடித்தன; விண்ணுலகம் பிளவுற்றது; இவ் உலகம் எங்கும் மேன்மேல் தோன்றிய நெருப்புப் பொறிகள் மிக்கு நிறைந்தன; அம்புகளோடு அம்புகள் தம் கூரிய வாய்களால் கவ்விக் கடித்தன.

கு :—வீரர்கள் வில்லின் நாணினைத் தெறித்து ஒலி எழுப்புதல் மரபு. அவ்வாறு இலக்குவனும் இந்திரசித்தும் எழுப்பிய நாணொலியால் திசைகள் நிலைகெடுதலும் மலைகள் பிளவுறுதலும் விண்ணுலகம் பிளத்தலும் மண்ணுலகில் தீப்பொறிகள் தோன்றி நிறைதலும் நிகழலாயின என்க. பொடித்தல் - தோன்றுதல். விசும்பு என்றது, ஆகு பெயராய் விண்ணுலகத்தை உணர்த்தியது; விசும்பு பிளவுறுதற்கு

உரியது அன்மையும் நினைக. இவையாவும் உயர்வு நவிற்சியாகக் கூறியவை. இலக்குவன் விடும் அம்பும் இந்திரசித்து விடும் அம்பும் நடுவே ஒன்றை ஒன்று தாக்கும் தன்மையையே வாய்கவ்விக் கடித்த தாகக் கூறினர். இவ்வுலகமெங்கும் மேன்மேல் பொடித்த பொறிகள் பொங்கிப் பொழிந்தன என இயையும். (102)

அம்புகளின் செயலைக்கண்ட உலகநிலை

8235. அம்பினே டம்பொன் ருென்றை
யறுக்கமற் றறுக்கி லாத
வெம்பொறி கதுவ விண்ணில்
வெந்தன கரிந்து வீழ்ந்த
உம்பரு முணர்வு சிந்தி
யொடுங்கின ருலகம் யாவும்
கம்பமுற் றுலைந்த வேலைக்
கலமெனக் கலங்கிற் றண்டம்.

அம்பினேடு அம்பு ஒன்று ஒன்றை
அறுக்க, மற்றுஅறுக்கிலாத,
வெம்பொறி கதுவ, விண்ணில்
வெந்தன, கரிந்து வீழ்ந்த;
உம்பரும் உணர்வு சிந்தி
ஒடுங்கினர்; உலகம் யாவும்
கம்பம் உற்று உலைந்த; வேலைக்
கலம் எனக் கலங்கிற்று அண்டம்.

பொ:—அம்புகளோடு அம்புகள் (தாக்கும்போது) ஓரம்பு மற்ருேரம்பை அறுக்க, அவ்வாறு அறுக்கப்படாத அம்புகளும் வெவ்விய நெருப்புப் பொறிகள் பற்ற விண்ணில் வெந்தனவாய்க் கரிந்து வீழ்ந்தன; (அந்நிலையைக் கண்ட) தேவர்களும் உணர்வுகெட்டு ஒடுங்கினர்கள்; உலகம் எல்லாம் நடுக்கமுற்று வருந்தின; இவ்வுலகமாகிய உருண்டை கடலில் செல்லும் கப்பல்போல அசைந்தது.

கு:—ஓரம்பு மற்ருேர் அம்பை அறுக்கும்போது உண்டாகும் தீப்பொறிகளால் அறுக்கப்படாத அம்புகளும் வெந்து கரிந்து வீழ்ந்தன என்க. அறுக்கப்பட்ட அம்பு வெந்து கரிந்து வீழ்தல் இயல்பு. மேற்கூறியது இயல்புக்கு அப்பாற்பட்ட செயலாக இருத்தலின் தேவர்கள் கண்டு உணர்வொழிந்து ஒடுங்கினர்கள் என்க. இப்

போரின் அதிர்ச்சியால் உலகம் எல்லாம் நடுக்கமுற்று வருந்தின என்றது, உலகத்துள்ள உயிர்கள் எல்லாம் நடுக்கமுற்று வருந்தின என்றவாறு; உலகம் இடவாகுபெயராய் உயிர்களை உணர்த்தியது. அண்டம் என்றது, பூவுலகமாகிய உருண்டையை. கடலிடை நிற்கும் நிலம் நடுங்கி அசையும் தோற்றம், கடலிடைச் செல்லும் கப்பல் அசைவதுபோலத் தோன்றிற்று என்பார், 'வேலைக்கலமெனக் கலங்கிற்று அண்டம்' என்றார். (103)

இருவரூர்திகளும் சாரிதிரிதலால் உண்டாய நிலைமை

8236. அரியினம் பூண்ட தேரு
மனுமனு மனந்த சாரி
புரிதலி னிலங்கை யூருந்
திரிந்தது புலவ ரேயும்
எரிகணைப் படல மூட
விலருள ரென்னுந் தன்மை
தெரிகிலர் செவிடு செல்லக்
கிழிந்தன திசைக ளெல்லாம்.

அரிஇனம் பூண்ட தேரும்,
அனுமனும், அனந்த சாரி
புரிதலின், இலங்கை ஊரும்
திரிந்தது; புலவரேயும்,
எரிகணைப் படலம் மூட
'இலர், உளர்' என்னும் தன்மை
தெரிகிலர்; செவிடு செல்லக்
கிழிந்தன திசைகள் எல்லாம்.

பொ:—(இந்திரசித்தின் ஊர்தியாகிய) சிங்கக் கூட்டங்கள் பூண்ட தேரும், (இலக்குவன் ஊர்தியாகிய) அனுமனும் பலப்பல சாரிகள் திரிதலால் இலங்கையாகிய ஊரும் சுழன்றது; எரிகின்ற அம்புகளின் கூட்டம் எங்கும் மூடிக்கொண்டமையால் (இலக்குவனும் இந்திரசித்தும்) இலரா? உளரா? என்னும் தன்மையை (இமையா நாட்டமுடைய) தேவர்களும் தெரிந்திலராயினர்; (போர்செய்யும் ஒலி மிகுதியால்) உயிர்களுக்கெல்லாம் செவிடு உண்டாகத் திசைகள் எல்லாம் கிழிவுற்றன.

கு :—அரி - சிங்கம். இந்திரசித்தின் தேரில் சிங்கங்கள் ஆயிரம் பூட்டப்பட்டிருந்தன என்பதை "சீயத்து ஏருமவை யன்னவையா யிரம் பூண்டதென்ப" (19) என முன் கூறியுள்ளதாலும் அறியலாம். சாரி புரிதலாவது, போர்க்களத்தில் இடமாகவும் வலமாகவும் மண்டல மாகவும் திரிதல். தேரும் அனுமனும் சுழலும் வேகத்தால் இலங்கை யும் சுழல்வதாயிற்று என அச் சாரிதிரிதலின் சிறப்பைப் புலப்படுத் தியவாறு. புலவர் - தேவர். புலவரேயும் என்புழி உம்மை உயர்வு சிறப்பினது ; இமையா நாட்டமும் பேரறிவும் உடைய தேவர்களும் கணைப்படலத்துள் இருக்கும் இலக்குவனையும் இந்திரசித்தையும் காணவியலவில்லை என்றவாறு. இதனால், அவ்விருவரும் விட்ட அம்பு களின் மிகுதி புலப்படுத்தியவாறு. (104)

## இருவர் பொருஞ் செயலைத் தேவர்களும் காண இயலாமை 8237-8238

**8237.** நரண்பொரு வரிவிற் செங்கை
நாமநூ னவின்ற கல்வி
மாண்பொரு வகையிற் றன்று
வலிக்கிலை யவதி மானம்
சேண்பெரி தென்று சென்ற
தேவரு மிருவர் செய்கை
காண்பரி தென்று காட்சிக்
கையுற வெய்திற் றன்றே.

'நாண் பொரு வரிவில் செங்கை,
நாம நூல் நவின்ற கல்வி
மாண்பு ஒரு வகையிற்று அன்று;
வலிக்கு இலை அவதி; மானம்
சேண் பெரிது' என்று சென்ற
தேவரும், 'இருவர் செய்கை
காண்பு அரிது' என்று, காட்சிக்கு
ஐயுறவு எய்திற்று அன்றே!

பொ :—'நாணி பொருந்திய கட்டமைந்த வில்லினது புகழ்பெற்ற நூலினைத் தம் சிவந்த கையினால் பயின்ற (இருவர்தம்) விற்கல்வி யின் மாண்பு ஒருதன்மையது அன்று; (பலதன்மையான சிறப்பினது) இவர்தம் மெய்வலிமைக்கும் எல்லை இல்லை. இவர்தம் மானவுணர்ச்சி மிகப் பெரியது ; (இவர் செய்யும் போரைக் கண்ணால் காணவேண்

டும்) என்று விரும்பிச் சென்ற தேவர்களும், (அம்புப் படலத்தால் மூடப்பட்டுள்ள) 'இருவர்தம் போர்ச்செயலையும் காண்பது அரிது' என்னுமாறு, காட்சி அளவைக்கு ஐயம் உண்டாயிற்று.

கு:—வரிவில் நாமநூல் என்க. என்றது தனுர்வேதத்தை. செங்கை நவின்ற என இயையும். நவிலுதல் - பயிலுதல். இவர்தம் கல்வி மாண்பு பல சிறப்பினையுடையது என்பார் 'கல்வி மாண்பு ஒரு வகையிற்று அன்று' என்றார். அவதி – எல்லை. சேண் பெரிது - மிகப் பெரிது. இலக்குவன் இந்திரசித்து ஆகிய இருவரையும் பற்றித் தேவர்கள் இவ்வாறு மதித்துக் காணவேண்டும் என்ற கருத்தோடு வந்தார்கள் என்றவாறு. காணவேண்டும் என்ற அவாவினோடு வந்த இமையா நாட்டமுடைய தேவர்களும் அவ்விருவர் செய்கையைக் காண்பரிது என்னுமாறு கணைகளால் மூடப்பட்டமை விளக்கியவாறு என்று என்னும் எச்சத்தை என என்னும் எச்சமாகத் திரிக்க. காண்பரிதென்னக் காட்சிக்கு ஐயறவு எய்திற்று என்க. அன்றே வியப்பிடைச் சொல். கணைகளின் செறிவைக் கண்டு இலக்குவனும் இந்திரசித்தும் போர் செய்கின்றார்கள் என்று வழியளவையால் உணரலாமே யன்றிக் காட்சியளவையால் அவ்விருவர் பொருந்திறனைக் காண இயலாதாயிற்று என்பார், 'காட்சிக்கு ஐயுற எய்திற்று' என்றார். கண்ணால் காணக்கூடிய போர்ச்செயல், புகையால் நெருப்பினுண்மையைக் கருதி யறிவதுபோலக் கருதலளவையால் அறியவேண்டியதாயிற்று என்றவாறு. (105)

8238. என்செய்தா ரென்செய் தாரென்
றியம்புவா ரினைய தன்மை
முன்செய்தார் யாவ ரென்பார்
முன்னேது பின்னே தென்பார்
கொன்செய்தார் வீர ரின்ன
திசையினா ரென்றுங் கொள்ளார்
பொன்செய்தார் மவுலி விண்ணோ
ருணர்ந்திலர் புகுந்த தொன்றும்.

'என் செய்தார்! என் செய்தார்!' என்று
இயம்புவார்; 'இனைய தன்மை
முன் செய்தார் யாவர்?' என்பார்;
'முன் ஏது? பின் ஏது?' என்பார்;

கொன்செய் தார் வீரர் இன்ன
திசையினர் என்றும் கொள்ளார்;
பொன்செய்தார் மவுலி விண்ணோர்
உணர்ந்திலர் புகுந்தது ஒன்றும்.

பொ :—பொன்னாலியன்ற கற்பக மலர் மாலையை யணிந்த முடியினையுடைய தேவர்கள், அங்கு நிகழ்ந்தது ஒன்றையும் உணர இயலாதவராய், 'இவ் வீரர்கள் என்ன செய்தனர் ! என்ன செய்தனர்!' என்ற வியப்புடன் (ஒருவரை ஒருவர்) வினவுவார்கள் ; (வேறு சிலர்) 'இத்தகைய விற்போரின் தன்மையை இதற்குமுன் செய்தார் யாருளர் ?' என்பார் ; (அதற்கு விடையாகச் சிலர்) 'இத்தகைய கடும் போர் முன்னும் நிகழ்ந்தது இல்லை ; இனிப் பின்னும் நிகழப்போவதில்லை ;' என்று சொல்வார் ; அச்சம் தரும் தூசிப் படையையுடைய (இலக்குவன் இந்திரசித்து என்ற) வீரர் இந்தத் திசையில்தான் இருக்கின்றார்கள் என்பதை அனுமானத்தாலும் அறிய இயலாதவராயினர்.

கு :—என் செய்தார் என் செய்தார் என்ற அடுக்கு வியப்பினையுணர்த்தவந்தது. அவர்கள் செய்யும் போர் சொல்லால் சொல்லத்தக்கதன்று என்றவாறு. முன்னுமில்லை ; பின்னுமில்லை என்பார், முன்னேது ? பின்னேது ? என வினவினர். கொன் – அச்சம். தார்- தூசிப்படை. இனிக் கொன், பெருமையெனக் கொள்ளலுமாம். வீரரிருவரும் எத்திசையில் நின்று போர் செய்கின்றார் என்று அறியவியலாதபடி விரைந்து போர் செய்கின்றமை இதனால் புலப்படுத்தியவாறு. விண்ணோர் இயம்புவார் என்பார், என்பார், என்றுங் கொள்ளார் ஆசி ஒன்றும் உணர்ந்திலர் என முற்றெச்சமாக்கி முடிக்க.

(106)

52ல் மிகைப்பாடலாகப் பின் வரும் செய்யுட்கள் காட்டப்பட்டுள்ளன.

8238 (a) எரிமுகப் பகழி மாரி
தொடுத்திக லரக்க னெய்தான்
எரிமுகப் பகழி மாரி
தொடுத்தவை யிறுத்தா னெந்தை
உருமினப் பகழி மாரி
உருத்துவிட் டரக்க னார்த்தான்
உருமினப் பகழி மாரி
உருத்துவிட் டிளவல் கொன்றான்.

8238 (b) நெருக்கிமற் றனந்த கோடி
நெடுங்கணை யரக்கன் சேர்த்தான்
நெருக்கிமற் றனந்த கோடி
நெடுங்கணை நிமலன் மாய்த்தான்
முருக்கினுற் றனந்த கோடி
முகைக்கணை யரக்கன் மொய்த்தான்
முருக்கினுற் றனந்த கோடி
முகைக்கணை முடித்தான் மொய்ம்பன்.

## இருவரும் விற்போர் வீரங்காட்டுதல் 8239—8246

8239. ஆயிர கோடி பல்ல
மயிலெயிற் றரக்க னெய்தான்
ஆயிர கோடி பல்லத்
தவைதுணித் தறுத்தா னையன்
ஆயிர கோடி நாகக்
கணைதொடுத் தரக்க னெய்தான்
ஆயிர கோடி நாகக்
கணைகளா லறுத்தா னண்ணல்.

ஆயிர கோடி பல்லம்,
அயில் எயிற்று அரக்கன் எய்தான்;
ஆயிர கோடி பல்லத்து
அவை துணித்து அறுத்தான் ஐயன்;
ஆயிர கோடி நாகக்
கணைதொடுத்து அரக்கன் எய்தான்;
ஆயிர கோடி நாகக்
கணைகளால் அறுத்தான் அண்ணல்.

பொ :—கூரிய பற்களையுடைய இந்திரசித்து ஆயிரகோடி பல்லங்களை (இலக்குவன்மேல்) எய்தான்; இலக்குவன், ஆயிரகோடி பல்லங்களால் அவற்றைத் துணித்து ஒழித்தான்; இந்திரசித்து ஆயிரகோடி நாகக்கணைகளை வில்லில் தொடுத்து எய்தான். அந்த நாகக்கணைகளை இலக்குவன் ஆயிரகோடி நாகக் கணைகளால் அறுத்தொழித்தான்.

கு :—பல்லம் என்பது ஒருவகை அம்பு. நாகம்போன்ற வடிவுள்ள கணை நாகக்கணை எனப்பட்டது. ஐயன், அண்ணல் என்றது

இலக்குவனை. அரக்கன் என்றது இந்திரசித்தினை. ஆயிரகோடி என்றது மிகப்பல என்னும் பொருளில் வந்தது. (107)

8240. கோட்டியின் தலைய கோடி
கோடியம் பரக்கன் கோத்தான்
கோட்டியின் தலைய கோடி
கோடியாற் குறைத்தான் கொண்டல்
மீட்டொடு கோடி கோடி
வெஞ்சினத் தரக்கன் விட்டான்
மீட்டொரு கோடி கோடி
கொண்டவை தடுத்தான் வீரன்.

கோட்டியின் தலைய கோடி
கோடி அம்பு அரக்கன் கோத்தான்
கோட்டியின் தலைய கோடி
கோடியால் குறைத்தான், கொண்டல்
மீட்டு ஒரு கோடி கோடி
வெஞ்சினத்து அரக்கன் விட்டான்;
மீட்டு, ஒரு கோடி கோடி
கொண்டு, அவை தடுத்தான், வீரன்.

பொ :—துன்பம் செய்யும் இயல்பினதான தலையினையுடைய பல கோடி அம்புகளை இந்திரசித்து வில்லில் கோத்து விடுத்தான்; மேகம் போன்றவனாகிய இலக்குவனும் வளைந்த தலையினையுடைய கோடி கோடி அம்புகளால் அவற்றை அறுத்துத் தள்ளினன்; மீண்டும் அவ்வம்புகளையே கோடி கோடியாகக் கொடிய கோபத்தை யுடைய இந்திரசித்து விட்டான்; வீரனாகிய இலக்குவனும் அவ்வாறே மீண்டும் ஒரு கோடி கோடி அம்புகளைக் கொண்டு அவற்றைத் தடுத்தான்,

கு :—இவ்வம்பு பிறைமுகக் கணை எனப்படும். கோடி கோடி பிறைமுகக் கணையும் இலக்குவன் விட்ட அவ்வளவினவான அக்கணைகளால் அற்றுவிட்டமையால் வேறு கணை எய்யாமல் மீண்டும் அப் பிறைமுகக் கணைகளையே விடுத்தான் இந்திரசித்து என்க. இலக்குவனும் அவ்வகைக் கணைகளாலேயே அவன் விட்ட அம்புகளைத் தடுத்தான் என்றவாறு. இலக்குவன் அம்பு மாரி பெய்யும் தன்மையால் மேகம் போன்றவனானன் என்பார் அவனைக் கொண்டல் என்று உவமை ஆகுபெயராற் குறித்தார். (108)

8241. கங்கபத் திரமோர் கோடி
கைவிசைத் தரக்க னெய்தான்
கங்கபத் திரமோர் கோடி
கணைதொடுத் திளவல் காத்தான்
திங்களிற் பாதி கோடி
யிலக்குவன் றெரிந்து விட்டான்
திங்களிற் பாதி கோடி
தொடுத்தவை யரக்கன் றீர்த்தான்.

கங்க பத்திரம் ஓர் கோடி
கைவிசைத்து அரக்கன் எய்தான்;
கங்க பத்திரம் ஓர் கோடி
கணைதொடுத்து இளவல் காத்தான்;
திங்களின் பாதி கோடி,
இலக்குவன் தெரிந்து விட்டான்
திங்களின் பாதி கோடி
தொடுத்து, அவை அரக்கன் தீர்த்தான்.

பொ:—இந்திரசித்து, கழுகின் சிறகுகளையுடைய அம்புகள் ஒரு கோடியைக் கைகளால் தொடுத்து விரைந்து எய்தான்; இளவலாகிய இலக்குவனும் கழுகின் சிறகுகளையுடைய ஒரு கோடி அம்புகளைத் தொடுத்து அவ்வம்புகளைத் தடுத்தான்; அரைச்சந்திரன் போன்ற முகப்பினையுடைய கோடி அம்புகளை இலக்குவன் ஆராய்ந்து இந்திரசித்தின்மேல் விட்டான்; இந்திரசித்தும் அரைச்சந்திர அம்புகளை கோடி தொடுத்து அவ்வம்புகளை அறுத்தான்.

கு:—கங்கம் – கழுகு. பத்திரம் - சிறகு. கழுகின் சிறகுகள் பொருந்திய அம்புகள் கங்கபத்திரம் எனப்பட்டன. பாதிமதிபோன்ற முகப்பினை உடைய அம்புகள் என்பார், 'திங்களில் பாதி' என்றார். இதுகாறும் இந்திரசித்து விடுத்த அம்புகளை மட்டுமே அறுத்துக் கொண்டிருந்த இலக்குவன் இப்போது திங்களிற் பாதியை ஒத்த அம்புகளை இந்திரசித்தின்மேல் விடுத்தான் என்றவாறு. தீர்த்தல் – அழித்தல். திங்களில் பாதி என்றது அர்த்த சந்திரபாணத்தை.

(109)

8242. கோரையின் றலைய கோடி
கொடுங்கணை யரக்கன் கோத்தான்
கோரையின் றலைய கோடி
தொடுத்தவை யிளவல் கொன்றான்
பாரையின் றலைய கோடி
பரப்பினு னிளவல் பல்கால்
பாரையின் றலைய கோடி
யரக்கனும் பதைக்க வெய்தான்.

கோரையின் தலைய கோடி
கொடுங்கணை அரக்கன் கோத்தான்
கோரையின் தலைய கோடி
தொடுத்து அவை இளவல் எய்தான்
பாரையின் தலைய கோடி
பரப்பினன் இளவல் பல்கால்
பாரையின் தலைய கோடி
அரக்கனும் பதைக்க எய்தான்.

பொ :—இந்திரசித்து, கோரைபோன்ற நுனியையுடைய கொடிய கோடி அம்புகளைக் கோத்து எய்தான்; இலக்குவன் அவைபோன்ற கோடி அம்புகளைத் தொடுத்து அவற்றை அழித்தான்; பாரை மீன் போன்ற தலையையுடைய கோடி அம்புகளை இலக்குவன் பல்கால் விடுத்துப் பரப்பினன். இந்திரசித்தும் பாரைமீன் போன்ற தலையினையுடைய கோடி அம்புகளை விடுத்து அவை பதைத்து வீழுமாறு எய்தான்.

கு :—கோரை – ஒருவகைபுல். கோரைப்புல் போன்ற தலையையுடைய அம்பு என்றவாறு. பாரை, ஒருவகை மீன். பாரைமீன் போன்ற தலையையுடைய அம்பு என்க. இனிப்பாரை, கடப்பாரை எனக் கொண்டு கடப்பாரை போன்ற முனையையுடைய அம்பு எனலும் ஆம். இளவல்விட்ட அம்புகள் பதைக்க அரக்கனும் எய்தான் என்க. (110)

8243. தாமரைத் தலைய வாளி
தாமரைக் கணக்கிற் சார்ந்த
தாம்வரத் துரந்து முந்தித்
தசமுகன் றனய னார்த்தான்

தாமரைத் தலைய வாளி
தாமரைக் கணக்கிற் சார்ந்த
தாம்வரத் தடுத்து வீழ்த்தான்
றாமரைக் கண்ணன் றம்பி.

தாமரைத் தலைய வாளி,
தாமரைக் கணக்கின் சார்ந்த —
தாம்வரத் துரந்து, முந்தி,
தசமுகன் தனயன் ஆர்த்தான்
தாமரைத் தலைய வாளி,
தாமரைக் கணக்கின் சார்ந்த
தாம்வரத் தடுத்து வீழ்த்தான்,
தாமரைக் கண்ணன் தம்பி.

பொ :—இராவணன் மகனாகிய இந்திரசித்து, தாமரை மொட்டுப் போன்ற தலையினையுடைய அம்புகள் பதுமம் என்னும் பேரெண் அளவாகப் பொருந்தினவாய்த் தாம் வில்லினின்றும் புறப்படுமாறு முன்னே செலுத்தி ஆரவாரித்தான்; தாமரை மலர்போன்ற கண்களையுடைய இராமனுக்குத் தம்பியாகிய இலக்குவன் தாமரை மொட்டுப்போன்ற முனையினையுடைய அம்புகள் பதுமம் என்ற பேரெண் அளவிற் பொருந்தினவராய்த் தம் தன்மேல்வர அவற்றைத் தன்னம்புகளால் தடுத்துப் பயனற்றதாகுமாறு வீழ்த்தினான்.

கு :—தாமரை மொட்டுப்போன்ற முனையையுடைய அம்பினைத் 'தாமரைத் தலையவாளி' என்றார். தாமரை பதுமம் என்ற பேரெண்; கோடியால் பெருக்கிய கோடி என்பர். தசமுகன் பத்துத் தலைகளையுடைய இராவணன். தாமரைக் கண்ணன் என்றது, தாமரை மலர் போன்ற கண்களையுடைய இராமனை. (111)

8244. வச்சிரப் பகழி கோடி
வளையெயிற் றரக்க னெய்தான்
வச்சிரப் பகழி கோடி
துரந்தவை யனகன் மாய்த்தான்
முச்சிரப் பகழி கோடி
யிலக்குவன் முடுக விட்டான்
முச்சிரப் பகழி கோடி
தொடுத்தவை தடுத்தான் முன்பன்.

வச்சிரப் பகழி கோடி
வளை எயிற்று அரக்கன் எய்தான்;
வச்சிரப் பகழி கோடி
துரந்து, அவை அனகன் மாய்த்தான்;
முச்சிரப் பகழி கோடி
இலக்குவன் முடுக விட்டான்;
முச்சிரப் பகழி கோடி
தொடுத்து அவை தடுத்தான் முன்பன்.

பொ:—வளைந்த பற்களையுடைய இந்திரசித்து வச்சிரம் போன்ற வடிவுடைய கோடி அம்புகளை எய்தான்; இலக்குவன் அவற்றை வச்சிரப்படையின் வடிவமைந்த கோடி அம்புகளைவிடுத்து அழித்தான்; மூன்று முனைகளையுடைய கோடி அம்புகளை இலக்குவன் மீண்டும் விரைந்து செல்லுமாறு விட்டான்; வலியவனாகிய இந்திரசித்து அவற்றை, மும்முனைகளையுடைய கோடி அம்புகளை விடுத்துத் தடுத்தான்.

கு:—வச்சிரம்போன்று பல முனைகளையுடைய அம்பினை வச்சிரப் பகழி என்றார். மூன்று முனைகளையுடைய அம்புகளை முச்சிரப் பகழி என்றார். அனகன் பாவமற்றவன் என்ற பொருளதாய் இலக்குவனை உணர்த்தியது. முன்பன் என்பது வலியவன் என்னும் பொருளதாய் இந்திரசித்தினை உணர்த்தியது. (112)

8245. அஞ்சலி யஞ்சு கோடி
தொடுத்திக லரக்க னெய்தான்
அஞ்சலி யஞ்சு கோடி
தொடுத்தவை யறுத்தா னையன்
குஞ்சரக் கன்னங் கோடி
யிலக்குவன் சிலையிற் கோத்தான்
குஞ்சரக் கன்னங் கோடி
தொடுத்தவை யரக்கன் கொய்தான்.

அஞ்சலி அஞ்சு கோடி
தொடுத்து, இகல் அரக்கன் எய்தான்;
அஞ்சலி அஞ்சு கோடி
தொடுத்து, அவை அறுத்தான் ஐயன்;

குஞ்சரக் கன்னம் கோடி
இலக்குவன் சிலையில் கோத்தான்;
குஞ்சரக் கன்னம் கோடி
தொடுத்து, அவை அரக்கன் கொய்தான்.

பொ :—வலிமை மிக்க இந்திரசித்து ஐந்துகோடி அஞ்சலி அம்புகளைத் தொடுத்து எய்தான்; அவற்றை இலக்குவனும் ஐந்து கோடி அஞ்சலி அம்புகள் தொடுத்து அறுத்தொழித்தான்; இலக்குவன், குஞ்சரக்கன்னம் என்னும் கோடி அம்புகளை வில்லிற்கோத்து விடுத்தான்; இந்திரசித்தும் குஞ்சரக்கன்னம் அம்புகளைக் கோடி யளவாகத் தொடுத்து அவற்றை அழித்தான்.

கு :—அஞ்சலியாகக் கூப்பிய கைகள்போன்ற அம்புகளை அஞ்சலி என்றும் யானையின் காதுபோன்ற அமைப்புடைய அம்புகளைக் குஞ்சரக்கன்னம் என்றும் பெயர் கூறியவாறு. ஐந்து, அஞ்சு எனப் போலியாய் வந்தது. (113)

8246. எய்யவு மெய்த வாளி
விலக்கவு முலக மெங்கும்
மொய்கணைக் கான மாகி
முடிந்தது முழங்கு வேலை
பெய்கணைப் பொதிக ளாலே
வளர்ந்தது பிறந்த கோபம்
கய்மிகக் கனன்ற தல்லாற்
றளர்ந்திலர் காளை வீரர்.

எய்யவும், எய்த வாளி
விலக்கவும், உலகம் எங்கும்
மொய்கணைக் கானம் ஆகி
முடிந்தது; முழங்கு வேலை
பெய்கணைப் பொதிக ளாலே
வளர்ந்தது; பிறந்த கோபம்
கைம் மிகக் கனன்றது அல்லால்,
தளர்ந்திலர், காளை வீரர்.

பொ :—ஒருவர்மேல் ஒருவர் இவ்வாறு அம்புகளை எய்தவாறும், ஒருவர் எய்த அம்புகளை மற்றொருவர் விலக்குவதாலும், உலகம் முழுவதும் நெருங்கிய அம்புகளின் காடாகி நிறைந்தது; முழங்கு

கின்ற கடல், அவர் பெய்த அம்புக் கூட்டங்களால் நிறைந்து வளர்ச்சியுற்றது; அங்ஙனமாகவும் காளைப்பருவ முடைய அவ்வீரர் இருவரும் கோபம் மிகுதிப்படக் கொதித்தனரே அன்றித் தளர்ச்சி யுறவில்லை.

கு :—உலகமெல்லாம் கணைக்கானமாகவும், கடல் அம்புக்கூட்டங் களால் நிறையவும், எய்த வீரர் இருவரும் சிறிதும் தளர்ச்சியுற வில்லை; அவர் தம் சினமே வளர்ச்சியுற்றது என அவ்வீரர் தம் வலிமையும் பேரார்வமும் புலப்படுத்தியவாறு. (114)

## இந்திரசித்து அனுமன்மேலும் இலக்குவன் கவசத்தின்மேலும் அம்பு சொரிதல்

8247. வீழியின் கனிபோன் மேனி
கிழிபட வனுமன் வீரச்
சூழெழு வனைய தோண்மே
லாயிரம் பகழி தூவி
ஊழியி னிமிர்ந்த செந்தீ
யுருமினை யுமிழ்வ தென்ன
ஏழிரு நூறு வாளி
யிலக்குவன் கவசத் தெய்தான்.

வீழியின் கனிபோல் மேனி
கிழிபட, அனுமன் வீரச்
சூழ் எழு அனைய தோள்மேல்
ஆயிரம் பகழி தூவி,
ஊழியின் நிமிர்ந்து செந்தீ
உருமினை உமிழ்வது என்ன
ஏழ் — இருநூறு வாளி
இலக்குவன் கவசத்து எய்தான்.

பொ :—இந்திரசித்து, வீழியின் பழம்போல அனுமன் மேனி கிழியும்படியாக, அவன் வீரமிக்க திரண்ட தூண்போன்ற தோள்கள் மேல் ஆயிரம் அம்புகளைத் தூவிவிட்டு, ஊழி முடிவில் நிமிர்ந்து வளர்ந்த செந்தீயானது இடியினை உமிழ்வதுபோல, ஆயிரத்து நானூறு அம்புகளை இலக்குவனது கவசத்தில் எய்தான்.

கு :—வீழி என்பது செடிவகையில் ஒன்று. அதன்கனி மிகச் சிவந்திருக்கும். மேனி, கிழியும்போது வெளிப்படும் குருதியினால்,

விழியின் கனிபோலும் என்க. அனுமன்மேல் இந்திரசித்துவிட்ட அம்புகளின் எளிமை புலப்பட 'ஆயிரம் பகழி தூவி' என்றார். விளையாட்டாகத் தூவினனன்றி அவன் உயிர்செல ஏவினனில்லை என்க. இலக்குவனது கவசத்தில் படும்படி இந்திரசித்து விட்ட அம்புகளின் வலிமையும் கடுமையும் தோன்ற 'ஊழியினிமிர்ந்த செந்தீ யுருமினை உமிழ்வதென்ன' என உவமை கூறினர். கோபம்மிக்க இந்திரசித்து ஊழிக்காலத்துச் செந்தீப் போன்றவன் எனவும், அவன் எய்த அம்புகள் அத்தீஉமிழ்ந்த இடிகளைப் போன்றன எனவும் உவமையை விரிக்க. 'தீ உருமினை உமிழ்வது என்ன' என்றது, இல்பொருளுவமை; உருமினை உமிழ்தல் மேகத்திற்கன்றித் தீக்கு இன்மை நினைக. (115)

## இந்திரசித்தின் வில்லாண்மையை விண்ணவரும் முனிவரும் வியத்தல்

8248. முற்கொண்டா னரக்க னென்று
முளரிவாண் முகங்க டேவர்
பிற்கொண்டா ரிளைய கோவைப்
பியல் கொண்டான் பெருந்தோ ணின்று
கற்கொண்டார் கிரியி னாலு
மருவிபோற் குருதி கண்டார்
விற்கொண்டா னிவனே யென்று
வெருக்கொண்டார் முனிவர் மேலோர்.

'முற்கொண்டான் அரக்கன்', என்று,
முளரிவாள் முகங்கள், தேவர்,
பின்கொண்டார்; இளைய கோவைப்
பியல் கொண்டான் பெருந்தோள் நின்றும்,
கல்கொண்டு ஆர் கிரியின் நாலும்
அருவிபோல், குருதி கண்டார்,
'வில் கொண்டான் இவனே!' என்று,
வெருக்கொண்டார், முனிவர் மேலோர்.

பொ :—இந்திரசித்துப் போர்த்திறமையில் முந்திக்கொண்டான் என்று தேவர்கள் தம் தாமரை மலர்போன்ற ஒளிவாய்ந்த முகங்களைப் பின்னே திருப்பிக் கொண்டார்கள்; இளைய கோவாகிய இலக்குவனைப் பிடரியின்மேல் கொண்டுள்ள அனுமன் பெரிய தோளில் நின்று, கற்களைக்கொண்டு நிறைந்துள்ள மலையில் நின்றும் வீழ்

கின்ற அருவியைப்போல, - வீழ்கின்ற இரத்தப்பெருக்கைக் கண்டவ ராகிய விண்ணிலுள்ள முனிவர்கள், வில்லைக்கொண்ட வீரன் இந்த இந்திரசித்தே என்று அச்சம் கொண்டார்கள்.

கு:—இந்திரசித்து விற்போரில் முற்கொண்டான் என்பதை அறிந்த தேவர்கள், அவனைப் பார்க்க மனமின்றி வெறுப்புணர்ச்சி யால் முகத்தைத் திருப்பிக்கொண்டார்கள். மேலோராகிய முனிவர் கள் வலியனாகிய அனுமன் தோள்களில் குருதி ஒழுகுவது கண்டு இந்திரசித்தின் வில் வீரத்தைப் புகழ்ந்துவிட்டு, அவனால் என்ன நேருமோ? என்று அச்சங் கொண்டார்கள் என்க. முனிவர் மேலோர் என்பதை, மேலோர் ஆகிய முனிவர் என மாற்றுக. மேலிருந்து போர்க்காட்சியைக் கண்டுகொண்டிருந்த முனிவர் என்ற வாறு. இனி, முனிவராகிய மேலோர் என இருபெய ரொட்டாக்கலும் ஒன்று. தான் பிடித்த வில்லினால் பயன் கொண்டவன் இந்திரசித்தே என்பார், 'விற்கொண்டான் இவனே' என்றார். பியல் - எடுத்தல்; பிடரி. அனுமனது தோள் மலைபோன்றது; அதிலிருந்து பெருகும் குருதி அம்மலையினின்று வீழும் அருவி போன்றது; என்றவாறு. கிரி- மலை. ஆர்தல் - நிறைதல். வெரு – அச்சம். அனுமனையே துன் புறுத்திய இந்திரசித்தின் வில்லாற்றல் நம்மை என் செய்யுமோ என முனிவர் அஞ்சினர் என்றவாறு. (116)

இலக்குவன் இந்திரசித்தின் கவசத்தில் அம்பெய்தல்

8249. சீறுநூ றெரிந்த சிந்தை
யிலக்குவன் சிலைக்கை வாளி
நூறுநூ றேவி நொய்தி
னுடங்குளை மடங்கன் மாவும்
வேறுவே றியற்றி வீரக்
கொடியையு மறுத்து வீழ்த்தி
ஆறுநூ றம்பு செம்பொற்
கவசம்புக் கழுந்த வெய்தான்.

சீறும் நூல் தெரிந்த சிந்தை
இலக்குவன், சிலைக்கை வாளி
நூறுநூறு ஏவி, வெய்தின்,
நுடங்கு உளை மடங்கல் மாவும்

வேறு வேறு இயற்றி, வீரக்
கொடியையும் அறுத்து வீழ்த்தி,
ஆறு நூறு அம்பு செம்பொன்
கவசம்புக்கு அழுந்த எய்தான்.

பொ:—சீறிச் செய்யும் போர்த்துறைக்குரிய நூலைத் தெரிந்துள்ள சிந்தையினையுடைய இலக்குவன், வில்லின்வழியே கையில் உள்ள அம்புகளை நூற்றுக் கணக்காகச் செலுத்தி, எளிமையாக, அசைகின்ற பிடரி மயிரினையுடைய சிங்கங்களைப் பல துண்டங்களாக வேறுபடுத்தி வீரத்தை யுணர்த்தும் அவன் கொடியையும் அறுத்துத் தள்ளி, அவனுடைய செம்மையான பொன்னாலியன்ற கவசத்தில் புகுந்து அழுந்துமாறு ஆறுநூறு அம்புகளை எய்தான்.

கு:—சீறு நூல் என்றது, போர்க்குரிய தனுர்வேதம் முதலிய நூல்களை சீறிப் பொருவோர்க்குரிய நூலை, 'சீறுநூல்' என நூலுக்கும் சீற்றம் உள்ளதுபோல் கூறியது உபசாரம். வில் வீரத்தில் முற்பட்ட இந்திரசித்தினை எவ்வாறு வெல்வது என்பதை நன்குணர்ந்து செயலாற்றுதற் குரியவன் என்பார், 'சீறுநூல் தெரிந்த சிந்தை இலக்குவன்' என்றார். நொய்து - எளிமை. நொய்தின் இயற்றி என இயையும். நுடங்குதல் – அசைதல். உளை - பிடரிமயிர். மடங்கல் மா – சிங்கம். இந்திரசித்தின் தேரில் ஆயிரம் சிங்கங்கள் பூட்டப்பட்டிருந்தமை முன்னமே கூறப்பட்டுள்ளது. வேறுவேறியற்றலாவது, பல துண்டங்களாக்குதல். மடங்கல்மாவும் என்ற உம்மையால் பாகனையும் வேறுவேறியற்றி என்பது கொள்க. 'சாரதி வீழ்ந்தபோதும்' எனப் பின் கூறப்படுவதும் காண்க. இந்திரசித்து இலக்குவனது ஊர்தியை ஊறுபடுத்திக் கவசத்தையும் துளைத்தது போல, இலக்குவனும் இந்திரசித்தின் ஊர்தியாகிய தேரில் பூட்டிய சிங்கங்களையும் கொடியையும் பாகனையும் அழித்து அவன் மார்பில் பூண்ட கவசத்திலும் புகுமாறு அம்புகளை எய்தான் என்க. (117)

இந்திரசித்தின் உடம்பில் இரத்த வெள்ளம் பெருகுதல்

8250. காளமே கத்தைச் சார்ந்த
கதிரவ னென்னக் காந்தித்
தோளின்மேன் மார்பின் மேலுஞ்
சுடர்விடு கவசஞ் சூழ

ளீளுநீர்ப் பவள வல்லி
நிரையொளி நிமிர்வ வென்ன
வாளிவாய் தோறும் வந்து
பொடித்தன குருதி வாரி.

காள மேகத்தைச் சார்ந்த
கதிரவன் என்னக் காந்தி,
தோளின்மேல் மார்பின் மேலும்,
சுடர்விடு கவசச் சூழல்
நீளு நீர்ப் பவள வல்லி
நிரை ஒளி நிமிர்வ என்ன,
வாளி வாய் தோறும் வந்து
பொடித்தன, குருதி வாரி.

பொ :—(இலக்குவனது அம்பு பட்ட அளவில்) கரிய மேகத்தைச் சார்ந்திருக்கும் சூரியனைப்போல ஒளிவீசிக்கொண்டு (இந்திரசித்தின்) தோளின்மேலும் மார்பின்மேலும் விளங்குகின்ற கவசப்பரப்பில், நீளும்தன்மையுள்ள, நீரின்கண் தோன்றும், பவளக்கொடிகளின் வரிசையான ஒளிகள் நிமிர்ந்து தோன்றுகின்றன என்னுமாறு, அம்பு பட்ட வாய்தோறும் இரத்த வெள்ளம் பீறிட்டுக்கொண்டு தோன்றின.

கு :—கருநிறத்தனாகிய இந்திரசித்தின் மார்பில் கவசம் ஒளிவீசும் தோற்றம், காளமேகத்தைச் சார்ந்த கதிரவனைப் போலிருந்தது. காளமேகம் இந்திரசித்துக்கும் கதிரவன் கவசத்திற்கும் உவமை. கவசத்தைத் துளைத்துக்கொண்டு இலக்குவன் அம்பு சென்ற வழி தோறும் இரத்தம் பீறிட்டுக்கொண்டு வரும் தோற்றம், நீரில் தோன்றி நீளுகின்ற பவழக்கொடிகளின் வரிசையான ஒளிகளைப் போல இருந்தது என்றவாறு. இந்திரசித்தின் உடம்பு நிறத்தால் நீரினைப் போன்றிருந்தது எனவும், அவனுடம்பில் அம்புபட்ட வாய் தோறும் பீறிடும் இரத்தம், பவழக்கொடிகளின் ஒளிகளைப் போல இருந்தது எனவும் உவமையை விரித்துக் கொள்க. நீளும் பவளம், நீர்ப்பவளம் எனத் தனித் தனி இயையும். பொடித்தல் – தோன்றுதல். வாளிவாய் என்றது அம்புபட்ட இடத்தை. கவசச்சுழல் – கவசப் பரப்பு. (118)

## இலக்குவனது விரைந்த விற்போரை இந்திரசித்து அறியகில்லாமை

8251. பொன்னுறு தடந்தேர் பூண்ட
மடங்கன்மாப் புரண்ட போதும்
மின்னுறு பதாகை யோடு
சாரதி வீழ்ந்த போதும்
தன்னிறத் துருவ வாளி
தடுப்பில சார்ந்த போதும்
மின்னதென் றறியா னன்ன
வினையதோர் மாற்றஞ் சொன்னான்.

பொன் உறு தடந்தேர் பூண்ட
மடங்கல்மாப் புரண்ட போதும்
மின் உறு பதாகையோடு
சாரதி வீழ்ந்த போதும்,
தன் நிறத்து உருவ, வாளி
தடுப்பு இல சார்ந்த போதும்
இன்னது என்று அரியான், அன்னான்,
இனையது ஓர் மாற்றம் சொன்னான்.

பொ :—பொன்னாலியன்ற பெரிய தேரில் பூட்டிய சிங்கங்கள் (இலக்குவனது அம்பினால்) இறந்து, புரண்டபோதும், மின்னுகின்ற கொடியோடு தேர்ப்பாகன் வீழ்ந்தபோதும், தன் மார்பில் ஊடுருவுமாறு அம்புகள் தடுத்தற் கரியவாய் வந்து சார்ந்தபோதும், இன்னது நிகழ்கின்றது என்று அறியகில்லானாகிய அந்த இந்திரசித்து இத்தகையதொரு சொல்லைச் சொன்னான்.

கு :—தேர்பூண்ட சிங்கங்கள் புரண்டதும், கொடியும் பாகனும் வீழ்ந்ததும், தன் மார்பில் அம்புகள் துளைத்ததும் இமைப்பளவில் நிகழ்ந்தமையால் இன்னது நிகழ்கின்றது என்று இந்திரசித்து அறிய இயலாதவனானான் என்க. இதனால், இலக்குவனது விற்போர்த் திறத்தை விளக்கியவாறு. அவன் சொன்ன மாற்றம் வருஞ் செய்யுளில் காண்க. சாரதி வீழ்ந்தமை முன்பு உம்மையால் பெறவைத்தமை நினைக. (119)

## இலக்குவன் வில் வீரத்தை இந்திரசித்துப் புகழ்தல்

8252. அந்நர னல்ல ளுகி
ஞரண னனைய னன்றேல்
பின்னரன் பிரம னென்று
பேசினும் பிறந்து வாழும்
மன்னர்நம் பதியின் வந்து
வரிசிலை பிடித்த கல்வி
இந்நரன் றன்னே டொப்பார்
யாருள ரொருவ ரென்ருன்.

'அந் நரன்; அல்லன் ஆகில்
நாரணன்; அனையன் அன்றேல்,
பின், அரன், பிரமன், என்று
பேசினும், பிறந்து வாழும்
மன்னர், நம் பதியின் வந்து
வரிசிலை பிடித்த கல்வி
இந்நரன் தன்னேடு ஒப்பார்
யாருளர், ஒருவர் ?' என்ருன்.

பொ :—(வீரமரபில்) பிறந்து வாழும் மன்னர்கள், (இவ் விலக்குவன் வீரத்தைக் கண்டு) அந்த நரனே! அல்லனுகில் நாரணனே! அவன் அன்றேல் அரனே! அவனன்றேல் பின் எண்ணத்தக்க பிரமனே! என்று சிறப்பித்துப் பேசுவர் ஆயினும், நமக்கு உரிமையுள்ள பதியில் வந்து கட்டமைந்த வில்லைப் பிடித்துப் போர்செய்யும் கல்வியில், இந்த மனிதனேடு ஒப்பாவார் ஒருவர் யார் உளர்? என்று (தனக்குள்) புகழ்ந்தான்.

கு :—இலக்குவனது வில்வீரத்தைக் கண்ட மன்னர்கள் நரன் என்றும் நாரணன் என்றும், அரன் என்றும் பிரமன் என்றும் அவனைப் புகழ்ந்து பேசுவார்கள் ஆயினும், அவருள் யாரும் இந்த இலக்குவனுக்கு ஒப்பாகமாட்டார்கள் என்று இலக்குவனது விற்றிறத்தை இந்திரசித்துப் புகழ்ந்தவாறு. அந் நரன் என்புழி அகரம் பண்டறி சுட்டு. திருமாலே குரு சீடர் முறைமையை உலகிற்கு உணர்த்தும் பொருட்டுப் பதரிகாச்சிரமத்தில் நரன் என்னும் சீடனுகவும் நாரணன் என்னும் குருவாகவும் தோன்றித் தத்துவப் பொருளை உபதேசிப்பதாக வீற்றிருந்தார் என்பது புராண கதை. இக் கதையை உளங்கொண்டு அந்நரன் எனச் சுட்டியவாறு. இவ்வாறே இராவணனும் முதற்போரில் இலக்குவன் வீரத்தைக் கண்டு மாலியவானிடத்தில்,

"சீர்த்த வீரியராயுள்ளார் செங்கண்மா லெனினு மியானக் கார்த்த வீரியனை நேர்வார் உளரெனக் கருதலாற்றேன், பார்த்த போ தவனு மற்றத் தாபதன் தம்பி பார்த்து, ஆர்த்ததோர் துகளுக்கு ஒவ்வான் ஆரவந் காற்ற கிற்பார்" (கும்பகருணன்-25) எனப் புகழ்ந்திருத்தலை நினையலாம். வீரமரபிற் பிறந்து என ஏற்ற சொல் வருவிக்கப்பட்டது. வீரனைப் புகழ்தற்குரியார் அவரே ஆகலின். இலக்குவனது வில்வீரத்தைக் காண்போர் இவன் நரனே! அன்றேல் நாரணனே! அவனன்றேல் அரனே! அன்றேல் பின்பு எண்ணத்தக்க பிரமனே என்று புகழ்வார்கள் எனப் பிறன் கோள் கூறிப் பின், 'இந்நரன் தன்னோடொப்பார் யாருளர் ஒருவர்' என்று தன்கோள் இதுவென நிறுவியவாறு. இது 'பிறர்தம் மதமேற்கொண்டு களைவு' என்னும் மதம் என்பர். யாரும் தந்நிலத்தில் வலியராயிருத்தல் இயல்பு; இவன் நம் பதியில் வந்து வலிமை காட்டியதே சிறப்பு என்றவாறு. நரன், முன்னது அவதாரத்தையும் பின்னது மனிதனையும் உணர்த்தியது. (120)

## இந்திரசித்து வேறு தேர் ஏறுதல்

8253. வாயிடை நெருப்புக் கால
வுடனெடுங் குருதி வாரத்
தீயிடை நெய்வார்த் தன்ன
வெகுளியா னுயிர்தீர்ந் தாலும்
ஒய்விட மில்லான் வல்லை
யோரிமை யொடுங்கா முன்னம்
ஆயிரம் புரவி பூண்ட
வாழியந் தேர ளுனன்.

வாயிடை நெருப்புக் கால,
உடல் நெடுங் குருதி வார,
தீயிடை நெய் வார்த்தன்ன
வெகுளியான் — உயிர் தீர்ந்தாலும்
ஒய்விடம் இல்லான் — வல்லை,
ஓர் இமை ஒடுங்கா முன்னம்,
ஆயிரம் புரவி பூண்ட
ஆழி அம் தேரன் ஆனான்.

பொ:—தன் உயிர் போவதாக இருந்தாலும் போரில் ஒய்வு கொள்ளாதவனான இந்திரசித்து,—வாயில் நெருப்பு வெளிப்படவும்,

உடம்பில் மிக்க இரத்தம் ஒழுகவும், எரியும் தீயும் நெய்வார்த்தாற் போன்ற, பெருகிய கோபமுடையவனாய் விரைவாக ஓரிமைப் பொழுதிற்குள் ஆயிரம் குதிரைகள் பூட்டப்பெற்ற சக்கரத்தையுடைய தேரின்மேலனாக ஆனான்.

கு:—இலக்குவன் அம்புகளால் இந்திரசித்துக்கு உடம்பிலும் உள்ளத்திலும் உண்டான மாறுதலை முதல் இரண்டடிகளால் உணர்த்தினர், வாயிடை நெருப்புக் காலுதலும் உடம்பிடைக் குருதி வார்தலும் உடம்பில் தோன்றிய வேறுபாடு. 'தீயிடை நெய்வார்த்தன்ன வெகுளியான்' என்றது உள்ளத்தில் தோன்றிய வேறுபாட்டை யுணர்த்தியவாறு. இயல்பாகவே கோபமுள்ள இந்திரசித்துக்குத் தீ உவமை ; இலக்குவன் அம்பினால் அச்சினம் மேலும் மூண்டமைக்குத் தீயிடை நெய் வார்த்தமையால் அத் தீ, மேலும் பெருகினமை உவமை. 'மண்டு மெரியுண் மரந்தடிந்திட்டற்கு' (பு-வெ-1) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகும். ஓமத் தீயில் நெய்வார்த்துப் பழகியவன் இந்திரசித்து ஆதலின், அவன் வெகுளி பொங்கினமைக்கு 'தீயிடை நெய் வார்த்தலையே' உவமை கூறினர். உயிர் ஒயினும் அவன் உளம் போரில் ஓய்வு கொள்ளாது என இந்திரசித்தின் பேரார்வம் புலப்படுத்தியவாறு. காலச்சிறுமை காட்டுவார், 'ஓரிமை ஒடுங்காமுன்னம்' என்றார் ; ஒரு மாத்திரைக்குள் என்றவாறு. 'தேரன் ஆனான்' என்புழி தேரன், குறிப்பு வினைமுற்று ; 'அது, 'ஆனான்' என ஆக்கச் சொல்லொடு தொடர்ந்தது. சிங்கம் பூட்டிய தேர் இலக்குவன் அம்பினால் அழிந்துவிட்டமையால் குதிரைகள் பூட்டிய தேர் ஒன்றுவர அதில் இந்திரசித்து ஏறினான் என்றவாறு.

(121)

## இந்திரசித்து அம்பு எய்தல்

3254. ஆசை யெங்கணு மம்புக வெம்புபோர்
★ ஓசை விம்ம வுருத்திர ரும்முடல்
கூச வாயிர கோடி கொலைக்கணை
வீசி விண்ணை வெளியில தாக்கினான்.

ஆசை எங்கணும் அம்பு உக, வெம்பு போர்
ஓசை விம்ம உருத்திரரு உடல்
கூச, ஆயிர கோடி கொலைக்கணை
வீசி, விண்ணை வெளிஇலது ஆக்கினான்.

பொ:—(தேரேறிய இந்திரசித்து) கடுமையான போர் ஒலி பெருகவும், உருத்திரரும் உடல் கூசுமாறும், எல்லாத் திசைகளிலும்

அம்புகள் சிந்தவும் ஆயிரகோடி அளவான கொலை செய்யும் அம்புகளை எய்து விண்ணினை வெளியிடமில்லாதபடி (அம்பு மலையாக) ஆக்கினன்.

கு :—ஆசை – திசை. அழித்தற் கடவுளுக்கு எதற்கும் அஞ்சி உடல் கூசும் நிலை இல்லையாயினும் இந்திரசித்தின் போர்த்திறனைக் கண்டு கூசுவானாயினன் என்றவாறு. உம்மை உயர்வு சிறப்பு; விண் முழுதும் அம்புகளே செறிந்து நிற்குமாறு செய்தான் என்பார் 'விண்ணை வெளியிலதாக்கினன்' என்றார். (122)

## இலக்குவன் அம்பு எய்தல்

8255. அத்தி றத்தி லனகனு மாயிரம்
பத்தி பத்தியி னெய்குவ பல்கணை
சித்தி ரத்தினிற் சிந்தி யிராவணன்
புத்தி ரற்குமொ ராயிரம் போக்கினன்.

அத்திறத்தில், அனகனும் ஆயிரம்
பத்தி பத்தியின் எய்குவ பல்கணை
சித்திரத்தினில் சிந்தி, இராவணன்
புத்திரற்கும், ஓர் ஆயிரம் போக்கினன்.

பொ :—அப்போது, இலக்குவனும் ஆயிரக்கணக்காக, வரிசை வரிசையாக எய்யத்தகுவனவாகிய பல கணைகளை வியக்கத்தக்க நிலையில் (விண் எங்கணும்) சிந்திவிட்டு, இராவணன் மகனாகிய இந்திரசித்துக்கும் ஓர் ஆயிரம் அம்புகளை எய்தான்.

கு :—திறம் இங்குப் பொழுது என்னும் பொருளில் வந்தது. அனகன் என்றது பாவச் செயல் இல்லாத இலக்குவனை. பத்தி – வரிசை. அடுக்குப் பத்தியின் பன்மையை யுணர்த்தியது. சித்திரம் – விசித்திரம்; வியக்கத்தக்க நிலை. 'இராவணன் புத்திரர்க்கு மொராயிரம் போக்கினன்' என்றமையால் முன்கூறிய சித்திரத்தினில் சிந்திய கணைகள் கைத்திறம் தோன்ற வெறுவிதாக எய்யப்பட்டவையே என்பது புலப்படுத்தியவாறு. (123)

## இந்திரசித்து இலக்குவன்மேல் அம்பு எய்தல்

8256. ஆயிரங்கணை பாய்தலு மாற்றருங்
காயெ ரித்தலை நெய்யெனக் காந்துருத்

தூய வன்சுடர் சூழொளி நெற்றியில்
தீய வெங்கணை நூறு செலுத்தினன்.

ஆயிரம் கணை பாய்தலும், ஆற்றருங்
காய் எறித்தலை நெய் எனக் கரந்துரு,
தூயவன் சுடர் சூழ் ஒளி நெற்றியில்
தீய வெங்கணை நூறு செலுத்தினன்.

பொ :—(இலக்குவன் விட்ட) ஆயிரம் அம்புகளும் இந்திரசித்தின் மேல் பாய்ந்த அளவில், பொறுக்க முடியாத சுடுகின்ற தீயில் நெய் வார்த்தால் (அத் தீ மிக்கெரிவது) போல, இந்திரசித்து மிகவும் வெகுண்டு, தூயவனாகிய இலக்குவனது மிக்க ஒளிவாய்ந்த நெற்றியில் மிகக்கொடிய நூறு அம்புகளைச் செலுத்தினன்.

கு :—இலக்குவன் அம்பு பட்டதும் இந்திரசித்தின் வெருட்சி பெருகிற்று என்பார், நெய் வார்த்தவுடன் மிக்கெரியும் நெருப்புப் போலப் பெருகிற்று என உவமை கூறி விளக்கினர். 'தீயிடை நெய் வார்த்தன்ன' (121) என முன்னும் இவ்வுவமை வந்தவாறு காண லாம். எரித்தலை நெய்யென என்றாரேனும் எரித்தலை நெய் சொரி யின் அது மிக்கெரிவது போல, இலக்குவனது அம்பு தைத்தவுடன் இந்திரசித்தின் கோபம் பெருகியது என உவமையை விரித்துரைக்க; காந்துதல் இங்குக் கோபித்தலை உணர்த்தியது. இலக்குவனை இங் குத் தூயவன் என்ற பெயரால் குறிப்பிட்டார்; அவன் தெய்வப் பணியை நினைந்து, மேல் அனகன் என்றதும் அக்கருத்தினாலே ஆம். இத்திரசித்தின் அம்பு மிகக் கொடியது என்பார். தீய வன் கணை என ஈரடை கொடுத்தார். 'ஆயிரங் கணைக்கு' நூறு கணையே எதிர் நிற்க வல்லன ஆதலின், இந்திரசித்து நூறு கணைகளை எய்தான் என்றவாறு. (124)

## இலக்குவன் அம்பு எய்தல்

8257. நெற்றி மேலொரு நூறு நெடுங்கணை
உற்ற போதினும் யாதுமொன் றுற்றிலன்,
மற்ற வன்றொழி லோன்மணி மார்பிடை
முற்ற வெங்கணை நூறு முடுக்கினன்.

நெற்றி மேல் ஒரு நூறு நெடுங்கணை
உற்ற போதினும், யாதும் ஒன்று உற்றிலன்
மற்று அ வன்தொழிலோன் மணி மார்பிடை
முற்ற, வெங்கணை நூறு முடுக்கினன்.

பொ :—தன் நெற்றியின்மேல் ஒருநூறு நெடிய அம்புகள் தைத்த போதிலும், (இலக்குவன்) யாதொரு துன்பமும் உருதவனுய், அந்தக் கொடுந் தொழிலுடையவனுன இந்திரசித்தின் மணியாரம் தாங்கிய மார்பில் ஊடுருவுமாறு நூறு கொடிய அம்புகளேச் செலுத்தினுன்.

கு :—அம்பு தைத்ததாலாய புண்களால் சிறிதும் இலக்குவன் வருந்தவில்லே என்பார், 'யாதுமொன்றுற்றிலன்' என்ருர். மற்று அவ் வன்தொழிலோன் என்பது ஓசை நோக்கி 'மற்றவன் தொழிலோன்' எனத் தொகுத்தல் விகாரமாய் நின்றது. மற்று அசைநிலே. (125)

## இந்திரசித்து இளேத்தல்

8258. நூறு வெங்கணே மார்பி னுழைதலின்
ஊறு சோரியொ டுள்ளமுஞ் சோர்தரத்
தேற லாந்துணே யுஞ்சிலே யூன்றியே
ஆறி நின்றன ஞற்றலிற் ருேற்றிலான்.

நூறு வெங்கணே மார்பில் நுழைதலின்
ஊறு சோரியொடு உள்ளமும் சோர்தர,
தேறல் ஆம் துணேயும், சிலே ஊன்றியே
ஆதி நின்றனன் — ஆற்றலில் தோற்றிலான்.

பொ :--இலக்குவன் விட்ட நூறு கொடிய கணேகளும் தன் மார்பில் நுழைதலால், ஆற்றலில் யார்க்கும் தோலாதவனுகிய இந்திரசித்து தன்னுடம்பில் சுரக்கின்ற இரத்தம் வழிவதோடு தன் மனமும்தளர, தெளிவு உண்டாகும் வரையில் வில்லே ஊன்றிக் கொண்டு கோபம் தணிந்து நின்றனன்.

கு :—சோர்தர என்பது இரட்டுற மொழிதல். சோரி சோர்தரல் என்றது, இரத்தம் வழிதலே; உள்ளஞ் சோர்தல் என்றது, மனம் தளர்தலே. ஊறுதல் - சுரத்தல். சோரி - இரத்தம். இந்திரசித்தின் உடம்பு இரத்தம் சோர்தலும், உள்ளம் தளர்தலும் ஒருங்கு நிகழ்ந்தன என்றவாறு. சோர்வு தெளியும் வரையில் வில்லேயே யூன்று கோலாகக் கொண்டு போர்செயும் சினம் ஆறி நின்ருன் இந்திரசித்து என்றவாறு. ஆற்றலில் தோற்றிலான், ஆறி நின்றனன் என இந்திர சித்தின் முன்னே வீரமும் இற்றைத் தளர்வும் முரண்பட்டமை விளக்கி, இலக்குவனது ஆற்றலேப் புலப்படுத்தியவாறு. (126)

## அனுமன் இந்திரசித்தின் தேரை உதைத்துருட்டுதல்

8259. புதையு நன்மணி பொன்னுரு ளச்சொடுஞ்
சிதைய வாயிரம் பாய்பரி சிந்திட
வதையின் மற்றொரு கூற்றென மாருதி
உதையி னாலவன் றேரை யுருட்டினான்.

புதையும் நல் மணி, பொன் உருள், அச்சொடும்
சிதைய, ஆயிரம் பாய்பரி சிந்திட,—
வதையின் மற்றொரு கூற்று என மாருதி—
உதையினால் அவன் தேரை உருட்டினான்.

பொ :—கொலைத் தொழிலில், வேறு ஒரு எமன் என்று கண்டோர் கூறுமாறு, அனுமன்,-நல்ல நவமணிகள் பதிக்கப்பெற்ற பொன்னாலியன்ற சக்கரங்கள் அச்சோடு சிதையவும், பாய்ந்து செல்லும் குதிரைகள் ஆயிரமும் சிந்தவும், அந்த இந்திரசித்தின் தேரினை ஓர் உதையினால் உருண்டு அழியும்படி செய்தான்.

கு :—உருள் - சக்கரம்; உருண்டு ஓடும் தொழிலால் வந்த பெயர். நன்மணிபுதையும் பொன்னுருள் என மாறுக. இந்திரசித்தின் தேரில் உள்ள சக்கரம் அவன் செல்வச் சிறப்புத் தோன்ற உயர்ந்த நன்மணிகளைப் பதித்துப் பொன்னால் இயற்றப்பட்டிருந்தது என்பது புலனும். வதை - கொலை. மற்றொரு கூற்று என்றது, வடிவால் வேறுபாடும் கொலைத் தொழிலால் ஒற்றுமையும் உடைமைபற்றி, புதிய கூற்றனையான் என்றபடி. கையினால் உருட்டாது அனுமன் தன் கால் உதையினால் உருட்டியது, அத்தேரின் எளிமையும் தன் வன்மையும் புலப்படுத்தற்கு என்க. (127)

## இந்திரசித்து பேய்கள் பூண்ட மற்றொரு தேரேறி இலக்குவன் மேல் அம்பு சொரிதல்

8260. பேயொ ராயிரம் பூண்டது பெய்ம்மணி
ஏய தேரிமைப் பின்னிடை யேறினான்
தூய வன்சுடர்த் தோளிணை மேற்சுடர்
தீய வெங்கணை யைம்பது சிந்தினான்.

பேய் ஓராயிரம் பூண்டது, பெய்ம்மணி
ஏய தேர் இமைப்பின்னிடை ஏறினான்;
தூயவன் சுடர்த் தோளிணைமேல் சுடர்
தீய வெங்கணை ஐம்பது சிந்தினான்.

பொ :—(இந்திரசித்து) ஓராயிரம்பேய் பூட்டப்பெற்றதாகிய மணிகள் பதித்து அமைத்த வேறு ஓர் தேரில் இமைப்பொழுதில் ஏறி தூயவனாகிய இலக்குவனது ஒளிவாய்ந்த இருதோள்களின்மேலும் விளக்கமுடைய மிகக் கொடிய அம்புகள் ஐம்பதினைச் சொரிந்தான்.

கு :—தூயவன் என்றது, இலக்குவனை. தீயவெங்கணை என்றது, அக்கணையின் கொடுமை புலப்படுத்தவேண்டி; மீமிசைச் சொல். பெய்ம்மணி ஏய தேர் என்றதற்குப் பதித்தற்குரிய நல்ல மணிகள் பொருந்திய தேர் எனப் பொருள்கூறலும் ஆம். (128)

52-ல் 128-1 கீழ் வரும் பாடல் மிகைப்பாடலாகக் காட்டப்பட்டுள்ளது.

8260 (a) சிந்து வாளி செறிதலும் சேவகன்
ஐந்து நூறு கடுங்கணை யாலவன்
உந்து தேரை ஒறுத்தனன் வெய்யவன்
வந்து தேரொன்றின் வல்லையி லேறினான்.

## இந்திரசித்து ஏறிவந்த ஆயிரந்தேர்களையும் இலக்குவன் அழித்தல்

8261. ஏறி யேறி யிழிந்ததல் லாலிகல்
வேறு செய்திலன் வெய்யவன் வீரனும்
ஆறு கோடி பகழியி னையிரு
நூறு தேரொரு நாழிகை நூறினான்.

ஏறி ஏறி இழிந்தது அல்லால், இகல்
வேறு செய்திலன், வெய்யவன்; வீரனும்,
ஆறு கோடி பகழியின் ஐ—இரு
நூறு தேர் ஒரு நாழிகை நூறினான்.

பொ :—கொடியவனாகிய இந்திரசித்து ஒவ்வொரு தேரின்மேலும், ஏறி இறங்கியதன்றி, வேறு போர் ஒன்றும் செய்திலன்; வீரனாகிய இலக்குவனும், ஒரு நாழிகைப் பொழுதில் ஆறுகோடி அம்புகளால் அவன் ஆயிரந் தேர்களை அழித்தான்.

கு :—இந்திரசித்து ஒரு தேர் அழிந்தவுடன் மற்றொரு தேரில் ஏறுவதும் அத்தேர் அழிந்தவுடன் மற்றொருதேர் ஏறுவதுமாக இருந்தானே யன்றி வில்லில் அம்பு தொடுத்தல் போன்ற எச்செயலையும் செய்ய மாட்டாதவனானான். ஒரு நாழிகைப் பொழுதில் இந்திரசித்து மாறிமாறி ஆயிரம் தேர்களில் வந்தானாக, அவ்வாயிரந் தேர்களையும்

இலக்குவன் ஆறுகோடி அம்புகள் தொடுத்து விடுத்து அழித்தான் என்றவாறு. இந்திரசித்தின் தேர் ஆயிரம் பேய்கள் இழுக்கத்தக்க பருமையும் பெருமையுமுடையதாய் வன்மைமிக்கு இருத்தலின் ஒவ்வொரு தேர்க்கும் ஆறுயிரம் அம்புகளைவிட்டு இலக்குவன் அழிக்க வேண்டுவதாயிற்று. இதனால் அவன் தேரின் வன்மை புலனும். (129)

## தேவர்களின் மகிழ்ச்சி ஆரவாரம்

8262. ஆசி கூறின ரார்த்தன ராய்மலர்
வீசி வீசி வணங்கினர் விண்ணவர்
ஊச னீங்கின ருத்தரி கத்தொடு
தூசு வீசினர் நன்னெறி துன்னினர்.

ஆசி கூறினர் ; ஆர்த்தனர் ; ஆய்மலர்
வீசி வீசி, வணங்கினர் ; — விண்ணவர் —
ஊசல் நீங்கினர் ; உத்தரிகத்தொடு
தூசு வீசினர் ; — நல் நெறி துன்னினர்.

பொ :—நல்ல நெறியில் ஒழுகுபவராகிய தேவர்கள், (இலக்குவனது போர்த்திறனைக் கண்டு) வாழ்த்துச் சொல்லி, ஆரவாரித்துக் கொண்டு ஆராய்ந்து எடுக்கப்பட்ட மலர்களை அவன்மேல் வீசி வீசி வணங்கினர்கள் ; பின்பு தம் மனத் தடுமாற்றம் நீங்கப் பெற்றவராய் மேலாடையோடு அரையில் உடுத்த ஆடையினையும் மகிழ்ச்சியினால் மேலே வீசினர்கள்.

கு :—இந்திரசித்து ஏறிவரும் தேர்களை யெல்லாம் இலக்குவன் அழித்தது கண்ட தேவர்கள் அவனுக்கு ஆசிகூறி ஆரவாரித்து மலர் தூவி வணங்கினர்கள் எனவும், ஊசல்போல மனம் தடுமாறிக் கொண்டிருந்த தம் மனநிலை மாறி மகிழ்ச்சி மிக்கவராய் மேலாடைகளையும் இடையிலுடுக்கும் ஆடைகளையும் விண்ணில் வீசினர்கள் எனவும் கொள்க. கூறினர் ஆர்த்தனர் என்பன முற்றெச்சங்கள் ; வணங்கினர் என்ற வினையொடு முடிந்தன. ஊசல் என்பது உவமை ஆகுபெயர். வெற்றி பெறுவானே? பெறுனே என ஊசல்போல மனம் தடுமாறிக்கொண்டிருந்த தேவர்கள், இலக்குவன் ஆயிரந் தேரை நாழிகைப் போழ்தில் அழித்தமை கண்டு அத்தடுமாற்றம் நீங்கித் துணிவும் மகிழ்ச்சியும் பெற்றவராய் மேலாடைகளை வீசிக் களித்தனர் என்றவாறு. மகிழ்ச்சியில் ஆடைகளை மேலே வீசுதல் உண்டு. "களித்த தேவர் எல்லாரும் தூசுநீக்கி யேறிட வார்த்த போது, கொல்லாத விரதத்தார் தங் கடவுளர் கூட்ட மொத்தார்" (இந்திரசித்து வதை : 56) என்பது காண்க. (130)

## அரக்கர் வீரர் போர்க்கு முந்துதல்

8263. அக்க ணத்தினே ராயிர மாயிரம்
மிக்க வெங்க ணரக்கரவ் வீரனே
டொக்க வின்ப மொருவழி ஊணினர்
புக்கு முந்தினர் போரிடைப் பொன்றுவார்.

அக்கணத்தின், ஓர் ஆயிரம் ஆயிரம்
மிக்க வெங்கண் அரக்கர் அவ்வீரனேடு
ஒக்க இன்ப ஒருவழி ஊணினர்
புக்கு முந்தினர் போரிடைப் பொன்றுவார்.

பொ :—அந்தக் கணத்தில் அந்த இந்திரசித்தோடு ஒக்க இன்பம் பெறுபவர்களும் ஓரிடத்தில் உணவுண்ணு கின்றவருமாகிய மிக்க கொடுமையான கண்களையுடைய பத்துலட்சம் அரக்கர்கள் போர்க் களத்தில் புகுந்து போரில் அழிபவராய் முந்தினர்கள்.

கு :—இந்திரசித்தினேடு ஒத்த தகுதியுடைய அரக்கர் பத்து லட்சம்பேர் இந்திரசித்துக்குத் துணையாகப் புகுந்து போர்க்கு முற்பட் டார்கள் என்றவாறு. போரிடைப் பொன்றுவாராய் முந்தினர் என இயையும். இலக்குவன் கணையால் பொன்றுதலல்லது வென்றி பெறுவார் அல்லர் எனக் கவி தன் கருத்தைக் கூறியவாறு. ஊணின ராகிய ஆயிரமாயிர மரக்கர் புக்கு முந்தினர் என்க. இந்திரசித்தோடு ஒத்த இன்பவாழ்வும் ஓரிடத்தி லுண்ணும் ஒற்றுமையும் உடைய அரக்கர் என அவர் தகுதி புலப்படுத்தியவாறு. (131)

## எதிர்த்த அரக்கரின் இயல்பு

8264. தேரர் தேரி னிவுளியர் செம்முகக்
காரர் காரி னிடிப்பினிர் கண்டையின்
தாரர் தாரணி யும்விசும் புந்தவழ்
பேரர் பேரி முழக்கன்ன பேச்சினர்.

தேரர், தேரின் இவுளியர், செம்முகக்
காரர்,—காரின் இடிப்பினர், கண்டையின்
தாரர், தாரணியும் விசும்பும் தவழ்
பேரர், பேரி முழக்கு அன்ன பேச்சினர்.

பொ :—ஆராயுமிடத்து (அவ்வரக்கர்) தேர்மேலரும் குதிரை மேலரும் சிவந்த புள்ளிகள் நிறைந்த முகத்தையுடைய மேகம்

போன்ற யானைமேலரும், மேகத்தின் இடி முழக்கம் போன்ற ஆரவார முடையவரும், கண்டைமாலை அணிந்தவருள், மண்ணுலகிலும் விண் ணுலகிலும் பரவியுள்ள புகழை யுடையவரும், பேரியின் முழக்கத் தைப் போன்ற பேச்சினை யுடையவரும், (ஆவர்).

கு :– போர்க்களம் புகுந்த பத்துலட்சம் அரக்கரும், தேரினையும் குதிரையினையும் யானையினையும் ஊர்ந்துகொண்டு இடிமுழக்கம் போன்று ஆரவாரம் செய்துகொண்டு வீரகண்டை அணிந்து கொண்டு, விண்ணும் மண்ணும் புகழும் புகழினையுடையராய் முரசின் முழக்கம்போன்ற பேச்சினை யுடையவராய் இருந்தனர் என்றவாறு. கண்டை என்பது வீரர் ஆனதற்குரிய ஓர் அணி. கண்டையின் தார் என்புழி இன் தவிர்வழிச்சாரியை. இச்செய்யுளின் நான்கடிகளிலும் முதற்கண் மடக்கு என்னும் சொல்லணி அமைந்திருத்தல் காண லாம். செம்முகக்கார் என்றது யானையை. யானையின் முகத்தில் செம்புள்ளிகள் நிறைந்திருத்தலினாலும் மேகம்போன்று கருத்திருத்த லாலும் அது அப்பெயர் பெற்றது. (132)

### அவர்தம் போரார வாரம்

8265. பார்த்த பார்த்த திசைதொறும் பன்மழை
போர்த்த வான மெனவிடி போர்த்தெழ
ஆர்த்த வோசையு மம்பொடு வெம்படை
தூர்த்த வோசையும் விண்ணினைத் தூர்த்தவால்.

பார்த்த பார்த்த திசைதொறும், பன்மழை
போர்த்த வானம் என இடி போர்த்து எழ,
ஆர்த்த ஓசையும், அம்பொடு வெம்படை
தூர்த்த ஓசையும், விண்ணினைத் தூர்த்தவால்.

பொ :—கண்ட கண்ட திசைகள்தோறும் பல மேகங்கள் மூடிய ஆகாயம்போல, இடியோசை பரவி எழாநிற்க அவர் ஆரவாரித்த ஓசையும், அம்புகளோடு பிற வெவ்விய படைக்கலங்களையும் பெய்து நிறைத்ததனால் உளதாகிய ஓசையும் விண்ணினை நிறைத்தன.

கு :—வந்த அரக்கரின் ஆர்ப்பொலியும் படைக்கலம் விடும் ஒலியும் விண்ணிடமெங்கும் பரவின என்றவாறு. அரக்கர் நிறத்தால் பலமேகத்தைப் போன்றனர்; அவர் ஆர்ப்பு, இடியொலி போன்றது என உவமையை விரித்துக்கொள்க. மழை என்றது, மேகத்தை. ஓசை விண்ணினைத் தூர்த்தலாவது, விண்ணெங்கும் பரவுதல். (133)

துகள் எழுதற்குரிய தேர்கள் ஓடவும் துகள் எழாமை

8266. ஆளி யார்த்தன வாளரி யார்த்தன
கூளி யார்த்தன குஞ்சர மார்த்தன
வாளி யார்த்தன தேரிவர் மண்டலம்
தூளி யார்த்தில தாற்பிணந் துன்னலால்.

ஆளி ஆர்த்தன, வாள் அரி ஆர்த்தன,
கூளி ஆர்த்தன, குஞ்சரம் ஆர்த்தன,
வாளி ஆர்த்தன, தேர், இவர் மண் தலம்
தூளி ஆர்த்திலதுஆல் பிணம் துன்னலால்.

பொ :—யாளிகள் பூட்டப்பட்டனவும் கொடிய சிங்கங்கள் பூட்டப் பட்டனவும், பேய்கள் பூட்டப்பட்டனவும், யானைகள் பூட்டப்பட்டன வும் வாளிவேகம் செல்லும் குதிரைகள் பூட்டப்பட்டனவும் ஆன தேர்கள்ஊர்ந்து செல்லும் தரையிடத்துப் பிணங்கள் நெருங்கிக் கிடத்தலால் துகள் எழவில்லை.

கு :—தேரோடத் துகள் கெழுமுதல் முறையாகவும், அப் போர்க் களம் முழுமையும் பிணங்கள் நிறைந்திருத்தலால், தேர்கள் பல ஓடவும் துகள் எழாவாயின என்றவாறு. ஆளியும் அரியும் கூளியும் குஞ்சரமும் குதிரையும் பூண்ட தேர்களில் அவ் அரக்கர் ஊர்ந்து போர் செய்தனர் என்றும், அத்தேர்கள் பல ஊர்ந்து சென்றும் போர்க்களம் பிணங்களால் நிறைந்திருத்தலின் துகளெழ இடமில் லாது போயது என்றும் கூறப் பிணங்களின் மிகுதியைப் புலப்படுத் தியவாறு. வாளி என்றது, மண்டலித்துச் செல்லும் ஒரு வகைச் செலவு. அச்செலவினையுடைய குதிரையை ஆகுபெயரான் அது உணர்த்தியது தேர் இவர் மண் தலம் - தேர் ஊர்ந்த சென்ற மண் இடம். ஆர்ந்திலது என்பது ஆர்த்திலது என வலித்தல் விகாரம் பெற்றது. ஆர்தல்-நிறைதல். மண் தலம் முழுமையும் பிணங்களால் மூடப்பட்டிருத்தலின் தேர்கள் அப்பிணங்களின்மேல் சென்றன என்பது புலப்படுத்தியவாறு. (134)

இந்திரசித்து எய்த அம்புகளை இலக்குவன் விலக்குதல்

8267. வந்த ணைந்ததொர் வாளரி வாவுதேர்
இந்தி ரன்றனை வென்றவ னேறினன்
சிந்தி னன்சர மாரி திசைதிசை
அந்தி வண்ணனை ரம்பி னகற்றினன்.

வந்து அணைந்தது ஓர், வாள்அரி வாவு தேர்,
இந்திரன்தனை வென்றவன் ஏறினான்;
சிந்தினன் சர மாரி, திசைதிசை;
அந்தி வண்ணன் ஓர் அம்பின் அகற்றினான்.

பொ :—தன்னிடம் வந்து சேர்ந்த, கொடிய சிங்கங்கள் பூட்டப் பெற்றுத் தாவிச் செல்லும், ஒரு தேரில் இந்திரசித்து ஏறி, அம்பு மழையைத் திசைகள்தோறும் சிந்தினானாக, அந்திவானத்தைப் போன்ற வண்ணனாகிய இலக்குவன் அவ்வம்பு மழையை ஒரு அம்பினால் விலக்கி அழித்தான்.

கு :—இந்திரசித்து என்ற பெயர்க் காரணம் புலப்பட 'இந்திரனை வென்றவன்' எனத் தமிழில் மொழிபெயர்த்துக் கூறியவாறு. ஏறினான் என்ற முற்று எச்சப்பொருளதாய்ச் சிந்தினன் என்ற வினை கொண்டு முடிந்தது. சரமாரி திசை திசை சிந்தினன் என இயையும். திசைதோறும் என்ற பொருளில் திசை திசை என்ற அடுக்கு வந்தது. அந்திவண்ணன் என்றது, இலக்குவனை. அந்திக் காலத்துத் தோன்றும் செவ்வானத்தைக் கால ஆகுபெயரான் அந்தி என்று குறித்தார். இந்திரசித்துத் திசைதோறும் சிந்திய அம்பு மழையை இலக்குவன் ஓரம்பினால் அகற்றினான் என்றமையால் அவன் வில்லாற்றல் புலப்படும். (135)

### சுற்றியிருந்த அரக்கரை இலக்குவன் அழித்தல்

8268. சுற்றும் வந்து படர்ந்து தொடர்ந்தவர்
எற்று கின்றன வெய்த வெறிந்தன
அற்று திர்ந்தன வாயிரம் வன்றலை
ஒற்றை வெங்கணை யோடு முருண்டவால்.

சுற்றும் வந்து படர்ந்தது தொடர்ந்தவர்
எற்றுகின்றன, எய்த, எறிந்தன,
அற்று உதிர்ந்தன ; ஆயிரம் வன்தலை,
ஒற்றை வெங்கணையோடும் உருண்டவால்.

பொ :—(இலக்குவனை) சுற்றிலும் வந்து பரவிப் போர் செய்யத் தொடர்ந்த அரக்கர்கள், மோதுகின்ற தண்டாயுதம் போன்ற ஆயுதங்களும், எய்தனவாகிய அம்புகளும் எறிந்தனவாகிய வேல் போன்ற ஆயுதங்களும் (இலக்குவனது ஒரு அம்பினால்) அற்று உதிர்வன ஆயின ; அவர் தம் ஆயிரம் வலிய தலைகள் (அவ்விலக்குவனது) ஓர் அம்போடு உருண்டு வீழ்ந்தன.

கு :—அரக்கர் வீசிய ஆயுதங்களின் வகை புலப்பட எற்று கின்றன, எய்த, எறிந்தன என்ரூர். எற்றுதற்குரியன தண்டு, இருப்புலக்கை போல்வன ; எய்தற்குரியன அம்பு வகைகள். எறிதற் குரியனவேல், குந்தம் போல்வன. அவை அற்றுதிர்தற்கும் ஒற்றை வெங்கணையையே கருவியாகக் கொள்க. ஓடு கருவிப்பொருளது ; வேறு கணை வேண்டாது ஒரு கணையினுலேயே ஆயிரம் வன்றலை களும் உருண்டன என்க. உருளுதற்குரிய எளிமையுடையவல்ல என்பது தோன்ற, 'வன்தலை' எனச் சிறப்பித்தார். (136)

போர்க்களக் காட்சி 8269—8271

8269. குடர்கி டந்தன பாம்பெனக் கோண்மதித்
திடர்கி டந்தன சிந்தின தேர்த்திரள்
படர்கி டந்தனர் பல்படைக் கையினர்
கடர்கி டந்தன போன்ற களத்தினே.

குடர் கிடந்தன. பாம்பு என ; கோள் மதித்
திடர் கிடந்தன ; சிந்தின, தேர்த்திரள் ;
படர் கிடந்தனர், பல் படைக் கையினர்—
கடர் கிடந்தன போன்ற களத்தினே.

பொ :—கடல் கிடந்தாற்போன்ற போர்க்களத்தில் – வீரர்களின் குடல்கள் பாம்புகள்போலக் கிடந்தன ; வலிய யானையாகிய குன்று கள் (நிறைந்து) கிடந்தன ; தேர்கள் கூட்டங்கள் சிதருண்டு கிடந்தன ; பல ஆயுதங்களை யேந்திய கையை யுடையவர்களாகிய வீரர்கள் (இறந்து) கிடந்தனர்.

கு :—குடர், கடர் என்பன குடல் கடல் என்பவற்றின் போலி. மதத்தையுடைய யானை மதி எனப்பட்டது. வடமொழி. வலிய யானை யாகிய திடர் கிடந்தன என்க. திடர் - குன்று. படர் - வீரர். பல் படைக்கையினராகிய படர் என இயையும். இரத்தப் பரப்புடைமை யால் போர்க்களம் கடல் கிடந்தாற் போன்றது என்க. (137)

8270. குண்ட லங்களு மாரமுங் கோவையும்
கண்ட நாணுங் கழலுங் கவசமும்
கண்ட மாருதம் வீசத் தலத்துகும்
விண்ட லத்தினின் மீனென வீழ்ந்தவால்.

குண்டலங்களும், ஆரமும் கோவையும்
கண்ட நாணும், கழலும், கவசமும்
கண்ட மாருதம் வீச, தலத்து உகும்
விண் தலத்தினின் மீன் என, வீழ்ந்தவால்.

பொ :—(இலக்குவன் விட்ட அம்பினல் அரக்கர்கள் அணிந்திருந்த) குண்டலங்களும், முத்தமாலைகளும், மணிமாலைகளும், கழுத்தில் அணியும் பொன்ஞணும், காலில் அணியும் வீரக்கழலும், மார்பில் அணியும் கவசமும் – 'பெருங்காற்று அடித்தலால்' தரையில் வீழ்கின்ற விண்மீன்களைப்போலப் போர்க்களத்தில் வீழ்ந்தன.

கு :—கண்ட நாண் என்றது, கழுத்தில் அணிதற்குரிய பொன் நாணினை. பெருங்காற்ருல் விண்ணில் உள்ள மீன்கள் மண்ணில் உதிர்வதுபோல, இலக்குவன் அம்பினல், அரக்கர் உடம்பிலிருந்த அணிகலன்கள் அற்றுத் தரையில் வீழ்ந்தன என்றவாறு. இல்பொருள் உவமை. மாருதம் வீச என்ற உவமை யடைக்கு ஏற்பப் பொருளிலும் இலக்குவன் அம்பு வீச என்ற ஏதுவை வருவிக்க. விண்மீன் போன்றன குண்டலம் முதலிய அணிகலன்கள் என்க. (138)

8271. அரக்கன் மைந்தனை யாரிய னம்பினல்
கரக்க நூறி யெதிர்பொரு கண்டகர்
சிரக்கொ டுங்குவைக் குன்று திரட்டினன்
இரக்க வெய்திவெங் காலனு மெஞ்சவே.

அரக்கன் மைந்தனை, ஆரியன் அம்பினல்
கரக்க நூறி, எதிர்பொரு கண்டகர்
சிரக் கொடுங்குவைக் குன்று திரட்டினன்-
இரக்கம் எய்தி வெங்காலனும் எஞ்சவே.

பொ :—இலக்குவன், இராவணனுக்கு மகனுகிய இந்திரசித்தினை அம்பினல் உருவம் மறையும்படி எய்துவிட்டு, கொடிய எமனும் இரக்கம் அடைந்து பின்னிடையுமாறு தன் எதிரில் போர்செய்கின்ற கொடியவர்களாகிய அரக்கர்களின் கொடிய தலைக்குவியலாகிய குன்றுகளைச் செய்தான்.

கு :—ஆரியன் என்றது இங்கு இலக்குவனை. ஆரியன் சிறப்புடையவன். காக்க என்றது, அம்பினல் அவன் உருவம் மறையும்படி என்றவாறு. கண்டகர் என்றது, முள்போன்ற கொடிய

அரக்கரை. சிரக்குவைக் குன்று என்றது, உருவகம். திரட்டினன் என்றது, செய்தான் என்னும் பொருளது. (139)

## அனுமன் விளைத்தபோர் 8272—8775

8272. சுற்றும் வால்கொடு தூவும் துகைக்கும்விட்
டெற்றும் வானி னெடுத்தெறி யும்மெதிர்
உற்று மோது முதைக்கு முறுக்குமால்
கொற்ற வில்லியன் றேறிய கூற்றமே.

சுற்றும் வால்கொடு; தூவும்; துகைக்கும்; விட்டு
எற்றும்; வானின் எடுத்து எறியும்; எதிர்
உற்று மோதும்; உதைக்கும்; உறுக்குமால்—
கொற்ற வில்லி அன்று ஏறிய கூற்றமே.

பொ :—வெற்றிமிக்க வில்வீரனாகிய இலக்குவன் அப்பொழுது ஏறியிருந்த அனுமானாகிய எமன், தன் வாலைக்கொண்டு அரக்கர்களைச் சுற்றிக் கட்டுவான்; அவ்வாறு கட்டுண்டவர்களைத் தூக்கித் தரையில் தூவுவான்; காலால் அவர்களை மிதிப்பான்; அவ்வாறு மிதிப்பதை விட்டுச் சிலரை நெட்டித் தள்ளுவான்; சிலரை ஆகாயத்தில் தூக்கி எறிவான்; சிலரை எதிர்நெருங்கி மோதுவான்; சிலரை உதைப்பான்; சிலரை வெருட்டுவான்.

கு :—வில்லி என்றது வில்லையுடைய வீரனாகிய இலக்குவனை; அவன் ஏறிய கூற்றம் என்றது அனுமனை. வாலால் சுற்றப்பட்ட அரக்கர்களை விண்ணில் தூக்கித் தரையில் விழுமாறு விடுதலையே 'தூவும்' என்ற வினையால் கூறினர். தூவும் என்ற வினையால் அரக்கர்கள் அனுமனுக்கு எத்துணை எளியராயினர் என்பது புலப்படும். உறுத்தல் - அச்சுறுத்தல். எமனாக அனுமனை உருவகஞ் செய்தது, அவ்வனுமனது அழித்தல் தொழில் ஒற்றுமை பற்றி என்க. இலக்குவனுக்கு ஊர்தி என்னும் ஒற்றுமைபற்றி, யானையாகவும் சிங்கமாகவும் குதிரையாகவும் அவனைப் பின்னர்க் கூறுதல் காணலாம். (140)

8273. பார்க்கு மஞ்ச வுறுக்கும் பகட்டினல்
தூர்க்கும் வேலையைத் தோள்புடை கொட்டிநின்
ரூர்க்கு மாயிரந் தேர்பிடித் தங்கையால்
ஈர்க்கு மையனன் றேறிய யானையே.

பார்க்கும் அஞ்ச ; உறுக்கும் ; பகட்டினல்
தூர்க்கும் வேலையை ; தோள்புடை கொட்டி நின்று
ஆர்க்கும் ; ஆயிரம் தேர்பிடித்து அம் கையால்
ஈர்க்கும் ஐயன் அன்று ஏறிய யானையே.

பொ:—இலக்குவன் அன்று ஏறியூர்ந்த யானைபோன்ற அனுமன்,—அரக்கர்கள் அஞ்சுமாறு பார்ப்பான் ; அதட்டுவான் ; அரக்கர்களின் ஊர்திகளாகிய யானைகளைத் தூக்கி எறிந்து கடலையே தூர்த்து விடுவான் ; பின் தோள்மேல் கொட்டி நின்று ஆரவாரிப்பான் ; ஆயிரந் தேர்களைத் தன் அழகிய கைகளால் பிடித்து இழுப்பான்.

கு :—பகடு - யானை. பகட்டினுல் வேலையைத் தூர்க்கும் என்றது அரக்கர்தம் யானைகளைக் கடலில் எறிந்து நிரப்புவான் என்றவாறு. இதனுல் அவன் வீசி யெறிந்த யானைகளின் மிகுதி புலப்படும். அங்கையால் ஆயிரம் தேர்பிடித்தீர்க்கும் என்றதனுல் அனுமன் பேருருவமும் அத்தேர்களின் சிறுமையும் புலப்படும். யானை போன்ற அனுமனை யானை என்றது, உவமையாகுபெயர்; உருவகம் எனினும் அமையும். ஈர்த்தல் - இழுத்தல். ஐயன் என்றது இங்கு இலக்குவனை. (141)

8274. மாவும் யானையும் வாளுடைத் தானையும்
பூவு நீரும் புனைதளி ரும்மெனத்
தூவு மள்ளிப் பிசையுந் துகைக்குமால்
சேவ கன்றெரிந் தேறிய சீயமே.

மாவும், யானையும், வாளுடைத் தானையும்
பூவும், நீரும், புனைதளிரும் என
தூவும் ; அள்ளிப் பிசையும் ; துகைக்குமால்
சேவகன் தெரிந்து ஏறிய சீயமே.

பொ :—இலக்குவனுகிய வீரன் ஆராய்ந்து ஏறியிருந்த சிங்கம் போன்றவனுகிய அனுமன்,—குதிரைப் படைகளையும், யானைப் படைகளையும், வாளையுடைய காலாட்படையினையும், பூவும், நீரும், அழகிய தளிரும்போல எளிதாக எடுத்துத் தூவுவான் ; அள்ளிப் பிசைவான்; காலால் துகைப்பான்.

கு :—யானையோடு சேர்த்துக் கூறியிருத்தலின் மா என்றது இங்குக் குதிரையை என்பது புலனும். பூவும் நீரும் தளிரும் எடுத்துத் தூவுவது போலக் குதிரைகளையும் யானைகளையும் காலாட்படைகளை

யும் எளிதாக எடுத்துத் தூவினன் என்றமையால் அனுமனது வலிமை புலப்படுத்தியவாறு. பகையழிக்கும் தகைமையில் அனுமன் சிங்கம் போன்றவன் ஆதலின் அவனைச் சீயம் என உவமையாகு பெயராற் கூறினர். மாவை மலர்போலத் தூவும்; யானையை நீர் போல அள்ளிப் பிசையும்; தானையைத் தளிர்போலத் துகைக்கும், என நிரனிறைப் பொருள்கோளாகக் கூட்டிக் கூறினும் அமையும். (142)

8275. உரகம் பூண்ட வுருளை பொருந்தின
இரத மாயிர மேயெனு மாத்திரை
சரத மாகத் தரைப்படச் சாடுமால்
வரத னன்றுவந் தேறிய வாசியே.

உரகம் பூண்ட உருளை பொருந்தின
இரதம் ஆயிரம் 'ஏ' எனும் மாத்திரை,
சரதம் ஆகத் தரைப்படச் சாடுமால்
வரதன் அன்று உவந்து ஏறிய வாசியே.

பொ :—வரத்தைத் தரவல்லவனை இலககுவன் அன்று மன மகிழ்ந்து ஏறியிருந்த குதிரைபோன்ற அனுமன்,—பாம்பு பூண்டன வும் சக்கரங்களையுடையனவுமான ஆயிரம் தேர்களை ஏஎனும் அள வில் உறுதியாகத் தரையில் இறந்துபடுமாறு அடிப்பான்.

கு :—ஏ என்பது இருமாத்திரைப் பொழுதை உணர்த்தியது. சாடுதல் - அடித்தல். வரதன் என்றது இலக்குவனை. குதிரை போன்று ஊர்தியாக அமைந்தமையால் அனுமன் இங்கு வாசி என உவமையாகு பெயரால் குறிக்கப்பட்டான். இச் செய்யுள் பல சுவடி களில் இல்லை; இடைச்செருகலாக இருக்கலாம். (143)

## மயங்கி வீழ்ந்த வானரத் தலைவர் தெளிந்தெழுதல்

8276. அவ்வி டத்தினி வாய்மருந் தாவழல்
வெவ்வி டத்தினை யுண்டவர் மீண்டென
எவ்வி டத்தினும் வீழ்ந்த வினத்தலைத்
தெவ்வ டக்கும் வலியவர் தேறினர்.

அவ்விடத்தினில், ஆய் மருந்தால், அழல்
வெவ் விடத்தினை உண்டவர் மீண்டென,

எவ் இடத்தினும் வீழ்ந்த இனத்தலைத்
தெவ் அடக்கும் வலியவர் தேறினர்.

பொ :—(அனுமன் அவ்வாறு அரக்கரை அழித்துக்கொண்டு இருந்த) அப்பொழுது சுழலுகின்ற கொடிய நஞ்சினை அருந்தின வர்கள் ஆராய்ந்து கண்ட சிறந்த மருந்தினல் மயக்கத்திலிருந்து மீண்டது போல, (முன் இந்திரசித்தினல்) பலவிடங்களிலும் வீழ்ந்து கிடந்த, தலைமையான பகைவரையும் அடக்குதற்குரிய, அனுமன் இனத்தவராகிய வலிய வானரவீரர் தாமாகவே தெளிந்தார்கள்.

கு:—ஆய்மருந்தால் மீண்டென என இயையும். சுழலுகின்ற விடம் என வினைத்தொகையாக்குக. இந்திரசித்தின் அம்பினல் மயங்கி வீழ்ந்த வானரவீரர்க்கு விடத்தினை உண்டு மயங்கி வீழ்ந்த வர் உவமை. விடத்தினை யுண்டவர் மருந்தால் மீண்டென வீழ்ந்த வலியவர் (இயல்பாகத்) தேறினர் என்க. சிறிது நேரம் கழிந்தமை யால் அம்பு பட்ட மயக்கம்தானே தெளிந்தது என்று கொள்க. வீழ்ந்த இன வலியவர் என இயையும். அனுமனுக்கு இனமான வலி யவர் என்க. தலைத்தெவ் என்றது, தலைமையான பகைவரை.
(144)

## தெளித்த வானரர் போர் செய்தல் 8277–8278

8277. தேறி னர்க ணெருப்புகச் சீறினர்
ஊறி னர்வந் திளவலை யொன்றினர்
மாறு மாறு மலையு மரங்களும்
நூறு மாயிர முங்கொடு நூறினர்.

தேறினர் கண் நெருப்பு உகச் சீறினர்;
ஊறினர் வந்து, இளவலை ஒன்றினர்;
மாறு மாறு, மலையும் மரங்களும்,
நூறும் ஆயிரமும் கொடு நூறினர்.

பொ :—மயக்கந் தெளிந்தவர்களாகிய அவ் வானரவீரர்கள், தம் கண்களில் நெருப்புப் பொறி சிந்தக் கோபித்து வலிமை பெருகி வந்து இலக்குவனைச் சேர்ந்து, மலைகளையும் மரங்களையும் மாற்றி மாற்றி நூறும் ஆயிரமுமாகக் கொண்டு அரக்கர்களை அழித் தார்கள்.

கு:—தேறினர், வினைப்பெயர். சீறினர், ஊறினர், ஒன்றினர் என்பன முற்றெச்சமாய் நூறினர் என்ற வினை கொண்டு முடியும். மாறு மாறு – மாற்றி மாற்றி. இனி, அரக்கர் வலிமை மாறும்படி

எனப் பொருள் கூறலும் ஆம். ஊறுதல் - சுரத்தல்; இங்கு வலிமை பெருகுதலை உணர்த்தியது. மயக்கந் தெளிந்த வானரர்கள் இலக்குவனோடு சேர்ந்துகொண்டு அரக்கர்மேல் மலைகளையும் மரங் களையும் வீசி அழித்தார்கள் என்றவாறு. (145)

8278. விகட முற்ற மரனொடு வெற்பினம்
புகட வுற்ற பொறுத்தன போவன
துகட வத்தொழில் செய்துறைக் கம்மியர்
சகட மொத்தன தாரணி தேரெலாம்.

விகடம் உற்ற மரனொடு வெற்பினம்
பொகட, உற்ற பொறுத்தன போவன
துகள் தவத் தொழில் செய்துறைக் கம்மியர்
சகடம் ஒத்தன, தார் அணி தேர் எலாம்.

பொ :—(வானரர்கள்) வேறுபாடு பொருந்திய மரங்களையும் மலை களையும் வீச, அவற்றால் உளவான ஊறுபாடுகளைத் தாங்கினவாய் அழிந்து ஒழிவனவான மாலையணிந்த தேர்கள் எல்லாம்,—தச்சர்கள் குற்றம் நீங்கத் தொழில் செய்கின்ற தொழிற்சாலையில் தனித் தனியே பூட்டப்படாமல் கிடக்கின்ற தேர்களை ஒத்துத் தோன்றின.

கு :—விகடம் - வேறுபாடு. புகட, புகவீட என்பதன் மரூஉ. உற்ற என்றது, உற்ற ஊறுபாடுகளே. பொறுத்தல் - தாங்குதல். பொறுத்தனவாய்ப் போவனவான தேர்எலாம் சகடம் ஒத்தன என இயையும்.' கம்மியர் — தொழிலாளர்; இங்குத் தச்சரைக் குறித்தது. துகள் தவ - குற்றம் நீங்க. கம்மியர் தொழில் செய்துறை என்றது தச்சுத்தொழில் நடைபெறும் தொழிற்கூடத்தை. சகடம் — தேர். தொழிற்சாலையில் தேர் உறுப்புக்கள் பூட்டப்படாமல் தனித்தனியே கிடத்தல்போல, வானரங்கள் எறிந்த மலையாலும் மரத்தாலும் சிதைந்துபோன தேர் உறுப்புக்கள் காட்சியளித்தன என்றவாறு. தார் - மாலை. தேர்களில் அழகுக்காக மாலைகளைக் கட்டுதல் மரபு ஆதலின் 'தாரணி தேர்' எனச் சிறப்பித்தார். (146)

அங்கதன் இந்திரசித்தோடு பொருதல்

8279. வாலி மைந்தனோர் மாமரம் வாங்கினன்
காலின் வந்த வரக்கனைக் காவிது

போலு முன்னுயி ருண்பது புக்கெனு
மேலி வர்ந்து நெருப்புக வீசினுன்.

வாலி மைந்தன் ஒர் மாமரம் வாங்கினுன்,
காலின் வந்த அரக்கனை, ' கா ; இது
போலும் உன் உயிர் உண்பது, புக்கு ' எனு,
மேல் இவர்ந்து, நெருப்பு உக வீசினுன்.

பொ :—வாலியின் மைந்தனுகிய அங்கதன், ஒரு பெரிய மரத்தைப் பிடுங்கிக்கொண்டு, காற்றுப்போல் விரைந்து தேரில் வந்த இந்திரசித்தினை நோக்கி, 'இம் மரம் புகுந்து உனது உயிரை உண்ணுதற்குரியது, இதைத் தடுத்துக்கொள் ;' என்று சொல்லிக்கொண்டே மேல் உயர்ந்து நெருப்புப் பொறி சிந்துமாறு அம்மரத்தை வீசினுன்.

கு :—காலின் வந்த அரக்கன் என்றது இந்திரசித்தினை. கால் - காற்று. காற்றுப்போல் விரைந்து தேரில் வந்தமையால் 'காலின் வந்த அரக்கன்' என்ருர். காத்தல் இங்குத் தடுத்தலை உணர்த்தியது. இனி 'உன்னைக் காப்பாற்றிக்கொள்' என்றும் பொருள் கூறலாம். போலும் என்பது அசை. ஒப்பில் போலி என்பர். இது போலும் புக்கு உன் உயிர் உண்பது ! கா ! எனு என இயையும். மேலிவர்ந்து என்றது, மரத்தை வீசுங்கால் இருந்த நிலையில் நின்றும் சிறிது மேல் எழும்புதலை உணர்த்தியது. வாங்கினுன் என்றது, முற்றெச்சமாய் வீசினுன் என்ற வினைகொண்டு முடிந்தது. அரக்கனை நோக்கி எனு வீசினுன் என ஒரு சொல் வருவித்து முடிக்க.

(147)

அங்கதன் வீசிய மரம் இந்திரசித்தின் தேரை அழித்தல்

8280. ஏர ழித்தது செய்தவ னீண்டெழிற்
சீர ழித்தவ னுமெனத் தேவர்கள்
ஊர ழித்த யுயர்வரைத் தோளவன்
தேர ழித்தோ ரிமைப்பிடைச் சென்றதால்.

' ஏர் அழித்தது செய்தவன் ஈண்டு எழில்
சீர் அழித்தவன் ஆம் ' என, தேவர்கள்
ஊர் அழித்த உயர்வலித் தோளவன்
தேர் அழித்து, ஓர் இமைப் பிடைச் சென்றதால்.

பொ :—'அழகை அழிக்கின்றதாகிய தீய செயலைச் செய்தவனுகிய இராவணனது நெருங்கியுள்ள அழகுமிக்க சிறப்புகளை யெல்லாம்

இவன் அழித்தவன் ஆவான்' எனக் கண்டோர் சொல்லுமாறு,—தேவர்களின் ஊரை அழித்தவனாகிய, உயர்ந்த மலைபோன்ற தோள்களையுடைய இந்திரசித்தின் தேரை அழித்துவிட்டு ஏக இமைப் பொழுதில் அம்மரம் சென்றது.

கு :—ஏர் அழித்தது செய்தவன் என்றது, இராவணனை. எழிந்தது என்றது, அழகைக் கெடுக்கின்ற பிறர்மனை நயத்தலாகிய செயலை. அங்கதன் வீசிய மரத்தின் இயல்பைக் கண்டவர்கள், இவன் இராவணன் சிறப்புகளை யெல்லாம் அழித்தற்குரியவன் என்று பாராட்டினார்கள் என்பார், 'ஈண்டெழிற் சீரழித்தவனுமென' என்றார். தேவர்கள் ஊரழித்த தோளவன் என்றது, இந்திரசித்தினை. வெற்றியால் பூரித்த தோளாதலின் 'உயர்வரைத் தோள்' எனச் சிறப்பித்தவாறு. அங்கதன் வீசிய மரம் இந்திரசித்தின் தேரை இமைப்பினில் அழித்துச் சென்றது என்றவாறு. (148)

44, 70, 71 ஆகிய ஏடுகளில் இச்செய்யுளுக்குப் பின், பின்வரும் பாடல்கள் காணப்படுகின்றன.

8280 (a) அழித்த னன்றடந் தேரென் றழன்றுதீ
விழித்த னன் கடுநெஞ்சம் வெகுண்டெழத்
தெழித்தனன் சிலையாற்றிறல் வாளிகள்
கொழித்த னனிமை யோர்மெய் குலுங்கினர்.

(b) அங்கதன்றடந் தோளினு மார்பினும்
புங்க வாளி புகப்புகத் தேரெதிர்
சிங்க வேறனை யான்றிர டோள்வரை
மங்க வேறோர் மராமரம் வீசினன்.

(c) மற்றிண் டோளி னடித்த மராமரம்
இற்று நூறு திறத்த திமைப்பிலோர்
பொற்றிண் டேர்மிசை தாவினன் பொங்கெலி
முற்று நாளில் முயற்சி முரஞ்சவே.

(d) கண்ட வாலிதன் காதலனுங் கனல்
விண்ட தாமென வெஞ்சின முற்றவன்
மண்டு தேர்மிசை யிற்குதி யா வலி
கொண்டு வானிடி யேறெனக் குத்தினன்.

(e) குத்தி மற்றவன் கொய்யுளை மாப்பரி
பத்தி பத்தியின் வீழப் பரிந்தெதிர்
தத்தி வல்விற் றடக்கையி னற்சரம்
வித்து ராமுனம் வீழ்த்தினன் றேரரோ.

(f) மானேர் தேரின் மடங்க லெனக்கனன்
றேறி ஞன் சர மெண்ணிரண் டேவினுன்
ஊறு சோரி சொரிய வுயக்கமுற்
ருறி நான்கடி தங்கத ஞண்மையான்.

(g) கோல்கொ ளாளும் பரியும் குழம்பதாய்க்
காலி னூறிக் கரங்களின் மற்றவன்
ருலு மூலத் தடிப்பத் தனுவலான்
மாலு ழந்தவர் போல மயங்கினன்.

## தேவர்கள் மகிழ்தல்

8281. அந்த வேலையி ஞர்த்தெழுந் தாடினுர்
சிந்தை சால வுவந்தனர் தேவர்கள்
தந்தை தந்தைபண் டுற்ற சழக்கெலாம்
எந்தை தீர்த்தன னென்பதோ ரேம்பலால்.

அந்த வேலையின், ஆர்த்து எழுந்து ஆடினுர்,
சிந்தை சால உவந்தனர் தேவர்கள்—
'தந்தை தந்தைபண் டுற்ற சழக்கு எலாம்
எந்தை தீர்த்தனன் என்பது ஓர் ஏம்பலால்.

பொ :—அப்பொழுது தேவர்கள் - இவன் தந்தைக்குத் தந்தை யாகிய இந்திரன் முன்பு இவ்விந்திரசித்தினுல் அடைந்த அவமானத்தை எல்லாம் எம் அப்பனுகிய அங்கதன் இப்போது தீர்த்துவிட்டான் என்றதொரு களிப்பினுல் மனம் மிகவும் மகிழ்ந்து ஆரவாரித்து எழுந்து ஆடினுர்கள்.

கு :—இந்திரசித்தினுல் இந்திரன் முன்பு அடைந்த தாழ்வினே யெல்லாம் அங்கதன் இந்திரசித்துக்கு இப்போது உண்டாக்கி விட்டமையால் தேவர்கள், 'தந்தை தந்தை பண்டுற்ற சழக்கெலாம் எந்தை தீர்த்தனன்' என்று களித்து ஆடலாயினர். தந்தை என்றது வாலியை; அவனுக்குத் தந்தை இந்திரன். சழக்கு - அவமானம். எந்தை - என்னப்பன்; அன்புபற்றித் தேவர்கள் அங்கதனே இவ் வாறு குறித்தனர். ஏம்பல் - களிப்பு. தேவர்கள், ஏம்பலால் உவந் தனராய், ஆர்த்தெழுந்து ஆடினுர், என முற்றெச்சமாக்கி முடிக்க.

(149)

### வென்ற அங்கதனை இந்திரசித்து நெருங்குதல்

8282. அழிந்த தேரினின் றந்தரத் தக்கணத்
தெழுந்து மற்றுே ரிரதமுற் றேறினுன்
கழிந்து போகலை நில்லெனக் கைக்கணை
பொழிந்து சென்றனன் றீயெனப் பொங்கினுன்.

அழிந்த தேரின் நின்று அந்தரத்து அக்கணத்து,
எழுந்து, மற்று ஓர் இரதம் உற்று ஏறினுன்,—
'கழிந்து போகலை, நில் ! என, கைக்கணை
பொழிந்து சென்றனன் — தீ எனப் பொங்கினுன்.

பொ :—(அங்கதனுல்) அழிந்துபட்ட தேரில் நின்றும் அந்தக் கணத்தில் விண்ணில் எழுந்து வேருேர் தேரில் பொருந்தி ஏறிய இந்திரசித்து நெருப்புப்போலக் கோபம்மிக்கு (அங்கதனை நோக்கி) என்னைக் கடந்துபோய்விடாதே; நில்! என்று கூறிக்கொண்டே தன்கையில் உள்ள அம்புகளைச் சொரிந்துகொண்டு நெருங்கினுன்.

கு :—ஏறினுன் என்பது, வினையாலணையும் பெயராய் இந்திர சித்தினை உணர்த்தியது. ஏறினவனுகிய இந்திரசித்து, தீயெனப் பொங்கினவனுய்க் 'கழிந்து போகலை நில் !' எனக் கூறிக்கொண்டே கணைபொழிந்து சென்றனன் என இயையும். பொங்கினுன் முற்றெச்சம். கழிதல் - கடத்தல். இந்திரசித்து தேரை இழந்து அந்தரத்தில் எழுந்தமையால், அவன் மறைந்ததாக எண்ணி அங்கதன் வேறிடம் போய்விடுவானுே என்ற எண்ணத்தால் 'கழிந்து போகலை நில்' என்று கூறிக்கொண்டு வந்தான் இந்திரசித்து. 'பொழிந்து' என்ற வினையால் அம்புமாரியின் மிகுதி புலப்படுத்தியவாறு. தீ எனப் பொங்குதல் நெருப்பு மிக்கு எரிவதுபோலக் கோபம் மிகப் பெறுதல்.
(150)

### இந்திரசித்தின் ஏனைவானரரும் சூழ்ந்து கொள்ளுதல்

8283. இந்தி ரன்மகன் மைந்தனை யின்னுயிர்
தந்து போகெனச் சாரலுற் ருன்றனை
வந்து மற்றைய வானர வீரரும்
முந்து போர்க்கு முறைமுறை முற்றினர்.

இந்திரன் மகன் மைந்தனை, 'இன் உயிர்
தந்து போகெனச் சாரலுற்ருன்தனை,

வந்து, மற்றைய வானர வீரரும்,
முந்து போர்க்கு முறைமுறை முற்றினர்.

பொ:—இந்திரன் பேரனாகிய அங்கதனை 'உன் இனிய உயிரை என் அம்பிற்கு இலக்காக்கிச் செல்க' என்று நெருங்குகின்ற இந்திர சித்தினை ஏனைய வானரவீரரும் வந்து, முற்பட்டுச் செய்யும் போர்க் காக முறை முறையே சூழ்ந்து கொண்டார்கள்.

கு:—இந்திரன் மகன் மைந்தனை என்றது, பேரனை; அங்கதனை. சாரலுற்றான் - நெருங்கினவன்; இந்திரசித்து. மிகச்சினந்து வந்து 'உயிர்தந்து போக' என நெருங்குகின்ற இந்திரசித்தினால் அங்கத னுக்கு என்ன நேருமோ என்ற அச்சத்தால் மற்றைய வானரவீரரும் வந்து அவ் இந்திரசித்தினைச் சூழ்ந்து கொண்டார்கள் என்க. முந்து போர் – வீரத்தோடு முற்பட்டுச் செய்யும் போர். அஞ்சிப் பின்வாங்கு வோர் போர்க்குதவார் ஆதல் புலப்பட 'முந்து போர்க்கு முறை முறை முற்றினர்' என்றார். முற்றுதல் - சூழ்தல். தந்துபோக என்பது, தருக எனும் பொருளில் வந்தது; ஒருசொல் நீர்மையது. உயிரைத் தந்தபின் போதல் கூடாமை நினைக. (151)

சூழ்ந்துகொண்ட வானரர் மர முதலியவற்றை வீசுதல்

8284. மரமுங் குன்று மடிந்த வரக்கர்தம்
சிரமுந் தேரும் புரவியுந் தின்கரிக்
கரமு மாளியும் வாரிக் கடியவன்
சரமுந் தாழ்தர வீசினர் தாக்கினர்.

மரமும், குன்றும், மடிந்த அரக்கர்தம்
சிரமும், தேரும், புரவியும் திண்கரிக்
கரமும், ஆளியும் வாரிக் கடியவன்
சரமும் தாழ்தர வீசினர் தாக்கினர்.

பொ:—(இந்திரசித்தினைச் சூழ்ந்து கொண்ட வானர வீரர்கள்) மரங்களையும் குன்றுகளையும் இறந்துகிடக்கும் அரக்கருடைய தலை களையும், தேர்களையும், குதிரைகளையும், திண்மையான யானைகளின் துதிக்கைகளையும், சிங்கங்களையும், வாரிக்கொண்டு, கொடியவனாகிய இந்திரசித்தின் அம்பும் வேகத்தில் தாழ்வடையுமாறு வீசித் தாக்கி னார்கள்.

கு:—கடியவன் என்றது, இந்திரசித்தினை. இனிக் கடிய வன்சரம் எனப் பிரித்து, விரைந்து செல்லும் வலிய அம்பு எனப் பொருள்

கூறலும் ஆம். வாரி வீசித் தாக்கினர் என்க. வீசினர் என்றது முற்றெச்சம், மடிந்த அரக்கர் தம் சிரமும் குன்றுபோலிருத்தலின் அவற்றையும் வீசினர் என்க. அரக்கர்களின் சிரம், தேர் முதலிய பொருள்களைக் கொண்டே அவர்களைத் தாக்கின வானரங்கள் என்றவாறு. (152)

## இலக்குவன் அரக்கர் பலரை அழித்தல்

8285. அனைய காலையி லாயிர மாயிரம்
வினைய வெங்க ணரக்கரை விண்ணிவர்
நினையு மாத்திரத் தாருயிர் நீக்கினான்
மனையும் வாழ்வு முறக்கமு மாற்றினான்.

அனைய காலையில், ஆயிரம் ஆயிரம்
வினைய வெங்கண் அரக்கரை, விண்ணவர்
நினையும் மாத்திரத்து, ஆர் உயிர் நீக்கினான்—
மனையும் வாழ்வும், உறக்கமும், மாற்றினான்.

பொ :—அப்பொழுது, மனைவியையும் மனைவியோடு கூடி வாழ்கின்ற இல்லறவாழ்க்கையையும் தூக்கத்தையும் துறந்தவனாகிய இலக்குவன், சூழ்ச்சியும் கொடுமையுமுடைய லட்சக்கணக்கான அரக்கரை, தேவர்கள் நினையும் அளவில், அரிய உயிரைப் போக்கினான்.

கு :—இலக்குவன் இராமனோடு காடுபோந்து அவனுக்குப் பணி செய்வதிலும் அவனைக் காவல் செய்வதிலும் பகற்காலத்தையும் இரவுக் காலத்தையும் கழிக்கின்றவன் ஆதலின், மனைவியையும் மனைவியோடு கூடிவாழும் வாழ்வையும் உறக்கத்தையும் இழந்தவனானான். இலக்குவனுக்கும் திருமணம் நடந்தது; ஊர்மிளை என்பவள் அவன் மனைவி. மைந்நிறை கண்ணியர் வானுறை நீரார், மெய்ந் நிறை மூவரை மூவரும் வேட்டார்'' (பால - கடிமணப். 102) என்றது காண்க. வினையம் - சூழ்ச்சி. அரக்கரை ஆருயிரை நீக்கினான் என்புழி ஐயுருபு ஈரிடத்து வந்தது. அரக்கரது ஆருயிரை என உருபு மயக்கமாக்கி முடிக்க, தேவர்கள் நினையும் அளவில் இலக்குவன் செயலாக்கிவிட்டான் என அவன் போர்த்திறம் புலப்படுத்தியவாறு. (153)

## தன் சேனை அழியக்கண்ட இந்திரசித்து சீறுதல்

8286. ஆனை யுந்தடந் தேருந்தன் னுருயிர்த்
தானை யும்பரி யும்பட்ட தன்மையை

மான வெங்க ணரக்கன் மனக்கொளாப்
போன வென்றியன் றீயெனப் பொங்கினன்.

ஆனையும் தடந்தேரும், தன் ஆர் உயிர்த்
தானையும், பரியும், படும் தன்மையை,
மான வெங்கண் அரக்கன் மனக் கொளா
போன வென்றியன், தீ எனப் பொங்கினன்.

பொ :—வீரத்தில் தாழ்வின்மையையும் கொடுமையையும் உடைய இந்திரசித்து – தன் யானைப்படையும், பெரிய தேர்ப்படையும், தன் அரிய உயிர்போன்ற காலாட்படையும், குதிரைப்படையும் (இலக்குவனால்) அழிந்துபட்ட தன்மையை எண்ணி நீங்கிய வெற்றியனாய் நெருப்புப் போலச் சீறுவானானன்.

கு :—மானம் என்றது, இங்கு மறனிழுக்கா மானத்தை – வீரத்தில் தாழ்வில்லாமையை. அரக்கன் என்றது, இந்திரசித்தினை. தன்னாருயிர் என்பதை இடைநிலை விளக்காக்கொண்டு ஆருயிர் ஆனை ஆயிரத் தேர் என எல்லாவற்றோடும் கூட்டி யுரைத்தலும் ஆம். மனக்கொளல் என்றது எண்ணி என்றவாறு. போன வென்றியன் என்றது, முற்றெச்சமாய் வென்றியனாய்ப் பொங்கினன் என முடியும். போன வென்றியன் – வெற்றி இல்லாதவன். ‘அருங்கேடன்’ (குறள் - 210) “சென்று சேர்க்கல்லாப் புள்ள வுள்ளி, லென்றூழ் வியன்குளம்” (அகநா – 42) என்றாற்போல வந்தது. தனக்கு வெற்றி கிட்டாமையே இந்திரசித்தின் சீற்றத்திற்குக் காரணமாயிற்று என்க. (154)

இந்திரசித்தின் தேர் இரத்த வெள்ளத்தால் ஈர்க்கப்படுதல்

8287. சீர்த்த டம்பெருஞ் சில்லியந் தேரினைக்
காத்து நின்ற விருவரைக் கண்டனன்
ஆர்த்த தம்பெருஞ் சேனைகொண் டண்டமேல்
ஈர்த்த சோரிப் பரவைநின் றீர்த்தலால்.

சீர்த் தடம்பெருஞ் சில்லிஅம் தேரினைக்
காத்து நின்ற இருவரைக் கண்டனன்
ஆர்த்த தம்பெருஞ் சேனைகொண்டு, அண்டமேல்
ஈர்த்த சோரிப் பரவை நின்று ஈர்த்தலால்.

பொ :—ஆரவாரித்து நின்ற தம் பக்கத்துப் பெருஞ்சேனையை வாரிக்கொண்டு அண்ட முகட்டின்மேல் முட்டிய இரத்தக்கடல்

நிலைபெற்று நின்று (இந்திரசித்தின் தேரையும்) இழுத்தலால், (அவ்வாறு இழுக்கவொட்டாது) சிறப்புவாய்ந்த மிகப் பெரிய சக்கரத்தினையுடைய அழகிய, தேரினைப் பாதுகாத்துக் கொண்டிருந்த (புகைக்கண்ணன், மாபக்கன் என்ற) இருவரையும் இந்திரசித்துக் கண்டான்.

கு:—சில்லி - சக்கரம். இருவர் ஆவார், தூம்ராக்ஷன் மகாபார்சுவன் என்ப ஈர்த்தலால் காத்து நின்ற இருவர் என்க. (155)

8288. நேர்செ லாதிடை நின்றனர் நீணெடுங்
கார்செ லாவிருள் சீறிய கண்ணகன்
தேர்செ லாது விசும்பிடைச் செல்வதோர்
பேர்செ லாது பிணத்தின் பிறக்கமே.

நேர்செலாது இடை நின்றனர்—நீள் நெடுங்
கார்செலா; இருள் சீறிய கண் அகல்
தேர்செலாது; விசும்பிடைச் செல்வது ஓர்
பேர் செலாது; — பிணத்தின் பிறக்கமே.

பொ:—(அந்தப் போர்க்களத்தில் கிடக்கும்) பிணத்தின் மலையால் நீண்ட பெரிய மேகங்களும் செல்லமாட்டா; இருளைக் கோபித்த சூரியனது விரிந்த தேரும் கடந்து செல்லாது; விண்ணில் செல்லத்தக்க ஒருயிரும் பறந்து செல்லாது; (இவ்வாறு பிணமலைகள் நெருங்கிக் கிடத்தலால்) அந்த இரு அரக்கரும் நேரே செல்லவியலாதவர்களாய் நடுவே நின்றனர்.

கு:—இருள் சீறிய கண் என்றது, இருளைக் கோபிக்கின்ற சூரியனை. வானின் கண்போன்றவன் சூரியன் ஆதலின் 'கண்' எனப்பட்டான். 'வான்கண் விழியா வைகறை யாமத்து' (சிலப் - நாடுகாண் - 1) என்புழிச் சூரியன் வான்கண், எனப்பட்டிருத்தல் காணலாம். விசும்பிடைச் செல்வதோர் பேர் என்புழி, ஓர்பேர் என்றது ஒருயிர் என்னும் பொருளில் வந்தது. பிணத்தின் பிறக்கத்தால் என மூன்றனுருபு விரிக்க. பிறக்கும் - மலை; எல்லோர்க்கும் புலப்படுமாறு உயர்ந்து தோன்றும் காரணம்பற்றி மலைக்குக் காரணப் பெயராயிற்று. காரும் சூரியன் தேரும் ஓர் பேரும் செல்ல இயலாத பிணத்தின் பிறக்கத்தால் நேர்செலாது இடை நின்றனர் என்க. நின்றனர் என்ற வினைக்கு முன்னைச் செய்யுளில் வந்த இருவர் என்பதையே எழுவாயாகக் கொள்க. (156)

### அவ்விருவரிடம் இந்திரசித்து இலக்குவன் வில்வீரத்தை வியத்தல்

8289. அன்று தன்னய னின்ற வரக்கரை
ஒன்று வாண்முக நோக்கி யொருவிலான்
நன்று நம்படை நாற்பது வெள்ளமும்
கொன்று நின்ற படியெனக் கூறினன்.

அன்று தன் அயல் நின்ற அரக்கரை
ஒன்று வாள்முகம் நோக்கி, 'ஒருவிலான்
நன்று நம்படை நாற்பது வெள்ளமும்
கொன்று நின்றபடி!' எனக் கூறினன்.

பொ :—அப்போது (இந்திரசித்து) தன் அருகில் நின்ற இரு அரக்கருடைய ஒளிபொருந்திய முகத்தைப் பார்த்து, ஒரு வில்லையே யுடைய இலக்குவன், நமது நாற்பது வெள்ளம் சேனையையும் கொன்று நின்ற தன்மை நன்று, என்று வியந்து கூறினன்.

கு :—அரக்கரை முகம் நோக்கி என்பதை அரக்கருடைய முகம் நோக்கி என உருபு மயக்கமாக்கி முடிக்க. வாள் ஒன்று முகம் என்க. கொன்று நின்றபடி நன்று என இயையும். ஒருவிலான் என்றது ஒரே வில்லையுடைய இலக்குவனை. இந்திரசித்து பலவிற்களை இழந்து இழந்து புதிய வில்லைத் தாங்கிப் போர்செய்தவன் ஆதலின், இலக்குவன் ஒரு வில்லை யுடையவனாய் நாற்பது வெள்ளம் அரக்கரைக் கொன்றமையை வியந்து கூறலானான். (157)

### இந்திரசித்துக்கு அரக்கர் மறுமொழி

8290. ஆய வீரரு மைய வமர்த்தலை
நீயு நாற்பது வெள்ள நெடும்படை
மாய வெங்கணை மாரி வழங்கினை
ஒய்வில் வெஞ்செரு வொக்குமென் றோதினர்.

ஆய வீரரும் 'ஐய! அமர்த்தலை,
நீயும், நாற்பது வெள்ள நெடும்படை
மாய, வெங்கணை மாரி வழங்கினை,
ஒய்வு இல் வெஞ்செரு ஒக்கும்' என்று ஓதினர்.

பொ :—(அது கேட்ட) அந்த அரக்கவீரரும் - (இந்திரசித்தினை நோக்கி) ஐய! நீயும் போரில் நாற்பது வெள்ளம் வானர நெடும்

படை மாயும்படி கொடிய அம்பு மாரியைச் சொரிந்தாய்; ஆதலின், ஓய்வு இல்லாத கொடியபோர் ஒப்புமை உடையதே' என்று கூறினார்கள்.

கு :—இலக்குவன் நாற்பது வெள்ளம் அரக்கர்படையைக் கொன்றது போலவே இந்திரசித்தும் நாற்பது வெள்ளம் வானரப் படையைக் கொன்றானாகலின் 'வெஞ்செரு ஒக்கும்' என்று அரக்க வீரர் ஓதுவாராயினர். இலக்குவன் வில்வீரத்தை இந்திரசித்து பாராட்டிக் கூறியதால் தன்னைக் குறையுடையனாக எண்ணினன் போலும் என்ற எண்ணத்தால் அரக்கர் இங்ஙனம் கூறி, அவன் வீரத்தை எடுத்துக்காட்டி ஊக்குவித்தனர் என்க. நீயும் என்புழி உம்மை இறந்தது தழுவிய எச்ச உம்மை; இலக்குவனே அன்றி நீயும் நாற்பது வெள்ளம் மாய்த்தனை என்று பொருள்படுதல் காண்க. (158)

### இந்திரசித்தும் இலக்குவனும் எதிர் எதிர் பொருதல்

8291. வந்து நேர்ந்தனன் மாருதி மேல்வரும்
அந்தி வண்ணனு மாயிர மாயிரம்
சிந்தி னான்கணை தேவரை வென்றவன்
நுந்த நுந்த முறை முறை நூறினான்.

வந்து நேர்ந்தனன், மாருதி மேல்வரும்
அந்தி வண்ணனும், ஆயிரம் ஆயிரம்
சிந்தினான் கணை ; தேவரை வென்றவன்
நுந்த நுந்த, முறை முறை நூறினான்.

பொ :—அனுமன்மேல் ஏறியுள்ள, அந்திவானம் போன்ற வண்ணமுடைய, இலக்குவனும், வந்து (இந்திரசித்தினை) எதிர்த்தவனாய்ப் பத்துலட்சக்கணக்கான அம்புகளைச் சொரிந்தான் ; தேவரை வென்றவனாகிய இந்திரசித்தும், அவன் தூண்டத் தூண்ட, முறைமுறையே அவற்றை(த் தன்னம்பினால்) அழித்தான்.

கு:—அந்திவண்ணனும் வந்து நேர்ந்தனனாய்க் கணை சிந்தினான் என இயையும். அந்திவண்ணன் என்றது, இலக்குவனை ; அந்தி வானம் போன்ற நிறத்தினன் என்க. அந்தி என்னும் காலப்பெயர் அக்காலத்துத் தோன்றும் செவ்வானத்தைக் குறித்தது ; காலஆகு பெயர். ஆயிரம் ஆயிரம் என்றது, பத்துலட்சத்தை. தேவரை வென்றவன் என்றது, இந்திரசித்தினை. நுந்துதல் – தூண்டுதல் ; எய்தல். இலக்குவன் அம்பு விடவிட இந்திரசித்து அதற்கு மாறான

அம்புகளை விடுத்து விடுத்து அழித்துக்கொண்டே இருந்தான் என்பார், 'நுந்த நுந்த முறை முறை நூறினன்' என்றார். (159)

### இந்திரசித்து வானரரை அழித்தல்

8292. ஆறு மேழு மறுபது மைம்பதும்
நூறு மாயிர முங்கணை நூக்கிவந்
தூறி னாரை யுணர்வு தொலைத்துயிர்
தேறி னாரை நெடுநிலஞ் சேர்த்தினன்.

ஆறும் ஏழும், அறுபதும் ஐம்பதும்
நூறும் ஆயிரமும், கணை நூக்கி, வந்து
ஊறினாரை உணர்வு தொலைத்து, உயிர்
தேறினாரை நெடுநிலம் சேர்த்தினன்.

பொ:—(இந்திரசித்து) ஆறும் ஏழும், ஐம்பதும் அறுபதும், நூறும் ஆயிரமும் ஆக அம்புகளை எய்து, வந்து வலிமை காட்டினவர்களை உணர்வு ஒழியச் செய்து, (முன் மூக்கற்றுப் பின்) தெளிந்து உயிர்பெற்று வந்தவரைப் பெரிய நிலத்தில் கொன்று குவித்தான்.

கு:—ஒவ்வொரு தொடுப்பிலும் எய்த அம்பின் தொகையைக் குறிப்பாராய் ஆறும் ஏழும் எனவும், அறுபதும் ஐம்பதும் எனவும், நூறும் ஆயிரமும் எனவும் கூறினர். நூக்குதல் – தள்ளுதல்; இங்கு எய்தலை உணர்த்தியது. ஊறுதல், வலிமை பெருகுதல். உயிர் தேறினர் என்றது, முன்பு மூக்கற்றிருந்து பின்பு உணர்வு வரப்பெற்ற வானரவீரர்களை. நெடுநிலம் சேர்த்தல் என்றது, இங்குப் பிணமாக வீழச் செய்தலை உணர்த்தியது. வந்து ஊறினாரை, கணை நூக்கி உணர்வு தொலைத்து, உயிர் தேறினாரை நிலம் சேர்த்தினன் என இயையும். (160)

### சுக்கிரீவன் முதலியோர் தளர்வதுகண்டு இலக்குவன் கணை தொடுத்தல்

8293. கதிரின் மைந்தன் முதலினர் காவலர்
உதிர வெள்ளத்தி னெல்கி யொதுங்கலும்
எதிரி னின்ற விராவணி யீடுற
வெதிரின் காட்டெரி போற்சரம் வித்தினன்.

கதிரின் மைந்தன் முதலினர், காவலர்,
உதிர வெள்ளத்தின் ஒல்கி ஒதுங்கலும்,
எதிரில் நின்ற இராவணி ஈடுற,
வெதிரின் காட்டு எரிபோல், சரம் வித்தினுன்.

பொ :—சூரியன் மகனுகிய சுக்கிரீவன் முதலிய சேனை காவலர்கள், இரத்தவெள்ளத்தில் தளர்ச்சியுற்று ஒதுங்குதலும், (இலக்குவன்) தன் எதிரில் நின்ற இந்திரசித்து 'தளர்ச்சியுறுமாறு, மூங்கிற் காட்டில் பற்றிய தீயைப்போல அம்புகளை எய்தான்.

கு :—முதலினராகிய காவலர் என்க. காவலர் என்றது சேனை காவலரை. ஒல்குதல் - தளர்தல். சுக்கிரீவன் முதலிய வானரவீரர் தளர்ச்சியுற்று இரத்தவெள்ளத்தில் ஒதுங்குமாறு இந்திரசித்து அம்புகளை எய்தான் என்றவாறு. அந் நிலையைக் கண்ட இலக்குவன், இந்திரசித்து வலிமை கெடுமாறு கொடிய அம்புகளை எய்தான் என்க. இராவணி,—இராவணன் மகன்; இந்திரசித்து. ஈடு – தளர்ச்சி. வெதிர் – மூங்கில். மூங்கில் காட்டில் பற்றிய தீ விரைந்து பரவி அக்காடு முழுமையும் அழிப்பதுபோல, இலக்குவன் அம்பு விரைந்து சென்று அரக்கரை அழிக்கவல்லது என்பது புலப்படுத்த 'வெதிரின் காட்டு எரி போல் சரம்' என உவமித்தார். வித்துதல் இங்கு எய்தலை உணர்த்தியது. மூங்கிற்காடு போன்றவர், இந்திரசித்தும் அவன் சேனைவீரரும். (161)

## இந்திரசித்து தளர்தலும் இலக்குவன் அரக்கரைத் அழிதலும்

8294. உளைவு தோன்ற விராவணி யொல்கினுன்
கிளையி னின்ற விருவர் கிளைத்தலும்
அளவில் சேனைய விதர வாரியற்
கிளைய வீரன் சுடுசர மேவினுன்.

உளைவு தோன்ற, இராவணி ஒல்கினுன்;
கிளையின் நின்ற இருவர் கிளைத்தலும்
அளவு இல் சேனை அவிதர, ஆரியற்கு
இளைய வீரன் சுடுசரம் ஏவினுன்.

பொ :—(இலக்குவன் அம்பினுல்) வருத்தம் தோன்றினமையால் இந்திரசித்து தளர்ச்சியுற்ருன்; (உடனே) அவன் பக்கத்தில் கிளை போல் நின்ற (புகைக்கண்ணன், மாபக்கன் ஆகிய) இருவரும் போர் செய்யக் கிளர்ந்து எழுதலும், இராமனுக்கு இளைய வீரனுகிய இலக்கு

வன், அளவு இல்லாத அவர் சேனை அழியுமாறு சுடுகின்ற அம்புகளை எய்தான்.

கு :—உளைவு - வருத்தம். ஒரு மரத்தின் இருபுறத்தும் கிளைத்த கிளைகளைப்போல இந்திரசித்தின் இருபுறத்தும் காவல் செய்துநின்ற புகைக்கண்ணனையும் மாபக்கனையும் 'கிளையினின்ற இருவர்' என்றார். கிளைத்தல் – கிளர்ந்தெழுதல் ;—மனக்கிளர்ச்சியுற்றுப் போர்க்கு எழுதல். ஆரியன் என்றது, சிறந்தோனாகிய இராமனை. (162)

## இலக்குவன் அம்பினால் அரக்கர்கள் பட்டபாடு 8295-8301

8295. தெரிகணை மாரி பெய்யத்
தேர்களுஞ் சினைக்கை மாவும்
பரிகளு மரக்கர் தாமும்
பட்டன கிடக்கக் கண்டார்
இருவரு நின்றார் மற்றங்
கிராக்கத ரென்னும் பேரார்
ஒருவரு நின்றா ரில்லை
யுள்ளவ ரோடிப் போனார்.

தெரிகணை மாரி பெய்ய,
தேர்களும், சினைக்கைம் மாவும்,
பரிகளும், அரக்கர் தாமும்,
பட்டன கிடக்கக் கண்டார்
இருவரும் நின்றார் ; மற்றை
இராக்கதர் என்னும் பேரார்
ஒருவரும் நின்றார் இல்லை ;
உள்ளவர் ஓடிப் போனார்.

பொ :—(இலக்குவன்) ஆராய்ந்து எடுத்த அம்பு மழையைப் பெய்ததால், தேர்களும், துதிக்கையாகிய உறுப்பினையுடைய யானைகளும், குதிரைகளும், காலாளாகிய அரக்கர்களும் இறந்துபட்டுக் கிடக்கக் கண்டாராய் அங்கு, புகைக்கண்ணனும் மாபக்கனுமே நின்றார்கள். (அவர்கள் தவிர) அங்கு இராக்கதர் என்னும் பேருடையவர் ஒருவரும் நின்றிலர் ; இறவாது உள்ளவர்களும் அவ்விடத்தை விட்டு ஓடிப்போனார்கள்.

கு :—இலக்குவன் அம்பினால் இந்திரசித்தின் பக்கத்து நின்ற இருவர் தவிர மற்றைய அரக்கர் யாவரும் அழிந்துபட்டனர் என்ற

வாறு. சினைக்கைம்மா என்றது, கையாகிய சினையினையுடைய யானையை. அரக்கர் என்றது, காலாட்படையை. தேரும் மாவும் பரிகளும் அரக்கர்தாமும் பட்டன என்புழித் திணைவிரவி எண்ணப்பட்டு மிகவினால் அஃறிணை முடிவு கொண்டமை காணலாம். 'மற்று' பிறிது என்னும் பொருளில் வந்தது. 'இராக்கதர் என்னும் பேரார் ஒருவரும் நின்றதில்லை' என்றது, எல்லாரும் இறந்துபட்டனர் என்ற கருத்தினால் அன்று என்பது புலப்படுத்த 'உள்ளவரோடிப் போனார்' என்று கூறினார். அரக்கராயுள்ளவர்கள் இறந்தவர்களும் ஓடிச் சென்றவர்களும் ஆயினர் என்றவாறு. இதனால் இலக்குவன்வில் வீரம் புலப்படுத்தியவாறு. (163)

8296. ஓடினா ரரக்கர் தண்ணீ
ருண்ணசை யுலர்ந்த நாவர்
தேடினா ரெதிர்ந்து கையான்
முகிலினை முகந்து தேக்கிப்
பாடுறு புண்க டோறும்
பசும்புனல் பாயப் பாய
வீடினார் சிலவர் சில்லோர்
பெற்றிலர் விளிந்து வீழ்ந்தார்.

ஓடினர் அரக்கர் தண்ணீர்
உண் நசை உயர்ந்த நாவர்,
தேடினர், தெரிந்து கையால்
முகிலினை முகந்து தேக்கி,
பாடு உறு புண்கள் தோறும்
பசும்புனல் பாயப் பாய,
வீடினர் சிலவர்; கில்லோர்,
பெற்றிலர், விளிந்து வீழ்ந்தார்.

பொ :—(அவ்வாறு) ஓடினவர்களாகிய அரக்கர்களில் சிலர், தண்ணீர் உண்ணும் விருப்பத்தால் உலர்ந்த நாக்கையுடையவர்களாய் நீரைத் தேடி, மேகத்தை நெருங்கி அதில் உள்ள நீரைக் கையால் முகந்து குடித்துவிட்டுத் துன்பம் விளைக்கும் அம்பு பட்ட புண்கள் தோறும் தண்ணீர் பாயப் பாய அதனால் நோய்மிக்குச் சிலர் இறந்தார்கள்; சிலர் அத் தண்ணீரைப் பெருமையால் (வறட்சிமிக்கு) இறந்து வீழ்ந்தார்கள்.

கு :—தண்ணீர் உண்டவரும் இறந்தனர்; உண்ணுதவரும் இறந்தனர் என்றவாறு. தாகத்தால் வறண்ட அரக்கர் மேகத்தில் தண்ணீர் மொண்டு குடித்தனராயினும், அந்த நீர் புண்களில் பாய்ந்தமையால் நோய்மிக்கு இறந்தனர்; தண்ணீர் பெருதவர் நாவறட்சியால் இறந்தனர் என்க. அரக்கர் பேருருவம் உடையவராகலின் மேகத்துள்ள புனலை முகந்து குடிக்கலாயினர். பாடு – துன்பம். நீர் குடிக்கும் வேகத்தில் சிந்திய நீர் புண்களில் பாய்ந்தது என்க. இனிக் குடித்த நீர் புண்களின் வழியாக வெளியில் பாயப்பாய வீடிணர்சிலவர் எனலும் ஆம். (164)

8297. வெங்கணை திறந்த மெய்யர்
விளிந்திலர் விரைந்து சென்ருர்
செங்குழற் கற்றை சோரத்
தெரிவைய ராற்றத் தெய்வப்
பொங்குபூம் பள்ளி புக்கா
ரவருடல் பொருந்தப் புல்லி
அங்கவ ராவி யோடுந்
தம்முயிர் போக்கி யற்ருர்.

வெங்கணை திறந்த மெய்யர்,
விளிந்திலர், விரைந்து சென்ருர்,
செங்குழற் கற்றை சோரத்
தெரிவையர் அரற்ற, தெய்வப்
பொங்குபூம் பள்ளி புக்கார்;
அவர்உடல் பொருந்தப் புல்லி
அங்கு அவர் ஆவியோடும்
தம் உயிர் போக்கி அற்ருர்.

பொ :—கொடிய அம்புகளினுல் பிளக்கப்பட்ட உடம்பை யுடையராய், இறந்திலாத சில வீரர்கள், (தம் வீட்டிற்கு) விரைந்து சென்றவராய்த் தம் மனைவியர், சிவந்த கூந்தல் திரள் அவிழ்ந்து சோர, அழுது அரற்ருநிற்க, தெய்வத்தன்மையுடைய சிறந்த மலர்ப் பள்ளியிலே படுத்து உயிர் நீத்தார்கள்; உயிர் நீத்த அவ்வீரர் உடம்புகளைத் தம் உடம்புகள் பொருந்துமாறு அணைத்துக்கொண்டு, அவர் மனைவிமார் அவ்வீரர் உயிர்களோடு தம்முயிரையும் விடுத்து இவ்வுலகத்து இல்லார் ஆயினர்.

கு:—இலக்குவன் அம்புகளால் புண்பட்டு இறக்கும் நிலையில் உள்ள சில வீரர்கள், மனைவியரைப் பிரியா மாண்புறு காதலராய் மனைவயிற் சென்று, தம் மனைவியர் அழுதரற்ற, மலர்ப்படுக்கையில் படுத்து உயிர் நீத்தார்கள் எனவும், அவ்வாறு உயிர்நீத்த தம் கணவருடலங்களை அம் மங்கையர் தம்முடல் பொருந்துமாறு அணைத்துக் கொண்டு அக்கணவருயிரோடு தம்;உயிரைப் போக்கிப் பிணமாயினர் எனவும் கொள்க. அக் கணவருடலைத் தழுவித் தம்முடல் கிடக்க, அக் கணவர் உயிரைத் தழுவித் தம் முயிர் செல்லப் போக்கினர் அரக்கமாதர் என்க. புண்பட்ட வீரர் உடலை அவர் மனைவியர் தழுவி உயிர்விடுதல் உண்டு என்பதை:—"வெங்கணை சேர், புண்ணுடை மார்பம் பொருகளத்துப் புல்லினர், நுண்ணிடைப் பேரல்குலார்" (பு-வெ. தும்பை : 24) என்றதால் அறியலாம். இதனைச் 'சிருங்கார நிலை' என்பர். போர்க்களத்தில் பலர் இறந்து கிடத்தலின் தம் மனைவியர் தம்முடம்பைக் கண்டு தழுவுதல் அரிது ஆதலின், இறக்கும் நிலையில் உள்ள இவ்வீரர் அம்மனைவியர் உள்ள இடத்திலேயே சென்று அவர்காண உயிர்நீத்தனர் என்க. அரக்கியர்க்குள்ளது செம்பட்டை மயிரே ஆகலின் 'செங்குழற் கற்றை' என்றார். அரற்றுதல், பல சொல்லி அழுதல். பள்ளிபுக்கார் என்பது மங்கல வழக்காய் உயிர்நீத்ததை உணர்த்தியது; அதனானன்றே அவரைப் புல்லி என்னாது 'அவருடல் பொருந்தப் புல்லி' என்றார். அரற்றப் பள்ளி புக்கார் என இயையும். அற்றார் என்றது இங்கு இல்லையாயினர் என்றபடி. (165)

8298. பொறிக்கொடும் பகழி மார்பர்
போயின ரிடங்கள் புக்கார்
மறிக்கொளுஞ் சிறுவர் தம்மை
மற்றுள சுற்றந் தம்மைக்
குறிக்கொளு மென்று கூறி
யவர்முகங் குழைய நோக்கி
நெறிக்கொளுங் கூற்றை நோக்கி
யாருயிர் நெடிது நீத்தார்.

பொறிக்கொடும் பகழி மார்பர்
போயினர், இடங்கள் புக்கார்,
மறிக்கொளும் சிறுவர் தம்மை,
மற்றுள சுற்றம் தம்மை,

'குறிக்கொளும்' என்று கூறி,
அவர்முகம் குழைய நோக்கி
நெறிக்கொளும் கூற்றை நோக்கி
ஆருயிர் நெடிது நீத்தார்.

பொ :—நெருப்புப் பொறி கக்கும் கொடிய அம்புகள் தைத்த மார்பினையுடைய சில வீரர், சென்று தம் இருப்பிடங்களுக்குப் புகுந்த வராய், அங்குத் 'துள்ளி விளையாடிக் கொண்டிருக்கின்ற தம் புதல்வர் களைக் குறிக்கொண்டு பாதுகாப்பீராக' என்று அங்குள்ள பிற சுற்றத் தவர்க்குக் கூறி, அப் புதல்வர் முகத்தைக் கனிவாகப் பார்த்துவிட் டுத் தம்மைப் பின்பற்றிவரும் கூற்றுவனையும் நெடிது பார்த்துக் கொண்டு தம் அரிய உயிரை நெடிது விடுத்தார்கள்.

கு :—மேலைச் செய்யுளில் மனைவியர்பால் பற்றுள்ள சில வீரர் செயலைக் கூறியது போலவே இச்செய்யுளில் புதல்வர்பால் அயரா அன்பு கொண்ட சில வீரர் செயலைக் கூறியுள்ளார். போயினர், புக்கார் என்பன முற்றெச்சங்கள். மறிக்கொள்ளுதல் என்பது மான் மறி போலத் துள்ளி விளையாடுதலை யுணர்த்தியது. துன்பமறியாச் சிறு மகாரின் செயலை விளக்கியவாறு. சிறுவர் தம்மைக் குறிக் கொளுமென்று மற்றுள சுற்றந் தமக்குக் கூறி என உருபுமயமாக்குக. அவர் முகம் என்றது, அப்புதல்வர் முகத்தை. குழைய நோக்குதலா வது, நமக்குப் பின்னால் இவர் நிலை யாதாகுமோ என்று பரிவொடு பார்த்தல். நெறிக்கொளுங் கூற்றை என்றது, தாம் வந்த வழியைப் பின்பற்றிவந்த கூற்றுவனை. குழந்தைகளைக் குழைய நோக்கிய வீரர்கள், கூற்றுவனையும் வெறுப்புடன் பார்த்து உயிர் துறந்தார்கள் என்றவாறு. பின்றையே நிற்பது கூற்றுவன் இயல்பு ஆகலின், நெறிக்கொளும் கூற்று என்றார். கூற்றை, நெடிது நோக்கி ஆருயிர் நீத்தார் என்க. இனிப் புதல்வர்மேல் உள்ள பாசத்தால் உயிர் விரைந்து போகாது காலம் தாழ்த்துச் சென்றதை விளக்க 'நெடிது நீத்தார்' என்றார் எனலும், ஆம். (166)

8299. தாமரைக் கண்ணன் றம்பி
தன்மையீ தாகின் மெய்யே
வேமரைக் கணத்தி னிவ்வூ
ரிராவணி விளிதன் முன்னம்
மாமரக் கானிற் குன்றின்
மறைந்திரு மறைய வல்லே
போமெனத் தமரைச் சொல்லிச்
சிலருட றுறந்து போனார்.

தாமரைக் கண்ணன் தம்பி
தன்மை ஈதுஆகின் மெய்யே
வேம், அரைக் கணத்தின் இவ் ஊர்;
இராவணி விளிதன் முன்னம்
மாமரக் கானில், குன்றில்,
மறைந்திரும்; மறைய வல்லே
போம்' எனத் தமரைச் சொல்லி,
சிலர் உடல் துறந்து போனர்.

பொ:—தாமரை மலர்போன்ற கண்களையுடைய இராமன் தம்பியாகிய இலக்குவன் தன்மை இதுவாகுமானல் இவ்வூர் அரைக் கணத்திற் குள்ளாக வெந்தொழியும்; இந்திரசித்து இறப்பதற்கு முன்பே பெரிய மரங்கள் செறிந்த காட்டில் அல்லது, குன்றில் மறைந்திருங்கள்; பின்பு (பிறர் பாராதபடி) மறைவாகத் தப்பிப்போய் விடுங்கள், என்று தம் உறவினர்க்குச் சொல்லிவிட்டுச் சில வீரர்கள் உடலைத் துறந்து போயினர்.

கு:—இராமன் என்ற பெயரை அறியாத அரக்கர், அவன் கண்ணைக்கண்டே பெயர் கூறுகின்றாராகலின் இராமனைத் தாமரைக் கண்ணன், என்றார். இவ்வூர் அரைக்கணத்தின் வேம் என இயையும். இராவணி விளிந்தால் தப்பிப்போதல் அரிது ஆதலின், இராவணி விளிதன் முன்னம் போம் எனச் சொல்லுவாராயினர். இரும், போம் என்பன ஏவல்வினை முற்றுகள். மறைந்திருமின் போமின் என்பவற்றின் சிதைவாகக் கொள்க. இவை புதியன புகுதல் எனினும் அமையும். தமரைச்சொல்லி என்பதைத் தமர்க்குச் சொல்லி என உருபு மயக்கமாக்குக. இவ்வீரர் தம் தமர்மேல் வைத்த பற்றினல் இங்ஙனம் கூறி உயிர் விடுவாராயினர். (167)

8300. வரையுண்ட மதுகை மேனி
மருமத்து வள்ளல் வாளி
இரையுண்டு துயிலச் சென்றார்
வாங்கிடி னிறப்பெ னென்பார்
பிரையுண்ட பாலி னுள்ளம்
பிறிதுறப் பிறர்முன் சொல்லா
உரையுண்ட நல்லோ ரென்ன
யுயிர்ந்துயிர்ந் துழைப்ப தானர்.

வரை உண்ட மதுகை மேனி
மருமத்து, வள்ளல் வாளி
இரை உண்டு துயில, சென்ளுர்,
‘வாங்கிடின், இறப்பம்’ என்பார்,
பிரை உண்ட பாலின் உள்ளம்
பிறிதுற, பிறர்முன் சொல்லா
உரை உண்ட நல்லோர் என்ன,
உயிர்த்து உயிர்த்து, உழைப்பதானுர்.

பொ :—மலைபோன்ற வலிமையுடைய (தம்) உடம்பில் சிறந்த உறுப்பாகிய மார்பில் இலக்குவனது அம்புகள் குருதியாகிய இரையை உண்டுகொண்டு துயிலாநிற்க (மார்பில் தைத்த அம்புகளோடே) வீட்டிற்குச் சென்ற சில வீரர், (இவ்வம்புகளைப்) பறித்தால் இறந்து விடுவோம் என்று கூறினவர்களாய், பிரைசேர்ந்த பால்போல மனம் வேறுபடப் பிறர்முன் சொல்லத்தகாத பழிச்சொல்லுக்கு ஆளான நல்லோர்களைப்போல, பெருமூச்சு விட்டுவிட்டு வருந்துபவரானுர்.

கு :—வரையுண்ட மதுகைமேனி என்புழி உண்ட என்பது உவமையுருபு. மருமம் - மார்பு. உடம்பில் உயிர்நிலையாக விளங்கு வது மார்பு ஆகலின் மேனி மருமம் என்ருர். மேனியில் சிறந்த உறுப்பாகிய மார்பு என்க. வள்ளல், இலக்குவன். இலக்குவனது அம்புகள் தைத்த மார்போடு வீடு சென்ருர் என்பார், வாளி யிரை யுண்டு துயிலச் சென்ருர் என்ருர். மார்பில் குருதியாகிய இரையை உண்டுகொண்டு அம்புகள் உறங்கிக் கிடந்ததாகக் கூறியது, செய்யா மரபின தொழிற்படுத்து அடக்கியதாகும். மார்பில் ஆழமாகப் பதிந் துள்ள அம்புகளை எடுக்க உறவினர் முயன்ருர்களாக அப்போது ‘வாங்கிடின் இறப்பம்’ என்று கூறிவிட்டு வீரர்கள் உயிர்த்து உயிர்த் துத் தாமே வருந்தலானுர் என்க. மர்பில்பட்ட அம்புகளைப் பிறரைக் கொண்டும் வாங்கிக்கொள்ள வியலாமல் பெருமூச்சு விட்டுக்கொண்டு வருந்தும் வீரர்களுக்கு உவமையாகப் பிறர் முன் சொல்லத்தகாத பழிச்சொல்லுக்கு ஆளான நல்லோரைக் கூறியவாறு. வீரர் நெஞ் சில் தைத்த அம்பும் பிறரைக் கொண்டு வாங்கவியலாது; நல்லோர் நெஞ்சில் ஏற்ற பழிச்சொல்லும் பிறர்முன் சொல்லத்தகாதது என்க. பிறர்முன் சொல்லத்தகாத பழிச்சொல்லுக்காளான நல்லோர் உயிர்த்து உயிர்த்துத் தமக்குள் வருந்துவதுபோலப், பிறரால் வாங்கப்படாமல் அம்பு தைக்கப்பெற்ற வீரர்களும் உயிர்த்து உயிர்த் துத் தாமே வருந்தலாயினர் என உவமையை விரிக்க. உயிர்த் துயிர்த்து உழைத்தல் பொதுத்தன்மை. பிறர் அறியாது கூறிய பழிச் சொல்லை நல்லோர், பிறர் முன் சொல்லித் துன்பம் ஆறுதற்கும் இல்லாது போயது போலவே, வீரரும் தம் மார்பில் தைத்த அம்புகளைப்

பிறரைக் கொண்டு வாங்க இயலாதுபோயது என்க. பிரை என்பது பாலைத் தயிராக மாற்றுதற்கு விடும் மோர். மோர் சிறிது பட்டவுடன் பால் திரிந்து வேறுபடுதல் போல, நல்லோரின் பால்போன்ற உள்ளம், பிரைபோன்ற பழிச்சொல்லால் வேறுபட்டது என்றவாறு. பாலுறு பிரையெனப் பரந்ததெங்குமே" (பால - மிதிலைக் – 4) என முன்வந்துள்ளமை காண்க. (168)

8301. தேரிடைச் செல்லார் மானப்
புரவியிற் செல்லார் செங்கட்
காரிடைச் செல்லார் காலிற்
காலெனச் செல்லார் காவல்
ஊரிடைச் செல்லார் நாணு
லுயிரின்மே லுடைய வன்பால்
போரிடைச் செல்லார் நின்று
நடுங்கினர் புறத்துப் போகார்.

தேரிடைச் செல்லார், மானப்
புரவியில் செல்லார், செங்கண்
காரிடைச் செல்லார், காலின்
கால் எனச் செல்லார், காவல்
ஊரிடைச் செல்லார், நாணுல்,
உயிரின்மேல் உடைய அன்பால்,
போரிடைச் செல்லார், நின்று
நடுங்கினர், புறத்தும் போகார்.

பொ:—(சில அரக்கர்) தேரின்மேல் ஊர்ந்து செல்லாமலும், பெருமையுடைய குதிரையின்மேல் செல்லாமலும், சிவந்த கண்ணை யுடைய மேகம்போன்ற யானைமேற் செல்லாமலும், கால்களால் காற்றுப்போல விரைந்து செல்லாமலும், காவலையுடைய ஊர்க்குச் செல்லாமலும், போர்க்களத்திற்குச் செல்லாமலும், புறத்தே செல்லா மலும், நாணத்தாலும் தம் உயிர்மேல்வைத்த அன்பாலும் ஓர் ஒதுக் கிடத்தே நின்று நடுங்கிக்கொண் டிருந்தார்கள்.

கு:—தேர் முதலிய ஊர்திகளில் சென்ருல் போர் வீரர்கள் என்று அறிந்து இலக்குவன் அம்பு கொன்றுவிடும் ஆதலின் அவற்றில் சென்றிலர் என்க. காலில் நடந்து செல்லும்போதும் காற்றுப்போன்ற வேகத்தில் சென்ருல் வீரர் என்பது விளங்கிவிடும் ஆதலின் அங் ஙனம் சென்றிலர் என்றவாறு. காவலையுடைய ஊராயினும் அங்குச்

செல்லும் வழியில் இலக்குவன் அம்புக்கு இலக்காக நேருமே என்ற எண்ணத்தால் ஊரிடையும் செல்லாராயினர். இனி, போரில் புறங் காட்டி வந்தால் ஊரிலுள்ளோர் பழிப்பார்களே என்ற நாணுல் ஊரிடைச் செல்லார் என இயைத்துரைத்தலும் ஆம். புறத்தும் போகார் என்றது ஊர்க்குப் புறம்பான இடத்தும் போகாராய் என்ற வாறு. செல்லார் என்பன முற்றெச்சங்களாய் நின்று நடுங்கினர் என்ற வினைகொண்டு முடிந்தன. போகார் என்பதும் அன்னதே. நின்றமைக்கு நாணமும், நடுங்கினமைக்கு உயிர்மேல் அன்பும் கார ணங்களாம். போக்கிடமின்றி வீரர் சிலர் நின்று நடுங்கினமை இதனுல் புலப்படுத்தியவாறு. ஊரிடையும் போரிடையும் புறத்தும் போகாமல் நின்று நடுங்கினர் எனவே இவையல்லாத ஓர் ஒதுக்கிடம் என்பது பெறப்படும். (169)

### இந்திரசித்தின் கவசத்தை இலக்குவன் வீழ்த்துதல்

8302. நொய்தினிற் சென்று கூடி
யிராவணி யுளேவை நோக்கி
வெய்தினிற் கொன்று வீழ்ப்ப
லென்பதோர் வெகுளி வீங்கிப்
பெய்துழிப் பெய்யு மாரி
யனையவன் பிணங்கு கூற்றின்
கய்யினிற் பெரிய வம்பாற்
கவசத்தைக் கழித்து வீழ்த்தான்.

நொல்தினின் சென்று கூடி,
இராவணி உளேவை நோக்கி,
வெய்தினில் கொன்று வீழ்ப்பல்
என்பது ஓர் வெகுளி வீங்கி,—
பெய்துழிப் பெய்யும் மாரி
அனையவன் — பிணங்கு கூற்றின்
கையினில் பெரிய அம்பால்,
கவசத்தைக் கழித்து வீழ்த்தான்.

பொ :—பெய்த இடத்திலேயே பெய்துகொண் டிருக்கும் மேகம் போன்றவனுகிய இலக்குவன், இந்திரசித்தின் இளேப்பினே நோக்கி விரைந்து சென்று நெருங்கி, (இவனே) கடுமையாகக் கொன்று வீழ்த் துவேன் என்ற ஒப்பற்ற கோபம் பெருகி, மாறுபாடுடைய கூற்று

வனது கையைக் காட்டிலும் (கொடுமையில்) பெரிய அம்பினுல் இந்திரசித்தின் கவசத்தைப் பிளந்து வீழ்த்தினுன்.

கு :—‘ உளேவு தோன்ற இராவணி ஏங்கினுன் ’ (162) என முன் கூறியதைத் தொடர்ந்து இங்கும் இராவணி உளேவை நோக்கி என்ருர். உளேவு - வருத்தம் – இளேப்பு. இலக்குவன் இந்திரசித்தின் மேல் மீண்டும் மீண்டும் அம்பு எய்கின்றமை புலப்படப் பெய்துழிப் பெய்யும் மாரியனேயவன் என அவனுக்கு உவமை கூறினுர். நொய்து விரைவு. வெய்து - கடுமை. பிணங்குதல் – மாறுபடுதல். உயிர் வாங்கும் இயல்புடைய கூற்றுவனது கையைக் காட்டிலும் பெரிய அம்பு என்று ஊறழ்ந்து கூறியது, கொடுமை மிகுதி பற்றியும் பருமை பற்றியும் ஆம். (170)

## துமிராட்சனும் மகாபாரிசுவனும் இலக்குவனேடு பொருதல்

8303. கவசத்தைக் கழித்து வீழ்ப்பக்
காப்புறு கடனின் ருகி
அவசத்தை யடைந்த வீர
னறிவுறுந் துணேயின் வீரத்
துவசத்தின் புரவித் திண்டேர்
கடிதுறத் தூண்டி யாமித்
திவசத்தின் முடித்தும் வெம்போ
ரெனச்சினந் திருகிச் சென்ருர்.

‘ கவசத்தைக் கழித்து வீழ்ப்ப
காப்புறு கடன் இன்று ஆகி,
அவசத்தை அடைந்த வீரன்
அறிவு வுறுந் துணேயின் வீரத்,
துவசத்தின் புரவித் திண்தேர்
கடிதுறத் தூண்டி, யாம் இத்
திவசத்தின் முடித்தும், வெம்போர் ’
எனச்சினம் திருகிச் சென்ருர்.

பொ :—(அவ்வாறு இலக்குவன்) கவசத்தை அறுத்து வீழ்த்திய தால், தன்னேக் காத்துக்கொள்ளும் தன்மையற்றவனுகித் தன்வய மிழந்த இந்திரசித்து, தெளிவுபெறும் வரையில் வீரக்கொடி கட்டி யுள்ள, குதிரைகள் பூட்டப்பெற்ற திண்ணிய தேரை விரைந்து செலுத்தி, நாம் இந்த நாளுக்குள் கொடிய இப்போரை முடித்து விடுவோம், என்று கோபம் முதிர்ந்து எதிர்த்துச் சென்ருர்.

கு :—தன் கவசமற்று வீழ்ந்ததால் இந்திரசித்து தன்வயம் இழந்து கிடந்தானாக, அவன் நிலைகண்ட அவன் தேரினைக் காத்து நின்ற துமிராட்சனும் மகாபாரிசுவனும் வெகுண்டு இலக்குவனோடு பொருது இன்று போர் முடித்துவிடுவோம் எனச் சினந்து வந்ததை இச் செய்யுள் புலப்படுத்துகின்றது. திவசம் – நாள். அவசம் – தன் இழந்த நிலை ; மூர்ச்சித்தல். (171)

இலக்குவன் அவ்விருவரையும் கொல்லுதல்

8304. மாருதி மேலு மையன்
மார்பினுந் தோளின் மேலும்
தேரின ரிருவர் சென்றார்
செந்தழற் பகழி சிந்த
ஆரியன் வாகை வில்லு
மச்சுடைத் தேரு மத்தேர்
ஊர்குவா ருயிருங் கொண்டான்
புரவியி னுயிரு முண்டான்.

மாருதி மேலும் ஐயன்
மார்பினும் தோளின் மேலும்
தேரினர் இருவர் சென்றார்,
செந்தழல் பகழி சிந்த,
ஆரியன் வாகை வில்லும்
அச்சுடைத் தேரும் அத்தேர்
ஊர்குவார் உயிரும் கொண்டான் ;
புரவியின் உயிரும் உண்டான்.

பொ :—(அவ்வாறு) சென்றவராகிய தேரினர் இருவரும், அனுமன் மேலும், இலக்குவனது மார்பிலும் தோளின்மேலும் சிவந்த நெருப்புப்போன்ற அம்புகளைச் சொரிய–இலக்குவன், அவர்களுடைய வெற்றி வில்லையும் அச்சினையுடைய தேரினையும் அத்தேரினை ஊர்கின்ற பாகர் உயிரையும் அழித்து, அத்தேரில் பூட்டிய குதிரைகளின் உயிரையும் வாங்கினான்.

கு :—சென்றார் ஆகிய இருவர் மாருதிமேலும் ஐயன் மார்பினும் தோளின்மேலும் பகழி சிந்த என்று இயையும், சூரியன் என்றது இலக்குவனை. தேர் ஊர்குவார் உயிருங் கொண்டான் என்ற தொடரில் உள்ள உயிருங் கொண்டான் என்றது வில்லுக்கும்

தேர்க்கும் ஏலாமையால், அழிந்தான் என்று கருத்துப் பொருள் கூறலாயிற்று. உயிருண்ணுதல், உயிர் கொள்ளுதல் என்பன கொல்லுதல் என்னும் கருத்தின. தேர் ஊர்குவார் என்றது பாகரை. (172)

அவ்விருவரும் தண்டுகொண்டு அனுமனோடு பொருதல்

8305. இருவரு மிழந்த வில்லா
ரெழுமுனை வயிரத் தண்டார்
உருமெனக் கடிதி னோடி
யனுமனை யிமைப்பி னுற்றார்
பொருகனற் பொறிகள் சிந்தப்
புடைத்தனர் புடைத்த லோடும்
பருவலிக் கரத்தி னற்றண்
டிரண்டையும் பறித்துக் கொண்டான்.

இருவரும் இழந்த வில்லார்,
எழுமுனை வயிரத் தண்டார்,
உரும் எனக் கடிதின் ஓடி,
அனுமனை இமைப்பின் உற்றார்,
பொருகனல் பொறிகள் சிந்தப்
புடைத்தனர்; புடைத்த லோடும்,
பருவலி கரத்தினால் தண்டு
இரண்டையும் பறித்துக் கொண்டான்.

பொ :—இருவரும் அவ்வாறு வில்லை இழந்தவர்களாய் ஏழு முனைகளையுடைய தண்டாயுதத்தை ஏந்திக்கொண்டு, இடியைப் போல முழங்கிக்கொண்டு விரைவாக ஓடி; இமைப்பொழுதில் அனுமனை நெருங்கி, நெருங்கிய தீப்பொறிகள் சிந்துமாறு அடித்தார்கள்; அவர்கள் அடிக்கவும், அனுமன் தன் பருத்த வலிமைமிக்க கையினால் அந்தத் தண்டாயுதம் இரண்டையும் பறித்துக்கொண்டான்.

கு :—இருவரும் என்றது, தூமிராட்சன், மகாபாரிசுவன் என்ற இருவரை. இழந்த வில்லார் என்றது, 'அருங்கேடன்' (குறள் : 210) என்பதுபோல வந்தது; வில்லை இழந்தவராய் என்க. ஏழு முனைகளை யுடைய உறுதியான தண்டாயுதத்தை, ஏழுமுனை வயிரத்தண்டு என்றார். 'இடக்கையா லரக்கனுங்கோர் ஏழுமுனை வயிரத்தண்டு' (கும்பகருணன் வதைப் - 189) என முன்னும் இத்தகைய தண்டு

சொல்லப்பட்டிருத்தல் நினையலாம். விரைவிற்கும் ஆரவாரத்திற்கும் உவமையாக உரும் சொல்லப்பட்டது. இருவர் ஏந்திய இரு தண்டு களையும் அனுமன் இருகரத்தால் பறித்துக்கொண்டான் என்க. புடைத்தல் - அடித்தல். பொருதல் இங்கு நெருங்குதலை உணர்த் தியது. பருமையும் வலிமையு முடைய கரத்தைப் பருவலிக் கரம் என்றார். (173)

8306. தண்டவன் கைய தாய
தன்மையைத் தறுக ணாளர்
கண்டனர் கண்டு செய்ய
லாவதொன் றானுங் காணார்
கொண்டன னெறிந்து நம்மைக்
கொல்லுமென் றச்சங் கொண்டார்
உண்டசெஞ் சோறு நோக்கா
ருயிருக்கே யுதவி செய்தார்.

தண்டு அவன் கையது ஆய
தன்மையைத் தறுக ணாளர்,
கண்டனர்; கண்டு, செய்ய
லாவது ஒன்றானும் காணார்;
'கொண்டனன் எறிந்து நம்மைக்
கொல்லும்' என்று, அச்சம் கொண்டார்,
உண்ட செஞ்சோறும் நோக்கார்,
உயிருக்கே உதவி செய்தார்.

பொ :—தம்முடைய தண்டாயுதங்கள் இரண்டும் அந்த அனுமன் கைப்பட்ட தன்மையைக் கொடியவர்களாகிய அவ்விருவரும் கண் டார்கள்; அவ்வாறு கண்டு தாம் செய்யக்கூடிய செயல் ஒன்றும் காணாராய், 'அந்தத் தண்டுகளைக் கொண்ட அனுமன் நம்மை அவற்றால் அடித்துக் கொல்லுவான்' என்று அஞ்சினவராய், இது காறும் அவர்கள் உண்ட செஞ்சோற்றுக் கடனையும் நோக்காராய்த் தம்முயிருக்கே உதவியாய் ஓடி ஒளிந்தார்கள்.

கு :—தறுகணாளர் என்றது, தூமிராட்சன் மகாபாரிசுவான் என்ற இருவரை .காணார், அச்சம் கொண்டார், நோக்கார், என்பன முற்றெச்சங்களாய் உதவிசெய்தார் என்ற வினைகொண்டு முடிந்தன. கொண்டனன் என்றது, தண்டு கொண்டவனாகிய அனுமன் என வினையாலணையும் பெயராய் நின்றது. வீரர்கள் தம் வாணாள் முழு

மையும் தம் தலைவரிட்ட செம்மையான சோற்றை யுண்பது, போரில் தம் தலைவனுக்கு முன் போர்செய்து இறப்பதற்கே ஆம். இவ்வீரர் தாம் உண்ட செஞ்சோற்றுக் கடனாகத் தம் முயிரைக் கொடுக்க வேண்டியவராயிருந்தும் அக்கடமையை நினையாராயினர் என்பார், 'உண்ட செஞ்சோறு நோக்கார்' என்றார். சோறு என்பது சோற்றின் காரியமாகிய கடமையை உணர்த்தியது. புறமுதுகு காட்டி ஓடி ஒளிந்தனர் என்பதைத் தம் வாயால் சொல்லவும் கூசினவராய்க் கம்பர் 'உயிருக்கே உதவிசெய்தார்' என்று அப்பொருள் தோற்றுவித்த நயம் நினைந்து மகிழ்தற் குரியது. (174)

## வானர வீரர்கள் மயக்கந் தெளிந்து எழுதல்

8307. காற்றுவந் தசைத்த லாலுங்
காலமல் லாமை யாலும்
கூற்றுவந் தாவி கொள்ளுங்
குறியின்மை குறித்த லாலும்
தேற்றம்வந் தெய்தி நின்ற
மயக்கமு நோவுந் தீர்ந்தார்
ஏற்றமும் வலியும் பெற்று
ரெழுந்தனர் வீர ரெல்லாம்.

காற்று வந்து அசைத்தலாலும்,
காலம் அல்லாமை யாலும்,
கூற்று வந்து உயிரைக் கொள்ளும்
குறி இன்மை குறித்த லாலும்,
தேற்றம் வந்து எய்தி, நின்ற
மயக்கமும் நோவும் தீர்ந்தார்;
ஏற்றமும் வலியும் பெற்றார்;
எழுந்தனர் — வீர ரெல்லாம்.

பொ :—குளிர்ந்த காற்று வந்து வீசியதாலும், (உயிர் போதற்குரிய) காலம் இது அல்லாமையாலும், கூற்றுவன் வந்து இவர்கள் உயிர்களைக் கொள்ளுதற்கேற்ற அடையாளம் இல்லாமையைக் கண்டு சென்றமையாலும், வானரவீரர் எல்லாம் தெளிவு வரப்பெற்று இதற்குமுன் நின்ற மயக்கமும் நோயும் தீரப் பெற்றவராய் வீர உணர்ச்சியையும் வலிமையையும் பெற்று எழுந்தனர்.

கு :—இந்திரசித்தின் அம்புகளால் மயக்கமும் நோவு முற்று வீழ்ந்துகிடந்த வானர வீரர்கள் தெளிவும் வலிவும் பெற்று எழுந்தார்கள்; என்று கூறவந்தவர், அவர் இறவாது எழுந்ததற்கு மூன்று காரணம் காட்டியுள்ளார்; நல்ல காற்று வீசியது என்பது ஒன்று; ஆயுள் முடியும் காலம் அல்லாத காலமாக இருந்தது என்பது ஒன்று; வந்த கூற்றுவன், உயிர் கொள்ளுதற் கேற்ற குறி இல்லை என்று எண்ணியது ஒன்று. வானரர்களின் ஆயுள் முடியாமையால், கூற்றுவனும் ஆவிகொள்ளுங் குறியின்மை குறித்தான் எனக் காரணகாரிய இயைபு கூறலும் ஆம். இது ஏது அணி. தீர்ந்தாராய்த் தேற்றம் வந்தெய்தி ஏற்றமும் வலியும் பெற்றார் என மாற்றி இயைத்தலும் ஆம். ஏற்றம் என்றது வீரவுணர்ச்சியை. தேற்றம் – தெளிவு. வீரர் எனப் பொதுவகையால் கூறியிருப்பினும் வானர வீரரையே இங்குக் குறித்தார் என்பது வருஞ் செய்யுளால் புலனும். (175)

### எழுந்த வானரவீரர் போராரவாரம் செய்தல்

8308. அங்கதன் குமுத னீலன்
சாம்பவ னருக்கன் மைந்தன்
பங்கமின் மயிந்தன் றம்பி
சதவலி பனசன் முன்னாச்
சிங்கவே றனைய வீரர்
யாவருஞ் சிகர மேந்தி
மங்கலம் வானோர் சொல்ல
மழையென வார்த்து வந்தார்.

அங்கதன், குமுதன், நீலன்,
சாம்பவன், அருக்கன் மைந்தன்,
பங்கம் இல் மயிந்தன் தம்பி,
சதவலி, பனசன் முன்னாச்
சிங்க ஏறு அனைய விரர்
யாவரும் சிகரம் ஏந்தி,
மங்கலம் வானோர் சொல்ல,
மழை என ஆர்த்து வந்தார்.

பொ :—(மயக்கம் தெளிந்த) அங்கதன், குமுதன், நீலன், சாம்பவன், சூரியன் மகனாகிய சுக்கிரீவன், குற்றமில்லாத மயிந்தன், அவன் தம்பியாகிய துவிந்தன், சதவலி, பனசன் முதலாக வுள்ள ஆண்சிங்கம் போன்ற வானரவீரர் யாவரும் மலைகளை ஏந்திக்

கொண்டு தேவர்கள் மங்கல வாழ்த்துச்சொல்ல மேகம்போல ஆர வாரித்துக்கொண்டு வந்தார்கள்.

கு :—மயிந்தன், தம்பி என்றது மயிந்தனையும் அவன் தம்பியாகிய துவிந்தனையும் ஆம். சிகரம் என்றது, ஆகுபெயராய் சிகரத்தை யுடைய மலையை யுணர்த்தியது. மழை என்றது மேகத்தை. மேகம் இடி ஒலி எழுப்பிக்கொண்டு வருவதுபோல இவ்வானர வீரர்களும் ஆரவாரம் செய்துகொண்டு வந்தனர் என்றவாறு. (176)

## வானரர் வீசிய குன்றங்களை இந்திரசித்து சின்னபின்னமாக்குதல்

8309. அத்தனை யோருங் குன்ற
மளப்பில வசனி யேற்றோ
டொத்தன நெருப்பு வீசு
முருமென வொருங்க வுய்த்தார்
இத்தனை போலுஞ் செய்யு
மிகலென முறுவ லெய்திச்
சித்திர வில்வ லோனுஞ்
சின்னபின் னங்கள் செய்தான்.

அத்தனை யோரும், குன்றம்
அளப்பு இல, அசனி ஏற்றோடு
ஒத்தன, நெருப்பு வீசும்
உரும் என ஒருங்க உய்த்தார் ;
'இத்தனை போலும் செய்யும்
இகல்' என, முறுவல் எய்தி,
சித்திர வில் வலோனும்
சின்ன பின்னங்கள் செய்தான்.

பொ :—அத்தனை வானர வீரர்களும் பேரிடியோடு ஒத்தன வாகிய அளவிலாத குன்றங்களை, நெருப்பை வீசிக்கொண்டு செல் லும் இடிபோலப் போய் விழுமாறு ஒருசேர வீசினார்கள்; (அதுகண்ட) விசித்திரமான வில்லின் திறம்பெற்ற இந்திரசித்தும், 'நீவிர் செய்யும் போர் இவ்வளவுதான் போலும்' என்று இகழ்ந்து சிரித்து அம்மலை களைத் தன்னம்பினால் சின்னபின்னமாகச் சிதறச் செய்தான்.

கு :—அத்தனையோரும், அசனி யேற்றோடு ஒத்தன அளப்பில குன்றம் ஒருங்கு உய்த்தார் என இயையும். இகல் - போர். இதனைத்

போலும் என்றது, இகழ்ச்சிக் குறிப்பால் கூறியது. முறுவல் - புன் சிரிப்பு, எள்ளல்பற்றி வந்த நகை. விசித்திரம் என்பது முதல் குறைந்து சித்திரம் என நின்றது. விசித்திரம் - அதிசயம். யாரும் அதிசயிக்கத்தக்க வில்லின் திறமை யுடையவன் இந்திரசித்து என்க. (177)

சூரியன் மறைதல்

8310. மரங்களு மலையுங் கல்லு
மழையென வழங்கி வந்து
நெருங்கினர் நெருங்கக் கண்டு
மொருதனி நெஞ்சும் வில்லும்
சரங்களுந் துணையாய் நின்ற
நிசாசரன் றனிமை நோக்கி
இரங்கின னென்ன மேல்பாற்
குன்றுபுக் கிரவி நின்றான்.

மரங்களும் மலையும் கல்லும்
மழை என வழங்கி, வந்து
நெருங்கினர்; நெருங்கக் கண்டும்,
ஒரு தனி நெஞ்சும், வில்லும்,
சரங்களும், துணையாய் நின்ற
நிசாசரன் தனிமை நோக்கி,
இரங்கினன் என்ன, மேல்பால்
குன்றுபுக்கு இரவி நின்றான்.

பொ :—மரங்களையும் மலைகளையும் கற்களையும் மழைபோல இந்திரசித்தின்மேல் பொழிந்துகொண்டு வந்து (வானரவீரர்கள்) நெருங்கினார்கள்; அவர்கள் அவ்வாறு நெருங்கக் கண்டும் ஒரு தனி யான நெஞ்சமும் ஒரு வில்லும் அம்புகளுமே துணையாகக் கொண்டு நின்ற இந்திரசித்தின் தனிமையைப் பார்த்துச் சூரியன் இரங்கினான் என்னுமாறு மேற்கு மலையில் புகுந்து நின்றான்.

கு :—வானரவீரர் பலர் தாக்க இந்திரசித்து தனித்து நிற்பதைக் கண்டு சூரியன், இரக்கங்கொண்டு அவனுக்கு ஏற்ற இருள்வருமாறு மறைந்தான் என்னுமாறு மேலைத் திசைமலையில் புகுந்தான் என்றது தற்குறிப்பேற்ற அணி. நிசாசரன் என்றது, இரவில் சஞ்சரிப்பவன் என்னும் பொருளதாய்த் தற்குறிப்பேற்றத்திற்குத் துணையாய்

நின்றது. பலர்முன் தனித்து நிற்கின்ற இந்திரசித்து இரவில் வலிமை மிகுதிபெற்றுச் சஞ்சரிப்பவன் ஆதலின், அவன் வலிமை பெற்றுப் போர் செய்வானாக என்று சூரியன் இரக்கங்காட்டி அவனுக்கேற்று இரவு வருதற்குத் தான் தடையாக நில்லாமல் மறைந்தான் என்ற பொருத்தம் அந்த 'நிசாசரன்' சொல்லால் பெறப்படுதல் காணலாம். இந்திரசித்துக்கு வேறு துணை இல்லை என்பார் 'ஒருதனி நெஞ்சும் வில்லும் சரங்களுந் துணையாய் நின்ற நிசிசரன்' என்றார். ஒரு தனி என்பது ஒருபொருட் பன்மொழி. ஒரு நெஞ்சும் தனி வில்லும் எனப் பிரித்துக் கூட்டலும் ஆம். இரவி குன்றுபுக்கு நின்றான் என்றது, மறைந்தான் என்னும் பொருளது. (178)

### இருள் பரவுதல்

8311. வாழிய வேத நான்கு
மனுமுதல் வந்த நூலும்
வேள்வியு மெய்யும், தெய்வ
வேதியர் விழைவு மாகும்
ஆழியங் கமலக் கையா
னாதியம் பரம னென்ன
ஏழைய ருள்ள மென்ன
விருண்டன திசைக ளெல்லாம்.

'வாழிய வேதம் நான்கும்
மனுமுதல் வந்த நூலும்,
வேள்வியும், மெய்யும், தெய்வ
வேதியர் விழைவும் ஆகும்,
ஆழி அம் கமலக் கையான்
ஆதி அம் பரமன்' என்னா
ஏழையர் உள்ளம் என்ன,
இருண்டன திசைகள் எல்லாம்.

பொ :—வாழ்வு பெற்றுள்ள வேதங்கள் நான்கும், மனுநீதி முதலாக வந்துள்ள தரும சாத்திரங்களும், வேள்வியும், சத்தியமும், தெய்வத்தன்மையுடைய அந்தணர் விரும்பும் பேருமாக இருக்கின்ற சக்கரமேந்திய அழகிய தாமரைமலர் போன்ற கையையுடைய திருமாலே பரம்பொருள் என்று ஏற்றுக்கொள்ளாத அறிவு இலாதார் மனம் இருண்டுள்ளது போலத் திசைகள் எல்லாம் இருண்டு போயின.

கு:—சக்கரப்படை யேந்தியுள்ள திருமாலைப் பரம்பொருளாகக் கொள்ளாதார் மனம் ஒளியின்றி அஞ்ஞானத்தால் இருண்டிருப்பது போல, சூரியன் மறைந்தமையால் எல்லாத் திசையும் இருண்டது என்பது உவமை அணி. வேதங்களாகவும், தரும சாத்திரங்களாக வும், வேள்வியாகவும், சத்தியமாகவும், அந்தணர் விரும்புதற்குரிய பெரும்பேருகவும், திருமாலே இருக்கின்ருன் என்றவாறு. சக்கரப் படை திருமாலுக்குரிய சிறப்புப்படை ஆதலின் அதனையே விதந்து, 'ஆழியங்கமலக்கையான்' என்று திருமாலுக்குப் பெயராக்கினர் ஏழையர் – அறிவிலாதார். (179)

விரைந்து கொல்லாக்கால் இந்திரசித்து விசும்பில்
எழுந்து வெல்வான் என வீடணன் சொல்லுதல்

8312. நாகமே யனைய நம்ப
நாழிகை யொன்று நான்கு
பாகமே கால மாகப்
படுத்தியேற் பட்டா னன்றேல்
வேகவா ளரக்கர் காலம்
விளைந்தது விசும்பின் வஞ்சன்
ஏகுமேல் வெல்வ னென்ப
திராவணற் கிளவல் சொன்ஞன்.

'நாகமே அனைய நம்ப!
நாழிகை ஒன்று நான்கு
பாகமே காலம் ஆகப்
படுத்தியேல், பட்டான்; அன்றேல்,
வேக வாள் அரக்கர் காலம்
விளைந்தது; விசும்பின் வஞ்சன்
ஏகுமேல், வெல்வன்' என்பது,
இராவணற்கு இளவல் சொன்ஞன்.

பொ:—'போரில் சீறுவதில் நாகம் போன்ற தலைவனே! கால் நாழிகைப் பொழுதிற்குள் இவனைக் கொல்வாயானல் இறப்பான்; இல்லையேல்,—போர்வேகமுடைய கொடிய அரக்கர்க்குரிய இராக் காலம் தோன்றிவிட்டது ஆதலின், வஞ்சனுகிய இந்திரசித்து விண் ணில் எழுந்து போவனுயின் அவன் வெல்வான்' என்பதை வீடணன் சொன்ஞன்.

கு:—நாகம் - பாம்பு. அது பகைவரை விரைந்து கடித்து அழிப்பதுபோல இலக்குவனும் பகைவரை விரைந்து கொல்லுதற்குரியவன் என்பதுதோன்ற அங்ஙனம் உவமை கூறினர். ஆதிசேடன் அவதாரம் இலக்குவன்—என்ற குறிப்பும் இதில் பெறவைத்தவாறு. இனி, நாகபாசத்தால் கட்டுண்ணும் நிலைமையும் நேரலாம் என்ற குறிப்பும் நினைவுறித்தியதாகக் கொள்ளலாம். கால் நாழிகைப்போது என்பான், 'நாழிகை ஒன்று நான்கு பாகமே காலமாக' என்ருன், ஒன்றை நான்கு பாகமாக்கி அதில் ஒரு பாகமே அவனைக் கொல்லும் காலமாகக் கொண்டு கொல்லவேண்டும் என்றவாறு. படுவான் என்ற எதிர்காலம் 'பட்டான்' என இறந்த காலமாக வந்தது கால வழுவமைதி. அரக்கர் காலம் என்றது இரவு நேரத்தை, நிசிசரர் ஆதலின், இரவு அவர்க்குரிய காலமாயிற்று. விசும்பில் ஏகுமேல் அவன் படாமையேயன்றி நம்மையே அவன் வென்றுவிடுவான் என்ற உண்மையை உணர்த்தியவாறு. இராவணன் மகனைக் கொல்லுமாறு சொல்லுதற்குரியன் அல்லன் வீடணன் என்பதுதோன்ற, அவனை 'இராவணற்கிளவல்' என்ற பெயரால் கூறினர். அத்தகைய உறவினனுயிருந்தும் அங்ஙனம் கூறியதால் வீடணனுக்கு இராமன் பால் உள்ள உண்மை அன்பு புலனுயிற்று என்க. (180)

## இலக்குவன் இந்திரசித்தின் தேரை அழித்தல்

8313. அத்தனை வீரர் மேலு
மாண்டகை யனுமன் மேலும்
எத்தனை கோடி வாளி
மழையென வெய்யா நின்ற
வித்தக வில்லி ஞனைக்
கொல்வது விரும்பி வீரன்
சித்திரத் தேரைத் தெய்வப்
பகழியாற் சிதைத்து வீழ்ந்தான்.

அத்தனை வீரர் மேலும்
ஆண்தகை அனுமன் மேலும்,
எத்தனை கோடி வாளி
மழை என எய்யா நின்ற
வித்தக வில்லினனைக்
கொல்வது விரும்பி, வீரன்
சித்திரத் தேரைத் தெய்வப்
பகழியால் சிதைத்து வீழ்த்தான்.

பொ :—(தன்னை நெருங்கிய) அத்தனை வீரர்மேலும், ஆண் தன்மையில் சிறந்த அனுமன்மேலும், எத்தனையோ கோடிக்கணக்கான அம்புகளை மழைபோல எய்துகொண்டிருக்கின்ற வியக்கத்தக்க வில்லின் திறம்படைத்த இந்திரசித்தைக் கொல்ல விருப்பி இலக்குவன், அவன் அழகுமிக்க தேரைத் தெய்வத்தன்மை வாய்ந்த அம்பினல் சிதைத்து விழ்த்தினன்.

கு :—வீரர் என்பவருள் அனுமனும் அடங்குவானயினும் சிறப்பு நோக்கி ஆண்டகை ஆனுமன் மேலும், எனப் பிரித்துக் கூறியவாறு. 'முனிவர்கள் வந்தார்கள் அகத்தியரும் வந்தார்' என்ருற்போல. வித்தகம் – அதிசயம். வீரன் என்றது இலக்குவனை. சித்திரம் – அழகு. விசித்திரம் என்பதன் முதற்குறை எனக்கொண்டு பொருள் கூறலும் ஆம். தெய்வப் பகழியால் சிதைத்து என்றமையால் அத்தேரைப் பொதுவகையான அம்பினல் சிதைக்க இயலாமை புலப்படும். தெய்வத்தின் அருளால் கிடைத்த பகழி, தெய்வப் பகழி எனப்பட்டது. இந்திரசித்தைக் கொல்ல விரும்பிய இலக்குவன், நேரே அவனைக் கொல்லாது அவன் தேரைச் சிதைத்து, அவனை ஊர்தியற்றவனுக்கிப் பின் கொல்ல எண்ணித் தேரைச் சிதைத்தான் என்க. (181)

## இந்திரசித்து விண்மிசை எழுதல்

8314. அழித்ததே ரழுந்தா முன்ன
மம்பொடு கிடந்து வெம்பி
உழைத்துயிர் விடுவ தல்லா
லுறுசெரு வென்ருே மென்று
பிழைத்திவர் போவ ரல்லர்
பாசத்தாற் பிணிப்பி னென்ரு
விழித்திமை யாத முன்னம்
வில்லொடும் விசும்பிற் சென்ருன்.

'அழித்ததேர் அழுந்தா முன்னம்,
அம்பொடு கிடந்து வெம்பி
உழைத்து உயிர் விடுவது அல்லால்
'உறுசெரு வென்ருேம்' என்று
பிழைத்து இவர் போவர் அல்லர்
பாசத்தால் பிணிப்பின்' என்ரு
விழித்து இமையாத முன்னம்
வில்லொடும் விசும்பில் சென்ருன்.

பொ :—(இந்திரசித்து)-(இலக்குவன்) அழித்த தேர் தரையில் விழ்ந்து அழுந்துதற்கு முன்னே நாகபாசத்தால் கட்டினுல் இவர்கள் அந்த அம்போடு கட்டுண்டு கிடந்து வெதும்பி வருந்தி உயிர்விடுவ தல்லது, 'பெரிய போரை வென்றுவிட்டோம்' என்று உயிர் பிழைத் துப் போகமாட்டார்கள்' என்று எண்ணி கண் விழித்து இமைப்ப தற்கு முன் தன் வில்லோடு ஆகாயத்தில் சென்ருன்.

கு :—தேர் அழுந்தாமுன்னம் பிணிப்பின் பிழைத்திவர் போவார் அல்லர் என்ரு, இமையாத முன்னம் விசும்பிற் சென்ருன் என இயை யும். இலக்குவனுல் அழிக்கப்பட்ட தேர் சிதைந்து இரத்த வெள் ளத்தில் அழுந்துவது இயல்பாகலின் 'அழுந்தா முன்னம்' என்ருன். தேரழுந்துதற்கு முன் பிணிப்பின் என்றது, விரைவை யுணர்த்தியது. அம்பு என்றது நாகாத்திரத்தை. அம்பொடு கட்டுண்டு கிடந்து என்க. உறுசெரு - பெரிய போர். நாகபாசத்தால் பிணிப்பின் இவ் விலக்குவன் முதலியோர் உயிர் விடுவது உறுதி என்பான், 'பிழைத் திவர் போவாரல்லர்' என்ருன். நாகபாசத்தால் பிணிக்காவிடின், உறுசெரு வென்ரேம் என்ற வெற்றியுள்ளத்தோடு இவர் போதற் குரியவர் என்பது நினைந்து, இந்திரசித்து, 'உறுசெருவென்ரே மென்று பிழைத்திவர் போவாரல்லர்' என்ருன். இமைப் பொழுதிற்கு முன்னமே விசும்பில் மறைந்தான் என விரைவு மிகுதியை உணர்த் தினர். (182)

### இந்திரசித்து விண்ணிடை விரைந்தமைகண்டு தேவர் அஞ்சுதல்

8315. பொன்குலா மேனி மைந்தன்
றன்னெடும் புகழ்தற் கொத்தான்
வன்கலா மியற்றி நின்ருன்
மற்ரெருரு மனத்த ஞகி
மின்குலாங் கழற்கால் வீரன்
விண்ணிடை விரைந்த தன்மை
என்கொலா மென்ன வஞ்சி
வானவ ரிரியல் போனுர்.

'பொன் குலாம் மேனி மைந்தன்
தன்னெடும் புகழ்தற்கு ஒத்தான்
வன்கலாம் இயற்றி நின்ருன்,
மற்ரெருரு மனத்தன் ஆகி,

மின் குலாம் கழற்கால் வீரன்
விண்ணிடை விரைந்த தன்மை
என் கொலாம் !' என்ன அஞ்சி
வானவர் இரியல் போனர்.

பொ :—'பொன் போல் விளங்கும் மேனியையுடைய இலக்குவனேடு ஒப்பப் புகழ்தற்குரியவனுய், வலிய போர் செய்துகொண்டிருந்தவனுகிய, மின்னெளி வீசும் கழல் கட்டிய காலையுடைய இந்திரசித்து, (அப்போரை விடுத்து) வேறுபட்ட மனமுடையவனுய் ஆகாயத்தில் விரைந்தெழுந்தமைக்குக் காரணம் என்னையோ ?' என்று தேவர்கள் அஞ்சி ஓடினர்.

கு :—போர் செய்வதில் இலக்குவனுக்கு நிகர் இந்திரசித்தே என்று கண்டோர் புகழுமாறு போர் செய்தவன் என்பார், 'பொன் குலாமேனி மைந்தன் தன்னெடும் புகழ்தற் கொத்தான் வன்கலாம் இயற்றிநின்ருன்' என்ருர். பொன்குலாமேனி மைந்தன் என்றது, பொன்னிறமுடைய இலக்குவனை. மைந்தன் தன்னெடும் கலாமியற்றி நின்ருன், புகழ்தற்கொத்தானுய்க் கலாம் இயற்றி நின்ருன் எனத் தனித்தனி இயையும். ஒத்தான் என்றது முற்றெச்சம். நின்ருன் என்பது வினையாலணையும் பெயர்; நின்ருனுகிய கழற்கால் வீரன் எனப் பின்வரும் பெயரோடு ஒட்டாய் நின்றது. வீரன் மற்றெரு மனத்தனுகி விண்ணிடை விரைந்த தன்மைக்குக் காரணம் என்கொலாம் ? என இயைத்து வேண்டுஞ்சொல் வருவித்து முடிக்க. வானவர் தலைவனையேவென்ற வீரன் விண்ணிடை விரைந்தமைக்குக் காரணம் புலனுகாமையால் வானவர் அஞ்சி ஓடுவாராயினர். 'விரைந்த தன்மையால் என்கொல் ஆம்' என விரித்துப் பிரித்துக் கூறலும் ஆம். இந்திரசித்து விண்ணிடை விரைந்தமையால் தமக்கு என்ன நேருமோ? என அஞ்சி வானவர் ஓடினர் என்றவாறு. இரியல் போதல் - அஞ்சியவர் எல்லாம் சேர்ந்து ஓடுதல். கலாம் - போர். (183)

இந்திரசித்து மேகமண்டலத்திற்கப்பால் நிற்றல்

8316. தாங்குவிற் கரத்தன் றூணி
தழுவிய புறத்தன் றன்னுள்
ஓங்கியுற் றெரியா நின்ற
வெகுளிய னுயிர்ப்பன் றீயன்

தீங்கிழைப் பவர்கட் கெல்லாஞ்
சீரியன் மாயச் செல்வன்
வீங்கிருட் பிழம்பி னும்பர்
மேகத்தின் மீத ஞனன்.

தாங்கு வில் கரத்தன் தூணி
தழுவிய புறத்தன் தன்உள்
ஓங்கி உற்று எரியா நின்ற
வெகுளியன் உயிர்ப்பன் தீயன்,
தீங்கு இழைப்பவர்கட்கு எல்லாம்
சீரியன், மாயச் செல்வன்,
வீங்கு இருட்பிழம்பின், உம்பர்
மேகத்தின் மீதின் ஆனன்.

பொ :—வில்லைத்தாங்கிய கரத்தையுடையவனும், அம்பருத்தூணியைக் கட்டியுள்ள முதுகையுடையவனும், தனக்குள் பொருந்தி ஓங்கி எரிகின்ற கோபக்கனலை யுடையவனும், பெருமூச்சையுடையவனும், கொடியவனும், தீமை செய்பவர்களுள் தலைசிறந்தவனும், மாயச் செயலையே செல்வமாகக் கொண்டவனும் ஆகிய இந்திரசித்து, பெருகிய இருட்டின் திரளில், வானத்தில் உள்ள மேகத்தின் மேல் உள்ளவன் ஆனன்.

கு :—கரத்தன், புறத்தன், வெகுளியன், உயிர்ப்பன், தீயன். சீரியன், செல்வன் என்பன, இந்திரசித்து என்ற ஒரு பொருள்மேல் வந்த பல பெயர்கள் ; பிரிவிலவாய் நின்று, 'மேகத்தின் மீதின் ஆனன்' என்ற ஒரு வினைகொண்டு முடிந்தன. வெகுளியை நெருப்பாகக் கூறும் மரபு பற்றி 'எரியா நின்ற வெகுளியான்' என்ருர். தீங்கிழைக்கும் கொடியவர்கட்கெல்லாம் தலையானவன் இந்திரசித்து என்பார், 'தீங்கிழைப்பவர்கட் கெல்லாம் சீரியன்' என்ருர். கல்விச் செல்வத்தைக் காட்டிலும் பொருட்செல்வத்தைக் காட்டிலும் மாயத்தையே பெருஞ்செல்வமாக மதிப்பவன் ஆதலின் மாயச் செல்வன் எனப்பட்டான். மேகமண்டலத்திற்கு மேல் சென்று நின்ருன் என்பார், 'மேகத்தின் மீதிஞனன்' என்ருர். (184)

இந்திரசித்து நுண்ணுடம்பெடுத்தல்

8317. தணிவறப் பண்டு செய்த
தவத்தினுந் தருமத் தானும்
பிணியறுப் பவரிற் பெற்ற
வரத்தினும் பிறப்பி னுனும்

மணிநிறத் தரக்கன் செய்த
மாயமந் திரத்தி ஞனும்
அணுவெனச் சிறிய தாங்கோ
ராக்கையு முடைய ஞனன்.

தணிவு அறப் பண்டு செய்த
தவத்தினும், தருமத்தானும்,
பிணி அறுப்பவரில் பெற்ற
வரத்தினும், பிறப்பிஞனும்,—
மணிநிறத்து அரக்கன்—செய்த
மாய மந்திரத்திஞனும்,
அணு எனச் சிறியது ஆங்குஓர்
ஆக்கையும் உடையன் ஆனன்.

பொ :—கருமணி போன்ற நிறத்தையுடைய இந்திரசித்து,—குறைவில்லாமல் முன்பு செய்த தவவலிமையாலும், முன்பிறப்பிற் செய்த தருமத்தாலும், பாசப்பிணிப்பை அறுக்கவல்ல பிரமன் முதலிய தேவர்கள்பால் பெற்ற வரத்தாலும், அரக்கனுகிய பிறப் புரிமையாலும், அப்பொழுது செய்த மாயத்திற்குரிய மந்திரத்தாலும், அணுவைப் போன்று சிறியதாகிய ஒரு நுண்ணுடம்பையும் உடைய ஞயினன்.

கு :—இருளின் செறிவாலும் மேகத்தின் மறைப்பாலும் பிறர் காண இயலாத நிறத்தினன் இந்திரசித்து என்பார், 'மணிநிறத் தரக்கன்' என்ருர். இருளும் மேகமும் மறைந்திருக்கும் தன் வடிவை, இலக்குவன் அங்கியங்கணை கொண்டு ஒளியுளதாக்கியும் பார்க்க வொண்ணுதபடி அணுவெனச் சிறிய ஆக்கையுடையனுக ஆனன் என்க. அணுப்போன்ற நுண்ணுடம்பைப் பெறுதல் அரிதாகலின் அது பெறுதற்குப் பண்டு செய்த தவ முதலிய பல காரணங்களைக் கூறியவாறு. பிணி என்றது, இங்கு உயிர்க்கு இயல்பாகவுள்ள மும் மலமாகிய கட்டினை. கடவுள் ஒருவரே முத்தொழில் செய்ய மூவடிவு எடுத்தமை நினைந்து 'பிணி யறுப்பவர்' எனப் பன்மையாற் கூறினர். அரக்கர் பிறப்பிற்கே வேண்டுருவம் கொள்ளல் இயல்பு ஆதலின் 'பிறப்பிஞனும்' என்ருர். தவமும், தருமமும், வரமும் பிறப்புமாகிய பழங்காரணங்களுக்கு மேலாக இப்பொழுது செய்த மாயமந்திரமும் அந்த நுண்ணுடம்பு எடுத்தற்குக் காரணமாயிற்று என்றவாறு நுண்ணுடம்பு தனக்கு வரவேண்டும் என அதற்குரிய மாயமந்தி ரத்தை இந்திரசித்து உச்சரித்தவுடன், முன் செய்த தவ முதலிய வற்றின் துணையால் அவ்வுடம்பு உடனே வரப்பெற்ருன் என்றவாறு.

அணு, கண்ணுக்குப் புலப்பட்டுத் தோன்ருத சிறுமையுடையது. 'இல் நுழை கதிரின் துன் அணு' (திருவாசகம் திருவண்டப் பகுதி) என அணுவின் தோற்றத்தை மணிவாசகர் புலப்படுத்தியிருத்தல் காணலாம். (185)

## இந்திரசித்து நாகபாசப் படையை எடுத்தல்

8318. வாங்கினன் மலரின் மேலான்
வானக மணிநீர்க் கங்கை
தாங்கின னுலகந் தாங்குஞ்
சக்கரத் தவனென் ருலும்
வீங்குவான் ருேளே வீக்கி
வீழ்த்தலான் மீள்கி லாத
ஓங்குவா ளரவி னமத்
தொருதனிப் படையை யுன்னி.

வாங்கினன்—மலரின் மேலான்,
வானக மணிநீர்க் கங்கை
தாங்கினன், உலகந் தாங்கும்
சக்கரத்தவன், என்ருலும்,
வீங்கு வான் தோளே வீக்கி
வீழ்த்து அலால் மீள்கிலாத
ஒங்கு வாள் அரவின் நாமத்து
ஒரு தனிப் படையை உன்னி.

பொ :—(இந்திரசித்து), தாமரை மலரில் தங்கியுள்ள பிரமனே என்ருலும், தெளிந்த நீரையுடைய வானகக் கங்கையைச் சடையில் தாங்கினவனுகிய உருத்திரனே என்ருலும், உலகத்தை ஆமையாக நின்றும் தாங்குகின்றவனுன, சக்கரப்படையையுடைய திருமாலே என்ருலும், அவர்தம் பருத்துயர்நத தோள்களைக் கட்டி வீழ்த்தி யல்லது மீளாததாகிய, உயர்ந்ததாகிய, கொடிய நாகத்தின் பெயர் கொண்ட ஒப்பற்றதோர் (நாகாத்திரத்தை) படையை, (மந்திரமொழி களோடு) நீடு நினைந்து எடுத்தான்.

கு :—உன்னி வாங்கினன் என முடியும். இது பூட்டுவிற் பொருள் கோள். மலரால் தாங்கப்படுதலும், கங்கை தாங்குதலும் உலகம் தாங்குதலும் கூறியது அம் மும்மூர்த்திகளின் ஆற்றலைப் புலப்படுத்த வேண்டி. அவ்வாற்றலுடையரேனும் இந்த நாகாத்திரத்திற்கு

எளியராவர் என்பது கூறி, அந் நாகாத்திரத்தின் பெருமை புலப்படுத்ியவாறு. மும்மூர்த்திகளையே வீக்கி வீழ்த்தவல்ல கணை, இலக்குவனையும் வானரரையும் வீக்கி வீழ்த்துதல் சொல்லவேண்டுமோ? என்றவாறு. அரவின் நாமத்து ஒரு தனிப்படை என்றது, நாகாத்திரத்தை, அக்கணைக்கு ஈடும் எடுப்பும் இன்மையான் 'ஒரு தனிப் படை' எனச் சிறப்பிக்கப் பெற்றது. உன்னுதல், இங்கு அப்படையின் அதி தெய்வத்தை மந்திரமொழியோடு நீடு நினைதலை உணர்த்தியது. வாங்குதல் - தூணியிலிருந்து எடுத்தல். (186)

### வானரர் ஆர்த்தலும் இலக்குவன் நகுதலும்

8319. ஆயின காலத் தார்த்தா
ரமர்த்தொழி லஞ்சி யப்பால்
போயின னென்ப துன்னி
வானர வீரர் போல்வார்
நாயகற் கிளைய கோவு
மன்னதே நினைந்து நக்கான்
மாயையைத் தெரிய வுன்னார்
போர்த்தொழின் மாற்றி நின்றார்.

ஆயின காலத்து ஆர்த்தார்,
'அமர்த்தொழில் அஞ்சி, அப்பால்
போயினன்' என்பது உன்னி,
வானர வீரர் போல்வார்;
நாயகற்கு இளைய கோவும்
அன்னதே நினைந்து, நக்கான்;
மாயையைத் தெரிய உன்னார்,
போர்த்தொழில் மாற்றி நின்றார்.

பொ:—அப்போது, 'இந்திரசித்து போர்க்கு அஞ்சி அப்பால் போய்விட்டான்' என்று நினைத்து வானர வீரர்கள் ஆரவாரித்தார்கள்; தலைவனாகிய இராமனுக்கு இளையவனாகிய இலக்குவனும் அவ்வாறே நினைந்து (அவனை எள்ளிச்) சிரித்தான்; இந்திரசித்தின் மாயையைத் தெளிந்துணராத இவர் அனைவரும் போர்த்தொழிலை விடுத்து நின்றார்கள்.

கு:—போல்வார் என்பது அசைநிலை. ஒப்பில் போலி என்பர். நாயகன் என்றது இராமனை. இராமன் முன்னம் அரக்கரது மாய வேடத்தை உண்மையென மயங்கிப் பொன்மானின் பின்சென்ற

போது, பொன்மான் என்பது அரக்கரது மாயம் என்று தெளிந்து கூறிய இலக்குவனும், இப்போது இந்திரசித்தின் மாயையைத் தெரியாது மற்றை வானரர்கள் மயங்கி எண்ணியது போலவே எண்ணிச் சிரித்தான் என்று பொருள்படுவதால் உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை யாதலோடு, உயர்வு சிறப்பு உம்மையாகவும் நின்றது என்க. உன்னுர் என்பது, வினையாலணையும் பெயர். போர்த்தொழில் மாற்றுதல் என்பது, போர்த் தொழிலுக்குரிய கருவிகளை வைத்து விட்டு இளைப்பாறி நிற்றல். (187)

### இலக்குவன் அனுமன் தோளில் நின்று இறங்கி இளைப்பாறுதல்

8320. அதுகணத் தனுமன் ருேளின்
றையனு மிழிந்து வெய்ய
கதுவலிச் சிலையை வென்றி
யங்கதன் கைய தாக்கி
முதுகுறச் சென்று நின்ற
கணையெலா முறையின் வாங்கி
விதுவிதுப் பாற்ற லுற்ருன்
விளைகின்ற துணர்ந்தி லாதான்.

அது கணத்து, அனுமன்
தோள்நின்று ஐயனும் இழிந்து, வெய்ய
கது வலிச் சிலையை வென்றி
அங்கதன் கையது ஆக்கி,
முதுகு உறச் சென்று நின்ற
கணை எலாம் முறையின் வாங்கி,
விது விதுப்பு ஆற்றலுற்ருன்,
விளைகின்றது உணர்ந்திலாதான்.

பொ :—இனி விளையப்போவதை உணர்ந்திலாதவனுகிய இலக்குவனும், அக்கணத்தில் அனுமனது தோளில் நின்றும் இறங்கித் தனது கொடிய வலிமை பொருந்திய வில்லினை, வெற்றியுடைய அங்கதன் கையில் கொடுத்துவிட்டு, முதுகுவரையில் சென்று நின்ற (இந்திரசித்து எய்த) அம்புகளை எல்லாம் முறையாக (ஒவ்வொன்ருக) வாங்கிவிட்டு(ப் போரினுக்குரிய) விறுவிறுப்பை ஆற்றத் தொடங்கினுன்.

கு :—விளைகின்ற துணர்ந்திலாதானுய் ஐயன் என இரு பெயரொட்டாக்குக. வலிகதுவுசிலை என மாற்றி இயைக்க. கதுவுதல் –

பொருந்துதல். வெய்யதும் வலியதும் ஆகிய சிலை என்க. இலக்குவன் தன் வில்லினைக் கொடுத்தற்கேற்ற தகுதி அங்கதனுக்கு உண்டு என்பது புலப்பட 'வென்றி அங்கதன்' எனச் சிறப்பித்தார். கைய தாக்குதல், கையில் கொடுத்தல். மார்பில் தைத்த அம்புகள் முதுகு வரையில் ஆழ்ந்து பதிந்திருந்தன என்பார், 'முதுகுறச் சென்று நின்ற கணையெலாம்' என்றார். விதுவிதுப்பு, இரட்டைக்கிளவி; போர்க்குரிய விறுவிறுப்பு என்க. அதை ஆற்றுதலாவது, அமைதியாக இருத்தல். இனி, விதுவிதுப்பு, அம்புபட்ட இடத்தில் தோன்றிய நோயைக் குறிக்கும் குறிப்புச் சொல்லாகவும் கொள்ளலாம். இனி விளையப்போவதைத் தெரிந்திருந்தால் இங்ஙனம் இலக்குவன் அயர்ந்திருப்பானல்லன் என்பார், உணர்ந்திலாதான் ஆற்றலுற்றான் என்றார். (188)

இந்திரசித்து நாகக்கணையை விடுதலும் அது இலக்குவனைக் கட்டுதலும்

8321. விட்டன னரக்கன் வெய்ய
படையினை விடுத்த லோடும்
எட்டினோ டிரண்டு திக்கு
மிருடிரிந் திரிய வோடிக்
கட்டின தென்ப மன்னோ
காகுத்தற் கிளைய காளை
வட்டவான் வயிரத் திண்டோண்
மலைகளை யுளைய வாங்கி.

விட்டனன் அரக்கன் வெய்ய
படையினை; விடுத்த லோடும்,
எட்டினோடு இரண்டு திக்கும்
இருள் திரிந்து இரிய ஓடி,
கட்டினது என்ப மன்னோ,
காகுத்தற்கு இளைய காளை
வட்ட வான் வயிரத் திண் தோள்
மலைகளை உளைய வாங்கி.

பொ :—(இலக்குவன் இளைப்பாறி யிருந்த நிலையில்) இந்திரசித்து, கொடிய நாகக்கணையை விட்டான்; விடுதலும், அக்கணை, பத்துத் திசைகளிலும் பரவியிருந்த இருள் திரும்பியோடுமாறு ஓடிச் சென்று, இராமனுக்கு இளையவனாகிய காளைப் பருவமுடைய இலக்கு

வனது திரண்ட உயர்ந்த வயிரம் போன்று உறுதியான திண்ணிய தோள்களாகிய மலைகளை, வருந்துமாறு இழுத்துக் கட்டியது.

கு :—என்ப, மன், ஓ என்பன அசை நிலைகள். இனி நம்புவது அரிது என்ற கருத்தைப் புலப்படுத்த 'என்பமன்னோ' என்றார் என லும் ஆம். நாகக்கணையின் பேரொளியால் பத்துத் திசைகளிலும் பரவியிருந்த இருள் நீங்கியது என்பார் 'இருள்திரிந்திரிய' என்றார். இரண்டு என்றது, மேலும் கீழுமாகிய இடங்களை. விடுத்தலோடும் அக்கணை ஓடித் தோள் மலைகளை உளையவாங்கிக் கட்டினது எனச் சுட்டுப் பெயர் வருவித்து முடிக்க. ககுத்தன் மரபில் வந்தவன் ஆதலின், இராமன் காகுத்தன் எனப்பட்டான். நாகக்கணையால் கட்டுண்ணற்குரியவல்ல என்பார்; 'இளையகாளை விட்ட வான் வயிரத்திண்தோள் மலைகளை' என இலக்குவன் தோள்களை அடைபல கொடுத்துச் சிறப்பித்தார். திண்தோள் மலை என்றது உருவகம். உளைய - வருந்த வாங்கி - இழுத்து; 'தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது' (அகநா - 36-6) என்புழியும் வாங்குதல் இப் பொருளதாதல் காண்க. (189)

## இலக்குவன் நாகக்கணையால் கட்டுண்டு களத்தையும் விண்ணையும் நோக்குதல்

8322. இறுகுறப் பிணித்த லோடும்
யாவையு மெதிர்ந்த போதும்
மறுகுறக் கடவா னல்லன்
மாயமென் றுணர்வா னல்லன்
உறுகுறைத் துன்ப மில்லா
ளெடுங்கினன் செய்வ தோரான்
அறுகுறைக் களத்தை நோக்கி
யந்தர மதனை நோக்கும்.

இறுகுறப் பிணித்த லோடும்,
யாவையும் எதிர்ந்த போதும்
மறுகுறக் கடவான் அல்லன்;
மாயம் என்று உணர்வான் அல்லன்;
உறுகுறைத் துன்பம் இல்லான்;
ஒடுங்கினன்; செய்வது ஓரான்,
அறுகுறைக் களத்தை நோக்கி,
அந்தரம் அதனை நோக்கும்.

பொ :—உலகப் பொருள்கள் எல்லாம் சேர்ந்து தன்னை எதிர்த்து நின்ற போதும் கலங்கத்தக்கவன் அல்லாதவனும் எதற்கும் துன்ப முறுகின்ற குறையே இல்லாதவனும் ஆகிய இலக்குவன், நாகக் கணைத் தன்னை இறுகக் கட்டுதலும் (இது இந்திரசித்து செய்த) மாயம் என்று உணராதவனாய், இன்னது செய்வது என்று அறியா மல் ஒடுங்கினவனாய், அறுபட்ட குறையுடலங்களை யுடைய போர்க் களத்தை நோக்கிப் பின் ஆகாயத்தை நோக்குவான் ஆனான்.

கு :—உறுகுறைத் துன்பமில்லான் என்பதை துன்பமுறு குறை யில்லான் என மாற்றிப் பொருள் கொள்க. துன்பமுற்று அறியாத வன் என்பார், துன்பமுறு குறையில்லான் என்றார். மறுகுறக்கட வானல்லனும் உறுகுறைத் துன்பமில்லானுமாகிய இலக்குவன், இறு குறப் பிணித்தலோடும் மாயம் என்று உணர்வானல்லனாய், செய்வ தோராளாய் ஒடுங்கிக் களத்தை நோக்கிப் பின் அந்தரமதனை நோக் கும் என இயைத்து முடிக்க. மாயமென்றுணராமையால் போர்க் களத்திலிருந்து யாரேனும் இதனை எய்தனரோ ? என் முன் போர்க் களத்தை நோக்கி, அங்கு யாரும் இன்மையால், பின் விண்ணிலி ருந்து எய்திருக்கலாம் என அந்தரத்தை நோக்குவானானான் என்க. உணர்வானல்லன், ஓரான், ஒடுங்கினன் என்பன முற்றெச்சங்க ளாய் நோக்கி என்ற வினையெச்ச வினையோடு முடிந்தன. (190)

## இந்திரசித்தைப் பிடிக்க எழும் அனுமனையும் அக்கணை கட்டுதல்

**8323.** காலுடைச் சிறுவன் மாயக்
கள்வனைக் கணத்தின் காலை
மேல்விசைத் தெழுந்து நாடிப்
பிடிப்பெனெ றுறுக்கும் வேலை
ஏல்புடைப் பாச மேனு
னிராவணன் புயத்தை வாலி
வால்பிணித் தென்னச் சுற்றிப்
பிணித்தது வயிரத் தோளை.

காலுடைச் சிறுவன், 'மாயக்
கள்வனைக் கணத்தின் காலை
மேல் விசைத்து எழுந்து நாடிப்
பிடிப்பென்' என்று உறுக்கும் வேலை,

ஏல்புடைப் பாசம், மேல் நாள்
இராவணன் புயத்தை வாலி
வால் பிணித் தென்ன, சுற்றிப்
பிணித்தது, வயிரத் தோளை.

பொ :—வாயு தேவன் மகனாகிய அனுமன். '(மறைந்து நின்று அம்பெய்த) மாயத்தில் வல்ல திருடனை ஒருகணப் பொழுதில் மேலே விசையுடன்எழுந்து தேடிப் பிடிப்பேன்' என்று வெகுண்டெழும் அமையத்தில், எதிர்க்கும் தன்மையுள்ள நாகபாசம், முற்காலத்து இராவணன் தோள்களை வாலியின் வால் கட்டியதுபோல, (அனுமனது) வயிரமலை போன்ற தோள்களைச் சுற்றிக் கட்டியது.

கு :—காலுடைய சிறுவன் என்பது தொகுத்தல் விகாரம் பெற்றுக் காலுடைச் சிறுவன் என வந்தது. கால் - காற்றுக் கடவுள். சிறுவன் என்றது, மகன் என்னும் பொருளில் வழங்கப்பட்டது. எதிர்நின்று பொராது விண்ணில் மறைந்து நின்று நாகபாசக் கணையை எய்தான் ஆகலின், இந்திரசித்து, 'மாயக்கள்வன்' என இகழ்ந்து கூறப்பட்டான். விசைத்தெழுதல் – விரைந்தெழுதல். விசை - விரைவு. உறுத்தல் – கோபித்தல். ஏல்பு – ஏலுதல்;— எதிர்த்தல். பகைவரை எதிர்க்கும் தன்மையுள்ள, பாசம் என்க. பாசம் என்றது நாகக்கணையை; அது பாம்புருவுடையதாய்ப் பாசம் போல் பிணிக்கும் இயல்பு நினைந்து அப்பெயரால் கூறியவாறு. இந்திரசித்தின் பாசம் அனுமன் தோள்களைக் கட்டிய தோற்றம், முற்காலத்து இராவணன் தோள்களை வாலியின் வால் கட்டியது போலிருந்தது என்று உவமை கூறி, இந்திரசித்து தவத்தால் பெற்ற நாகபாசம் வாலியின் பின்னுறுப்பாகிய வாலினும் எளியதாதலைப் புலப்படுத்தியவாறு.

வாலி, தன் வாலால் இராவணனைக் கட்டினான் என்பதை: "இந்திரன் செம்மல் பண்டோ ரிராவண னென்கின்றானைச் சுந்தரத் தோள்களோடும் வாலிடைத் தூங்கச் சுற்றிச் சிந்துரக்கிரிகடாவித் திரிந்தனன்" (அங்கதன் தூது – 24) என முன்கூறியுள்ளமையால் அறியலாம். (191)

நாகக்கணை மற்றவர்களையும் கட்டுதல்

8324. மற்றையோர் தமையு மெல்லாம்
வாளெயிற் றரவம் வந்து
சுற்றின வயிரத் தூணின்
மலையினிற் பெரிய தோள்கள்

இற்றன விற்ற வென்ன
விறுக்கின விளகா வுள்ளம்
தெற்றென வுடைய வீர
ரிருந்தனர் செய்வ தோரார்.

மற்றையோர் தமையும் எல்லாம்
வாள் எயிற்று அரவம் வந்து,
சுற்றின; வயிரத் தூணின்,
மலையினின், பெரிய தோள்கள்,
'இற்றன, இற்ற என்ன,
இறுக்கின; இளகா உள்ளம்
தெற்றென உடைய வீரர்
இருந்தனர், செய்வது ஓரார்.

பொ:—(நாகக்கணையாகிய) வாள்போன்ற பற்களையுடைய பாம்புகள் வந்து, மற்றவர்கள் எல்லோரையும் சுற்றிக்கொண்டனவாய் வயிரத்தூண்களைக் காட்டிலும், மலையைக் காட்டிலும் பெரியவாய தோள்கள் "முறிந்தன முறிந்தன" என்று அவர்கள் வருந்துமாறு இறுக்கினவாக, தளராத மனத்தைத் தெளிவாகக் கொண்டுள்ள வானர வீரர்கள், செய்வது இன்னது என்று அறியாமல் (கட்டுண்டு) இருந்தனர்.

கு:—அரவம் வந்து மற்றையோர் தமையும் எல்லாம் சுற்றினவாய் இறுக்கின; வீரர் செய்வது ஓராராய் இருந்தனர் என இயையும். சுற்றின, ஓரார் என்பன முற்றெச்சங்கள். முறிதற்குரியன அல்ல என்பார், 'வயிரத்தூணின் மலையினிற் பெரிய தோள்கள்' எனச் சிறப்பித்தார். இளகுதல் - தளர்ச்சியடைதல். உள்ளம் தளராத வீரர்கள் தம் உடம்புகள் கட்டுண்டமையால் செய்வதறியாது கட்டுண்டு கிடந்தனர் என்றவாறு. இற்றன இற்றன என்ற அடுக்கு அச்சம்பற்றி வந்தது. (192)

## கட்டுண்ட வானரர் செயல் 8325—8329

8325. மலையென வெழுவர் வீழ்வர்
மண்ணிடைப் புரள்வர் வானில்
தலைகளை யெடுத்து நோக்கித்
தழலெழ விழிப்பர் தாவி

அலைகிளர் வாலாற் பாரி
  னடிப்பர்வாய் மடிப்ப ராண்மைச்
சிலையவற் கிளைய கோவை
  நோக்குவ ருள்ளந் தீவர்.

மலை என எழுவர்; வீழ்வர்;
  மண்ணிடைப் புரள்வர்; வானில்
தலைகளை எடுத்து நோக்கி,
  தழல்எழ விழிப்பர்; தாவி
அலைகிளர் வாலால் பாரின் அடிப்பர்;
  வாய் மடிப்பர்; ஆண்மைச்
சிலையவற்கு இளைய கோவை
  நோக்குவர்; உள்ளம் தீவர்.

பொ:—(நாகக் கணையால் கட்டுண்டு வருந்தும் வானரர்கள்) மலை எழுவதுபோல எழுவார்கள்; (எழ முடியாமையால்) தரையில் வீழ்ந்து புரள்வார்கள்; (வீழ்ந்தபடியே) தலைகளைத் தூக்கி விண்ணில் நோக்கி நெருப்புப் பொறி பிறக்க விழித்துப் பார்ப்பார்கள்; மேலே பாய்ந்து அலைகின்ற எழுச்சியுடைய வாலினால் தரையில் அடிப் பார்கள்; வாயை மடிப்பார்கள்; ஆண்மைமிக்க வில்லாளனாகிய இராமனுக்கு இளைய கோவாகிய இலக்குவனை நோக்குவார்கள்; (அவனும் கட்டுண்டு வருந்தும் நிலையை நினைந்து) மனம் வெதும்பு வார்கள்.

கு:—வானரர் மலைபோன்ற பெருந்தோற்ற முடையவராதலின் அவர் எழுவது மலை எழுவதுபோன்று இருந்தது என்பார் 'மலை என எழுவர்' என்றார். நாகக்கணை இறுக்குவதால் எழமுடியாமல் மண் ணில் வீழ்ந்து புரள்கின்றார் என்க. தலைகளை எடுத்து வானில் நோக் கித் தழலெழ விழிப்பர் என இயையும். விண்ணிடைச் சென்ற இந்திரசித்து எய்த கணையே இவ்வாறு செய்தது என்பதை உணர்ந்தமையால் தலைகளைத் தூக்கி வானில் நோக்கி, அவன் அங்கு உள்ளானோ என்று சினத்தினால் நெருப்புப் பொறி பிறக்க விழித்துப் பார்ப்பார்கள் என்க. வானரங்களின் வால்கள் மேல் நோக்கி எழுந்து அசைந்துகொண்டு விளங்கும் இயல்பின வாகலின் 'தாவி அலைகிளர் வாலால்' என்றார். விண்ணில் இந்திரசித்து காணப்படாத வெறுப்பினால், வாலினால் தரையில் அடிப்பாராயினர் என்க. விண்ணில் மறைந்து அம்பெய்த அவன் வஞ்சனையை நினைந் தெழுந்த வெஞ்சினத்தால் வாய்மடித்துக் கடித்தனர் என்றவாறு. ஆண்மைச் சிலையவன் என்றது இராமனை. தம்மைக் கட்டிய

கணையை அழித்தற்குரியவன் இலக்குவனே என நினைந்து அவனை நோக்கினார்களாக, அவனும் தம்மைப்போல் கட்டுண்டு கிடத்தலைக் கண்டவர்களாய், மனம் வெதும்பினார்கள் என்றவாறு. (193)

8326. வீடணன் முகத்தை நோக்கி
வினையுண்டே யிதனுக் கென்பர்
மூடின கங்குன் மாலை
யிருளினை முனிவர் மொய்ம்பில்
ஈடுறத் தக்க போலா
நம்மெதி ரென்னு வேந்தல்
ஆடகத் தோளை நோக்கி
நகைசெய்வ ரழுவ ரஞ்சார்.

வீடணன் முகத்தை நோக்கி,
'வினை உண்டே இதனுக்கு? என்பர்
மூடின கங்குல் மாலை
இருளினை முனிவர்; 'மொய்ம்பில்
ஈடுறத் தக்க போலாம்
நம் எதிர்' என்னு ஏந்தல்
ஆடகத் தோளை நோக்கி,
நகை செய்வர்; அழுவர்; அஞ்சார்.

பொ :—அஞ்சாத நெஞ்சமுடைய வானரர்கள்,—வீடணனுடைய முகத்தைப் பார்த்து.—'இந்த நாகக்கணைக்குப் பரிகாரமான செயல் ஏதேனும் உண்டோ ?' என்று வினவுவார்கள் ; (பின்பு) எல்லாவற்றையும் மறைத்துக் கொண்டுள்ள, மாலையில் வந்த, இரா இருட்டினை வெறுப்பர் ; 'நம் கண் எதிர் இவை வலிமை குழையத் தக்கனவோ?' என்று இலக்குவனது பொன்போன்ற தோளைப் பார்த்துச் சிரிப்பார்கள். பின்பு அழுவார்கள்.

கு :—வீடணனை நோக்கி வானரவீரர்கள் வினவியதற்கு அவன் யாதும் கூறாது வருந்துவது கண்டு, இந்த இருள் இந்திரசித்தினை மறைத்துக் கொள்ளாதிருந்தால் அவனை நாமே கண்டு அழித்திருக்கலாமே ; இந்த இருளும் அவனுக்குத் துணையாய் நின்றதே ! என அவ்விருளை வெறுப்பாராயினர். ஈடு – குழைவு ; மெலிவு. இலக்குவன் தோள்கள் யார்க்கும் வலிமை குறைந்து குழையாதவை என்றவாறு. வினை என்றது பரிகாரமாகிய வினையை. மாலைக் கங்குல் இருள் என்க. நகை இகழ்ச்சிபற்றி வந்தது. குழையாத இலக்கு

வன் தேவர்களைக் குழையச் செய்த விதியை நினைந்து எள்ளிச் சிரித்தவாறு. (194)

8327. ஆரிது தீர்க்க வல்லா
ரஞ்சனை பயந்த வள்ளல்
மாருதி பிழைத்தான் கொல்லோ
வென்றனர் மறுகி நோக்கி
வீரனைக் கண்டு பட்ட
திதுகொலா மென்று விம்மி
வார்கழற் றம்பி தன்மை
காணுமோ வள்ள லென்பார்.

ஆர், இது தீர்க்க வல்லார்?
அஞ்சனை பயந்த வள்ளல்,
மாருதி, பிழைத்தான் கொல்லோ?
என்றனர், மறுகி நோக்கி,
வீரனைக் கண்டு, 'பட்டது
இது கொலாம்!' என்று விம்மி,
வார்கழல் தம்பி தன்மை
காணுமோ, வள்ளல்?' என்பார்.

பொ :—(மேலும் வானரர்கள்) இந்த இடரைத் தீர்க்க வல்லவர்கள் யார்? (என்று தமக்குள் வினவிக்கொண்டு) அஞ்சனை பெற்ற வள்ளல்தன்மையுடைய அனுமன் இந்தக் கணையால் கட்டுண்ணுமல் பிழைத்தானே? என்று கூறினவர்களாய்க் கலங்கிச் சுற்றிலும் பார்த்து, (கட்டுண்டு கிடக்கும்) இலக்குவனைக் கண்டு, இந்தத் துன்பமா நேர்ந்தது? என்று புலம்பி, வள்ளலாகிய இராமன் நீண்ட வீரக்கழலை அணிந்த தம்பியின் தன்மையைக் கண்கொண்டு காண்பானே? என்று ஏங்குவாராயினர்.

கு :—ஆரிது தீர்க்கவல்லார் என்று வினவை எழுப்பியவர்கள் அனுமனே தீர்க்கவல்லான் என்ற முடிவினுல் அவனை நினைந்தவர்களாய், அவன் நிலை யாதாயிற்றே? என்ற எண்ணத்தால் 'மாருதி பிழைத்தான் கொல்லோ' என்ற ஐயத்தோடு சுற்றிப் பார்க்கும்போது, இலக்குவன் கட்டுண்டு கிடக்கும் நிலைமையைக் கண்டவர்களாய், இதுவா நேர்ந்தது? என்று புலம்பினுர்கள் என்க. இலக்குவன் கட்டுண்ட தன்மையைத் தாமே கண்கொண்டு காணத் தரியாது வருந்தும்போது, அருள் உள்ளம் படைத்த இராமன் தன் தம்பியின்

நிலையைக் கண்டு தரிக்கவல்லனே ? என்பார், 'தம்பி தன்மை காணுமோ வள்ளல்' என்ருர் என்க. இந்திரசித்தினை இலக்குவன் கொல்வான் என்று எதிர்பார்த்ததற்கு மாருக நிகழ்ந்துவிட்டதே என்பார், 'பட்டதிதுகொலாம்' என்று விம்முவாராயினர். தம் துன்பம் நோக்காது பிறரைக் காக்கவல்லவர் ஆதலின் அனுமனும் இராமனும் வள்ளல் என்று சொல்லப்பெற்றனர். 'தம்பி தன்மை காணுமோ வள்ளல்' என்பதற்கு, தம்பிக்கு நேர்ந்த துன்பத்தை இராமன் அறிவானே ? அறியானே என்று ஐயுற்றுக் கூறியதாகவும் கொள்ளலாம். (195)

8328. என்சென்ற தன்மை சொல்லி
னெறுழ்வலி யரக்க னெய்தான்
மின்சென்ற தன்ன வானத்
துருமினம் வீழ்வ வென்னப்
பொன்சென்ற வடிம்பின் வாளி
புகையொடு பொறியுஞ் சிந்தி
முன்சென்ற முதுகிற் பாயப்
பின்சென்ற மார்ப முற்ற.

என், சென்ற தன்மை சொல்லின் ?
எறுழ்வலி அரக்கன் எய்தான்,
மின் சென்றது அன்ன ; வானத்து
உரும் இனம் வீழ்வ என்ன,
பொன் சென்ற வடிம்பின் வாளி,
புகையொடு பொறியும் சிந்தி,
முன்சென்ற முதுகில் பாய,
பின் சென்ற மார்பம் உற்ற.

பொ :—அங்கு நிகழ்ந்த தன்மையைச் சொல்லின் யாது பயன் ? (ஆயினும் சொல்லுவேன்) மிக்க வலிமையை யுடைய இந்திரசித்து எய்தாஞக,—பொன்ஞல் இயன்ற முனையினையுடைய அந்த அம்புகள், மின்னல் சென்ருற் போன்றனவாய் விரைந்து சென்று, மேகத்திலிருந்து இடியின் கூட்டம் வீழ்வனபோலப் புகையோடு நெருப்புப் பொறிகளைச் சிந்திக்கொண்டு முன்னே சென்றவை முதுகில் ஊடுருவுமாறு பின்னே சென்றவை அவர்தம் மார்பில் தைத்தன.

கு :—அங்கு அப்போது நிகழ்ந்தவற்றைச் சொல்லுதல் பெருந் துன்பத்திற்குக் காரணமாக இருத்தலின் 'என்சென்ற தன்மை

சொல்லின்' என்றார். ஆயினும் சொல்லுவேன் என்பது எச்சமாக வருவித்துக் கொள்க. பொன்னாலியன்ற முகப்பினையுடைய அம்புகள் விரைந்து செல்லும் தோற்றம் மின்னல் செல்வதுபோலத் தோன்றுதலின் 'மின்சென்ற தன்ன...வாளி' என்றார். அவ்வம்புகள் வானரவீரர் உடம்புகளில் வீழும்போது இடி வீழ்வதுபோல வீழ்ந்து துன்புறுத்தின என்பார், 'வானத்துருமினம் வீழ்வவென்ன வாளி... முதுகிற்பாய' என்றார். ஒவ்வொரு வீரர் உடம்பிலும் முன்பு தைத்த அம்புகள் முதுகில் ஊடுருவுமாறு செய்துவிட்டுப் பின்பு சென்ற அம்புகள் மார்பில் தங்கின என்றவாறு. (196)

8329. மலைத்தலை கால மாரி
மறித்தெறி வாடை மோதத்
தலைத்தலை மயங்கி வீழுந்
தன்மையிற் றலைகள் சிந்தும்
கொலைத்தலை வாளி பாயக்
குன்றன குவவுத் தோளார்
நிலைத்திலைக் குலைந்து சாய்ந்தார்
நிமிர்ந்தது குருதி நீத்தம்.

மலைத்தலை கால மாரி,
மறித்து எறி வாடை மோத,
தலைத்தலை மயங்கி வீழும்
தன்மையின், தலைகள் சிந்தும்,
கொலைத்தலை வாளி பாயக்
குன்று அன குவவுத் தோளார்
நிலைத்தலைக் குலைந்து சார்ந்தார்;
நிமிர்ந்தது, குருதி நீத்தம்.

பொ :—கூதிர்காலத்து மாரியோடு மடங்கி வீசுகின்ற வாடைக் காற்று மோதுதலால், மலையின் சிகரங்கள் இடங்கள் இடங்கள் தோறும் கலந்து வீழ்கின்ற தன்மைபோல், (இந்திரசித்து எய்த) தலைகளைச் சிந்தும் கொலைத் தொழிலில் தலைமைபெற்ற அம்புகள் பாய்தலால், மலைபோன்று திரண்டுள்ள தோள்களையுடைய வானரவீரர், நிலை பெறாதவராய்த் தளர்ந்து தரையில் சாய்ந்தார்கள்; இரத்த வெள்ளம் பெருகியது.

கு :—காலமாரி என்றது கூதிர்காலத்து மழையை. ''காலநீளிது காரும் மாரியும் வந்தது' (கார்காலப்-65) எனக் கூதிர்கால மழையை

மாரி எனக் குறிப்பிட்டிருத்தல் காணலாம். மலைத்தலை என்றது, மலைச் சிகரங்களை. வாடை மோத, மலைத்தலை மயங்கி வீழும் தன்மை போல் வாளிபாயக் குன்றன குவவுத் தோளார்...சாய்ந்தார் என இயையும். மழையால் மலைச்சிகரங்கள் தகர்தல் உண்டு என்பதை,—“தள்ளருந் துளிபடத் தகர்ந்து சாய்கிரி, புள்ளி வெங்கட கரி புரள்வ போன்றவே” (கார்காலப் – 17) என முன் கூறியுள்ளதால் அறியலாம். வாடை போன்றது வாளி; மலைத்தலை வீழ்தல் போல வானரர் சாய்ந்தார் என உவமையை விரித்துக் கொள்க.
(197)

அனுமன் இலக்குவனுக்கு உற்றதுகண்டு நடுங்குதல்

8330. ஆயிர கோடி மேலு
மம்புத னுகத் தூடு
போயின போது மொன்றுந்
துடித்திலன் பொடித்து மானத்
தீயெரி சிதறுஞ் செங்க
ணஞ்சனை சிங்கந் தெய்வ
நாயகன் றம்பிக் குற்ற
துயர்சுட நடுங்கு கின்றான்.

ஆயிர கோடி மேலும்
அம்பு தன் ஆகத் தூடு
போயின போதும் ஒன்றும்
துடித்திலன்; பொறுத்து, மானத்
தீ எரி சிதறும் செங்கண்
அஞ்சனை சிங்கம், தெய்வ
நாயகன் தம்பிக்கு உற்ற
துயர் சுட நடுங்குகின்றான்.

பொ :—மானத்தால் எரிகின்ற நெருப்புத் தோன்றிச் சிதறுகின்ற சிவந்த கண்களையுடையவனாகிய – அஞ்சனைக்குப் பிறந்த சிங்கம்போன்ற அனுமன், ஆயிரகோடிக்கு மேலாக அம்புகள் தன் மார்பகத்தில் ஊடுருவிச் சென்றபோதும் துடித்திலன்; (ஆனால்) தெய்வநாயகனாகிய இராமனுக்குத் தம்பியாகிய இலக்குவனுக்கு நேர்ந்த துயரம் தன் மனத்தைச் சுடுதலால் நடுங்குவானானான்.

கு :—இந்திரசித்தின் அம்புகளுக்கு நடுங்காத அனுமன், இலக்குவன் துயர்கண்டு நடுங்கினான் என்றது, தன்துயர் நோக்காது தலை

வன் துயர் நோக்கி வருந்தும் அனுமனது தகைமை புலப்படுத்திய வாறு. இந்திரசித்தின் ஆயிரகோடி அம்புகளும் அனுமனின் புற வுடலைச் சுட்டதேயன்றி அகத்தைச் சுட்டில; ஆனல், இலக்குவன் உற்ற துயர் அனுமனது அகத்தையே சுட்டது ஆதலின், அவ்வம்பு கட்கு நடுங்காத அனுமன் இலக்குவற்குற்ற துயர் சுட நடுங்குவா ஞனன் என்றவாறு. பொடித்தல் – தோன்றுதல். மானத்தால் எரி தீ பொடித்துச் சிதறும் செங்கண் சிங்கம் என்க. அஞ்சனை பெற்ற சிங்கம் போன்ற வீரமுடையவன் ஆதலின், அனுமனை, 'அஞ்சனை சிங்கம்' என்ருர். சிங்கம், உவமையாகு பெயராய் அனுமனை உணர்த்தியது. (198)

அங்கதன் நிலை

8331. வேறுள வீர ரெல்லாம்
வீழ்ந்தன ருருமின் வெய்ய
நூறுமா யிரமும் வாளி
யுடலிடை நுழையச் சோரி
ஆறுபோ லொழுக வண்ண
லங்கத னனந்த வாளி
ஏறின மெய்ய னேனு
மிருந்தன னிடைந்தி லாதான்.

வேறு உள வீரர் எல்லாம்
வீழ்ந்தனர், உருமின் வெய்ய
நூறும் ஆயிரமும் வாளி
உடலிடை நுழைய, சோரி
ஆறுபோல் ஒழுக, அண்ணல்
அங்கதன் அனந்த வாளி
ஏறிய மெய்யனேனும்,
இருந்தனன் இடைந்தி லாதான்.

பொ :—மற்றும் உள்ள வானரவீரர் யாவரும், இடியைப்போன்ற கொடிய அம்புகள், நூறும் ஆயிரமுமாக வந்து தம் உடம்பிடைத் தைத்தலாலும், இரத்தம் ஆறுபோல் ஒழுகுதலாலும், (தம் வயம் இழந்து) வீழ்ந்தனர்; பெருமையுடையவனுகிய அங்கதன், அளவி லாத அம்புகள் தைத்த உடம்பை உடையனேனும் சோர்வடையாத வனுக இருந்தான்.

கு :—மற்ற வீரர்கள் வீழ்தற்குக் காரணமான அம்புகள் தைத்த தலும் இரத்தம் பெருகுதலும் அங்கதன் வீழ்தற்குக் காரணமாக அமையவில்லை என அவன் வலிமையைப் புலப்படுத்தியவாறு. வீர ரெல்லாம், நுழைய, ஒழுக, வீழ்ந்தனர் என இயையும். வாலியைப் போலப் போர்வலியில் பெருமையுடையவன் ஆதலின்; அண்ணலங் கதன் எனச் சிறப்பிக்கப் பெற்றான். இடைதல் - சோர்தல். இடைந் திலாதானாய் இருந்தனன் என முற்றெச்சமாக்கி முடிக்க. சோர்தற் குரிய காரண முள்வழியும் சோராமல் இருந்தான் என்றவாறு. (199)

## சுக்கிரீவன் நிலை

8332. கதிரவன் காதன் மைந்தன்
கழலிளம் பசுங்கா யன்ன
எதிரெதிர் பகழி தைத்த
யாக்கைய னெரியுங் கண்ணன்
வெதிர்நெடுங் கான மென்ன
வேகின்ற மனத்தன் மெய்யன்
உதிரவெங் கடலுட் டாதை
யுதிக்கின்றான் றனையு மொத்தான்.

கதிரவன் காதல் மைந்தன்,
கழல் இளம் பசுங்காய் அன்ன,
எதிர் எதிர் பகழி தைத்த,
யாக்கையன், எரியுங் கண்ணன்,
வெதிர் நெடுங் கானம் என்ன
வேகின்ற மனத்தன், மெய்யன்,
உதிர வெங்கடலுள் தாதை
உதிக்கின்றான் தனையும் ஒத்தான்.

பொ :—சூரியனுடைய காதற்புதல்வனாகிய சுக்கிரீவன், இளைய பசிய கழற்சிக்காய் போன்றதாய எதிர்எதிரே அம்புகள் தைக்கப் பெற்ற உடம்பையுடையவனாய், சினக்கனல் எரிகின்ற கண்களையுடை யவனாய், மூங்கிலின் பெரிய காடு வேவதுபோல வேகின்ற மனத்தை யும் உடம்பையும் உடையவனாய், இரத்தக் கடலுள் (இருக்கின்ற) உதிக்கின்ற தன் தந்தையையும் ஒத்துத் தோன்றினான்.

கு :—கதிரவன் மைந்தன் கதிரவன் போன்ருன் என்றவாறு. கழல் என்பது ஒருவகை முட்செடி. அதன் பசிய இளங்காய் முட்கள் நிறைந்ததாக இருக்கும். உடம்பு முழுதும் அம்புகள் தைக்கப்பெற்ற சுக்கிரீவனுக்கு முள் நிறைந்த புறத்தையுடைய கழற்காய் உவமை. மொய்ப்படு சரங்கள் மூழ்க முனையெயிற் ருளிபோல அப்பணை கிடந்த மைந்தன்......கழற்காயு மொத்தான்'' (சீவக - 227) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். கதிர்களை நீட்டிக்கொண்டு உவர்க் கடலில் நெருப்புருண்டை போல் உள்ளும் புறமும் வெப்பமுடன் தோன்றுகின்ற சூரியனைப்போல, சுக்கிரீவனும் உடம்பு முழுமையும் அம்புகள் தைக்கப் பெற்றவனுய், எரிகின்ற கண்ணையுடையவனுய், உள்ளும் புறமும் வெப்பமுடையவனுய் உதிரவெங்கடலுள் தோற்றமளிக்கின்ருன் என்றவாறு. சுக்கிரீவன் உடம்பில் தைத்துள்ள அம்புகளின் தோற்றம் சூரியனுடைய ஒளிக்கதிர்கள் போன்றிருந்தன; அவன் எரி கக்கும் கண், சூரியனது ஒளி போன்றது. அவன் வேகின்ற மனமும் வெம்மையுள்ள புறமும் சூரியனுடைய உள்ளும் புறம்பும் வெதும்புகின்ற வெங்கதிர் மண்டலம் போன்றது; அவன் இரத்தக் கடலில் தோன்றுவது, சூரியன் உவர்க்கடலில் தோன்றுவது போலிருந்தது என விரித்து ஏது உவமையாக்குக. உதிக்கின்ருஞகிய தாதையு மொத்தான் எனப் பிரித்துக் கூட்டுக. உடம்பின் முன்னும் பின்னும் தைத்த அம்புகளைக் கூறுவார் 'எதிரெதிர் பகழி தைத்த யாக்கையன்' என்ருர். (200)

## இலக்குவன் நிலை

8333. வெப்பாரும் பாசம் வீக்கி
வெங்கணை துணைக்கு மெய்யன்
ஒப்பாரும் மில்லான் றம்பி
யுணர்ந்திருந் தின்ன லுய்ப்பான்
இப்பாச மாய்க்கு மாயம்
யான்வல்லெ னென்ப தோர்ந்தும்
அப்பாசம் வீச வாற்ரு
தழிந்தநல் லறிவு போன்ருன்.

வெப்பு ஆரும் பாசம் வீக்கி,
வெங்கணை துளைக்கும் மெய்யன்,—
ஒப்பு ஆரும் இல்லான் தம்பி
உணர்ந்திருந்து இன்னல் உய்ப்பான்,

'இப்பாசம் மாய்க்கும் மாயம்,
யான் வல்லென்' என்பது ஓர்ந்தும்
அப்பாசம் வீச ஆற்ருது
அழிந்த நல் அறிவு போன்ருன்.

பொ:—தனக்கு ஒப்புமையாகத் தக்கார் யாரையும் இல்லான் (தனக்குவமை யில்லாதான்) ஆகிய இராமனுடைய தம்பி—இலக்குவன், வெப்பம் பொருந்திய பாசத்தால் கட்டுண்டு, கொடிய அம்புகளால் துளைக்கப்பட்ட உடம்பையுடையவனுய் (அந்தப் பாசத்தை அழிக்கும் ஆற்றல் தனக்குண்டு என்பதை) உணர்ந்திருந்தும் அதனை நீக்கமுடியாமல் துன்புறுகின்றவன்,—இந்த உலக பாசத்தை மாய்க்கும் தந்திரத்தை யான் அறிவேன்' என்பதை உணர்ந்திருந்தும் அந்தப் பாசத்தை அகற்றமுடியாமல் வருந்துகின்ற நல்ல ஆன்மாவைப் போன்ருன்.

கு:—இந்திரசித்தினுல் எய்யப்பட்ட நாகபாசத்தை அழிக்கும் வகை அறிந்திருந்தும் அது செயலாற்ருது துன்புறுகின்ருன் இலக்குவன். அந்நிலைமை எவ்வாறு உளதெனின்? இந்த உலகப்பற்றினை நீங்குதற்குரிய வழி இன்னது என்பதை அறிந்திருந்தும், அப் பற்றினை விட முடியாமல் வருந்தும் ஆன்மாவின் நிலைமைபோல் உளது என்றவாறு. "அதளெறிந்தன்ன நெடுவெள்களரின், ஒருவனுட்டும் புல்வாய் போல, ஓடி உய்தலுங் கூடுமன், ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே" (புறநா–193) என ஏரேர் உழவர் பாசத்தைவிட்டு உய்யும் நெறி யறிந்திருந்தும் அப்பாசம் வீசவாற்ருது அல்லற்பட்டுக் கூறி்யது இங்கு நினையத்தகும். வழியறிந்தும் செயல்பட முடியாது இலக்குவன் கட்டுண்ட நிலையை இவ்வுவமை நன்கு விளக்குதல் காணலாம். அறிவுடைய ஆன்மா பாசத்தை நீங்குதற்குரிய தன்மையுடையதே ஆயினும் தானே நீக்கிக்கொள்ள இயலாது இறைவனருளைத் துணையாகக் கொண்டு நீக்கவேண்டி யிருத்தல் போல, இலக்குவனும் தன்னைக் கட்டியுள்ள பாசத்தை நீக்குதற்குரிய ஆற்றலுடையனுயினும் தானே நீக்கிக்கொள்ள இயலாது பிறிதொரு பெருந்துணையை நாடிக் கிடக்கின்ருன் என்க. நல்லறிவு என்றது, இங்கு ஆன்மாவை. மாயம் என்பது, தந்திரம் – உபாயம் என்னும் பொருளில் வந்தது. இராமன், தனக்குவமை யில்லாதான் ஆதலின், ஒப்பாருமில்லான் என இங்குக் குறிக்கப் பெற்ருன். தம்பி,—உய்ப்பான், அறிவு போன்ருன் என இயையும். உய்ப்பான் வினைப்பெயர். (201)

## இலக்குவன் சூரியன் போன்று தோன்றுதல்

8334. அம்பெலாங் கதிர்க ளாக
வழிந்தழிந் திழியு மாகச்
செம்புனல் வெயிலிற் ரேன்றத்
திசையிரு ளிரியச் சீறிப்
பம்புபே ரொளிய நாகம்
பற்றிய படிவத் தோடும்
உம்பர்நா டிழிந்து வீழ்ந்த
வொளியவ னேயு மொத்தான்.

அம்பு எலாம் கதிர்கள் ஆக,
அழிந்து அழிந்து இழியும் ஆகச்
செம்புனல் வெயிலில் தோன்ற,
திசை இருள் இரிய, சீறிப்
பம்பு பேர் ஒளிய, நாகம்,
பற்றிய படிவத் தோடும்
உம்பர் நாடு இழிந்து வீழ்ந்த
ஒளியவ னேயும் ஒத்தான்.

பொ :—(இலக்குவன் தன்னுடம்பில் தைத்த) அம்புகள் எல்லாம் கிரணங்களாகத் தோற்றமளிக்க, அவ்வுடம்பிலிருந்து பெருகிப் பெருகி வழிகின்ற இரத்தம் வெயிலைப் போன்று தோற்றமளிக்க, திசைகள்தோறும் செறிந்துள்ள இருள் ஓடுமாறு கோபித்து (ஓட்டி) நிறைகின்ற பெரிய ஒளியையுடையனுய்க் கேது என்னும் பாம்பு பற்றிய வடிவத்தோடு விண்ணிலிருந்து இறங்கி மண்ணில் வீழ்ந்த சூர்யனையும், ஒத்தான்.

கு :—இலக்குவன் பல அம்புகள் உடம்பில் தைக்கப் பெற்றவனுய், இரத்தம் சொரிய நாகபாசத்தால் கட்டுண்டிருந்த தோற்றம், பல கிரணங்களை யுடையனுய் வெயில் பரப்பும் சூரியன், கேதுவால் பற்றப்பட்டுத் தரையில் வீழ்ந்துகிடந்த தன்மை போன்றிருந்தது என்றவாறு. இது, உருவக அணியை உறுப்பாகக் கொண்டுவந்த தற்குறிப்பேற்றவணி. அழிதல் - பெருகுதல். "அழியும் புனலஞ் சன மாநதியே" (சீவக-1193). ஆகம் - உடம்பு. ஆகம் அழிந்தழிந் திழியும் செம்புனல் என்க. பம்புதல் – நிறைதல். பேரொளிய படிவம், நாகம்பற்றிய படிவம் எனத் தனித்தனி இயையும். ஒளியவன் என்றது சூரியனை. தரையில் இருக்கும் இலக்குவனுக்கு ஒப்புமை கூற வேண்டி. உம்பர்நாடிழிந்து வீழ்ந்த ஒளியவன் எனத் தற்குறிப்பேற்ற

மாகக் கூறினர். "வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக் கொழுந்தை" (பெரியபு-திருஞானசம்பந்தர்-728) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். (102)

### இந்திரசித்தின் நிலை

8335. மயங்கினன் வள்ள றம்பி
மற்றையோர் முற்று மண்ணை
முயங்கினர் மேனி யெல்லா
மூடின னரக்கன் மூரித்
தயங்குபே ராற்ற லானுந்
தன்னுட றைத்த வாளிக்
குயங்கின னுளைந்தான் வாயா
லுதிரநீ ருமிழா நின்றான்.

மயங்கினன் வள்ளல் தம்பி ;
மற்றையோர் முற்றும் மண்ணை
முயங்கினர் ; மேனி யெல்லாம்
மூடினன் அரக்கன் மூரித்
தயங்கு பேர் ஆற்ற லானும்
தன் உடல் தைத்த வாளிக்கு
உயங்கினன், உளைந்தான் வாயால்
உதிரநீர் உமிழா நின்றான்.

பொ—வள்ளலாகிய இராமன் தம்பி—இலக்குவன் (நாகக்கணை யால் கட்டுண்டு) மயங்கினன் ; மற்றையோர் அனைவரும் (மயங்கித்) தரையில் விழுந்தார்கள் ; அவர்கள் உடம்புகளை யெல்லாம் அம்புக ளால் மூடினவனாகிய—பெரிதாக விளங்குகின்ற சிறந்த ஆற்றலை யுடைய இந்திரசித்தும், தன்னுடம்பில் தைத்த அம்புகளுக்கு வருந்தி மனம் குழம்பி வாயினால் இரத்தத்தைக் கக்காநின்றனாய்.

கு :—வள்ளல் என்றது இராமனை. மயங்குதற்கு உரியனல்லன் என்ற குறிப்புத் தோன்ற "வள்ளல் தம்பி மயங்கினன்' என்றார். மண்ணை முயங்கினர் என்றது, தரையில் விழுந்தார்கள் என்னும் கருத்தினது. பகைவர் உடம்புகளை அம்புகளால் மூடிய இந்திரசித் தும் இலக்குவனது அம்புகளால் மூடப்பெற்றவனாய் உடம்பும் உள மும் வருந்தினன் என்பது கூறி, நோயெல்லாம் நோய்செய்தார் மேலதானமை புலப்படுத்தியவாறு. ஆற்றலானாகிய அரக்கனும் என உம்மையைப் பிரித்துக் கூட்டி இருபெயரொட்டாக்குக. உயங்

குதல் - வருந்துதல். உளேதல், தனக்கு நேர்ந்த துன்பத்தை நினைந்து மனம் குழம்புதல். மனத்துயரின் மிகுதியால் வாய்வழி இரத்தத்தைக் கக்கினன் என்றவாறு. உமிழநின்றான் முற்றெச்சம்- அடுத்த செய்யுளில் முடியும். குளகம். (203)

இந்திரசித்து இராவணன் மனைக்கு ஏகுதல்

8336. சொற்றது முடித்தே னாளை
யென்னுடற் சோர்வை நீக்கி
மற்றது முடிப்பே னென்னு
வெண்ணினன் மனிசன் வாழ்க்கை
யிற்றது குரங்கின் றானை
யிறந்ததென் றிரண்டு பாலும்
கொற்றமங் கலங்க ளார்ப்ப
விராவணன் கோயில் புக்கான்.

'சொற்றது முடித்தேன்; நாளை,
என் உடற் சோர்வை நீக்கி,
மற்றதும் முடிப்பென்' என்னு,
எண்ணினன், 'மனிசன் வாழ்க்கை
இற்றது; குரங்கின் தானை
இறந்தது, என்று இரண்டு பாலும்
கொற்ற மங்கலங்கள் ஆர்ப்ப
இராவணன் கோயில் புக்கான்.

பொ :—'சொன்னதைச் செய்து முடித்துவிட்டேன்; எனது உடற் சோர்வை நீக்கிக்கொண்டு நாளைக்கு மற்றதையும் செய்து முடிப்பேன்' என்று எண்ணினவனாய், 'மனிதன் வாழ்க்கை முடிந்தது: குரங்குச் சேனை அழிந்தது' என்று சொல்லிக்கொண்டு இரண்டு பக்கத்துமுள்ளோர் கூறும் வெற்றி மங்கல வாழ்த்துகள் ஆரவாரிக்க, இராவணன் அரண்மனைக்குள் புகுந்தான்.

கு :—சொற்றது என்றது, "வெங்கணெடு வானரத் தானையை வீற்று வீற்றாய்ப் பங்கமுற நூறி இலக்குவனைப் படுத்துதல்" (11) இலக்குவன் இறந்தான் என்னும் கருத்தினன் ஆதலின் இங்ஙனம் கூறினான். எண்ணினன், புக்கான் என இயையும். இந்திரசித்தின் இருபுறத்திலும் உள்ளோர், 'மனிசன் வாழ்க்கை இற்றது' எனவும், 'குரங்கின் தானை இறந்தது' எனவும் கூறிக்கொண்டும்,

'இந்திரசித்துக்கே வெற்றி இந்திரசித்து வாழ்க என்றாற்போன்ற மங்கல வாழ்த்துகளைச் சொல்லிக்கொண்டும் சென்றனர் என்க. மற்றதும் என்றது, இராமன் முதலியோரை முடித்தலை. (204)

8337. ஈர்க்குடைப் பகழி மாரி
யிலக்குவ னென்ன நின்ற
நீர்க்கடை மேகந் தன்னை
நீங்கியுஞ் செருவி னீங்கான்
வார்க்கிடை மதுகைக் கொங்கை
மணிக்குறு முறுவன் மாதர்
போர்க்கடைக் கருங்கண் வாளி
புயந்தொறும் பொழியப் புக்கான்.

ஈர்க்கு உடைப் பகழி மாரி
இலக்குவன் என்ன நின்ற
நீர்க்கடை மேகம் தன்னை
நீங்கியும், செருவின் நீங்கான்,
வார்க்கிடை மதுகைக் கொங்கை,
மணிக்குறு முறுவல் மாதர்
போர்க்கடைக் கருங்கண் வாளி
புயந்தொறும் பொழியப் புக்கான்.

பொ :—இறகுகளையுடைய அம்புகளாகிய மழையைச் சொரிகின்ற இலக்குவன் என்று பெயர்கொண்டு நின்ற, ஊழிக்கடையில் தோன்றுகின்ற நீர் கொண்ட மேகத்தை நீங்கி வந்தும், போரில் நீங்காதவனாய்க் கச்சுக்கு இடையிலே உள்ள வலிய நகில்களையும் முத்துப்போன்ற சிறிய பற்களையுமுடைய பெண்டிர் போர்த்தொழில் பொருந்திய கரிய தம் கடைக்கண்களாகிய அம்புகளைத் தன் தோள் தோறும் சொரியாநிற்கப் புகுந்தான் இந்திரசித்து.

கு :—இலக்குவனோடு போர் செய்தபோது அவன் அம்பு மாரி சொரியப் புகுந்த இந்திரசித்து, அவ்விலக்குவனை விட்டு நீங்கி இலங்கை புக்க போதும், பெண்டிர், தம் கண்களாகிய அம்புகளை சொரியச் சென்றான் என்று கூறி, இந்திரசித்து எப்போதும் அம்பு மழையில் அகப்பட்டு அல்லலுகின்றான் என்பார்போல அவன் வீரச் சிறப்பும் இன்பச் சிறப்பும் புலப்படுத்தியவாறு. ஈர்க்கு - அம்பின் இறகு. பகழிமாரி என்றதற்கேற்ப அம்மாரியைச் சொரிகின்ற இலக்குவனை மேகமாக உருவகஞ் செய்தவாறு. அவ்வாறு உருவகஞ்

செய்யுங்கால் இலக்குவன் அம்பு சொரியும் திறமை புலப்படவேண்டி ஊழிக்கடையில் தோன்றும் மேகமாக உருவகஞ் செய்தவாறு. கடை என்றது ஊழிக்கடையை. நீருடைய மேகம், கடையூழி மேகம் என்க. வார் – கச்சு. வெற்றி பெற்று வருகின்ற இந்திரசித்து உளம் மகிழ, மாதர் காதற்குறிப்புத் தோன்ற அவன் தோள்களைப் பார்த்தனர் என்பார், "மாதர் போர்க்கடைக் கருங்கண்வாளி புயந்தொறும் பொழிய" என்றார். கருங்கடைக்கண் என மாறுக. இரு புயங்களி லும் பொழிய என்பார் 'புயந்தொறும்' என்றார். "வள்ளல், பண் ணெனுஞ் சொல்லினார்தம் தோளெனும் பணைத்த வேயுங், கண்ணெ னுங்கால வேலும் மிடைநெடுங் கானம்புக்கான்" (அயோத்தி – கைகேயிசூழ்வினைப் – 88) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். (205)

8338. ஐயிரு கோடி செம்பொன்
மணிவிளக் கங்கை யேந்தி
மையறு வான நாட்டு
மாதரு மற்றை நாட்டுப்
பையர வல்கு லாரும்
பலாண்டிசை பரவத் தங்கள்
தையல ரறுகு தூவி
வாழ்த்தினர் தழுவச் சார்ந்தான்.

ஐஇரு கோடி செம்பொன்
மணி விளக்கு அம்கை ஏந்தி
மை அறு வான நாட்டு
மாதரும், மற்றை நாட்டுப்
பை அரவு அல்குலாரும்
பலாண்டு இசை பரவ, தங்கள்
தையலர் அறுகு தூவி
வாழ்த்தினர் தழுவ, சார்ந்தான்.

பொ :—பத்துக்கோடி என்னுந் தொகையுள்ள, செம்பொனால் இயன்ற மணிகள் பதித்த விளக்குகளை அழகிய கையில் ஏந்திக் கொண்டு, குற்றமற்ற விண்ணுலகப் பெண்டிரும், மற்றை நாட்டி லிருந்து வந்துள்ள, பாம்பின் படம்போன்ற அல்குலையுடைய பெண் டிரும், இசையோடு பல்லாண்டு பாடித் துதிக்க, தங்களினத்தவரா கிய அரக்க மகளிர் அறுகம்புல்லைத் தூவிக்கொண்டு வாழ்த்தினராய் உடன்வர, (இராவணன் மனையை) அடைந்தான்.

கு:—இந்திரசித்து இராவணன் மனைக்குப் போகும்போது, விண்ணாட்டுப் பெண்டிரும், பிற நாட்டுப் பெண்டிரும் பத்துக் கோடி அளவினராய் நிரல்பட நின்று கையில் மணிவிளக்கை ஏந்திக்கொண்டு பல்லாண்டு பாடிப் பரவினார்கள்; அரக்கமாதர் பலர் அறுகம்புல்லைத் தூவி வாழ்த்தினார்கள் என்றவாறு. அங்கை, அகங்கையின் இடைகெட்டதாகக் கொண்டு, உள்ளங்கை என்று பொருள் கூறலுமாம். மணிவிளக்கு என்பது மாணிக்க மணிபோன்று எரிகின்ற விளக்கு, மாணிக்க மணியையே பொன்னகலில் விளக்குப் போன்று ஒளிவீசப் பதித்துவைத்திருந்தனர் எனவும் கொள்ளலாம். "தணிமலர்த் திருமக டயங்கு மாளிகை, இணரொளி பரப்பிநின் றிருடரப்பன, திணிசுடர் நெய்யுடைத் தீவிளக்கமோ, மணிவிளக்கல்லன மகளிர் மேனியே" (பால-நகரப்-51) என்புழி நெய்யுடை விளக்கிற்கு வேருக மணிவிளக்குக் கூறப்பட்டிருத்தல் காண்க. வாழ்த்துங்கால் அறுகம்புல்லைத் தூவி வாழ்த்துதல் மரபு. "அறுகு சிறு பூளை நெல்லொடு தூஉய்ச் சென்று, பெறுக கணவனோடென்றாள்" (சிலப்:—9-43) என்புழி அறுகு தூவி வாழ்த்துதல் கூறப்பட்டிருத்தல் காண்க. (206)

## தந்தைக்குத் தன் வெற்றியைத் தெரிவித்து இந்திரசித்து தன் மனை புகுதல்

8339. தந்தையை யெய்தி யன்றாங்
குற்றுள தன்மை யெல்லாம்
சிந்தையி னுணரக் கூறித்
தீருதி யிடர்நீ யெந்தாய்
நொந்தனென் யாக்கை நொய்தி
னாற்றிமே னுவல்வ னென்னாப்
புந்தியி லனுக்கந் தீர்ப்பான்
றன்னுடைக் கோயில் புக்கான்.

தந்தையை எய்தி அன்று
ஆங்கு உற்றுள தன்மை எல்லாம்
சிந்தையின் உணரக் கூறி,
'தீருதி, இடர்நீ; எந்தாய்!
நொந்தனன் யாக்கை; நொய்தின்
ஆற்றி, மேல் நுவல்வென்' என்னா,
புந்தியில் அனுக்கம் தீர்ப்பான்,
தன்னுடைக் கோயில் புக்கான்.

பொ :—இந்திரசித்து தன் தந்தை இராவணனை அடைந்து, அன்றைக்கு அப் போர்க்களத்தில் நிகழ்ந்துள்ள தன்மை எல்லாவற்றையும் அவன் சிந்தையில் உணருமாறு சொல்லிவிட்டு, 'என் தந்தையே ! நீ துன்பம் தீர்ந்து இருப்பாயாக ! யான் உடம்பு நொந்திருக்கின்றேன் ; விரைவில் புண்களை ஆற்றிக்கொண்டு வந்து, மேல் நிகழவேண்டியவற்றைச் சொல்கின்றேன்' என்று கூறித், தன் மனத் துன்பம் தீர்த்துக்கொள்ளும் பொருட்டுத் தன் அரண்மனையை அடைந்தான்.

கு :—அன்று ஆங்கு உற்றுள தன்மை என்றது, வானரசேனையை அழித்ததையும் இலக்குவனை நாகபாசத்தால் கட்டியதையும் ஆம். இன்று ஒரு நாளிலேயே பெரும்பான்மையர் இறந்தனர் ஆகலின் வெற்றி நமதே என இடர் தீர்ந்திருக்கலாம் என்பது இந்திரசித்தின் கருத்து. நொய்து - விரைவு. ஆற்றுதலாவது, மருந்துகளாலும் ஒற்றடங்களாலும் புண்களை ஆறச் செய்தல். அனுக்கம்-துன்பம். (207)

## இலக்குவன் முதலியோர் நிலைமை கண்டு வீடணன் வருந்துதல்

8340. இத்தலை யின்ன லுற்ற
வீடண னிழைப்ப தோரான்
மத்துறு தயிரி னுள்ள
மறுகினன் மயங்கு கின்ருன்
அத்தலைக் கொடிய னென்னை
யட்டில னளியத் தேனன்
செத்திலென் வலியெ னின்றே
னென்றுபோய் வையஞ் சேர்ந்தான்.

இத்தலை, இன்னல் உற்ற
வீடணன் இழைப்பது ஓரான்,
மத்துறு தயிரின் உள்ளம்
மறுகினன், மயங்கு கின்ருன்,
அத்தலைக் கொடியன் என்னை
அட்டிலன் ; அளியத்தேன் நான் ;
செத்திலென் ; வலியென் நின்றேன்'
என்று போய் வையம் சேர்ந்தான்.

பொ :—இந்தப் பக்கத்தில் இலக்குவன் முதலியோர் நிலைமை கண்டு பெருத்துயருற்ற வீடணன், செய்வது இன்னது என்று அறி

யாமல் மத்திஞல் கடையப்பட்ட தயிர்போலக் கலங்கி அறிவும் மயங்கினவனுய், அப் பக்கத்தில் நின்று போர் செய்த கொடியவனுகிய இந்திரசித்து (எல்லோரையும் கொன்றதுபோல) என்னைக் கொல்லவில்லை ; இரங்கத்தக்க எளிமையுடைய நான் (நானுகவே) இறந்தேனுமில்லை ; வலிமையுடையோனுய் நிற்கின்றேனே என்று சொல்லிக்கொண்டே சோர்ந்துபோய்த் தரைமேல் வீழ்ந்தான்.

கு :—அரக்கர் பக்கத்து நிகழ்ச்சியைக் கூறி முடித்து இராமன் பக்கதுச் செய்தியைத் தொடங்குகின்ருர் ஆகலின் 'இத்தலை' என்று தொடங்கினுர். பெருந்துன்ப நிகழ்ச்சிகளால் வலிய மனமும் உடைந்து கலங்குவதற்கு 'மத்துறு தயிர்' உவமையாகக் கூறப்பட்டது. "மத்துறு தண்டயிரின் புலன் தீக்கதுவக் கலங்கி" (திருவாசகம்-நீத்தல் விண்ணப்பம்: 30) என்றதும் காண்க. தோய்ந்து கட்டிபட்டுள்ள முளிதயிர், மத்திட்டுக் கடையுங்கால் உடைந்து கலங்கி உருக்கெடுதல்போல வீடணனது மெலியாத நெஞ்சம் இலக்குவன் எய்திய இன்னல் கண்டு மெலிந்து கலங்கியது என்றவாறு. எல்லோரையுங் கொன்ற இந்திரசித்து என்னையும் கொன்றிருந்தாலோ அல்லது யானே என்னை மாய்த்துக் கொண்டிருந்தாலோ இத்தகைய அல்லலைக் காண நேர்ந்திராதே என்ற கருத்தால் "கொடியன் என்னை அட்டிலன் அளியத்தேனுன் [செத்திலென் வலியெனின்றேன்" என்று இரங்குவாஞனன். "புதுமலர்க் கழ லிணையடி பிரிந்தும் கையனே னின்னும் செத்திலேன் அந்தோ" (திருவாசகம்—செத்திலாப்-1) என்று மணிவாசகர் கூறி இரங்குதலும் இங்கு நினையலாம். (208)

## வீடணன் வாய்திறந்தரற்றல் 8341-8344

8341. பாசத்தா லனகன் றம்பி
பிணிப்புண்ட படியைக் கண்டு
நேசத்தா ரெல்லாம் வீழ்ந்தார்
யாஞெரு தமியே னின்றேன்
தேசத்தா ரென்னை யென்னென்
சிந்திப்பா ரென்று தீயும்
வாசத்தார் மாலை மார்பன்
வாய்திறந் தரற்ற லுற்ருன்.

'பாசத்தால் அனகன் தம்பி
பிணிப்புண்ட படியைக் கண்டு
நேசத்தார் எல்லாம் வீழ்ந்தார்;
யான் ஒரு தமியன் நின்றேன்;
தேசத்தார், என்னை என்னென்
சிந்திப்பார்!' என்று, தீயும்
வாசத்தால் மாலை மார்பன்
வாய்திறந்து அரற்ற லுற்றான்.

பொ :—"இராமன் தம்பியாகிய இலக்குவன் நாகபாசத்தால் கட்டுண்டிருக்கும் தன்மையைக் கண்டு (பொறாமல்) அன்புடையவர் எல்லாம் இறந்து வீழ்ந்தார்கள் ; யான் ஒருவன் மட்டும் இறந்துபடாமல் நின்றிருக்கின்றேன் ; இத்தகைய என்னை உலகத்தவர் என்னென்று நினைப்பார்கள் ?" என்று (மன வெப்பத்தால்) தீகின்ற வாசனையுடைய தாரினையும் மாலையினையும் அணிந்த மார்பினனாகிய வீடணன் வாய் திறந்து அரற்றத் தொடங்கினான்.

கு :—அனகன் - தூயவனாகிய இராமன். இலக்குவன் நாகபாசத்தால் கட்டுண்ட தன்மையைக் கண்டு இறந்துபட வீடணன் மட்டும் இறவாதிருப்பதால் அவனை உலகம் நேசமற்றவன் என்று எண்ணுமன்றோ என்ற கருத்தால், 'தேசத்தார் என்னை என்னென்று சிந்திப்பார்' என்றான். தேசம் என்றது இங்கு உலகத்தை. உள்ளத்தெழுந்த துன்ப வெப்பத்தால் வீடணன் மார்பிலணிந்திருந்த தாரும் மாலையும் தீய்ந்தன என்றவாறு. அரற்றிப் பழகாத வாய் என்பது புலப்படுத்த 'வாய்திறந்து' எனச் சிறப்பித்தார். (209)

8342. கொல்வித்தா னுடனே நின்றங்
கென்பரோ கொண்டு போனான்
வெல்வித்தான் மகனை யென்று
பகர்வரோ வினைவிற் கெல்லாம்
நல்வித்தாய் நடந்தான் முன்னே
யென்பரோ நயந்தோர் தத்தம்
கல்வித்தாம் வார்த்தை யென்று
கரைவித்தா னுயிரைக் கண்போல்.

" கொல்வித்தான், உடனே நின்று அங்கு"
என்பரோ? "கொண்டு போனன்
வெல்வித்தான், மகனை" என்று
பகர்வரோ 'விளைவிற்கு எல்லாம்
நல்வித்தாய் நடந்தான் முன்னே"
என்பரோ? நயந்தோர் தம் தம்
கல்வித்தாம் வார்த்தை' என்று
கரைவித்தான் உயிரைக் கண்போல்.

பொ :—'(தேசத்தார் என்னைக் குறித்து,)' கூடவே நின்ற வீடணன்தான் (இந்திரசித்தினைக் கொண்டு இலக்குவனைக் கொல்லச் செய்தான்' என்று சொல்லுவார்களோ? (அல்லது) (இலக்குவனைப் போர் செய்ய) அழைத்துக்கொண்டு போய்த் தன் மகன் முறையினனாகிய இந்திரசித்தை வெல்லுமாறு செய்துவிட்டான்' என்று சொல்வார்களோ? 'இத்தகைய துன்ப விளைவுகட்கெல்லாம் நல்ல முதற் காரணமாகவே (வஞ்சகமாக) முன்பு அடைக்கலமாக வந்து சோர்ந்தான்' என்று சொல்வார்களோ? (என்னைப் பற்றிச் சொல்லி விரும்பினவர்கள் தங்கள் தங்கள் கற்பனையின் அளவாக அவர்கள் அமையும்' என்று அரற்றித் தன்னுயிரைக் கண்களைப் போல் கரையுமாறு செய்துகொண்டு வருந்தினன்.

கு :—இராவணன் தம்பி என்ற உறவு கருதி உலகத்தவர் தன்னை இவ்வாறு ஐயுற்றுக் கூறுவர் என்று வீடணன் கற்பனை செய்து வருந்தி உயிர் தேய்கின்றவனானன் என்றவாறு. கல்வி என்றது, கற்பனையறிவை. போனன் முற்றெச்சம். வித்து, இங்குக் காரணம் என்ற பொருளில் வந்தது. 'கரைவித்தான் உயிரைக் கண்போல்' என்ற உவமையால் அவ் வீடணன் கண்ணும் கரைந்து நீர் பெருகினமை பெறவைத்தவாறு. உயிரைக் கரைவித்தலாவது, உயிர் வலிமை கெடுமாறு வருந்துதல். உலகமக்கள் தம் கற்பனை ஆற்றலுக் கேற்பத் தன்னைப்பற்றி இழித்துக் கூறுவர் என்பான், 'நயந்தோர் தத்தம் கல்வித்தாம் வார்த்தை' என்ருன். (210)

8343. போரவன் புரிந்த போதே
பொருவரு வயிரத் தண்டால்
தேரொடும் புரண்டு வீழச்
சிந்தியென் சிந்தை செப்பும்

வீரமுன் றெரித்தே னல்லேன்
விளிந்திலேன் மெலிந்தே னிஞ்ஞான்
ருருற வாகத் தக்கே
னளியத்தே னழுந்து கின்றேன்.

'போர் அவன் புரிந்த போதே
பொருஅரு வயிரத் தண்டால்,
தேரொடும் புரண்டு வீழச்
சிந்தி, என் சிந்தை செப்பும்
வீரம் முன் தெரிந்தேன் அல்லேன்,
விளிந்திலேன்; மெலிந்தேன் இஞ்ஞான்று
ஆர் உறவு ஆகத்தக்கேன் ?
அளியத்தேன், அழுந்து கின்றேன்.

பொ :—அவ் இந்திரசித்து போர் புரிந்த பொழுதே என் ஒப்பற்ற வயிரத் தண்டினுல் தேரோடு அவன் புரண்டு வீழுமாறு சிதறடித்து, (இப்போது) என் மனம் புலப்படுத்துகின்ற வீரத்தைச் செயலால் புலப்படுத்தினேன் அல்லேன்; (அல்லது) அவ்விந்திரசித்தினுல் யான் இறந்தேனும் அல்லேன். இலக்குவன் முதலியோர் துயர் கண்டு இப்போது மெலிவடைகின்றேன். இப்படிப்பட்ட இரங்கத் தக்க நிலையில் உள்ளவனுய்த் துயர்க்கடலில் அழுந்துகின்ற யான் யார்க்கு உறவாகத் தகுதியுடையேன்; (யார்க்கும் உறவாகேன் என்ற படி).

கு :—இலக்குவன் முதலியோர் நாகபாசத்தால் கட்டுண்டு கிடக்கும் துன்பநிலையைக் காணும்போது, வீடணனுக்கு, 'இந்திரசித்து, போர் புரியும்போதே அவனைத் தேரோடு தரையில் புரளுமாறு தண்டுகொண்டு அடித்து அழித்திருக்கலாமே' என்ற எண்ணம் தோன்றியது ஆதலின், 'என் சிந்தை செப்பும் வீரம்' என அதனைக் குறிப்பிட்டான். அவன் மேகத்தில் மறைந்துள்ள இப்போது யாதும் செய்ய இயலாமற் போயது என்பது குறிப்பு. இந்திரசித்தைக் கொல்லுதலோ, அன்றி அவனுல் தான் மடிதலோ, செய்யாமல் துயர்க்கடலில் மெலிவதனுல் யார்க்கும் பயன் இன்று என்பான், 'ஆருறவாகத் தக்கேன்' என்ருன். தான் துயர்க்கடலில் அழுந்துவதால் இராமனுக்கோ, இலக்குவனுக்கோ, வானரசேனைகட்கோ உதவிசெய்ததாகாமையின், இவர் யார்க்கும் உறவாம் தன்மையைக் காட்டிற்றிலேனே என்று ஏங்கியவாறு. அளியத்தேன் – இரங்கத்தக்கேன்,— அத்துச்சாரியை முற்றெச்சம். அழுந்துகின்றேன் என்பது வினையாலணையும் பெயர். அழுந்துகின்றேனுகிய யான் யாருறவாகத் தக்கேன் என்க. (211)

8344. ஒத்தலைத் தொக்க வீடி
யுய்வினு முய்வித் துள்ளம்
கைத்தலை நெல்லி போலக்
காட்டிலேன் கழிந்து மில்லேன்
அத்தலைக் கல்லேன் யானின்
றவயமென் றடைந்து நின்ற
இத்தலைக் கல்லே னின்றே
னிருதலைக் கொள்ளி யொப்பேன்.

ஒத்து அலைத்து, ஒக்க வீடி,
உய்வினும் உய்வித்து உள்ளம்
கைத்தலை நெல்லி போலக்
காட்டிலேன் ; கழிந்தும் இல்லேன் ;
அத்தலைக்கு அல்லேன் யான்,
இன்று—'அவயம்' என்று அடைந்துநின்ற
இத்தலைக்கு அல்லேன்; நின்றேன்—
இருதலைக் கொள்ளி ஒப்பேன்.

பொ :—(இலக்குவன் முதலியவரோடு) ஒத்துநின்று, (பகைவனை) வருத்திப் பின் (அப் பகைவனால்) அவரோடு ஒருங்கே அழிந்தோ, (அல்லது) நாகபாசத்தால் இறந்தவர்களை உய்யும் நெறிகளால் உய்யச் செய்தோ, என் அன்புள்ளத்தை உள்ளங்கை நெல்லிக்கனி போலக் காட்டினேன் அல்லேன் ; (அவ்வாறு காட்டமுடியாதபோது) யானே இறத்தலும் செய்திலேன் ; (ஆதலால்) (என் அண்ணன் செய்த தீமைகளை யுடன்படாமையால்) அவன் பக்கத்திற்கு நல்லன் அல்லாதவனாகிய யான், இன்றைக்கு—'அபயம்' என்று சொல்லி வந்து சேர்ந்துள்ள—இவ் இராமன் பக்கத்திற்கும் நல்லன் அல்லேனாய் நின்றேன் ; (இத்தகைய யான் இருபக்கமும் பயன்படாமல் எரிகின்ற) இருதலைக் கொள்ளி போல்பவன் ஆனேன்.

கு :—வீடணன், தன் அன்புள்ளத்தைக் காட்ட, இலக்குவனோடு சேர்ந்து இந்திரசித்தினை அலைத்துப் பின் அவனால் அவ்விலக்குவனோடு மாய்ந்திருக்கவேண்டும் ; அல்லது, நாகபாசத்தால் கட்டுண்டு இறந்த அவர்களை உய்வித்திருக்க வேண்டும் ; இவ்விரண்டும் செய்யாது போனாலும்தானே மாய்ந்தாவது இருக்கவேண்டும் ; இவற்றில் எதையும் செய்யாமையால், தன்னை அபயம் கொடுத்து ஏற்றுக் கொண்ட இராமன் பக்கத்திற்கும் நல்லன் அல்லேனாய் நின்றதாகக் கூறுகின்றான். அலைத்தல் - வருத்துதல். வீடணன் போர் செய்யாது ஆலோசனை கூறுவதையே மேற்கொண்டிருந்தான் ஆதலின்,

இங்ஙனம் கூறலானன். போர் செய்யும்போதும் இறககும்போதும் இலக்குவனேடு ஒத்துப் பங்குகொண்டிருக்க வேண்டும் என்பது வீடணன் எண்ணம். வீடுதல் - அழிதல். உய்வின் – உய்தற்குரிய நெறிகளால். உய்வு என்ற தொழிற்பெயர் உய்தற்குரிய நெறியை யுணர்த்தியது. உய்வினும் என்புழி உம்மை இசை நிறை. வீடி உய்வித்து, உள்ளம் காட்டிலேன் என இயையும். வீடியோ, உய் வித்தோ என்ற ஓகாரம் தொக்குநின்றதாகக் கொள்க ; "காயத்திடு வாய் உன்னுடைய கழற்கீழ்வைப்பாய் கண்ணுதலே" (திருவாசகம்-குழைத்தபத்து: 8) என்புழியும் இவ்வாறு ஓகாரம் தொக்கு நின் றுள்ளமை காண்க. இன்று இத்தலைக் கல்லேன் என இயையும். உள்ளம் அருவப் பொருளாயினும் செயலைக்கொண்டு தெளிவாகக் காட்டலாம் ஆதலின், 'உள்ளம் கைத்தலை நெல்லிபோலக் காட்டி லேன்' என்ருன். கையில் வைத்துள்ள நெல்லிக்கனியை ஐயமின்றி முழுமையும் தெளிவாகக் காணலாமாதலின், தெளிவுக் காட்சிக்கு அதனையே எடுத்துக்காட்டாகக் கூறுவது மரபு. நெல்லிக்கனியே யன்றி—உருட்சியுள்ள பிறபொருளும் இவ்வாறு கூறப்படுவதுண்டு. "கைத்தலத்தின் வைத்ததோர் முத்தெனத் தெருட்டுவான்" (திரு விளையாடற்-அட்டமாசித்தி-21) என்புழி நெல்லிக்கனியைக் கூருது முத்தினைக் கூறியுள்ளமை காணலாம். ஒரு பக்கம் எரிகின்ற கொள்ளி யாயின் மற்ருெரு பக்கம் சுடாது என்று நம்பி ஒருவர் அதைக் கைக் கொள்ளலாம் ; இருபக்கமும் எரிகின்ற கொள்ளியை யாரும் நம்பிக் கைக் கொள்ளாமை போல, 'இராவணனுல் துரத்தப்பட்ட யான் இராமனுலும் ஏற்றுக்கொள்ளாது தள்ளப்படுதற்குரிய கொடுமை யுடையனுயினேன் என வீடணன் தன் குறை நினைந்து புலம்பிய வாறு. அல்லேன் என்றது, நல்லன் அல்லேன் என்றவாறு. இத் தலைக்கும் எனல்வேண்டும் உம்மை விகாரத்தால் தொக்கது. ஒப் பேன் ஆனேன் என ஆக்கச் சொல் வருவிக்க. அத்தலைக் கல்லே னுகிய யான் இத்தலைக்கும் அல்லேனுய், இருதலைக் கொள்ளியொப் பேனுய் நின்றேன் எனவும் இயைத்துப் பொருள் கொள்ளலாம். (212)

## அனலன் வீடணனைத் தேற்றுதல்

8345. அனையன பலவும் பன்னி
யாகுலித் தரற்று வானை
வினையுள பலவுஞ் செய்யத்
தக்கன வீர நீயும்

நினைவிலார் போல நெஞ்ச
நெகிழ்தியோ நீத்தி யென்று
இனையன சொல்லித் தேற்றி
யனலன்மற் றினைய செய்தான்.

அனையன பலவும் பன்னி,
ஆகுவித்து அரற்று வானை,
'வினையுள பலவும் செய்யத்
தக்கன ;—வீர !—நீயும்
நினைவு இலார் போல நின்று
நெகிழ்தியோ ? நீத்தி!' என்று,
இனையன சொல்லித் தேற்றி,
அனலன் மற்று இனைய செய்தான்.

பொ :—அத்தன்மையான பல சொற்களையும் சொல்லித் துன்புற்றுக் கதறுகின்ற வீடணனை (நோக்கி, வீடணன் மந்திரியான) அனலன் என்னும் அரக்கன், 'வீரனே! இப்போது நாம் செய்யத் தக்கனவான செயல்கள் பலவும் இருக்கின்றன; (அவற்றையெல்லாம் செய்யாமல் பேரறிவுடைய) நீயும் நினைவில்லாது மயங்கினர் போல மனம் தளர்தியோ? (இத்தளர்வை) விடுக!' என இத்தன்மையான சொற்களைச் சொல்லித் தேற்றிவிட்டு, இத்தகைய செயலைச் செய்தான்.

கு :—ஆகுலம் - துன்பம். அனலன் என்பவன் வீடணனோடு வந்து சரணடைந்த அரக்கன். வீடணனுக்கு அமைச்சன். அரற்றுதல், வாய் திறந்து பல சொல்லிக் கதறுதல். துன்பம் வந்த போது அது தீர்திறன் நாடாது அஞ்சி அரற்றுதல் வீரனுக்கு இயல்பன்று என்பான் 'வீர! நீயும் நெஞ்சம் நெகிழ்தியோ?' என்றான். நினைவிலார் என்றது, அறிவுநூற் பொருள்களை மறந்து மயங்கினவர்களை. அறிவுநூல்களை மறவாது மனதிற் கொண்டுள்ள பேரறிவாளனாகிய நீயும், என்பது கருத்தாகலின் உம்மை உயர்வு சிறப்பினதாதல் காணலாம். நெகிழ்தல் - தளர்தல். அனலன் செய்ததை வருஞ் செய்யுளிற் காணலாம். வீடணன் வீரமும் பேரறிவும் உடையனாதலின் துன்பம் வந்துற்றபோது அது தீர்க்கும் வழி நாடாது தளர்தல் தக்கதன்று என்றவாறு. (213)

அனலன் நிகழ்ந்ததுகூற இராமன் துயர்க்கடலுள் ஆழ்தல்

8346. நீயிவ ணிருத்தி யான்போய்
நெடியவற் குரைப்பெ னென்னுப்
போயின னனலன் போயப்
புண்ணியன் பொலன்கொள் பாதம்
மேயினன் வணங்கி யுற்ற
வினையெலா மியம்பி நின்ருன்
ஆயிரம் பெயரி ஞனு
மருந்துயர்க் கடலு ளாழ்ந்தான்.

நீ இவண் இருத்தி; யான் போய்
நெடியவற்கு உரைப்பென்' என்னு,
போயினன், அனலன்; போய்,
அப் புண்ணியன் பொலன்கொள் பாதம்
மேயினன் வணங்கி, உற்ற
வினை எலாம் இயம்பி நின்ருன்;
ஆயிரம் பெயரி ஞனும்
அருந்துயர்க் கடலுள் ஆழ்ந்தான்.

பொ :—'நீ இங்கு இருப்பாயாக, யான் சென்று நெடியவனுகிய இராமனுக்கு (இங்கு நடந்ததை)ச் சொல்வேன்' என்று சொல்லி விட்டுப் போனுன் ; அனலன் அவ்வாறு சென்று அந்தப் புண்ணிய மூர்த்தியாகிய இராமன் திருவடிகளைப் பொருந்தி வணங்கி நேர்ந்த வினைகளையெல்லாம் சொல்லி நின்ருன் ; ஆயிரம் பெயர்களையுடைய திருமாலின் அமிசமான இராமனும் (அதுகேட்டு) ஆருத் துயரமாகிய கடலுள் ஆழ்ந்துவிட்டான்.

கு :—நெடியவன், புண்ணியன், ஆயிரம் பெயரினுன் என்ற முப் பெயர்களும் இராமனையே குறித்தன. பொலன்-பொன். கிடைத்தற் கருமை நினைந்து இராமன் பாதத்தைப் 'பொலன்கொள் பாதம்' எனச் சிறப்பித்தவாறு ; செந்தாமரை போன்ற அவன் பாதங்கட்கும் பொன்னிறம் இன்மை தெளிவு. பெரியோர்களிடத்தில் சென்று ஒன்று கூறுங்கால் மேற்கொள்ளவேண்டிய முறைமை புலப்படப் 'பாதம் மேயினன் வணங்கி' எனவும் 'இயம்பி நின்ருன்' எனவும் கூறியவாறு. ஆயிரம் பெயர் திருமாலுக்கு உண்டு ஆகலின் அவன் அமிசமாகப் பிறந்துவந்துள்ள இராமனையும் ஒற்றுமை நயம்பற்றி அப் பெயரால் கூறியவாறு. ''ஆயிரம் பெயரவனடியில் வீழ்ந்தனர்'' (கும்பகருண-274) என முன்னும் இப் பெயரால் இராமன் குறிக்கப்

பட்டிருத்தல் காணலாம். அருந்துயர் என்றது ஆற்றமுடியாத துயரை. துயரின் பரப்புப் புலப்படக் கடலாக உருவகஞ் செய்தவாறு. அவ்வுருவகத்திற்கேற்ப 'ஆழ்ந்தான்' என்ற வினையும் கூறினர். ஆற்ருெணுப் பெருந்துயர் உற்ருன் என்பதே கருத்து.(214)

இராமன் இலக்குவற்கு நேர்ந்தது கேட்டுத் தேம்புதல்

8347. உரைத்தில ஞென்றுந் தன்னை
யுணர்ந்தில னுயிரு மோடக்
கரைத்திலன் கண்ணி னீரைக்
கண்டிலன் யாதுங் கண்ணுல்
அரைத்தில னுலக மெல்லா
மங்கையாற் பற்றிப் பொங்கி
இரைத்தில னுளனென் றெண்ணி
யிருந்தனன் விம்மி யேங்கி.

உரைத்திலன் ஒன்றும் — தன்னை
உணர்ந்திலன் உயிரும் ஓடக்
கரைத்திலன் கண்ணில் நீரை —
கண்டிலன் யாதும் கண்ணுல்;
அரைத்திலன் உலகம் எல்லாம்
அங்கையால் பற்றி; பொங்கி
இரைத்திலன், 'உளன்' என்று எண்ணி
இருந்தனன் விம்மி ஏங்கி.

பொ :—(இராமன், அனலன் சொல்லைக் கேட்டவுடன் ஒன்றும் சொல்லவில்லை; சிறிதும் தன்னை உணரவில்லை: உயிரும் தேய்ந்து போமாறு கண்ணில் நீரைப் பெருக்கவில்லை; (சின மிகுதியால்) உலகம் எல்லாவற்றையும் அகங்கையில் பற்றி அரைக்கவும் இல்லை; துன்பம் மேலிட்டுக் கதறவுமில்லை; (இலக்குவன் இறந்தானல்லன்) உளனுவன் என்று எண்ணி, (அவனுக்கு நேர்ந்த துன்பத்தை நினைந்து) தேம்பி ஏங்கிக்கொண்டிருந்தான்.

கு:—அனலன் சொல்லக்கேட்ட இராமன் வருந்தின நிலையைப் புலப்படுத்தியவாறு. இலக்குவன் முதலிய அனைவரும் இந்திரசித்து விடுத்த நாகக்கணையால் கட்டுண்டு இறந்தனர் என்று அனலன் கூறினுனயினும், இராமன் அதுகேட்டுப் பதறி யாதும் கூருமலும் கண்ணீர் விடாமலும் உலகை யழிக்கத்தக்க பெருங்கோபம் கொள்

ளாமலும், துன்பம் மேலிட்டு வாய்விட்டுக் கதருமலும் இலக்குவனுக்கு நேர்ந்த துன்பத்தை நினைந்து சிறிது தேம்பிக்கொண்டு ஏங்கியிருந்தான் என்றவாறு. உலகம் முழுவதையும் அழிக்கும் ஆற்றல் இராமனுக்கு இருந்தும் பெருஞ்சினங் கொண்டு அங்ஙனம் செய்திலன் என்றவாறு. சடாயு இராவணனால் வெட்டுண்டான் என்று அறிந்தவுடன் இராமன் பெருஞ்சினங் கொண்டு "நீயிக் கோளுறக் குலுங்கல் செல்லா. எண்டிசை யிறுதியான வுலகங்க ளிவற்றை யின்னே, கண்ட வானவர்களோடுங் களையுமாறின்று காண்டி" (சடாயு வுயிர்நீத்த-204) என்று கூறியுள்ளது நினைக்க. இங்கு அங்ஙனம் கூறவில்லை என்பதே கருத்து. அனலன் சொல்லைக் கேட்டுக் கோபத்தை மிகுதியாகக் கொள்ளாதது போலவே துன்பமும் மிகுதியாகக் கொள்ளவில்லை என்பார், 'பொங்கி இரைத்திலன்' என்ருர். இலக்குவன் ஆற்றலை உள்ளவாறுணர்ந்தவன் இராமன் ஆதலின், அவன் இறந்தான் என்று கொள்ளாமல் 'உளன்' என்றே எண்ணி அவனுக்கு நேர்ந்த துன்பத்தை நினைந்து தேம்பி ஏங்கிக் கொண்டிருந்தான் என்றவாறு. இவ்வாறு ஏங்கி இருத்தல் நன்றன்று என்று எழுந்து இலக்குவன் கிடப்பதை நேரிற் கண்டபோது "ஐயன் தான் அவன்மேல் வீழ்ந்தான்; அழுந்துற மார்பிற்புல்லி, 'உய்யலன்' என்ன, ஆவி உயிர்த்து உயிர்த்து உருகுகின்ருன்; பெய் இருதாரைக் கண்ணீர்ப் பெருந்துளி பிறங்க, வானின் வெய்யவன் தன்னைச் சேர்ந்த நீல்நிற மேகம் ஒத்தான்" (221) எனப் பின் இராமன் உயிர்த்து உயிர்த்து உருகுவதையும், கண்ணீர் விட்டு அழுவதையும் கூறியுள்ளது காணலாம். அனலன் சொல்லைக் கேட்டபோது இலக்குவன் 'உளன்' என்று எண்ணி ஏங்கியிருந்த இராமன், நேரிற் கண்டபோது 'உய்யலன்' என்று கருத்தை மாற்றிக்கொண்டு அழுதமை காணலாம். 'உயிரும் ஓடக் கரைத்திலன் கண்ணினீரை' என்றது, பெருந்துன்பத்தால் கண்ணீர் விடும்போது உயிரும் வலி தேய்ந்து போகும் இயல்பைப் புலப்படுத்தியவாறு. "கரைவித்தான் உயிரைக் கண்போல்" (210) என வீடணன் துன்புற்றதைப் பற்றிக் கூறியுள்ளதும் நினைக. (215)

ஏங்கியிருந்த இராமன் போர்க்களம் சேர்தல்

8348. விம்மினன் வெதும்பி வெய்துற்
றேங்கின னிருந்த வீரன்
இம்முறை யிருந்து செய்வதி
யாவது மில்லென் றெண்ணிப்

பொம்மெனும் விம்ம லோடும்
பொருக்கென வெழுந்து போனன்
தெம்முறை துறந்து வென்ற
செங்கள மருங்கிற் சேர்ந்தான்.

விம்மினன் வெதும்பி வெய்துற்று
ஏங்கினன், இருந்த வீரன்
'இம்முறை இருந்து செய்வது
யாவதும் இல்' என்று எண்ணி,
பொம்மெனும் விம்ம லோடும்
பொருக்கென எழுந்து போனன்
தெம் முறை துறந்து வென்ற
செங்கள மருங்கிற் சேர்ந்தான்.

பொ :—(அவ்வாறு) தேம்பி மனம் வெதும்பி உடம்பு வெம்மையுற்று வருந்தியிருந்த இராமன், 'இவ்வாறு வருந்திக்கொண்டு இங்கிருந்து செய்வது ஒன்றும் இல்லை' என்று எண்ணிப் பொம்மெனும் ஒலியெழுதற்குரிய தேம்புதலோடும் விரைந்து எழுந்து சென்று, பகைவன் முறைதவறி வென்ற, குருதியாற் சிவந்த, போர்க்களத்துச் சேர்ந்தான்.

கு :—மேலைச் செய்யுளிற் கூறியதையே அனுவதித்து 'விம்மினன் ......ஏங்கினனிருந்த வீரன்' என்ருர் விம்மினன், ஏங்கினன் என்பன முற்றெச்சங்கள். வீரன் என்பது இராமனை. ஏங்கியிங்கிருந்து பயனில்லை என்று கருதுதற்குரிய தகுதிபுலப்பட அவனை வீரன் என்ற சொல்லால் குறித்தவாறு. விம்மலுக்கு அடையாகப் 'பொம் மெனும்' என்ற சொல்லைப் புணர்த்தியது, விம்முங்கால் உளதாகும் ஒலிக்குறிப்பை உணர்த்தவேண்டி, பொருக்கென என்பது விரைவுக் குறிப்பு. போனன் சேர்ந்தான் என முற்றெச்சமாக்கி முடிக்க. தெவ் - பகை, இங்குப் பகைவனுகிய இந்திரசித்தினை உணர்த்தியது. முறை துறந்து என்றது, விண்ணில் மறைந்து நின்று நாகக் கணைகளை எய்ததனை. தெவ்முறை–தெம்முறை ஆயது. குருதியால் சிவந்திருத்தலின், போர்க்களம் 'செங்களம்' எனப்பட்டது. "செங்களம்படக் கொன்றவுணர்தேய்த்த" (குறுந்தொகை-1) என்பது இங்கு நினையலாம். இராமன் செல்லுதற்கே தகுதியற்ற களம் என்ற குறிப்புப் புலப்பட 'தெம்முறை துறந்து வென்ற செங்களம்' என்ருர்.
(216)

## போர்க்களம் இருள் சூழ்ந்திருத்தல்

8349. இழிந்தெழு காள மேக
மெறிகட லனைய மற்றும்
ஒழிந்தன நீல வண்ண
முள்ளன வெல்லா மொக்கப்
பிழிந்தது கால மாகக்
காளிமைப் பிழம்பு போதப்
பொழிந்தது போன்ற தன்றே
பொங்கிருட் கங்குற் போர்வை.

இழிந்து எழும் காள மேகம்,
எறிகடல் அனைய மற்றும்
ஒழிந்தன, நீல வண்ணம்
உள்ளன எல்லாம் ஒக்கப்
பிழிந்து அது காலம் ஆகக்
காளிமைப் பிழம்பு போதப்
பொழிந்தது போன்றது அன்றே —
பொங்கி இருட்கங்குற் போர்வை.

பொ:—மிக்க இருள் செறிந்த இரவு ஆகிய போர்வையின் தோற்றம் - கடலில் இறங்கி எழுகின்ற கரிய மேகமானது, அலை வீசுகின்ற கடலையும், அக்கடல் போன்றனவாய் மற்றும் எஞ்சியுள்ள நீலவண்ணமுள்ள எல்லாப் பொருள்களையும் ஒருசேரவாரிப் பிழிந்து, அவ்விராப்பொழுதே (பொழுதற்குரிய) காலமாகக்கொண்டு கருமையின் வடிவம் தோன்றுமாறு பொழிந்ததைப் போன்றிருந் தது.

கு :—கங்குற் போர்வை :- காளமேகம் பொழிந்தது போன்றது என இயையும். மேகம் கடலில் இறங்கி நீர் குடித்துவிட்டு எழும் போது கருநிறம் பெற்று விளங்கும் இயல்பு புலப்பட 'இழிந்தெழு காளமேகம்' என்றார். காளமேகம் - கரிய மேகம். கடல் நீரை மட்டுமே அருந்திப் பொழியும் இயல்புள்ள மேகம் இப்போது கடல் நீரோடு அக்கடல் வண்ணம் போன்ற நீலவண்ணமுடைய எல்லாப் பொருள்களையும் வாரிப் பிழிந்து பொழிந்ததுபோல இர வின் இருள் செறிவுள்ளதாக இருந்தது என்றவாறு. காரிருள் மூடியுள்ள தோற்றம், உலகம் கரிய போர்வையால் போர்க்கப் பட்டது போலக் காணப்படும் இயல்பு நினைந்து, 'இருட்கங்குற் போர்வை' என உருவகஞ் செய்தார். இருட்செறிவையுடைய

இரவாகிய போர்வை என்க. காளிமை - கருமை. பிழம்பு-வடிவம். கருமைப் பண்பிற்கு வடிவம் உண்டாக்குமாறு என்க. போத - உண்டாக. மேகமானது, உலகில் கருமையின் வடிவம் தோன் றும்படி, கருநிறப் பொருள்களை யெல்லாம் வாரிப்பிழிந்து பொழிந் தது போன்றது என்றது, தற்குறிப்பேற்ற அணி. கையால் அள் ளிக் கொள்ளலாம்படி இருளின் செறிவு திட்பமான வடிவமுடைய தாக இருந்தது என்றவாறு. ஒக்க வாரிப் பிழிந்து என ஒரு சொல் வருவிக்க. அன்று, ஏ அசை நிலை. (217)

### இராமன் அனலம்பில் இருளை அகற்றல்

8350. ஆரிரு ளன்ன தாக
வாயிர நாமத் தண்ணல்
சீரிய வனலித் தெய்வப்
படைக்கலந் தெரிந்து வாங்கிப்
பாரிய விடுத்த லோடும்
பகையிரு ளிரிந்து பாறச்
சூரிய னுச்சி யுற்ற
லொத்தா லுலகின் சூழல்.

ஆர் இருள் அன்னது ஆக,
ஆயிர நாமத்து அண்ணல்,
சீரிய அனலித் தெய்வப்
படைக்கலம் தெரிந்து வாங்கி,
பாரிய விடுத்த லோடும்,
பகை இருள் இரிந்து பாற,
சூரியன் உச்சி உற்ற
லொத்ததால் உலகின் சூழல்.

பொ:—நிறைந்த இருள் அத்தன்மையதாக இருக்கக் கண்ட இராமன், சிறப்புடைய தெய்வத்தன்மை வாய்ந்த அக்கினிக் கணையைத் தேர்ந்து எடுத்து, ஒளி பரவுமாறு விடுத்த அளவில் ஒளிக்குப் பகையாகிய இருள் இரிந்து ஓடி விடவே, உலகப் பரப்பு சூரியன் உச்சிவானத்தில் உற்றாற்போன்ற நிலைமையுடையதாயது.

கு:—ஆர் இருள் — நிறைந்த இருள். ஆயிர நாமத்தண்ணல் என்றது இராமனுக்கு ஒற்றுமை பற்றி வந்த பெயர் என்பது 'ஆயி ரம் பெயரினனும்' (214) என்புழி உரைக்கப்பட்டது. அனலித் தெய்வப் படைக்கலம் என்பது, அங்கியங் கடவுளின் அமிசமான

அம்பினை "அங்கியினெடும்படை வாங்கியங்கது, செங்கையிற் கரியவன் திரிக்கும் எல்லையில் பொங்கிருள் அப்புறத்து உலகம் புக்கது, கங்குலும் பகல் எனப் பொலிந்து காட்டிற்றே" (ஆரணிய, அயோமுகிப்-80) என்று முன் கூறியுள்ளது இங்கு ஒப்பு நோக்கத் தகும். பாரிய - பரவ. இனிக் காண் என்னும் பகுதியடியாகக் காணிய என்னும் எச்சம் தோன்றியதுபோலப் பார் என்னும் பகுதியடியாகப் பாரிய என்ற செய்யிய என்னும் எச்சம் தோன்றியது எனக்கொண்டு, இலக்குவனைப் பார்க்க என்று பொருள் கூறலும் ஆம். பகையிருள் என்பதற்குக் கண் பார்வைக்குப் பகையாகிய இருள் எனப் பொருள் கூறலும் ஆம். பகற்பொழுது ஒளி மிக்கதாகத் தோன்றுகின்ற காலம் சூரியன் உச்சியுற்ற காலமே ஆதலின் அங்கியம் படையால் பேரொளி தோன்றியதற்கு உவமையாக அக்காலத்தையே கூறினர். போர்க்களத்தை மூடியிருந்த இருளை அகற்ற வீட்ட அங்கியம்படை உலகை மூடிய இருளையே ஓட்டிவிட்டது என அப்படையின் சிறப்பும் புலப்படுத்தியவாறு. இராப்பொழுது நண்பகல் போன்று தோன்றிற்று என்க. சூழல்—பரப்பு. (218)

## இராமன் போர்க்களத்தைக் காணுதல்

8351. படையுறு பிணத்தின் பம்மற்
பருப்பதந் துவன்றிப் பல்வே
றிடையுறு குருதி வெள்ளத்
தெறிகட லெழுநீர் பொங்கி
உடையுறு தலைக்கை யண்ண
லுயிரெலா மொருங்கி யுண்ணும்
கடையுறு காலத் தாழு
முலகன்ன களத்தைக் கண்டான்.

படை உறு பிணத்தின் பம்மல்
பருப்பதம் துவன்றி, பல்வேறு
இடை உறு குருதி வெள்ளத்து,—
எறிகடல் எழுநீர் பொங்கி,
உடை உறு தலைக்கை அண்ணல்
உயிர் எலாம் ஒருங்கி உண்ணும்
கடை உறு காலத்து ஆழும்
உலகு அன்ன — களத்தைக் கண்டான்.

பொ :—(இந்திரசித்துவிட்ட) அம்புகள் தைக்கப்பெற்ற பிணத்தின் குவியலாகிய மலைகள் நெருங்கப் பெற்றுப் பல வேறு வகையாகத் தோன்றி இடையிடையே ஓடுகின்ற இரத்த வெள்ளத்தில் அலை வீசுகின்ற ஏழு கடல் நீரும் பொங்கப் பெற்று, பிரமனது உடைந்த தலையை யேந்திய கையையுடைய உருத்திரன், உலக உயிர்களை யெல்லாம் ஒன்று சேர்த்து உண்ணுகின்ற ஊழியிறுதியாகிய காலத்தில் (அப்பிரளய வெள்ளத்தில்) ஆழ்கின்ற உலகத்தைப்போன்ற (ஆழ்ந்து கிடக்கும்) போர்க்களத்தை (இராமன்) பார்த்தான்.

கு :—குருதி வெள்ளத்துக் களத்தைக் கண்டான் என இயையும். எழுகடல் நீர் என மாறுக. பொங்கி பொங்கப்பெற்று செயப்பாட்டு வினைப்பொருளது எழுகடல் நீர் பொங்கப்பெற்று அண்ணல் உயிரெலாம் உண்ணும் கடையுறு காலத்து ஆழும் உலகு அன்ன களம் என்க ஆழும் உலகன்ன என்ற உவமைக் கேற்பக் குருதி வெள்ளத்து ஆழும் களம் எனப் பொருளினும் வருவிக்கப்பட்டது. இரத்த வெள்ளத்தில் மறைந்து கிடக்கும் போர்க்களம் என்றவாறு. ஊழி இறுதியில் உருத்திரன் உயிர்களை யெல்லாம் ஒருங்கே அழிப்பான் என்பது நூற்கொள்கை. உடையுறுதலை என்றது, பிரமனது உடைந்த தலையை. 'ஊனார் உடைதலையிலுண்பலி தேர் அம்பலவன்' (திருவாசகம் - திருக்கோத்தும்பி -) என்றது காண்க. தலைக்கை யண்ணல் உயிரெலாம் ஒருங்கியுண்ணும் கடையுறு காலம் என்று கடையுறு காலத்திற்கு அடையாக்குக. ஒருங்கி – ஒன்று சேர்த்து. எழுகடல்நீர் பொங்கப்பெற்று ஆழும் உலகு அன்ன களம் என்பதே கருத்து பிரளய வெள்ளம் போன்றது. அவ்வெள்ளத்தில் மூழ்கிக் கிடக்கும் போர்க்களம், பிரளய வெள்ளத்தில் ஆழும் உலகம் போன்றது. இந்திரசித்து உடையுறு தலைக்கையண்ணல் போன்றான். வானர சேனைகள் அழிந்து கிடப்பது, உருத்திரனால் அழிக்கப்பெற்ற உயிர்களின் உடலங்களைப் போன்றது என உவமையை விரித்துக்கொள்க. உண்ணுதல் என்றது, இங்கு அழித்தலை உணர்த்தியது, பம்மல் - குவியல். பிணத்தின் குவியலாகிய பருப்பதம் என்க. (219)

## இராமன் இலக்குவனைக் காணுதல்

8352. பிணப்பெருங் குன்றி னூடுங்
குருதிநீர்ப் பெருக்கி னூடும்
நிணப் பெருஞ் சேற்றி னூடும்
படைக்கல நெருக்கி னூடும்

மணப் பெருங் களத்தின் மோடி
மங்கல வாழ்க்கை வைப்பில்
கணத்தினும் பாதிப் போதிற்
றம்பியைச் சென்று கண்டான்.

பிணப்பெருங் குன்றி னூடும்,
குருதிநீர்ப் பெருக்கி னூடும்,
நிணப்பெருஞ் சேற்றி னூடும்
படைக்கல நெருக்கி னூடும்,
மணப் பெருங் களத்தில் மோடி
மங்கல வாழ்க்கை வைப்பில்
கணத்திலும் பாதிப் போதி ம
தம்பியைச் சென்று கண்டான்.

பொ :—கொற்றவையின் மங்கல வாழ்க்கைக்குரிய இடம் போன்ற, புலால் மணங்கமழுகின்ற, பெரிய போர்க்களத்தில் – பிணங்களாலாய பெரிய மலைகளின் நடுவிலும், இரத்த நீர் வெள்ளத்திற்கு நடுவிலும், நிணத்தினாலாகிய பெரிய சேற்றுக்கு நடுவிலும், படைக்கலங்களின் நெருக்கத்திற்கு நடுவிலும் அரைக்கணப் பொழுதில் சென்று (இராமன்) தன் தம்பியைப் பார்த்தான்.

கு :—இராமன் விரைந்து செல்ல முடியாதபடி, குன்றுகளும் வெள்ளமும், சேறும், படைக்கலங்களும் குறுக்கே நின்று தடுக்கவும், இராமன் அரைக்கணத்தில் விரைந்து சென்று இலக்குவனைக் கண்டான் என அவன் ஆர்வ மிகுதியைப் புலப்படுத்தியவாறு. மோடி – கொற்றவை. இவள் வீரத்திற்குரிய தெய்வமாதலின் வீரங் காட்டிப் போர் செய்யும் போர்க்களம் இவளது மங்கல வாழ்க்கைக்குரிய வைப்பாகக்கூறப்பட்டது. வைப்பில் என்புழி இல் உவமப் பொருளது. வாழ்க்கை வைப்புப் போன்ற களத்தில் என்க. மணம் என்றது புலால் மணத்தை. இனிக் கொற்றவை வீரன் தோளை மணப்பாள் என்ற முறையை யுட்கொண்டு, அவள் வீரனை மணப்பதற்குரிய இடம் போர்க்களமே யாதலின் 'மணப்பெருங்களத்தில் என்றார்' என்றும், அக்களத்தில் வீரனாகிய இலக்குவன் வீழ்ந்து கிடக்கும் இடம் மோடியின் மங்கல வாழ்க்கை தொடங்குதற்குரிய இடமாதலின் 'மோடி மங்கல வாழ்க்கை வைப்பில்' என்றார் என்றும், பொருள் கொண்டு கிடந்தவாறே கூறினும் அமையும். பிணப் பெருங் குன்று, குருதிநீர்ப் பெருக்கு, நிணப் பெருஞ்சேறு என்பன உருவகங்கள். (220)

## இராமன் இலக்குவன் மேல் வீழ்ந்து அழுது அரற்றல் 8353—8354

8353. அய்யவ ணுக்கை தன்மேல்
விழுந்துமார் பழுந்தப் புல்லி
யுய்யல னென்ன வாவி
யுயிர்த் துயிர்த் துருகு கின்றான்—
பெய்யிரு தாரைக் கண்ணன்
பெருந்துளி பிறங்க வானின்
வெய்யவன் றன்னைச் சார்ந்த
நீனிற மேக மொத்தான்.

அய்யவன் ஆக்கை தன்மேல்
விழுந்து, மார்பு அழுந்தப் புல்லி,
'உய்யவன்' என்ன ஆவி
உயிர்த்து உயிர்த்து, உருகுகின்றான்,
பெய் இரு தாரைக்கண்ணன்;—
பெருந்துளி பிறங்க, வானின்
வெய்யவன் தன்னைச் சேர்ந்த
நீல்நிற மேகம் ஒத்தான்.

பொ :—விலக்கத்தக்க வீரமுடையபவனாகிய இலக்குவனது உடம் பின்மேல் விழுந்து, (அவன் மார்பொடு தன்) மார்பு அழுந்து மாறு அணைத்துக்கொண்டு, 'இவன் உயிர் பிழைக்கமாட்டான்' என்று நினைந்து பெருமூச்சு விட்டுக்கொண்டு கண்ணீர்த் தாரை பெய்கின்ற இரு கண்களையுடையவனாய் 'உருகுகின்ற இராமன்,- பெரிய நீர்த்துளிகள் தன்பால் விளங்க, வானத்தில் உள்ள சூரிய னைச் சேர்ந்திருக்கும் நீல நிறமுடைய மேகத்தை ஒத்தான்.

கு :— இலக்குவன் வியக்கத்தக்க வீரமுடையவனாதலின் ஐய வன் எனப்பட்டான். முன்பு இலக்குவன் உளன் என்ற எண் ணத்தால் கண்ணினீரைக் கரையாதிருந்தான் என்று (215) கூறி யவர் இப்போது 'உய்யலன் இலக்குவன் 'என்ற எண்ணத்தால் 'பெய்யிருதாரைக் கண்ணனாய் உருகுகின்றான்' என்றார். நீல நிற முடைய இராமன், கண்ணீர் சொரிந்து கொண்டு பொன்னிற முடைய இலக்குவன்மேல் வீழ்ந்திருக்கும் தோற்றம், நீல நிற முடைய மேகம் ஒன்று பெரிய நீர்த்துளிகளைச் சொரிந்துகொண்டு வானில் உள்ள சூரியனைச் சார்த்துள்ளதுபோல இருந்தது என்ற வாறு. வெய்யவன் என்றது, வெஞ்சுடர் மண்டலமாகிய சூரியனை.

இலக்குவன் சூரியனைப் போன்ருன்; இராமன் அச்சூரியனைச் சார்ந்துள்ள நீலமேகத்தை ஒத்தான்; இராமன் கண்ணீர் மழைத் தாரை போன்றது; என்றவாறு. இதனுல் இராமனுடைய துன்பப் பெருக்கினைப் புலப்படுத்தியவாறு; தாரைக் கண்ணனுய் உருகு கின்ருன் மேக மொத்தான் என இயையும். கண்ணன் முற்றெச்சம்; உருகுகின்ருன், வினையாலணையும் பெயர். இனி, உருகு கின்ருனைத் தாரை பெய்கின்ற கண்ணையுடைய இராமன் எனக் கிடந்தாங்கே கூறலுமாம். இப்பொருட்குக் கண்ணன் என்பது குறிப்பு வினையாலணையும் பெயர் எனக் கொள்க. நீல் என்பது கடைக்குறை. (221)

8354. உழைக்கும் வெய் துயிர்க்கு மாவி
யுருகும்போ யுணர்வு சோரும்
இழைக்குவ தறித றேற்ரு
னிலக்குவா விலக்கு வாவென்
றழைக்குந்தன் கையை வாயின்
மூக்கின்வைத் தயர்க்கு மையா
பிழைத்தியோ வென்னு மெய்யே
பிறந்தேயும் பிறந்தி லாதான்.

உழைக்கும்; வெய்து உயிர்க்கும்;
ஆவி உருகும்; போய் உணர்வு, சோரும்;
இழைக்குவது அறிதல் தேற்ருன்,
'இலக்குவா! இலக்குவா!' என்று,
அழைக்கும்; தன் கையை வாயின்,
மூக்கின் வைத்து, அயர்க்கும்; 'ஐயா!
பிழைத்தியோ!' என்னும் —
மெய்யே பிறந்தேயும் பிறந்திலாதான்.

பொ:—வருந்துவான்; வெம்மையாகப் பெருமூச்சு விடுவான்; உயிர் உருகுவான்; உணர்விழந்து சோர்வான்; செய்வது இன்னது என்று அறியாது, 'இலக்குவா! இலக்குவா!' என்று அழைப்பான்; தன் கையை இலக்குவன் வாயிலும் மூக்கிலும் வைத்து (மூச்சு உளதா என்று பார்த்து) வருந்துவான்; ஐயனே! பிழைப்பாயோ என்று கதறுவான்; யாரெனின்? உண்மையாகப் பிறந்தும் ஏனையோர்போல் வினைவயத்தால் பிறவாதவனுகிய இராமன்.

கு :—மற்றையோர் பிறப்பது வினைவயத்தால் ஆதலின், அவர்கள் தன்னிலை யறியாது உறவினரை இழந்தபோது அழுது புலம்புவது இயல்பு; ஆயின், அவர்கள்போல் வினைவயத்தால் பிறவாமல் தன்னிச்சையாக அவதரித்தவனாகிய இராமனும் அழுது புலம்புவது இயல்பன்றாயினும், இலக்குவனுற்ற துன்பம்தன் உண்மை நிலையையும் மறப்பித்து விட்டது என்பது இதனால் புலப்படுத்தியவாறு. திருமாலின் அவதாரங்கள் பலவும் பிறர் பிறப்பிக்கப் பிறவாமல் தன்னிச்சையாகப் பிறந்தனவேயாம். இதனை - "முதன் முறையிடைமுறை கடைமுறை தொழிலிற், பிறவாப் பிறப்பிலை பிறப்பித்தோரிலையே" (பரிபாடல் - 3 : 71, 72) எனக் கடுவன் இளவெயினனார் கூறுவதால் அறியலாம். பிறந்தேயும் மெய்யே பிறந்திலாதான் என இயைப்பினும் ஆம். இச்செய்யுளில் அழுகைக்குரிய மெய்ப்பாடுகள் யாவும் அமைந்துள்ளமை காணலாம். கையை வாயினும் மூக்கினும் வைத்துப் பார்ப்பது மூச்சுக் காற்று உளதா? என்று அறிவதற்காகும். அப்படிப் பார்த்தபோது உயிர்ப்பு இருப்பது தெரியாமையால், இராமன் அயர்வானாய் 'ஐயா! பிழைத்தியோ' என்று கதறினான் என்க. தன்னிச்சையால் பிறந்த இராமனுக்கு இனி நிகழப்போவது தெரியுமாயினும் ஒப்புக்கு அழுகின்றான் என்ற குறிப்பு இறுதித் தொடரால் புலப்படுத்திய நயம் நயத்தற்குரியது. (222)

### இராமனுடைய தாய்மைச் செயல்கள்

8355. தாமரைக் கையாற் றாளைத்
தைவருங் குறங்கைத் தட்டும்
தூமலர்க் கண்ணை நோக்கு
மார்பிடைத் துடிப்புண் டென்னா
ஏமுறும் விசும்பை நோக்கு
மெடுக்குந்தன் மார்பி லேற்றும்
பூமியில் வளர்த்துங் கள்வன்
போயகன் றானோ வென்னும்.

தாமரைக் கையால் தாளைத்
தைவரும்; குறங்கைத் தட்டும்;
தூமலர்க் கண்ணை நோக்கும்;
'மார்பிடைத் துடிப்பு உண்டு' என்னா,

ஏமுறும் ; விசும்பை நோக்கும் ;
எடுக்கும் ; தன் மார்பில் ஏற்றும்;
பூமியில் வளர்த்தும் ; 'கள்வன்
போய் அகன்ருனே?' என்னும்.

பொ :—தாமரை மலர்போன்ற தன் கையால் இலக்குவன் பாதங்களைத் தடவுவான்; அவன் தொடையைத் தட்டுவான்; அவனுடைய தூய தாமரை மலர்போன்ற கண்ணைப் பிரித்துப் பார்ப்பான் ; மார்பில் துடிப்பு இருக்கின்றது என்று மகிழ்வான்; அவனைக் கையால் தூக்குவான் ; தன் மார்பில் ஏற்றிக் கொள்வான் ; பின் தரையில் கிடத்துவான் ; வானத்தை நிமிர்ந்து பார்ப்பான் ; (அங்கு இந்திரசித்து இல்லாமை தெரிந்து) கள்வனுகிய இந்திர சித்து போய்விட்டானே ?' என்பான்.

பொ — இலக்குவனுக்கு உயிரிருக்கின்றதா ? என்பதை அறியவே, தாளைத் தைவருதலும், குறங்கைத் தட்டுதலும், கண்ணை நோக்குதலும் ஆகிய செயல்களை இராமன் செய்தான். மார்பில் துடிப்பு உள்ளதை அறிந்த அளவிலே மகிழ்தலும் அன்பினுல் அவனை எடுத்தலும் தன் ஏற்றிக் கொள்ளுதலும் பின் பூமியில் தன் மார்பில் எடுத்து அணைத்தலும் ஆகிய செயல்கள் இராமனுடைய தாய்மை யுள்ளத்தைக் காட்டுகின்றன. விசும்பை நோக்கிக் 'கள்வன் போயகன்ருனே ?' என்றது போகாதிருந்தால் அவனைச் சின்னபின்னமாக்கும் குறிப்பைப் புலப்படுத்தியது. வளர்த்துதல்—கிடத்துதல். (223)

## இராமனுடைய வீரக்குறிப்புகள் 8356—8357

8356. வில்லினை நோக்கும் பாச
விசிப்பினை நோக்கும் வீயா
அல்லினை நோக்கும் வானத்
தமரரை நோக்கும் பாரைக்
கல்லுவன் வேரோ டென்னும்
பவளவாய் கறிக்கும் கற்ருேர்
சொல்லினை நோக்கும் தன்பொற்
புகழினை நோக்கும் தோளான்.

வில்லினை நோக்கும் ; பாச
விசிப்பினை நோக்கும் ; வீயா
அல்லினை நோக்கும் ; வானத்து
அமரரை நோக்கும் ; பாரைக்

கல்லுவன் வேரோடு என்னும் ;
பவளவாய் கறிக்கும் மற்றோர்
சொல்லினை நோக்கும் ; தன்போற்
புகழினை நோக்கும் தோளான்.

பொ :— வலிமை மிக்க தோள்களை உடைய இராமன், — (நாக பாசத்தால் கட்டுண்டு கிடக்கின்ற) வில்லினை நோக்குவான்; நாகபாசத்தின் கட்டுகளை நோக்குவான் ; (அந்தக் கட்டுகளைச் சரியாகப் பார்க்கவும் ஒண்ணாது மறைத்திருக்கின்ற) விடியாத இரவினை நோக்குவான் ; வானத்தில் உள்ள தேவரை நோக்குவான் ; (சினமிக்கு) 'பூமியை வேரோடு பெயர்த்து விடுவேன்' என்று சொல்லுவான் ; அந்தச் சினக் குறிப்பால் பவளம்போன்ற தன் வாயிதழைக் கடிப்பான் ; (பின்பு) கற்றோர் சொல்லியுள்ள நீதிச் சொற்களை நோக்குவான் ; தன்னுடைய பொறிபோற் சிறந்த புகழினை நோக்குவான்.

கு :— வேற்றுமை நயம்பற்றி வில் என்றது இங்கு இலக்குவனது வில்லினை. வரும் செய்யுளில் 'பார வெஞ்சிலையை நோக்கும்' என இராமன் தன் பெரிய வில்லினை நோக்கியதைக் கூறியுள்ளமை காணலாம். பகைவர் பலரையும் அழித்துள்ள இலக்குவனது வில் இப்போது வாளா கிடத்தலை நோக்குவான் என்க. தன் படைகள் எல்லாம் வீந்தும் இந்த இரவு வீய்ந்திலதே என்று இராமன் சினத்துடன் இரவை நோக்குவான் என்க. அமரரை நோக்கியது, இவ்வளவு துன்பத்தையும் இமையாது பார்த்துக் கொண்டு யாதும் துணை செய்யாது போயினரே என்ற வெறுப்பினாலே யாரும் வானத்தைப் பார்த்தவன், மண்ணையும் பார்த்து இம்மண்ணில் உள்ளோரும் இக்கொடுமையைப் பார்த்துக்கொண்டிருந்தனரே இவர்க்கு ஆதாரமாகிய பாரினை வேரோடு கல்லுவன் என்று சினந்து கூறுவானானான். விண்ணையும் மண்ணையும் அழிக்கும் குறிப்பால் சினந்து நோக்கின இராமன், தனக்குத் துன்பம் செய்தவனை விடுத்து அவனுக்கு அஞ்சிக்கிடக்கும் விண்ணவரையும் மண்ணவரையும் அழிப்பது அறமாகாதே எனக் கற்றோர் சொல்லிய அறநூற் கருத்துக்களை நோக்கி அது செய்யாதிருந்தான் என்றவாறு. அற நோக்கி அமைதியுறத்தக்கவன் என்ற குறிப்பு அமையவே 'தன் பொற்புகழினை நோக்கும் தோளான்' என்று இராமனைக் குறித்தார். கற்றோர் சொல் என்றது அறநூலை. இதுகாறும் அறத்திற்கு மாறுபடாது ஒழுகியதால் உளதாகிய தன் புகழ்க்கு மாறுபட இப்போது செய்தலாகாது என்றவாறு. (224)

8357. வீரரை யெல்லாம் நோக்கும்
விதியினை நோக்கும் வீரப்
பாரவெஞ் சிலையை நோக்கும்
பகழியை நோக்கும் பாரில்
யாரிது பட்டா ரென்போ
லெளிவந்த வண்ண மென்னும்
நேரிது பெரிதென் றோது
மளவையி னிமிர நின்றான்.

வீரரை எல்லாம் நோக்கும்;
விதியினை நோக்கும்; வீரப்
பார வெஞ்சிலையை நோக்கும்;
பகழியை நோக்கும்; 'பாரில்
யார் இதுபட்டார்' என்போல்
எளிவந்த வண்ணம்?' என்னும்;
நேரிது, பெரிது' என்று ஓதும்—
அளவையின் நிமிர நின்றான்.

பொ :—ஒப்பது என்றும் உயர்ந்தது என்றும் கூறுகின்ற அளவுகளைக் கடந்தவனாகிய இராமன் — அங்கு இறந்து கிடக்கும் வானர வீரரை யெல்லாம் நோக்குவான்; (இவர்களை யெல்லாம் ஒருங்கே இறக்குமாறு செய்வித்த) விதியை மனத்தால் நோக்குவான்; (இவ்வீரரை யெல்லாம் வீழ்த்திய இந்திரசித்தினை வீழ்த்தாத) வீரமிக்க பெரிய கொடிய தன் வில்லை நோக்குவான்; அவ்வில்லில் தொடுத்து விடுத்தற்குரிய அம்புகளை நோக்குவான்; இப்பூமியில் என்னைப்போல எளிமைப்பட்ட இந்நிலையை அடைந்தவர்கள் யாருளர்? என்று கூறுவான்.

கு :—முன் இலக்குவன் நிலையை மட்டும் நோக்கியிருந்த இராமன், இப்போது வீரரை எல்லாம் நோக்கினான் என்க. விதியினால் வினையாதது இல்லை யாதலின், இவ்வானர வீரரெல்லாம் இவ்வாறு ஒரு சேர அழிதற்கும் விதியே காரணமாக இருத்தல் வேண்டும் என்று எண்ணுவான் என்பார். 'விதியினை நோக்கும் என்றார். வீரமும் பாரமும் உள்ள, தன் வில் இப்போது யாதும் பயன்படாது இருக்கின்றதே என்ற எண்ணத்தால், தன் வில்லையும் நோக்குவானானான் என்க. அரசைத் துறந்து, தாய் தந்தையரைப் பிரிந்து, கானகத்திருந்து மனைவியைப் பிரிந்து, தம்பியையும் துணையாக வந்த நண்பர்களையும் இழந்து நிற்கும் இவ்விழி நிலை இவ்வுலகில் வேறு ஒருவர்க்கும் நேர்ந்திராது என்பான்,

பாரில் யாரிது பட்டா ரென்போல் எளிவந்த வண்ணம்' என்று கூறுவானுனன். பாரில் என்போல் எளிவந்த வண்ணம் இது பட்டார் யார்? என இயையும். ஒருவரும் இலர் என்றவாறு. யார் என்றது யாருளர் என்றபடி. அறத்தைக் கடைப்பிடிக்கும் தனக்கு இத்தகைய அல்லல் அடுக்கி வருதல் தக்கதன்று என்பது இராமன் கருத்து தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாது உயர்வற வுயர்ந்த திருமாலின் அமிசமானவன் இராமன் என்றவாறு. 'ஒத்தார் மிக்காரை இலையாய மாமாயா''(திருவாய்மொழி23-1)என்றது காண்க, இராமன் தன் உண்மை நிலையையே மறந்து துன்புறுகின்ருன் என்றவாறு. (225)

## இராமன் வீடணனேடு நொந்து கொள்ளுதல்

8358. எடுத்தபோ ரிலங்கை வேந்தன்
மைந்தனே டிளைய கோவுக்
கடுத்ததென் றென்னை வல்லை
யழைத்திலை யமரர் பாசம்
தொடுத்தகை தலையி னேடுந்
துணித்துயிர் துடைக்க வென்னைக்
கெடுத்தனை வீட ணநீ
யென்றனன் கேடி லாதான்.

'"எடுத்தபோர், இலங்கை வேந்தன்
மைந்தனேடு இளைய கோவுக்கு
அடுத்தது" என்று என்னை
வல்லை அழைத்திலை, அரவின் பாசம்
தொடுத்தகை தலையினேடும் துணித்து
உயிர் துடைக்க; என்னைக்
கெடுத்தனை; வீடண! நீ'
என்றனன் — கேடு இலாதான்.

பொ:—'வீடண! இலங்கை வேத்தனுகிய இராவணன் மைந்தன் இந்திரசித்தோடு இலக்குவனுக்குப் பெரும் போர் மூண்டுளது' என்று சொல்லி தேவர்கள் தந்த நாகபாசத்தைத் தொடுத்த (இந்திரசித்தின்) கையைத் தலையினேடு துண்டித்து அவனுயிரைப் போக்க நீ என்னை விரைவாக அழைக்காமல் போனுய்,' என்று நொந்து கொண்டான்; (யாரெனின்?) ஒரு காலத்தும் கெடுதல் இல்லாதவனுகிய திருமாலின் அமிசமான இராமன்.

கு :— இயல்பாகவே கேடிலாத இராமன், தன்னை வீடணன் கெடுத்ததாகத் துன்பமிகுதியால் கூறினன் என்று முரண் தொடை அமையக்கூறிய நயம் காண்க. எடுத்த போர் என்றது, பெரிய போரினை. போர் செய்ய அடுத்துள்ள இருதிறத்தாரின் சிறப்பும் புலப்பட 'இலங்கை வேந்தன் மைந்தன்' என இந்திரசித்தினையும் 'இளையகோ' என இலக்குவனையும் குறிப்பிட்டவாறு. ஒத்த தகுதியுடைய இவ்விருவரும் போர் தொடுத்துள்ளனர் என்பதை இராமனுக்கு வீடணன் சொல்லியிருக்க வேண்டும் என்பது கருத்து. அவ்வாறு சொல்லித் தன்னை அழைத்திருந்தால், நாக பாசத்தை விடுத்த இந்திரசித்தின் கையோடு தலையைத் துணித்து உயிர் போக்கியிருக்கலாமே என்பது இராமன் எண்ணம். அவ்வாறு அழையாமையால் இலக்குவன் முதலிய எல்லோரையும் இழக்க நேர்ந்தமை நினைந்து, 'என்னைக் கெடுத்தான் என வீடணனை நோக்கிக் கூறினன் இராமன், கேடிலாதன் இலங்கை வேந்தன் மைந்தனோடு இளைய கோவுக்கு எடுத்தபோர் அடுத்தது என்று பாசம் தொடுத்தகை தலையினோடும் துணித்து உயிர் துடைக்க, என்னை வல்லை அழைத்திலை; ஆதலால், என்னைக் கெடுத்தனை' என்றனன் என இயையும். வீடண! நீ என்னைக் கெடுத்தனை என்புழி, என்னலம் கருதி வாழ்கின்ற நீ உனக்கு வாழ்வளித்த, 'என்னை'க் கெடுத்தனையே எனச் சொல்லின் அழுத்தம் நோக்கி வேண்டும் சொற்களை வருவிக்க, வீடணன் அரக்கர் தம் புன்புலப் பிறப்பை நீக்கினவன் ஆகலின், இந்திர சித்தினைக் கூறும்போது நின் அண்ணன் மகனாகிய இந்திரசித்து என்று கூருது, இலங்கை வேந்தன் மைந்தனோடு' என்றே இத்துன்ப நிலையிலும் மறவாது கூறிய இராமனது பெருந்தகைமை நினைத்தற்குரிய சிறப்பினதாகும். (226)

## வீடணன் தான் சொல்லாமைக்குக் காரணம் கூறுதல்
## 8359—8364

8359. அவ்வுரை யருளக் கேட்டான்
அழிகின்ற அரக்கன் றம்பி
இவ்வழி யவன்வந் தேற்ப
தறிந்தில மெதிர்ந்த போதும்
வெவ்வழி யவனே தோற்கு
மென்பது விரும்பி நின்றேன்
தெய்வவன் பாசஞ் செய்த
செயலிந்த மாயச் செய்கை.

அவ் உரை அருளக் கேட்டான்,
அழிகின்ற அரக்கன் தம்பி
'இவ் வழி, அவன் வந்து ஏற்பது
அறிந்திலம்; எதிர்ந்த போதும்,
"வெவ்வழியவனே தோற்கும்"
என்பது விரும்பி நின்றேன்,
தெய்வ வன் பாசம் செய்த
செயல், இந்த மாயச் செய்கை

பொ:— முன்னமே மனம் அழிகின்ற வீடணன், அந்தச் சொல்லை இராமன் சொல்லக்கேட்டு, இவ்விடத்தில் அந்த இந்திர சித்து வந்து எதிர்ப்பதை யாரும் அறந்திலேம்; அவன் வந்து எதிர்த்துப் போர் செய்தபோதும் (போர் செய்ததை யான் அறிந்த போதும்) கொடியவனுகிய இந்திரசித்தே தோற்பான்' என்பதையே விரும்பி எதிர் நோக்கியிருந்தேன்; (ஆதலால் யான் முன் சொல்ல வியலாது போயது) தெய்வத்தன்மை வாய்ந்த வலிய நாகபாசம் செய்த செயலே இந்த வஞ்சக நிகழ்ச்சியெல்லாம்.

கு:—அரக்கன் தம்பி என்பது ஒரு சொல் நீர்மையதாய் வீடணன் என்ற பொருளைத் தந்தது. இராவணன் தம்பி என்ற உணர்வுடன் வீடணன் வருந்துகின்ற நிலையைப் புலப்படுத்த அப்பெயரால் கூறியவாறு. அழிகின்ற என்றது, முன்னமே மனமழிந்து வருந்துகின்ற நிலையை யுணர்த்தியது. 209 - 211 ஆகிய செய்யுட்களைக் காண்க. கேட்டான், முற்றெச்சம்; 'கலுழிக் கண்ணன் என்னச் சொல்லி வணங்கினன்' என 232 ஆம் செய்யுளில் முடியும். இந்திரசித்தே இன்று போர்க்கு வருவான் என்ற உறுதி தெரியாமையாலும், அவன் வந்து எதிர்த்த பின்னரும் பாவ வழியில் செல்லும் இந்திரசித்தே தோற்பான் என்று நம்பி யிருந்தமையாலும் முன்னமே சொல்ல வியலாது போயது என்பது வீடணன் கூறும் அமைதியுரையாகும். அறம் வெல்லும் பாவம் தோற்கும் என்ற முறையையே நம்பி யிருந்து விட்டோம் என்றவாறு. வெவ்வழியவன் - பாவ வழியில் செல்கின்ற இந்திரசித்து. அறிந்திலம் என்புழித் தன்மைப் பன்மை போர்க்களத்துள்ள பிறரையும் உளப்படுத்தியது. இந்திரசித்து இன்று போர்க்கு வருவான் என இலக்குவன் முதலிய யாரும் எதிர்பார்க்கவில்லை என்பது புலப்படுத்தியவாறு, அவ்விந்திரசித்து போர்க்கு வந்தபின் கொல்லாமை தன் குற்றம் என்பதும், அதற்குக் காரணம் வெவ்வழியவனே தோற்கும் என்ற நம்பிக்கையே யாகும் என்பதும் புலப்படுத்தியவாறு, இலக்குவனை வெல்லும் ஆற்றல் இந்திரசித்துக்கு இல்லை; அவன் கையிலிருந்த தெய்வ வன்பாசத்தின் விளைவே இவ்வஞ்சகச் செயல்

எல்லாம் என அந்த நாகபாசத்தின் சிறப்பைப் புலப்படுத்திய வாறு. மாயச் செய்கை என்றது, எல்லோரையும் பிணித்து வீழ்த்திய வஞ்சகச் செயலை. (227)

8360. அற்றதி காய னுக்கை
தலையில தாக்கி யாண்ட
வெற்றிய னுய வீரன்
மீண்டில னிலங்கை மேனுள்
பெற்றவ னெய்து மென்னும்
பெற்றியை யுன்னிப் பிற்போ
துற்றனன் மைந்தன் ருனை
நாற்பது வெள்ளத் தோடும்.

'அற்று அதிகாயன் ஆக்கை,
தலை இலது ஆக்கி, ஆண்ட
வெற்றியன் ஆய வீரன்
மீண்டிலன், "இலங்கை மேல் நாள்
பெற்றவன் எய்தும்" என்னும்
பெற்றியை உன்னி; பிற்போது,
உற்றனன் மைந்தன்; தானை
நாற்பது வெள்ளத் தோடும்.

பொ:--அதிகாயன் உடம்பு அறுபட்டுத் தலை இல்லாததாக ஆக்கி, வெற்றி பெற்றவனுகிய இலக்குவன்,—'இலங்கையில் முன்பு (அந்த அதிகாயனைப்) பெற்றவனுகிய இராவணன் போர்க்கு வருவான்' என்னும் தன்மையை நினைந்து (பாசறைக்கு) மீளாது (போர்க்களத்திலேயே) இருந்தான்; பின்பு, இராவணன் மைந்தனுகிய இந்திரசித்து நாற்பது வெள்ளம் சேனையோடு வந்து சேர்ந்தான்.

கு:—அதிகாயனைக் கொன்று வென்றி கொண்ட பின்னும், இலக்குவன், போர்க்களத்தை விடுத்து மீளாமல் 'அதிகாயன் இறந்ததைக் கேள்வியுற்றவுடன் அவனைப் பெற்றவனுகிய இராவணன் வெகுண்டு போர்க்கு வருதல் கூடும்' என்ற எண்ணத்தால் அங்குத் தங்கியிருந்தானுக, இராவணன் வராமல் அவன் மைந்தனுகிய இந்திரசித்து சேனையோடு வந்துற்ருன் என, இந்திரசித்தோடு இலக்குவன் போர் செய்வதை முன்னமே அறிவிக்காமலிருந்ததற்குக் காரணம் கூறியவாறு. பெற்றவன் என்றது, தந்தையை. மைந்தன் என்றது இராவணன் மைந்தனுகிய இந்திரசித்தினை.

பெற்றவனை எதிர்நோக்கியிருந்த இடத்தில் அவன் மைந்தன் வந்து சேர்ந்தான் என்றவாறு. மகனின் மேலுள்ள பாசத்தால் பெற்றவனாகிய இராவணன் வெகுண்டு போர் செய்ய வருவான் என்று எண்ணுதல் இயல்பு. (228)

8361. ஈண்டுநஞ் சேனை வெள்ள
மிருபதிற் றிரட்டி மாளத்
தூண்டினன் பகழி மாரி
தலைவர்க ளொலைந்து சோர
மூண்டெழு போரிற் பாரின்
முறைமுறை முடித்தான் பின்னர்
ஆண்டகை யோடு மேற்று
ஞயிர மடங்கற் றேரான்.

'ஈண்டு, நம் சேனை வெள்ளம்
இருபதிற்று – இரட்டி மாள,
தூண்டினன், பகழி மாரி;
தலைவர்கள் தொலைந்து சோர,
மூண்டு எழு போரில், பாரில்
முறைமுறை முடித்தான்; பின்னர்,
ஆண் தகை யோடும் ஏற்றான்,
ஆயிரம் மடங்கல் – தேரான்.

பொ :—ஆயிரம் சிங்கங்கள் பூட்டிய தேரையுடையவனாகிய இந்திரசித்து, பெருகியெழுகின்ற போரில் இங்குள்ள நமது நாற்பது வெள்ளம் சேனை மடியவும், சேனைத்தலைவர்கள் தோற்றுத் தரையில் சோர்ந்து விழவும், அம்புமழையைச் சொரிந்து முறை முறையே அழித்தான்; பின்பு, ஆண்டன்மையுடைய இலக்குவனோடும் எதிர்த்தான்.

கு :—தூண்டினன். முற்றெச்சம். தேரான், போரில் மாள. சோரத் தூண்டி முடித்தான்; ஏற்றான் என இயையும். தலைவர்கள் என்றது வானரசேனைத் தலைவர்களை. (229)

8362. அனுமன்மே னின்ற வைய
ஞயிரந் தேரு மாயத்
தனுவலங் காட்டிப் பின்னை
நாற்பது வெள்ளத் தானை

பனியெனப் படுவித் தன்னான்
பலத்தையுந் தொலைத்துப் பட்டான்
இனியென வயிர வாளி
யெண்ணில நிறத்தி னெய்தான்.

'அனுமன் மேல் நின்ற ஐயன்
ஆயிரம் தேரும் மாய,
தனு வலம் காட்டி, பின்னை,
நாற்பது வெள்ளத் தானை
பனி எனப் படுவித்து, அன்னான்
பலத்தையும் தொலைத்து, "பட்டான்
இனி" என வயிர வாளி,
எண் இல, நிறத்தின் எய்தான்.

பொ :—அனுமன் தோள்மேல் ஏறி நின்ற இலக்குவன், இந்திர சித்தின் ஆயிரம் தேர்களும் ஒவ்வொன்ருக அழியுமாறு தன் வில்லின் வலிமையைக் காட்டிப் பின்பு அவனுடைய நாற்பது வெள்ளம் சேனையையும் (சூரியனுக்கு முன்) பனிபோல அழியுமாறு கொன்று, அவ் விந்திரசித்தின் வலிமையையும் தொலைத்து, "இனி இவன் இறந்தான்" எனக் கண்டோர் சொல்லுமாறு அவன் மார்பில் உறுதியுள்ள அளவற்ற அம்புகளை எய்தான்.

கு :—ஐயன் என்றது இலக்குவனை. சூரியன் முன், பனி அழிவதுபோல, இலக்குவன் தன்முன் அரக்கர் சேனை எளிதாக அழியப் படுவித்து என்று வருவித்துரைக்க. பனியெனப் படுவித்து என்ற குறிப்பினுல் பனியைப் படுவித்தற்குரிய சூரியன் வருவிக்கப்படுதல் இயல்பாதல் காணலாம். இனிப் பட்டான் என மாறிக் கூட்டுக. நிறம் – மார்பு. (230)

8363. ஏவுண்ட பகுவா யூடு
குருதிநீ ரிழிய நின்ருன்
தூவுண்ட தானை முற்றும்
படவொரு தமியன் சோர்வான்
போவுண்ட தென்னி னைய
புணர்க்குமா மாய மென்று
பாவுண்ட கீர்த்தி யானுக்
குணர்த்தினன் பரிதி பட்டான்.

'ஏஉண்ட பகுவா யூடு
குருதிநீர் இழிய நின்ருன்,
தூவுண்ட தானை முற்றும்
பட, ஒரு தமியன் சோர்வான்;
"போவுண்டது என்னின், ஐய!
புணர்க்குவன் மாயம்" என்று,
பாவுண்ட கீர்த்தி யானுக்கு
உணர்த்தினன்; பரிதி பட்டான்.

பொ:—இலக்குவனது அம்புகள் பட்ட பிளவுண்ட புண்களின் வாய்களில் இரத்தநீர் சொரிய நின்ருனுகிய இந்திரசித்து, வலிமை பொருந்திய தன் சேனை முற்றும் இறந்துபடத் தான் மட்டும் தனியனுய்ச் சோர்வானுனன்; (அப்போது) 'இவன் தப்பிப் போவது நிகழுமாயின், பெரிய மாயச் செயல்களைச் செய்வான்' என்று பரவிய புகழையுடைய இலக்குவனுக்கு உணர்த்தினேன்; அந்நிலையில் சூரியன் மறைந்தான்.

கு:—தூ - வலிமை. "தூவெதிர்ந்து பெருஅத் தாவின் மள்ளரொடு" (பதிற்றுப் – 81.34) என்புழியும் இச் சொல் இப் பொருளில் ஆளப்பட்டிருத்தல் காண்க. நின்ருனுய்ச் சோர்வான் என முற்றெச்சமாக்கி முடிக்க. பாவுண்ட - பரவுதல் பொருந்திய. இனிப் புலவர் பாடும் பாக்களையெல்லாம் தனக்கே யிடமாகக் கொண்ட புகழுடையான் இலக்குவன் எனப் பொருள் கூறலும் ஆம். (231)

**8364.** மாயத்தா லிருண்ட தாழி
யுலகெலாம் வஞ்சன் வானில்
போயத்தா னுடைய வஞ்ச
வரத்தினு லொளித்துப் பொய்யின்
ஞயத்தார்ப் பாச வீசி
யயர்வித்தா னம்பின் வெம்பும்
காயத்தா னென்னச் சொல்லி
வணங்கினுன் கலுழுங் கண்ணன்.

'மாயத்தால் இருண்டது ஆழி
உலகுஎலாம்; வஞ்சன், வானில்
போய், அத்தானுடைய வஞ்ச
வரத்தினுல் ஒளிந்து, பொய்யின்

ஆயத்தார்ப் பாசம் வீசி
அயர்வித்தான், அம்பின் வெம்பும்
காயத்தான் ' என்னச் சொல்லி,
வணங்கினுன், கலுழும் கண்ணுன்.

பொ :—'(ஞாயிறு பட்டவுடன்) கடல் சூழ்ந்த உலகமெல்லாம் மாயத்தினுல் இருட்சிமிக்கதாயிற்று ; இலக்குவனது அம்புகளில் வெதும்புகின்ற உடம்பையுடையவனுகிய வஞ்சனைமிக்க இந்திரசித்து வானத்தில் சென்று தான் பெற்றுள்ள அந்த வஞ்சனைக்குத் துணை செய்யும் வரத்தினுல் பொய்யாக ஒளித்து இவ் வானரவீரரை யெல் லாம் பாசம் வீசித் தளரும்படி செய்தான்' என்று சொல்லி நீர்வாடும் கண்களையுடையனுய் (வீடணன்) வணங்கினுன்.

கு :—சூரியன் மறைவினுல் இயல்பாக உலகில் இருள் பரவு வதைக் காட்டிலும் அன்று அதிகமாக இருள் செறிந்தது என்பார், 'மாயத்தால் இருண்டது' என்ருர். அம்பில் வெம்பும் காயத்தானுகிய வஞ்சன் என இயையும். அவ்வரத்தினுல் என்க, சுட்டு நெஞ்சறி சுட்டு. ஆயத்தார் என்றது, வானரக் கூட்டத்தாரை. அம்பில் வெம்புங் காயத்தான் ஆதலின் இலக்குவன் முன் தரித்துநிற்க இய லாது விண்ணில் சென்று பொய்யாக ஒளிந்து பாசம் வீசிப் வானர ரைத் தளரச் செய்தான் என்று வீடணன் இராமனுக்கு நிகழ்ந்த பரிசு இதுவென விளக்கியவாறு. அவ்வாறு விளக்குங்கால் தன் துயர் மிகுதியினுல் அவன் கண்களில் நீர் பெருகிக்கொண்டே இருந்தான் என்பார், கலுமுங் கண்ணுன் வணங்கினுன் என்ருர். ஆயம் - கூட்டம். (232)

வீடணன், யாரும் இறந்திலர் என்று இராமனைத் தேற்றுதல்

8365. பின்னரும் வணங்கி யேதும்
பிழைத்திலான் பெரும யாரும்
இன்னுயிர் துறந்தா ரல்ல
ரிறுக்கிய பாச மிற்ருல்
புன்னுனைப் பகழிக் கோயுந்
தரத்தரோ புலம்பி யுள்ளம்
இன்னலுற் றயரல் வெல்லா
தறத்தினைப் பாவ மென்ருன்.

பின்னரும் வணங்கி, ‘ ஏதும்,
பிழைத்திலன் பெரும ! யாரும்
இன் உயிர் துறந்தார் அல்லர்,
இறுக்கிய பாசம் இற்றால்
புல் நுனைப் பகழிக்கு ஓயும்
தரத்தரோ ? புலம்பி உள்ளம்
இன்னல் உற்று அயரல் ; வெல்லாது
அறத்தினைப் பாவம் ’ என்றான்.

பொ :—(ஒருமுறை, வணங்கின வீடணன்) பின்னரும் ஒருமுறை (இராமனை) வணங்கி, ‘பெரும ! யான் சிறிதும் பிழை செய்திலேன்’ இங்குள்ள யாரும் இனிய உயிர் நீங்கினரல்லர் ; இவர்களை இறுக்கிப் பிணித்துள்ள பாசம் இத்தன்மையதாகும் ; புல்லிய முனையையுடைய அம்புக்குத் தளர்ச்சியுறும் தன்மையரோ நம்வானரர் ? இவர்பொருட்டுப் புலம்பி மனம் துன்புற்றித் தளர்ச்சியுற வேண்டாம் ; அறத்தினைப் பாவம் வெல்லாது’ என்று கூறினான்.

கு :—‘என்னைக் கெடுத்தனை வீடணா’ (226) என முன்னம் இராமன் துன்புற்றுக் கூறியதற்கு விடையாகவே வீடணன், ‘ஏதும் பிழைத்திலன் பெரும’ எனப் பணிவுடன் கூறலானான். இந்திரசித்து வீசிய பாசம் இறுக்கிப் பிணிக்குமேயன்றி உயிர் துறக்கச் செய்யாது என்பான் ‘இறுக்கிய பாசம் இற்றால்’ என்றான். இற்று என்பது குறிப்பு வினைமுற்று ; இத்தன்மையது என்பது பொருள். அதன் இயல்பு உணர்ந்தவன் ஆதலின் இங்ஙனம் கூறலானான். அம்பின் சிறுமையும், வானர வீரரின் பெருமையும் புலப்படப் “புன்னுனைப் பகழிக்கோயும் தரத்தரோ ?’ என்று வினவினான். இந்திரசித்தின் அம்பினால் எவரும் உயிர் துறந்திலர் என்றவாறு. அயரல் என்பது எதிர்மறை வியங்கோள் ; ‘மகனெனல்’ (குறள்-196) என்புழிப்போல. அறநெறி செல்லும் நம்மைப் பாவநெறி செல்லும் இந்திரசித்து வெல்ல இயலாது என்பான், ‘வெல்லாது அறத்தினைப் பாவம்’ என்று கூறினான் ; ‘அறம் வெல்லும் பாவம் தோற்கும்’ (சுந்தர காண்டம்-ஊர்தேடு-95) எனவும், “பாவந் தோற்றது தருமமே வென்றதிப் படையால்” (கிட்கிந்-தானைகாண்-38) எனவும் முன்கூறியுள்ளமையும் நினைக. (233)

நாகபாசத்தைப்பற்றி நீ உணர்ந்ததை உரை எனல்

8366. யாரிது கொடுத்த தேவ
னென்னையீ திதனைத் தீர்க்கும்
காரணம் யாது நின்று
லுணர்ந்தது கழறிக் காணென்
ருரியன் வினவ வண்ணல்
வீடண னமல சாலச்
சீரிதென் றதனை யுள்ள
பரிசெலார் தெரியச் சொன்னான்.

'யார் இது கொடுத்த தேவன்?
என்னை ஈது? இதனைத் தீர்க்கும்
காரணம் யாது? நின்னால் உணர்ந்தது
கழறிக் காண்' என்று,
ஆரியன் வினவ, அண்ணல்
வீடணன், 'அமல! சாலச்
சீரிது' என்று, அதனை, உள்ள
பரிசு எலாம், தெரியச் சொன்னான்.

பொ:—'இப் பாசத்தை இந்திரசித்துக்குக் கொடுத்த தேவன் யார்? இப்பாசம் எத்தன்மையானது? இப்பாசத்தின் கட்டிலிருந்து நீங்குதற்கு உரிய உபாயம் யாது? நின்னால் உணரப்பட்டு உள்ளதைக் கூறுவாயாக' என்று இராமன் கேட்க, பெருமை பொருந்திய வீடணன், (இராமனை நோக்கி) மலமற்ற தூயோனே! மிகவும் நல்லது, (என்று உடன்பட்டு) அப்பாசத்தைப் பற்றியுள்ள தன்மை எல்லாவற்றையும் விளங்குமாறு சொல்வானானான்.

கு:—என்னை என்பது எத்தன்மையது என்ற பொருளில் வந்தது. தீர்தல் - நீங்குதல்; பற்றுவிடுதல். காரணம் என்றது உபாயம் என்ற பொருளில் வந்தது. நின்னால் உணரப்பட்டது எனச் செயப்பாட்டு வினையாக்குக. கழறிக்காண் என்பது ஒருசொல் நீர்மைத்தாய்ச் சொல்லும் என்ற பொருளில் வந்தது. ஆரியன் என்றது இராமனை; சிறப்புடையவன் என்றவாறு. இராமன் வினவியதை வீடணன் சாலச் சீரிது என உடன்பட்டவாறு. (234)

## வீடணன் கூறும் பாசத்தின் வரலாறு

8367. ஆழியஞ் செல்வ பண்டிங்
ககலிட மளித்த வண்ணல்
வேள்வியிற் படைத்த தீசன்
வேண்டினன் பெற்று வெற்றித்
தாழ்வறு சிந்தை யோற்குத்
தவத்தினு லளித்த தாணை
ஊழியி னிமிர்ந்த காலத்
துருமின தூற்ற மீதால்.

'ஆழிஅம் செல்வ! பண்டு இவ்
அகலிடம் அளித்த அண்ணல்
வேள்வியில் படைத்தது; ஈசன்
வேண்டினன் பெற்று, வெற்றித்
தாழ்வு அறு சிந்தையோற்குத்
தவத்தினுல் அளித்தது; ஆணை!
ஊழியின் நிமிர்ந்த காலத்து
உருமினது; ஊற்றம் ஈதால்.

பொ :—ஆணைச்சக்கரமாகிய செல்வத்தை யுடையவனே! இந்த விரிந்த உலகத்தைப் படைத்த பிரமன், முற்காலத்தில் வேள்வியிலிருந்து உண்டாக்கியது; அதனைச் சிவன் வேண்டிப் பெற்று, வெற்றி பெறுவதில் தாழ்வுறுத மனமுடைய இந்திரசித்துக்கு அவன் செய்த தவம் காரணமாக உண்மையாக அளித்தது; ஊழியிறுதியில் (மேகம் உலகத்தை அழிக்கத் தோன்றும்) இடியின் தன்மையுடையது; அதன் வலிமை இத்தகையது.

கு :—இராமன் பேரரசன் ஆதற்குரியவன் ஆதலின், அவனை 'ஆழியஞ் செல்வ' என விளித்தான். ஆழி - ஆணைச்சக்கரம். இனி இராமனது பழைய தெய்வநிலை நினைந்து 'சக்கரப் படையையுடைய அழகிய செல்வனே!' என விளித்ததாகவும் கொள்ளலாம். இந்திரசித்து வீசிய பாசத்தைக் கொடுத்த தேவன் யார்? என்ற வினவிற்கு விடையாக அது வந்த வரலாறு கூறியவாறு. பிரமன் வேள்வியில் படைத்த பாசத்தை ஈசன் வேண்டிப் பெற்று இந்திரசித்தின் தவத்திற்கிரங்கி அவன் கையில் கொடுத்தான் என்றவாறு. ஆணை—மெய். ஆணை அளித்தது என்க. ஊழியின் நிமிர்ந்த காலம் என்றது ஊழிக்கடையை. உருமினது என்றது உருமின்தன்மையது என்றவாறு. ஊழியிறுதியில் தோன்றும் பேரிடிபோலப் பேரிடர் செய்ய

வல்லது என்றவாறு. ஊற்றம் - வலிமை. என்னை யீது ? என்ற வினாவிற்கு விடையாக 'உருமினது' என்பது கூறப்பட்டது. வெற்றி பெறுவதில் உறுதியுடைய சிந்தையான் இந்திரசித்து என்பான் 'வெற்றித் தாழ்வறு சிந்தையோன்' என அவனைச் சிறப்பித்தான். வெற்றிபெறுதற்குரிய பாசம் அதற்குரிய மனநிலை யுடையானையே அடைந்தது என்றவாறு. (235)

பாசத்தின் ஆற்றல்

8368. அன்னத னாற்ற லன்றே
யாயிரங் கண்ணி னானைப்
பின்னுற வயிரத் திண்டோள்
பிணித்தது பெயர்த்தொன் றெண்ணி
என்னினி யநுமன் றோளை
யிறுக்கிய திதனா லாண்டும்
பொன்னுல காளுஞ் செல்வந்
துறந்தது புலவோ ரெல்லாம்.

அன்னதன் ஆற்றல் அன்றே
ஆயிரம் கண்ணி னானைப்
பின் உற வயிரத் திண் தோள்
பிணித்தது,—பெயர்த்து ஒன்று எண்ணி
என், இனி? - அனுமன் தோளை
இறுக்கியது இதனால். ஆண்டும் ;
பொன்னுலகு ஆளும் செல்வம்
துறந்தது, புலவோர் எல்லாம்.

பொ :—இனி, வேறு பிற எண்ணிப் பயன் என்னை ? (இந்திரசித்து) ஆயிரங்கண்களையுடைய இந்திரனை அவன் வலிய தோள்கள் பின்பக்கம் பொருந்துமாறு கட்டியதும், (சீதையைத் தேடச் சென்ற போது) அனுமன் தோளை இறுக்கிக் கட்டியதும், அந்தப் பாசத்தின் வலிமையால் அல்லவோ? அவ்விண்ணுலகத்தும் தேவர்கள் எல்லாம் பொன்னுலகை ஆளும் செல்வத்தைத் துறந்ததும் இதனாலேயாம்.

கு :—இந்திரசித்து, பிணித்தது, இறுக்கியது, அன்னதன் ஆற்றல் அன்றே? புலவோரெல்லாம் பொன்னுலகாளும் செல்வம் துறந்தது இதனால் என இயையும். ஆற்றலால் அன்றே என மூன்றனுருபு விரிக்க. விண்ணிலும் மண்ணிலும் அப்பாசத்தின் ஆற்றலால்

இந்திரசித்து செய்த வீரச் செயல்களுக்கு ஒவ்வோர் எடுத்துக் காட்டே போதும் என்ற கருத்தால் 'பெயர்த்தொன்றெண்ணி என்னினி ?' என்றான். ஆண்டும் என்றது, விண்ணுலகமாகிய அவ் விடத்தும் என்றவாறு. புலவோர் என்றது தேவர்களை. பொன்னுலகு ஆளுதல் என்றது, பொன்னுலகத்து இன்பப் பயன் கொள்ளுதலை.
(236)

பாசம் நீக்கும் வகையிலது என்றல்

8369. தான்விடின் விடுதலன்றிச்
சதுமுகன் முதல்வ ராய
வான்விடின் விடாது மற்றிம்
மண்ணினை யெண்ணி யென்னே
ஊன்விட வுயிர்போய் நீங்க
நீங்கும்வே றுய்தி யில்லை
தேன்விடு துளபத் தாரா
யிதுவிதன் செய்கை யென்றான்.

தான் விடின் விடுதல் அன்றிச்
சதுமுகன் முதல்வர் ஆய
வான் விடின் விடாது; மற்று,
இம்மண்ணினை எண்ணி என்னே !
ஊன் விட, உயிர் போய் நீங்க,
நீங்கும் ; வேறு உய்தி இல்லை ;
தேன் விடு துளபத் தாராய் !
இது இதன் செய்கை' என்றான்.

பொ:—'தேன் துளிக்கும் துளபமாலை அணிந்தவனே ! இந்திர சித்தே விடுவித்தால் இது விடுமே அல்லாமல் பிரமனை முதலாகக் கொண்ட வானுலகத்தோர் வந்து விடுவித்தாலும் இப் பாசம் விடாது ; இனி இம்மண்ணுலகத்து உள்ளாரைப் பற்றி எண்ணி யாது பயன் ? தன்னால் பற்றப்பட்டாரது உடம்பு ஒழியவும், உயிர் போய் நீங்கவும் இது நீங்கும் ; உய்தற்குரிய வழி வேறு இல்லை ; இப் பாசத்தின் இயல்பு இதுவாகும்' என்று கூறினான்.

கு:—தான் என்றது இந்திரசித்தினை. தான் என்பது பாசத்தைக் குறிப்பதாகக் கூறுவாருமுளர்; கருவியாகிய பாசத்திற்கு வினை முதற்றன்மை இன்மை தெளிவு. விடின் என்றது ஈரிடத்தும் பிறவினைப் பொருளில் வந்தது ; விடுவிப்பின் என்பதே பொருள்.

சதுமுகன் - நான்முகன். அந்தப் பாசத்தை உண்டாக்கிய பிரமனாலும் விடுவிக்க முடியாது என்பார். 'சதுமுகன் முதல்வராய வான்' என்றார். வான் என்றது இடவாகுபெயராய் வானத்திலுள்ள தேவரை யுணர்த்தியது. பிரமன் முதலிய தேவராலும் விடுவிக்க முடியாது என்னும்போது, கீழுள்ள மண்ணுலகத்தவர் விடுவிக்க மாட்டார் என்பது கூறாமலே அமையும் என்ற கருத்தால் 'மற்றிம் மண்ணினை எண்ணியென்னே' என்றார். தன்னால் பிணிக்கப்பட்டவர் இறந்தபின்னரே பாசம் நீங்கும் என்றவாறு. (237)

## இராமன் சினந்து கூறுதல்

8370. ஈந்துள தேவர் மேலே
யெழுகெனோ வுலகம் யாவும்
தீய்ந்துக நூறி யானுந்
தீர்கெனோ விலங்கை சிந்தப்
பாய்ந்தவர் சுற்ற முற்றும்
படுப்பெனோ வியன்ற பண்போ
டேய்ந்தது பகர்தி யென்றா
னிமையவ ரிடுக்கண் டீர்ப்பான்.

'ஈந்துள தேவர்மேலே எழுகெனோ?
உலகம் யாவும்
தீய்ந்து உக நூறி, யானும்
தீர்கெனோ? இலங்கை சிந்தப்
பாய்ந்து, அவர் சுற்றம் முற்றும்
படுப்பெனோ? இயன்ற பண்போடு
ஏய்ந்தது பகர்தி' என்றான்,
இமையவர் இடுக்கண் தீர்ப்பான்.

பொ :—தேவர்கள் படும் துன்பத்தை நீக்குவதற்காக அவதரித்தவனாகிய இராமன், (வீடணனைப் பார்த்து, இந்தப் பாசத்தை (இந்திரசித்துக்குக்) கொடுத்துள்ள தேவர்மேலே போர்க்கு எழுவேனா? அல்லது, இவ்வுலகங்கள் எல்லாம் தீய்ந்து பொடியாய் உதிர அழித்து யானும் இறப்பேனோ? அல்லது இலங்கை நகரம் சிதறுண்ணுமாறு அதன்மேல் பாய்ந்து அவ்வரக்கர் சுற்றம் முழுமையும் கொல்வேனோ? இக்காலத்திற்கு ஏற்ற தகுதியொடு பொருந்தியது ஒன்றைச் சொல்க' என்றான்.

கு:—இமையவர் இடுக்கண் தீர்க்கப் பிறந்தவனுகிய இராமன், இப்போது இலக்குவனுக்கு நேர்ந்த இன்னலால் அதை மறந்து, அந்த இமையவர்க்கே இடுக்கண் செய்ய நினைக்கின்ருன் என்பது கூறி அவன் துன்ப மிகுதி புலப்படுத்தியவாறு. தேவர்மேலே போர்க்கு எழுதல் உலகம் யாவும் நூறுதல், இலங்கையிலுள்ளாரை யெல்லாம் கொல்லுதல் ஆகிய மூன்றையும் எளிதில் செய்ய வியலும் ஆயினும், அம்மூன்றில் இப்பொழுது செய்தற்கேற்றது எது? என்பது இராமன் வினு. இப்பாசத்தை அத்தேவர் கொடாதிருந்தால் இத் துன்பம் நிகழ்ந்திராதே என்ற எண்ணத்தால் இப்பாசத்தைக் கொடுத்த தேவர்மேல் சென்று தாக்கி இப்பாசத்தால் விளைந்த இன்னலுக்கு எதிராக இன்னல் செய்தோ அல்லது, அவரால் படைக் கப்பட்ட உலகங்களை அழித்தோ தன் கோபத்தை ஆற்றிக் கொள்ள லாம் என்று இராமன் நினைப்பது இயல்பே. அவ்விரு செயலினும் அப்பாசத்தைத் தவத்தினுல் பெற்று விடுத்த இந்திரசித்துக்குரிய இலங்கையையே அழிப்பது சிறந்தது என்ற எண்ணத்தால் அதனை இறுதியில் கூறினுன். (238)

8371. வரங்கொடுத் தினைய பாசம்
வழங்கினுன் தானே நேர்வந்
திரங்கிடத் தக்க துண்டே
லிகழ்கிலெ னில்லை யென்னின்
உரங்கெடுத் துலக மூன்று
மொருவனே ரம்பிற் சுட்ட
புரங்களிற் றீய்த்துக் காண்பேன்
பொடியொரு கடிகைப் போழ்தின்.

'வரம் கொடுத்து இனைய பாசம்
வழங்கினுன் தானே நேர்வந்து
இரங்கிடத் தக்கது உண்டேல்,
இகழ்கிலென்; இல்லை என்னின்
உரம் கெடுத்து, உலகம் மூன்றும்,
ஒருவன் ஓர் அம்பிற் சுட்ட
புரங்களின் தீய்த்து, காண்பேன்
பொடி ஒரு கடிகைப் போழ்தின்.

பொ:—இந்திரசித்துக்கு வரத்தைக் கொடுத்து இத்தன்மை யான நாகபாசத்தை வழங்கின தேவன், தானே நேரில் வந்து தான்

முன்செய்த பிழைக்கு இரங்கிடத்தக்க நிலை ஏற்படுமாயின், யான் அதனை வெறுது ஏற்றுக்கொள்வேன்; அந்நிலை இல்லையென்ருல், மூன்று உலகங்களையும் வலிமை கெடுத்து, ஒப்பற்றவனுகிய சிவன் ஓர் அம்பினுல் எரித்த திரிபுரங்களைப் போல ஓர் அம்பினுல் ஒரு நாழிகைப் பொழுதில் தீயுமாறு செய்து சாம்பலாக்கிடுவேன்.

கு :—முன் கூறிய மூன்று செயல்களில் முன்னதைச் செய்யாமல் இருப்பதற்கு முன்னிரண்டடிகளில் வழி கூறியவாறு. 'இந்திரசித்துக்கு இந்தப் பாசத்தை வழங்கின தேவன் தானே தன் பிழைக்கு இரங்கிவந்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டால் ஏற்றுக்கொள்வேன்; இல்லையெனில் அவனுல் படைக்கப்பட்ட மூன்றுலகங்களையும்—முப்புரங்களைச் சிவன் எரித்தது போல-எரித்துச் சாம்பலாக்கிவிடுவேன்' என்றவாறு. இகழ்கிலென் என்றது ஏற்றுக் கொள்வேன் என்னும் கருத்தினது. உரம் - வலிமை. 'உலக மூன்றும் உரங்கெடுத்துக் கடிகைப் போழ்தின் தீய்த்துப் பொடி காண்பென்' என இயையும். ஒருவன் என்றது சிவபிரானை; ஒப்பற்றவன் என்றபடி. ஓரம்பு என்றது திருமாலாகிய அம்பினை. "ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தங்கையில் ஓரம்பே முப்புரம் உந்தீபற, ஒன்றும் பெருமிகை யுந்தீபற" (திருவாசகம். திருவுந்தியார்-2) என்ற விடத்தும் ஓரம்பே கூறப்பட்டிருத்தல் காணலாம். காண்பேன் என்றது, செய்வேன் என்னும் கருத்தினது. புரங்களின் என்புழி இன் ஒப்புப் பொருளது. பொடி - சாம்பல். ஓரம்பிற் சுட்ட புரங்களில் என்ற உவமையினுல் இராமனும் ஓரம்பினுல் மூன்று உலகங்களையும் சாம்பலாக்கிடுவேன் என்றதாக வருவித்துரைக்க. (239)

8372. எம்பியே யிறக்கு மென்னி
னெனக்கினி யிலங்கை வேந்தன்
தம்பியே புகழ்தா னென்னை
பழியென்னை யறந்தா னென்னை
நம்பியே யென்னைச் சேர்ந்த
நண்பரி னல்ல வாமே
உம்பரு முலகத் துள்ள
வுயிர்களு முதவி பார்த்தால்.

'எம்பியே இறக்கும் என்னில்
எனக்கு இனி, இலங்கை வேந்தன்
தம்பியே! புகழ்தான் என்னை?
பழி என்னை? அறம்தான் என்னை?

நம்பியே என்னைச் சேர்ந்த
நண்பரின்; நல்ல ஆமே,
உம்பரும் உலகத்து உள்ள
உயிர்களும், உதவி பார்த்தால்?'

பொ:—இலங்கை வேந்தனாகிய இராவணனுக்குத் தம்பியே! என் தம்பி இலக்குவனே இறப்பானானால் எனக்கு இனிப் புகழ் என்ன? பழி என்ன? பாவம் என்ன? தருமந்தான் என்ன? (ஏதும் நோக்க வேண்டுவதில்லை) எனக்கு அவர்கள் செய்த உதவியைப் பார்க்குமிடத்து என்னை நம்பிச் சேர்ந்த நண்பர்களைக் காட்டிலும் தேவர்களும் மண்ணுலகத்திலும் உள்ள உயிர்களும் நல்லன ஆகுமா? (ஆகா என்றபடி)

கு:—'இலக்குவனும் நண்பர்களும் இறந்தமையினால், புகழும் பழியும், பாவமும் அறமும் பாராமல் எல்லா உயிர்களையும் அழிக்கப் போகின்றேன்' என இராமன் வீடணனுக்குக் கூறியவாறு. நண்பர்கள் தனக்குச் செய்த உதவியை நோக்கினால் அந்நண்பரைவிட தேவரும் மனிதரும் நல்லர் அல்லர் ஆகலின் அவர்களை அழிப்பது குற்றமாகாது என்றபடி. உம்பர் – தேவர். உம்பரும் உயிர்களும் எனத் திணை விரவி எண்ணி 'நல்லவாமே' என அஃறிணை முடிவு கொடுத்தவாறு. அறந்தான் என்னை? என்றமையால் அறத்திற்கு எதிரான பாவமும் வருவிக்கப்படும்; எம்பியே இறக்குமென்னின் புகழ்தான் என்னை? பழி யென்னை? எனவும், உதவி பார்த்தால் உம்பரும் உயிர்களும் நல்லவாமே எனவும் இயையும். (240)

## இராமனது சினம் மாறுதல்

8373. என்று கொண் டியம்பி யீண்டிங்
கொருவனிங் கிடுக்கண் செய்ய
வென்றரு முல்கை மாய்த்தல்
விதியன்று லென்று விம்மி
நின்றுநின் றுன்னி யுன்னி
நெடிதுயிர்த் தலக்க ணுற்றான்
தன்றுணைத் தம்பி மேலுந்
துணைவர்மேற் றாழ்ந்த வன்பான்.

என்று கொண்டு இயம்பி 'ஈண்டு இங்கு
ஒருவன் ஓர் இடுக்கண் செய்ய
வென்று, அரும் உலகை மாய்த்தல்
விதி அன்றால்' என்று விம்மி,
நின்று நின்று, உன்னி உன்னி,
நெடிது உயிர்த்து அலக்கண் உற்றான்;
தன்துணைத் தம்பி தன்மேல்,
துணைவர்மேல் தாழ்ந்த, அன்பான்.

பொ :—தனக்குத் துணையான தம்பியின் மேலும் மற்றைத் துணைவர்மேலும் பதிந்த அன்பினையுடையவனாகிய இராமன், — என்று சொல்லிப் பின்பு 'இவ்விடத்து ஒருவன் துன்பம் செய்ய? (அவனுக்காக) அரிதாகிய உலகத்தை வென்று மாய்த்தல் முறையன்று' என்று நினைந்து ஏங்கி நின்று நின்று நினைந்து நினைந்து நெடிதாகப் பெருமூச்சு விட்டுத் துன்புற்றான்.

கு :—தாழ்தல் — பதிதல்; அழுந்துதல். முன்பு பொங்கிய சினத்தினால் உலகை அழிக்க எண்ணிய இராமன், பின்பு தணிந்து பெருமூச்சு விட்டுக்கொண்டு வருந்துவானானான். ஒருவன் செய்த குற்றத்திற்காக அவனைத் தண்டிப்பதை விடுத்து உலகை அழிப்பது முறையன்று என்று தெளிந்து இராமன் வருந்தினான் என்றபடி. அடுக்கு இரண்டும் நெடுமையை யுணர்த்தியது. அலக்கண் — துன்பம். (241)

### இலக்குவன் வீயின் இராமனும் வீவதாக எண்ணுதல்

8374. மீட்டும்வந் திளைய வீரன்
வெற்பன்ன விசயத் தோளைப்
பூட்டுறு பாசந் தன்னைப்
பன்முறை புரிந்து நோக்கி
வீட்டிய தென்னிற் பின்னை
வீவனென் றெண்ணும் வேதந்
தோட்டியின் றொடக்கி னிற்குந்
துணைக்கைம்மால் யானை யன்னான்.

மீட்டும் வந்து இளைய வீரன்
வெற்பு அன்ன விசயத் தோளைப்
பூட்டுறு பாசம் தன்னைப்
பல்முறை புரிந்து நோக்கி,

'வீட்டியது என்னின், பின்னை
வீவென்' என்று எண்ணும் - வேதத்
தோட்டியின் தொடக்கில் நிற்கும்
துணைக்கைம்மால் யானை அன்னான்.

பொ :—வேதமாகிய அங்குசத்தின் கட்டுப்பாட்டில் நிற்கின்ற இரண்டு கைகளையுடைய பெரிய யானை போல்வானான இராமன்,– மீண்டும் வந்து இலக்குவனுடைய மலைபோன்ற வெற்றித் தோள்களைப் பிணித்துள்ள நாகபாசத்தைப் பலமுறை உற்று நோக்கி, '(இப்பாசம் இவனைக்) கொன்றிருக்குமாயின் பின்பு யானும் இறப்பேன்' என்று எண்ணுவான் ஆனான்.

கு:—பெருவீரனாகிய இலக்குவனை நாகபாசம் இறுக்கிக்கொல்ல இயலாது என்ற நம்பிக்கையால் இராமன், 'வீட்டியதென்னில் பின்னை வீவன்' என்று எண்ணுவானானான். பாசத்தால் கொல்ல வியலாத தோள்கள் என்பது புலப்பட 'வீரன் வெற்பன்ன விசயத் தோளை' எனச் சிறப்பித்தவாறு. வீட்டுதல் – வீழ்த்துதல் ; கொல்லுதல். வேதத்தோட்டி என்றது, உருவகம். இராமனை யானை போன்றவனாக உவமம் செய்ததற்கேற்ப, வேதத்தை அங்குசமாக உருவகம் செய்தார். வேதங்களால் அறியத்தக்கவன் என்பார், வேதத் தோட்டியின் தொடக்கில் நிற்கும் -யானை அன்னான் என்றார். தோட்டி - அங்குசம். இராமன் இரண்டு கைகளையுடையவனாதலின் துணைக்கைம்மால் யானை யன்னான் என இல் பொருளுவமையாகக் கூறினார். 'இருகை வேழத் திராகவன்' என்றார் கடவுள் வாழ்த்திலும், அங்குசத்திற்கு அடங்கி நிற்கும் யானை போல வேத மந்திரங்களுக்குக் கட்டுபட்டு நிற்பவன் இராமன் என்றபடி ; இது அவன் தெய்வநிலை நோக்கிக்கூறியது. தான் ஒரு தொடக்கில் அகப்பட்டு நிற்கின்றவனாயிருந்து கொண்டே, நாகபாசத் தொடக்கில் அகப்பட்டிருக்கும் இலக்குவனுக்காகக் கவல்கின்றானே இராமன்! என்ற நயமும், தம்பியின் துயர்கண்டு தன் தெய்வ நிலையும் மறந்து இங்ஙனம் துன்புறுகின்றான் என்ற உண்மையும் இதனால் புலப்படுத்தியவாறு. (242)

## கருடன் வருகை 8375 – 8381

8375. இத்தன்மை யெய்து மளவின்கண்
வந்த விமையோர்க ளஞ்சி யிதுபோய்
எத்தன்மை யெய்தி முடியுங்கொ
லென்று குலைகின்ற வெல்லை யிதன்வாய்

அத்தன்மை கண்டு புடைநின்ற
வண்ணல் கலுழன்ற னன்பின் மிகையால்
சித்தந் நடுங்கி யிதுதீர மெள்ள
விருளூடு வந்து தெரிவான்.

இத் தன்மை எய்தும் அளவின்கண்,
நின்ற இமையோர்கள் அஞ்சி, 'இதுபோய்
எத் தன்மை எய்தி முடியும் கொல்?'
என்று குலேகின்ற எல்லே இதன்வாய்,
அத் தன்மை கண்டு, புடைநின்ற
அண்ணல் கலுழன்தன் அன்பின் மிகையால்
சித்தம் நடுங்கி, இதுதீர, மெள்ள,
இருளூடு வந்து தெரிவான்.

பொ :—(இராமன்) இந்த நிலேமை அடையும் அளவில், (வானில் போர் கண்டு) நின்ற தேவர்கள் அஞ்சி (இராமனது) இந் நிலே முதிர்ந்துபோய் எந்தத் தன்மை அடைந்து முடியுமோ?' என்று நடுங்குகின்ற பொழுதில், - (தேவர்களின்) அந்தத் தன்மையைக் கண்டு அத்தேவர் பக்கத்து நின்ற பெருமையிற் சிறந்தவனுகிய கருடன் தன் அன்பின் மிகுதியால் சிந்தை நடுங்கி, இத்துன்பந்தீர, இருளுக்கு நடுவே வந்து பூமியில் புலப்படுவான் ஆனன்.

கு :—இராமனது துன்ப நிலே கண்டு, இராமன் சினம் முதிர்ந் தால் எந்த எந்த உலகங்கள் அழியுமோ? யார்க்கு என்ன நேருமோ எனக் கூறிக்கொண்டு தேவர்கள் நடுங்குகின்ருர்கள்; அத்தேவர் பக்கலில் நின்ற கலுழன் அதைக்கண்டு இராமன்பால் வைத்த பேரன்பினல் சிந்தை நடுங்கி இராமனுக்கு நேர்ந்த இத்துன்பந்தீர இனிப் பூமியில் வந்து புலப்படுவானுனன் என்றவாறு. தேவ கணங்களுள் கருடனும் ஒருவனுதலின், அத்தேவர் பக்கத்தில் நின்றதாகக் கூறினர். அண்ணலாகிய கலுழன் என இருபெய ரொட்டாக்குக. அண்ணல் – பெருமையுடையவன். குலேதல் நடுங் குதல். அத்தன்மை என்றது, தேவர்கள் நடுங்கும் தன்மையைக் காட்டியவாறு. கலுழன் சித்தம் நடுங்குதற்குக் காரணம் புலப் படுத்துவாராய்த் 'தன் அன்பின் மிகையால்' என்ருர். இராமன் – பால் கலுழன் கொண்ட அன்பு மிகுதியால் சித்தம் நடுங்கி, இத் துன்பந் தீர்க்கத் தரைமேல் புலப்பட வந்தான் என்றவாறு. இது என்றது, இராமனது துன்பநிலேயை. தெரிதல் - புலப்படுதல். கலுழன் பூமியில் புலப்பட வந்த தன்மையை வருஞ் செய்யுட்களில் கூறுகின்ருர். இச்செய்யுள் முதல் ஏழு செய்யுட்கள் குளகம். (243)

## கலுழன் இறகுகளின் சிறப்பு 8376-8377

8376. அசையாத சிந்தை யரவா லனுங்க
வழியாத வுள்ள மழிவான்
இசையா னிலங்கை யரசோடு மண்ண
லருடன்மை கண்டு பெயர்வான்
விசையா லனுங்க வடமேரு வைய
மொளியால் விளங்க விமையாத்
திசையானை கண்கண் முகிழா வொடுங்க
நிறைகால் வழங்கு சிறையான்.

அசையாத சிந்தை அரவால் அனுங்க,
அழியாத உள்ளம் அழிவான்,
இசையான் இலங்கை அரசோடும் அண்ணல்
அருள் தன்மை கண்டு பெயர்வான்,
விசையால் அனுங்க வடமேரு வையம்,
ஒளியால் விளங்க இமையாத்
திசையானை கண்கள் முகிழா ஒடுங்க
நிறைகால் வழங்கு சிறையான்.

பொ :—(இலக்குவனது) அசையாத சிந்தை நாகபாசத்தால் அழிதலால், எக்காலத்தும் வருந்தாத உள்ளம் வருந்துபவனாய், இலங்கை அரசனாகிய வீடணனோடும் ஒன்றும் பேசாமல் இராமன் நின்றருளும் தன்மையைக் கண்டு கொண்டே செல்பவனாய்த் தன் வேகத்தால் வடமேருமலை வருந்தவும், தன் ஒளியால் உலகம் இருள் நீங்கி விளக்கம் பெறவும், திசையானை கல் இமையாத கண்களை மூடிக்கொண்டு ஒடுங்கவும் நிறைந்த காற்றை வீசிக்கொண்டு பறக்கும் சிறகையுடையவனாயினன்.

கு:—அசையாத சிந்தை என்றது இலக்குவனது வீரவுள்ளத்தை, அரவால் அனுங்கியது அவன் சிந்தையே யாதல் காண்க. அனுங்குதல் - கெடுதல். இலக்குவன் உணர்விழந்து கிடக்கும் நிலையையே சிந்தை அனுங்கியதாகக் கூறினர். அனுங்குதலால் அழியாத உள்ளம் அழிவான் எனக் காரணப் பொருளதாய வினையெச்சமாக்குக. அழியாத உள்ளம் என்றது இராமனுடைய உள்ளத்தை. அரச செல்வத்தையும் தந்தை முதலியோரையும் இழந்த போதும் அழியாத உள்ளமுடையவன் இராமன் என்பது அறிந்ததே. உள்ளம் அழிவானாய் இலங்கை அரசோடும் இசையானாய் அண்ணல் நின்றருள்கின்ற தன்மை கண்டு பெயர்வான் என

இயையும். வீடணனோடு சினந்து பேசிய இராமன், பின்பு சினம் தவிர்ந்து ஒன்றும் பேசாமல் இலக்குவனைப் பிணித்துள்ள பாசத்தை நோக்கிக்கொண்டு 'இப்பாசம் இவனை மாய்ந்திருக்குமேல் யானும் மாள்வேன்' என்ற எண்ணத்தோடு நின்றிருந்தான் என்பது முன்னர்க் கூறப்பட்டமையின் இங்கு 'இலங்கை யரசோடும் இசையான்' என்றார். இலங்கை யரசு என்றது வீடணனை. இராமன் நின்றருளும் நிலையைக் கண்டு கொண்டே கலுழன் செல்கின்றான் என்பார், 'கண்டு பெயர்வான்' என்றார். கலுழனுடைய சிறகின் விசையால் மேரு அனுங்கியது; அதன் ஒளியால் வையம் விளங்கியது; அது வழங்கும் காற்றால் திசை யானைகள் இமையாத கண்கள் இமைத்து ஒடுங்கின என்க. அனுங்க விளங்க ஒடுங்க கால் வழங்கு சிறையையுடையவனாய்க் கிளர்வான் என மேல் முடியும்; இராமனது தெய்வ நிலைக்கேற்ப நிற்றலை 'அருளல்' என்றார்' நின்றருளல் என்றவாறு. கலுழன் இராமன்பால் பேரன்புடையனாதலின் அவன் நின்றருளும் நிலையைக் கண்டு கொண்டே செல்வானானான். விண்ணிலிருந்து மண்ணுலகுக்குப் பறந்து வருகின்ற கருடன் இராமன் நின்ற இடத்தையே நோக்கி வருதல் இயல்பாதல் காணலாம். (244)

8377. காதங்கள் கோடி கடை சென்று
காணு நயனங்கள் வாரி கலுழக்
கேதங்கள் கூர வயர்கின்ற வள்ள
றிருமேனி கண்டு கிளர்வான்
சீதங்கொள் வேலை யலைசிந்த
ஞால மிருள்சிந்த வந்த சிறையான்
வேதங்கள் பாட வுலகங்கள்
யாவும் வினைசிந்த நாக மெலிய

காதங்கள் கோடி கடைசென்று
காணும் நயனங்கள் வாரி கலுழ
கேதங்கள் கூர, அயர்கின்ற வள்ளல்
திருமேனி கண்டு, கிளர்வான்,—
சீதம் கொள் வேலை அலை சிந்த,
ஞாலம் இருள் சிந்த, வந்த சிறையான்,
வேதங்கள் பாட; உலகங்கள் யாவும்
வினை சிந்த; நாகம் மெலிய.

பொ :—(இலக்குவனும் துணைவர்களும் நாகபாசத்தால் பிணிக்கப்பட்டமை கண்டு) துன்பங்கள் மிகுதலால், சோர்ந்திருக்கின்ற இராமனுடைய திருமேனியைக் கண்டு, (கலுழன்) கோடி காதங்களின் கடைசிவரையில் சென்று காண்பதற்குரிய தன் கூரிய கண்களில் நீர் பெருகா நிற்க, துன்பம் கிளரப் பெற்றவனாய்க் குளிர்ச்சி பொருந்திய கடல் அலைகள் சிந்தவும் பறந்து வந்த சிறகுகளினால் உலகம் இருள் நீங்கவும், வேதங்களின் ஒலி எழவும், உலகத்து உயிர்கள் யாவும் வினைகள் நீங்கப் பெறவும் பாம்புகள் வலிகெட்டு மெலியவும்.

கு :—சிறகுகளின் சிறப்பு இச்செய்யுளாலும் கூறப்படுகின்றது. தரையில் இலங்கையில் உள்ள இராமன் திருமேனியை விண்ணில் உள்ள கலுழன் எப்படிக் காண முடியும் என்ற வினாவுக்கு விடையாக 'காதங்கள் கோடி கடை சென்று காணும் நயனங்கள்' என அவன் கண்ணின் இயல்பை விளக்கியவாறு. கோடி என்றது பல என்னும் பொருளது. பல காவதத்தொலைவு வரையில் சென்று பற்றக் கூடியது கலுழன் கண் என அவன் கூர்மையான பார்வையைப் புலப்படுத்தியவாறு. வள்ளலாகிய இராமன் திருமேனி அயர்வதைக் கண்டமையால் கலுழன் கண்ணீர் பெருக்குவானானான்; இது பிறர் துன்பங்கண்டு அன்புடையார் சொரியும் அவலக் கண்ணீராகும். வேத வடிவானவன் கலுழன் ஆகலின், அவன் பறந்து வருங்கால் உண்டாகும் சிறகின் ஒலி வேத ஒலிபோலிருந்தது என்னும் கருத்தால் இறையான் வேதங்கள் பாட, என்றார். கலுழன் விரைந்து பறந்து வரும்போது அவன் தெய்வத்தன்மையான சிறகுகளின் காற்று பட்டமையால் உலக உயிர்கள் இருவினையும் நீங்கித் தூய்மையுற்றன என்பார், 'உலகங்கள் யாவும் வினைசிந்த' என்றார். நாகம் என்றது பாம்புகளை. நாகபாசம் மெலிந்து நீங்கியதைப் பின் 'அகன்ற பதகன் துரந்த உரகம்' எனக் கூறுவது காணலாம்.

(245)

### கலுழனுடைய மேனியும் மணிமுடியும்

8378. அல்லைச் சுருட்டி வெயிலைப் பரப்பி
யகலாசை யெங்கு மழியா
வில்லைச் செலுத்தி நிலவைத்
தெருட்டி விரிகின்ற சோதி மிளிர
எல்லைக் குயிற்றி யெரிகின்ற
மோலி யிடைநின்ற மேரு வெனுமத்
தொல்லைப் பொருப்பின் மிசையே
விளங்கு சுடரோனின் மும்மைசுடர.

அல்லேச் சுருட்டி, வெயிலேப் பரப்பி,
அகல் ஆசை எங்கும் அழியா
வில்லேச் செலுத்தி, நிலவைத் தெருட்டி,
விரிகின்ற சோதி மிளிர,
எல்லேக் குயிற்றி எரிகின்ற மோலி,
இடை நின்ற மேரு எனும் அத்
தொல்லேப் பொருப்பின் மிசையே விளங்கு
சுடரோனின் மும்மை சுடர.

பொ :—விரிவான திசைகள் முழுவதும் அழியாது இருந்த இருளாகிய பாயைச் சுருட்டி (அவ்விடங்களில் தன் செம்மேனி ஒலியாகிய) வெயிலேப் பரப்பியும் (தன் வெண்டலேயின்) வெள்ளொளியைப் பரப்பி நிலவின் தன்மை இத்தகையது எனத் தெருளப்பண்ணியும் விரிகின்ற செவ்வொளியும் கலந்து விளங்கா நிற்கவும், தன் ஒளியினுல் பகலே யுண்டாக்கி விளங்குகிற மகுடம், பூமிக்கிடையில் நிற்கும் மேரு என்கின்ற அந்தப் பழைய மலேயின்மேல் விளங்குகின்ற சூரியனேக் காட்டிலும் மும்மடங்காக ஒளி வீசவும்.

கு :—கலுழன் மேனி செவ்வொளியையும் வெண்டலே வெள்ளொளியும் வீசும் தன்மையை விவரித்து, அவன் தலேமிசையணிந்த மகுடத்தின் ஒளியையும் இதனுல் விளக்கியவாறு. கருடன் தன் மேனி ஒளியால் இருள் நீக்கினுன் என்பார், அல்லலேச் சுருட்டி, என்ருர்; இருளின் செறிவு பாய்போல் பரவி யிருந்தது என அதன் திண்மையைப் புலப்படுத்தவேண்டி, அத்தகைய திண்ணிய இருளேயும் கலுழனுடைய மேனி ஒளி ஓட்டியது என அவன் மேனி ஒளியின் சிறப்பு இதனுல் புலப்படுத்தியவாறும் காண்க. ''அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப் பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பருதி'' (பெரும்பாண் – 1, 2) என்பது இங்கு நினேயத்தகும். அகலாசையெங்கு மழியா அல் என மாற்றி இயைக்க. வில் என்றது இங்குக் கலுழனின் வெண்டலே வீசும் வெள்ளொளியை. நிலேவைத் தெருட்டுதலாவது தன் வெண்மைத் தன்மையால் சந்திரனின் வெண்மையைப் புலப்படுத்துதல். விரிகின்ற சோதி என்றது செவ்வொளியும் வெள்ளொளியுமாய் விரிகின்ற இருவகைப் பேரொளியினே. எல்—பகல். கலுழனின் மணிமுடியே சூரியனேப்போலப் பகல் செய்கின்றது என்பார், எல்லேக் குயிற்றி எரிகின்ற மோலி' என்ருர். எரிதல் இங்கு விளங்குதலே உணர்த்தியது. மேருமலே பூமியின் நடுவில் இருப்பதாகக் கூறும் புராண மரபு நினேந்து 'அடை நின்ற மேரு' என்ருர். கலுழனுடைய பொன்னிற உடம்பு மேருமலேபோன்றது; அவன் தலேயிலணிந்துள்ள மணிமுடி சூரியனேப் போன்றது என்றவாறு. மணிமுடி சூரியனேக் காட்டிலும் பேரொளியுடையது என்பார் 'சுடரோனின் மும்மை சுடர' என்ருர். (246)

8379. நன்பால் விளங்கு மணிகோடி யோடு
நளிர்போது செம்பொன் முதலாத்
தன்பா லியைந்த நிழல்கொண் டமைந்த
தழுவாது வந்து தழுவ
மின்பா லியன்ற தொருகுன்றம் வானின்
மிளிர்கின்ற தென்ன வெயிலோன்
தென்பா லெழுந்து வடபா னிமிர்ந்து
வருகின்ற செய்கை தெரிய.

நன்பால் விளங்கு மணி கோடியோடு,
நளிர்போது, செம்பொன் முதலாத்
தன்பால் இயைந்த நிழல் கொண்டு அமைந்த
தழுவாது வந்து தழுவ,
மின்பால் இயன்றது ஒருகுன்றம் வானின்
மிளிர்கின்றது என்ன, வெயிலோன்
தென்பால் எழுந்து, வடபால் நிமிர்ந்து
வருகின்ற செய்கை தெரிய.

பொ :—நல்ல கழுத்திடத்தே விளங்கும் பல மணி மாலைகளோடு குளிர்ந்த மலர் மாலைகளும், சிவந்த பொன்னரி மாலைகளும் முதலாகத் தன்னிடம் பொருந்திய ஒளிகொண்டு அமைந்த அணிகலன்கள். (கலுழன் விரைந்து பறந்து செல்லுங்கால்) அவன் மேனியை முழுவதும் தழுவி நிற்காது சிறிது சிறிது தழுவி நிற்றலால், மின்னினால் இயன்றதொரு குன்றம் விண்ணில் விளங்குகின்றது என்னும்படியும், சூரியன் தென் திசையில் எழுந்து (தெற்கே இலங்கையை நோக்கி நிற்கும் இராமன் முன்னிலையில்) வடதிசையில் நிமிர்ந்து வருகின்ற செய்கைபோலும்படியும்.

பொ :— நன்பால் என்புழிப் பால் இங்குக் கழுத்தாகிய இடத்தை உணர்த்தியது. கோடி மணி என்க. பல மணி மாலைகளோடு மலர் மாலைகளும் பொன்னரி மாலைகளும் கலுழன் கழுத்தில் ஒளியுடன் விளங்குந் தோற்றம் மின்னலால் இயன்ற ஒரு குன்றம் விண்ணில் விளங்குவது போன்றிருந்தது எனவும், இலங்கையை நோக்கிக் கொண்டு தென் முகமாக நிற்கும் இராமனைக் காணத் தென் திசையிலிருந்து கலுழன் வடதிசைக்கு விரைந்து வருகின்றமையால் சூரியன் தென்பால் எழுந்து வடபால் நிமிர்ந்து வருகின்ற செய்கை போன்றிருந்தது எனவும் கொள்க. செந்நிறமுடையவனாய் ஒளிமிக்க முடியும் அணிகலன்களும் அணிந்து வருகின்ற கலுழன் தோற்றம் சூரியன் போன்றிருந்தது என்றவாறு. கிழக்கே எழுந்து மேற்கே

செல்வதே சூரியன் இயல்பு ஆதலின், வெயிலோன் தென்பால் எழுந்து வடபால் நிமிர்ந்து வருகின்ற செய்கை தெரிய என இல் பொருள் உவமையாகக் கூறினர். மின்பால் இயன்றதொரு குன்றம் என்பதும் இல்பொருளுவமை. தெரிய என்பது உவம உருபின் பொருள்பட வந்தது. நிழல் என்றது ஒளியினை. அமைந்த என்பது வினையால் அணையும் பெயரால் அணிகலன்களை உணர்த்தியது விண்ணில் பறக்குங்கால் கழுத்தில் உள்ள அணிகலன்கள் கீழே தொங்குவதன்றிக் கலுழன் மேனியில் முழுதும் தழுவி நில்லா மையை உணர்த்துவாராய்த் 'தழுவாது வந்து தழுவ' என்றார். (247)

### கலுழன் இராமனைக் கண்டு தொழுதல்

8380. பன்னகர் சென்னி மணிகோடி கோடி
பலகொண்டு செய்த வகையால்
மின்னு லியன்ற தெனலாய் விளங்கு
மிளிர்பூண் வயங்க; வெயில்கால்
பொன்னு லியன்ற நகையோடை பொங்க
வனமாலை மார்பு புரளத்
தொன்னுள் பிரிந்த துயர்தீர வண்ண
றிருமேனி கண்டு தொழுவான்.

பல்நாகர் சென்னி மணி கோடி கோடி
பலகொண்டு செய்த வகையால்
மின்னல் இயன்றது எனலாய் விளங்கு
மிளிர்பூண் வயங்க, வெயில்கால்
பொன்னல் இயன்ற நகைஓடை பொங்க,
வனமாலை மார்பு புரள,
தொல் நாள் பிரிந்த துயர்தீர அண்ணல்
திருமேனி கண்டு, தொழுவான்.—

பொ :—பலவாய நாகங்களின் தலையில் உள்ள பலகோடி மாணிக் கங்களைக் கொண்டு செய்த தன்மையால் மின்னினல் இயன்றது என்று சொல்லலாம்படி விளங்கும் விளக்கமுடைய ஆபரணங்கள் ஒளி வீசி விளங்கா நிற்கவும், ஒளி வீசுகின்ற பொன்னல் செய்த விளக்கமுடைய நெற்றிப்பட்டம் சிறப்புடன் விளங்கவும், துளசி மாலை மார்பில் புரளவும், (விண்ணில் நின்று) பழைய நாளில் (இராமனக அவதரித்தபோது) பிரிந்த துயர் தீர இராமனது திரு மேனியை (சேய்மையில்) கண்டு தொழுவானயினன்.

கு:— பறந்து வருகின்ற கலுழன் இராமன் திருமேனியைக் கண்டவுடன் விண்ணில் நின்று கைதொழுதமை இதனால் புலப் படுத்தியவாறு. வயங்க, பொங்க, புரளத் தொழுவான் என இயையும். ஓடை - நெற்றிப்பட்டம். திருமால் கோசலையின் கருவில் தங்கிய நாள்முதல் கலுழன் பிரிந்தே இருந்து வருந்தினன் ஆதலின், அப் பிரிவுத்துயர் தீர இன்று, இராமனாகத் தோன்றிய அவன் திருமேனி யைக்கண்டு தொழுவானாயினன் என்றவாறு. வனம் - துளசி. தெரிவானாய். கால்வழங்கு சிறையானாய், கிளர்வானாய், அலை சிந்த, இருள் சிந்த, வந்த சிறையினால் வேதங்கள் பாட, வினை சிந்த, நாகம் மெலிய, சோதி மிளிர, மோலி சுடர, நிழல் கொண்டமைந்த தழுவ, மின்பாலியன்றதொரு குன்றம் வானின் மிளிர்கின்றது என்னவும், வெயிலோன் வடபால் வருகின்ற செய்கை தெரியவும் வந்து பூண்வயங்க, ஓடை பொங்க, வனமாலை மார்பு புரளத் தொழு வான் என வினைமுடிவு செய்க. (248)

## கலுழன் தொழும் இயல்பு

8381. முடிமே னிமிர்ந்து முகிழேறு கையன்
முகின்மே னிமிர்ந்த வொளியான்
அடிமேல் விழுந்து பணியாம னின்ற
நிலையுன்னி யுன்னி யழிவான்
கொடிமே லிருந்திவ் யுலகேழொ டேழு
தொழநின்ற கோளு மிலனாய்ப்
படிமே லெழுந்து வருவான் விரைந்து
பலகா னினைந்து பணிவான்.

முடிமேல் நிமிர்ந்து முகிழ்ஏறு கையன்,
முகில்மேல் நிமிர்ந்த ஒளியான்,
அடிமேல் விழுந்து பணியாமல் நின்ற
நிலை உன்னி உன்னி அழிவான்,
கொடிமேல் இருந்து, இவ் உலகு ஏழொடுஏழு
தொழநின்ற கோளும் இலனாய்,
படிமேல் எழுந்து வருவான், விரைந்து,
பலகால் நினைந்து, பணிவான்;—

பொ:—திருமாலின் கொடிமேலிருந்து கொண்டு இந்தப் பதினான்கு உலகங்களும் தொழுமாறு முன்நின்ற பெருமையும் இல்லாதவனாய்(த் தனியே) எழுந்து தரைமேல் விரைந்து வருபவனாகிய கலுழன், முடியின்மேல் உயர்ந்து குவிந்த கையையுடையவனாய், நீல

மேகத்தினும் உயர்ந்த நீல ஒளியுடைய மேனியனுகிய இராமனது அடிமேல் விழுந்து பணியாமல், அவன் துன்பத்தோடு நின்ற நிலையை நினைந்து நினைந்து மனம் அழிபவனுய்ப் பலகால் அவன் பெருமையை நினைந்து (விண்ணில் நின்றே) பணிவானுனன்.

கு :— திருமால் பூமியில் இராமனுக அவதரித்தமையால் கலுழன் அத்திருமாலின் கொடியிலிருந்துகொண்டு பதினன்கு உலகங்களும் தொழநிற்கும் பெருமையை இழந்தவன் ஆனுன் என்பார், 'தொழ நின்ற கோளும் இலனுய்' என்ருர். பன்னுள் பிரிந்த துயரமே யன்றி உலகு தொழநின்ற கோளும் இலனுய் என உம்மையை இறந்தது தழுவிய எச்சப் பொருளதாக்குக. கோள்—பெருமை. திருமாலைப் பிரிந்துள்ளமையால் அவன் கொடிமேலிருந்து உலகு தொழ நிற்கும் பெருமையின்றித் தனியனுய்ப் பறந்து புவிமேல் வருகின்ற கலுழன், முடிமேல் குவித்த கையனுய் இராமனது அடிமேல் வீழ்ந்து பணியாமல், விண்ணில் நின்றபடியே அவன் பெருமையைப் பலகால் நினைந்து பணிவான் ஆனுன் என்க. திருமாலின் கொடியில் கலுழன் இருப்பான் என்பதை : "பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ் சிறைப் புள்ளணி நீள்கொடிச் செல்வனும்" (திருமுருகாற்றுப் - 150, 151) எனத் திருமால் கூறப்படுதலால் அறியலாம். முகிழ் அரும்பு. தாமரை அரும்பு போலக் கைகளைக் குவித்த நிலையையே முகிழேறுகை என்ருர். முகிழேறுதல் - குவிதல். நீலமேகத்தினும் சிறந்த நீலமேனியன் இராமன் ஆதலின் 'முகில்மேல் நிமிர்ந்த ஒளி யான்' என்று அவனைச் சிறப்பித்தார். ஒளியோனது அடிமேல் என்க. கலுழன் இராமனுடைய அடிமேல் விழுந்து பணிந்தால் அவன் அவதார இரகசியத்தை வெளிப்படுத்திய குற்றம் வரும் ஆகலின், அடிமேல் விழுந்து பணியக் கலுழனுக்கு ஆசை இருந்தும் அது செய்யானுய் விண்ணிலிருந்தபடியே அவன் பெருமையைப் பலகால் நினைந்து பணிவான் ஆனுன் என்க. இக்கருத்தானே இந்திரனும் சரபங்கரின் ஆசிரமத்தருகில் இராமனைக் கண்டபோது, இராமனை நெருங்கி வணங்காமல் சேய்மையில் நின்று பல நினைந்தேத்திச் சென்ருன் என்பதை:- " இன்னன பல நினைந்தேத்தி னியம்பாத் துன்னுத லிடையுளதென நனி துணிவான்..................புரந்தரன் போனுன்" (சரபங்கா–32) என்று கூறியுள்ளதால் அறியலாம். தொழ நின்ற கோளுமிலனுய் எழுந்து படிமேல் விரைந்து வருவான், முடி மேல் முகிழேறு கையனுய் ஒளியானது அடிமேல் விழுந்து பணியாமல், (அவன் துன்புற்று நின்ற நிலை யுன்னி யுன்னி அழிவானுய் (அவன் பெருமையைப்) பலகால் நினைந்து பணிவான் என வேண்டுஞ் சொல் வருவித்துக்கூட்டி முடிக்க. நின்ற நிலை என்றது இராமன் இலக்குவனுக்கு அருகில் துன்புற்று நின்ற நிலையை.

(249)

## கலுழன் விண்ணில் நின்றே இராமனது தெய்வநிலையை நினைந்து துதிப்பது

8382. வந்தான் மறைந்து பிரிவால் வருந்து
மலர்மே லயன்றன் முதலோர்
தந்தாதை தாதை யிறைவா பிறந்து
விளையாடு கின்ற தனியோய்
சிந்தா குலங்கள் களைவாய் தளர்ந்து
துயர்கூர லென்ன செயலோ
எந்தாய் வருந்த லுடையாய் வருந்த
லெனவின்ன பன்னி மொழிவான்.

'வந்தான் மறைந்து பிரிவால் வருந்து
மலர்மேல் அயன்தன் முதலோர்
தம் தாதை தாதை இறைவா!
பிறந்து விளையாடுகின்ற தனியோய்!
சிந்தாகுலங்கள் களைவாய்! தளர்ந்து
துயர்கூரல் என்ன செய்கோ?
எந்தாய்! வருந்தல், உடையாய்! வருந்தல்,
என, இன்ன, பன்னி மொழிவான்.

பொ:—'மனிதவடிவில் மறைந்து வந்தவனாகிய இலக்குவனது பிரிவினால் வருந்துகின்ற - உந்திக் கமல மலர்மேல் இருக்கும் பிரமன் முதலியோர்க்குக் காரணமாகவுள்ள தலைவனே! மானிட வடிவில் மறைந்து நின்று (அவ்வுடம்பிற்கேற்ப) விளையாடுகின்ற ஒப்பற்றவனே! உயிர்களின் மனத்துன்பங்களை யெல்லாம் போக்குகின்றவனே! அத்தகைய நீ மனம் தளர்ந்து துன்புறுதல் என்ன செய்கையோ? என் தந்தையே வருந்தாதே, என்னை ஆளாக உடையவனே! வருந்தாதே' என்று இத்தன்மையான சொற்களைப் பல முறை சொல்லி மீண்டும் சொல்வானானான்.

கு:—மறைந்து வந்தான் என்க. தன் உண்மை வடிவை விடுத்து மானிட வடிவில் மறைந்து பிறந்தவனாகிய இலக்குவனது பிரிவால் வருந்துகின்ற இறைவா என இயையும். அயன் முதலிய தேவர்கட்கும் காரணன் என்பான், அயன்றன் முதலோர் தம் தாதை தாதை என்றான். பிறந்து விளையாடுதலாவது, மனிதனாகப் பிறந்து நின்றே தெய்வச் செயல்களை விளையாட்டாகச் செய்தல். தனையொப்பாரையில்லான் என்பான், 'தனியோய்' என்றான். சிந்தா குலங்கள்- துன்பங்கள். பிறர் துன்பங்களைக் களையும் ஆற்றலுடைய நீ

துயருறல் பொருந்தாது என்பான் 'துயர்கூரல் என்ன செயலோ ?' என்று வினவினன். கலுழனுக்குத் திருமால் தந்தைபோல் அன்பு காட்டித் தலைவனாக நின்று காப்பவனாதலின், எந்தாய்! என்றும், உடையாய்! என்றும் விளித்தான். வருந்தல் என்பது எதிர்மறை வியங்கோள். பன்னுதல், பலகால் சொல்லுதல். விண்ணில் நின்ற கலுழன் தரையில் நிற்கின்ற இராமனைக் கண்டு சொல்லிய இச் சொற்கள் இராமன் கேட்க மொழிந்தனவல்ல; கலுழன் தன் மனத்துயர் தணியுமாறு தனக்குள் சொல்லியனவே ஆம். கலுழன் கூறிய இச்சொற்களை இராமன் கேட்டிருப்பானேல், பின் (266 ஆம் செய்யுளில்) "ஐய நீ யாரை? எங்களருந்தவப் பயத்தின் வந்து இங்கு எய்தினை" என இலக்குவன் முதலியோர் உணர்வு பெற்று எழுந்த பின் வினவுதல் நிகழாது என்பது தெளிவு. மறைந்து வந்தான் என்பதற்கு இராவணன் காணாமல் மறைந்து வந்தவனாகிய கருடன் எனப் பொருள் கூறலும் ஆம். ஆசிரியர் குறிப்பிட்டபடி பழைய உரையும் இதற்குப்பின் சேர்க்கலாயிற்று. 250 - 261 வரை. (250)

இ-ள். வந்தான் மறைந்து - மறைந்து வந்தால் என்றபடி. (இனிச் சொல்லாமல் வந்தால்) பிரிவால் - பிரிவாற்றாமையாலே. வருந்தும் - நோவை அடைவான். (யாரென்றால்) மலர்மேல் - பூமேலிருக்கின்ற. அயன் - நான்முகன். தன் - தனக்கு. முதலோர் பூருவராகிய நித்திய சூரிகள். தம் - தமக்கு. தாதை - காரணராகிய சேனையர் கோனுக்கு. தாதை - பிரதானராகிய (திருவநந்தாழ்வான் மறைந்து வந்தால் வருந்தும் என்றன் வயம்). இறைவா - பரம புருஷனே. மறைந்து எனக்குச் சொல்லாமல் விளையாடுகின்ற - லீலை செய்கின்ற. தனியோய் - ஒப்பற்றவனே. சிந்தாகுலங்கள் - மனக்கிலேசங்களை. களைவாய் - எல்லோருக்கும் போக்குகிறவனே. தளர்ந்து - மெலிந்து. துயர் கூரல் - துக்கத்தழுந்துதல். என்ன செயலோ - யாது காரணமோ. எந்தாய்-என் சுவாமியே. வருந்தல்- நோவுபடாதே. உடையாய் - சர்வ சுவாமியே வருந்தல் - நோவு படாதே. என - என்று. இன்ன - இவ்விதங்களாய். பன்னி-பிரலாபித்து. மொழிவான் - துதிக்கத் தொடங்குவான். எ - று.

தாதை யென்றது மகன் என்னும் காரியம் பிறக்கக் காரணமாயினானையாகலால் அவனுக்குக் காரணமானோர் நித்திய சூரிகளாகவும், அவருக்குக் காரணம் சேனையர் கோனாகவும், அவருக்குக் காரணம் கருடனாகிய தாமாயிருக்க நைச்யாநுஸந் தானத்தாற்றம்மைக் கூறாது திருவநந்தாழ்வானைக் கூறினாரென்று கொள்க. அண்ணல் கலுழனென்னும் எழுவாய், பணிவானாய் மொழிவானென்னும் பயனிலை கொண்டது. இனி, வரும் பாட்டுக்களுக்குக் கருத்து முதலிய வைந்தும் பொருள் விளக்க வேண்டியவாறே யெழுதுகின்றமையால்

ஆங்காங்குணர்க. இருக்கெசுச் சாம வதருவச் சிறை யென்றது சிறையையுடையனென் ருகுபெயராய் சிரஞ்சேதன மென்கிற செய்யுளிற் காண்க.

8383. தேவாதி தேவர் பலராலு முந்து
திருநாம மோது செயலோய்
மூவாதெ நாளு முலகேழொ டேழு
மரகாளு மேன்மை முதல்வா
மேவாத வின்ப மவைமேவி மேவ
நெடுவீடு காட்ட முடியாய்
ஆவாய் வருந்தி யழிவாய்கொ லாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

'தேவாதி தேவர் பலராலும் முந்து
திருநாமம் ஓது செயலோய்!
மூவாது எநாளும் உலகுஏழொடு ஏழும்
அரசாளும் மேன்மை முதல்வா!
மேவாத இன்பம் அவைமேவி, மேவ
நெடுவீடு காட்ட முடியாய்!
ஆவாய்! வருந்தி அழிவாய்கொல்!—ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்?

பொ :—தேவர் தலைவர் பலராலும் சிறந்த நின் திருநாமம் ஓதப் படுதற்குக் காரணமான செயற்கரிய செயலையுடையவனே! மூப்பு அடையாமல் (என்றும் இளையனாயிருந்தே) பதினான்கு உலகங்களையும் அரசு ஆளுகின்ற மேன்மையையுடைய முதல்வனே! நின் அடிய வர்கள், பிறர்பால் பெற முடியாத இன்பங்களைப் பெற்றுப் பின் உன்னையடையுமாறு பெரிய முத்தியுலகத்தை அவர்க்குக் கொடுத் துதவ முதல் தலைவனாயிருப்பவனே! (இத்தகைய நீ நின் தம்பிக் காக) வருந்தி மனமழியத்தக்கவனோ? இந்த உன் மிக்க மாயையை அறிவார் யார்? (ஒருவருமிலர் என்றபடி.)

கு :—தேவர் தலைவர்கள் எல்லாம் பத்தியுடன் நின் திரு நாமத்தை ஓதும்படி செயற்கரிய செயலைச் செய்கின்ற நீ—பதினான்கு உலகங்களையும் எப்போதும் அரசாண்டு கொண்டிருக்கின்ற நீ—நின் னடியார் நின்னை யடையுமாறு பெரிய வீடு கொடுக்கும் முதன்மை யுள்ள நீ—மனம் வருந்துதல் பொருந்தாது என்பது புலப்படுத்தி, அப் பொருந்தாமையும் நின் பெரிய மாயையாக இருக்கலாம்;

அதனை அறிவார் யார்? என்றபடி. முடியாய் ஆவாய் என்றது முதல் தலைவன் ஆபவனே என்றபடி. வீடு காட்டுதல் என்றது வீடு தருதலை. அதிரேகம் - மிகுதி. (251)

இதில் வீற்றிருந் தேழுலகுந் தனிக்கோல் செல்ல வீவில் சீராற் றன் மிக்காளுமம்மானே வருந்தாதே யென்கிருர்.

இ-ள். தேவு - சேனையர் கோனை - ஆதி - முதலாகவுடைய. தேவர் - நித்தியசூரிகள். பலராலும் - அநேகராலும். முந்து - ஆரம்பத்திலே. திருநாமம் - ஹரி: என்கிற திருநாமத்தைக் கொண்டு. ஓது - துதிக்கத்தக்க. செயலோய் - செய்கையுடைய வனே. மூவாது - தேவமனித திரியக்குத்தாவரமாம் யாவையும் கெடாமல். அந்நாளும் - உட்கொண்ட அக்காலத்திலும். உலகு - உலகங்கள். ஏழொடேழும் - பதினாலும். அரசு - தனிக்கோல் வழியே. ஆளும் - செல்ல நடாத்துகிற. மேன்மை - மேம்பாட்டை யுடைய. முதல்வா - காரணபூதனே. மேவாத - மானிடராக வர லரிதாகிய. இன்பம் - ஆனந்தங்கள். அவை - அப்பதினொன்றும். மேவி - அடைந்து. மேவு - பின்படையத்தக்க. அந்நெடு வீடு - அவ்வின்பங்களின் நெடியவின்பத்தை. காட்டு - காட்டுதற்கு இட மான. அம் - அழகிய. முடியாய் - பதினாலுலகுக்கும் தலையான திரு நாட்டை யுடையவனே. ஆவாய் - இங்கு நின்ற நிலையிலுமாகு மவன். வருந்தி - இங்ஙனே நோவுபட்டு. அழிவாய்கொல் - கலங் குவனோ. ஆர் - மயர்வறமதி நலமருளப் பெருதாரில் யாவர். இவ் கலங்காதவன் கலங்குதலாகிய இந்த. அதிரேக மாயை - மஹா மாயையை. அறிவார் - அறியத்தக்கவர். ஒருவரும் அறியார் என்றபடி. (எ - று)

நாளுமென்ற உம்மையால் உட்கொள்ளாத காலத்திலும் அரசா ளுகைதானே போதரும் உருத்திரனுக்கு அந்தரியாமியாய் நின்று உயர் வாழ்தற்கு இடமாய பூதவுடம்பைப் பிரித்தபோது அவ்வுடம்பு அழிதல்பற்றி அழித்தலுமோர் செய்கை யென்னும் பிறர்தம் மேற் கொண்டு களைந்து தாளுட்டித் தனது நிறுப்பால் உண்டபோதும் உண்ணுதபோதும் அரசாளுகை தவிரான் என்கிருர். இதுபற்றி யன்றே கடவுள் வாழ்த்தில் உலகம் யாவையுந் தாமுளவாக்கலும் நிலைபெறுத்தலும் நீக்கலும் என்றது. மனிதன் மனிதகந்தருவன் றேவகந் தருவன் பிதிர்கருமத் தேவன்றனுடன்னசுரன் சுரன் இந்திரனுசானும் பிரசாபதியானேன் கனகன் விராட்டிரணிய கர்ப்பன் முறை கருதுமிப் பதினேரு பேர்கள் பினவானந்தங் கனுரையாம் பிரளய வெள்ளக்கடல் பிரமானந்த மென்னுமிப்பாட் டானே உயர்வறவுயர் நலமென்று கொள்க. மனிதவின்பந் தொடங்கி மலரோனின் பங்காறு மொவ்வொன்ருக விட்டடையுமின்பத்தை

வீடென்றதாகு பெயர். மேவ காட்டவெனப் பெயரெச்சங்களாகவும் உயர்வறவுயர் நலத்தைக் காட்டுகின்ற திருநாட்டை முடியாகவும் அதனீற்றய லெதிர்மறையாகாரமாகவும் மயங்கக் கூடுதல் குற்ற மன்றோ எனிலன்று. தேவாதி என்று தொடங்கிய கீழும் எழுவாய் என்று நடத்துகிற மேலும் நோக்கியேற்புழியறிந்து இதற்கு இவ் வகையாம் எனத்தகும் வகை செலுத்துத றந்திரவுத்தி என்கிற படியே உய்த்துணர்க என்பார். ஆழமுடைத்தாதல் ஆகிய வழகு தோன்றக் கூறினர். இங்ஙனங் கூறுகிற வெல்லாங்கம்ப சூத்திர மென்பது நாடக வழக்கு சித்திரமெனவுங் கூறுப.

8384. எழுவா யெவர்க்கு முதலாகி யீரெரு
டிடையாகி யெங்கு முளையாய்
வழுவா தெவர்க்கும் வரமீய வல்லை
யவரால் வரங்கள் பெறுவாய்
தொழுவா யுணர்ச்சி தொடராத தன்மை
யுருவாய் மறைந்து துயரால்
அழுவா யொருத்த னுளைபோலு மாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

'எழுவாய், எவர்க்கும் முதலாகி, ஈரெரு
இடைஆகி; எங்கும் உளையாய்,
வழுவாது எவர்க்கும் வரம் ஈயவில்லை;
அவரால் வரங்கள் பெறுவாய்;
தொழுவாய் உணர்ச்சி தொடராத தன்மை
உருவாய் மறைந்து; துயரால்
அழுவாய் ஒருத்தன் உளைபோலும்!—ஆர்இவ்
அதிரேக மாயை அறிவார்.

பொ :—அயன் முதலிய எவர்க்கும் ஆதியாகி நடுவாகி அந்த மாகித் தோன்றுபவனாய், எவ்விடத்தும் உள்ளவனாய் எல்லாத் தேவர்க்கும் வழுவாமல் வரங்கொடுக்கவல்ல நீ, (அவதாரநிலையில்) முற்றுணர்வு உண்டாகப் பெருத தன்மையையுடைய மனித உருவாய் மறைந்து நின்று பிறதேவரைத் தொழுபவனாய் அவர்பால் வரங்களைப் பெறுவாய்; மேலும் துயரால் அழுவாய்; (இவ்வாறு வியக்கத்தக்க நீ) ஒருத்தன் இருக்கின்ருய் போலும், இந்த மா மாயையை ஆர் அறிவார்?

கு :—எக்காலத்தும் எவ்விடத்தும் இருப்பவன் என்பார், எவர்க்கு முதலாகி ஈரிரெுடிடையாகி எழுவாய் என்றும், எங்கும் உளையாய், என்றும் கூறினன். தனக்கு மேலிலான் என்பான், 'எவர்க்கும் வழு வாது வரமீயவல்லை' என்று கூறினன். முதலாகி என்றது படைப்பவ ஞகி என்றவாறு. ஈரெடு இடையாகி என்றது, அழிப்பவனும், காப் பவனுமாகி என்றவாறு. காலமும் இடமும் கடந்தவனுய் யாவர்க்கு மேலாய் நின்று வரங்களைக் கொடுக்கவல்ல நீ, மனித உருவில் மறைந்து நின்று பிறரைத் தொழுபவனுயும் அவர்பால் வரங்களைப் பெறுபவனுயும் துயரால் அழுபவனுயும் இருக்கின்ருயே, நின் பெரு மையை யாரறிய வல்லார் ? என்று வியந்தவாறு. அவன் தெய்வ நிலையும் அவதார நிலையும் முரண்பட்டனவாகத் தோன்றினுலும் அம் முரண்பாடும் அவன் பெரிய மாயை விளையாட்டேயாகும் என்றவாறு. வருணன் முதலியவரைத் தொழுது வரம்பெற முயன்ற நிலையை நினைந்து, தொழுவாய், வரங்கள் பெறுவாய் என்ருன். உணர்ச்சி தொடராத் தன்மை உரு என்றது, மனித உருவை. அறிந்தும் அறிந்ததை மறந்தும் மாறுபடும் நிலை மனிதப் பிறவிக்கு உண்டாத லின் அங்ஙனம் சிறப்பித்தவாறு. (252)

கீழே பரத்துவங் கூறியிதிலே வியூகமும் அந்திரியாமித்துவமும் விபவமுங் கூறத் தொடங்கி ஏக மூர்த்தி - யிருமூர்த்தி - மூன்று மூர்த்தி - பல மூர்த்தியாகி ஐந்துபூதமாயிரண்டு சுடராயருவாகி நாகமேறி நடுக்கடலுட் டுயின்ற நாராயணனே வருந்தாதே யென் கின்ருர்.

இ-ள். எழுவாய் - பாற்கடலில் வாசுதேவனுய் எழுந்தருளு வாய். எவர்க்கும்-எவ்வகை மேம்பாட்டோருக்கும். முதலாகி - ஆக்குங் காரணனுய். ஈரெடு - நீக்குங் காரணனுதலோடு. இடை யாகி-காக்குங் காரணனுமாயெழுவா யென்றந்வயம், எங்கும்-கரந்த சிலிடந்தொறு மிடந்திகழ் பொருடொறும். உளையாய் - வியாபிக்கு மவனுய். வழுவாது - தப்பாமல் ; அவர்க்கும் - அந்த மூவருக்கும். வரம் - வேண்டுமவைகளை. ஈயவில்லை - கொடுக்கமாட்டுவை. அவ ரால் - அந்த மூவராலும். வரங்கள் - வேண்டுமவைகளை. பெறு வாய் - பிரமா விஷ்ணு ருத்திரர்களாகிக் கொள்ளுவாய். தொழுவாய்- இந்திராதி தேவர்களாய் வணங்குவாய். உணர்ச்சி - மெய்யுணர்வை. தொடராது - பொருந்தாமல் பிரமாதிகளைத் தொழுவாய் என்றன் வயம். அது - அந்த மெய்யுணர்வை. அன்மை - அல்லாத வையந் திரிபறியாமைகளையுடைய. உருவாய் - மனித வடிவாகி. மறைந்து- தெரியாதவனுய். துயரால் - துன்பத்தாலே. அழுவாய் - அழுமவ னுய். ஒருத்தன் - இராமனென்னு மொப்பற்றவனுய். உளை - ஊனு கிருய். போலும், முன்னிலையசை. ஆர்-எவர். இ-இந்த. அதிரே

கம் - பெரிதாகிய. மாயை - மயக்கத்தை. அறிவார் - தெரிகிறவர். இப்படிப்பட்ட மகாமாயையை யறிவாரார். எ-று.

ஆமோத பிரமோத சம்மோதமென்கிற மூன்றுலகங்களிலும் சங்கருஷ்ணப் பிரத்யும்னனிருத்தர்களா யெழுந்தருளி யிருக்கிருர்க ளென்பது சித்தாந்தமாகலாற் பிரமாதி மூவர்க்குரிய முத்தொழிற்குங் காரணராக வம்மூவரையுங் கூறினுராயிற்று. வரங்கள் பெறுவா யென்றதனுலே அம் மூவரதனுக் கிரகத்தா லிம்மூவரு முத்தொழிற் குரியராயின ரென்ருயிற்று. இப்பாட்டு மிகைபடக் கூருது சுருங்கச் சொல்லலென்னு மழகு குன்றக் கூறலன்று மேல் விளங்கவைத்த லால்.

8385. உன்னுெக்க வைத்த விருவர்க்கு மொத்தி
யொருவர்க்கு முண்மை யுரையாய்
முன்னுெக்க நிற்றி யுலகொக்க வொத்தி
முடிவொக்கி னென்று முடியாய்
என்னுெக்கு மின்ன செயலோ விதென்னி
லிருளொக்கு மென்று விடியாய்
அந்நொப்ப மேகொல் பிறிதேகோ லாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

'உன் ஒக்க வைத்த இருவர்க்கும்ஒத்தி;
ஒருவர்க்கும் உண்மை உரையாய்;
முன் ஒக்க நிற்றி; உலகுஒக்க ஒத்தி;
முடிவு ஒக்கின், என்றும் முடியாய்;
"என்ஒக்கும், இன்ன செயலோஇது?" என்னில்
இருள் ஒக்கும் என்றுவிடியாய்;
அந் நொப்பமேகொல்? பிறிதேகொல்?— ஆர்இவ்
அதிரேக மாயை அறிவார்?

பொ :—(காத்தல் தொழிலைச் செய்யும்) உன்னேடு ஒக்க (படைத்தலும் அழித்தலும் செய்யுமாறு வைத்த பிரமனுக்கும் உருத்திரனுக்கும் ஒத்தவன்போல மும்மூர்த்தியுள் ஒருவனுக இருக்கின்ருய்; ஆனல் அவ்விருவரில் ஒருவர்க்கும் நின் உண்மை நிலையை உரைக்காதவனுக இருக்கின்ருய்; அம் மும்மூர்த்திகளுள்ளும் நீயே முதல் மூர்த்தியாக நிற்கின்ருய்; உலகப் பொருள்களில் எல்லாம் உள்ளீடாய்க் கலந்து நிற்கின்ருய்; ஆயினும் அப் பொருள்களுக்கு முடிவு நேரின் அப்பொருள்களின் உள்ளீடாய் நிற்கின்ற நீ எக்காலத்தும்

அழிவு எய்தாமலிருக்கின்றாய்; இத்தன்மையான் பொருந்தாச் செயலாகிய இது எத்தன்மையான செயலோ?' என்று ஆராயப் புகுந்தால் ஆராய்வார் உள்ளம் இருள் ஒக்கும் என்று சொல்லுமாறு அதற்கு விளக்கம் தாராமல் இருக்கின்றாய்; (அவ்வாறு இருத்தற்குக் காரணம், ஆராய்வார் தம்) புத்தியின் சிறுமையோ? அல்லது, வேறோ? யார் இந்த மாமாயையை அறியவல்லார்?

கு:—திருமால் உலகப் பொருள்கள் ஒவ்வொன்றிலும் உள்ளீடாய் இருக்கின்றான் என்பதை விளக்க 'உலகொக்க வொத்தி' என்றான். தோற்றமுள்ள அப் பொருள்களுக்கும் முடிவு வருங்கால் அப் பொருள்களின் உள்ளீடாயுள்ள நீயும் முடிதலே பொருத்தமாகவும்; அங்ஙனம் நீ முடியாமல் என்றும் முடியாதவனாக இருக்கின்றாயே என்று வியந்தவாறு. இறைவன் செயல்களைத் தன் அறிவுகொண்டு ஆராயப் புகுந்த ஒருவன் விளக்கம் பெறவியலாமையைப் புலப்படுத்தவே "என்னைக்கு மின்ன செயலோ விதென்னின் இருளொக்கு மென்று விடியாய்" என்றார். அருளாலெவையும் பாரென்றானத்தை யறியாதே சுட்டியென்னறிவாலே பார்த்தேன்; இருளான பொருள் கண்ட தல்லால், கண்ட என்னையும் கண்டிலேன் என்னேடி தோழி" (தாயுமானவர்–ஆனந்தக்களிப்பு-13) என்பது இங்கு நினைவுறல் தகும். உலகு என்றது உலகப் பொருள்களை. ஒக்க ஒத்தி என்றது, எல்லாப் பொருள்களிலும் உள்ளீடாய் ஒத்திருக்கின்றாய் என்றவாறு. நொப்பம் – நொய்ப்பம் என்பதின் திரிபு; சிறுமை என்னும் பொருளது. அறிவு கொண்டு ஆராய்வார்க்கு விளக்கம் தோன்றாமலிருப்பதற்குக் காரணம் அவர் தம் அறிவின் சிறுமையோ அல்லது நின் ஆற்றலின் பெருமையோ என்பார், 'அந்நொப்பமே கொல் பிறிதே கொல்' என்றார். நொப்பம் என்பதை நேர்ப்பம் எனப் பாடங் கொள்வாருமுளர். "அருவாம் நேர்ப்பமும் நீயே" (திருவாய்-8-1-6) என்பது காட்டுவர். (253)

கீழே வைகுந்தத்திற் பரவாசுதேவ னென்றேகமூர்த்தி பாற்கடலில் வாசுதேவனோடிருமூர்த்தி மூன்று மூர்த்தி பலமூர்த்தி யென்றாராயிதிலே மூன்று மூர்த்தி பல மூர்த்தி யென்றதை யனுவாதித்தைந்து பூதமா யிரண்டு சுடரா யருவானவனே வருந்தாதே என்கிறார்.

இ – ள். உன்-விஷ்ணுவாகிய வுன்னோடு. ஒக்க – கூட்டியெண்ண. வைத்த – நிறுத்திய. இருவர்க்கும் - பிரமருத்திரருக்கும். ஒத்தி – வியாபகத்தி லொத்திருக்கிறாய். ஒருவர்க்கும் - இருவரிலொருவருக்காயினும். உண்மை – (எல்லா நாராயணனே யென்கிற) மெய்யுணர்ச்சியை. உரையாய் - தெரியப்படுத்தாய். முன் - இம்மூவருக்கு முன்பே. ஒக்க - விஷ்ணுவவதரித்தா னென்பதற்கியைய.

நிற்றி - இராமனாய் நிற்கிறாய். உலகு - ஐந்துபூதமிரண்டு சுடரென் பதற்கு. ஒக்க - இயைய. ஒத்தி - வியாபகத்தி லொத்திருக்கிறாய். முடிவு - இந்த லீலா விபூதியடங்கலும். ஒக்கின் - இருமூர்த்தியு மேக மூர்த்தியே யென்று கலக்குமிடத்தில். ஒன்றும் - பொருந்துதற் கிடமான. முடியாய் - திருநாடாகிய நித்திய விபூதிநாதனே. என் - யாதொன்று. ஒக்கும் - இப்படி யெல்லாவற்றிலும் வியாபித் திருக்கும். இன்ன - இப்படிப்பட்ட. செயலோ - செய்கைதானோ, இது - இந்த வியாபக வஸ்து. என்னில் - என்றாராயப்புக்கால். இருள் - அந்தகாரத்தை. ஒக்கும் - ஒத்து விளங்காதிருக்கும். (இது இன்ன செயலோ என்னைக்கு மென்னிலிரு ளொக்கு மென்றன் வயம்) என்று - சூரியன்போல. விடியாய் - விளக்கமாகாய். (இரண்டு சுடரென்பதில்லையே யெனில், இருளென்பதில் மதிதோன்றியென்றி லடங்கினதற் கொண்சுடரிரவியிடத்தினிற் றிங்கடொறு மினிதுறவு செய்குவதே என்பதனாற் காண்க.) அந்நொப்பமே - எங்குமுளீ பொன்றங்குச் சொன்ன நொப்பமே (மங்கிய வருவா நொப்பமு நீயே) பிறிதே - வேறென்று அன்று இரண்டு கொல்லு மசைநிலை. நொப் பத்தினேகாரந் தேற்றம். பிறிதினேகாரம் வினா. முடிவொக்கினென் பதில் ஏழனுருபைந்தனுருபாய் மயங்கிற்று எ-று.

8386. வாணா ளளித்தி முடியாம னீதி
வழுவாம னிற்றி மறையாய்
பேணா யுனக்கொர் பொருள்வேண்டு மென்று
பெறுவா னருத்தி பிழையாய்
ஊணா யுயிர்க்கு முயிராகி நிற்கு
முணர்வாதி பெண்ணி னுருவாய்
ஆணாகி மற்றைய லியாதி யாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

வாணாள் அளித்தி, முடியாமல்; நீதி
வழுவாமல் நிற்றி—மறையாய்;
பேணாய், உனக்கு ஓர்பொருள் வேண்டும்
என்று; பெறுவான் அருத்திபிழையாய்,
ஊணாய் உயிர்க்கும் உயிராகி நிற்கும்
உணர்வுஆதி; பெண்ணின் உருவாய்
ஆண் ஆகி; மற்றை அலியாதி!—ஆர்இவ்
அதிரேக மாயை அறிவார்?

பொ :—நீ அழியாமல் இருந்துகொண்டே உயிர்களின் வினைக்கு ஏற்ப அவற்றிற்கு) வாழ்நாளைக் கொடுக்கின்றாய்; அவ்வுயிர்கள் நீதிவழுவாமல் நடந்துகொள்ள வேண்டி (ஒழுக்க முறைகளைக் கூறும்) வேதங்களின்படி நீ ஒழுகி நிற்கின்றாய்; உனக்கு ஒரு பொருள் வேண்டும் என்று விரும்ப மாட்டாய்; பெற விரும்பும் ஆன்மாவின் விருப்பத்தைக் கெடுக்காமல் அது விரும்பிய எதையும் கொடுக்கின்றாய்; உணவின் பிண்டமான உடம்பாகி உயிர்க்கின்ற உயிராகி, அவ்வுயிரில் நிற்கும் உணர்வும் ஆகின்றாய்; பெண்ணின் உருவாகி, அவ்வுருவிற்கு மாறான ஆணும் ஆகின்றாய்; அவ்விரண்டு நிலையும் இல்லாத அலியும் ஆகின்றாய்; இந்த நின் மாமாயையை அறிபவர் யார்?

கு:—திருமாலின் நிலைபேறுடைமை புலப்பட 'முடியாமல் வாணாள் அளித்தி' என்றும், உயிர்களின் ஒழுக்க நெறியைப் புலப்படுத்த திருமாலே வேத நெறியில் ஒழுகி நிற்கின்றமை புலப்பட 'மறையாய்' என்றும், அவன் வேண்டுதல் வேண்டாமையிலன் என்பது புலப்பட, 'உனக்கோர் பொருள் வேண்டும் என்று பேணாய், பெறுவானருத்தி பிழையாய்' என்றும், அவன் கலப்பினால் உடம்பாகி உயிராகி உணர்வாகி நிற்குமியல்பு புலப்பட ''ஊனுவுயிர்க்கு முயிராகி நிற்கு முணர்வாதி'' என்றும், உயிர்களின் பெண்ணும் ஆணும் அலியும் ஆகிய பேதங்களெல்லாம் அவனால் வந்த ஆக்கமே யாதல் புலப்பட 'பெண்ணினுருவாய் ஆணாகி மற்றை அலியாதி' என்றும் கூறினான். 'பெறுவானருத்தி பிழையாய்' என்றமையால் வேண்டாமையிலான் என்பது புலப்படுத்தியவாறு. பெறுவான் என்றது சாதியொருமை. பெறுதற்குரிய ஆன்மாக்கள் என்றவாறு. தனக்கு விருப்பமில்லை யாயினும் விரும்பும் ஆன்மாக்களின் விருப்பத்தை வெறுக்காமல் வேண்டுவன வெல்லாம் ஈகின்றவன் இறைவன் என்றவாறு. ஊண் என்றது இங்கு உணவின் பிண்டமாகிய உடம்பை உணர்த்தியது, "ஊனு முயிரும் உணர்வும்போல் உள்ளும் புறனு முளனென்ப" (அயோத்தியா – கடவுள் வாழ்த்து) என முன் கூறியுள்ளமை இங்கு நினையத்தகும். உடம்போடு கூடி வாழும் உயிர் என்பது தோன்ற 'உயிர்க்கும் உயிர்' என்றான். விருப்பு வெறுப்பு அற்றவனாயிருந்தே இறைவன் உயிர்கட்கு ஆயுளும் போகமும் அளித்து அவ்வுயிர்களோடு உடம்பாய் உயிராய் உணர்வாய்க் கலந்து நின்று பலப்பல பேதங் களாய்க் காட்சியளிக்கும் அவன் பெரிய மாயை உயிர்களால் முற்று முணர முடியாதது என்று வியந்தவாறு. (254)

இதில் ஆயபதப்பொருளைக் கூறிக் கீழே எல்லா நாராயணனே யென்றதைத் திருஷ்டாந்தரத்தாற் கூறி வருந்தாதே யென்கிறார்.

இ-ள். வாணுள் - உடம்போடு கூடி வாழுநாளை. அளித்தி - கொடுக்கிருய். முடியாமல் - தீராமல். (நீங்காது பந்தத்தைக் கொடுக்கிருயென்ருயிற்று.) நீதி - சிங்காமை விரித்த வற நூலின் வழியே. வருநாளும் - அடையுங் காலத்திலும். நிற்றி - வீட்டையுந் தந்து நிற்கிருய். மறையோய் - வேதவிளக்கே. பேணுய் - அறம்பொருளின் பங்களை வேண்டினுேரை விரும்பாய். உனக்கு - ஒன்ருலொன்று குறைவில்லாத வுனக்கு. ஓர் பொருள் வேண்டுமென்று - ஏதேனுமொரு பொருளையாயினுங் கருதிப் பேணு யென்றந்வயம். (அவர் கருதிய மூன்றிலொன்றைத் தந்து பந்தத்தில் விடுகிருயென்று கருத்து.) பெறுவான் - கைங்கரியமாகிற பரம புருஷார்த்தத்தை வேண்டினுேரைப் பெறுதற்கு. அருத்தி-விரும்பி நிற்றலை. பிழையாய் தவிராய் (இவ்விரண்டடியாலும் உருவோபாய புருஷார்த்தங்களின்னபடி யென்றும், அதற்குத் தகுதியாகத் தலைக் கட்டுகிருன் அர்ச்சாவதாரமாயென்றுங் கூறிஞராயிற்று. தமருகந்தெவ்வுருவ மவ்வுருவந்தானே தமருகந்ததெப் பேர் மற்றப் பேர் மாருயிணைந்த தன் பொன்னடியன்றி இவைகளாற் காண்க.) ஊணுய் - அன்னமய மாகிய உடம்பாகியும். உயிர்க்கும் - அவ்வுடம்பில் வாழு மான்மாகியு மவ்வான்மாவுக்கும். உயிராகி - பரமான்மாவாகி. நிற்றி - நிற்கிருய். (அசித்தும் சித்தும் ஈஸ்வரனுமாகி நிற்கிருயென்ருயிற்று. ஆகவே அசித்தும் சித்தும் சரீரமாகத்தான் சரீரியாய் நிற்கிருனென்று கருத்து. எங்ஙனே யென்னில்) உணர்வாய் - இம்மூன்றையுங் காட்சி யளவையாலறிதற்காகிய. பெண்ணினுருவாய் - பிரகிருதி யென்றறிதற்குப் பெண் வடிவாகியும். ஆணுகி-அத்தாலே மயங்கிக் கிடக்கிற புருடனென்றறிதற்காண் வடிவாகியும், மற்று அசைநிலை. (இவ்விரண்டுக்கும் வேருகிய பிறிதெனப் பொருள் கூறவுமாம்.) அலியாகி - பெண்டன்மையும் ஆண்டன்மையுமல்லாததுமாகி, ஊணுயுயிர்க்குமுயிராகி நிற்றியென்றந்வயம், மற்றின் னும்மையை நடுநிலைச் சொற்றீவகமாக்கி யேனை யிரண்டிடத்துங் கூட்டுக. ஊணு யென்றபோதே யுயிராயென்பது தானே போதர வேண்டி யுயிர்க்கு மென்றுடனே விதந்தார் இவ்விடத்தும்மைக டொக்கன.

8387. தானந்த மில்லை பலவென்னு மொன்று
தனியென்னு மொன்று தவிரா
ஞானந் தொடர்ந்த சுடரென்னு மொன்று
நயனந் தொடர்ந்த வொளியால்

வானந் தொடர்ந்த பதமென்னு மொன்று
மறைநாலு மந்த மறியா
தானந்த மென்னு மயலென்னு மாரிவ்
வதிரேக மாயை யறிவர்.

"தான் அந்தம் இல்லை; பல" என்னும்,
ஒன்று; "தனி" என்னும், ஒன்று, "தவிரா
ஞானம் தொடர்ந்த சுடர்" என்னும், ஒன்று;
"நயனம் தொடர்ந்த ஒளியால்,
வானம் தொடர்ந்த பதம்" என்னும், ஒன்று;
மறைநாலும் அந்தம் அறியாது,
"ஆனந்தம்" என்னும், "அயல்" என்னும்!
—ஆர்இவ் அதிரேக மாயை அறிவார்?

பொ :—திருமாலாகிய தான் எல்லையில்லாது பலவாக இருக்கும் என்னும் ஒரு வேதம்; மற்றொருவேதம் பலவன்று 'ஒருபொருளே' என்னும்; மற்றொரு வேதம், தடையிலாத அகக்கண்ணாகிய ஞானத்தால் தொடரப்படுதற்குரிய ஒளி என்று சொல்லும்; மற்றொரு வேதம், புறக்கண்ணிற்குப் புலனாகின்ற சூரிய ஒளியால் வானத்தைப் பொருந்திய இடமாகக் கொண்டுள்ளது என்று சொல்லும்; இவ்வாறாக நான்கு வேதங்களும் முடிவு இன்னது என்று அறியாமல் ஆனந்தமான பொருள் என்னும் ஒருமுறை; மற்றொருமுறை மனம் மொழி மெய்கட்கு அப்பாற்பட்டது அது என்று சொல்லும்; இந்த நின் பெரிய மாயத்தை அறிபவர் யாருளர்? (யாருமில்லை)

கு :— இறைவனைப் பற்றி வேதங்கள் ஒரு தன்மையாகக் கூறாமல் பல வகையாகக் கூறுகின்றமையின் அவ்விறைவனுடைய மாயச் செயல்கள் அறிதற்கரியன என்றவாறு. பரம்பொருள் ஒன்று என்றும், பலவென்றும் அகக்கண்ணாகிய ஞானத்தால் காணத்தக்க ஒளிப்பொருள் என்றும் புறக்கண்ணால் காணத்தக்க சூரியனாகிய பொருளே என்றும் ஆனந்த மயமானது என்றும் முக்கரணங் களுக்கு எட்டாது அயலாக இருப்பதென்றும் வேதங்கள் பல படியாகக் கூறுகின்றன என்றவாறு. (255)

கீழே திருமந்திரத்தைச் சொன்னாராய் வேத விளக்கென்றது நால்வகை யென்றும் அவற்றினது சாரமிருவகை யென்றும் கூறி வருந்தாதே யென்கிறார்.

இ-ள். தான் - வேத விளக்காகியது தான். அந்தமில்லை - முடிவில்லையாகலால். பல - மனமும் வாசகமுஞ் செய்கையும் யானு

நீதானே என்னும் – (ப்ரக்ஞாப்ரம்மம் ) என்று சொல்லும். ஒன்று-இருக்கு. தனி – யானுந் தாஞ யொழிந்தானே. என்னும் (அஹம் ப்ரம்மாஸ்மி) எள்று சொல்லும். ஒன்று–எசு. தவிரா - நீங்காத. ஞானம் – அறிவை. துடர்ந்த–கூடிய. சுடர்–ஜோதி. அவனென்ஞகி யொழிந்தான் என்னும் – (தத்வமஸி) என்று சொல்லும். ஒன்று சாமம் நயனம் (எண்ணிற் கண்ணிலொன்றே என் கையால் அன்றிக்கே நயனம்) இரண்டு கண்களும். தொடர்ந்த - (கூடலான் கண்ணுகியு சூரிய மண்டலத்தைத் தொடர்ந்த) பற்றிச் செல்லுகிற. ஒளியால் - ஜோதியாலே. வானம் - பரமாகாசமாக. தொடர்ந்த – கூடப்பெற்ற. பதம் - இடம். (யானே நீயாகி யென்னை யாள்வானே) என்னும் - (அயமான் மாப்ரம்மம்) என்று சொல்லும் தகுதிபற்றி வருவித்து. ஒன்று அதர்வணம், உன்னை – இராமஞகிய உன்னையே. மறைநாலின் - நான்கு வேதத்தாலும், வந்த – திரண்டு வந்த. முறையால் - கிரமமிதுவாகையாலே. ஆனந்தம் - முழுநலம். என்னும் – என்று சொல்லும். அயல் – அவ்வானந்தத்துக்கிட மாகிய முழுவுணர்வு. என்னும் – என்று சொல்லும். ஆக ஞாஞனந்த மயனென்றது சாரம், உன்னையே யென்பதிற் றேற்றேகாரந் தொக்கது செய்யுளாகலான். எ–று.

8388. மீளாத வேத முடிவின்க ணின்னை
மெய்யாக மெய்யி னினையும்
கேளாக நிற்றி பிறவேறு பேசு
கெடுவார்கள் சொன்ன கடவாய்
மாளாத நீதி யிகழாமை நின்க
ணபிமான முள்ள வறியோர்
ஆளாயும் வாழ்தி யரசாள்தி யாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

'மீளாத வேதம், முடிவின்கண், நின்னை
மெய்யாக மெய்யின் நினையும்
"கேளாக நிற்றி ; பிற வேறு, பேசு
கெடுவார்கள் சொன்ன கடவாய் ;
மாளாத நீதி இகழாமை நின்கண்
அபிமானம் உள்ள வறியோர்
ஆளாயும் வாழ்தி ; அரசாள்தி !—ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார் ?

பொ :— வேறுபடாத வேதம் தன் முடிவாக விளங்கும உபநிடத்தில் நின்னை மெய்ப்பொருளாகத் தன் மெய்யுணர்வினுல் நினைதற்குக் காரணமாய்! அதனோடு உறவாக நிற்கின்ருய்; (அத்தகைய நீ) பிறவேறு (பொய்யெனப்) பேசுகின்ற கெடுதற்குரிய கீழோர்கள் சொன்னவற்றையும் கடவாமல் (அவர்க்குப் பொய்யனுய்) நிற்கின்ருய்; அழியாத நெறிமுறைகளை இகழாமல் நின் கண் பற்றுள்ளவர்களாகிய வறியவர்க்கு அடிமையாளாகவும் வாழ்கின்ருய்! எல்லோரையும் கீழ்ப்படுத்திப் பணிகொண்டு அரசும் ஆள்கின்ருய்! இந்த பெரிய மாய விளையாட்டை யாரறிவார்?

கு :—வேதம் மெய்யாக நினையும் கேளாக நிற்கின்ற நீ; பிறவேறு பேசுகின்ற கெடுவார்கள் சொன்னதையும் கடவாமல் அவர் சொன்னவாறே நிற்பது முரணுகத் தோன்றினும் அது நின் மாய விளையாட்டேயாகும் என்றபடி. அதுபோலவே நின்பால் அன்பு கொண்டுள்ள வறியோர்க்கு ஆளாகப் பணிசெய்து வாழ்கின்ற நீ, பிறரெல்லாம் நினைக்கும் பணி செய்ய அரசாள்வது முரணுகத் தோன்றினும் அது நின் மாய விளையாட்டேயாகும் என்றவாறு. மீளாமை - வேறுபடாமை. முடிவு என்றது உபநிடதத்தை. இறைவனைப்பற்றிப் பலபடப் பேசிய வேதம், தன் முடிவாகிய உபநிடதப் பகுதியில் திருமாலை மெய்ப்பொருள் என்று உண்மை யுணர்வால் நினைக்கின்றது எனவும் அவ்வாறு அது நினைதற்குக் காரணமாய்த் திருமால் அவ்வேத முடியோடு ஒன்றுபட்டு உறவாக நிற்கின்ருன் எனவும் கொள்க. மெய்யென்று நினையும் உபநிடதத்திற் கேற்பத் திருமால் மெய்யனுக நிற்கின்ருன்; பொய்யென்று பேசும் நாத்திகர்க்கு ஏற்பப் பொய்யனுகவும் நிற்கின்ருன் என்று அவன் முரண்பட்ட நிலையை விளக்கியவாறு. வறியர்க்கும் வறியனுய் ஆளாகிப் பணிசெய்யும் ஒருவன் செல்வர்க்குள் செல்வனுய் அரசாளுதல் முரணுதல் காண்க. இதனுல், திருமால் அடியார்க் கெளியனுயும், அல்லார்க்கு அரியனுயும் விளங்கும் நிலைமையைப் புலப்படுத்தியவாறு. "அவரவ ரேவலாளனு நீயே, அவரவர் செய்பொருட்டு அரணமும் நீயே" (பரிபாடல் 4- 72, 73) என்பது நோக்கி இவ்வாறு கூறப்பட்டது. (256)

வேதாந்தக் கருத்துணராத சூனிய வாதிகளைக் கண்டித்து அடிமையுமாண்டானுமானவனே வருந்தாதே யென்கிருர்.

இ-ள். மீளாத வேதம் - அவ்வேதம் மீளாது (இதன்றி தன்றென்று சென்ற வேதங்கள் மீட்சியின்றிக்கே) முடிவின் கண் - அந்தங்களிலே. நின்னை - நாராயணனுகிய வுன்னை. மெய்யாக - ஞானனந்த மயனுக. மெய்யில் - தமதறிவின்கண்ணே. நினையும்- எண்ணும் இவற்றை. கேளாதவென்று - கேட்டறியாதனவென்றும்

பிறவென்று - கண்டறியாதன வென்றும். சொன்ன - முதலிலே சொன்னவைக்கு. கெடுவார்கள் - அறிவு கெடுமவர்கள். சொன்ன- அவாங்மன கோசரமென்ற வற்றைத்தானே சொல்லிய. கடவால்- மறுமொழியினுலே. மாளாத - அழியாத. நீதி - வேதங்களது சொல்லுகையை. இகழாமல் - தப்பாமல். நின் - உன்னுடைய கண்ணபிமானம் - கடாக்ஷ வீக்ஷண்யம். இல்லை - இல்லையாகி. வறியோர் - சூனியவாதிகளானுர்கள். (அவர்கள் வேத விரோதிக ளாகையாலே அவ்வேத விளக்காகிய வுனக்கு விரோதிகளானுர்க ளென்று கருத்து. ஊன் சுடர்மிகு சுருதியுளென்றதை யறியாரே வறியார் நித்தியமாகலான் ஞானத்தை மெய்யென்ருர்.) ஆளாயும் - நானென்கிற வடிமையாகியும். வாழ்தி — கைங்கிரியமாகிற புருஷார்த்தத்தோடு வாழ்கிருய். அரசு - நாராயணனென்கிற ஆண்டானுகியும். ஆள்தி - அக் கைங்கிரியத்தைக் கொள்ளுகிருய். எ-று.

8389. சொல்லொன் றுரைத்தி பொருளாதி தூய
மறையுந் துறந்து திரிவாய்
வில்லொன் றெடுத்தி சரமொன் றெடுத்தி
மிளிர்சங்க மங்கை யுடையாய்
கொல்லென் றுரைத்தி கொலையுண்டு நிற்றி
கொடியாயுன் மாயை யறியேன்
அல்லென்று நிற்றி பகலாதி யாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

சொல் ஒன்றுஉரைத்தி ; பொருள்ஆதி ; தூய
மறையும் துறந்து, திரிவாய் ;
வில் ஒன்றுஎடுத்தி ; சரம் ஒன்று எடுத்தி ;
மிளிர்சங்கம் அங்கை உடையாய் !
'கொல்' என்றுஉரைத்தி ; கொலைஉண்டு நிற்றி ;
கொடியாய் உன் மாயைஅறியேன் ;
அல்என்று நிற்றி ; பகல் ஆதி !—ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார் ?

பொ :—ஒளி வீசுகின்ற சங்கினை அகங்கையில் கொள்ளுகின்ற திருமாலின் அமிசமானவனே ! ஒலிவடிவாகிய ஓம் என்ற சொல்லை யும் உபதேசிக்கின்ருய் : அச் சொல்லின் பொருளாகவும் நிற்கின் ருய் ; (அத்தகைய நீ அச் சொல்லும் பொருளும் விரவியுள்ள) தூய் மையான வேதத்தையும் கடந்து (வேதங்களுக்கு எட்டாதவனுயும்)

திரிகின்றாய் ; வில் ஒன்றனைக் கையில் கொண்டுள்ளாய்; (அவ் வில்லில் தொடுக்கும்) அம்பு ஒன்றையும் கையில் எடுத்துக் கொள்கின்றாய் ; (அறத்திற்கு மாறுபட்டவர்களைக்) 'கொல்' என்று பிறர்க்குச் சொல்கின்றாய்; அப்படிச் சொன்ன நீயே (கொல்லப்படுவனோடு உள்ளீடாய்) கொலையுண்டும் நிற்கின்றாய் ; இரவாகவும் நிற்கின்றாய்; அதற்கு மாறான பகலாகவும் நிற்கின்றாய் ! கொடியவனே ! உன் மாயையை யான் முற்ற அறியேன் ; (யான் மட்டுமோ) இந்த பெரிய மாயை விளையாட்டை முழுதும் அறியவல்லார் இவ்வுலகில் வேறு யார்தாம் உளர் ?

கு :—சொல்லொன்று என்றது, பிரணவத்தை. சொல்லும் பொருளுமாய் நிற்கின்ற இறைவன், அச்சொல்லும் பொருளும் விரவியுள்ள வேதங்களுக்கு அப்பாற்பட்டு நிற்றல் முரணாகும் ; வில்லும் அம்பும் கொண்டுள்ள ஒருவன்தானே கொடியவனைக் கொல்லாமல் பிறனை நோக்கிக் கொல் என்று ஏவுவதும் கொல்லப்படுபவனாய்க் கலந்து கொலையுண்டு நிற்றலும் முரணாகும். முரண்பட்ட இரவும் பகலுமாகிய இரண்டாக நிற்றலும் முரணாகும். இவ்வாறு பல முரண்பாடுகளையுடையனாதலின் இங்குக் 'கொடியாய்' என இராமனைக் கலுழன் விளித்தவாறு. இங்ஙனம் முரண்பட்ட பல நிலைகளும் மாயவிளையாட்டாகக் கொள்வதல்லது அவற்றை முற்றும் அறிதல் எனக்கும் இயலாது ; பிறர்க்கும் இயலாது என அவன் மாயவிளையாட்டுகளைச் சிறப்பித்தவாறு. சங்கமங்கையுடையாய் என்றது அவன் பழைய தெய்வநிலையை நினைந்து கூறியது. 'சொல்லானைப் பொருளானைச் சுருதியானை' (திருநாவுக்கரசு–தேவா. 6–74-1) என்பதும் 'நால்வேதத்தப்பால்' நின்ற சொற்பதத்தார் சொற்பதமுங் கடந்து நின்ற செயற்கரிய சூழலாய்' (தேவாரம்-6-95-4) என்பதும் இச் செய்யுளில் முதலடியின் கருத்திற்குத் துணை செய்வதாகவும் "அல்லானைப் பகலானை" (தேவா-6–74-1) என்பது நான்காமடியிலுள்ள கருத்திற்குத் துணை செய்வதாகவும் அமைந்துள்ளமை காணலாம். கொலையுண்போனது உயிர்க்குயிராயும் திருமால் இருத்தலின் 'கொலையுண்டு நிற்றி' என்றான். (257)

கீழே திருமந்திரத்தை வெளியிட்ட படியைக் கூறி யிதிலே அதனது சங்கிரகமாகிய பிரணவத்தையு மதனது பொருளையுங் கூறி வேதவிளக் கென்பதை யறியாது சூனியரான ராவணாதிகளறிய வெளிவந்தவனே வருந்தாதே யென்கிறார்.

இ-ள். சொல்லொன்று - மூன்றெழுத்தாகிய பதமொன்றை. உரைத்தி - உபதேசிக்கிறாய். பொருள் - ஆண்டானுக்கே அடிமைகளென்கிற பொருளும். ஆதி – நரநாராயண வடிவாகிறாய் (முந்து

திருநாமமென்றதிலே ஹரி என்று இதிலே ஓம் என்று இப்படித் துடங்குவதாகிய) தூய - பரிசுத்தத்தையுடைய, மறையும் - வேதத்தையும். துறந்து - விட்டு. திரிவாய் - ஞானனந்த மயனென்பதற்கு வேருய். வில்லொன்று - வேறே ஒருவில்லே. எடுத்தி - எடுக்கிருய் சரமொன்று - அவ்வில்லுக்கேற்ற பாணமொன்றும். எடுத்தி - எடுக்கிருய். மிளிர் - பிரகாசியாநின்ற. சங்கம் - சங்கு முதலிய திவ்வியாயுதங்களே. அங்கை-அழகிய கையிலே. உடையாய் - வேதத்திலே உடையவனென்று சொல்லப்படுகிருய். (சங்கென்றதில் மற்றையாயுதங்களேயு முபலக்ஷணமாய்க் கூட்டுக.) கொல்லென்றுரைத்தி - தேவருக்கந்தரியாமியாய் வதைபண்ணென்கிருய். கொலேயுண்டு - ராக்ஷதருக் கந்தரியாமியாய் வதைபட்டு. நிற்றி - நிற்கிருய். கொடியாய் - இப்படிக் கோணலாயிருக்கிறவனே. உன் மாயை - உனது மயக்கச் செய்கையை. அறியேன் - வாகனமாகிய நானே யறியேன். அல்லென்றும் - ஆவரணமாகவும். நிற்றி - நிற்கிருய். பகல் - விக்ஷேபமும். ஆதி - ஆகிருய். எ-று.

8390. மறந்தாயு மொத்தி மறவாயு மொத்தி
மயலாரும் யானு மறியேன்
துறந்தாயு மொத்தி துறவாயு மொத்தி
யொருதன்மை சொல்ல வரியாய்
பிறந்தாயு மொத்தி பிறவாயு மொத்தி
பிறவாம னல்கு பெரியோய்
அறந்தா னிறுத்த லரிதாக வாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

'மறந்தாயும் ஒத்தி; மறவாயும் ஒத்தி;
மயல்ஆரும் யானும் அறியேன்
துறந்தாயும் ஒத்தி; துறவாயும் ஒத்தி;
ஒருதன்மை சொல்ல அரியாய்;
பிறந்தாயும் ஒத்தி, பிறவாயும் ஒத்தி,
பிறவாமல் நல்கு பெரியோய்!
அறம்தான் நிறுத்தல் ஆரிதுஆக!—ஆர்,இவ்
அதிரேக மாயை அறிவார்?

பொ:—(நின் அடியவர்) மீண்டும் பிறவாமல் முத்தி நல்குகின்ற பெரியோனே! நீ பலவகையாகக் கவலேயுறுதலால் உன் பரநிலேயை மறந்தவனும் போல்கின்ருய்; (பாவிகளே அழிக்க உறுதிகொண்

டிருப்பதால் நின் அவதார நோக்கத்தை) மறவாதவன் போலவும் இருக்கின்ருய் ; (இயல்பாகவே எப்பொருளிலும் பற்றற்றிருப்பதால்) துறந்தவன் போலவும் காணப்படுகின்ருய் ; (இலக்குவன் முதலி யோர் துயர்கண்டு இரங்குகின்றமையால்) துறவாது பற்றுள்ளவன் போலவும் விளங்குகின்ருய் ; அறத்தை உலகத்தில் நிலைபெறச் செய்தல் அரிதான நிலை ஏற்பட, (நீ மனிதனுகப் பிறந்துள்ளமை யால்) பிறந்தவன் போலவும் காணப்படுகின்ருய் ; (பிறர்போல் வினை வயத்தாற் பிறவாது நின்னிச்சையால் பிறந்தமையால்) பிறவாதவன் போலவும் விளங்குகின்ருய் ; எனவே ஒருதன்மையில் வைத்துக் சொல்லற்கு அரியவனுக இருக்கின்ருய் ; முரண்பட்ட நின் செயல் களின் உண்மையை மயக்கம் பொருந்திய யானும் அறியேன். இந்த பெரிய மாய விளையாட்டை உலகில் வேறு யார்தாம் அறிவார் ?

கு :—பெரியோய்! மறந்தாயு மொத்தி, மறவாயும் ஒத்தி, துறந் தாயுமொத்தி, துறவாயுமொத்தி, அறந்தானிறுத்தலரிதா பிறந்தாயு மொத்தி, பிறவாயுமொத்தி, ஒருதன்மை சொல்ல வரியாய், மயலாரும் யானும் அறியேன். இவ் அதிரேக மாயை ஆர் அறிவார் என இயையும். தான்மட்டுமன்றி உலகிற் பிறந்த யாருமே அவன் மாயையை அறிய இயலாது என்பது கலுழன் கருத்து. (258)

கீழே அந்தரியாமி யாகையாலே ஆவரணசத்தியாலே யொரு கான் மயக்கியும், விக்ஷேப சக்தியாலே யொருகால் விளக்கியும் நிற்கிறதேயன்றிச் சூனியவாதிகளறிய விபவமாகி நிற்கிற நிலையிலும் அம்மயக்க விளக்கங்களை யுடையவனே வருந்தாதே யென்கிருர்.

இ-ள். மறந்தாயும் – முற்றுமுணர்தல் முடிவிலாற்றல்களை மறந்தாயென்ருலும். ஒத்தி – அன்பு மிகுத்துச் சித்தங் கலங்குத லாலே ஒத்திருக்கின்ருய். மறவாயும் – அவற்றை மறவாயென் ருலும். ஒத்தி - இலங்கையரசு முதலானுரோடருளின்மையாலே யொத்திருக்கின்ருய். மயல் – பிரகிருதிக்குள்ளாகிய. ஆரும் - எல்லாரும். யானும் – அது நீங்கிய யானும். அறியேம் – அறியா திருக்கிரேம். துறந்தாயும் – நீ சங்கசக்கிராதி அனந்த கருடாதி களை விட்டிருக்கிருயென்ருலும், ஒத்தி - மறைந்து வந்தமையா லொத்திருக்கிருய். துறவாயும் - அவைகளை விடாதிருக்கின்ருயென் ருலும். ஒத்தி - அவைகள் புடையே நின்றமையா லொத்திருக் கிருய். ஒரு தன்மை - (மறத்தல் துறத்தல்களையுடையன் மற வாமை துறவாமைகளை யிலனென்று) ஒரு படியாக. சொல்ல - மயலாலே அவைகளை யுடையனென்றும் என்னுலே யவைகளையில னென்றும்) சொல்லுதற்கு. அரியாய் - அருமையானவனே (இரு திறத்தாருக்கு மிரண்டு படியாகையா லொருபடியல்லை யென்கிருர்.)

இவையுரைத்தாமென்னு முத்திகள். பிறந்தாயும் - (சக்கிரவர்த்தித் திருமகனுய்) அவதரித்தாயென்ருலும். ஒத்தி - வில்லொன்று சரமொன்றெடுத்தமையா லொத்திருக்கிருய், பிறவாயும் - நெடுவீடு காட்ட முடியாயென்ருலும். ஒத்தி - (பல்லாயிரத்தின் முடியாத யக்கமவை வீச மேனி வடுத்தீரவும், தன்ன சங்கமுந் தானுமுழங்கிற்ருகவும், மேலேவிக் கொள்ளுதலாலே) ஒத்திருக்கின்ருய். இவை உரைத்து மென்னுமுத்தி. பிறவாமல் - (பிறவித்துன்பமென்றடைந்தாரை மீள) அப்பிறவியில் விடாமல். நல்கு - கடைக்கணிக்கின்ற. பெரியோய் - இயல்பாகவே பாசங்களினீங்கினேய். அறம் - தருமத்தை. தான் - தானனதன்மை யொன்றையே கொண்டு, நிறுத்தல் - நிலைநிற்கச் செய்தலில். அரிதாகி - கூடாமையாயிரண்டு படியுங் கொண்டு நிற்கிருயென்றந்வயம். என்ருலென்பது சொல்லெச்சம். எ—று.

8391. வினைவர்க்கு முற்று முடனே படைத்தி
யவையெய்தி யொன்றும் விழையாய்
நினைவர்க்கு நெஞ்சி னுறுகாம முற்றி
யறியாமை நிற்றி நிமிரா
முனைவர்க்கு முத்தி யமரர்க்கு மொத்தி
முழுமூட ரென்னும் முதலோர்
அனைவர்க்கு மொத்தி யறியாமை யாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

'வினைவர்க்கு முற்றும் உடனே படைத்தி;
அவைசெய்தி, ஒன்றும் விழையாய்
நினைவர்க்கு, நெஞ்சின் உறுகாமம் முற்றி,
அறியாமை நிற்றி; நிமிரா;
முனைவர்க்கும் முத்தி, அமரர்க்கும் ஒத்தி,
முழுமூடர் என்றும் முதலோர்
அனைவர்க்கும் ஒத்தி, அறியாமை—ஆர்இவ்
அதிரேக மாயை அறிவார் ?

பொ :—நல்வினை தீவினை என்கின்ற இரு வினைகளையுடையவர்கட்கு (அவ்வவர் வினைகட்கேற்ற தனுகரண புவன போகங்கள் என்கின்ற) முழுவதையும் உடனே உண்டாக்குகின்ருய்; அவ்வாறு உண்டாக்கிய அவற்றை அவ்வுயிர்கள் எய்துமாறு யுணர்த்துகின்ருய்; ஒன்றையும் விரும்பாத நீ, நின்னை இடைவிடாது நினைக்கின்ற

அடியார்கள் நெஞ்சில் பொருந்திய விருப்பங்களை முற்றுப்பெறச் செய்து, (வேண்ட முழுவதும் தந்தவன் நீ என்பதை அவர்கள்) அறியாதபடி மறைந்து தோன்ருத் துணையாய் நிற்கின்ருய்; அகங்காரமில்லாது அடங்கியிருக்கின்ற முனிவர்களுக்கும், முத்தியுலகத்தில் உள்ள நித்திய சூரிகட்கும், ஒரு தன்மையனுகப் பேரின்பம் அளித்து நிற்கின்ருய்; முழு மூடர்களும், என்றும் முதல்வர்களாக விளங்குகின்ற அயன் முதலிய முதற்றேவர்களும், ஆகிய அனைவர்க்கும், முழுவதும் அறியப்படாமையில் ஒத்திருக்கின்ருய்; இந்த (நின்) பெரிய மாயச்செயலை யார் அறிவார் ?

கு:—வினைவர் என்றது, இருவினைகளைச் செய்துகொண்ட உயிர்களை. முற்றும் என்றது அவ்வினைகட்குத் தக்கவாறு கொடுத்ததற்குரிய தனுகரண புவன போகங்களை. எண்ணிறந்த உயிர்கட்கு ஏற்றவாறு உடம்பு முதலியவற்றை உடனே படைத்தலின் அருமை புலப்படுத்த "முற்றும் உடனே படைத்தி" என அவன் ஆற்றலைப் புலப்படுத்தியவாறு. அவை என்றது படைக்கப்பட்ட அவ் வுடம்பு முதலியவற்றை; செய்தி என்றது, அவ்வுடம்பு முதலியவற்றை ஏற்ற உயிர்களோடு புணரச் செய்கின்ருய் என்றவாறு. தான் ஒன்றும் விரும்பாதவனுக இருந்தே தன்னடியார்களின் விருப்பத்தை நிறைவேற்றுகின்ற இயல்பு முரண்போலத்தோன்றினும் இறைவன் அடியார்க்கு எளியவனுதலின் அவர்கள் பொருட்டுத் தன்விழையாத நிலையையும் விடுத்து அருள் செய்வான் என்று அவன் அருட்டன்மையைப் புலப்படுத்தியவாறு. நினைவர் என்றது உலகை நினையாது அவன் திருவடிகளையே நினைந்திருக்கும் அடியவர்களை. அடியவர்களின் விருப்பத்தை நிறைவேற்றின நிலையிலும் நிறைவேற்றியவன் இறைவனே என்பதை அவர் அறியாமல் தோன்ருத் துணையாய் இருப்பான் என்பார் 'அறியாமை நிற்றி' என்ருன். நிமிரா முனைவர் என்றது, தன் முனைப்பு இல்லாத முனிவர்களை. இழிந்ததாகிய மண்ணுலகத்தில் உள்ள முனிவர்கட்கும் உயர்ந்ததாகிய பரமபதத்தில் உள்ள நித்தியசூரிகட்கும் ஒப்பப் பேரின்பம் அளிப்பவன் என்பார், "முனைவர்க்கு முத்தி யமரர்க்கும் ஒத்தி" என்ருர். முழுமூடராக உள்ள மாக்களுக்கும் எக்காலத்தும் முத்தொழில் புரிந்து முதல்வோராக உள்ள அயன் முதலிய முத்தேவர்கட்கும் முழுவதும் அறியப்படாமையில் வேறுபாடின்றி ஒத்து விளங்குகின்ருன் என்பான், "அறியாமை யனைவர்க்கும் ஒத்தி" என்ருன். "செல்வம் நல்குரவின்றி விண்ணேர் புழுப் புல் வரம்பின்றி யார்க்கும் அரும் பொருள்" (திருவாசகம்–கைம்மாறு கொடுத்தல்-8) என மணிவாசகப் பெருமான் கூறி, விண்ணவர்க்கும் புழுவுக்கும் ஒப்ப அரும் பொருளாக இறைவன் அறியப்படாதிருக்கின்ருன் என்பதை உணர்த்தியிருத்தல் இங்கு நினைவு கூரத்தகும். "ஞாலத்துறையுட் டேவரும்

வானத்து, நாலெண்டே வரும் நயந்து நிற்பாடுவோர். பாடும் வகையே ; யெம்பாடல்தாமப், பாடுவார் பாடும்வகை;'' (பரிபாடல்-3, 27–30) என்ற அடிகளும், அவ்வடிகட்குப் பரிமேலழகர் எழுதியுள்ள, "நின்னை நயந்து பாடுவோராகிய இவர்கள் பாடுவது தமக்கு முன்னோராகிய அப்பாடுவார் பாடும் வகையே ; எம் பாடல் தாமும் எமக்கு முன்னோராகிய அப்பாடுவார் பாடும் வகையே; அதனால் நின் தொன்மையும் பெருமையும் அறியாமைக்கண் எம்மோடு அவரிடை வேற்றுமை யின்று'' என்னும் உரையும் இங்குக் கருதற் பாலன. நின்னை யறியாமைக்கண் முழுமூடரோடு முதலோர்க்கு வேறுபாடில்லையாம்படி ஒத்துள்ளாய் என்றவாறு. (259)

இதில் முக்காலங்களுமுணர்ந்த பெரிய திருவடி தாமாக இந்திரியங்களின் மனமாகின்றேனும் யானே யென்னும் கீதோப நிடதாசாரியனே வருந்தாதே யென்கிறார்.

இ-ள். வினை - வினையைத் தருகையாலே வினையென்ற தாகு பெயர். வர்க்கமுற்றும் - அவ்வின முழுதும். உடனே - ஏககாலத்திலே. படைத்தி - சிருட்டிக்கிறாய் அவை-அவ்வினங்களை. எய்தி - அடைந்து. என்றும் - (அவற்றின் பயனைப் பொறுக்க மாட்டாமல்) எக்காலத்திலும். வினையா - மீளவுண்டாகாமல் நினைவர்க்கு - எண்ணுவோர்க்கு. நெஞ்சில் - சுழுத்தி நிலையில். உறு - எல்லாவற்றிலு மிகுந்த. காமம் - காமத்தை. முற்றி - நிரம்பச் செய்து. அறியாமல் - அவ்வினையாமையை யெண்ணு வோரை யறிய வொட்டாமல். நிற்றி மனமா – மனமாக நிற்கிறாய். முனைவர்க்கும் – முதல்வராகிய பிரம ருத்திராதிகளுக்கும். ஒத்தி – ஒத்து நிற்கிறாய். அமரர்க்கும் - இந்திராதி தேவர்களுக்கும். ஒத்தி– ஒத்து நிற்கிறாய் முழு மூடர் - முழுது மறிவீனர். என்று - என்று. சொல்லப்படுகிற. இம் முதலோர் - இந்த ராவணாதிகளோடு. அனைவர்க்கும் - எல்லாருக்கும். ஒத்தி – (உருப்பசி, மோகினி, அகலிகை, சீதை, கைகேசி முதலாயினோர் விஷயத்தில் பிரம னுருத்திர னிந்திரன் இராவணன் சக்கிரவர்த்தி முதலாயினோர் மிக்க காமங் கொண்டமையால்) ஒத்து நிற்கிறாய். அறியாமல் – மறிநலமருளப் பெற்றறியாமல் இவ்வதிரேக மாயையை யறிவாரார் - எல்லாவற்றிலுமிக்கது காம மென்பதை, காதல காதலறியாமை யென்கிற திருவள்ளுவராற் காண்க. எ–று.

8392. எறிந்தாரு மேறு படுவாரு மின்ன
பொருள்கண் டிரங்கு பவரும்
செறிந்தாய துண்மை யெனலாய தன்மை
தெரிகின்ற துன்ற னிடையே
பிறிந்தார் பிறிந்த பொருளோடு போதி
பிறியாது நிற்றி பெரியோய்
அறிந்தா ரறிந்த பொருளாதி யாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

'எறிந்தாரும் ஏறு படுவாரும், இன்ன
பொருள்கண்டு இரங்குபவரும்,
செறிந்துஆயது உண்மை எனல்ஆய தன்மை
தெரிகின்றது, உன்தன் இடையே;
பிறிந்தார் பிறிந்த பொருளோடு போதி;
பிறியாது நிற்றி பெரியோய்!
அறிந்தார் அறிந்த பொருள்ஆதி—ஆர்இவ்
அதிரேக மாயை அறிவார்?

பொ :— நீ நாகபாசத்தை எறிந்தவரும், நாகபாசத்தால் எறியப்பட்டுக் கிடப்பவரும், இவ்விரு செயலையும நெருங்கிக்கண்டு இறங்கி நிற்கின்றவர்களும் ஆகி விளங்குவது உண்மை என்று சொல்லத்தக்க தன்மை நின்னிடையே தெரிகின்றது; அறிவிலாதோர் பிரிந்த ஞானமாகிய பொருளோடுசேர்ந்து போய்விடுகின்றாய்; ஆயினும் ஞானமில்லாத அவர்களிடத்தும் உயிர்க்கு உயிராய்ப் பிரியாது நிற்கின்றாய்; பெரியோனே! தத்துவஞான முணர்ந்தவர்கள் அறிந்த உண்மைப் பொருளாகவும் ஆகின்றாய்; இந்தப் பெரிய மாயையை அறிவார் யார் உளர்?

கு :—திருமால் எல்லா உயிர்களிடத்தும் உயிராய்க் கலந்திருக்கின்றான் ஆதலின் எறிந்தாரும், ஏறுபடுவாரும் இச்செயல்களைக் கண்டு இரங்குபவரும் ஆக அவனே இருக்கின்றான் என்றவாறு. எறிந்தார் ஏறுபடுவார் எனப் பொது வகையாகக் கூறியிருப்பினும் இவ்விடத்திற்கேற்ப எறிந்தார் என்றது இந்திரசித்தாகவும் ஏறுபடுவார் என்றது இலக்குவன் முதலியோராகவும் கொள்க. இன்ன பொருள் செறிந்து கண்டு இரங்குபவர் என்றது தேவர் முனிவர் முதலியோரை. இரங்குபவரும் ஆயது உண்மை என இயையும். ஞானத்தைப் பிரிந்தவர்பால் இறைவன் விரும்பித் தங்கானாயினும் அவர் உயிர்க்குயிராய்த் தங்குதல் தவிரான் என்பான்

'பிரியாது நிற்றி' என்ருன். அறிந்தார் என்றது தத்துவ ஞானிகளை. அவர் அறிந்த பொருளாவது மெய்ப்பொருளாகிய பரம்பொருள். (260)

இதில் அவ்வினைவர்க்க மித்துணைத்தென்று மத்துணையு மனமாகிய நின்னிடத்துந் தோன்ற நிற்கிறவனே வருந்தாதே யென்கிருர்.

இ-ள். எறிந்தாரும் - நாகபாசத்தை வீசினேரும். ஏறுபடு வாரும் – அவ்வீசலை யேற்றுக் கிடக்கிறவரும். இன்ன பொருள்– வெற்றி தோல்வி யென்றிருவகையான பொருளையும். கண்டு – பார்த்து. இரங்குபவரும் - கலங்குபவருமாக. செறிந்தாரில் - கூடினேரிடத்தே. நுண்மை யெனலாய தன்மை - அணுரூபமான மனமென்று சொல்லலாகியபடி. தெரிகின்றது - விளங்குகின்றது. உன்னதிடையே – உனது விஷயத்திலே. (எவ்வாறென்னில்) பிறிந்தார் – வெகுளியாற் பிரிந்தாராகிய ராவணுதிகள் விஷயத்தில். பிறிந்த பொருளோடு - பிரிதற்கேதுவான வெகுளி யென்கிற பொருளோடு. போதி – போகிருய். பிறியாது - (காமத்தாற் பிறியா ராகிய இளைய பெருமாளாதிகள் விஷயத்திற் காமத்தோடு) பிறியாமல். நிற்றி – நிற்கிருய். பெரியோய் – வரம்பிலின்பத்தால் பெரியோனே. அறிந்தார் - இவ்விரு திறத்தையும் கண்டறிந்தா ராகிய இந்திராதிகள் விஷயத்தில். அறிந்த பொருள் - (எத்தன்மை யெய்தி முடியுங்கொலென்னு) மயக்கமாகிய பொருள். ஆதி - காமித்தலும் கோபித்தலுமின்றி மயக்கமாகி நிற்கிருய். வாளுள், மறந்தாய், எறிந்தார் இம்மூன்று செய்யுளும் நிரனிறையணி. கண்டிருந்த தேவர்களை யென் செய்யலாமென் றெண்ணுகையான் மயக்கமாயிற்று. காமாதி – ஆறு வர்க்கமும். ராகாதி – பதின் மூன்று வர்க்கமு மடங்க காமம், வெகுளி, மயக்கமிவை மூன்றென்ற திருவள்ளுவரினி வருமடக்கினமை காண்க. எ-று.

8393. போராயி ரங்க ளுடையாய் பிறந்த
பொருடோறு நிற்றி பிரியாய்
தீராய் பிறந்து திரிவாய் திறந்தொ
றவைதேறு மென்று சிதையாய்
கூராழி யங்கை யுடையாய் திரண்டொ
ருருவாய கோட லுரிபோல்
ஆராயி னேது மிலையாதி யாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

'பேர் ஆயிரங்கள் உடையாய்; பிறந்த
பொருள்தோறும் நிற்றி, பிரியாய்;
தீராய்; பிறந்து திரிவாய், திறம்தொறு;
அவைதேறும் என்று; சிதையாய்,
கூர் ஆழி அம்கை உடையாய்;
திரண்டுஓர் உருஆய கோடல்உரிபோல்,
ஆராயின், ஏதும் இலைஆதி—ஆர்,இவ்
அதிரேக மாயை அறிவார்?'

பொ:—ஆயிரம் திருப்பெயர்களை உடையவனாய் ஒருவனாகிய நீ, இவ்வுலகத்தில் தோன்றிய பொருள்தோறும் பிரியாமல் அவற்றின் உள்ளீடாக நிற்கின்றாய்; நின் உண்மையான பரநிலையில் நீங்காதிருந்தே ஆமை, மீனம் முதலிய உயிர்வகைகள் தோறும் பிறந்து, அவ்வுயிர்கள் நின்னியல்பைத் தெளிந்து உய்யும் என்ற நோக்கத்தால் இவ்வுலகில் திரிந்து கொண்டிருப்பாய்; எவ்வுயிரையும் சிதைக்காத அருள் உள்ளமுடைய நீ, கூர்மையான சக்கரப்படையை அழகிய கையில் ஏந்திக்கொண்டிருக்கின்றாய்; பல தோடுகள் திரண்டு ஓர் உருவமாக விளங்கும் வெண்காந்தள் கிழங்கினை உரிப்பதுபோல நின்னை ஆராய்ந்து பார்த்தால் எதுவும் இல்லையாய் (அப்பாற்பட்டு) நிற்பாய்; இந்தப் பெரிய மாயையை யார் அறிவார்?

கு:—ஆயிரந்திருப் பெயர்களையுடைய ஒருவனாயிருந்தே பொருள் தோறும் நிற்றலும், பரமபதத்துள்ள தன் உண்மை நிலையில் பிரியாதிருந்தே உயிரினங்கள் தோறும் பிறந்து திரிதலும், ஓருயிரையும் சிதைக்காத, அருளுடையவன் கூராழி அங்கை யுடையனாதலும், உலகமே உருவமாகக் கலந்திருக்கின்ற ஒருவன் தேடிப் பார்க்கும் போது எந்தப் பொருளிலும் இல்லாதவனாதலும் முரண்பாடுகளே யாயினும் அவை அவ்விறைவனது மாயை விளையாட்டுகளே எனத் தெளிதல் வேண்டும் என்பது கலுழனுடைய கருத்தாதல் தெளிக. 'பிரியாய் நிற்றி' என முற்றெச்சமாக்கி முடிக்க. தீர்தல்–நீங்குதல். பரமபதத்து உள்ள உண்மை நிலையில் நீங்காதிருந்தே ஆமை, மீனம், பன்றி முதலிய உயிர்களாகப் பிறப்பது, அவ்வினத்து உயிர்கள் தன் உண்மை நிலையை யுணர்ந்து, உய்தி பெறவேண்டும் என்ற அருள் உள்ளத்தாலேயாம் என்பான், 'திறந்தொறும் பிறந்து அவைதேறும் என்று திரிவாய்' என்றான். ஒரு பொருளையும் சிதைக்காதவனுக்கு ஆயுதம் மிகையே என்பது புலப்பட, 'சிதையாய், கூராழி அங்கையுடையாய்' என்றான். திறம் என்றது உயிர்வகைகளை. திருமால் உலகில் எல்லா உயிர்களாகவும் பிறக்கின்றான் என்பதை: "முதன்முறை யிடைமுறை கடைமுறை தொழிலிற் பிறவாப் பிறப்பிலை" (பாடல் – 3 : 71) எனக் கடுவனிளவெயி

னுர் கூறுவதால் உணரலாம். பிறந்த பொருள்தொறும் திருமால் நிற்கும் இயல்பை ; "தீயினுட்டெறனீ பூவினுணுற்ற நீ, கல்லினுண் மணியு நீ, சொல்லினுள் வாய்மை நீ, அறத்தினுளன்பு நீ, மறந் தினுள் மைந்து நீ, வேதத்து மறை நீ, பூதத்து முதலு நீ, வெஞ்சுட ரொளியு நீ, திங்களுள் அளியு நீ, அனைத்து நீ அனைத்தினுட் பொருளு நீ'' (பரிபாடல் - 3 : 63 – 68) என்பதால் அறியலாம். கோடல்-வெண்காந்தள்; இங்குக்கிழங்கை உணர்த்தியது. பலதோடு களின் திரட்சியே காந்தட்கிழங்கு ஆகலின், அக்கிழங்கை ஒவ்வொரு தோடாக உரித்துக் கொண்டே போனுல் கிழங்கு என்பதொன்று இல்லையாதல் போல, மண் முதலிய பெரும்பூதங்களாகவும் திங்களா கவும் ஞாயிருகவும் இயமானனுகவும் பொறிகளாகவும் புலன்களா கவும் விளங்குகின்ற இறைவனை ஆராயத் தொடங்கிப் 'பூதங்களல் லன், பொறியல்லன், வேறு புலனல்லன், உள்ளமதியின் பேதங்கள் அல்லன், என்ருற்போன்று கழித்துக்கொண்டே போனுல் திருமால் என்ற பொருள் இல்லை என்னுமாறு அப்பொருள்களுக்கு அப்பாற் பட்டு இருப்பான் என்பான், 'ஆராயினேது மிலையாதி' என்ருன். கோடலுரிபோல் என்புழி உரி என்பது முதனிலைத் தொழிற்பெயர்; கோடற்கிழங்கை உரித்தல்போல் நின்னைப் பிரித்து ஆராய்ந்தால் என்றவாறு. பல தோடுகளால் இயன்ற கோடற்கிழங்குபோலத் திருமால், பூத முதலிய பல பொருள்களின் தொகுதியாக இருக் கின்ருன் என்பது இதனுல் புலப்படுத்தியவாறு. இப்பாடல் வரை பதினெரு பாடலில் கலுழன் திருமாலின் மாயை விளையாட்டுகளை யெல்லாம் விரித்துக் கூறி, 'ஆரிவ் வதிரேக மாயை யறிவார்'' என்ற மகுடத்தில் அமைத்து விளக்கிய திறம் வியத்தற்குரியது. (261)

இதிலே திரிபுடியாய்த் தேடுதற்கரியவனே வருந்தாதே என்கிருர்.

இ - ள். பேராயிரங்களுடையாய் – ஆயிரநாமங்களை யுடைய வனே. பிறந்த – உடம்போடு பிறந்த. பொருடோறும் - ஆன்மாக் களெல்லாம். நிற்றி – நிற்கிருய். பிரியாய் - பிரியாதவனுய். தீராய்– அப்படி ஒருபடியே நீங்காதவனுய். பிரிந்து – மெய்வாய் கண்ணோடு மூக்குச் செவிவழியாலே. திரிவாய் - வேறுபடுவாய். திறந்தொறு – தோறுமென்பதிலும் மை தொக்கது. (சுவையொளி யூறோசை நாற்றங்களை யுண்டு) அவை - அப் பொறிகளும். தேறுமென்று - அறியுமென்று. தெளியாய் – தெளியப்படானுய். கூர் – கூரிய. ஆழி – திருவாழியை. அங்கை - அழகிய கையிலே. உடையாய் - உடையவனே. திரண்டு - திரிபுடியாகத் திரண்டு. ஒருருவாதி - ஒரு வடிவாகிருய். கோடல் – வெண்காந்தற் கிழங்கை' உரிபோல் - உரித்தாற்போல. ஆராயின் - உள்ளே யிருப்பதெது வென்ருராயப்

புக்கால். ஏதுமிலேயாதி - ஒன்றுமில்லே யாகிருய். "இன்பமுதலிய பேற்றுக் கேதுவா மிந்திரிய மனமாமஃதே, யின்பமலியான் மாத் தோறுமிருப்பதாலநந்த மெனவு நித்தத், தின்பகுதி யெனவுமனுருப மெனவுந் துலங்க விலங்குமான்கண், ணின் பகுதி கவர்ந்து கெண் டையெனப் பிறழ்ந்து வண்டுறழ் நேத்திரத்திஞளே" என்பது நியாயவிவேகம். இம் மூன்று பாட்டும் பிறர் மதத்திற்குடன்படல். எ - று.

கருடன் இராமனே நெருங்குதல்

8394. என்றின்ன பன்னி யறிவா னெறிந்த
வெரிசோதி கீற விருள்போய்ப்
பொன்றுன்னி யன்ன வெயில்வீசு கின்ற
பொருள்கண்டு நின்ற புகழோன்
நின்றுன்னி யுன்னி யிவன்யாவ னென்று
நிமிர்கின்ற வெல்லே நிமிரச்
சென்றுன்னு முன்ன முடனுயி னுனிவ்
வுலகேழு மூடு சிறையான்.

என்று, இன்ன பன்னி அழிவான், எறிந்த
எரிசோதி கீற, இருள்போய்,
பொன்துன்னி அன்ன வெயில் வீசுகின்ற
பொருள் கண்டு, நின்ற புகழோன்
நின்று உன்னிஉன்னி, 'இவன்யாவன்?' என்று
நிமிர்கின்ற எல்லே, நிமிரச்
சென்று, உன்னும்முன்னம், உடன் ஆயினுன்,
இவ் வுலகுஏழும் மூடுசிறையான்.

பொ :—என்று இத்தகைய தோத்திரங்களேச் சொல்லி மனம் உருகுகின்றவனுகிய கருடன், (விரைந்து பறந்து வரும்பொழுது) வீசிய எரிபோன்ற பேரொளி கிழித்தலால் இருள் நீங்கப் பெற்றுப் பொன் ஒளி நெருங்கினுற்போன்ற வெயில் வீசுகின்ற தன்மையைக் கண்டு, (போர்க்களத்தில்) நின்ற புகழையுடையவனுகிய இராமன், (திகைத்து) நின்று நினேந்து நினேந்து (பார்த்தும் புலப்படாமை யால்) இவன் யாவன் ? என்று தலே நிமிர்ந்து பார்க்கும்போது, இவ் வுலகம் ஏழினேயும் மூடுதற்கு உரிய பரப்பினவாகிய சிறகுகளேயுடைய கருடன் (விண்வழியே) உயரச் சென்று (அவ் விராமன்) நினேக்கு முன் அவன் உடன்நிற்பான் ஆயினுன்.

கு:—அழிவான் என்றது, மனமுருகுகின்ற கருடனை. கருடன் பொன்னிறச் சிறகுகளை வீசியதால் உளதாகிய பேரொளி நெருப்புப் போன்றது என்பார் 'எறிந்த எரிசோதி' என்றார். கீறுதல்-கிழித்தல். போய் என்பது செயப்பாட்டு வினைப் பொருளது. பொன்னிறச் சிறகிலிருந்து வருகின்ற ஒளியாதலின் பொன் துன்ன யன்ன வெயில் வீசுவதாயிற்று. செறிந்திருந்த இருள் நீங்கப் பெற்று ஒளி தோன்றியவுடன் இராமன் அந்த ஒளிவரும் வழியை நோக்கி இவ்வாறு ஒளிவீசி வருகின்றவன் யாவன் என்று தலையை நிமிர்த்து மேல்நோக்கிச் சிந்திக்கும் அமையத்தில் கலுழன் பெரிய சிறகுகளைப் பரப்பிக்கொண்டு அவ்விராமன் பக்கலில் வந்து சேர்ந்தான் என்ற வாறு. கலுழனுடைய சிறகின் பரப்பைப் புலப்படுத்த 'உலகேழு மூடு சிறையான்' என்றார். போர்க்களத்து நாகபாசத்தால் பிணிக் கப்பட்டிருக்கும் அனைவர்மேலும் தன் சிறகின் காற்றுப் படச் செய்து அவர்களை உய்விக்க வந்தவன் ஆகலின், தன் சிறகுகளை அகலப் பரப்பிக்கொண்டு வந்தான் என்க. நிமிரச் சென்று என்றது கலுழ னது வினை. விண்ணின் வழி வருகின்றான் ஆகலின் 'நிமிரச் சென்று' என்று அவன் செலவை உணர்த்தினார். சிறையான் நிமிரச் சென்று உடன் ஆயினான் என இயையும். (262)

கலுழன் வந்தவுடன் நாகபாசம் அகலுதல்

8395. வாசங் கலந்த மறைநாள நூலின்
வகைபென்ப தென்னை மழையென்
றாசங்கை கொண்ட கொடைமீளி யண்ணல்
சரராமன் வெண்ணெ யணுகும்
தேசங் கலந்த மறைவாணர் செஞ்சொ
லறிவாள ரென்றிம் முதலோர்
பாசங் கலந்த பசிபோ லகன்ற
பதகன் றுரந்த வுரகம்.

வாசம் கலந்த மறைநாள நூலின்
வகைஎன்பது என்னை ?—மழைஎன்று
ஆசங்கை கொண்ட கொடைமீளி அண்ணல்
சரராமன் வெண்ணெய் அணுகும்,
தேசம் கலந்த மறைவாணர், செஞ்சொல்
அறிவாளர்; என்று முதலோர்
பாசம் கலந்த பசிபோல் அகன்ற—
பதகன் துரந்த உரகம்.

பொ :--பாதகனாகிய இந்திரசித்து விடுத்த நாகபாசம், வாசனை பொருந்திய தாமரை மலரின் தண்டிலுள்ள நூலின் தன்மையதாய் மெலிந்தது என்று சொல்வது எதற்கு ? (கைம்மாறு கருதாது கொடுத்தலால்) மேகமே என்று யாரும் ஐயம் கொள்ளுதற்குக் காரணமான கொடைத்தன்மையுடைய வலிமைமிக்க பெரியோனாகிய சடையப்ப முதலியாரின் வெண்ணெய்நல்லூரை அடைந்த, பல தேயத்திலும் வாழ்கின்ற வேதவிற்பன்னர்களும், செம்மையான சொற்களையுடைய தமிழ்ப் புலவர்களும் என்று இவர்கள் முதலியோரின் எமபாசம் என்னுமாறு வயிற்றிற் பொருந்திய பசி நீங்கியது போல உருத்தெரியாமல் நீங்கின.

கு:—கலுழன் வந்தவுடன் வானரவீரரைப் பிணித்த நாகபாசம் மெலிந்து நீங்கியதற்கு உவமையாகத் தாமரைத் தண்டிலுள்ள மெல்லிய நூலைக் கூற நினைத்தவர் அவ்வுவமையினும் சிறந்த வேறோர் உவமை நினைவுக்கு வந்தமையால் 'மரைநாள நூலின் வகையென்பது என்னை?' என்றார். தாமரைத் தண்டின் நூல்போல நாகபாசம் மெலிந்துபோயிற்று என்று சொல்வதைக் காட்டிலும், சடையப்ப வள்ளலின் வெண்ணெய்நல்லூரை யடைந்த புலவர்களின் பசி நீங்கியதுபோல, அந் நாகபாசம் நீங்கியது என்பது பொருத்தமாகத் தோன்றுகின்றது என்றவாறு. மரை, முதற்குறை; தாமரை என்றவாறு. தாமரைத்தண்டிலிருந்து நூல் எடுப்பது உண்டு ; அது மிக மென்மையானது. ஆசங்கை - ஐயம். மழைக்கும் சடையப்பர்க்கும் பிறர் வாழக் கொடுக்கும் தன்மையிலுள்ள ஒற்றுமையால் பார்ப்போர் சடையப்பரை மழையோ என ஐயுற்று நினைப்பர் என்றவாறு. சரராமன் என்பது சடையப்ப முதலியார்க்குரிய வேறொரு பெயர். மீளி - வலிமை. மறைவாணர் என்பது வடமொழிப் புலவரை. செஞ்சொலறிவாளர் என்றது தமிழ்ப் புலவர்களை. பாசம் - எமபாசம். வெண்ணை நண்ணிய புலவரின் பசிநீங்குமாறு போல நாகபாசம் வானர வீரர்களை விடுத்து நீங்கியது என்க. கம்பர் இங்குத் தம்மை யாதரித்த சடையப்ப வள்ளலின் கொடைத்தன்மையைச் சிறப்பித்துத் தம் செய்ந்நன்றி மறவாமையை நிலைபெறுத்தியவாறு. பாசம் பற்று என்றுகொண்டு இதுகாறும் புலவர்களின் வயிற்றில் பற்றோடு கலந்திருந்த பசி எனலும் ஆம். (263)

8396. பல்லாயி ரத்தின் முடியாத பக்க
மவை வீச வந்து படர்கால்
செல்லா நிலத்தி னிருளாதல் செல்ல
வுடனின்ற வாளி சிதறுற்

றெல்லா விதத்து முணர்வோடு மெண்ணி
யறனே யிழைக்கு முரவோன்
வல்லா னொருத்த னிடையே படுத்த
வடு ஆன மேனிவடுவும்.

பல் ஆயிரத்தின் முடியாத பக்கம்
அவைவீச வந்து படர்கால்
செல்லா நிலத்தின் இருளாதல், செல்ல,
உடல்நின்ற வாளி சிதறுற்று,
எல்லாவிதத்தும் உணர்வோடும் எண்ணி
அறனே இழைக்கும் உரவோன்
வல்லான் ஒருத்தன் இடையே படுத்த
வடுஆன, மேனி வடுவும்.

பொ :—பல ஆயிர காதத் தொலைவிலும் முடிவு பெருது பரவியுள்ள, இரு பக்கத்தும் அமைந்த சிறகுகளை (க் கலுழன்) வீசுவதால் வந்து பரவுகின்ற காற்றினுல் பூமியில் இதுகாறும் செல்லாதிருந்த இருளானது செல்லாநிற்க, (இலக்குவன் முதலியோரின்) உடம்பில் நின்று நாகக் கணைகள் சிதறப்பெற்று, (அவ்வம்புகள் பட்ட) தழும்புகளும், — எல்லாவகையாலும் நல் உணர்ச்சியோடு எண்ணிப் பார்த்து (ப் பாவத்தை விடுத்து) அறத்தையே விரும்பிச் செய்யும் அறிவு வலிமையுள்ள ஒருவன்மேல், புனைந்துரைக்க வல்லவன் ஒருவன் இடையே உண்டாக்கிய பழி நெடிது நிற்காது அழிவதுபோல, அழிந்தனவாயின.

கு :— வீசவந்து படர்காலினுல் இருள் செல்ல, வாளி சிதறுற்று, மேனி வடுவும், - உரவோன்மேல் வல்லான் ஒருத்தன் இடையே படுத்த வடு - ஆன என இயையும். பல்லாயிரம் என்றது எண்ணலளவை ஆகு பெயராய்ப் பல்லாயிர காவதத் தொலைவை யுணர்த்தியது. பக்கம் என்றது, இடவாகு பெயராய் இருபக்கத்து முள்ள சிறகுகளை உணர்த்தியது. செல்லா இருள் செல்ல என்க. ஆதல் என்பது முதல் வேற்றுமைச் சொல்லுருபாய் வந்தது. கருடனது சிறகுகள் அசைவினுல் உளதாகிய காற்றினுல், போர்க்களத்தில் நீங்காது நின்ற இருள் நீங்கியதோடு இலக்குவன் முதலியோர் உடம்பில் தைத்திருந்த நாகக்கணைகளும் சிதறப் பெற்று அக்கணைகள் பட்ட வடுவும் மறைந்தது என்றவாறு. கணைபட்ட வடு மறைந்ததற்கு உவமையாக, அறனே இழைக்கும் உரவோன் மேல் வல்லான் ஒருத்தன் இடையே படுத்த வடுவைக் கூறினர். தான் செய்வன அறனுகவே விளங்கவேண்டும் என்ற துணிபு

தோன்றுதற்கு எண்ண வேண்டியன பல இருத்தலின் 'எல்லா விதத்தும் உணர்வோடும் எண்ணி' என்ருர். உரவோன் மேல் படுத்த வடு என ஏழனுருபு வருவிக்க. உரவோன் என்றது அறிவுத் திண்மையுடைய பெரியோனை. வல்லான் என்றது பொய் புனைவதில் வல்ல இழிந்தோனை. அறத்தையே செய்யும் நல்லான் மேல் பொல்லாங்கு வல்லான் ஒரு பழியை உண்டாக்கினுலும் அப்பழிச் சொல் நெடிது நிற்காது அழிதல்போல, அறத்தைப் பின்பற்றும் இலக்குவன் முதலியோர் உடம்பில் இடையில் இந்திர சித்தினுல் ஏற்படுத்தப்பட்ட கணைகளாலாய வடுக்களும், நிலை பெருவாய் அழிந்துபோயின என்றவாறு. (264)

இச்செய்யுள் 52ஆம் எண்ணுள்ள சுவடியில்

8396 (a) பல்லாயிரத்தின் முடியாத பக்கம்
அவை வீச வந்த படர்கால்
செல்லா நிலத்தின் அருளொடு செல்ல
உடல் நின்ற வாளி சிதறுற்று
எல்லா மவித்தும் உணர்வோடு
மெண்ணி அறனே வினைக்கு முரவோன்
வல்லா னுருத்தன் இடையே
படுத்த வடுவான மேனி வடுவும்.

எனக் காணப்படுகின்றது.

## வானரசேனை உயிர்பெற்று எழுதல்

8397. தருமத்தி னொன்று மொழுகாத செய்கை
தழுவிப் புணர்ந்த தகையால்
உருமொத்த வெங்கண் வினைதீய வஞ்ச
ருடலுய்ந்த தில்லை யுலகின்
கருமத்தி னின்ற கவிசேனை வெள்ள
மலர்மேலவ் வள்ளல் கடைநாள்
நிருமித்த வென்ன வுயிரோ டெழுந்து
நிலைநின்ற தெய்வ நெறியால்.

தருமத்தின் ஒன்றும் ஒழுகாத செய்கை
தழுவிப் புணர்ந்த தகையால்
உரும்ஒத்த வெங்கண், வினைதீய, வஞ்சர்
உடல்உய்ந்தது இல்லை; உலகின்

கருமத்தின் நின்ற கவிசேனை வெள்ளம்,
மலர்மேல் அவ்வள்ளல் கடைநாள்
நிருமித்த என்ன, உயிரோடு எழுந்து
நிலைநின்ற, தெய்வ நெறியால்.

பொ :—அறநெறியில் சிறிதும் ஒழுகாத செய்கைகளையே பொருந்தியிருந்த தன்மையால், இடியை ஒத்த கடுங்கண்ணை யுடைய தீவினைகளைச் செய்யும் வஞ்சகர்களாகிய அரக்கர்களின் உடம்புகள் உயிர் பெற்று எழவில்லை; உலகத்தைப் பாதுகாக்கும் அறச் செயலில் ஈடுபட்டு நின்ற குரங்குச்சேனை வெள்ளங்கள்—உந்திக் கமலத்தில் தோன்றிய அவ்வள்ளலாகிய பிரமன் ஊழிக் கடை நாளில் நிகழும் சங்காரத்திற்குப் பின் படைக்கப்பட்டன போலத் தெய்வீக வழியால் உயிரோடு எழுந்து நிலைத்து நின்றன.

கு :—அரக்கர் சேனையில் யாரும் உயிர்பெற்று எழாமைக்கும் வானர சேனையில் எல்லோரும் எழுந்ததற்கும் காரணம் அவரவர் பாவ புண்ணியங்களே என்பது புலப்படுத்தியவாறு. தீய வினை வஞ்சகர் என்க; என்றது அரக்கரை. உலகின் கருமம் என்றது உலகப் பாதுகாவலை; அது அல்லோரை அடக்கி நல்லோரைக் காப்பதால் நடைபெறுவதாகலின் இராமன் பக்கலில் நின்று அரக்கரை அழிக்க முயலும் வானரரை 'உலகின் கருமத்தின் நின்ற கவி சேனை' என்றார். ஊழிக்கடை நாளில் அழித்தல் அல்லது படைத்தல் நிகழ்தல் இன்மையின் 'கடைநாள் நிருமித்த' என்பதற்கு, ஊழிக்கடை நாளுக்குப்பின் படைத்த எனப்பொருள் கூறவேண்டியதாயிற்று. இறந்த வானரசேனை கலுழன் சிறகுக் காற்றுப்பட்டுப் புத்துணர்ச்சியுடன் எழுந்தமை புலப்படுத்த 'மலர் மேல் வள்ளல் நிருமித்த தன்ன' என உவமை கூறினர். போரில் அடைந்த இளைப்பும் இன்னலும் இன்றி வானரர் உணர்ச்சி மிக்கு நின்றார்கள் என்றவாறு. நாகத்திற்கும் கருடனுக்கும் பகை யாதலின் கருடன் சிறகுக் காற்றுப்பட்டவுடன் நாகக்கணைகள் வலியழிந்து மாய்ந்தன என்பது கருத்து. அரக்கர் நாகக்கணையால் கட்டுண்டு இறக்கவில்லை ஆதலின் கருடன் சிறகுக் காற்றால் உயிர் பெற்று எழாராயினர் என்றவாறு. (265)

இலக்குவன் எழக்கண்ட இராமன் மகிழ்ச்சி

8398. இளையா னெழுந்து தொழுவானை யன்பி
னிணையான மார்பி னணையா
விளையாத துன்பம் விளைவித்த தெய்வம்
வெளிவந்த தென்ன வியவாக்

இளையார்க ளன்ன துணையோரை யாவி
கெழுவா வெழுந்து தழுவா
முளையான திங்க ளுகிரான்முன் வந்து
முறைநின்ற வீரன் மொழிவான்.

இளையான் எழுந்து தொழுவானை, அன்பின்,
இணைஆர மார்பின் அணையா,
'விளையாத துன்பம் விளைவித்த தெய்வம்
வெளிவந்தது' என்ன வியவா,
இளையார்கள் அன்ன துணையோரை,
ஆவிகெழுவா, எழுந்து தழுவா
முளையான திங்கள் உகிரான்முன் வந்து,
முறைநின்ற வீரன் மொழிவான்.

பொ :—நீதி நெறியில் நின்று ஒழுகும் வீரனாகிய இராமன், உயிர் பெற்று எழுந்து தொழுபவனாகிய தம்பியை அன்பினால் தனக்குத் தானே ஒப்பான தன் மார்பில் அணைத்துக்கொண்டு, 'இதுகாறும் விளைந்திராத பெருந்துன்பத்தை விளைத்த தெய்வம் அத்துன்பம் தீர்க்க (கருடன் வடிவில்) வெளி வந்ததுபோலும்' என்று வியந்து கூறிவிட்டு, சுற்றத்தார் போன்ற துணையோராகிய வானரரை உயிரோடு கலந்து பொருந்துமாறு எழுந்து நின்று தழுவிக் கொண்டு மூன்றும் நாள் முளைத்ததான சந்திரனைப்போன்ற நகங்களையுடைய கருடனுக்குமுன் சென்று பின்வருமாறு சொல்வா னானான்.

கு :—எழுந்து தொழுவானாகிய இளையானை என உருபு பிரித்துக் கூட்டுக. இணையான மார்பு என்றது, தனக்குத்தான் உவமையாயினல்லது வேறு உவமையில்லாத மார்பு என்றவாறு. இனி இலக்குவன் மார்பும் இராமன் மார்பும் ஒத்த தன்மைய வாதலின் அவ்விரண்டும் பொருந்தத் தழுவியதை 'இணையார மார்பினணையா' என்றார். விளையாத துன்பம் என்றது இலக் குவன் முதலியோர் இறந்துபட்ட துன்பத்தை. துன்பம் விளைவித்த தெய்வமே அத்துன்பந் தீரக் கருடன் வடிவாக வெளிப்பட்டு வந்தது என்பது இராமன் கருத்து. கிளை-சுற்றம். தனக்குத் துணை யாக இடையில் வந்து சேர்ந்த வானரர்கள் அன்பினால் தொன்று தொட்டுவந்த உறவினர்போல்கின்றார் என அவர்தம் அன்பின் உயர்வை விளக்கியவாறு. உடம்போடு தழுவினனாயினும் அன்பி னால் உயிரையும் தழுவினாற்போன்று காணப்பட்டான் என்பார், 'ஆவி கெழுவா வெழுந்து தழுவா' என்றார். கெழுவுதல்–பொருந்

துதல். வானத்தில் முளைத்த மூன்றாம் பிறையை இங்கு முளையான திங்கள் என்றார். கூர்மையும் வெண்மையும்பற்றிக் கருடனது நகத்திற்கு மூன்றாம்பிறை உவமையாயிற்று. உகிர் – நகம். உயிர் பெற்று எழுந்த இலக்குவனைத் தழுவிய இராமன் தெய்வத்திறத்தை வியந்து பேசிவிட்டு ஏனைய வானர வீரர்களையும் தழுவிவிட்டுக் கருடன் முன்சென்று சில சொல்லுவானானான் என்றவாறு. (266)

## இராமன் கருடனை யாரென வினவி அவன் உதவியைப் பாராட்டுதல்

8399. ஐய நீ யாரே யெங்க
★ ளருந்தவப் பயத்தி னன்வந்
தெய்தினை யுயிரும் வாழ்வு
மீந்தனை யெம்ம னோரால்
கையுறை கோடற் கொத்த
காட்சியை யல்லை மீட்சி
செய்திற மிலையா லென்றான்
றேவர்க்குந் தெரிகி லாதான்.

'ஐய! நீயாரே? எங்கள் அருந்தவப்
பயத்தின் வந்து, இங்கு
எய்தினை; உயிரும் வாழ்வும்
ஈந்தனை; எம்மனோரால்
கையுறை கோடற்கு ஒத்த
காட்சியை அல்லை; மீட்சி
செய்திறம் இலையால்' என்றான்—
தேவர்க்கும் தெரிகிலாதான்.

பொ :—(கருடனை நோக்கி) 'ஐயனே! நீயார்? எங்கள் அரிய தவப்பயனால் இங்கு வந்து அடைந்தாய்; அவ்வாறு அடைந்தமையால் நாகபாசத்தால் கட்டுண்டு இறந்தவர்கட்கு உயிரும் வாழ்வும் கொடுத்தாய்; (கொடுத்த நீ) எம்போன்றவரால் கொடுக்கப்படும் கையுறை கொள்ளுதற்கேற்ற தோற்றமுடையவனாகவும் இல்லை; நின்னுதவிக்கு மீண்டு கைம்மாறு செய்யும் திறம் எங்கட்கு இல்லை?' என்றான்; (யாரெனின்?) தேவர்க்கும் தன் இயல்பு முழுதும் தெரிய வியலாதபடி உயர்ந்தோனாகிய திருமாலின் அமிசமான இராமன்.

கு:—கலுழன் வந்து எய்தியதே நாகபாசம் விலகுதற்கும், இறந்தோர் உயிர்பெற்று எழுதற்கும் காரணமாதல் புலப்பட 'வந்து எய்தினை உயிரும் வாழ்வும் ஈந்தனை' என்ருன், ஒருவர், பிறர்க்கு உதவி செய்வது அவர்பால் ஒன்றைப் பெற விரும்பிய காரணத்தால் என்பது பெரும்பான்மை யாகலின் கருடனுக்கு அந்த நோக்கம் இல்லை என்பது புலப்பட 'எம்மனோரால் கையுறை கோடற்கொத்த காட்சியை யல்லை' என்ருன். இதனுல் 'பயன் தூக்கார் செய்த வுதவி நயன் தூக்கின் நன்மை கடலிற் பெரிது' (குறள் 103) என்ற குறளை நினைப்பித்தவாறு. கையுறை என்பது இங்குக் கைம்மாருகக் கையில் கொடுக்கும் பொருளை யுணர்த்தியது. கருடன் செய்தது, இராமன் எவ்வுதவியும் செய்யாத நிலையில் செய்த உதவி ஆகலின், அவ்வுதவிக்குக் கைம்மாருக மண்ணுலகமும் விண்ணுலகமும் சேர்த்துக் கொடுத்தாலும் அதற்கு ஈடாகாது என்பான், 'மீட்சி செய்திறம் இலையால்' என்ருன். 'செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும் வானகமும் ஆற்றல் அரிது' (குறள் 101) என்ற குறளை இங்கு நினைப்பித்தவாறு. தேவர்க்கும் உணர வியலாதவன் இத்துன்பக் காலத்து அத் தேவருள் ஒருவனுகிய கலுழனையும் உணர்ந்து கொள்ளாது மொழிய நேர்ந்ததே என்ற இரக்கத்தால் தேவர்க்கும் தெரிக்கலாதான், ஐய நீ யாரே..........என்ருன் என்று இராமனிலையைக் குறிப் பிட்டவாறு. (267)

8400. பொருளினை யுணர வேறு
புறத்துமொன் றுண்டோ புந்தித்
தெருளினை யுடைய ராயிற்
செயலருங் கருணைச் செல்வ
மருளினில் வரவே வந்த
வாழ்க்கையீ தாகின் வாயால்
அருளினை யென்னி னெய்த
வரியன வுளவோ ஐய!

பொருளினை உணர வேறு புறத்தும்
ஒன்று உண்டோ, புந்தித்
தெருளினை உடையர் ஆயின்? செயல்
அருங் கருணைச் செல்வ!

மருளினில் வரவே, வந்த வாழ்க்கை
ஈது ஆகின், வாயால்
அருளினை என்னின், எய்த அரியன
உளவோ ?—ஐய !

பொ :—பிறரால் செய்தற்கு அரிய கருணையாகிய செல்வத்தை யுடையவனே! புத்தித் தெளிவை யுடையவர்கள் ஆராயுமிடத்து, உனக்கு உவமையாகும் பொருளை உணர்தற்கு நின்னின் வேருகப் புறத்தேயும் ஒரு பொருள் உண்டோ ? (இல்லை ;) உன்னை இன்னுன் என்று உணரமுடியாத மருட்சிநிலையில் நீ வருதலினாலேயே எமக்கு வந்த வாழ்க்கை இதுவாகுமானல் இன்னும் வாயால் இன்னுன் என்று யாங்கள் உணருமாறு ஐயா! நீ பேசியருளினுய் என்ருல் எங்கட்கு அடைதற்கு அரியனவும் உளவோ ?

கு :—எழுபது வெள்ள வானரசேனைகளையும் பிணித்திருந்த நாக பாசத்தை விலக்குதல் பிறரால் செய்தற்கு இயலாத செயல் என்பார், ‘செயலருங் கருணைச் செய்வ!’ எனக் கருடனை விளித்தான். கருடனது கருணைச் செயல் ஒப்பற்றது என்பது புலப்படப் ‘பொரு ளினை யுணரவேறு புறத்தும் ஒன்று உண்டோ ?’ என்ருன். புந்தித் தெருளினையுடையார் ஆராய்ந்து பார்த்தாலும் நினக்கு உவமைப் பொருளினைக் காண வியலாது என்றது, நினக்கு நீயே உவமமாயின் அல்லது பிறருவமமாகார் என்றவாறு. இவ்வாறு கூறுவது பொது நீங்குவமை எனப்படும். மருளினில் என்றது, இன்னுன் என்று உணரமுடியாத நிலையினில் என்றவாறு. வரவே - வருதலினாலேயே வந்த வாழ்க்கை என்றது, இலக்குவன் முதலியோர் உயிர்பெற்றுப் புத்துணர்ச்சியுடன் எழுந்த வாழ்க்கையை. ‘வாயால் அருளினை யென்னின்’ என்பதற்கு வாயால் வரம் அருளினை ஆயின் என்று பொருள் கூறலும் ஆம். (268

8401. கண்டிலை முன்பு சொல்லக்
கேட்டிலை கடனென் றெம்பால்
கொண்டிலை கொடுப்ப தல்லாற்
குறையிலை யிதுநின் கொள்கை
உண்டிலை யென்ன நின்ற
வுயிர்தந்த வுதவி யோனே
பண்டிலை நண்பு நாங்கள்
செய்வதென் பகர்தி யென்ருன்.

'கண்டிலை, முன்பு; சொல்லக் கேட்டிலை;
கடன் ஒன்று எம்பால்
கொண்டிலை; கொடுப்பது அல்லால்,
குறைஇலை; இதுநின் கொள்கை;
"உண்டு, இலை" என்ன நின்ற
உயிர்தந்த உதவி யோனே!
பண்டு இலை நண்பு; நாங்கள்
செய்வதுஎன்? பகர்தி! என்றான்.

பொ:—'உடம்பினுள் உயிர் உண்டோ இல்லையோ என்று ஐயுறுமாறு நின்ற உயிர்களை உய்வித்துத் தந்த பெரிய உதவியாளனே! முன்னமே எம்மோடு கொண்ட நட்பு உடையனும் அல்லை; காரணம், முன்பு எம்மைக் கண்டதும் இல்லை; பிறர் சொல்ல எம்மைப் பற்றிக் கேட்டறிந்துமிருக்கமாட்டாய்; மேலும் எம்மிடத்து ஒரு கடனும் நீ கொண்டதில்லை; கொடுப்பதேயன்றிப் பிறர்பால் ஒன்று பெறத் தக்க குறையுடையாயல்லை; இது நின் இயல்பு; இத்தகைய உனக்கு நாங்கள் செய்யத்தக்கது என்ன என்பதைச் சொல்வாயாக' என்று இராமன் வினவினான்.

கு:—நாகபாசத்தால் கட்டுண்டு கிடந்தவர்களைக் கண்டோரில், 'உயிர் உண்டு' எனச் சிலரும் 'உயிர் இல்லை' எனச் சிலரும் சொல்லுமாறு ஐயத்திற்கு இடமாகக் கிடந்த உயிர்கள் என்பார் 'உண்டிலையென்ன நின்ற உயிர்' என்றார். நண்பர்களாயுள்ளோர் உதவி செய்தல் இயல்பு; அத்தகைய நட்பு இல்லாமலும் கலுழன் உதவிய உதவியைப் பாராட்டுவானாய்ப் 'பண்டிலை நண்பு' என்கின்றான். நட்பிற்குக் காரணம் பலகால் கண்டு பழகுதலும் இல்லையேல் பிறர் சொல்லக் கேட்டுப் பழகுதலும் ஆதலின் அவ்விரண்டும் நினக்கு இல்லை என்பான், "கண்டிலை முன்பு சொல்லக் கேட்டிலை" என்றான். நட்பு இல்லையாயினும் முன்னர்க் கடன் கொண்டிருந்தால் அக்கடனைத் தீர்க்குமுறையில் இவ்வுதவியைச் செய்திருக்கலாம் என்று கொள்ள இடமுண்டு; ஆயின் கொடுப்பதல்லால் கடன் கொள்ள வேண்டிய குறை நினக்கு இல்லை. ஆதலால், நின்னுதவிக்குக் கைம்மாறாக நாங்கள் செய்யவேண்டுவது என்ன என்பதைச் சொல்லியருள்க என இராமன் கலுழனைக் கேட்டவாறு. (269)

## கருடன் விடைபெற்றுச் செல்லுதல்

8402. பறவையின் குலங்கள் காக்கும்
பாவகன் பழைய நின்னோ
டுறவுள தன்மை யெல்லா
முணர்த்துவெ னரக்க னேடம்
மறவினை முடித்த பின்னர்
வருவெனின் னுழையன் மாயப்
பிறவியின் பகைஞ நல்கு
விடையெனப் பெயர்ந்து போனான்.

பறவையின் குலங்கள் காக்கும்
பாவகன் "பழைய நின்னோடு
உறவு உள தன்மை எல்லாம்
உணர்த்துவென்; அரக்கனோடும்
மற வினை முடித்த பின்னர், வருவென்'
என்று உணர்த்தி, மாயப்
பிறவியின் பகைஞ! நல்கு, விடை''
எனப் பெயர்ந்து போனான்.

பொ :—பறவையின் குலங்களைக் காக்கும் தூய்மையான அரசுத் தொழில்பூண்ட கலுழன், (இராமனை நோக்கி) 'பொய்ப்பிறவிக்குப் பகைவனாய் முத்தியளிக்கு முதல்வனே! அரக்கனாகிய இராவணனோடு தொடுத்துள்ள அப் போர்த் தொழில் முடிந்த பின்பு 'நின்பால் வருவேன்; நின்னோடு பழைய உறவு உள்ள தன்மை, யெல்லாவற்றையும் உனக்கு உணர்த்துவேன்' என்று சொல்லிவிட்டு, 'விடை கொடுப்பாயாக' என்று சொல்லிக்கொண்டே அங்கு நின்றும் பெயர்ந்து பறந்து போயினான்.

கு:—திருமால் பொய்ப்பிறவி ஒழித்து மெய்ப்பிறவி கொடுக்கும். இயல்பினன் ஆதலின், 'மாயப் பிறவியின் பகைஞ' என்று கலுழன் விளித்தான். பாவகன் - தூயவன், கலுழன். பழைய உறவு என இயையும். மறவினை என்றது போர்த்தொழிலை. இராமாவதார நோக்கம் இராவணனை மாய்த்தலே ஆதலின் அந் நோக்கம் முடியா முன்னம் கலுழன் இராமனுடைய பழைய தெய்வநிலையையும் தனக்குள்ள உறவையும் கூறுதல், தேவசபையில் நடந்த இரகசியத்தை வெளிப்படுத்தியதாக முடியும் ஆகலின், "அரக்கனோடம் மறவினை முடித்தபின்னர் நின்னுழை வருவென்; பழைய நின்னோருறவுள தன்மையெல்லாம் உணர்த்துவென்" என்று கூறுவானாயினன்.

மாயப்பிறவி-பொய்ப்பிறவி. இனி மாயையால் உளதாகும் பிறவி எனினும் அமையும். (270)

29, 41, 66 என்ற எண்ணுள்ள சுவடிகளில் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகின்றது.

8402 (a) பறவை நா யகன்ரு னேகப் படருறு துயரம் நீங்கிக்
கறவையுங் கன்றும் போலக் களிக்கின்ற மனத்த ராகி
இறைவனு மிளைய கோவும் யாவரும் எழுந்து நின்ருர்
மறையொடு நான்கும் மண்ணும் வானமும் மகிழ்ந்த மாதோ.

## இராமன் கருடனைப் புகழ்தல்

8403. ஆரிய னவனை நோக்கி
யாருயி ருதவி யாதும்
காரிய மில்லான் போனன்
கருணையோர் கடன்மை யீதால்
பேரிய லாளர் செய்கை
யூதியம் பிடித்து மென்னர்
மாரியை நோக்கிக் கைம்மா
றியற்றுமோ வைய மென்ருன்.

ஆரியன் அவனை நோக்கி,
'ஆயிருர் உதவி, யாதும்
காரியம் இல்லான் போனன்;
கருணையோர் கடமை ஈதால்;
பேர் இயலாளர், "செய்கை
ஊதியம் பிடித்தும்" என்னர்;
மாரியை நோக்கிக் கைம்மாறு
இயற்றுமோ, வையம்?' என்ருன்,

பொ:—இராமன் விடைபெற்றுச் சென்ற கருடனையே நோக்கிக் கொண்டு (மற்றவர்களிடம்) நாகபாசத்தால் கட்டுண்டார்க் கெல்லாம் அரிய உயிரைக் கொடுத்துவிட்டு, 'நம்மிடத்தே பெறும் காரியம் ஏதும் இல்லாத கருடன் போய்விட்டான்; அருளுடைய வர்களின் முறைமை இதுவேயாகும்; பெருந்தன்மை வுடையோர் தாம் செய்யும் உபகாரச் செயலுக்குக் கைம்மாருகப் பயனைப் பெறு வோம் என்று கருத மாட்டார்கள். இந்த வுலகம் தனக்கு மழை

வளம் சுரக்கும் மேகத்தை நோக்கிக் கைம்மாறு செய்யுமோ? (செய்ய இயலாது காண்) என்று கூறினன்.

கு :— ஆரியன், உயர்ந்தவனுகிய இராமன். காரியம் என்றது பயனை. ஊதியம் - பயன். பிடித்தும் என்றது தன்மைப் பன்மை வினைமுற்று. மாரி இங்கு மேகத்தை உணர்த்தியது......"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரி மாட்டென்னாற்றுங் கொல்லோ உலகு" (குறள் - 211) என்ற குறட்கருத்து இறுதியடியில் அமைந்துள்ளமை காணலாம். (271)

அனுமன் ஆரவாரம் செய்யலாம் என்பது

8404. இறந்தன னிளவ லென்னு
விறைவியு மிடுக்க ணெய்தும்
மறந்தன ருறங்கு கின்ற
வஞ்சரு மறுகி மீளப்
பிறந்தன ரென்று கொண்டோர்
பெரும்பயம் பிடிப்ப ரன்றே
அறந்தரு சிந்தை ஐய!
வார்த்துமென் றனுமன் சொன்னன்.

"இறந்தனன், இளவல்" என்னு,
இறைவியும் இடுக்கண் எய்தும்;
மறந்தனர் உறங்கு கின்ற
வஞ்சரும் மறுகி, "மீளப்
பிறந்தனர்" என்று கொண்டு, ஓர்
பெரும்பயம் பிடிப்பர் அன்றே,
அறந்தரும் சிந்தை ஐய!
ஆர்த்தும் என்று அனுமன் சொன்னன்.

பொ :—'அறத்தைக் காக்கவேண்டும் என்றசிந்தனையையுடைய ஐயனே! (நாம் அமைதியாக இருந்தால்) இளவல் இலக்குவன் இறந்தனன் என்று எண்ணித் தேவியும் துன்புறுவாள்; (மகிழ்ச்சி ஆரவாரம் செய்தால்) தங்கட்குவரும் துன்பத்தை மறந்து தூங்கிக் கொண்டிருக்கின்ற வஞ்சகர்களாகிய அரக்கரும் மனம் கலங்கி (இறந்த வானரர்) மீண்டும் பிறந்துவிட்டார்கள் என்று நினைந்து ஒரு பெரிய அச்சத்தைக் கொள்வர் அல்லரோ (ஆதலால் நாம்) ஆரவாரம் செய்வோம்' என்று அனுமன் சொன்னன்.

கு :— ஆரவாரிப்பதால் இருவகைப் பயன் உண்டு என அனுமன் கூறியவாறு. வானரர் ஆரவாரம் செய்வது கேட்டுச் சீதை இலக்குவன் இறந்திலன் என்று தெரிந்து கொள்வாள். அரக்கர்கள் உறக்கத்தை விடுத்துப் பெரிதும் அச்சங்கொண்டு நடுங்குவர் என்றவாறு. 'அறந்தரு சிந்தையைய' என்றது இராமனை. (272)

அனுமன் கருத்திற்கு இராமன் உடன்படல்

8405. அழகிதென் றண்ணல் கூற
வார்த்தனர் கடல்க ளஞ்சிக்
குழைவுற வநந்த னுச்சிக்
குன்றிநின் றண்ட கோளம்
எழுமிசை யுலக மேன்மே
லேங்கிட விரிந்து சிந்தி
மழைவிழ மலைகள் கீற
மாதிரம் பிளக்க மாதோ.

'அழகிது' என்று அண்ணல் கூற,
ஆர்த்தனர்—கடல்கள் அஞ்சிக்
குழைவுற, அனந்தன் உச்சிக்
குன்றின் நின்று அண்ட கோளம்
எழ மிசை, உலகம் மேல்மேல்
ஏங்கிட, இரிந்து சிந்தி
மழைவிழ, மலைகள் கீற,
மாதிரம் பிளக்க மாதோ.

பொ :— பெருமையிற் சிறந்த இராமன், (அனுமன் சொல்லை உடன்பட்டு) 'நல்லது' என்று சொல்ல,—கடல்கள் அஞ்சிக்கலங்கவும், ஆதிசேடனுடைய தலைகளாகிய மலையில் நின்று உலக உருண்டை மேலெழவும்' உலகத்தவர் (இவ்வொலி இன்னது என்று அறியாமையால்) மேலும் மேலும் ஏக்கங்கொள்ளவும் மேகங்கள் பிளவுற்றுச் சிதறி வீழவும், மலைகள் பிளவுபடவும் திசைகள் பிளக்கவும் வானரர் ஆரவாரித்தனர்.

கு :—அண்ணல்—பெருமை; பெருமையுடைய இராமனை இங்கு அண்ணல் என்றார். ஆர்த்தனர் என்ற வினைக்கு உரிய வானரர் என்ற எழுவாய் வருவிக்கப்பட்டது. கூற என்றது காரணத்தின்

கண் வந்த வினையெச்சம். கடல்கள் குழையுற, அண்டகோளம் மிசை எழ, உலகம் ஏங்கிட, மழை விழ, மலைகள் கீற, மாதிரம் பிளக்க வானரர் ஆர்த்தனர் என இயையும். வானரர் ஆரவா ரத்தை உயர்வு நவிற்சியாகக் கூறியவாறு. (273)

52ஆம் எண்ணுள்ள சுவடியில் பின்வரும் மிகைப்பாடல் காணப்படுகின்றது.

8405 (a) இருநிலம் கிழிய பாயும் எறிகட லிறைப்புத் தீர
பரவும் எண் திசையும் தாங்கும் பகட்டினம் இரியல்போக
கருவயிறு உடைந்து சிந்தி அரக்கியர் கலங்கி வீழ
அருவரை அண்ட கோளம் பிளக்கநின் றனும ளுர்த்தான்.

(b) மண்டலங் கா...... கடல் மூளை மண்ட
வெண்டிசை சுமந்த மாவும் தேவரும் இரியல் போகத்
தொண்டைவா யரக்கி மார்கள் சூல்வயிறு உடைந்து சோர
அண்டமும் பிளந்து...... னவனுமன் ஆர்த்தான்.

எனக் காணப்படுகின்றது.

## வானரங்களின் ஆரவாரத்தை இராவணன் கேட்டல்

8406. பழிப்பருஞ் சிந்தை யான்பால்
சிந்தனை படரக் கண்கள்
விழிப்பிலன் மேனி சால
வெதும்பின னீசன் வேலும்
குழிப்பரி தாய மார்பை
மன்மதன் கொற்ற வாளி
கிழிப்புற வுயிர்ப்பு வீங்கிக்
கிடந்தவா ளரக்கன் கேட்டான்.

பழிப்பு அரு சிந்தையாள்பால்
சிந்தனை படர, கண்கள்
விழிப்பு இலன், மேனிசால
வெதும்பினன், ஈசன் வேலும்
குழிப்பு அரிது ஆய மார்பை
மன்மதன் கொற்ற வாளி
கிழிப்புற, உயிர்ப்பு வீங்கிக்
கிடந்தவாள் அரக்கன் கேட்டான்.

பொ :—பழிப்பு இல்லாத தூய சிந்தனையையுடைய சீதையிடத்து உள்ளம் செல்லுதலால் கண்களை விழித்துப் பாராதவனாய் உடம்பு மிகவும் வெதும்பினனாய், சிவனது சூலவேலும் துளைத்தற்கு அரியதாய தன்மார்பினை மன்மதனது வெற்றி மிக்க மலரம்புகள் கிழியா நிற்கப் பெருமூச்சு விட்டுக்கொண்டு கிடந்த, வாட்படையையுடைய இராவணன் அவ்வானரர் ஆரவாரத்தைக் கேட்டான்.

கு:—தன் கொழுநனையே நினையும் சிந்தையாதலின் சீதையின் சிந்தை 'பழிப்பருஞ் சிந்தை' எனச் சிறப்பிக்கப்பட்டது. அத்தகைய சீதையின்பால் இராவணன் சிந்தனை படர்ந்ததால் அவன் கேடு நணித்தாயிற்று என்ற குறிப்பும் புலப்பட 'பழிப்பருஞ் சிந்தையாள்பால் சிந்தனை படர' என்றார். 'ஈசன் வேலும் குழிப்பரிதாய மார்பு' என்றது, இராவணன் திக்குவிசயத்தில் எமனோடு போர் புரியும்போது எமன் வேல் முதலிய படைகளை விட்டும் இராவணன் மார்பினைப் பிளக்க வியலாத நிலையை யுணர்த்தியவாறு. 'என்று தென் திசைக்கு நாதன் ஈட்டிவேல் குலிச மேவச் சென்றவன் திறத்திற் றைக்கத் தென்னிலங்கேசன் சீறி" (உத்தர — திக்கு விசயப் - 68) என்றது காண்க. அழித்தல் தொழிலின் ஒற்றுமை நினைந்து சிவனையும் எமனையும் ஒருவராகக் கூறும் மரபுபற்றி இங்ஙனம் கூறினர் என்க. ஏற்றுவல னுயரிய வெரிமரு ளவிர்சடை மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனும், கடல்வளர் புரிவளை புரையு மேனி அடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடியோனும்' என்று, எண்ணியவர் பின்பு "கூற்றொத்தீயே மாற்றருஞ் சீற்றம், வலியொத் தீயே வாலியோனை" (புறநா — 56) எனச் சிவனைக் கூறவேண்டிய இடத்தில் கூற்றுவனைக் கூறியிருத்தலால் சிவனும் கூற்றும் ஒருவனே என்ற மரபு இருத்தல் அறியலாம். 'ஈசன் வேலும் குழிப்பரிதாய மார்பை மன்மதன் கொற்றவாளி கிழிப்புற' என்புழி 'ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினுள் நண்ணாரு முட்குமென் பீடு" (குறள் - 1088) என்ற குறள் கருத்து அமைந்திருத்தல் காணலாம். அவ் ஆரவாரத்தைக் கேட்டான் எனச் செயப்படு பொருள் அவாய் நிலையான் வந்தது. (274)

### இலங்கையில் துயிலாதார் இருவரே

8407. தாதைசொற் றலைமேற் கொண்ட
தாபதன் றரும மூர்த்தி
ஈதைக டீர்க்கு நாமத்
திராமனை யெண்ணி யேங்கும்

சீதையு மவளை யுன்னிச்
சிந்தனை தீர்ந்து தீராப்
பேதையு மன்றி யவ்வூர்
யாருளர் துயில்பெ ருதார்.

தாதைசொல் தலைமேல் கொண்ட தாபதன், தரும மூர்த்தி,
ஈதைகள் தீர்க்கும் நாமத்து இராமனை எண்ணி எங்கும்
சீதையும், அவளை உன்னிச் சிந்தனை தீர்ந்து தீராப்
பேதையும், அன்றி, அவ் ஊர் யார் உளர், துயில் பெருதார்?

பொ :—தந்தையின்சொல்லைத் தலைமேற்கொண்டு காடு புகுந்த தவ வேடத்தவனும் அறத்தின் வடிவமாக விளங்குபவனும் (நினை வாரது துன்பங்களைத்) தீர்க்கவல்ல தூய பெயரையுடையவனும் ஆகிய இராமனை எண்ணி எண்ணி ஏங்குகின்ற சீதையும் அச் சீதையை நினைந்து நினைந்து வேறு சிந்தனை தீர்ந்து அவள் நினைவு நீங்காதிருக்கின்ற அறிவிலியாகிய இராவணனும் அல்லாமல் அவ்வூரில் துயில் பெருதவர்கள் யாருளர்? (ஒருவரும் இலர் என்றபடி)

கு :—சீதை, இராமனையே எண்ணித் துயிலாத நிலை தவநெறி யா லும், இராவணன் தூய சிந்தனையுடைய சீதையை நினைந்து துயிலாத நிலை அவநெறியாதலும் புலப்படுத்தியவாறு. ஈதைகள் துன்பங்கள். ஈதைகள் தீர்க்கும் நாமம் என்றது. இராம நாமத் தையே என்க. "இம்மையே யெழுமை நோய்க்கு மருந்தினை யிராமவென்னும் செம்மைசேர் நாமந் தன்னை" (வாலிவதை : 71) என்றது நினைக. சீதையை நினைந்து வேறு சிந்தனை தீர்ந்தவ ணுகிய இராவணன் அவ்வெண்ணம் தவறுடையது எனப் பிறர் கடிந்து கூறவும் அச்சிந்தனையை விடாது நின்ற அறிவின்மையின் அழுத்தத்தை யுணர்த்த வேண்டி 'சிந்தனை தீர்ந்து தீராப்பேதையும்' என இராவணனைக் குறிப்பிட்டார். மூவுலகிற்கும் வேந்தனுகிய இராவணன் தனக்கு ஆகாத பிறனில் விழைதலில் காதல் கொண்டது பெரும்பேதைமை என்பது புலப்படுத்தியவாறு. "பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை கையல்ல தன்கட் செயல்" (குறள் - 832) என்பது இங்கு நினையத்தகும். இலங் கையிலுள்ளார் அனைவரும் துயிலவும், தவமேற்கொண்ட சீதையும் அவமேற்கொண்ட இராவணனும் துயிலாதிருந்தனர் என்றவாறு. (275)

## இராவணன் இந்திரசித்தின் சொல்லை நினைந்து சிரித்தல்

8408. சிங்கவே றசனி யேறு
கேட்டலுஞ் சீற்றச் சேனை
பொங்கிய தென்ன மன்னன்
பொருக்கென வெழுந்து போரில்
மங்கினர் பகைஞ ரென்ற
வார்த்தையே வலிய தென்னு
அலங்கையோ டங்கை கொட்டி
யலங்கற்றோள் குலுங்க நக்கான்.

சிங்க ஏறு, அசனி ஏறு
கேட்டலும், 'சீற்றச் சேனை
பொங்கியது' என்ன மன்னன்
பொருக்கென வெழுந்து, "போரில்
மங்கினர் பகைஞர்" என்ற
வார்த்தையே வலியது! என்னு,
அங்கையோடு அங்கை கொட்டி
அலங்கல்தோள் குலுங்க நக்கான்.

பொ :— ஆண் சிங்கம்போன்ற வானரர்கள் செய்யும் பேரிடி போன்ற ஆரவாரத்தைக் கேட்ட அளவில் இராவணன், கோபத்தையுடைய வானரசேனை போர்க்குக் கிளர்ந்து எழுந்தது என்று அறிந்து விரைந்து படுக்கையை விட்டு எழுந்து, 'போரில் பகைவர் எல்லாம் இறந்தனர்' என்று இந்திரசித்து கூறிய வார்த்தையே உறுதியுடையதாக இருந்தது. (அவ்வார்த்தையினுல் புலப்படுத்திய பொருள் உறுதியுடையதாக இல்லை) என்று கூறிக் கொண்டு உள்ளங்கையோடு உள்ளங்கையைச் சேர்த்துக் கொட்டிக் கொண்டு மாலை அணிந்த தோள்கள் குலுங்குமாறு சிரித்தான்.

கு :— சிங்கவேறு என்பது உவம ஆகுபெயராய் ஆண் சிங்கம் போன்ற வானரரை யுணர்த்தியது. அசனியேறு என்பதும் அவ்வாறே பேரிடிபோன்ற ஆரவாரத்தை யுணர்த்தியது. பொங்குதல் - கிளர்ந்தெழுதல். மங்குதல் - அழிதல். வார்த்தையும் பொருளுமாகிய இரண்டினுள், இந்திரசித்து கூறிய வார்த்தை உறுதியானதாக இருந்ததேயன்றி அவ்வார்த்தையின் பொருள் பொய்மையாய் உறுதியற்றதாக ஆய்விட்டது என்ற கருத்தினுகலின் வார்த்தையே எனப் பிரிநிலை ஏகாரம் கொடுத்துக் கூறினுன். அவ்வார்த்தை யுணர்த்திய பொருள் வலியாக இல்லை என்ற

குறிப்பு அப் பிரிநிலை ஏகாரத்தால் பெற வைத்தவாறு. பொருக்கென என்பது விரைவுக் குறிப்புணர்த்தும் இடைச்சொல். அங்கை- அகங்கை. இராவணன் செய்த இந்த நகை எள்ளல் பற்றியது.(276)

ஆரவாரத்தினை இராவணன் பிரித்துணர்வது 8409-8410

8409. இடிக்கின்ற வசனி யென்ன
விரைக்கின்ற திராமன் போர்வில்
வெடிக்கின்ற தண்ட மென்னப்
படுவது தம்பி வின்னாண்
அடிக்கின்ற தென்னை வந்து
செவிதொறு மனும ஞர்ப்புப்
பிடிக்கின்ற துலக மெங்கும்
பரிதிசே யார்ப்பின் பெற்றி.

'இடிக்கின்ற அசனி என்ன
இரைக்கின்றது, இராமன் போர் வில்;
வெடிக்கின்றது அண்டம் என்ன,
படுவது தம்பி வில் நாண்;
அடிக்கின்றது என்னை வந்து
செவிதொறும் அனுமன் ஆர்ப்பு
பிடிக்கின்றது உலகம் எங்கும்,
பரிதிசேய் ஆர்ப்பின் வெற்றி.

பொ :—இராமனது போர் செய்தற்குரிய வில், இடிக்கின்ற இடியைப்போல ஒலிசெய்கின்றது; அவன் தம்பி - இலக்குவனது வில்லின் நாணொலி அண்ட கோளம் வெடிக்கின்றது என்னுமாறு ஒலிக்கின்றது; அனுமனுடைய ஆரவாரம் வந்து என்னைச் செவி தொறும் அடிக்கின்றது. சூரியன் மகனாகிய சுக்கிரீவனது ஆரவாரம் உலகம் எங்கும் பரவுகின்றது.

கு :— வானரங்களின் ஆரவாரமே அன்றி இராம இலக்குவரின் வில் நாணொலியும் எழுந்தது என்பது இச்செய்யுளால் புலனாகும். அனுமன் போர்ச்செயலை இராவணன் முன்னமே அறிந்து அவனைக் கருத்தில் கொண்டுள்ளான் ஆதலின், அவன் ஆரவாரம் தன்னைச் செவியில் அறைவதுபோல இருந்ததாகக் கூறினான். பிடித்தல், என்பது இங்கு உலகம் எங்கும் இடமாகக்கொண்டு பரவுதலை உணர்த்தியது. (277)

## வானரசேனை பாசத்தினின்று விடுபட்டதை இராவணன் உய்த்துணர்தல்

8410. அங்கத னவனு மார்த்தா
 னந்தர மார்க்கின் றானும்
வெங்கத நீலன் மற்றை
 வீரரும் வேறு வேறு
பொங்கின ரார்த்த வோசை
 யண்டத்தின் புறத்தும் போன
சங்கையொன் றின்றித் தீர்ந்தார்
 பாசத்தைத் தரும நல்க.

'அங்கதன் அவனும் ஆர்த்தான்; அந்தரம் ஆர்க்கின்றானும்,
வெங்கத நீலன்; மற்றை வீரரும், வேறு வேறு
பொங்கினர் ஆர்த்த ஓசை அண்டத்தின் புறத்தும் போன;
சங்கை ஒன்று இன்றித் தீர்ந்தார் பாசத்தை, தருமம் நல்க!

பொ :—அங்கதனாகிய அவனும் ஆரவாரித்தான்; விண்ணை எட்டுமாறு ஆர்க்கின்றவனும் கொடிய கோபத்தையுடைய நீலன் ஆவன்; மற்றைய வீரர்களும் கோபம் பொங்கினவராய் ஆரவாரித்த ஓசைகள் இவ்வண்டத்தின் புறத்தேயும் போயின; (இதனால்) தருமம் வந்து நல்கியதனால் ஐயமின்றிப் பகைவர்கள் நாகபாசத்தினின்றும் நீங்கி விட்டார்கள்; (என்பது புலனாகின்றது.)

கு :— தன் நண்பன், - வாலியின் மகன் என்னும் உரிமை நினைந்து இராவணன் 'அங்கதன் அவனும் ஆர்த்தான்' என்றான். அங்கதன் வீரத்தை நேரில் கண்டவனாதலின், இங்ஙனம் பிரித்துச் சிறப்பாக எண்ணினான் என்றலும் ஒன்று. சங்கை - ஐயம். பாசத்தைத் தீர்ந்தார் என இயையும். நாகபாசத்தினாலாய கட்டினை நீங்கப் பெற்றார் என்பது கருத்து. இங்கு இராவணனும் 'தரும நல்கப் பாசத்தைத் தீர்ந்தார்' என உணர்ந்து சொல்லும் அளவு இராமன் பக்கத்துத் தருமம் நிலைபெற்றிருந்தது என்பது புலனாம். வெங்கதம் - கொடிய கோபம். (278)

## இராவணன் இந்திரசித்தின் மாளிகைக்குப் போதல்

8411. என்பது சொல்லிப் பள்ளிச்
 சேக்கைநின் றிழிந்து வேந்தன்
ஒன்பது கோடி வாட்கை
 யரக்கர்வந் துழையின் சுற்றப்

பொன்பொதி விளக்கங் கோடிப்
பூங்குழை மகளி ரேந்தத்
தன்பெருங் கோயி னின்று
மகன்றனிக் கோயில் சார்ந்தான்.

என்பது சொல்லி, பள்ளிச் சேக்கை நின்று இழிந்து, வேந்தன்,
ஒன்பது கோடி வாட்கை அரக்கர் வந்து உழையின் சுற்ற,
பொன்பொதி விளக்கம் கோடிப் பூங்குழை மகளிர் ஏந்த,
தன் பெருங் கோயில் நின்றும் மகன் தனிக் கோயில் சார்ந்தான்.

பொ :— என்பது போன்ற சொற்களைத் தனக்குள் சொல்லிக் கொண்டு படுக்கை யிடத்தினின்றும் இறங்கி இராவணன் ஒன்பது கோடி வாளேந்திய கையினையுடைய அரக்க வீரர்கள் தன் பக்கத்தில் சூழ்ந்து வரப் பொன்னொலியன்ற கோடி விளக்குகளைப் பொலிவுமிக்க காதணியையுடைய பெண்டிர் ஏந்திவர, தன் பெரிய அரண்மனையிலிருந்து தன் மகனுடைய ஒப்பற்ற அரண்மனையை அடைந்தான்.

கு :— சேக்கை - தங்குமிடம். பள்ளியாகிய சேக்கை என இருபெயரொட்டாக்குக. இரவு ஆதலின் கோடி விளக்கினை யேந்திக்கொண்டு கோடிமகளிர் உடன் சென்றனர் என்க. வேந்தன் செல்லும்போது பகைவரால் தீங்கு நிகழாவண்ணம் பாதுகாப்பாக ஒன்பது கோடி வீரர்கள் வாள் ஏந்திச் சென்றனர். மகன் என்றது இந்திரசித்தினை. (279)

### உடன் சென்ற மகளிர் 8412-8415

8412. தாங்கிய துகிலார் மெள்ளச்
சரிந்துவீழ் குழலார் தாங்கி
வீங்கிய வுயிர்ப்பார் விண்ணை
விழுங்கிய முலையார் மெல்லத்
தூங்கிய விழியார் தள்ளித்
துளங்கிய நடையார் வல்லி
வாங்கிய மருங்கின் மாத
ரனந்தரான் மயங்கி வந்தார்.

தாங்கிய துகிலார், மெள்ளச் சரிந்து வீழ் குழலார், தாங்கி வீங்கிய உயிர்ப்பார் விண்ணை விழுங்கிய முலையர், மெல்லத் தூங்கிய விழியார், தள்ளித் துளங்கிய நடையார்,—வல்லி வாங்கிய மருங்கின் மாதர்,—அனந்தரால் மயங்கி வந்தார்.

பொ:—(துவளும் தன்மையால்) கொடியும் பின் வாங்குதற்குக் காரணமான இடையையுடைய மகளிர் (அவிழ்ந்த நிலையில்) கையால் தடுத்துத் தாங்கிய துகிலினராய்ச் சரிந்து வீழ்கின்ற கூந்தலை யுடையராய்த் தடைபட்டு மிகுதியாக வெளிப்படுகின்ற பெருமூச்சை யுடையவராய் விண்ணிடத்தை மறைக்கின்ற கொங்கையை யுடையவராய் மெல்ல உறங்குகின்ற கண்ணையுடையவராய்த் தள்ளாடி, அசைகின்ற நடையினை யுடையராய்த் தூக்க மயக்கத்துடன் (இராவணனோடு) வந்தார்கள்.

கு:—உறக்கத்திலிருந்து எழுந்து வந்த மகளிர் ஆதலின் உடை நன்கு உடுக்காமல் கையில் தாங்கியவராகவும் படுக்கையில் அவிழ்ந்த கூந்தலை வாரி முடிக்காமல் சரிந்து வீழ்கின்ற கூந்தலை யுடையவராகவும் இராவணனுடன் வந்தனர் என்றவாறு. உறக்கம் முடியாமையால் தடைபட்டு வெளிப்படுகின்ற பெருமூச்சை யுடையவராயினர். அனந்தர் – தூக்க மயக்கம். இச்செய்யுளில் தூக்க மயக்கத்தில் ஏற்படும் மெய்ப்பாடுகளை நன்கு விளக்கியுள்ளமை காணலாம். (280)

8413. பானமுந் துயிலுங் கண்ட
கனவும்பண் கனிந்த பாடற்
கானமுந் தள்ளத் தள்ளக்
களியொடுங் கள்ளங் கற்ற
மீனினும் பெரிய வாட்கண்
விழிப்பது முகிழ்ப்ப தாக
வானவர் மகளிர் போனர்
மழலையஞ் சதங்கை மாழ்க.

பானமும், துயிலும், கண்ட கனவும் பண்கனிந்த பாடல் கானமும், தள்ளத் தள்ள, களியொடும் கள்ளம் கற்ற, மீனினும் பெரிய, வாட்கண் விழிப்பது முகிழ்ப்பது ஆக, வானவர் மகளிர் போனர், மழலைஅம் சதங்கை மாழ்க.

பொ :—தாம் அருந்திய மதுபானமும், தூக்கமும், தூக்கத்தில் கண் கனவின் தொடர்ச்சியும், பண்நிறைந்த பாடலின் இசையும் தம்மைத் தள்ளத் தள்ளக் களிப்போடு கள்ளத்தனத்தைக் கற்றுள்ள மீனினும் பெரிய ஒளிவாய்ந்த கண் விழிப்பதும் மூடுவதுமாகத் தடுமாற, மெல்லிய ஒலியையுடைய சதங்கை குறைந்த ஒலியை யுடையதாகத் தேவமாதர் உடன் சென்றனர்.

கு :-வானவர் மகளிர் என்றது இந்திரனை வென்ற ஞான்று அவனிடத்திருந்து கவர்ந்து வரப்பெற்ற தேவமாதரை. அரக்கர் பால் சேர்ந்தமையால் குடியும் பயின்றனர் என்க. உடம்பு தள்ளாடு தற்கு ஏற்ற பானமும் கானமும் துயிலும் கனவும் ஒருங்கே சேர்ந்தமையால் தள்ளத் தள்ளப் போனர் என அடுக்கிக் கூறினர். களிப்பும் கள்ளமும் பயின்ற கண், மீனினும் பெரிய கண், வாட்கண் எனத் தனித்தனி இயையும். வாள் - ஒளி. கள்ளமாவது, ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குகின்ற வஞ்சகத் தன்மை. உறக்கம் முடிவுருமையால் கண்கள் விழிப்பதும் மூடுவதுமாகத் தடுமாறின என்க. சதங்கையின் இயல்பான ஒலி, மகளிரின் தள்ளாடிய நடையினல் குறைந்து ஒலித்தது என்பார், 'சதங்கை மாழ்க' என்றார். மாழ்குதல் - மெலிதல். (281)

8414. மழையிழை நீல மூட்டி
வாசமும் புகையு மாட்டி
உழையுழை சுருட்டி மென்பூ
குவித்திடைக் கிடையூ றென்னப்
பிழையுடை நுதலார் செய்த
பெருங்குழற் கருங்கட் செவ்வாய்
இழையணி மகளிர் சூழ்ந்தா
ரனந்தரா லிடங்க டோறும்.

மழையிழை நீலம் ஊட்டி,
வாசமும் புகையும் மாட்டி
உழை உழை சுருட்டி, மென்பூ
குவித்து இடைக்கு இடையூறு என்னப்
பிழையுடை நுதலார் செய்த
பெருங்குழல் கருங்கண் செவ்வாய்
இழை அணி மகளிர் சூழ்ந்தார்,
அனந்தரால் இடங்கள் தோறும்.

பொ :— மேகத்தில் பொருந்தியுள்ள நீல நிறத்தை ஊட்டி, வாசனையையும் அகிற்புகையையும் சேர்த்துச் சுருட்டி, அதன் பக்கங்கள் தோறும் மென்மையான பூக்களைக் குவியலாகச் சூட்டி, இவ்வளவு பாரமும் இடைக்கு இடையூருகுமே என்று கருதாத பிழையினையுடைய பணிப்பெண்டிர், அலங்காரம் செய்த பெரிய கூந்தலையும், கடுமையான கண்ணையும், சிவந்த வாயையும் உடைய, அணிகலம் அணிந்த பெண்டிர், தூக்க மயக்கத்தோடு இடங்கள் தோறும் வந்து சூழ்ந்து கொண்டார்கள்.

கு :— மழை யிழை நீலம் என்றது மேகத்தினிடத்துப் பொருந்திய நீல நிறத்தை. இயல்பாகவே கருத்துள்ள கூந்தலுக்கு மயிர்ச்சாந்தும் அகிற்புகையும் முதலிய வாசனைப் பொருள்களைச் சேர்த்துக் கருமையும் வனப்பும் உள்ளதாகச் செய்து பின்னிச் சுருட்டி அதில் வண்ண மலர்களைக் குவித்து வைத்தாற்போல மிகுதியான மலர்களைச் சூட்டி அலங்கரித்தார்கள் பணிப்பெண்டிர் என்றவாறு. நுண்ணிய இடையையுடைய மகளிர் தம் கூந்தலில் இவ்வளவு பாரத்தையும் ஏற்றினல் இடை ஒடியுமே என்ற எண்ணமின்றிக் கூந்தலை அலங்கரித்தார்கள் என்பார், 'இடைக்கு இடையூறு என்னுப் பிழையுடை நுதலார்' என்று அப்பணிப் பெண்டிரைக் குறித்தார். "பல்லிருங் கூந்தலில் சின்மலரன்றியும் எல்லவிழ் மாலையோ டென்னுற்றனர் கொல்" (சிலப் - 2 - 60 – 66) எனவும், "திங்கண் முத்தரும்பவுஞ் சிறுகிடை வருந்தவும், இங்கிவை யணிந்தனர் என்னுற்றனர் கொல்" (சிலப் - 2 – 71, 72) எனவும் கூறிக் கோவலன், மலர்மாலையும் கண்ணகியின் இடையை வருத்தும் என்ற கருத்தைப் புலப்படுத்தியுள்ளமை இங்கு நினையத்தகும். தூக்க மயக்கத்தோடு, தாங்க வியலாத மலர்மாலையும் அணிகலன்களு முதலிய பாரங்களையும் தாங்கிக்கொண்டு மகளிர் இராவணனைச் சூழ்ந்து சென்றனர் என்றவாறு. இடையூறு என்னுமையாகிய பிழையையுடைய நுதலார் என்க. நுதலார் என்றது பணிப்பெண்டிரை. கூந்தலில் சூடிய மலர்களின் மிகுதி புலப்பட 'மென்பூக் குவித்து' என்ருர். (282)

8415. தேனிடைக் கரும்பிற் பாலி
லமுதினிற் கிளவி தேடி
மானிடைக் கயலில் வாளின்
மலரிடை நயனம் வாங்கி

மேனடை யனைய மற்று
நல்வழி நல்க வேண்டி
வானுடை யண்ணல் செய்த
மங்கையர் மருங்கு சென்றார்.

தேனிடை, கரும்பில், பாலில், அமுதினில் கிளவி தேடி,
மானிடை, கயலில், வாளில், மலரிடை நயனம் வாங்கி,
மேல் நடை அனைய மற்றும் நல்வழி நல்க வேண்டி,
வானுடை அண்ணல் செய்த மங்கையர் மருங்கு சென்றார்.

பொ :— சத்திய லோகத்தைத் தனக்கு உரிமையாக உடைய பெருமையுடைய பிரமன் (இயல்பான படைப்பினும் சிறப்பாகப் படைக்க விரும்பி, தேனிடத்திலும் கரும்பினிடத்திலும் பாலினிடத்திலும் அமுதத்தினிடத்திலும் இனிய சொற்களைத் தேடி வாங்கியும், மானிடத்திலும் கயல்மீனிடத்திலும், வாளினிடத்திலும் குவளை முதலிய மலர்களிடத்தும் கண்களை வாங்கியும், சிறந்த நடை போன்ற, மற்றவற்றையும் நல்ல உவமைப்பொருள்கள் தம் கூறுகளைக்கொடுக்க, அக்கூறுகளை வாங்கியும் செய்த சிறந்த இளமங்கையர் (இராவணன்) பக்கத்தில் சென்றார்கள்.

கு :— பெண்டிரின் சொற்கள் இனிமை மிக்கனவாகத் திகழ்ந்தன என்பார், சொல்லுக்கு உவமையாகக் கூறப்படும் தேன் முதலிய பொருள்களிடத்திலிருந்து சொற்களைத் தேடி யமைத்ததாகக் கூறினார். இது விகார உவமை எனப்படும். தேனும் கரும்பும் பாலும் அமுதும் போன்ற சொற்களை யுடையவர்கள் அப்பெண்டிர் என்பதே கருத்து. கரும்பு, மான் என்பன ஆகுபெயராய்க் கரும்பின் சாற்றையும் மானின் விழியையும் உணர்த்தின. மான் விழியும் கயல் மீனும் வாளும் குவளை மலரும் போன்ற கண்களையுடைய பெண்டிர் என்பார், 'மானிடைக் கயலில் வாளின் மலரிடை நயனம் வாங்கி' என்றார். நடை போன்ற மற்றவற்றையும் அவற்றிற்கு உவமையாகும் சிறந்த பொருள்கள் கொடுக்க வாங்கிச் செய்தான் என்க. வேண்டி - வாங்கி. யாழ்ப்பாணத்தார் வழக்கு. அண்ணல் - தேடி, வாங்கி, வேண்டிச் செய்த மங்கையர் மருங்கு சென்றார் என இயையும். நடை, பாதம் எனினும் பொருந்தும். (283)

## ஆரவாரம் கேட்டு அரக்கரும் அரக்கியரும் நடுங்குதல்

8416. தொடங்கிய வார்ப்பி னோசை
செவிப்புலந் தொடர்த லோடும்
இடங்கரின் வயப்போத் தன்ன
வெறுழ்வலி யரக்கர் யாரும்
மடங்கலின் முழக்கங் கேட்ட
வான்கரி யொத்தார் மாதர்
அடங்கலு மசனி கேட்ட
வளையுறை யரவ மொத்தார்.

தொடங்கிய ஆர்ப்பின் ஓசை செவிப்புலம் தொடர்த லோடும்,
இடங்களில் வயப் போத்து அன்ன எறுழ்வலி அரக்கர் யாரும்,
மடங்கலின் முழக்கம் கேட்ட வான்கரி ஒத்தார்; மாதர்
அடங்கலும் அசனி கேட்ட அளை உறை அரவம் ஒத்தார்.

பொ :— வானரர் தொடங்கிய ஆரவாரத்தின் ஓசை தம் காதுகளில் பட்ட அளவில் வலிமை மிக்க ஆண் முதலை போன்ற மிக்க வலிமையையுடைய அரக்கர் அனைவரும் சிங்கத்தின் கர்ச்சனையைக் கேட்ட சிறந்த யானைகளைப்போன்று நடுங்கினர்; மனைவியராகிய அரக்கியர் அனைவரும் இடி ஓசை கேட்ட புற்றிலுள்ள பாம்பு போல நடுங்கினார்கள்.

கு:—இடங்கர் என்பது முதலைச் சாதியுள் ஒருவகை. 'பாரெலாம் போழ்ந்தமா கிடங்கிடைக் கிடந்து பொங்கிடங்கர்மா' (நகரப்-17) என முன்னும் இது கூறப்பட்டிருத்தல் காணலாம். இடங்கரில் ஆணினைப் போத்து என்றல் மரபு. எறுழ்வலி, மீமிசைச் சொல். மனையுறை மகளிர்க்கு உவமையாக வேண்டி அளையுறை யரவம் என்று அரவத்தைச் சிறப்பித்தார். நீரில் நீந்திச்சென்று தனக்குச் சிறிய நீர்வாழ் உயிர்களை யெல்லாம் உண்ணும் முதலைபோலக் கடலிடைத் தீவில் வாழ்ந்துகொண்டு தம்மினும் எளிய மனிதர் முதலிய உயிரினங்களையெல்லாம் உண்பவர் அரக்கர் ஆதலின் 'இடங்கரின் வயப் போத்தன்ன எறுழ்வலி அரக்கர்' என்றார். (284)

## இராவணன் படுக்கையில் புண்ணோடு புரளும் இந்திரசித்தினைக் காணுதல்

8417. அரக்கனு மைந்தன் வைகு
மாடகத் தமைந்த மாடம்
பொருக்கெனச் சென்று புக்கான்
புண்ணினிற் குமிழி பொங்கத்

தரிக்கிலன் மடங்க லேற்றுற்
றொலைப்புண்டு சாய்ந்து போன
கருக்கிளர் மேக மன்ன
களிறனை யானைக் கண்டான்.

அரக்கனும் மைந்தன் வைகும் ஆடகத்து அமைந்த மாடம் பொருக்கெனச் சென்று புக்கான், புண்ணினிற் குமிழி பொங்கத் தரிக்கிலன் மடங்கல் ஏற்றால் தொலைப்புண்டு சாய்ந்து போன, கருக்கிளர் மேகம் அன்ன, களிறு அனையானைக் கண்டான்.

பொ:—இராவணனும் தன் மகன் இந்திரசித்து தங்கியுள்ள பொன்னால் அமைந்த மாளிகையில் விரைவாகச் சென்று புகுந்த வனாய், (இலக்குவனது அம்பு பட்ட) புண்களில் இரத்தக் குமிழிகள் வெளிப்படப் பொறுக்க முடியாதவனாய்ச் சிங்க ஏற்றினால் தோல்வி யுற்று வலி சாய்ந்து போன, நீர்கொண்ட மேகம் போன்ற களிற்றியானை போன்று வருந்திக் கிடக்கின்ற இந்திரசித்தினைக் கண்டான்.

கு:—'பொருக்கென' என்பது விரைவுக் குறிப்புணர்த்துமிடைச் சொல். நீரில் குமிழி தோன்றுவதுபோல இந்திரசித்தின் உடம்பில் உள்ள புண்களில் இரத்தம் கொப்புளிக்கின்றது என்பார் 'புண்ணினிற் குமிழி பொங்க' என்றார். சிங்கம் போன்றவன் இலக்குவன்; களிறு போன்றவன் இந்திரசித்து என்க. இலக்குவனது அம்புக்கு ஆற்றாது வருந்தும் இந்திரசித்துக்கு மடங்க லேற்றால் தொலைப்புண்டு சாய்ந்துபோன களிறு, பொருந்திய உவமையாதல் காணலாம். சாய்ந்துபோன களிறு; மேக மன்ன களிறு எனத் தனித்தனி இயையும். மேக மன்ன களிறு என்புழிக் கருநிறப் பண்பு பொதுத் தன்மையாதலும், சாய்ந்துபோன களிறு அனையான் என்புழி வலியிழப்பாகிய வினையே பொதுத்தன்மை யாதலும், ஆகிய வேறுபாடு உடைமையின் இது அடுக்கிய தோற்றம் அன்மை உணரலாம். (285)

இந்திரசித்தின் துன்ப நிலைக்குக் காரணம் வினவுதல்

8418. எழுந்தடி வணங்க லாற்றா
னிருகையு மரிதி னேற்றித்
தொழுந்தொழி லானை நோக்கித்
துணுக்குற்ற மனத்த னாகி

அழுங்கினை மைந்த வென்னை
யடுத்ததென் றெடுத்துக் கேட்டான்
புழுங்கின வுள்ளத் தானு
மினையன புகல லுற்ருன்.

எழுந்து அடி வணங்கல் ஆற்ருன்,
இருகையும் அரிதின் ஏற்றித்
தொழும் தொழிலானை நோக்கித்
துணுக்குற்ற மனத்தன் ஆகி
அழுங்கினை, 'மைந்த! என்னை
அடுத்தது?' என்று எடுத்துக் கேட்டான்.
புழுங்கின உள்ளத் தானும்
இனையன புகலல் உற்ருன்.

பொ:— (தந்தையைக் கண்டவுடன்) எழுந்து நின்று (தன் தந்தையின்) அடியை வணங்க இயலாதவனுய் (படுக்கையில் கிடந்தவாறே) தன் இருகைகளேயும் அரிதின் முயன்று உயர்த்தித் தொழுகின்ற தொழிலையுடையவனுகிய இந்திரசித்தினை பார்த்துத் திடுக்கிட்ட மனத்தனுகி, 'மைந்தனே! மிகவும் வருந்தினுய்; என்ன நேர்ந்தது' என்று (ஆத்திரத்துடன்) உரத்து வினவினுன்; (இலக்குவன் அம்பினுல் துன்புற்றுப்) புழுங்கிய உள்ளத்தனுகிய இந்திரசித்தும் இத்தன்மையான சொற்களைச் சொல்லலானுன்.

கு:—எழுந்து வணங்க இயலாமையே யன்றிக் கிடந்தவாறு கைகளைத் தூக்கித் தொழவும் இயலாத நிலையில் இந்திரசித்து கிடந்தான் ஆதலின் 'இருகையு மரிதினேற்றித் தொழுந் தொழிலானை' என்ருர். அழுங்குதல் – பெரிதும் வருந்துதல். எடுத்துக் கேட்டலாவது, எடுத்தல் ஓசையால் வினவுதல். புழுங்குதல் — வெதும்புதல். (286)

இந்திரசித்தின் மறுமொழி 8419-8422

8419. உருவின உரத்தை முற்று
முலப்பில வுதிரம் வற்றப்
பருகின வளப்பி லாத
பகழிகள் கவசம் பற்றற்

றருகின பின்னைச் சால
வலசினெ னைய கண்கள்
செருகின வன்றே யானு
மாயையிற் றீர்ந்தி லேனேல்.

'உருவின் உரத்தை முற்றும், உலப்பு இல உதிரம் வற்றப்
பருகின, அளப்பிலாத பகழிகள்; கவசம் பற்று அற்று
அருகின; பின்னை, சால அலசினென்; ஐய! கண்கள்
செருகின அன்றே, யானும் மாயையில் தீர்ந்திலேனேல்?

பொ :—ஐயனே! (இலக்குவனது) அளவிட முடியாத அம்புகள் என் மார்பு முழுமையையும் ஊடுருவினவாய், அழிவில்லாத என்னுடம்பின் குருதி முழுமையும் வற்றுமாறு குடித்துவிட்டன; (அவ்வம்புகளால்) என் கவசமும் கட்டற்று அழிந்தன; இங்ஙனமான பின் யான் மிகவும் துன்புற்றேன்; என் கண்கள் சோர்வினால் உள்ளடங்கிச் செருகிக் கொண்டன; மாயையால் அவ்விடத்தை விட்டு நீங்காதிருந்தேனாயின் யானும் அப்போதே இறந்திருப்பேன்.

கு :—ஐய அளப்பிலாத பகழிகள் உரத்தை முற்றும் உருவின, உதிரம் வற்றப் பருகின; கவசம் அருகின; சால அலசனென்; கண்கள் செருகின; மாயையில் தீர்ந்திலேனேல் யானும் இறந்தே இருப்பேன் என இயைத்து எச்சத்தை வருவித்து முடிக்க. பெரு வீரனாகிய இந்திரசித்து தன் வாயினால் 'இறந்திருப்பேன்' என்ற சொல்லைச் சொல்ல மாட்டாமையால் தீர்ந்திலேனேல் யானும் என்று எச்சமாகக் கூறி 'இறந்திருப்பேன்' என்பதை உய்த்துணர்ச்சியால் வருவித்துக் கொள்ளுமாறு செய்தான் என்க. இது இசையெச்சம் எனப்படும். அருகுதல் - இல்லையாதல். அலசுதல் – துன்புறுதல். உணர்விழந்த நிலையில் கண்கள் உள்ளே செருகிக் கொள்ளுதல் இயல்பு. 'மரணம் நெருங்கியதை அறிந்து மாயையால் மறைந்து அவ்விடத்தை விட்டு நீங்கிவிட்டேன்; இல்லையேல் அப்போதே இறந்திருப்பேன்' என்பது இந்திரசித்தின் கருத்து. தீர்தல் — நீங்குதல். அன்றே — அப்போதே. இனி, அன்று ஏ அசைநிலை என்றும் ஆம். (287)

8420. இந்திரன் விடையின் பாக
னெறும்வலிக் கலுழ னேறும்
சுந்தர னருக்க னென்றித்
தொடக்கத்தார் தொடர்ந்த போரில்

நொந்தில னிளைய தொன்று
நுவன்றிலென் மனித னேன்மை
மந்தர மனைய தோளாய்
வரம்புடைத் தன்று மன்னே.

இந்திரன், விடையின் பாகன்,
எறுழ்வலிக் கலுழன் ஏறும்
சுந்தரன், அருக்கன், என்று இத்
தொடக்கத்தார் தொடர்ந்த போரில்
நொந்திலன் ; இளையது ஒன்றும்
நுவன்றிலன் ; மனிதன் நோன்மை,
மந்தரம் அனைய தோளாய் !
வரம்பு உடைத்து அன்று மன்னே.

பொ :—மந்தரமலை போன்ற தோள்களையுடைய தந்தையே! இந்திரனும் இடபத்தை ஊர்தியாகக்கொண்டு நடத்தும் சிவனும், மிக்க வலிமையுடைய கருடன்மேலேறி நடத்தும் அழகனாகிய திருமாலும் சூரியனும் என்று சொல்லப்படும் இவர் முதலோர் என்னோடு தொடர்ந்து நடத்திய போரில் யான் வருந்தவில்லை ; இத்தகைய எளிமையான சொல் ஒன்றையும் சொன்னதில்லை ; (அத்தேவர்களினும்) மிகத் தாழ்ந்தவராகக் கருதப்படும் மனித இனத்தில் பிறந்த) மனிதனாகிய இலக்குவன் வலிமையோ வரம்புடையது அன்று ; மிகப் பெரியது. (ஆதலால் இங்ஙனம் வருந்திக் கூறுகின்றேன்).

கு :—யானையைச் செலுத்துகின்றவனை யானைப்பாகன் என்பது போல விடையினை ஊர்தியாகக் கொண்டு நடத்தும் சிவனை 'விடையின் பாகன்' என்றான். எறுழ் - வலிமை ; எறுழ் வலி மீமிசைச் சொல். இந்திரனுக்கும் சூரியனுக்கும் ஊர்தி கூறிலனாயினும் அவர்கட்கும் வெள்ளை வாரணமும் ஓராழித் தேரும் உண்மை தெளிவு. எனவே ஊர்திகளையுடைய பெரிய தேவர்களுக்கு வருந்தாத யான் ஊர்தியேதும் இல்லாத இலக்குவனுக்கு ஆற்றாது வருந்தினேன் என்றமையால் உறுப்புக்குறை விசேடமும், மனிதன் என்றமையால் சாதிக்குறை விசேடமும் புலப்படுத்தி இலக்குவன் ஆற்றலை வியந்து கூறியவாறு. இலக்குவனுக்கு ஆற்றாது நொந்ததைக் காட்டிலும் நொந்து நுவன்றது மிகவும் இழிந்தது என்பது புலப்பட இளையதொன்றும் நுவன்றிலன் எனப் பின்னர்க் கூறினான். மந்தரமனைய தோளிருந்தாலும் இலக்குவனை வெல்வது அரிது என்பது புலப்பட 'மந்தர

மனைய தோளாய்' என விளித்தவாறு. வரம்பு - எல்லை. இலக்குவன் எல்லையில்லாத வல்லமையுடையவன் என்பதை இதனுல் இந்திரசித்து புலப்படுத்தினுன். (288)

8421. இளையவன் றன்மை யீதா
லிராமன தாற்ற லெண்ணின்
தளையவி ழலங்கன் மார்ப
நம்வயிற் றங்கிற் றன்ருல்
விளைவுகண் டுணர்வ தல்லால்
வென்றிமேல் விளையு மென்ன
உளையதன் றென்னச் சொன்ன
னுற்றுள துணர்ந்தி லாதான்.

"இளையவன் தன்மை ஈதால்;
இராமனது ஆற்றல் எண்ணில்,
தளை அவிழ் அலங்கல் மார்ப!
நம்வயின் தங்கிற்று அன்ருல்,
விளைவு கண்டு உணர்வது அல்லால்,
வென்றிமேல் விளையும் என்ன
உளை; அது அன்று;" என்னச் சொன்னன்—
உற்றுளது உணர்ந்திலாதான்.

பொ :—முறுக்கு அவிழ்ந்து மலர்ந்த மலர் மாலையை அணிந்த மார்பத்தையுடைய தந்தையே! இளையவனுகிய இலக்குவன் தன்மை இத்தகையது; அவன் அண்ணனுகிய இராமனுடைய வலிமையை எண்ணிப் பார்க்குமிடத்து அவன் வலிமையை அளவிடும் தன்மை நம்மிடத்துப் பொருந்தியதன்று; (நம் மறிவிற்கு அப்பாற்பட்டது) இப்போரின் விளைவை (முடிவில்) கண்டு உணர்வ தல்லது நமக்கு இனிமேல் வெற்றி யுண்டாகும் என்று நீ எண்ணியிருக்கின்ருய்; அவ்வாறு எண்ணுவது தக்கதன்று என்று சொன்னன். (யாவன் எனின்?) நிகழ்ந்திருக்கின்ற தன்மையை (இலக்குவன் முதலியோர் பாசம் நீங்கி விட்டமையை) உணராதவனுகிய இந்திரசித்து.

கு :—'நம்வயின் தங்கிற்று அன்ருல்' என்பதற்கு 'இராமனது ஆற்றல் போன்ற ஆற்றல் நம்மிடத்துப் பொருந்தியதில்லை' எனக் கூறியதாக் கொள்ளலும் ஆம். வெற்றியும் தோல்வியும் முடிவில் கண்டுணர வேண்டுமேயன்றி நமக்கு வெற்றியே விளையும் என்று

தருக்கியிருத்தல் தக்கது அன்று என்று இந்திரசித்து தந்தைக்குப் புலப்படுத்தியவாறு. இலக்குவனை வென்று விட்டமையால் இனி நமக்கு வெற்றியே கிட்டும் என்ற எண்ணத்தால் இராவணன் மகிழ்ச்சி கொண்டாடத் தன்னிடம் வந்ததாக எண்ணி இந்திரசித்து இவ்வாறு கூறலானான். இலக்குவன் முதலியோர் பாசம் நீங்கி யெழுந்து ஆரவாரிக்கின்றனர் என்பதை உணர்ந்திருப்பின் தன் வெற்றியைப் பற்றிச் சிறிதும் கூறியிருக்கமாட்டான் என்ற கருத்துப் புலப்பட 'உற்றுளது உணர்ந்திலாதான்' என்றார். உற்றுளது என்பதற்கு, 'இராவணன் தன்பால் வந்ததற்குக் காரணம்' என்று பொருள் கூறலும் ஆம். உளை என்பது முன்னிலை வினைமுற்று; 'இருக்கின்றாய்' என்பது பொருள். அஃது எனல் வேண்டும் ஆய்தம் விகாரத்தால் தொக்கது; "பிறிதொன்றன் புண் அதுணர்வார்ப்பெறின்" (குறள் - 257) என்புழிப்போல. அது அன்று என வந்தது. (289)

8422. வென்றது பாசத் தாலு
மாயையின் விளைவி னாலும்
கொன்றது குரக்கு வீரர்
தம்மொடக் கொற்றத் தோளை
நின்றன னிராம னின்னு
நிகழ்ந்தவா நிகழ்க மேன்மேல்
என்றன னென்னக் கேட்ட
விராவண னிதனைச் சொன்னான்.

'வென்றது பாசத்தாலும்,
மாயையின் விளைவினாலும்;
கொன்றது, குரக்கு வீரர்
தம்மொடு அக் கொற்றத் தோளை;
நின்றனன், இராமன் இன்னும்;
நிகழ்ந்தவா நிகழ்க மேன்மேல்'
என்றனன்; என்னக் கேட்ட
இராவணன் இதனைச் சொன்னான்.

பொ :—'வானர வீரர்களோடு அந்த வெற்றியையுடைய இலக்குவனைக் கொன்றதும் வென்றதும் என் நாகபாசத்தாலும் மாயையின் விளைவினாலுமே யாம்; இன்னும் பேராற்றல் படைத்த இராமன் ஒருவன் எஞ்சி இருக்கின்றான்; மேலும் மேலும்

நிகழ்ந்தவாறே போர் நிகழ்வதாக' என்று இந்திரசித்து சொன்னான்; அவ்வாறு அவன் நொந்து கூறியதுகேட்ட இராவணன் இதனைச் சொன்னான்.

கு :—இராவணன் சொன்னதை வருஞ் செய்யுளிற் காண்க. அக் கொற்றத்தோனை என்றது இலக்குவனை. மாயச் சூழ்ச்சியும் நாகபாசமும் இல்லையேல் அவர்களைக் கொல்லுதலும் வெல்லுதலும் இயலா என்பது கருத்து. இலக்குவனையும் வானரரையும் யான் வென்றது நினைந்து, இராமனை மறந்து, வெற்றி விழாக் கொண்டாட நினைதல் கூடாது; இராமன் இன்னும் நின்றனன்; ஆதலின் போர் மேலும் மேலும் நிகழ்கின்றவாறே நிகழ்வதாக என, இந்திரசித்து இராமன் எஞ்சி நிற்பதை நினைவுறுத்தியவாறு. மேல், 'உற்றுளது உணர்ந்திலாதான்' என்பதை எழுவாயாகக் கொண்டு இச்செய்யுளில் என்றனன் என்பதைப் பயனிலையாக்குக. இலக்குவன் முதலியோர் நாகபாசம் நீங்கப்பெற்றுப் போராரவாரம் செய்கின்றனர் என்பதை இந்திரசித்து உணர்ந்திருப்பின், தான், பாசத்தால் கொன்றதும் வென்றதும் கூறியிருக்க மாட்டான் என்பதை மேலைச் செய்யுளில் வந்த எழுவாயே நன்கு விளக்கும் தன்மையதாதல் காண்க (290)

## இராவணன் பகைவரின் போரொலி கேட்டிலையோ எனல்

8423. வார்கழற் கால மற்றவ்
விலக்குவன் வயிர வில்லின்
பேரொலி யரவம் விண்ணைப்
பிளந்திடக் குரங்கு பேர்ந்த
காரொலி மடங்க வேலை
கம்பிக்கக் களத்தி னார்த்த
போரொலி யொன்று மைய
வறிந்திலை போலு மென்றான்.

'வார்கழற் கால! மற்று அவ் இலக்குவன் வயிர வில்லின்
பேர் ஒலி அரவம் விண்ணைப் பிளந்திடக், குரங்கு பேர்ந்த,
கார் ஒலி மடங்க, வேலை கம்பிக்க, களத்தின் ஆர்த்த
போர் ஒலி ஒன்றும் ஐய! அறிந்திலை போலும்!' என்றான்.

பொ :—"நீண்ட வீரக்கழலை அணிந்த காலினை உடைய இந்திரசித்து! (நின் சொல்லுக்கு வேறாக) இலக்குவனது உறுதியான வில்லின் மிகப் பெரிய ஆரவாரம் விண்முகட்டைப் பிளந்

திடா நிற்கவும், மேகத்தின் இடி ஒலி கீழ்ப்படவும், கடல்கள் நடுங்கவும், விழித்தெழுந்த குரங்குகள் களத்தில் ஆரவாரித்த போர் ஆரவாரம் ஒன்றையும் ஐயனே! நீ கேட்கவில்லைபோலும்" என்று இராவணன் கூறினன்.

கு:—இலக்குவனது வில் நாணொலி விண்முகட்டைப் பிளந்தது! உயிர்த்து எழுந்த குரங்குகளின் போர் ஆரவாரம் மேகத்தின் இடி ஒலி கீழ்ப்படவும் கடல் நடுங்கவும் செய்தது என்றவாறு. பேர்ந்த குரங்கு என மாறுக. பேர்தலாவது உயிர்பெற்று எழுதல். பேர்ந்த குரங்கு, மடங்க, கம்பிக்க, களத்தின் ஆர்த்த போரொலி என்க. காரொலி என்றது இடி ஒலியை. வேலை கம்பித்தலாவது குரங்குகளின் ஆரவாரத்தால் பூமி நடுங்க அது காரணமாகக் கடலும் நடுங்குதல். அறிந்திலை போலும் என்றது, அறிந்திருப்பின் இங்ஙனம் கூறுவாயல்லை என்றவாறு. போர் ஒலி என்றது போர்க்கு அழைக்கும் ஒலியை. மற்று - வினைமாற்று. (291)

இந்திரசித்து வியந்து விடை கூறுதல்

8424. ஐயவெம் பாசந் தன்னா
லார்ப்புண்டா ரசனி யென்னப்
பெய்யும்வெஞ் சரத்தான் மேனி
பிளப்புண்டா ருணர்வு பேர்ந்தார்
உய்யுந ரென்று ரைத்த
துண்மையோ வொழிக்க வொன்றோ
செய்யுமென் றெண்ணத் தெய்வஞ்
சிறிதன்றோ தெரியி னம்மா.

'ஐய! வெம் பாசம் தன்னால்
ஆர்ப்புண்டார்; அசனி என்னப்
பெய்யும் வெஞ்சரத்தால் மேனி
பிளப்புண்டார்; "உணர்வு பேர்ந்தார்
உய்யுநர்" என்று உரைத்தது
உண்மையோ? ஒழிக்க ஒன்றோ?
செய்யும் என்று எண்ணத் தெய்வம்
சிறிது அன்றோ? தெரியின் அம்மா!

பொ:—தந்தையே! இலக்குவன் முதலியோர் கொடிய நாகபாசத்தினால் கட்டுண்டார்கள்; இடிகளைப்போல யான் பொழிந்த

கொடிய அம்புகளால் (வானரர்கள் எல்லாம்) உடம்பு பிளவுற்ருர்கள். (இது நான் நேரில் கண்டது) அப்பகைவர் யாவரும் உய்ந்தனராய் உணர்வு மீளப்பெற்ருர்கள் என்று நீர் சொன்னது உண்மைதானே ? நாகபாசம் ஒருவரால் ஒழிக்கப்படுதற்குரிய எளிய ஒரு பொருளோ? தெய்வம் (அவ்வாறு அவர்க்குத் துணையாயிருந்தது) செய்யும் என்று எண்ணுவோம் என்ருல், ஆராயுமிடத்து, அது நம்மை நோக்கச் சிறியது அன்ருே? அது அவ்வாறு செய்திருக்க முடியுமோ? இஃதென்னே வியப்பு!

கு:—இந்திரசித்து தான் நேரில் கண்டு வந்த நிகழ்ச்சிக்கு மாருக இராவணன் சொல் இருத்தலின் தான் கண்களால் கண்டதை நிறுவ வேண்டி 'வெம்பாசந் தன்ஞல் ஆர்ப்புண்டார்' 'மேனி பிளப்புண்டார்' என்பன கூறலாஞன். இராவணன் சொன்ன சொல் நம்புதற்குரியதன்று என்ற கருத்தால் 'உரைத்தது உண்மையோ' என்று வினவலாஞன். உய்யுநராய் உணர்வு பேர்ந்தார் என மாறிக் கூட்டுக. முற்றெச்சம். நாகபாசத்தின் வலிமை புலப்பட 'ஒழிக்க ஒன்ருே?' என்ருன். பிறரால் கட்டவிழ்த்து நீக்கத் தக்கதன்று என்றவாறு. நாகபாசம் வலிமையுடையதே ஆயினும் பகைவர்க்குத் துணையாகத் தெய்வம் செய்திருக்க முடியாதா? என்ற ஐயத்தை எழுப்பிக்கொண்டு, நமக்கு மாருகத் தெய்வம் துணை செய்வது அது நம்மினும் வலியது ஆயின் அன்றே! அங்ஙனமன்றி நமக்குச் சிறியதாகிய தெய்வம் நமக்கு மாருக அவர்க்குத் துணை செய்ய இயலாதே என்பான் "செய்யும் என்று எண்ணத் தெய்வம் சிறியதன்ருே தெரியின்?" என்ருன். தெய்வத்தின் வலி தன் வலியினும் மிகச் சிறியது என்ற கருத்து இராவணனுக்கும் உண்டு என்பதை: "இந்திராதியர் சித்தர்களியக்கர் நம்மிறுதி சிந்தியாதவார் யார்? அவர் நம்மை யென் செய்தார்" (இராவணன் மந்திரப் — 106) என்று முன் கூறியுள்ளதால் அறியலாம். நாகபாசப் பிணிப்பு தெய்வத்தால்தான் நீங்கியது என்ற கருத்து இராமனுக்கும் உண்டு என்பதை: 'விளையாத துன்பம் விளைவித்த தெய்வம் எளிவந்தது என்ன வியவா" (நாகபாசப் -- 266) என்றதுகொண்டு தெரியலாம். நாகபாசத்தின் வலிமை பெரிதாகவும் தெய்வத்தின் வலிமை சிறிதாகவும், இருக்கும்போது பகைவர் உணர்வு பெற்றெழுந்தது எவ்வாறு? என்று வியப்பவனாய் 'அம்மா!' என்ருன். (292)

